MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES No. 50




# பிள்ளைத் தமிழ்க் கொத்து

(குறிப்புரையுடன்)

# PIḶḶAI-T-TAMIḺ-K-KOTTU

(WITH NOTES)

*Edited by*

T. CHANDRASEKHARAN, M.A., L.T.,

Curator, Government Oriental Manuscripts Library, Madras

AND

THE STAFF OF THE LIBRARY

Under the orders of the Government of Madras

1956

Price Rs. 9-0-0.

# பொருளடக்கம்

# INTRODUCTION.

In the long glorious history of Tamil Literature in the medieval period, we come across 96 minor works running under the name of *Prabandams*. Piḷḷaittamiḻ is enjoying a towering and unique position among them.

It usually consists of one hundred stanzas and it is split into ten sections. Each section is divided into one aspect of childhood. It is composed in praise of gods, kings and patrons. They form the theme of the poets who glorify the charm and the beauty of childhood.

The poem opens with a benediction. The child's lisp, the prattle, the cradle song, its tender clapping, its beckoning unto the moon, all this is described with great consummate artistic skill of the poet. Perhaps in Periyāḻvār, who belonged to the 8th century A.D., we recognize the spring and source of this species of composition. Subsequent poets followed in his foot-steps and their poems are cold imitatations of the immortal poet whose songs cannot but ring across ages.

This edition, published under the name of Piḷḷaittamiḻ Kottu, consists of seven works.

Arumpāttai Vēda Vināyakar Piḷḷaittamiḻ arrests our attention. The worship of Vināyaka prevails not only in India but also in lands beyond the seas. This

worship was introduced during the Pallava reign by the General Parañjōti after the crushing defeat of Pulikēśin A.D. 641-42. We believe that the devotees of Vināyaka will welcome this work which has a peculiar charm and grace of its own. This work is based on a palm leaf manuscript bearing No. R 2677 presented to this library by Sri K. Shanmugam of Kumarakuppam village in the South Arcot district during 1951-52.

Vaikuntanāthan Piḷḷaittamiḷ is sung in praise of the deity enshrined in the temple at Tiruvaikuntam. Though the name of the author is not known, from the references seen in the manuscript, it would be clear that he was a disciple of one Periya Nambi who lived in Śānthūr village. This work is based on a palm leaf manuscript bearing No. R 441 presented by Sri Villiputtūr Appu Iyengar during the year 1920-21.

Rāgavar Piḷḷaittamiḷ deals with Ayōdhyā and her ancient glory and the renown of Raghū's race. The author of this work is Kuḷandai Mudaliar of Kuṟṟālam. This work is based on a palm leaf manuscript bearing No. D 323 deposited in this library.

Tillai Śivakāmi Ammai Piḷḷaittamiḷ, sung in praise of Cidambaram, is marked by philosophical discussions. The style is fluent and the diction dignified; the handling of the theme and the choice and classical expression occuring in many places in this work are a proof of the author's full acquaintance with ancient Tamil literature and they reveal gifted poetic talent of a high order. It is learnt from the

work that the author is an anonymous poet of Tiruccendil. This work is based on a palm leaf manuscript bearing No. D 324. Manuscripts bearing Nos. R 2860 and 2619 have been of great use in the matter of compiling this work.

The author of the work Puduvai Tiripura Sundari Piḷḷaittamiḻ is one Muttukkumaran, whose date is difficult to determine. This work is based on a palm leaf manuscript bearing No. D 326 deposited in this library.

In Tūttukkuḍi Pākampiriyā Ammai Piḷḷaittamiḻ we get a vivid description of a different variety of pearls. This edition is based on a paper manuscript bearing No. R 590 (b) transcribed during the year 1924-25 from a manuscript belonging to the Mahārājā of Eṭṭaiyāpuram, Tirunelvēli district.

Śivānandan Piḷḷaittamiḻ speaks of Śivānandan, the hero of the theme, as a native of Tiruvārūr. This work is based on a palm leaf manuscript bearing No.R 2676 presented by Sri K. Shanmugam of Kumarakuppam village in South Arcot district during 1951-52.

I must express my grateful acknowledgements to :—

1. the authorities of Dr. U. V. Swaminatha Aiyar's Library, Adyar, for making their manuscript accessible to me for comparison,

2. the owners of the manuscripts mentioned above who presented them to the Government Oriental Manuscripts Library,

3. Sri S. Sachidanandam Pillai, B.A. L.T.,

Retired District Educational Officer and Dr. M. A. Dorai Rangaswamy, M.A., M.O.L., Ph.D., Senior Lecturer in Tamil, University of Madras, for throwing light on some of the obscure tenets and doctrines of Śaiva philosophy and

4. Vidvān B. R. Purushothama Naidu, Junior Lecturer in Tamil, University of Madras, for offering valuable suggestions and interpretations of certain obscure lines in the text.

My thanks are also due to Śrīmāns E. B. Venugopal, V. S. Krishnan and M. Pasupathi, Tamil Pandits of this Library, who prepared the press copy and carefully corrected the proofs and to the Rathnam Press for their willing co-operation.

Madras,
12—2—1956.

T. CHANDRASEKHARAN,
*Curator.*
Govt. Oriental Mss., Library.

# அணிந்துரை

இனிமையும் மென்மையும் கன்னிமையும் பெற்ற சொற்கள் நந்தமிழ் மொழியில் அமைந்து பாட்டுக்களாகத் திகழ்கின்றன. தண்டமிழ் வல்லுநர் மங்கலச் சொற்களால் போற்றுவதும் உலோபிகளை நச்சுச் சொற்களால் தூற்றுவதுமுண்டு. எனவே தமிழ்ச் சொற்களில் சில உணர்ச்சி நிரம்பியன; சில பக்தி நிரம்பியன; இன்னுஞ் சில களிபேரின்பம் பயப்பன. நந்திக்கலம்பகம் ஓர் வசைக்கவி. தமிழில் புகழ் நிரம்பிய இன்பம் பயக்கும் செந்தமிழ்ப் பாடல்களை அவாவினர் அரசர், உபகாரிகள் முதலியோர். அப்பாடல்களிலெல்லாம் இனிமைச் சுவையைப் பிரதிபலிப்பதில் ஈடற்று விளங்குவது பிள்ளைக்கவிப் பாட்டே. இளமைப் பருவம் ஒருவர்க்குக் கடைசிவரை இருப்பின் எவ்வாறு வரவேற்று இன்பமனுபவிப்பாரோ அவ்விதம் வரவேற்று இன்பம் நுகரப்படுவது பிள்ளைத்தமிழெனின் மிகையாகாது. குழவிப் பருவம் மாசற்ற நல்லெண்ணங்களையும் அவ்வெண்ணங்களின் வாயிலாகக் களங்கமற்ற தூய அன்பையும் பெற்றுத் திகழ்தலால் அவ்வெண்ணம், அன்பு ஆகியன பெற விரும்புபவரும், வெளியிட விரும்புபவரும் இடையறா இன்பத்தில் திளைக்க விரும்புபவரும் பிள்ளைத் தமிழ்ப் பாட்டுக்களில் மனம் ஒன்றிப் பழகுவது அவசியமாகும்.

"மக்கண்மெய்..............செவிக்கு" என்ற தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் வாக்குப்படி தீண்டல் உடற்கின்பமும், கேட்டல் செவிக்கின்பமும் விளைவித்தலைப்போன்று இளமைச்சிறார்கள் ஆடும் விளையாட்டும் கண்ணுக்கினிமை தரும் என்பது போதருகிறது. "குழவி தளர்நடையைக் காண்டல் இனிதே......." என்றார் இனியவை நாற்பதினும். இக்கோத்தின் 566-ஆம் பாட்டினும் "காதுக்கினிதுன் மழலையஞ்சொல் கண்ணுக்கினிதுன் காட்சியின்பம் கனிவாய்க் கினிதாய்க் கவுணெரித்துக் கன்னந்தனை முத்துவதின்பம்....**பேதைக்கினிமையம் பொறிக் கின்பம் பிள்ளைக்கனியன்றியு முண்டோ!**" என்னும் போது பிள்ளைக்கனி எவ்வித இன்பமும் தரவல்லது எனக் கூறுவது தவிர நாமெழவில்லை. இதற்காக வன்றோ பாண்டியன் அறிவுடை நம்பியும் "படைப்புப் பல படைத்து.......பயக்குறையில்லைத்தாம் வாழும் நாளே." என்றான் புறநானூற்றினும். மற்றும் "குழலின் யாழினமுதிற் குழைத்த சொன், மழலை தங்கண் மகார்வயிற் கேட்டலாற், றழையுமுள்ளமெய் தன்னைத் தொடுப்புறல், குழவியின்பங் குறித்தனரோர்

தோற்றமே." என்றார் கருணீக புராணத்தினும். தம்மை யாதரித்த அரச வள்ளல்கள், பிரபுக்கள் ஆகியோரிடத்து அன்புடன் பழகும் புலவர்கள் அவர்களை அவ்வன்பிற்கினிய கள்ளங் கபடமற்ற பிள்ளைமைப் பருவமுடையராய்க் கற்பனை செய்து ஆண்பாலானால் ஆண்குழவிகளின் விளையாட்டு வகைகளையும் பெண்பாலானால் பெண் குழவிகளின் விளையாட்டு வகைகளையும் அமைத்து இனிய கொஞ்சும் கன்னித் தமிழிலே இன்பச் சுவை கனி சொட்டச் சொட்டக் காப்பு முதலிய 10-பருவங்கட்கு ஏற்ப செயல்களை வகுத்துக் கூறி ஆசிரிய விருத்தப் பாவால் அமைத்தனர். அரசர், உபகாரிகள் ஆகியோர் இங்ஙனம் கேட்டுக் கழிமகிழ்வு பெற்ற பின்னர் புலவர்கட்கு வேண்டிய வேண்டியாங்கு அளித்தனர். இதனாலன்றோ "ஈதலிசைபட வாழ்தல்........ ...புயிர்க்கு" என்றும் "புலவர்பாடும் புகழுடையோர்........வான வூர்தி......." என்றும் கூறினர்.

தொல்காப்பியத்தில் பாடாண்டிணையுள் "குழவி மருங்கினும் கிளவதாகும்" என்றவாறு காமப் பகுதியின்பாற்பட்டு மக்கட் குழவிக் குரியதாக அரசரையும் ஏனையோரையும் பாடும் புலவர் "குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே" என்றவாறு அக் குழவியோடு ஒற்றுமையுடைய தெய்வத்துக்கும் உரியதாக இவ்வாறு பாடுவர்.

பிள்ளைத்தமிழ்ப் பாட்டில் காலத்தால் முற்பட்டது பெரியாழ்வார் இயற்றிய பிள்ளைக்கவியாகும். அவர் பிள்ளைக்கவியெனத் தனியாகப் பாடாமல் தம் திருமொழியில் கண்ணனின் குழவிப் பருவத்தையே முக்கியமான பகுதியாகப் பாடியுள்ளார். பிற்காலத்திற்றான் பிள்ளைக் கவியெனத் தனிப்பிரபந்த முறை தோன்றியது. பெரியாழ்வார் கி. பி. 769-770-க்கு முன்பிருந்தவர் என வரலாற்றாசிரியர் கூறுகின்றனர். பகழிக்கூத்தர் பாடிய திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ், அந்தகக் கவி வீரராகவர் பாடிய சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், வேப்பத்தூரார் பாடிய அழகர் பிள்ளைத்தமிழ் ஆகியன பழமை மிக்கவை.

இத்தகைமை வாய்ந்த பிள்ளைக்கவி தமிழிலமைந்த 96-பிரபந்த வகைகளுள் ஒன்று. பிரபந்தம் வடசொல். பிர-மிகுந்த, பந்தம்-கட்டு; ஒவ்வொரு பிரபந்தமும் யாதாமொரு கட்டினால் கட்டப்படுகிறது. கலம்பகம் 18-துறைகளாற் கட்டப்படுதல் போன்று பிள்ளைத்தமிழும் பத்துப் பருவங்களாற் கட்டப்படுகிறது.

இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைத்து; ஆண்பாற் பிள்ளைத்தமிழ் காப்பு முதல் சிறுதேர் ஈறாகவும், பெண்பாற் பிள்ளைத்தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழின் இறுதி

மூன்று பருவங்கட்குப்பதில் அம்மானை, நீராடல், ஊசல் பெற்றும் வரும். காப்பு, தால், செங்கீரை என முறை மாறியும் வருமென்பர். ஒவ்வொரு பருவமும் 10-பாட்டுக்கள் பெறுதலியல்பு; பழனிப் பிள்ளைத் தமிழ் போன்றன குறைந்து வந்தன. இவைகளினிலக்கணத்தை இல-விள. பாட்டியல் 46, 47-வது சூத்திரங்களால் உணரலாம். இக்கவி 3-ஆம் மாதம் தொடங்கி 21-ஆம் மாதம் வரை ஒற்றித்த மாதமாகிய 10-மாதங்களினும் கேட்பிக்கப்படும். அன்றியும் 5-ஆம் ஆண்டினும் 7-ஆம் ஆண்டினும் கேட்பினும் இழுக்காது. "முறைதரு மூன்றுதி மூவேழீறுந்திங்க, ளறைகுநிலம் பத்து மாண்டைந்தே................" (வெ. பா. செய். 7) என்பதனையும், "பிள்ளைப்பாட்டே தெள்ளிதிற் கிளப்பின், மூன்று முதலா மூவேழளவும் ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே", "ஒன்று முதலையாண்டோதினும் வரையார்" (பன். பாட்டியல்) என்பதனையும் ஓர்க.

1. **காப்புப்பருவம்:**—காப்பு-காவல், காப்புக் கவியைக் குறிப்பதால் தொழிலாகு பெயர். இது 2-ஆம் மாதத்தில் நிகழ்வது; 3-ஆம் மாதமென்பர் வெண்பா பாட்டியலுள். திருமால் முதலிய கடவுளர் பாட்டுடைத்தலைவராகிய குழவியைப் பாதுகாக்க வேண்டுமென்று அமைப்பது காப்புப்பருவம்; திருமால் காவற்கடவுளாதலால் முதற்பாட்டு அவரைப் பற்றியதாக இருக்கும். குழவி பிறந்த ஏழாவது நாள் காப்பிடலெனும் உலக வழக்கு நோக்கி இஃது இலக்கிய வழக்கினும் அமைக்கப்பட்டது.

2. **செங்கீரைப்பருவம்:**—கீர்-சொல், இச்செயல் 5-ஆம் மாதத்தில் நிகழும். பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவமாகும் இது. இப்பருவத்தில் பச்சிளங் குழவிகள் 'ங்க', 'ங்க' எனக் கூறக் கேட்டுத் தாய்மாரும் பிறரும் மகிழ்வர். இவ்வொலி மழலையைக் காட்டிலும் இனிமை மிக்கது; இளமையானது. மழலையை ஒரு வகையிற் பொருள் செய்யினும் இப்பருவப் பேச்சு ஒலிமாத்திரமாய்த் தோன்றலால் உணர்தலரிது. யாப்பில் தொடைகள் சரிவரப் பொருந்தாத ஒன்றைச் செந்தொடை என்ற பான்மைபோல் சொல்லுக்குரிய அமைதியற்ற இதனையும் 'செங்கீர்' என்றனர்போலும். செங்கீரை என்பதனை ஒரு நிருத்ய விசேடமெனக் கூறுவர் பெரிய வாச்சான் பிள்ளை. செங்கீரையென்பதன் சொற்பொருள் முன்னர் விளக்கப்பட்டதாயினும் செங்கீரை யாடுகவெனும் வழக்கை நோக்கின் கீழ்க்கண்டவாறு கொள்ளல்வேண்டும் என்பது புலனாகும்.

"...கருணையொடு மெள்ளக் கவிழ்ந்திருகை யூன்றிமென்
கமலமுக மேறெடுத்துத்
தெய்வத் தமிழ்ப் புலவர் போற்றுதரு மச்செல்வி
செங்கீரை யாடியருளே...." (புதுவை. திரி. சுந்தரி பிள்.)

"மல்காந்து மெல்லக் கவிழ்ந்து விளையாடவே
மன்னுயிர்கள் யாவுமாட
விருதாளூ மூன்றியிரு கையுமூன் றித்தலை
யெடுத்துத் தவழ்ந்திடவுமே...." (சிவகாமி. பிள்).

இவைகளின்படி இருகால்களையும் இருகைகளையும் நிலத்திலூன்றி முகத்தை மேல் நிமிர்த்தியாடுதல் இப்பருவச் செய்கை.

3. **தாலப்பருவம்**:—தால்-தாலு, நாக்கு; தாலாட்டு-ஓர் வகை நாவசைப்பு. அது ஆகுபெயராய் அச்செயலோடு உடனிகழும் பாட்டையு முணர்த்திற்று. தாலாட்டென்பது தாலென மருவிற்று. தாலாட்டைக் கவனிக்கும் பருவ மென்பர். இது ஏழாம் மாதம் நிகழும்; எட்டாம் மாதமென்பர் பிங்கலந்தையில். குழவிகளைத் தாயர் தம்மடித்தலத்தும், மணித்தவிசினும், மணித் தொட்டிலினும் துயிலச் செய்வதற்காகப் பாட்டுப் பாடுதல் வழக்கம். திவ்வியப் பிரபந்தங்களில் தாலாட்டெனத் தனித்துப் பாடியுள்ள பாடற்றொகுதிகளைக் காணலாம். செங்கீரை யாடியருளென்னும் அடுக்கு செங்கோ செங்கீரையென விணைந்தும் 'செங்கீரை' யெனத் தனித்தும் மரீஇ நின்றாற்போல தாலாட்டையேல் தாலாட்டையேல் என்னும் அடுக்குத்தொடர் தாலோ தாலேலோ என விணைந்தும் தாலெனத் தனித்தும் மரீஇயிற்று என்பர் ஈசான்யமடம் இராமலிங்க சுவாமிகள்.

4. **சப்பாணிப்பருவம்**:—ஸ: பாணி - சப்பாணி, ஸ:-கூட. பாணி-கை. சப்பாணி கொட்டல்-கையோடு கை சேர்த்துக்கொட்டுதல். இது 9-ஆம் மாதம் நிகழும். இங்ஙனம் சப்பாணி கொட்டுமாறு குழந்தையிடம் கூறுவதாகப் பாடப்படுவது இப்பருவம். நம் வீட்டிலும் தாயர் முதலியோர், "தத்தாங்கி தத்தாங்கி தலைமேலே யென்னுடி" என்று கூறிக் கைத்தட்டச் சொல்வதைக் கண்டிருக்கலாம். கால்வலியின்றிக் கைவலி கொண்டு நகர்ந்து செல்லுங் குழந்தைகளைச் 'சப்பாணி' யென்று கூறும் வழக்கை யுணர்க.

5. **முத்தப்பருவம்**:—முத்தம்—வாயிதழ் (பிங்); அன்பிற்கறிகுறியாக ஒருவகை யொலியுண்டாக உதடுகளாற் பரிசித்தல் (சூடா). குழந்தையை முத்தந் தாவென்று தாயரும் பிறரும் வேண்டுவதாகக் கூறுதல் மரபு. இது 11-ஆம் மாதம் நிகழும். முத்தம் எனும் சொல் முத்தினையும் குறித்தலின் முத்தப்பருவத்தில் புலவர்கள் "பிறவிடங்களில் கிடைக்கும் பலவகை முத்தங்களினும் கெடாத நின் வாய் முத்தமே சிறந்ததாகலின் அதனைத்தருக" என்று அமைத்தல் வழக்கம். இவ்வாறு இறுதி 4-பிள்ளைத் தமிழிலும் பார்க்கக் காணலாம். சிவானந்

தன் பிள்ளைத்தமிழில் மேலும் 10-வகை முத்தி வகைகளைக் கூறி அவை களைக் காட்டிலும் "அருளொடு புணர்ந்த முத்தியே சிறந்தது" என்று கூறியிருப்பது நோக்கத்தக்கது.

6. **வருகைப்பருவம்:**—இது வாரானைப் பருவம் என்றும் வழங்கப்பெறும். வாரானை—வருகை, ஆனை—தொழிற்பெயர் விகுதி. தளர்நடை யிட்டுவரும் குழவியைத் தோழியர் வாவென்று அழைப் பதாகக் கூறுவது இப்பருவச் செய்தி. இது 12-ஆம் மாதத்திற் கிளத்துவது. குழவிகளை அணி, உடை முதலியன அணியக் கூப்பிடு வது முறை. சில குழவிகள் அடம் செய்து அவைகளை யணிய மறுக் கும்; இதனை எதிர்மறை குறிப்புணர்த்தல் மூலம் சமாதானப் படுத்தலா மென்பர் மனநூலறிஞர். இதன்படி 596-ஆம் பாட்டு அமைந்திருக் கிறது.

7. **அம்புலிப் பருவம்:**—அம்புலி-சந்திரன். சந்திரனைக் குழந்தை யோடு விளையாட வாவென்று அழைத்தலைக் கூறுவது; 16-ஆம் மாதத் தில் சந்திரனை யழைப்பது நிகழும். 18-ஆம் மாதமென்பர் பிங்கலந்தை யில். இராமர் குழவிப் பருவத்தில் சந்திரனைக் கண்டு அருகில் வரச் சொன்னபோது யாராலும் முடியாமற்போனதால் அழுகை மிக,இறுதி யில் சுமந்திரன் கண்ணாடியில் சந்திரனைக் காட்டிச் சமாதானப் படுத் தியதை யாரே யறியார்! இப்பருவம் ஏனைய பருவங்களினும் அரியதென் பார் "பிள்ளைக் கவிக்கம்புலி புலியாம்" என்பதால் விளங்கும். அம் புலியை யழைக்கையில் சாம, பேத, தான, தண்ட வகையால் முறையே சந்திரனுக்கும் பாட்டுடைத் தலைவர்க்கும் ஒப்புக் கூறுதலும், வேற்று மை கூறலும், விளையாடவரின் பெறும் நன்மை கூறலும், வாராவிடின் நிகழுந் துன்பங் கூறலும் மரபு. (சாமம்-சமமாகக் கூறல், இனிமையாகக் கூறல்) ; இவ்வேழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத்தமிழிற்கும் பொது. இதன்மேலுள்ள பிரிவுகளைக் காண்க.

8. **(அ) சிற்றில்பருவம் :**—சிறுமை + இல்-சிற்றில், சிறுவீடு. மூன்றும் ஆண்டிற்குரியது. சிற்றில் விளையாடும் சிறுமியர், பாட்டுடைத் தலைவர் தம் சிற்றிலை யழிக்கும்போது "எம் சிற்றிலை அழியாதொழிக" என வேண்டுதல் கூறப்படும். சிறுமியர் மணலில் சிறுவீடு கட்டி நிலாச்சோறு பொங்குவதனை ஆண் சிறுவர்கள் குறும்புக்காக அவற் றைக் கலைத்துச் சிறுமிகள் அழ,மட்டிலா மகிழ்ச்சி கொள்வதை யாவரும் கண்டிருக்கலாம். இந்நிகழ்ச்சியை மனநூலார் "பாவனை விளையாட்டு" என்பர். பெண் குழவிகளைச் "சிறுவீடு கட்டுவாயாக" என்று பெண் பாற் பிள்ளைத்தமிழில் கூறுவதும் உண்டெனை இக்கோத்தின் 4, 5- பிள்ளைத்தமிழ் நூல்கள் தெரிவிக்கின்றன.

9. **அ. சிறுபறைப்பருவம்** :—பாட்டுடைத் தலைவரைச் சிறு பறை முழக்கும்படி வேண்டப்பெறும். இது 2-ஆம் ஆண்டில் கூறப் பெறுவது. இப்பருவம் அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் முதற்கண் வந்து பின்னரே சிற்றில் பாடப்பட்டுள்ளது. இங்ஙனம் வருவது இல. வி. பா.46-ஆம் சூத்திரத்துக்கும் வருட முறைக்கும் ஒத்ததாயிருப்பினும் "அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்" என்ற பன் பாட் சூத்திரப்படியே பெரும்பாலும் அமைந்துளது.

10. **அ. சிறுதேர்ப்பருவம்** :—சிறுதேர் (நடைவண்டி) உருட்டு மாறு பாட்டுடைத் தலைவரை வேண்டுதல் கூறப்பெறும். இது 4-ஆம் ஆண்டில் கூறப்பெறும்.

8. **ஆ. அம்மானைப்பருவம்** :—சில பிள்ளைத்தமிழில் இதற் குப் பதில் கழங்காடற்பருவம் வரும். கழங்காவது மரம், ஈயம் முதலிய பொருள்களான் உருண்டையாகப் பந்துபோன்று செய்வது. அதனை மகளிர் மேலே ஒன்றன் பின் ஒன்றாக எறிந்து கையாற் பிடித்து விளை யாடுவர். கடைச்சங்க காலத்தில் கழங்காடல் மிகுந்திருந்தது என்பது "பந்துங் கழங்கும்"(பரிபாடல் 81.-107) "குறுந்தொடி மகளிர் பொலஞ் செய் கழங்கிற்" (புறம் 36) "முற்றுறு கழங்கொடு முதலகடு" (பெருங் கதை பக். 104)என்பவைகளாலறியலாம். அம்மானைக்காய்கள் கொண்டு இங்ஙனம் விளையாடுவதும் இப்பருவத்தின் தன்மை.இது17-ஆம் மாதத் தில் நிகழும். பாட்டுடைத் தலைவியைத் தோழிகள் முத்தம்மானை முத லிய அம்மானைக் காய்கொண்டு ஆடியருளுமாறு கூறுவதாகும். மகளி ருக்கேயுரிய விளையாட்டினுள் இஃதொன்று; கலம்பக உறுப்புக்களில் அம்மானையென வருவது மகளிர் மூவர் கூடித் தம் நாட்டுத் தலைவனை (அல்) காதலரைக் குறித்தோ ஒருத்தி வினு எழுப்ப மற்றொருத்தி அதற்கு விளக்கங்கூற, பின்னொருத்தி இவ்விருவர்க்கு விடை கூறி அம் மனைக் காய்களை மேலே வீசிப்பிடித்துக் கொண்டு முடித்தலாக இறுதிச் சீரில் அம்மானை யென்ற சொல் வரப் பாடுதலாகும்.

9. **ஆ. நீராடற்பருவம்** :— இது 19-ஆம் மாதம் நிகழும். தலை வியை நீர் நிலையிற்சென்று புனல் விளையாட்டயர வேண்டுமென்று வேண்டுவதாகும். இச்செய்தி நல்ல கணவன்மாரையடைய கன்னிகள் நோற்கும் மார்கழி நோன்பைத் தழுவியுளது. "வெம்பாதாக வியனில வரைப்பென அம்பாவாடலின் ஆய்தொடிக் கன்னியர்......" எனவரும் பரிபாடலால் கன்னிப் பெண்கள் தாயருகாக நின்று நீராடினர் என விளங்குகிறது. "பேணுஞ் சிறப்பின் பெண் மகவாயின் மூன்றாம் ஆண்டில் குழ மணம் ஒழிதலும் ஐந்தின் முதலா ஒன்பதின் காறும் ஐங்கணைக் கிழவனை யார்வமொடு நோற்றலும் பனி நீர் தோய்தலும்

பாவை யாடலும்" (பிங்கலந்தை) என்பதால் 5-9வயதுள்ள சிறு கன்னியரே நீராடி நோன்பு நோற்றற்கு உரியர் என்பது போதருகிறது. இச்செய்தி "தாயருகாக நின்று" என்ற பரிமேலழகர் உரைக்கு ஏற்ற தாயினும் சிவிறியால் நீரிறைத்தல், மூழ்கி விளையாடுதல் போன்றன வயது மிகுந்த பெண்கட்கே தக்கது. ஐங்குறுநூறு 84-ஆம் பாட்டு, நற்றிணை 80ஆம் பாட்டு, கலித்தொகை 59-ஆம் பாட்டு, புறம் 70-ஆம் பாட்டு, திருப்பாவை, திருவெம்பாவை ஆகியன நீராடலைப்பற்றி விளக்குகின்றன. இன்றும் மலையாள நாட்டுப் பெண்கள் அருணோதய காலம் வரை நீராடுவதில் காலம் போக்கிப் பின்னர் கரையேறி நன்கு உடலைத் துடைத்துக்கொண்டு தூய்மையான அலங்கார உடை வகைகளை யணிந்து கண்களுக்கு மையிட்டு நெற்றியில் திலதமிட்டுத் தாம் பூலம் போட்டுத் தம்மை ஒப்பனை செய்வர்; பின்னர் ஊஞ்சலாட்டத்தைத் தொடங்குவர். இத்தகை ஆட்டங்கள் இச்செய்தியால் பெண்களுக்கேயென்பது தெற்றென விளங்குகிறது.

10. (ஆ) **ஊசற்பருவம்:**—இது 21-ஆம் மாதம் நிகழும். பாட்டுடைத் தலைவியை ஊசலொன்றிலேறி விளையாடி மகிழுமாறு கூறும் பருவம்; அஷ்டப் பிரபந்தம் முதலியவற்றில் தனியாகக் கூறப் பெறுவது மிஃதே.

---

# 1

# அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ்

---

"பிள்ளையார் பிள்ளையார் அவர் எங்கேயோ பிள்ளையார்.........." என்று சிறுவர் முதல் சிறுமிவரை பாடிக் களிக்கும் பெருமான் விநாயகரே. இவர் வழிபாடு இங்கு மட்டுமின்றிக் கடல்கடந்த நாடுகளினும் நேபாளம், திபெத், துருக்கி ஆகியவற்றினும் உள்ளது குறிப்பிடத் தக்கது. இந்தியாவில் இந்துக்கள் மட்டுமின்றிச் சமணர், பௌத்தர் ஆகியோரும் பூசிக்கின்றனர். நந்தமிழ் நாட்டிற்குப் பல்லவன் தளபதி பரஞ்சோதியார் வாதாபியைக் கொள்ளைகொண்டபோது அங்கிருந்த பிள்ளையாரைக் கொண்டு வந்து தம் ஊரான திருச்செங்காட்டாங்குடியில் கணபதீச்சுரம் என்ற கோயில் கட்டி எழுந்தருளச் செய்தார். இச்செய்தி நிகழ்ந்தது கி. பி. 641-42 என்பர் சரித்திராசிரியர். சங்க கால விலக்கியங்களில் விநாயகர் பற்றிய பேச்சேயில்லாதால் இது முதற்

கொண்டே விநாயகர் வணக்கம் தொடங்கியதெனலாம். இவர் ஒரு முகப் பிள்ளையார், ஓங்காரப் பிள்ளையார் எனப் பலவிதமாகப் போற்றப் பெற்றார்.

சீனாவில் 'குங்ஷீன்' என்னுமிடத்திலுள்ள பௌத்த குகைக் கோயிலில் செதுக்கப்பட்டுள்ள விநாயக ருருவம் கி. பி. 31-ஆம் ஆண்டைச் சார்ந்ததாம். மெக்ஸிகோ நகரிலும், பெருவிலும் (அமெரிக்கா) கணபதி அறுவடை காலக் கடவுளாகப் பூசிக்கப்படுகிறார். ஆதிசங்கரர் இந்து மதத்தை விரிவுபடுத்தியபோதுதான் கடவுளரின் தனித்தனி வழிபாடு ஏற்பட்டது. அது தொடங்கி கணபதியைப் பூசிப்பவர் 'காணபத்யர்' எனப்பட்டனர். 10-வது நூற்றாண்டுக்குப் பின்னரே தேவிகளுடன் பிள்ளையார் ஏற்படுத்தப்பட்டார் எனத் தெரிகிறது.

இப்பிள்ளைத்தமிழ் விநாயகரைப் பற்றியதாதலால் அவரைப் பற்றிய துதியோ, காவற் கடவுளாகக் கூறப்படுவதோ காணப்படவில்லை. 15-வது பாட்டின் குறிப்பில் நாதத்திலெழுபறை என்பது அபிதான சிந்தாமணியில் உள்ள வண்ணம் காட்டப்பட்டுளது. பிற நூல்களில் மாறுபாடு காணப்படுகிறது. திருநள்ளாற்றினிலுள்ள கணபதியைப் பூசித்து நளன் கலி நீங்கினான் என்றும் அக்கணபதி நளகூபக் கணபதி என்றும் 28-வது பாட்டு தெரிவிக்கிறது. இன்றும் திருநள்ளாற்றினிலுள்ள சனீஸ்வரர் கோவிலுக்கு மக்கள் சென்று களிப்பதோடு 'எள்கலந்த சோறும்' காகத்திற் கிடுகின்றனர். தாயர் தாமரை மலர்போன்ற கைகளைக் கொட்டி யழைத்தவுடன் "குந்தியெழுந்த பதங்கள் சதங்கை குலுங்கு சிலம்பிரையத் தொத்தணி முத்தொடு முத்து நகைக்குளிர் சோதிநிலா விசிறத், தொந்தியொடுஞ் சிறு பண்டியசைந்திடு தொங்கல் புறஞ்சுழலக் கைத்துணை வைத்துமெடுத்து மடிக்கடி காலொடு கால்விலக்க காலையிளங்கதிர் போலொளி பொங்கிய கதிர்முக மெதிர்மலைத் தத்தடியிட்டு..." வருகின்றார் விநாயகர். ஒருகுழவி நம் கண்ணெதிரே நடந்து வருவது போலுள்ளது இச்சொல்லோவியம்; என்னே! கவி இன்பம்.

விநாயகர் பிறப்பினை நோக்கிய பல புராணக் கதைகளில் சிவபுராணம் பார்வதி தானிருக்குமிடத்தில் ஆடவர் யாரும் வாராவண்ணம் காவல்காக்க ஒருவரை யேற்படுத்தினாரென்றும் அவரே விநாயகர் எனவு மியம்புகிறது. ஈண்டு 42-வது பாட்டு சிவனும், பார்வதியும் மண்டபமொன்றனை யடைந்து ஆண்டிருந்த வனப்பை நுகர்வுழி, தேவி அங்குப் பிரணவப் பொருளை நோக்க அதனில் ஆண் பெண் யானைகள் கலவி செய்ய அதனைக் கண்ட இறைவி யாதெனலும் "நின் சம்பந்த

யாகி ஒரு மகன் தோன்றுக" வென்னக் கூறிச் சிவன் களிற்றினை நோக்கி நிற்றலும் முடிவில் விநாயகர் அதினின்று எழுந்து வந்து வணங்கினர் என்று கூறுகிறது. இதனைக்,

"கடிவி ராவிய மதம்பொழி களிற்றினையந்த
வடிகணோக்கி நின்றன ருளத்தார்வமோ டம்மை
பிடியை நோக்கி நின்றன ளவைபேணிய கலவி
முடிவின் மேதகத் தோன்றினர் மெய்விநா யகரே."

(விநா. புரா.) என்ற பாட்டாலறியலாம்.

46-வது பாட்டு திவோதாதன் என்கிற திவோதானன் வரலாற்றை விரித்துக் கூறுகிறது. திவோதாதன் காசியில் தேவர்கள் இராதபடி பிரமனிடம் வரம்பெற்று அங்ஙனமே ஆட்சி செய்ததால் மந்தரமலைக்கு வரம் கொடுக்கச் சென்ற சிவன் காசி திரும்பும் வண்ணம் முயற்சி செய்தும் முடியவில்லை. இறுதியில் கணபதியை யனுப்ப அவர் சோதிடனாய்ச் சென்று முறை திறம்பச் செய்தார். "கூர்ந்த நித்திரையிற் சென்று கொடுங்கன வாக்கி யந்தச், சார்ந்த சொப்பனத்தைத் தப்பா நனவிடைத் தயங்கச் சாற்றி, நேர்ந்திடு மிதனுக்கின்ன நெடும் பயனென்று, சொல்லி யார்ந்தவப் பயனுங் கூட்டி யநேகரைத் திறம்பச் செய்தார்." (விநா. புரா.). பின்னர் இவர் கூறியவாறு திருமால் நிமித்த முரைப்பவனாய்ச் சென்று அரசனைச் சம்மதிக்கச் செய்த பின்னர் மந்தர மலையினின்று சிவன் முதல் யாவரையும் அழைத்திருத்தினர். இதனையே "கன்னி மடவார் தமக்குமிளங் காளையருக்குங் கனவுரைத்துக் காசித்தலத்தை மீண்டு வரக்கருதும்..." என்றனர். இதனைச் செய்தவர் விநாயகர் என்பதனை "...தழைந்த காசிநகர் வாழ்க்கை தந்தாய் நீயே யெனச் சால விழைந்துடிண்டி விநாயகரை..." என்பதனால் காண்க.

விநாயருக்கு 16-பெயர்கள் உண்டு என்பதனை,

"சுமுகரே யேகதந்தரே கபிலர்சூழ் கெசகன்னரே நாத
மிமிழ்தரு மிலம்போதர ரெழில்விகட ரிலகிய விக்கினராச
ரமைவர்சூழ்ந் தேத்துங் கணாதிபர் தூமகேது நன்றருள் கணாத்
தியக்க
ருமிழொளிப் பாலசந்திரர் தானமூற் றிருந்தெழுங்
கசானனரே."
"வக்கிரதுண்டர் வயங்கிய சூர்ப்பகன்ன ரேரம்பர் வான்
வரங்கார்
...க்கருள் கந்தபூர்வச ரெனவே சொல்லிய பெயர் பதினாறு.."

(விநா. புரா.) இவைகளால் 58-ஆம் பாட்டின் பெயர் விவரம் ஓர்க.

சிவனுக்குரியன யாவும் விநாயகருக்குமுண்டு என்பதை 61-ஆம் பாட்டு விளக்குகிறது. வெண்பிறைக் கொழுந்தைக் கணபதி யணிந்தனர் என்பது "மருவிய கலைகளுள் வையகந் தொழ வொருகலை நம தொளிர் முடியின் வைருக..." (வி. புரா.) என்பதால் விளங்குகிறது. அரவக்கலனை யணிந்தது விநதையின் வேண்டுகோளால் சம்பாதி, கருடன் முதலியவரை மீட்டு வரச் சென்ற போதாகும்.

"இரிந்த பன்னகமு மெய்தித் தாழ்ந்தன
புரிந்தவை தம்மையும் பரித்த வங்கதம்
புரிந்தவண் குழைபுனை யார மாதியாத்
தெரிந்துதம் முருவெலாஞ் சிவனு வித்தனர்.
"தந்தையார்ச் சித்ததே தரும மன்னதை
மைந்தரார்ச் சித்தலும் வழக்க மாதலா
லந்திவா னிறத்தவ ரணிந்த வாளரா
வெந்தையா ரணிதலு மேற்ற தாகுமே." (வி. புரா.)

என்பவைகளால் விளங்கக் காண்க.

21-பத்திரங்கள் கொண்டு விநாயகரை வணங்க வேண்டுமென விநா. புரா. உமையம்மை சதுர்த்திவிரத மனுட்டித்த படலத்தில் 33, 34, 35 பாடல்களில் எவ்வெப் பெயருக்கு எப்பத்திரம் கொண்டு பூசிக்க வேண்டுமெனக் கூறுகின்றன. "பெருமண மாசிப்பத்திரம் சுமுகன்..." என்பதனைக் காண்க. 55-வது பாட்டில் பூவணப் பிள்ளையாய் என வருவது அழகிய நிறம் பொருந்திய (பூ+வணம்) இளமைப் பருவமுடையவனாய் என்றும் மதுரைக் கருகில் வைகையாற் சூழப்பெற்ற செடி நிறைந்த ஊரான திருப்பூவணத்தினின்று வந்த பிள்ளையார் என்றும் பொருள் கொள்ளலாம்; ஏடகம் என்ற தலத்தில்தான், வைகை நீரில் எதிர்ந்த ஏடு கரையேறியது. இது வைகையின் வடகரையிலுள்ளது. அறிஞர் ஆராய்க.

"பின்பு மெழில் குன்றுத பிள்ளையாரென வரும் பிள்ளையிவ..." என்பதில் பிள்ளையார் என்ற பெயர் பெற்றது பிள்ளைப் பருவச் சிறுவர்கள் சதா எழுத்து வேலை செய்வதுபோன்று இவரும் மேருமலையில் தன்னொரு தந்தத்தை யொடித்துப் பாரதம் எழுதியதாலேயே எனக் கருணீக புராணம் இயம்புகிறது.

69-ஆம் பாட்டு விநாயகரே பிரணவப் பொருள் என இயம்புகிறது; "பிரணவ முன்னர் வைகும் பெருமறை தொகுத்தகாலை, பிரணவ முன்னோதாமற் பேசுதலின்மையாலே, பிரணவ மொழியாற் றன்னைப் பேசினை யெனவுட்கொண்டு பிரணவப்பொருளாயுள்ளான் பேரிடர் காத்தானன்றே." "வளரோங்காரத் துருக்கொண்ட வள்ளலிவனே..." (விநா. புரா.) என்பன ஓர்க.

விநாயகர் உருவ வழிபாடு இன்ப நிகழ்ச்சி (அ) துன்பநிகழ்ச்சியா தொன்றற்கும் இன்றியமையாதது. "வைத்தால் பிள்ளையார் வழித் தெறிந்தால் சாணி" "வெல்லத்தில் பிள்ளையார் செய்து அதிலேயே கிள்ளி நைவேத்யஞ் செய்தாற்போல" என்ற பழமொழிகளை நோக்க விநாயகரைச் சாணியினாலும் வெல்லத்தினாலும் மற்றுஞ் சந்தனம், மஞ்சள், மண் முதலியவைகளாலும் செய்து வணங்கலாமென்று விளங்குகிறது. இத்தகைய எளியசெலவில் வைத்து வணங்கும் கடவுளர் வேறு யாவர்! பாற்கடல் கடையும்போது விநாயகரை வணங்காததால் ஆலகால விஷம் பிறக்க இந்திரன் முதலியோர் கடல் நுரையால் திரு வலஞ் சுழியில் பிள்ளையார் செய்து வணங்கினராம், (75-ஆம் பாட்டு); இவ்வெள்ளைப் பிள்ளையார்க்குத் துதிக்கை யாது காரணத்தாலோ வலப் பக்கமாக உளது. இத்தகையவரைச் சிவனும் பார்வதியும் தங்கள் திருமணக் காலங்களிலே வைத்து வணங்காம லில்லை. சிவனும் திரிபுர சங்காரத்தின்போது விநாயகரைத் துதியாததால் தேரின் அச்சு முதலி யன முறியப் பின்னர் துதித்துச் சரியானதாக பாட்டு இயம்புகிறது.

81-வது பாட்டால் எங்குச் செல்லினும் யாதொன்றற்கும் விநாய கரை நினைத்தே காரியந் தொடங்குவர் என்பது விளங்குகிறது. முற் காலத்தில் இந்திய வியாபாரிகள் கடற் பிரயாணம் செய்யும்போது புயல், கப்பல் கொள்ளையர் தொல்லைகள் முதலியன ஏற்படாமலிருப்பதற் காகக் கப்பலில் பிள்ளையார் விக்கிரகத்தை எடுத்துச் செல்வது வழக்க மாம். இவர்கட்குத் துன்பம் நேரின் இவ்விக்கிரகத்தைத் தலைகீழாக வைப்பராம். நம் வீட்டிலுங்கூட இங்ஙனமானல் விக்கிரகத்தை நீரில் போடப் பார்க்கிறோம். துன்பம் நேரிடாமல் காப்பாற்றாத கணபதிக்கு இஃதோர் ஏற்ற தண்டனைபோலும்! எனவேதான் "கடலிலே வங்க மேறிச் செல்லினும்" என்றார்.

"பந்துங் களபப் பனிச்செப்பும்" என்ற 25-வது பாட்டு மாதர் கள் தங்களை வந்து தழுவும் கணவரைப் பார்த்து "இதோ தேனிறால் ஒன்றுளது; அதைப் பிடித்து வடித்துத் தருதிர்" என்று கூறுவதற்கு "...நெய்தலுங் குமுதப்பூவு நெகிழ்ந்தசெங் கமலப்போதுங் கைகளு முகமும் வாயுங் கண்களுங் காட்டக் கண்டு கொய்திவை தருதிரென்று கொழுநரைத் தொழுகின்றாரால்." (எழுச். பட. 54) என்ற கம். இரா. செய்யுளை ஏறக்குறைய ஒப்புமை கூறலாம். 97-ஆம் பாட்டிலுள்ள "வானேறு சினையேறி மந்திக் குலங்களால்" என்பது

"அந்தர நிவந்தசோலை யலர்பசுங் கோட்டிறால் கண்
மந்திக ளுகளுந் தோறுங் கிழிந்து வார்மது நீர் பாய்ந்து
செந்தினை விளைக்குஞ்..." (விநா. புரா)

என்பதனை யொத்தல் காண்க.

**தமிழன்பு:-** இவ்வாசிரியர் விநாயக புராணம், **கம்பராமாயணம்** ஆகியவற்றில் பயிற்சி மிக்கவராவதோடு வடமொழி, **தென்மொழி** ஆகியவற்றையும் பலபடப்புகழ்கின்றவர். காமேவு மியலிசை நாடக மெனு முத்தமிழின் கடலே (செய் 5) திணை செந்தமிழ்க் கொளு (9) மேலான வடசொலுந் தென் சொலுங் கற்ற மேலோர் (11) மூவகைத் தமிழாட (13) கோதற்ற வடமொழியோ (15) தெய்வத் தமிழ்கொளு (16) வீறுதமிழ் கொண்டு (55) மெய்த்தமிழளித்திடும் (56) செந் தமிழின் வளமைபெறு (70) சிந்தையுருகிப் பைந்தமிழ் நூல் (86) ஆகியவைகளாலறியலாம்.

92-ஆம் பாட்டில் இராமன், சீதை, இலக்குமணன் ஆகியவர்களைப் படைகளோடு தேரில் ஏற்றி வந்து அயோத்தியில் சேர்த்தனர் என்பது விநா. புரா. விஷ்ணுவைப் பற்றிய புராணங்களில் காணப்படாச் செய்தி. புராணங்களிலில்லாத செய்தி தலபுராணங்களில் கூறப்படுவதுண்டு என மச்சபுராணம் பதிப்பாசிரியர் முகவுரையில் கூறியதன்படி தலபுராணம் இதற்குண்டோ என்ற ஐயம் நேருகிறது. வரலாறு தெரியாததாலும் ஒரே பிரதியாதலாலும் ஐயமான விடத்தில் மூலத்திலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுளது. அவ்வையமான வரிகள் கீழ்க்கண்டவாறு மிருக்கலாமோ எனத் தோன்றுகிறது.

"விண்டேரில் ஏறிஇகல் வென்று மாதரசியொடு
மீமையிரு தேரில் நான
வெற்றிமக னும்வீர் கத்திவிட வேமணி
வியன்தேர் இறங்கி மணிநூல்
பண்டேர் வனத்தினில் பணியும்நாள் அப்பேர்
படைத்து....."

(மீ+மை+இருதேரில்—மேலேசெல்லும் மேகம்போன்ற பெரிய புட்பக விமானத்தில்; நான வெற்றி மகன் - ஞானத்தையும் எங்குச் செல்லினும் வெற்றியையுமுடைய அனுமான்; அப்பேர்படைத்து-இராமனது பெயரையும் சேர்த்து விநாயகர் பெற்று.) இராமேஸ்வரம் தவிர திருவுசாத்தானத்திலும் இராமர், சுக்கிரீபன், சாம்புவான் ஆகியோர் பணிந்ததாகத் தேவாரம் கூறுகிறது. மற்றும் திருநாளைப் போவார் புங்கூரில் குளஞ்சமைத்ததில் கூலியைப் பகிர்ந்தளித்தனர் விநாயகர் என்பது பெரிய புராணத்தில் காணப்படாதது.

இத்தகை சிறந்த நூலின் ஆசிரியர் பெயர் அறிய முடியாமலிருப்பது வருந்தத்தக்கது. இருப்பினும் இந்நூலில் 19-வது, 29-வது பாடல்களினின்று சிற்சில குறிப்புக்கள் கிடைக்கின்றன.

இவ்வாசிரியர் வறுமைப் பேயால் வஞ்சிக்கப்பட்டுப் புதுச்செல்வம் தோன்றியார் கண்ணெல்லாம் சென்று இந்திரா, சந்திரா என்று கூறி நின்றவராம். இவரிடம் இவ்விநாயகர் தனது பாதத்தை மறவா திருக்குமாறு கூறி யாட்கொண்டனராம் (செய். 19). இவ்வாசிரியர்க்கு இருபிள்ளைகள் பிறந்தனரென்றும் வேதவிநாயகரே குருவாக வந்து தீட்சை புரிந்தாரென்றும் அப்பிள்ளைகட்குச் சுப்பிரமணியன், வேத விநாயகன் (அல்) இக்கடவுளர்க்குரிய பெயரை வைத்தன ரென்றும் நெஞ்சில் நினைத்தவைகளை யெல்லாம் விநாயகர் கொடுத்தனரென்றும் தாய், தந்தை, குரு, தெய்வம் ஆகியவராய் விளங்கினரென்றும் 29-ஆம் பாட்டு கூறுகிறது.

இவ்வரும்பாத்தை தென் ஆற்காடு மாவட்டத்தில் திருக்கோவலூர் வட்டத்திலுள்ள ஓர் சிறிய ஊராகும் எனத் தெரிகிறது. இவ் வட்டத்திலுள்ள ஊர் புள்ளி விவரப்பட்டியல் புத்தகத்தில் (Village Statistics Register) 'அரும்பாத்து' எனக் குறிக்கப் பெற்றுளது. எங்களிடம் உள்ள ஓர் ஓலைச்சுவடியில் இவ்விநாயகர்மீது பாடிய கீர்த்தனத்தில் "அரும்பாத்தி வேதவிநாயகர்" எனக் குறிக்கப் பட்டுளது. இவைகளை நோக்கின் இவ்வூர் அரும்பாத்தை, அரும் பாத்தி, அரும்பாத்து என்று வழங்கப்பட்டுளதென அறியலாம். இங்கு வேத விநாயகர் கோயிலொன்றே யுளது என்பது காப்புச் செய்யுளில் தல சிவபிரான், உமை ஆகியவர்மீது பாடல்கள் காணப்படாத தால் உய்த்துணரலாம். விநாயகன், வினையகன் இரண்டையும் பேத மின்றி யாளுவது ஓலைப்பிரதியில் கண்டவுண்மை. இப்பிரதியில் சில பாடங்கள் மூலத்திலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இப்பிள்ளைத்தமிழ் மூவருடக் காடலாக்கு 2677-ஆம் எண்ணி னின்று வெளியிடப்பெறுகிறது. இது தென்னாற்காடு மாவட்டம், குமரகுப்பம் கிராமத்தைச் சேர்ந்த திரு. K. ஷண்முகம் அவர்களால் நன்கொடையாக அளிக்கப்பட்டதாகும்.

---

## 2. வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்

---

இப்பிள்ளைத் தமிழ் வைணவ விஷயமாக அமைந்ததாகும். இது பாண்டிய நாட்டிலுள்ள 'திருவைகுந்தம்' என்ற நகரின்கண் எழுந் தருளியுள்ள திருவைகுந்த நாதனைப் பற்றியதாகும். இவ்விடத்தில் தான் இந்திரனும், பிருது சக்கரவர்த்தியும் தரிசனம் பெற்றனர். இதில் காப்புப் பருவமென்பது தெய்வ வணக்கமெனக் கூறியிருப்ப

தும், பன்னிரு ஆழ்வார்களைக் காவற் கடவுளராகக் கூறியிருப்பதும் புதிய அம்சங்கள். இப்பாடல்கள் எளிமை மிக்கனவாய் சாதாரண மக்கட்கும் விளங்கும் வகையில் பாடப் பட்டுள்ளது போற்றத் தக்க தொரு அம்சம்.

புலவர் தம் வழுதி நாட்டைப் பற்றி உயர்வு நவிற்சிபடக் கூறி யுள்ளது அவர்தம் பேருணர்வைப் புலப்படுத்துகின்றது. மதமிக்க யானையொன்று பலவின் கனியின் சுளையைத் தேனில் தோய்த்துப் பெண் யானைக்குத் தந்து மகிழ்வதும், மேகமுழங்க அதனைச் சிங்கம் யானை பிளிறியதென்று நினைத்து அச்சப்தம் வந்தவிடத்துக் குதிக்க அங்குள்ள மலைப்பாம்பு தானிருந்த விடத்திற்கே இரை வந்ததென நினைத்து மகிழ்வதுமான **குறிஞ்சிநில** வளனும், ஆகாயத்தையே மூடி வளரும் வாழையின் பழத்தை மணம் வீசும் புதிய தேனில் தோய்த்துக் கடுவன், மந்திக்கு அளிப்பதும், சோலையில் வசிக்கும் மைனாவினிசை யைக் கேட்டு மகிழ்ச்சியுடன் தாமரையில் வாழும் ஆணன்னம் தன் பெடையைத் தழுவிக்கொண்டு தூங்கும் அத்தகை நீர்நிலையருகு உள்ள தாழையைக் கண்டு கொக்கெனக் கருதி வாளைமீன் நீரினின்று துள்ள மாங்கனிகளில் பட்டுச் சாறுகிய தேன் வெள்ளம் பெருகுவதும், தன் மந்திக்கு ஆண் குரங்கு பலா, மா, வாழை ஆகியவற்றின் கனிகளை யறுத்துக் கொடுக்க அவைகட்குரிய உழவர்கள் அவைகளை யதட்ட அவை அவ்விடத்தை விட்டு நகர மறுத்துப் பழங்களையே வீசும் கருவி களாகக் கொண்டு அவ்வுழவர்மீது வீசுவதும் போன்ற **மருதநில** வள னும் பயிலுந்தோறெல்லாம் நனிபேரின்பம் பயவாநிற்கின்றது.

"தும்பிமுரல் சோலைசூழ் பலவினிடை" (பா—102).

"வஞ்சியிடை பஞ்சினடி மிஞ்சுமெழில் மங்கையுடன்" (பா-151).

"இந்து நுதனங்துமிட றுந்துமுலை செந்துவ ரிதழ்க்கவுரி" (பா—182) என்பனவற்றில் யாப்பமைதியும் எழிலும் என்னே நலம் பெற் றுள்ளன!

"………யெதிர்த்த வரக்கர்தமைச் செயித்த வுவப்போ வுருக்கு மணி தனத்தில் முயங்குங் கெருவிதமோ………" என்று சிறுமிகள் சிற்றிலழிக்கவந்த வைகுந்தநாதனைப் பார்த்துக் கூறுவது பிள்ளைமைப் பருவ எண்ணங்களை வடித்துக் காட்டுகிறது. மற்றுந் தாங்கள் பகைவ ரல்ல என்பதை "நிதிபோல் மகவைப் பெற்றெடுத்து நின்பேர் புனைவே னெனக் கருதி" என்பதில் காட்டுகின்றனர். "பேணுஞ்சிறப்பிற் பெண் மகவாயின் மூன்றும் ஆண்டில் குழமணம் ஒழிதலும்." என்ற பிங். சூத்திரத்தால் மகவைப் பெறுதல், குழமணம் இவைகளின் விவரம் காண்க,

"மேதிபடி வாவியிடை..............சூழ்கழனியும்" என்ற அடிகள் "மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று வீட்டளவும் பால் சொரியும்........." என்ற கம்பர் பாடிய தனிச் செய்யுளையும் "சூழ மேதி யிறங்கும் துறையிற் சொரியும் பாலைப் பருகிய வாளை..." என்ற குற்றாலக் குறவஞ்சிப்பாட்டையும் நினைப்பூட்டுகின்றன.

இவ்வாசிரியர் அரக்கர்களின் இழிவைப் புலப்படுத்துவதில் கம்பருக் கிளைத்தவரல்லர். "செகதல மருவிய வுயிர்களை வேரொடு தின்றிடு மறவுரவோர் சிகையெரி பங்கினர் புகைசொரி கண்ணினர் செல்லென வார்ப்புடையோர் அகமொடு வஞ்சனை கொலைபுரி வன்றொழிலடல்செறி நடலை விறல் ஆண்மை பொருந்திய நீல நிறத்தினர்........" (191) "அல்லைப்பழித்த நிறத்தரக்கர்.........." (176), "தழலெறியெனும் பங்கியிருள் செறியு மேனிநிமிர் தானவர்......" (170), என்பனவற்றின் கருத்துக்கள், "வன்கண் வஞ்சனை யரக்கரித் துணைப்பகல் வையார் தின்பார்........" (காட்சி பட. 16), "......ஆலமே உருவு கொண்டனைய மேனியர் வாலமே தரித்தவன் வெருவும் வண்மையர்." (கா.பட. 58.), "அளந்த தோளினன் அனல் சொரி கண்ணினனிவளைப் பிளந்து தின்பேனென்..." (நிக். பட. 61.), "......யன்று நான் வஞ்சஞ் செய்ததாரெனக் கமரினேர்வார்." (நிக். பட 66.), என்ற கம்பராமாயணப் பாட்டுக்களில் வந்துள்ளன காண்க.

166-ஆவது பாட்டில் முத்தினை யன்னங்கள் தமது முட்டைகளெனக் கருதி யடைகாத்தல் "குடவளை துறைதொறு முடுநிரை யெனவிரி குளிர்நில வெழவுமிழ் முத்தைத் தடங்கரை குலவிய படர்சிறை மடவனமொடு சில குருகுகள் சினையொ டணைத்துத் துயின்றிடு..."(குமர. குரு. பிரபந்தம் 604).என்பதிலும் காணலாம். 132-ஆம் பாட்டில் "பணியைப் பழித்த வேள்மனை" என்பது அல்குலுக்கு வருதல்போன்று "எல்லைப் படாத வளமேறு மிந்திரன் மேனியெங்கு மரன்மனையை வைத்தும்" (பா. 78) என்று வருவதும் காண்க.இங்கு மாரன் என்பது மரன் எனத் தொக்கது. முத்தப்பருவத்தில் பாண்டவர் வனமுறையும் நாளில் திரௌபதி வேண்டிய மாங்கனியை அருச்சுனன் அறுத்துத் தந்ததாகப் பார்கவதமும் நெல்லிக்கனியெனப் பாரதமும் கூறுகின்றன. இதற்கேற்பமூலம், குறிப்புரை இவைகளை ஏற்றவாறு கொள்க.

அம்புலிப்பருவம் சாம, பேத, தான, தண்டம் என்ற முறையில் அமையாது தான, தண்டம் என்ற முறைகளே காணப்படுகின்றன. முத்தப்பருவத்தில் 9-பாட்டுகளே காணப்படுகின்றன. இதனை எழுதிய ஒரே ஓலைச்சுவடியில் ரகர றகர பேதங்களின்றி ஒரே 'ரகர' மாக இருத்

தலாலும் ளகரம், ழகரம் ஆகிய இரண்டற்குமே ழகரம் உபயோகிப்ப தாலும் பிழைகள் நேர்ந்திருக்கின்றன. அவைகள் பின்னர் வைணவ மதப்புத்தகங்கள் உதவியால் திருத்தப் பட்டுள்ளன. இங்ஙனம் நேர்ந்த பிழையிலொன்று நாவீறன் எனற்பாலது நாவீரன் என்பது. மற்றும் பிழை திருத்தத்தில் திருத்தியுள்ள நங்கைசேய் என்பதற்கு உடைய நங்கை மகனார் நம்மாழ்வார் என்றும் மூட்சுக்கள் என்பதற்கு முமூட்சுக் களின் முதற்குறை யெனவும் பூவையொளி என்பதற்குக் காயாம் பூவின் ஒளிபோன்ற எனவும் குறிப்புரையில் திருத்தி வாசிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். செம்பொன்னின் இன்பநிறை (102) யென் பதற்கு இலக்குமியின் கணவனை திருமால் நிறைந்த என்று பொருள் கொள்ளல் நன்று.

இத்தகை அரிய நூலின் ஆசிரியர் பெயர் தெரிய முடியாதிருப்பது தமிழரின் தவப்பேறின்மையே. இவர் சாந்தூரில் வதிந்த **பெரிய நம்பி** என்பாரின் சீடர் எனவும் அவரே "சம்ஸ்காரமும்" செய்வித் தார் என்பதையும் "எந்தனிரு புயமதில் சங்காழி தனையணிந் திம்மை யினும் மறுமைதனிலும், ஏழேழ் பிறப்பினும் உவந்து விலைகொண்டு மகிழிறையவன் **பெரியநம்பி**...." (112), "எங்கள் குடி வழியடிமை கொண்டு மகிழ் **சாந்தூர**னிணைமலர்த் தாள்கள் வாழி," என்ற பாடல் களாலறியலாம். இவர் பாண்டிய நாட்டினர் என நாட்டைப் புகழ்வதால் விளங்குகிறது.

இப்பிள்ளைத்தமிழ் மூவருடக் காடலாக்கு **441**-ஆம் எண்ணினின்று வெளியிடப் பெறுகிறது. இது 1920-21 இல் ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த அப்புவய்யங்கார் அவர்களால் நன்கொடை யளிக்கப்பட் டதாகும்.

---

## 3. இராகவர்பிள்ளைத்தமிழ்

---

முத்திதரும் நகரங்கள் ஏழனுள் அயோத்தியுமொன்று. இவ் வயோத்தி கோசல நாட்டின் தலைநகராயிருந்தது. யாவராலும் செயிக்க முடியாதாகையால் "அயோத்யை" யென்ற பெயர் வந்தது. புராணங் களில் அயோத்தி திருமாலின் "சிர்ஷஸ்தானம்" (தலைப்பாகம்) எனக்

கூறப்பட்டுளது. இங்குச் சரயூநதி கோக்ரா, சரயூ என்று இரு பிரிவுகளாய்ப் பிரிகிறது. இராமாயணத்தில் அயோத்தியின் பரப்பு 12-யோசனை என வருணிக்கப்பட்டுளது. இன்றோ ஒரு பெரிய கிராம மாகத்தான் காட்சியளிக்கிறது. இராமபிரான் அவதார காரிய முடிந்து வைகுண்ட மெழுந்தருளும்போது தம்முலகம் வருபவர் புண்யமான சரயூநதியில் முழுகலாம் என, அங்ஙனம் அயோத்தி வாசிகளெல்லாம் அந்நதியில் மூழ்கி ஸ்வர்க்கமடைந்தனர். எனவே அப்பாகம் "ஸ்வர்க் கத்வார தீர்த்தம்" என்று பெயர். பரதன் இராமரது பாதுகைகளை வைத்துப் பூசித்த இடமான நந்திக் கிராமம் இந்நகரினின்று 11-மைல் தூரத்திலுள்ளது.

இவ்வாசிரியர் முதற்கண் அனுமனைத் துதித்திருப்பது புதிய அம்சம். வருகைப்பருவத்தில் இராமரைச் செவிலித்தாயர் அழைக்கும் போது பசுவின் வரவை விரும்பி நோக்கும் இளைய கன்றினையொத்தும் வைத்தியன் வரவை நோக்கும் பிணியோனென்றும் உவமை கூறப்படு வன, "அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தே அழுங்குழவி...", "வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன் பால் மாளாத காதல் நோயாளன்போல்," என்ற குலசேகராழ்வார் பாட்டுக்களைப் பெரிது மொத்துள்ளன. அம்புலிப்பருவம் வைகுந்த நாதன் பிள்ளைத்தமிழினைப் போன்றிராது நால்வகை உபாயங்களும் பொருந்தப் பாடப்பட்டுள்ளது. 289-ஆம் பாட்டில் இராமர் உலகினர்க் குச் சில படிப்பினைகளான தாய் தந்தையர்க்கு மக்கள் செய்யத்தக்க அறமுறையினையும், சகோதரர்கள் ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய முறைமை போன்றனவைகளை யறிவுறுத்தவே பிறந்தார் என்கிறார். 298-ஆம் பாட்டில் மடவார்களின் இழிதகமையைக் கூறும் புலவர் சமணமுனிவர்கட்குப் பின் வாங்கியவரல்ல. "சந்ததமு மோவாது புன்மலஞ் சொரிவிழிகள் தம்மை முழுநீலமென்றும்" என்ற அடி, "வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின் மற்றிவளும் கோற் கண்ணளாகும் குனிந்து." (நாலடியார்) என்ற செய்யுளைப் போன்றல் காண்க. "கடவுணதி யாடியு மழித்துமயிர் நீட்டியும் காவிநன்னிற மருவிய" என்ற 300-ஆம் பாட்டினடிகள் "மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம் பழித்த தொழித்துவிடின்." என்ற குறளோடு ஒத் திருத்தல் காண்க. 231-ஆம் பாட்டின் குறிப்பில் சேனையர்கோன் வரலாறு அபிதான சிந்தாமணியில் எழுதியுள்ள வண்ணம் குறிக்கப் பட்டுளது. வைணவ சித்தாந்தப்படி அவர் நித்திய சூரிகளாகக் கருதப்படுகிறார்.

278-ஆம் பாட்டில் சூரியகுல அரசன் ஒருவன் தனது கண்களை இரந்த பிராமணன் ஒருவனுக்களித்ததாக வரும் செய்தி விஷ்ணுவைக் குறிக்கும் எப்புராணத்திலும் காணப்படவில்லை. இப்பாடல்கள் வைண

வர்கட்கு ராமநாம தியானத்தைப் பெருக்கும்வண்ணம் காணப்படு கின்றன. சிறுதேர்ப் பருவத்தில் 9-பாட்டுடன் நின்றுவிடுவது வருத் தம் தரா நிற்கின்றது. இத்தகை நூலினை யளித்தவர் **குற்றாலம் குழந்தை முதலியார்.** இவர் குற்றாலத்தில் வதிந்தவரென்பது முதலி லுள்ள அடைமொழியாலும், வைணவ மதமென்பது ராமரைத் துதித் திருப்பதாலும் அறியலாம்.

இப்பிள்ளைத்தமிழ் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 323-ஆம் எண்ணுள்ள ஓலைச்சுவடியினின்று வெளியிடப்படுகிறது.

---

## 4. தில்லை, சிவகாமியம்மைபிள்ளைத்தமிழ்

"ஏத்தருந்தலம் எழிற் புலியூரே" என்பதன்படி இத்தலம் விராட் புருடனுக்கு இருதயத்தானமாகக் கூறப்படுகிறது. சிவபிரானுக்கு ஆயிரக்கணக்கான கோவில்களிருப்பினும் கோவில் என்று சிறப்பித் துக் கூறப்படுவது இஃதொன்றே. பூலோக கைலாசமென்று சைவர் களாலும் திருச்சித்திர கூடம் என்று வைணவர்களாலும் போற்றப் பெறுவது இது. பஞ்ச பூததலங்களுள் எல்லாப் பூதங்களும் தோன்றி நின்று விளங்க இடந்தந்து நிற்கும் ஆகாசத் தலமாய் விளங்குகிறது. காண முத்தி கிடைப்பது தில்லையாகும்.

சிதம்பரத்தின் தெற்கில் நான்குமைல் தூரத்தில் காவேரியின் கிளையாகிய கொள்ளிடம் ஓடுகின்றது. மணிமுத்தா நதியென 326-ஆம் பாட்டில் குறிக்கப்படும் வெள்ளாறு வடக்கே ஓடுகிறது. இவ்வெள் ளாற்றில்தான் மேற்கூறிய மணிமுத்தா நதி கலந்துவிடுகிறது. பால மான் என்னும் சிற்றாறு நகரத்திற்கும் புகைவண்டி நிலையத்திற்கும் இடையே தெற்கிலிருந்து வடக்காக ஓடுகிறது. இது கங்கைப் பேராறு காசியில் தெற்கு வடக்காக ஓடுவதை நினைப்பூட்டுகிறது.

**கற்பகவிநாயகர்** :-கற்பகம்போல அடியார்களின் கருத்தறிந்து முடிக்கவல்ல பெருமானாதலின் "கற்பக விநாயகர்" எனப் பெயர் பெற்றார். மேற்குப்பார்த்த சந்நிதி. துதிக்கையைச் சேர்த்து ஏழு கை கள் கொண்டவர். இவர் தல விநாயகராதலால் முதற்கண் இவர் துதி காணப்படுகிறது.

**சிவகாமியம்மை**:-ஒற்றைக்கால் மண்டப விநாயகராலயத்தினின்று சிவகங்கையை வலமாகச் சுற்றி வரும்போது சிவகங்கைக்கு மேற்கே

விளங்கும் ஆலயமாகும். நின்ற திருக்கோலமாக இவ்வம்மை விளங்குகிறார். இவ்வம்மைக்கே பூரத்தைத் தீர்த்த விழாவாகக் கொண்ட 10-நாள் திருவிழா நடைபெறும். இவ்வம்மை சிலாரூபமாக உள்ளது. மற்றும் சிவகங்கையின் தென்பாகத்திலுள்ள சிற்சபையில் நடராசர் பக்கத்தில் விக்கிரக ரூபமான சிவகாம சுந்தரி விளங்குகிறார். இவருக்கு ஆனி, மார்கழி மாதங்களில்தான் நடராசருடன் சேர்ந்து விழா நடைபெறும். பச்சைநிறத் திருமேனியுடையவர். திருமங்கல நாண் இவரது திருக்கழுத்திலே மிளிரும். வலத் திருக்கரம் செங்கழுநீர் மலரேந்தியிருக்க, இடத்திருக்கரத்தைக் கீழே தொங்கவிட்டு ஒடுங்கிய நிலையுடையவராக உள்ளார்.

இத்தலம் புலியூர், புலிசை, தில்லை, சிதம்பரம் எனப் பாட்டுக்களில் குறிக்கப்படுகிறது. அருணகிரியாரும் தம் திருப்புகழில் புலி கண்டவூர், பெரும்புலியூர், புலிசை என்று ஆளுவதால்342-முதல் 346-வரையுள்ள செய்யுட்களில் பொற்பிலிசையென வருவது பொருளுக்கு ஒத்திருப்பினும் வழக்கை நோக்க "பொற்புலிசை" யென்றிருப்பதே நன்று எனத் தெரியவரும். இதுபற்றிக் குறிப்பிலும் காணலாம்.

காப்புப் பருவத்தில் முதற்பாட்டு எடுத்துக்கொண்ட பிரதிக்கேற்ப 'நடங்காட்டில்' என்பது திருவாலங்காடாயிருந்து ஆசிரியரின் வழிபடு கடவுளாவரோ என்ற ஐயத்தால் போடப்பட்டுள்ளது. பின்னரே அடையாறு நூல்நிலையப் பிரதியால் திருச்செந்தில் எனத் தெரிந்தது எனவே பிரதிபாடப்படி தில்லை நடராசரைக் கொள்க. இரண்டாவது பாட்டின் தலைப்பும் தவறியது குறிப்பில் காணலாம். மூன்றாவது பாட்டும் நடராசரையே குறிக்கலாம் எனக் குறிப்புரையில் கூறப்பட்டுள்ளது. இப்பாட்டின் பொருளை நோக்கின் 'விபூதியை'ப் பற்றிய வணக்கமாகவும் கொள்ளலாம். அறிஞர் குற்றம் களைந்து குறை பெய்து வாசிப்பார்களாக.

326-ஆம்பாட்டில் "உழும் மானை முனிந்து" என்பது உழும்+மா+ன்+ஐ என்று பிரித்து உழும் எருமைக் கடாக்களை என்று பொருள் கொள்ளவேண்டும். இங்கு 'ன்' சாரியை. இங்ஙனம் வருவதனை xix-பக்க முதற்கண் காணலாம். 327-ஆம் பாட்டில் "ஒரு நாலரசும் பசும்பொற்கால்" என்பதற்கு "ஒப்பற்ற நான்கு முதன்மையான வேதங்களும் பொன் மயமான நான்கு கம்பங்களாகவும்" எனப் பொருள் கொள்க. 338-ஆம் பாட்டு தேவிபாகவதக் கருத்துப்படி "சர்வம் சத்திமயம்" என்பதாய் அமைக்கப்பட்டுள்ளது. பிரமனிடத்தில் இராசச குணத்தையும், விஷ்ணுவினிடத்தில் சாத்வீக குணத்தையும், உருத்திரனிடத்தில் தாமசகுணத்தையும் தந்து படைக்க

காக்க, அழிக்க ஏவுகிறாள் என்று அதில் கூறப்பட்டுளது. 348-ஆம் பாட்டில் அம்மையின் முத்தம் மும்மலங்களையும் போக்கவல்லது என்று ஆசிரியர் கூறுகின்றார். இம்மலம் அறிவற்றதும் சடத்தன்மை வாய்ந்ததும் நெல்லிற்கு உமியும் முளையும் செம்பிற்குக் களிம்பும் போன்று ஆன்மாவை அநாதியே பற்றி நிற்பது என்பதை 644-ஆம் பக்க பிரதிபாட மூலம் உணரலாம்.

372-ஆம் பாட்டில் "குயில் வடிவு கொண்டதொரு கோதையைச் சார்ந்திடும்" என்பது வில்லியனூர் என இப்போது வழங்கும் வில்லைத்தல கோகிலாம்பிகையையும் குறிக்கலாம். 379-ஆம் பாட்டு தூண்கள், ஓடுகள், ஆணிகள் முதலியன புனிதத் தன்மை வாய்ந்ததாகக் கருதப்படுவதைச் சொல்லோவியமாக்குகிறது, உருத்திரபீடத்தின்கண் வேதங்கள் ஆறும் (சிட்சை, வியாகரணம் முதலியன) பொன் மயமான ஆறு தம்பங்களாகவும், சதாசிவபீடத்தின்கண் நான்கு வேதங்களும் (ருக், யசுர் முதலியன) நான்கு பொன்மயமான தம்பங்களாகவும் விளங்குகின்றன. இதனையே "ஆறுசாத்திரம் நாலுவேத மதிதூண்" என்றார். பிரமபீடத்தில் 28-ஆகமங்களும் (காமிகம் முதல் வாதுளம் ஈறாக) 28-தம்பங்களாக விளங்குகின்றன. விட்டுணு பீடத்தின் கண் 5-பூதங்களும் (பிருதிவி, அப்பு முதலியன) 5-தம்பங்களாக விளங்குகின்றன. இதனையே "ஆகமங்க.........தூணுத்திரம்" என்றார். சிற்சபையில் பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய பஞ்ச மூர்த்திகளும் 5-பீடங்களாயுள்ளனர் என்பதனை யிது காட்டுகின்றது. 64-கலைகளும் (அக்கரவிலக்கணம் முதல் அவத்தைப் பிரயோகம் ஈறாக) 64-கைம்மரங்களாக உள்ளன. நாடிகள் 72000-உம் ஆணிகளாக விளங்குகின்றன. சிற்சபையின் தென்குறட்டில் அமைந்துள்ள பலகணிகள் ஒவ்வொன்றிலும் 96 துவாரங்கள் உள. அவைகள் 96-தத்துவங்களைக் காட்டுகின்றன. உச்வாச நிச்வாசங்களாகிய உயிர்ப்புக்கள் 21600-மேலே கைம் மரங்கள்மீது சேர்க்கப்பெற்ற தங்க ஓடுகளாக விளங்குகின்றன.

373-ஆம் பாட்டில் சந்திரகுலத்தில் பிறந்த அரசன் ஒருவன் தன் குதிரையுடன் சிவகங்கையில் மூழ்கி பொன்னிறம் பெற்றான் என வருவது இரணியவர்மன் வரலாற்றினும் வேறுபட்டதாக எப்புராணங்களிலும் காணக்கூடாத செய்தியாக விளங்குகிறது. 399-ஆம் பாட்டில் பந்தாடும்போது பந்து அம்மையின் உறுப்புக்களின் நிறங்களைக் கவர்தல் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் "மருள்கான்ற நெஞ்சமுக்கை" என்ற பாடலையும் "...மையரி நெடுங்கணைக்கம் படுதலும் கருகிவந்து கைபுகிற் சிவந்துகாட்டும் கந்துகம் பலவுங் கண்டார்". (மிதி - காட்சிப்

பட. 16.) என்ற கம்பராமாயணச் செய்யுளையும் நினைவூட்டுகிறது. 407-ஆம் பாடலில் "அங்கோடு மிங்கோடும் வந்தோடும் உயிர்கள் போல்" என்ற அடியின் கருத்து, "பூசலினெழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப் பொங்க மாசுறு பிறவிபோல வருவது போவதாகிக்..." (மிதிலைக்கா. 10) என்ற கம்ப ராமாயணப் பாடலினும் உள்ளது. "கண்கள் கய லென்னக்" என்ற 417-ஆம் பாட்டும், திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழில் 'செங்கய லொடுங்கண்கள்" என்ற பாட்டும் பாகம்பிரியாவம்மை பிள்ளைத்தமிழில் "துள்ளும் பொருங்கய லிரண்டருகினும்" என்ற பாட்டும்,

"பங்கயக் குவளை யாம்பல் படர்கொடி வள்ளை நீலஞ்
செங்கிடை தரங்கங் கெண்டை சினைவரா லினைய தேம்பத்
தங்கள்வே றுவமை யில்லா வலியவந் தழுவிச் சானு
மங்கையர் விரும்பி யாடும் வாவிகள் பலவுங் கண்டார்."

(மிதிலைக்கா. 17.) என்ற கம்பராமாயணப் பாட்டினை யொத்தல் காண்க. 420-ஆம் பாட்டில் குயில் சிறுங் குறும்பிழைத்தல் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் 'கந்தங்கமழு நறுங்களபக்....' என்ற பாட்டினுலுணரலாம். சீவக சிந்தாமணி 79-ஆம் பாடல் நச்சர் உரையாலும் அறியலாம். சிறு பொதும்பரினின் ஞெடித்து விளையாடியும் என்பது பிரதிபாடப்படி "ஒளித்து விளையாடியும்" என்றிருப்பின் "....காணெனை யென்னுத் தன்னேரில்லா ளங்கொரு கொய்பூந் தழைமுழ்கி யின்னேயென்னைக் காணுதி...." (பூக்கொய். 31) என்ற கம். ராமா. பாட்டுக்கு ஒத்திருக்கும். "மைந்தர்தன் சொற்கேட்கில்....குதலைமொழி யாடியருளே." என்ற அடிகள் "குழலினிது....கேளாதவர்," "மக்கண்மெய்...செவிக்கு." என்ற குறள்களைப் பின்பற்றியுளது.

இப்பிள்ளைத்தமிழ் மற்ற பிள்ளைத்தமிழினும் மிக்கதாய், 120-பாடல்களும் 12-பருவங்களும் பெற்று விளங்குகிறது. அம்மானைப் பருவம் 9-பாட்டுகளை பெற்றுள்ளது. ஆண்டாள் பிள்ளைத்தமிழில் இறுதியில் காமநோன்புப் பருவம் பெற்று 11-பருவமாக விளங்குவது காணத்தக்கது. அம்மானைப் பருவத்தில் குதலைமொழி யாடுகவென 3-பாடல்களும், பாவையாடுக என்று 3-பாடல்களும், கழங்கு ஆடுவாயாக என்று 2-பாடல்களும் அம்மானையாடுக என 2-பாடல்களும் கூறப்பட்டுள்ளன. ஊசலுக்குப் பிறகே நீராடல் அமைந்திருப்பது புதிய அம்சம். பந்தாடற் பருவம் புதியதாய் இதில் விளங்குகிறது. சீவக சிந்தாமணியிலும் 125, 150, 151-பாட்டுக்கள் பந்தடித்தலைப்பற்றி விளக்குகின்றன. இது பெண்கள் விளையாட்டென அறியலாம். ஊசலுக்குப் பின்

னர் அம்மானையும், நீராடலும் புறனடைப் பருவமென அடையார் டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தின் ஏட்டுச் சுவடிகளில் உள்ளன. **தமிழன்பு:-** இவ்வாசிரியர் சைவசமயப்பயிற்சியும் சித்தாந்தமு மிக்கவரென ஊகிக்கலாம். 347-ஆம் பாடலில் "வடகலை நூல் துலங்கமணக்கும் **திராவிடத்தின் சுவையே** மணக்கும் பிராகிருத மருவி மணக்கு முலகளிக்கும் மகிமை தரு மந்திர மணக்கும் மலையு முருக்கு **மியலிசையும்"** என்று வடகலை தென்கலைகளைப் பாராட்டியதும், தெள்ளு தமிழ்த்தில்லை (305) தெளிதமிழ்ச்சுவை கூறுங் (312), எல்லையின் முத்தமிழ் மூவரும் (322), ஊனமில் செந்தமிழ் மாலை புனைந்தனை (325), தமிழ்சேர் புலியூர் (331), இனியமுத் தமிழமிழ்த்தி (337), முத்தமிழ் சொற்கழகத்தவர் (334), தமிழ்மணக்குங் குமுதமுத்தம் (354), தமிழ்க்கேயுதவும் சதகோடி (361), கழகமுத்தமிழ் பாடும் (393), என்று பாடல்களில் தமிழைப் பாராட்டியதும் கண்டு மகிழத்தக்கன. 410-ஆம் பாடலில் தாய்தந்தைய ராகவும் துன்பத்தை நீக்கினவராகவும் சிவகாமியம்மையைப் பாராட்டுகின்றார். மற்றும் எப்போதெனை வாழ்விப்பாய் (333) அடியேன் மிடியுங்கெட (364) கொடியேனும் வணங்கிட (365), பாவியேனு முனது பாதநம்பி மனமூசலாட(415) என்பன நோக்கத்தக்கன. அடையார், டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ள மிகவும் சிதலுற்ற ஓலைச்சுவடியில் பாதி ஒடிந்த ஏட்டில் " இப்பிள்ளைத்தமிழ்...திருச்செந்திற்...கவிசெய்தான் " எனக் காணப்படுவதால் **திருச் செந்தில்மா நகரில் உள்ள ஓர் புலவரால்** செய்யப்பட்டதென அறியலாம். மிகுந்த பாதி ஏடு தேடியும் கிடைக்கவில்லை.

இவ்வாசிரியர், இருக்கும் எல்லாப் பிரதிகளினும் (அடையார் நூல நிலையப்பிரதி உள்பட) எளியமக்கள் நகரத்திற் கெல்லாம் கொச்சையாகத் தகரம் வழங்குமாறுபோல ஆளுதலால் மாத்து (377) கத்தை (374, 377, 378) என அவ்வாறே போடப்பட்டுளது. மற்றும் ஐம்பத்தொருவர் எஙபது அன்பத்தொருவர் என்றும், குவலயம், இதயம், தவழ்ந்திடுவ என்பன குவலையம் இதையம், தவிழ்ந்திடுவ என்றும் காணப்படுகின்றன. இதில் முதலிரண்டும் போலி.

இப்பிள்ளைத்தமிழ் அச்சிட்ட பின்னர், இப்பிள்ளைத்தமிழின் மூன்று ஓலைச்சுவடிகள் அபூர்த்தியாய் அடையார், டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல்நிலையத்திலுள்ளதாகத் தெரிந்து அவைகளின் பிரதிபாடம் நன்மை பயக்குமெனக் குறித்து வந்து இறுதியில் சேர்த்துள்ளோம். அப்பிரதிகளால் ஆசிரியர் பெயர் அறைகுறையாகத் தெரிந்ததோடு 371-ஆம் பாட்டில் "முக்கணிலோர் கொற்றமதியாள்"

2-வது வரியிலும் "முக்கிற்று நீற்றுமதியாள்" 4-வது வரியிலும் காணப் படுவதும் காப்புப்பருவத்தில் திருமாலுக்கு அடுத்தபடி திருமகள் துதி யும் அதன் பின்னரே பிரமன் துதியும் வருவதும் அறியப்பட்டது. இதற்கான வகையில் அன்புடன் மனமுவந்துதவிய அடையாறு, டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய நிர்வாகிகட்கு என் நன்றியுரித்து.

இப்பிள்ளைத்தமிழ் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 324-ஆம் எண்ணுள்ள ஓலைச்சுவடியினின்று வெளியிடப்படுகிறது. சரிபார்த்தலுக்கு மூவருடக் காடலாக்கு 2860, 2619-எண்ணுள்ள ஓலைப்பிரதிகள் பயன்பட்டன.

---

## 5. புதுவை, திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ்

---

சமீபத்தில் தாயகத்தோடிணைந்த புதுச்சேரியை யறியாதார் ஒருவருமிலர். இந்நகரினருகில் பெண்ணையாறும் வராகியாறும் செல்கின்றன. வராகியாறு செஞ்சிமலையில் உற்பத்தியாகிறது.

பாரதியார் போன்றவர் வாழ்ந்து வந்த இந்நகரில் சைவ மதத்தினரான **முத்துக்குமரர்** என்பவர் இப்பிள்ளைத்தமிழைச் சொற்சுவை, பொருட்சுவைபட யாத்துள்ளனர். இப்பிள்ளைத்தமிழின் பெருமையை இதற்குச் சிறப்புப்பாயிரங் கொடுத்த 11-புலவர்களின் வாக்கினாலறியலாகும். விரிவாக ஆசிரியர் வரலாறு அறியமுடியவில்லை.

முதற்கண்ணுள்ள துதி மணக்குள விநாயகரைப் பற்றியது. இது துதியாக இருப்பினும் காப்புப்பருவத்தி லிணைத்து விட்டிருப்பதால் அங்ஙனமே அச்சிடப்பட்டுளது. ட்யூப்ளேவுக்குப் பின் வந்த கவர்னரொருவர் இவ்விநாயகரைக் கடலில் எறிய உத்தர விட்டாராம். அன்று இரவில் விநாயகர் தான் கடலில் மிதந்து வருவதாகவும் எடுத்துக் கோயிலில் வைக்குமாறும் கவர்னரின் கனவில் ஆக்ஞாபித்தார். கவர்னர் அங்ஙனமே செய்தாராம். அவர் வெள்ளைக்காரத் தெருவில் இன்றும் அவர்களால் போற்றப்பட உள்ளனர்.

**இடம், ஈசுவரர் பெயர்** :-இங்குள்ள இடம் வேதவனம் என்பதும் சிவபெருமான் பெயர் 'வேதபுரிநாதர்' என்பதும் "**வேதவன** மான தல நீடெழில்செய் கோயிலுறை **வேதபுரி நாதர்** பதம்......" (439) "**ஆரணவன** முறை திரிபுரசுந்தரி......" (440) என்றபாடல் களினின்று போதருகின்றன. **தலவிநாயகர்**:-தலவிநாயகர் வேதவிநாயகர் என்பது "மேவுற நிலைபெறு சினகர நின்றருள் வேத விநாயகனே" [440] என்பதினின்று வெளிப்படுகிறது.

சிற்றில் கட்டுதலிலேயே பந்தாடுமாறும் அம்மானை யாடுமாறும் கூறி இரண்டினையும் இவ்வொன்றிலடக்கினர். இத்தலத்திற்குத் தல புராணம் ஒன்றுளது என்பது 409, 504-ஆம் பாட்டுக்களா லறிய லாம். சிறுவீடு கட்டுவதில் பாவையாடுக என்று கூறியது சங்க காலத்து முண்டு என்பதனை "அலவனாட்டியும் உரவுத்திரையுழக்கியும் பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டு" [பட்-பாலை. 101-102] என்பதாலறிய லாம். 481-ஆம் பாட்டில் "பச்சைமணி ...... முத்தாஞ்சனம் பண்புட னெடுத்தலொக்கும்" என்பதில் அஞ்சனம் ஆலத்தியைக் குறித்தல் போன்று "பவமறுஞ் சீயசாத மந்திரத்தால் பளித நீராஞ்சனம் சுற்றி.........." [விநா. பு.] என்று வருவது காண்க. 520, 400-ஆம் பாட்டுக்களில் அம்மையின் அழகிற்குத் தோற்று அன்னம், குயில், மயில் முதலியன ஓடுவது "திண்சிலை புருவமாக..............போவன போன்ற மஞ்ஞை பண்சிலம் பளிகளார்ப்ப நாணிஞற் பறந்த போன்ற..............." [பூக்கொய். 4.] என்ற கம்பராமாயணப் பாடலை யொத்திருப்பது காண்க. 511-ஆம் பாட்டில் "ஓவாத பேரண்ட மானதே சிற்றிலா"என்ற பாட்டு "வையகமெல்லா முரலதாக மாமேரு வென்னு முலக்கை நாட்டி..." என்ற திருவாசகத்தை யொத்துளது.

**தமிழன்பு** :—இவ்வாசிரியர் தமிழ் மொழியினை மிகச் சிறப்பாகக் கொள்கின்றனர். நாவினியன்மேவு தமிழ்மாறன் (439), கலைஞர் தமிழ் கொண்டு......கந்தனை (441), செந்தமிழ்க் சூரியானை (443), செல்வத் தமிழ்ப் பாண்டிநாடாள (450), சுவையாரும் முத்தமிழ்ப் பாவலர் (471), தெளிதமிழ் ஒண்புதுவை (516) என்றும் கூறுவன வற்றை நோக்குக. இவற்றிற்கு மேலாக நம்மைத் தமிழ்ச் சிற்றி லுக்கே அழைத்துச் செல்கிறார். எழுத்துக்களைச் சேறாகச் செய்கிறார். மொழியாக்கத்தைச் செங்கல் லாக்குகிறார். ஆஹா! எவ்வளவு இனிதின் தமிழிலக்கணத்தையே சிற்றிலாகக் கட்டி விளையாடச் சொல்கின்றார் நம்புலவர்.

பாட்டுக்களினும் தலைப்புக்களினும் உயர்திணைமுன் வல்லினம் மிக்கிருப்பதால் "சிலவிகாரமாம் உயர்திணை" என்ற விதிப்படியிருக்க லாம் என நினைத்துத் தில்லைச் சிவகாமியம்மைப் பிள்ளைத்தமிழ், புதுவைத் திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ், பாகம் பிரியாவம்மைப் பிள்ளைத் தமிழ் என வல்லினம் மிக்குப் போட்டிருப்பது ஆசிரியர் கொள்கையை மாற்றக் கூடாது என்ற காரணத்தாலேதான்.

இப்பிள்ளைத்தமிழ் டிஸ்கிருப்டிவ் காடலாக்கு 326-ஆம் எண்ணுள்ள ஓலைச் சுவடியினின்று வெளியிடப்படுகிறது.

# 6. தூத்துக்குடி
## பாகம்பிரியாவம்மை பிள்ளைத்தமிழ்

---

"முத்துப் பிறப்பதொரு தென்கடலிலே" என்று பாரதியும், "பாண்டி நாடு முத்துடைத்து" என்று ஔவையாரும், "தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்" (பட்-பாலை. 189) என்று கடியலூர் உருத்திரங் கண்ணனாரும் பாராட்டக் காரணமாயுள்ளது தூத்துக் குடியே. ரோம் நாட்டின் இராணியான கிளாடியஸின் மனைவி பாண்டி நாட்டின் முத்தின்மீது மிக்க மோகங் கொண்டிருந்தாளாம். இத்தகை நகரில் கோயில் கொண்டுள்ளவரே பாகம்பிரியாவம்மை.

**ஈசுவரர் பெயர்:**—"சங்கரரா மீசுர ரிசையைப் பழிச்சுதும்." (539) முன்னதாய் நின்ற சிவ **சங்கரேசுரர்** தழைப" (638) என்பதால் ஈசுவரர் பெயர் சங்கரேசுவரர் என்று தெரிகிறது.

**தலவிநாயகர்:**—"கருணைசெய் **சுந்தர பாண்டியச் சுடரைத்** துதிப்பாம்......" (540), "சிந்துரச் சுந்தரப் பாண்டியக் களிறேடு..." (638) என்பதனால் சுந்தரப் பாண்டிப் பிள்ளையார் என்று தெரிகிறது.

**ஐயனார் பெயர்:**—"தையல் மருவு **பச்சைமுகிலையன்.......**" என்பதால் பச்சைப் பெருமாள் ஐயனார் என்பது போதருகிறது.

**தீர்த்தம்:**—"திரைசெயா **மகோததித்** தீர்த்தமும்" (638) என்பதால் மகோததியே (கடலே) தீர்த்தமென விளங்குகிறது.

முதல் பாட்டில் "தளவாம்பல்" என்பதைத் தளவு + ஆம்பல் எனப் பிரித்துத் தளவு என்பது முல்லை மலர்போன்ற பற்களையும் ஆம்பல் என்பது அல்லி மலர்போன்ற வாயினையும் குறிப்பதாகக் கொள்ளலாம். "காம்பும் குழையும்" என்பது பிரதி செய்தவர் "கோம்பும் குழையும்" என எழுதியிருந்ததனை மோனை,பொருள் ஆகியவற்றிற் கேற்ப மாற்றப்பட்டுள்ளது. இதனாலேயே போலும் என உரையில் கூறப்பட்டது. இவ்வாசிரியர் உபய, உப என்பவைகளை உபைய, உபை என்றே ஆண்டுள்ளனர். 2-வது பாட்டில் "முண்டக வேதாமறை" என்றிருக்கலாம்.

தூத்துக்குடி நகராண்மையில் கடல் திரை செயாதென்பது அகநானூற்றில் "கொடுந்திமிற் பரதவர் வேட்டம்" என்று தொடங்கும் பாட்டில், "வெண்வேற் கவுரியர் தொன்முதுகோடி முழங்கிரும்

பௌவம் இரங்கும் முன்றுறை வெல்போர் இராமன் அருமறைக் கவித்த பல்வீழலாம்போல ஒலியவிந்தன்று இவ்வழுங்கலூரே." (70.) என வருதல் காரணமாயுள்ளது. இதில் பாண்டியருக்குரியதாய்த் திருவணைக் கரையினருகில் முழங்கு மியல்பினவான பெரிய கடலின் ஒலிக்கின்ற துறைமுற்றம் என்பது தூத்துக்குடியைக் குறிப்பித்தல் காண்க. 549, 587-ஆம் பாட்டுக்களில் இச்செய்தியைக் காணலாம்.

"வாயிற்குள்ளகப்பட்ட தண்ணீர் விடம்......மந்திரம் படிக்க" (608) என்ற அடியின் கருத்து "வல்லரவுங் கேட்கு மந்திரங் களிக் கின்றோயை யடுக்கு..." (கிங். பட. 59.) என்ற கம்பராமாயணப் பாடலை ஒத்துளது காண்க. நீராடற் பருவத்தில் தாமிரபர்ணியையும் அம் மையையும் சமப்படுத்திக் கூறி நீர் விளையாடுக என்பது புதிய அம்சம். 536-ஆம் பாட்டில் "சித்தம் பலத்திலெதிர் வாதாடி" என்பதும் "போ ராடும் விழியாட வரடை வாதாடி...." 637-என்பதும் ஒத்துள்ளன. இப் பிள்ளைத் தமிழில் "ஏன் கருடா சுகமா" "சிவனே யெனக்கிடந்த" என்ற வழக்குகளைத் தக்கவா றமைத்துள்ளார்.

"தத்துங் தாங்க முழங்காவுன்" என்ற பாட்டில் முத்தெடுக்கும் பல கருவிகளும், தரம்பிரிக்கும் பல கருவிகளும் சரிவர அறியச் சாத்தியப் படாததால் குறிப்புரையில் விளக்க முடியவில்லை. 628-ஆம் பாட்டில் "நடுவுயர் முதுகொரு கமடமென திகழ் அமடம்" என வரு வது யாதெனக் காண வியலவில்லை. இது கர்ப்பங்கொண்ட சங்குகளா யிருக்கலா மென்பது தஞ்சை வாணன் கோவை 104-ஆம் பாட் டாலறியலாம். பிரதி செய்தவர் சரிவரக் கவனியாததால் நேர்ந்த பிழை இது.

தூத்துக்குடி பாண்டிய நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தி லுள்ள ஓர் துறைமுக நகரம். இவ்விடத்தில் அரசியலாரால் முத்துக் கள் இப்போதும் எடுக்கப்படுகின்றன. இதன் பழைய பெயர் திரு மந்திரநகர் என்பதாம். இந்நகர் வளமிக்க தென்பதை 567, 568, 584-ஆம் பாட்டுக்களில் கூறி "எழுபனையோடலை குப்வரு மில்லாத தன்றி மற்றில்லாத தொன்றில்லை யெல்லாச் சிறப்பு முண்டு." என்று முடிக்கிறார்.

இந்நூலின் ஆசிரியர் யாவர் என விளங்காவிடினும் சிற்சில குறிப் புக்கள் கிடைக்கின்றன. 573-ஆம் பாடலினின்று அம்மைக்கு ஆசிரி யர் தொண்டரென்றும், பேபரக்குடியென்பது அவர் குடிப்பெயர் என் றும், தலைமுறை தலைமுறையாக அம்மை தன்திருமுன் வித்துவானு

யிருக்க வேண்டுமென்று கூறியதாயும் புலவரைத் தன்கோயிலிலேயே அம்மை குடியேற்றுவித்தார் எனவும், 594-ஆம் பாடலினின்று ஆசிரியர்க்கு மதுரமான வாக்கைப் பாட அம்மை அருள்புரிந்தார் என்றும், அவரது பாமாலையை அம்மை சூடின நன்மையால் புத்திர, பௌத்திர பாக்கியங்கள் தரவேண்டுமென்று ஆசிரியர் கேட்டதாகவும் தெரிகிறது. இப்பிள்ளைத்தமிழ் அக்காலத்தில் மிகவும் உயர்ந்தநிலை பெற்று விளங்கியது என்பது "...உபையர்த்தமும் தோன்றநின்ற இக்கவி பொருட்கிடம் பெற்றதால்..." (633) என்பதாலறியலாம். ஆசிரியர் தன்னை அம்மை அருளுடன் ஆட்கொண்டனர் என்பதனை, "கண்ணார் துணையென்னை யருளன்னை..." (631) "எளுன்கறம் வளர்த்தெனை வளர்த்த.." (632) "சொந்தமா யெனையாள் கிருபாலியே..." (577) "எனை ஆண்டருளுஞ் சக்கரியே..." (583) என்ற அடிகளால் உணரலாம். முருகன் மீது காப்பில் நீண்ட பாட்டியற்றியதோடு செங்கீரையிலொரு நீண்ட பாட்டும் 592, 615-பாட்டுக்களில் அவரைப்பற்றியும் கூறியிருப்பதால் முருகன்மீதும் மிக்க ஈடுபாடுடையர் என அறியலாம்.

காப்புப் பருவத்தில், "திருமாலரனே...கடவுளரே.", "அவருள் காப்பின்...ளுகும்." "அவன்ருன்...னெனப" என்ற பன்னிரு பாட்டியற் சூத்திரங்கள் உள்ளன.

இப்பிள்ளைத்தமிழ் எட்டையாபுரம் மகாராஜா சமஸ்தானத்திற்குரிய ஓலைச் சுவடியினின்று 1924-25-இல் பிரதி செய்து வைத்த மூவருடக் காடலாக்கு 590 (b) எண்ணுள்ள காகிதப் பிரதியினின்று வெளியிடப்படுகிறது. அக்காலத்தில் சரிபார்த்தலில்லாததால் சில அடிகள் விடுபட்டும் சில பொருள்புரிந்துகொள்ளாமல் எழுதியு முள்ளதால் தவறுகள் இவ்வச்சுப் பிரதியிலும் நேர்ந்திருக்கலாம். படிப்பவர்கள் திருத்திக்கொள்ளக் கேட்டுக் கொள்ளப் படுகின்றனர்.

---

## 7. சிவானந்தன் பிள்ளைத்தமிழ்

---

இது ஓர் சீடர் தன்குருவின்மீதுபாடிய ஞான மார்க்கமான பிள்ளைத் தமிழாகும். சிவானந்தன் பிள்ளைத்தமிழ்க் குறிப்புரையொன்று அடையார் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்திலுள்ளதாகக் குறிப்பிடப் பட்டுளது "திருவாரூர் திருப்பரவையம்மை பேரில் துதித்த சிவானந்தமான பிள்ளைத் தமிழின் குறிப்புரையென விளங்குகிறது.

காப்புப்பருவ முதற்கவி திருவெண்ணெய் நல்லூரில் கோயில் கொண்ட பொல்லா விநாயகரைத் துதித்த காரணத்தால் இந்நூலாசிரியர் திருவெண்ணெய்நல்லூரில் பிறந்தவரோ என ஐயமேற்படுகிறது. சீகாழிச் சட்டைநாதப் பெருமானைத்துதித்திருப்பதும் நோக்கத்தக்கது. பாடப்பட்டோர்(சிவானந்தன்)"அசுத்த மில்லாத விடமாம் ஆரூர்நிலத் தினில்" என்பதால் திருவாரூரில் உள்ளவரென்பது தெரிகிறது. மற்றும் இவர் தத்தாத்திரையர் மரபில் வந்ததாக 642-ஆம் பாட்டு கூறுகிறது.

தாலப்பருவம் 1-4-பாட்டுக்களில் ஆறுதாரங்களும் மதிமண்டலம் பிரமரந்திரம் ஆகியன விளங்கக் கூறி ஆண்டுள்ள யானைமுகன், வல்லபை, பிரமன், வாணி முதலிய அவ்வவ்வாதாரத்துக் குடையவர் பாட்டுப் பாட "நீ தொட்டிலில் கண்வளர்வாயாக" என்கிறார். இந்நூலாசிரியர் முதற்கண் பெண்களின் மையலில் மயங்கிப் பின்னரே ஆட்கொள்ளப்பட்டதாக 652, 659 பாட்டுக்களில் கூறுகின்றனர். சேக்கிழார் பிள்ளைத்தமிழ் போன்று பத்துவித முத்தி வகைகளைக் கூறி அவைகள், "பழிசேர் முத்தியாதலால் அருளொடு புணர்ந்த முத்தியைக் கொடுத்தருள்" என்னும் முத்தப்பருவச் செய்யுள் கழிபேரின்பம் பயப்பது. "வெறு நுண்மணலிற் செய்தொழிலாம் மிகவுஞ் சிறியோம் பலர்கூடி விளையாட்டிடத்தைக் கலைப்பதெங்கள் விதியோவுந்தன் விளையாட்டோ" என்னும் சிறுமியர் சொற்கள் கல்மனத்தாரையும் இளக்கும் தன்மையது. இவ்வாசிரியர் மனம், சில என்பவைகளை மனது, சிலது என்கின்றனர். இதன்கண் சைவசித்தாந்தக் கருத்துக்கள் மிக்கு இதற்கு முன்பு இத்தகைய பிள்ளைத்தமிழ் இல்லையெனச் செய்துவிடுகிறது.

இப்பிள்ளைத்தமிழில் உள்ள சித்தாந்த கருத்துள்ள செய்யுட்கட்கு பொருள் கூறின உயர் திருவாளர். ச. சச்சிதானந்தம்பிள்ளை பி.ஏ, எல்.டி., ஓய்வுபெற்ற ஜில்லா கல்வி அதிகாரி அவர்கட்கும், திருவாளர். டாக்டர். மொ, அ. துரை அரங்சாமி M.A.,M.O.L. Ph. D. சீனியர் லெக்சரர்; சென்னைப் பல்கலைக் கழகம் அவர்கட்கும், மற்ற சில செய்யுட்குப் பொருள் கூறின திருவாளர். பண்டித வித்துவான். பு. ரா. புருடோத்தம நாயுடு; ஜூனியர் லெக்சரர்; சென்னைப் பல்கலைக் கழகம் அவர்கட்கும்,சிவகாமியம்மை பிள்ளைத்தமிழில் முதல் 4-பாட்டிற்கு உரை கூறிய திருவாளர். வித்வான். முதுபெரும் புலவர், சித்தாந்த ரத்நாகரம். முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், தலைவர் (Principal), தருபுர ஆதீனக் கீழ்த்திசைக் கல்லூரி அவர்கட்கும் என் நன்றி உரித்தாகும்.

இப்பிள்ளைத்தமிழ் மூவருடக் காடலாக்கு 2676-ஆம் எண் ஓலைச் சுவடியினின்று வெளியிடப்படுகிறது. இது 1951-52-இல் தென்னாற்காடு மாவட்டம் குமாரகுப்பம் கிராமத்தைச் சேர்ந்த திரு. ஷண்முகம் அவர்களால் நன்கொடை யளிக்கப்பட்டதாகும்.

இப்பிள்ளைத்தமிழ் நூல்களில் 4-வது பிள்ளைத்தமிழ் தவிர மற்ற வைகள் ஒவ்வொரு பிரதியினின்று வெளியிடப்படுவதாலும் அவ்வேடு களில் பெரும்பாலும் பிழைகள் மிக்கனவாதலாலும் மூலத்தில் பிழை யாயுள்ளவைகள் குறிப்புரையில் திருத்தப்பட்டுப் பொருள் கூறப்பட் டுள்ளன. அவைகளின்படி மூலத்தைத் திருத்தம் செய்து படிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். (உ-ம்) இலைகொணறும் பூவதில் (458), சேலெ னக் கறுவிக்கண் (486), தோய (285) போன்றன இலைகொ ணறும் பூந்தில; செலெனக் கறுவிக்கண, தேய என முறையே குறிப்புரையில் காட்டப்பட்டுள்ளன காண்க.

இப்பதிப்பில் காணப்படும் தவறுகள் மறதி முதலியவற்றால் நேர்ந் தன என்றெண்ணிப் பொறுத்துக்கொண்டு இதில் விளங்காத இடங்களை அறிவிக்குமாறு அறிஞர்களை வேண்டுகிறேன்.

இப்பிள்ளைத்தமிழ்க் கொத்தினைச் சிறப்பான முறையில் அச் சிடுவதற்கு மூலப்பிரதியினின்று பெயர்த்தெழுதியும் குறிப்புரையெழு தியும் தந்த வித்துவான். திரு. இ. பா. வேணுகோபால் அவர்கட்கும், மற்றும் வித்துவான். திரு வி. ஸ்ரீ. கிருஷ்ணன், புலவர் திரு. மு. பசு பதி ஆகியோருக்கும் என் நன்றியுரித்து.

இந்நூலை நன்கு அச்சியற்றித்தந்த இரத்தினம் அச்சகத்தின ருக்கும் என் நன்றி யுரித்து.

சென்னை,
12-2-56.

டி. சந்திரசேகரன்.

# அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ்

—( :o: )—

## காப்புப்பருவம்

### திருமால்

1. மணிபூத்த பொற்குவட் டிமையா சலத்திடை
வளர்ந்துவெண் ணிலவொழுகுமால்
வடகயிலை வெற்பினுறை கடகளிற் றொடுபுணர்
மடப்பிடி பயந்தமக்கோ
வணிபூத்து வருமரும் பாத்தைபுரி தன்னினுறை
யைங்கரனை யுலகுக்கெலா
மாதிகண பதியென்னும் வேதகண பதியையென
தையனை மிகப்புரக்க
கணிபூத்த தண்டுழாய் மார்பகத் தொருமணி
கறங்குதெண் டிரைமுகட்டிற்
கதிரா யிரங்கோடி யுதயஞ் செய்தாலெனக்
காட்சிமீ மிசைகிளைப்பப்
பணிபூத் தெழுந்திடங் கொண்டுமான் மதமொடு
படீரம் புனைந்ததெய்வப்
பங்கயச் செல்வியிரு கொங்கைவரை யிற்குலவு
பச்சைப் பசுங்கொண்டலே. (1)

### சிவபெருமான்

2. ஆடக மாமலை மூரிவிற் சேர்த்தவ
ராரண கோடியை நேர்பெறக் கோத்தவ
ராலடி மாதவர் காதலைத் தீர்த்தவ
ராரமு தூற லருமதிக் கீற்றவர்
நாடிய பாணியை வேணியிற் காத்தவர்
நாவல னேவிய வேலையைப் பார்த்தவர்
நாயகி யார்முலை மார்பினிற் பூத்தவர்
ஞான சபாபதி யார்தமைப் போற்றுதும்
பாடிய வேத வியாதன் முற்சாத்திய
பாரத காதையை மாமலைக் கோட்டொரு
பாரிச மேல்வகை யேபெறத் தீட்டிய
பாலனை நாலுகை யாளனைத் தாக்கனை

வீடருள் சீலனை யோர்முனைக் கோட்டனை
வீரனை வாருதி போல்மத்த தீர்த்தனை
மேதகு மூடிக வாகனக் கூத்தனை
வேத விநாயக தேவனைக் காக்கவே. (2)

## உமை

3. தோயா தெவையுந் தோய்ந்தபரஞ்
சுடர்வா னவன்பூ ணிளமதியைச்
சூடா மலர்க்கே தகையெந்தை
தொடுமோ வென்னச் சடைக்காட்டுப்
போயா தரித்தாங் கறிந்துவரும்
புழைக்கை யானை யரும்பாத்தை
புரிவாழ் வேத விநாயகனைப்
புத்தேள் மணியை நனிகாக்கத்
தாயா யகிலப் பரப்பனைத்துஞ்
சலியா தளித்து மெண்ணென்கு
தருமந் தழைக்க வுயிர்தழைக்க
தழைத்துக் கடவு ளைந்தொழிற்கு
மோயா முதலாய்த் தனுவாதி
யுதிக்க வொடுக்க வலிபடைத்து
மொன்று முதலோ டொன்றாகி
யுறையும் பச்சைப் பசுங்கொடியே. (3)

## திருமகள்

4. தருமக ளைத்துணை யொருமக ளாக்கித்
தவளசரோ ருகம்வாழ்
தருமக ளைச்சித் தசன்மனை யகம்வாழ்
தருமகளொடு சேர்த்துத்
திருமகிழ் தருமரு மகளி ரெனத்துணை
செய்துலகத் தினுளோர்
சிறுமை களைத்தவிர் பெருமை களைத்தரு
திருமகளைத் தொழுவா
மொருமக ளைப்புனை துடையி லிருத்தி
யசத்து முகத்துமகட்
குறுதுணை யைப்பொரு தருதுணை மகிழ
உவந்தொரு குறமகளை

பொருமக பதிமக ளுடனணி வைத்த
புராணனை யுலகிலருட்
போதனை வேத கணேசனை யன்பு
புரிந்து புரந்திடவே. (4)

### சரசுவதி

5. மாமேவு மகமேரு முகட்டினெடும் பசும்பொன்
மழைகிடந்தா லென்னமணி வதனபடாம் புனைந்து
பூமேவு மெய்ஞ்ஞான மதம்பொழியும் வேத
போதகத்தை யரும்பாத்தை புரிமுதலைப் புரக்க
காமேவு மியலிசைநா டகமெனுமுத் தமிழின்
கடலைநிலை கண்டெவற்குங் கருத்தின்மதி பொருத்தி
தேமேவு முதுவானத் தொளியி னொளிபரந்த
செங்கமலத் தவன்புணரும் வெண்கமலக் கொடியே (5)

### பிரமன்

6. வளமேவு திரைகடலி னுலந் தளிர்க்குளே
மழைபோலு மினிதுதுயில் மாலுந்தி மட்டிலே
தளமேவு நளினமலர் வாசம் பொறுத்துவாழ்
தருமாதி சதுமுகனை மேலன் பிருத்துவாம்
அளியூறு கணபதியை ஞானம் படைத்துளோ
ரகலாத கணபதியை மானம் பெருக்குநீள்
ஒளியூறு கணபதியை வேதந் துதிக்கவா
மொருவேத கணபதியை நாளும் புரக்கவே. (6)

### இந்திரன்

7. மலர்நெடும் பாற்கடலி னுறைதருந் தூக்கமலி
மாநிறமா முகிலி னுகம் படைத்துநீள்
வலியொடுங் காக்களிறு முனையொடுங் காப்படையு
மாமழை வாகனமும் வாழ்வுஞ் செழிக்கவே
அலர்மணந் தேக்கியபொன் மலர்நறுந் தோப்பிலுறை
யாயிர யோசனை விசாலம் பொறுத்துவா
ழமரர்தம் பார்த்திபனை யகிலமுங் காப்பவனை
யாதர வானமன மேகொண் டிருத்துவாம்
பலர்தருந் தோத்திரனை மலைபொருங் காத்திரனை
நாரணி வாரணி பொன்னுகம் படைத்துநீள்
பரிமணம் பூத்திலகு துணைநெடுங் கோட்டுமுலை
பீரிடு பாலமுத பானந் திளைக்குமோர்

விலகரும் தாட்டிகளை யளியொடுங் காப்பவரை
மூடிக வாகனனை யாருந் துதிக்கவாழ்
விரிதடம் பூத்துநிறை தருமரும் பாத்தைபுரி
வேதவி நாயகனை நாளும் புரக்கவே. (7)

## சத்தமாதர்கள்

8. கோகன வாசமலர் மனையிற் செழித்தவள்
கோலமக மேருகிரி வளையப் பிடித்தவள்
கோரமுள சூரன்முடி சிதறத் துணித்தவள்
கோதிலொளி தாவுமுரு மணியைத் தரித்தவள்
ஆகவலி யாலுமுது புவியைப் பெயர்த்தவ
ளாடல்புரி மாமலைக ளமரப் பணித்தவள்
ஆகாய மீதில்விதி கலையைப் பறித்தவ
ளானவெழு மாதர்திரு வடியைப் பழிச்சுதும்
வாகுபெறு சோதிமணி யரவப் புயத்தனை
மாசகல வீடுதவு கருணைக் கருத்தனை
மார்பில்மணி நூபுர மதாணிபொற் பதத்தனை
வாசமல ராமிதழி புனைமத் தகத்தனை
ஏகமயில் வாகனன்முன் வருவிக்கிர மத்தனை
யேழையடி யேன்மொழியி லருள்வைத்த சித்தனை
யீசனொரு பாகமரு மைபெற்ற புத்திரனை
யேதமகல் வேதகண பதியைப் புரக்கவே. (8)

## துர்க்கை

9. கணையைந் தினலாதி சிவனையொரு படியாதி
கரிதாக வெய்தமாரன்
கையின்மலர் பாதமலர் மீதுமணு காதுவளர்
கன்னியைத் தன்னிகரிலாத்
துணைவெங் கருங்கோட்டு மயிடங் கவிழ்த்துச்
சுரரதிபர் கரங்குவிப்ப
துங்கவலி மலிவீர சிங்கமிசை வருமாதி
சுந்தரியை யஞ்சலிப்பாம்
அணைகொண்ட நதியும்வான் மதியும்வா ளரவுமணி
யத்தரைப் போலும்வதனத்
தணியுமதி நதியும்வெண் கோட்டிளம் பிறையுநல்
லரவமுந் திகழுமணியைத்
திணைசெந்த மிழ்க்கொளு மரும்பாத்தை புரியிலுறை
தெய்வங்கள் மணவாளனைச்

சீதகண பதியையணி வேதகண பதியையனு
தினமும் புரக்கவென்றே. (9)

முப்பத்துமுக்கோடி தேவர்

10. வேதைபெரு கியவறுமை வாதமொடு கொலைவலிகள்
மேல்வகைப் பிணிகளிவை திக்கெட்டி லோடவும்
வேளினிடர் கொடியதொரு நாளினிட ரடறவரு
கோளினிடர் முதலிடர்கள் பக்கிட்டு மாறவும்
யாதொருவர் நினையுமொரு காரியமு நிறைவுற
விராசசபை யினில்மணி விளக்கொத்து வாழவு
மேதமுறு மிருவினையு மோதிமுது பலவுயிர்க
ளியாவுமுறு பரகதி நிலத்துக் குளேறவும்
வாதமிரு பரசமைய பேதமுறு துறைபலவு
மாறியொரு சிவசமைய வைப்புக் குளாகவும்
வாழுமொரு தடவிகட வீரகெச முகனைநெடு
மாயன்மரு மகனைவெகு வெற்றிப் பிரதாபனை
யாதிகண பதியைமனு நீதகண பதியையுயர்
வேதகண பதியானை வனப்புக்கோர் காவலனை
யாறிருவர் பதினொருவர் நாலிருவ ரிருவரென
யாகவகை பெறுமமரர் முப்பத்து மூவரே. (10)

அவையடக்கம்

11. மண்டலம் புரையிருட் படலம் கிழித்தெழும்
வயங்கொளிப் பரிதிகிரணம்
வளர்கதிர் பரப்புமுழு மணிபல பொதிந்தநெடு
வாருதி நீராடுவா
னண்டரிய வன்புலத் தேழுசிறு கற்கொண்ட
லங்குமொலி வெண்டிரையின்வா
யங்கைதனி லேகொண்டு மன்பதை யளிக்குமாங்
கதனைக் கடுக்குமன்றோ
பண்டைமறை யொருநாலு மாறுநா லும்பெருகு
பனுவலு லேழுமெண்ணெண்
பலகலைக் கியானமுந் தலையிலே யோதிப்
படித்தடி வழுத்தமேவும்
தெண்டிரைக் கடலுலகின் மேலான வடசொலுந்
தென்சொலுங் கற்றமேலோர்
செஞ்சொலுண் டிடுவேத குஞ்சரக் கன்றினிரு
செஞ்செவிக் கென்கவிதையே. (11)

## செங்கீரைப்பருவம்

12\. சுகவாரி சக்கரத் துமையம்மை குங்குமத்
தோயநீ ராட்டியம்பொற்
றுகில்கொண்டு நீவிவண் காப்புமிட் டாரந்
துலக்கிவெண் ணீறுசாத்திப்
பகல்போலு முழுமணிச் சுட்டி யொடுபட்டம்
பரித்துநா ணரைவரித்துப்
பதநூ புரம்பூட்டி யிதமுறு கும்பப்
படாமுலையி னமுதமூட்டித்
தகைமேய தொட்டிலின் வளர்த்திடப் பூண்மணித்
தரளத்து நிலவைவீசித்
தாய்விழிச் சேயரிக் காவியை மலர்த்தித்
தயங்குமெழில் வளரவளருஞ்
செகராசர் தொழுமரும் பாத்தைபுரி வாழ்மதலை
செங்கீரை யாடியருளே
செயமே யளிக்கும்வே தவிஞ யகக்கடவுள்
செங்கீரை யாடியருளே. (1)

13\. பூவையயி ராணியொடு கேள்வன்விளை யாடவன்
புவிவளமை யாடவீணைப்
புண்ணியன் கயிலைவரை நண்ணியுரை யாடவும்
பொதியன்முன் மன்றுடநீள்
காவிரி பசும்பொற் கடத்திலுற வாடவது
கைக்கொண்டு நடமாடுநாள்
காகங் கவிழ்ந்தாடு நதிகொண்டு காழிவாழ்
கடவுளர்கள் பூசையாட
மூவகைத் தமிழாட வண்காக்கை யாடல்போய்
முன்காக்கை யாடல்காட்டி
முறுக்காடு குட்டவன் முடிகாட்டி நகையாட்டி
முன்புகூத் தாடுமுனிவன்
சேவைகொண் டாடிய வரும்பாத்தை புரியண்ணல்
செங்கீரை யாடியருளே
செயமே யளிக்கும்வே தவிஞ யகக்கடவுள்
செங்கீரை யாடியருளே. (2)

14. குன்றாடு திசையானை மதமாடு நனைகவுட்
குழிகண்மே டாடவண்ட
கோளம் புதைந்துசெந் நிறமாட நதிகளொடு
குளிராழி யன்றாடிடக்
கன்றாடு கையன்னை யிளையாளை யுன்னிக்
களிப்பாட வுடனுதித்தோன்
கவலைசிறி தாடவிண் ணரமகளி ராடுபூங்
கற்பகா டவியின்மகவா
னின்றாடல் பெற்றேனெனச்செருக் காடவா
யிரமுடிச் சேடனுட
விருநிலந் துகளாட வடிபெயர்த் தொருவா
லெடுத்தவுண ரேக்கமாடச்
சென்றாடு மூடிகத் தேறிவிளை யாடுவோன்
செங்கீரை யாடியருளே
செயமே யளிக்கும்வே தவினு யகக்கடவுள்
செங்கீரை யாடியருளே. (3)

15. நாதத் தலத்திலெழு பறையினொடு பைசந்தி
நல்லமத் திமைவைகரி
நாலெழுத் துக்கும்வெகு நூலெழுத் துக்குமுது
நான்மறை யெழுத்தினுக்குங்
கோதற்ற வடமொழியோ டொன்பதிற் றிருவகைக்
குறியெழுத் துக்குமப்பாற்
குறைவிலோங் காரமா நிறையெழுத் துக்குமுன்
கொளுமெழுத் தாளிமேலாம்
போதத்தின் மூலவா தாரத் தலத்திலே
புந்திக்கு மெட்டாததோர்
புண்ணிய வெளிக்குளே நண்ணரிய வொருபரம்
பொருளான தெய்வவொளியே
தீதற்ற விசைகொளு மரும்பாத்தை புரிமுதல்வ
செங்கீரை யாடியருளே
செயமே யளிக்கும்வே தவினு யகக்கடவுள்
செங்கீரை யாடியருளே. (4)

16. சைவத் திறத்தினிற் சமையதே சிகரெனத்
தாரணி வழுத்துஞான
சம்பந்தர் சுந்தரரோ டப்பரிப் பெருமூவர்
தலமதை மிதிப்பவஞ்சி

கௌவைக் கடும்புனற் காவேரி சூழாதி
கடவூரி லெய்திடாமற்
கால்பெயர்த் திடுபோது நீலமணி கொண்டமைக்
கண்டனருள் கொண்டுவலிசால்
மைவைத்த வரையென்ன வோரானை யெனவந்து
வழியேயொதுக் கியவர்தாம்
வரவரக் கோயிலுட் புகுதல்கண் டொருகள்ள
வாரண மெனப்புகழ்ந்த
தெய்வத் தமிழ்க்கொளு மரும்பாத்தை புரிமுதல்வ
செங்கீரை யாடியருளே
செயமே யளிக்கும்வே தவிநு யகக்கடவுள்
செங்கீரை யாடியருளே. (5)

வேறு

17. துங்க முகத்தணி பட்டமும் வட்டச்
சுட்டியு மெழிலாடச்
சோதி நகைச்சிறு துவரொளி யாடத்
தோளணி வளையாட
தங்க மணிச்சிறு கிண்கிணி யாடத்
தனிமணி வடமாடத்
தண்டை சிலம்பு கலந்தொலி யாடத்
தக்ககை வளையாட
செங்கன கக்குழை யுங்குழை யாடிய
செவியு மசைந்தாடச்
சிவபர னிருவிழி பாவிட விரவிய
செங்கதிர் வெண்கதிரா
யங்கன கத்திரு மேனியு மாடிட
வாடுக செங்கீரை
யாதி மனோகரன் வேத விநாயக
னாடுக செங்கீரை. (6)

18. இந்திரன் வந்து வணங்கு கிறானிமை
யோர்கள் வணங்குகிறார்
இட்டத் தயனரி குட்டிக் கொண்டல
ரிட்டுப் பரவுகிறார்
கந்திரு வப்புல வோர்மலர் தூவி
காதலி னெடுதோப்புக்
கண்டமு மிட்டிசை யாடு கிறார்வர
கன்னிய ராடுகிறார்

பந்தியின் மேல்கீ ழுலகினர் யாரும்
பலபல வூழியமே
பண்ணு கிருரென நண்ணு துவாரப்
பாலக ரோலமெடுத்
தந்தர முறைசெய் கடைத்தலை யுள்ளவ
ஞடுக செங்கீரை
யாதி மனோகரன் வேத விநாயக
ஞடுக செங்கீரை. (7)

19. மாவடு நேர்விழி மாமகள் மேவிய
சந்திரா இந்திராவிவ்
வார்கடல் சூழுல கோருயி ராகிய
பண்பா நண்பாமுன்
மூவெழு பேரினு மேதகு தியாக
வசந்தா கந்தாசொல்
மூதறி வாளர் சிகாமணி யேயென
நன்ருய் நின்ருேதி
யீவறி யாவறி வீனரை நாடி
யிரந்தே நொந்தேனை
யீரடி மீது தியானம் விடாதிரு
வென்ருய் குன்ருத
தேவ குணகர மூடிக வாகன
செங்கோ செங்கீரை
சீத நிலாவணி வேத விநாயக
செங்கோ செங்கீரை. (8)

20. ஆர்கடல் மேலொரு நாகணை மீதி
லுறங்கா நின்ருேனு
மாடளி பாடிய வேடவிழ் தாமரை
கொண்டாள் கின்ருேனு
மேர்கொள்விண் ணோர்கள் சபாபதி யாகி
யிருந்தாளுங் கோனு
மேறிய வாழ்வினு மேதகு வாழ்வரு
ளெந்தாய் சந்தாரும்
வார்கெழு மாமுலை மாதுமை யாள்புணர்
கின்ருேன் முன்ருேயு
மார்பினி லேறி யுலாவரு சேவடி
மைந்தா நந்தாத

சீர்கெழு மாமயில் வீர சகோதர
செங்கோ செங்கீரை
சீத நிலாவணி வேத விநயக
செங்கோ செங்கீரை. (9)

21. மாறடு தோளிணை மாமலை மாதிர
மெண்பா லுந்தாவ
வாசக கோர மகாதொனி மேக
பதம்போய் விண்டோட
வேறிய தோர்சின மூறிய நீள்விழி
மின்போல் முன்பாய
வேதிலர் வேதைகள் சாடிட நாடி
யெழுங்கோ பங்கால
வூறொலி சூழ்வட வானல் வேணி
யலங்கா ரங்காண
வோடு மகாசல நாம கணேசன்
முரண்டோள் கொண்டேறுந்
தேறிய வீர வகோர மதாசல
செங்கோ செங்கீரை
சீத நிலாவணி வேத விநயக
செங்கோ செங்கீரை. (10)

---

## தாலப்பருவம்

---

22. பளிக்கு மணிமேனி வலத்தலத்திற்
பவளக் கொடியன் னவர்குழலிற்
பாடிச் சிறந்த வரியளியோ
டூடிப் பறந்த பெடையளிதா
னெளிக்கு மலர்ப்பூந் தருவனத்தி
லுடனு டியமா மடநல்லா
ளோங்கி யடித்த பசுந்துகள்போ
யுறைப்ப நறைத்தே னுமிழ்ந்துபரி
மளிக்கும் பொலன்கொம் பசைத்திடலால்
மருண்டு வெருண்டு பண்டிருந்த

மலர்ப்பூங் குழற்கா னகத்தேறி
வரிவாய்ச் சுரும்பை மணந்துசுக
மளிக்கு மரும்பாத் தைப்பதிவா
ழமுதே தாலோ தாலேலோ
வருள்சேர் வேத விநாயகநா
மரசே தாலோ தாலேலோ. (1)

23. மூளும் பிறவித் தடங்கடல்வாய்
மோகச் சுறவா லெறியுண்டு
முறையே துக்க சுகங்களெனு
மூரி வலையா லலைப்புண்டு
நாளுங் கரைகண் டறியாது
நலியு முயிர்கள் கரையேற
நளினத் திருத்தாட் புணைகாட்டி
நன்மந் திரத்தாற் பிடிவித்து
நீளும் பரவைத் தடங்கரை
னெடுங்கா லீட்டி யினிப்பிறவா
நெறியே காட்டி முத்தியெனு
நிலத்தி லேற்றிக் கருணைபொழிந்
தாளு மரும்பாத் தைப்பதிவா
ழமுதே தாலோ தாலேலோ
வருள்சேர் வேத விநாயகநா
மரசே தாலோ தாலேலோ. (2)

24. எடுக்குந் தனிவெள் ளேறுடைய
னெயின்மூன் றடுநாட் சகடினிலொன்
றீரா றாகிப் பிறிதொன்று
மீரெட் டாகி யிகலாகத்
தொடுக்குங் கணைபத் துருவாகி
நாணும் பலமா முகமாகி
தூக்குஞ் சிலையா யிரத்தெட்டாய்த்
துரங்க நாலு முகமாகித்
தடுக்கும் பொழுது முன்னருளாற்
றன்சே வகநா யெதிர்நகைத்துத்
தரியா ருயிருண் டிடலாலே
தலைவன் றனக்குந் தலைவனென்றே

யடுக்கு மரும்பாத் தைப்பதிவா
முழுதே தாலோ தாலேலோ
வருள்சேர் வேத விநாயகனு
மரசே தாலோ தாலேலோ. (3)

25. பந்துங் களபப் பனிச்செப்பும்
பதும முகையுங் களியானைப்
பணைவெண் மருப்பும் புறங்கொடுப்ப
பணைத்துப் பருநித் திலமணிந்து
சந்தங் கமழு முகிழ்முலையார்
ஆடல் பயிலு மேனிலைமேற்
றண்ணங் கதிர்சேர் வெண்மதியின்
றகுமா மறுவை யறியாமல்
வந்து தழுவுங் கொழுநரைத்தாள்
வணங்கி யிதுதே னிருலெடுத்து
வடித்துத் தருதி ரெனத்தொழலு
மைந்தர் மகிழ்கூர்ந் தினிதாடு
மந்தி வரும்பாத் தைப்பதிவா
முழுதே தாலோ தாலேலோ
வருள்சேர் வேத விநாயகனு
மரசே தாலோ தாலேலோ. (4)

26. கயலே கணையே கடல்விடமே
காலன் வேலே கருவிளையே
காமன் கணையே யென்றிவற்றைக்
கடிந்த தடங்கண் மடநல்லார்
மயலே கொழுநர் பிழைக்காக
வாங்கி யெறிந்த மணிப்பணிகள்
மைந்தர் சிறுதே ராழிபடர்
வழியைத் தடுக்க மேனிலையிற்
புயலே வெளிமேற் கொடிநிரைகள்
கதிரோ னாழி வழிதடுக்கப்
புனைவீ திகளின் முழவொலிக்குப்
பொதும்பர் தோறு மயில்களிக்கு
மயலே யரும்பாத் தைப்பதிவா
முழுதே தாலோ தாலேலோ
வருள்சேர் வேத விநாயகனு
மரசே தாலோ தாலேலோ. (5)

## வேறு

27. வீழி யிடைத்திரு மால்பணி யத்தனி
மேருவரைச் சிலையான்
வீறு பெறச்சுட ராழி யளித்ததை
வீசியிடக் கடிதே
பாழி யுடைக்கனி வாயி லடக்கிய
பான்மை குறித்துடனே
பாணி வளைத்துடல் கோணி நடித்தது
பார்வை யினிற்குறியா
வாழி நகைச்சிறு மூரல் விளைத்திட
மானில முற்றதனுல்
மாய னதைக்கொடு போக வளித்த
மகாபலி விக்கிரமனே
தாழி வயிற்றெரு வேழ முகத்தவ
தாலோ தாலேலோ
தாதை முனேர்பணி வேத விணுயக
தாலோ தாலேலோ (6)

28. வந்த கருங்குழல் வல்லி பொருட்டு
வலாரியனுப் பியநாண்
மண்டு கொடுங்கலி கொண்டு கலங்குபு
வருடமோ ரேழரையுஞ்
சிந்தை தளர்ந்து மெலிந்த நளன்பல
தேசமெலா முலவித்
திருநள் ளாறது தனில்விள் ளாவகை
சேவித் தருகுறவே
கந்த மிகும்பல கனிமல ராதிகள்
கைக்கொடு நளகூபக்
கணபதி யென்றடி பரவிட வரமொடு
காசினி யுந்திருவூந்
தந்தரு ளுந்தனி யைந்து கரத்தவ
தாலோ தாலேலோ
தர்தை முனேர்பணி வேத விணுயக
தாலோ தாலேலோ. (7)

29. அன்பு செலுத்திய நண்பின வர்க்கரு
ளற்புத முண்மையினு

லண்டிய தம்பி நெடும்பெய ராற்றுணை
யர்கிய நின்பெயரான்
முன்பொடு பின்பு கொடுத்திரு மைந்தரை
முற்றும் வளர்க்கையினல்
மூதறி வாலுயர் தேசிக னென்னவு
முன்னுற வந்தமையா
லின்ப முறும்படி நெஞ்சி னினைத்தமை
யாவு மளிக்கையினு
லிருமுது குரவர்கள் குருவொடு தெய்வ
மெனத்துணை யாகியுமுன்
றன்பத மேபணி யச்செயும் வித்தக
தாலோ தாலேலோ
தாதை முனோர்பணி வேத விநயக
தாலோ தாலேலோ. (8)

30. பேதமை மாறிய மாதுமை யாளருள்
பேறே போரேறே
பேணிய பேர்குல மாமணி போல்வரு
நேயா மாகாயா
வாதியு மாகி யனுதியு மாகிய
கோனே மேலோனே
யாணவ வேரறு மாதவ ரோதிய
தாளா சீராளா
பூத பசாச விமோசன காரண
வீரா வாகாரா
பூதல பாதல மீதல வாணர்சொல்
வாழ்வே மாதேவே
தாத விழ்மாலை நிலாவிய நீள்புய
தாலோ தாலேலோ
தாதை முனோர்பணி வேத விநயக
தாலோ தாலேலோ. (9)

31. கொத்து மலர்க்குழ லம்மனை கைம்மலர்
கொட்டி யழைத்திடவுங்
குந்தி யெழுந்த பதங்கள் சதங்கை
குலுங்கு சிலம்பிரையத்
தொத்தணி முத்தொடு முத்து நகைக்குளிர்
சோதி நிலாவிசிறத்

தொந்தி யொடுஞ்சிறு பண்டி யசைந்திடு
தொங்கல் புறஞ்சுழலக்
கைத்துணை வைத்து மெடுத்து மடிக்கடி
காலொடு கால்விலக்க
கலை யிளங்கதிர் போலொளி பொங்கிய
கதிர்முக மெதிர்மலரத்
தத்தடி யிட்டு வருஞ்சிறு மதலாய்
தாலோ தாலேலோ
தாதை முனோர்பணி வேத விநயக
தாலோ தாலேலோ. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

32. கொத்துவிரி தலையுரக நெளியத் தடங்கடற்
குட்டமள றிட்டுமறுக்க
குடுமிமக மேருவரை கிடுகிடென மூதண்ட
கூடங் கலங்கிவெருவத்
துத்திமுடி யரவமோ ரெட்டுமுட் டாடித்
துடிப்புற முடக்கெயிற்றுச்
சூரன் பகீரிடச் சந்திர சூரியர்கள்
செந்தூளிபட நீடுமண்டப்
பித்திபொதி ரெறியநிரு தப்படை நடுங்கியவர்
பேருயிர்க் கொட்டிநிற்ப
பெருவரிச் சிறைவிரித் தாடுங் கலாபப்பிர
சண்டமயின் மீதிலேறுஞ்
சத்திதரன் முன்வரு மரும்பாத்தை புரிமுதல்வ
சப்பாணி கொட்டியருளே
தவராச ரோதும்வே தவிந யகக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (1)

33. பனிகொண்ட திங்களங் கண்ணிபுனை யொண்ணிறப்
பவளவே ணியநெருக்காற்
பகல்வேளை யளவிலிவ் வுலகேழு முலவிவரு
புரிசுளோர் பெறுவரிந்தக்

கனியென்ற போதுளங் கனிகின்ற வேலவன்
கலபமயின் மீதிலேறிக்
கந்திரு வரம்பெருக வலமாக வருமுனங்
கருதினை யுன்னையல்லா
லினியெந்த வுலகெந்த வுயிரென்று சுற்றியர
னெந்தையே முந்திநேனை
லீங்கரு ளெனக்கடவுண் மாங்கனியை வாங்கியத
னின்சுவை சுவைக்கநன்ருய்த்
தனிகொண்ட கைக்கொண் டரும்பாத்தை புரியரச
சப்பாணி கொட்டியருளே
தவராச ரோதும்வே தவினை யகக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (2)

34. மாமறைகள் பலவுந் தொகுத்துப் பகுத்தவை
வகுத்துவழி கண்டமுன்னுன்
மாதவரின் மாதவன் வியாதமுனி யைந்தா
மறைப்பொருளை யாருமறிவான்
றேமருவும் வாயால் விதித்தநா ளாடகச்
சிகரமக மேருவினிலோர்
திண்கோடு பொலியமுனம் வெண்கோடு கொண்டது
திறம்பாம லடிமுடிகள்கண்
டாமியற் படவட மொழிக்கவித் தொகையிலக்
கத்துக்கு மேலுமிருபத்
தையா யிரத்தினையு மைதீரெழுத் தின்மணி
யாகப் பதித்தசெங்கைத்
தாமரை யினையரும் பாத்தைபுரி வருகளிறு
சப்பாணி கொட்டியருளே
தவராச ரோதும்வே தவினை யகக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (3)

35. தூவுந் தரங்கக் குளத்திற் கராவொன்று
துடியடி பிடித்திழுப்பச்
சொல்லாதி மூலத்து முதல்வனே யென்றொரு
துதிக்கையை யெடுத்தரற்றிக்
காவென்று கூவுங் கடாக்களிற் றொலிகண்டு
கமலையுங் கைநெரிப்பக்
கட்செவிக் கடவுளுந் தலைபணிப் பப்பொருங்
கருடத் துரங்கமேறிப்

போவென்று காலா விடுக்கியப் பொய்கை
புதுப்புனல் குடைந்தகரியின்
பொருந்துய ரகற்றுமக் கருமுகிலின் மருகவெப்
புவனமுஞ் சுபமேமக்கே
தாவென்று தொழுதிடு மரும்பாத்தை புரியதிப
சப்பாணி கொட்டியருளே
தவராச ரோதும்வே தவிஞ யகக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (4)

36. அண்டாதி யுலகுமெவ் வுலகுதொறு நால்வகைய
தாம்பிறப்பும் பிறப்பி
லாமெழு வகைத்தோற்ற முந்தோற்ற மாறுபா
டாமளப் பருமுயிரெலாந்
தண்டாமை யெண்பத்து நாலிலக் கம்யோனி
தனில்வேறு வேறுகாட்டித்
தனுகரண புவனபோ கங்களை யளித்தாண்ட
தனிமுதல்வ னீதன்றியே
பண்டாய மூவினை யினல்வரும் இடையூறு
பற்றித் தொடர்ந்திடாமற்
பாதுகாத் திடவுதவ வௌவகை செலுத்தியிப்
பார்தனின் மிக்கபுகழ்சேர்
தண்டாம மணிப்புய வரும்பாத்தை புரிமுதல்வ
சப்பாணி கொட்டியருளே
தவராச ரோதும்வே தவிஞ யகக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (5)

வேறு

37. நந்தணி மாலய னிந்திரன் வானவர்
நச்சரவத் தரச
னணிபல முனிவ ரனுதின முந்தொழு
நற்றுதி பெற்றவனே
அந்தி நிறத்தர னுருமை யம்மை
யளித்த மதக்களிறே
யங்குச பாசமு வந்தணி நால்வா
யற்புத கற்பகமே
சிந்தையி லெண்ணி வணங்குநல் லடியவர்
சித்த நினைத்தபடி
செயமே பெறவர மிகவே யுதவிய
சித்தி படைத்தவனே

கொந்திதழ் முத்தொடை சந்தத மணிமணி
கொட்டுக சப்பாணி
கோதறு சீர்புனை வேத விநாயக
கொட்டுக சப்பாணி. (6)

38. தாமரை மாமியு மாமரு மானம
தாணிகள் பலகொட்டத்
தான முலாவிய வானவர் கோனுறு
தாருவின் மலர்கொட்டத்
தேமலர் சூடிய வானுல கோர்செய
பேரிகை யெதிர்கொட்டத்
தீய கயாசுரன் மாமனை யாரிரு
சேல்விழி புனல்கொட்டப்
பூமி யுளோரிள நீர்கனி மோதக
போளிகை மலைகொட்டப்
பூவைய ராடல்கள் பாடல் களாலிசை
பூண்முழ வொலிகொட்டக்
கோமள மேனி மனோன்மணி பால
கொட்டுக சப்பாணி
கோதறு சீர்புனை வேத விநாயக
கொட்டுக சப்பாணி. (7)

39. பெட்டக மொத்த மதக்கரி நெற்றி
பிளந்துபன் மணிகொட்டப்
பேரு முனைப்படை வீர ரடிப்படு
பிறையெயி றுகள்கொட்டத்
தொட்டெறி யத்திசை யெட்டினும் வாசிகள்
சொரிகுரு திகள்கொட்டத்
தோதக மாடிய பூத கணாதிபர்
தோளொடு தோள்கொட்டக்
கட்டற விட்ட கயாசுரன் மூசு
களத்தி னிளைப்பகலக்
காளி யொடும்பல கூளிக ளுண்டவை
கையொடு கைகொட்டக்
கொட்ட மடக்கிய சிவகண நாயக
கொட்டுக சப்பாணி
கோதறு சீர்புனை வேத விநாயக
கொட்டுக சப்பாணி. (8)

40. பனிப்பிறை சூடிய வார்சடை யண்ணல்
படைத்திடும் வாகனமும்
பங்கய லோசன புங்கவ னேவல்
பரித்திடும் வாகனமுந்
தனிக்கம லாசன மேவிய தந்தை
தகைந்திடும் வாகனமுந்
தண்மலர் வெட்சியி ஞெண்மல ரைப்புனை
சண்முகன் வாகனமும்
இனிப்படர் நீங்கிய விரவிகள் சந்திர
ரேறிய வாகனமு
மேனை நெடுந்திசை வானவர் வாகன
மும்பிற கேதிரியக்
குனித்து முனேசெலு மூடிக வாகன
கொட்டுக சப்பாணி
கோதறு சீர்புனை வேத விநாயக
கொட்டுக சப்பாணி. (9)

41. வாருதி பாலமு தேபெற நாடிய
மந்தர வெற்பேணி
வானவர் தானவர் மாலய ஞதியர்
வண்பெல னிற்பேணி
யாரெழில் வாசுகி யேகயி ருக
விழுக்க வதிற்சேணி
ஞருட னியாவரு மாள விடத்தை
யளிக்க மழுபாணி
காரணர் தாமுண வேயதை வீறு
மிடற்றமை கட்டாணி
காரணி தானரு ளுத்தம பால
கரத்தி லெழுத்தாணி
கூரிய கோடென வேநினை சேவக
கொட்டுக சப்பாணி.
கோதறு சீர்புனை வேத விநாயக
கொட்டுக சப்பாணி (10)

## முத்தப்பருவம்

---

42\. குலவா வரிவண்ட லம்புகொன்றைக்
கோதைப் பெருமான் கோதையொடுங்
குரைவெள் ளருவிக் கயிலையின்கீழ்
குளிர்பூம் புனத்தோர் மண்டபத்தி
னிலகோங் காரத் தினிற்பிடியுங்
களிறு மெனவந் தணைந்தளிப்ப
விளஞா யிறுபோ லுமையிடைமே
லேற்றங் குகந்தே மாற்றரிய
வுலவா வேதா கமக்கடலி
னூறிக் கிளர்ந்த தேறலென
வொழுகு மமுதக் கனிவாயென்
றெவ்வா தலர்ந்த செவ்வாம்பன்
மலரா லரும்பாத் தைப்பதிவாழ்
மகவே முத்தந் தருகவே
வாழ்வே வேத விநாயகமா
மணியே முத்தந் தருகவே. (1)

43\. அலையார் வேணிச் சிவபெருமா
னளிக்க நீண்ட துளைக்கரமு
மம்பொற் கரங்க ளீரிரண்டு
மணிமா முகமும் விழிமூன்றுங்
கலையா வலியும் பெற்றசெழுங்
கனியே நினையு மவர்க்கருள்கூர்
கண்ணே மண்ணோர் புரியுமெந்தக்
கருமங் களுக்கு முதலான
நிலையே யறிவா லறியாது
நின்ற துரிய நிலைகடந்த
நேயத் தடங்கா வெறுவெளிக்கு
நேரே காண வருள்சோதி
மலையே யரும்பாத் தைப்பதிவாழ்
மகவே முத்தந் தருகவே
வாழ்வே வேத விநாயகமா
மணியே முத்தந் தருகவே. (2)

44. தேயா மயக்க விருவினையாற்
றிறம்புங் கறங்கு போற்சுழன்று
சென்மக் கடலி லாழாது
தேறு முணர்வா னுலகியற்கை
போயா தரஞ்சேர் திருநாளைப்
போவார் புலியூர் சேர்வனென்று
புறங்கண் டேகி யவர்வருநாட்
புனிதன் கனவி லினிதியம்ப
வேயா வளங்கூர் புங்கூரி
லுளங்கொண் டெவருங் குளஞ்சமைப்பா
னேரைந் துருவா யாள்வேலைக்
குள்ள கூலி பகுத்ததனி
வாயா வரும்பாத் தைப்பதிவாழ்
மகவே முத்தந் தருகவே
வாழ்வே வேத விநாயகமா
மணியே முத்தந் தருகவே. (3)

45. செழித்த புகழ்ப்பெண் ணுகடத்தைச்
சேரச் சுதனுங் களப்பாளன்
சிறுவன் வேண்டி வெண்காட்டிற்
செறிமுக் குளநன் னீராட்டிக்
கொழிக்குந் திரைநீர் வேணியினன்
கொடுத்த வரத்தாற் பெறுமகவைக்
கொடுபோய் வளர்ப்ப மழலைமொழி
கூறு மையிற்கண் டாருமல்
பழுத்த மதியார் சன்னிதிமுன்
பாலன் றனைவைத் தவனகலப்
பலநூல் வருத்தி மெய்கண்ட
பரம குருவென் றவற்கிறைநூல்
வழுத்து மரும்பாத் தைப்பதிவாழ்
மகவே முத்தந் தருகவே
வாழ்வே வேத விநாயகமா
மணியே முத்தந் தருகவே. (4)

46. அன்னம் வயற்சூழ் காசிநக
ரகிலே சனையு மமரரையு
மருவிக் கோட்டு மந்தரத்தி
லகல்வா னேவி யொருகுடைக்கீழ்

மன்னர் வணங்க வரசுசெய்து
வருதி வோதா னன்புவியோர்
மதியுங் கதிருங் கலங்கும் வண்ணம்
வன்னி யெனப்போந் தனனிலையே
கன்னி மடவார் தமக்குமிளங்
காளை யருக்குங் கனவுரைத்துக்
காசித் தலத்தை மீண்டுவரக்
கருதுங் கருணைக் கடகளிறே
மன்னு மரும்பாத் தைப்பதிவாழ்
மகவே முத்தந் தருகவே
வாழ்வே வேத விநாயகமா
மணியே முத்தந் தருகவே. (5)

## வேறு

47. தேவர் படுமிடர் தீர வலியொடு
செயமளிக்குங் குழவியே
தீய வினையிருண் மாய வருளொளி
திசைவிரிக்கும் பரிதியே
யாவி யுடல்பொரு ளாக வினைவழி
யடிமைவைக்குங் குரிசிலே
யாதி நடுமுடி வாரு மறிவரு
மதிசெயச்செங் கனகமே
மாவின் வகிரள வான மைவிழி
மலர்களிக்குங் கமலமே
மாயன் மலரய னாதி யடியுறை
மணிகொழிக்கும் பரவையே
தாவின் முதுகலை வேள்வி யவர்தொழு
தலைவமுத்தந் தருகவே
தாதை யருள்புனை வேத கணபதி
தருகமுத்தந் தருகவே. (6)

48. மீன முறுமுடை நாறு மறிகடல்
விசிறுமுத்துங் கழுணிவாய்
வீறு கழையினி லாலை நெரிபட
விரியுமுத்துங் கருவிவா
னீன முறுபல தான மிசைவிழ
விறையுமுத்துங் கமுகிலே

யேறு படவடி சற்று மொழிவழி
யிழியுமுத்துங் குணமெனு
வான மதிநதி யாடு சடையனை
மகிழுமுத்தம் புவியெலாம்
வாழவருளிய வேழை திருவுள
மலருமுத்தங் கருணைசேர்
தான மொழுகுநின் வாயின் மிகுசுவை
தழையுமுத்தந் தருகவே
தாதை யருள்புனை வேத கணபதி
தருகமுத்தந் தருகவே. (7)

49. ஆல மணியிலை மீதி லறிதுயி
லளிமலர்ப்பைந் துளவனோ
டாதி முதுமுறை நாலு மருளிய
வயன்முதற்பைந் தருவின்வாழ்
கோல மலியிமை யோர்க ளொடுமதி
குறைபடைத்தெண் டிசையுளோர்
கோதை யுமைபுண ராதி யடியிணை
குறுகிமுற்றும் பரவியே
நீல கயமுக வீர வசுரனை
நிலையழிக்குந் திறமெனோ
நீயி தருளென வாய்மை யருள்விழி
நெடுமலைப்பெண் கொடியொடே
சால வருளிய பால னெனவரு
தலைவமுத்தந் தருகவே
தாதை யருள்புனை வேத கணபதி
தருகமுத்தந் தருகவே. (8)

50. ஆடல் புரிபல கூளி குறளிக
ளலகைமுட்டுங் குறையுமே
யாதி முதுகதி ராதி கிரகமு
மடல்விளைக்குந் துயருநோ்
கூட வரியவி யாதி பலபல
கொடுநடக்கும் படருநூல்
கூறு மறநெறி சீறு மரசர்கள்
குறைசெலுத்தும் பிழையெலாந்
தேடு மதியொடு நாளு மழகிய
திருவடிச்செங் கமலமே

சேர நினைதரு வோர்முன் வெயில்படு
இரைகடற்றண் பனிகள்போல்
சாடி யருள்புரி ஞான தினகர
தருகமுத்தந் தருகவே
தாதை யருள்புனை வேத கணபதி
தருகமுத்தந் தருகவே. (9)

51. மூல மெனும்வெகு கோடி முதுமறை
முடிவுணர்த்தும் பிரணவமாய்
மோக வினையகல் யோக முனிவரர்
முனமுதிக்குஞ் சுடருமா
யேல வொருபொழு தேனு நினைபவ
ரிருதயத்தின் பிரபையுமா
யேது கருதினு நாடி யதையெதி
ரினிதளிக்குங் கடவுளா
யோல மறிகடல் போலு மிருவினை
யொழியநிற்கும் பதவியா
யோது மவர்குல நாத னெனமன
துள்தளிர்க்குந் தருவுமாய்த்
தால மிசையுயர் சீல முதவிய
தலைவமுத்தந் தருகவே
தாதை யருள்புனை வேத கணபதி
தருகமுத்தர் [illegible]கவே. (10)

---

## வருகைப்பருவம்

---

52. தொங்கற் பெருஞ்சுடிகை பளபளென வாடகத்
தோள்வலைய நிகநிகென்னச்
சுட்டிமணி விட்டவொளி தளதளென நூபுரந்
தொட்டமணி கலகலென்னத்
தங்கத் தகட்டாடை மளமளென வொழுகுமத
சலவருவி களகளென்னச்
சன்ன வீரத்தணி பளீரெனக் காலிலணி
தண்டைகள் கலீரெனத்தான்
செங்கைத் தலங்கொட்டி மங்கைப் பிராட்டியுமை
சென்றழைத் தெனதுவாழ்வே

சீராட்ட வருகமொழி பாராட்ட வருகவென்
றிருவருக வெனவருகுவோர்
வெங்கட் பணைக்கரட துங்கக் களிற்றுமுக
வீரவிக்கிர மன்வருகவே
மிகுமரும் பாத்தைபுரி வளர்பெருங் கீர்த்திபுனை
வேதகண பதிவருகவே. (1)

53. கறைகொண்ட வாள்வா யரக்கர்குல வசுரர்குல
காலரென் றோலமிட்டுக்
கடவுளரில் வலிகொண்டு மெழில்கொண்ட வுருவுபோய்க்
காலூதி கொண்டுமென்பூச்
சிறைகொண்ட கணைகொண்டு நாணியளி கொண்டுபூஞ்
சிலைகொண்ட வேளையஞ்சித்
தெரிவைமார் கொங்கையை யரண்கொண்டு வாழ்தேவர்
சிரசுநாண் கொண்டுகுனியத்
துறைகொண்ட பொறிபுல னடக்கிமன் மதனையுந்
தோல்விகண் டவனிருப்பைச்
சூறைகொண் டிடவுமதை யோவைகொண்டே யெவருந்
தொழும்பிரம சாரியென்றே
விறல்கொண்ட கொன்றைமலர் வாகைகொண் டணிவெற்றி
வீரவிக்கிர மன்வருகவே
மிகுமரும் பாத்தைபுரி வளர்பெருங் கீர்த்திபுனை
வேதகண பதிவருகவே. (2)

54. ஆயிரங் கோடிகடல் வெள்ளப் பெருக்குமுள்
ளடிநனைத் திடவுமுடியா
வடல்கொண்ட சூரனவன் குடல்கொண்டு வருசேனை
யசுரர்வெள் ளம்பெருகுநாட்
காயிருந் துணைவீரர் கணமுமீ ராயிரங்
கனவெள்ள மும்பெருகியுங்
கைவேல் விடுத்துமுனை செயவேல னுள்ளங்
கலங்கிய பெருங்களத்தே
போயொருங் கேபிரம சாரியாய் மாயையைப்
புனைதுடையி லேயிருத்திப்
பூநிகர் துதிக்கையவள் பூவினில் விடுத்துப்
பொருங்கரு வழுத்திமேனள்

மேயதம் பிக்குமுன் புக்குவிசை யந்தந்த
வீரவிக்கிர மன்வருகவே
மிகுமரும் பாத்தைபுரி வளர்பெருங் கீர்த்திபுனை
வேதகண பதிவருகவே. (3)

55. கூறுபுகழ் புனைகாழி ஞானசம் பந்தனார்
கூடன்மிசை யமணழித்துக்
கூனல்பெறு மாறன்முன் மீனமுறு வாதுபுரி
குண்டர்விண் டிடவழுதநீ
ரூறுநதி வைகையிடை நீறுநிலை பெறுகவென
வோதியிடு மேடுவிடலா
லுயர்நீரி னெதிரோட வியலேடு கொள்வனென்
ரோடிய வமைச்சனுக்கும்
பேறுபெற வெய்தாது செல்லவொரு பூவணப்
பிள்ளையாய் வெள்ளவலையிற்
பேரேடு தனைவாங்கி நீரோடு மளிக்கப்
பெரும்புகலி மாமுனிவனால்
வீறுதமிழ் கொண்டுபுனை மாறுநிக ரில்லாத
வீரவிக்கிர மன்வருகவே
மிகுமரும் பாத்தைபுரி வளர்பெருங் கீர்த்திபுனை
வேதகண பதிவருகவே. (4)

56. வைத்தலை நெடும்பகழி வரிசிலைச் சென்னிமுதன்
மண்டலத் தவருமேனண்
மாமூவர் தேவார வைப்பையறி யாதுமன
மங்கியிட வண்குரவனைக்
கைத்துணைச் சிறுவனிடு பூசைக்கு நேசித்த
கருணையா லவன்வினவக்
கன்னலொடு பயறுகனி யன்னமுத லானவை
கனிந்தமுது செயும்வேளையில்
துய்த்தலை நிறுத்தியிவ் வழிகண்டு கொள்ளென்று
சொல்லியொரு நாரையூரிற்
றுகளிலா வெண்ணீறு மைந்தெழுத் தும்புவி
துலங்கமுன் விரலைநீட்டி
மெய்த்தமி ழளித்திடுங் கருணை கரச்செல்வ
வீரவிக்கிர மன்வருகவே
மிகுமரும் பாத்தைபுரி வளர்பெருங் கீர்த்திபுனை
வேதகண பதிவருகவே. (5)

வேறு

57. அகனீர் வேலை கடந்தோடி
யலையாக் கும்ப மாணையினு
லடங்கா நாகம் வீணையினு
லசையாத் தந்தி நிறுத்துரைத்துப்
பகரா துயர்ந்த மாதங்கம்
பறவாத் தும்பி காயாத
பருங்கோட் டத்தி மாதர்முலை
படியாக் களபம் படியில்விலை
நிகழா வொருசிந் துரந்தலத்தி
னிறுவாக் கம்ப மருங்குளத்தி
னேரா வாம்பல் வடுக்கள்பட
நெருங்கா விளமா வென்றுபல
புகழா லுயரு மரும்பாத்தை
புரிவாழ் களிறே வருகவே
பொருள்சேர் வேத விநாயகமாம்
புனிதா வருக வருகவே. (6)

58. துதிதோள் சுமுக னேகதந்தன்
துலங்கு கபிலன் கசகர்ணன்
சொல்லு மிலம்போ தரன்விகடன்
தொகும்விக் கினரா சன்புகழா
லதிவி நாய கன்றூம
கேது வுடனே கணாதியக்க
னருள்சேர் பால சந்திரன்று
ரணிசூழ் வக்கிர துண்டனுயர்
மதிசெய் சூர்ப்ப கர்ணனே
ரம்பன் கந்தன் மந்திரத்தால்
வணங்கும் பூர்வ சகாயனென
வளர்ீ ரெட்டுப் பெரும்பெயரும்
பொதியுஞ் சிறந்த வரும்பாத்தைப்
புரிவாழ் களிறே வருகவே
பொருள்சேர் வேத விநாயகமாம்
புனிதா வருக வருகவே. (7).

59. அலரி துளசி மருதெருக்கோ
டறுகு கையாந் தகரைமுள்ளி

யரசு பச்சை நாயுருவி
யணிசேர் நாவ லெலுமிச்சை
யிலகு நொச்சில் சாதிப்பூ
யிலுப்பை வன்னி யூமத்தை
யிலந்தை தேவ தாருவுட
னெழில்மா தளைவிட் டுணுகாந்தி
குலவு மிருபத் தொன்றான
குணபத் திரங்கள் பலசாத்திக்
குட்டிக் கொடுதாள் பணிசெய்வோர்
குறித்த கருமந் தருவோனே
புலவ ரேத்து மரும்பாத்தை
புரிவாழ் களிறே வருகவே
பொருள்சேர் வேத விநாயகமாம்
புனிதா வருக வருகவே. (8)

60. சுழலும் பிறப்பி லருவருத்து
நிலையு நிலையா மையுமுணர்ந்தோர்
துகளில் போது கருத்தென்னுந்
துய்ய தறியி னிடைக்கட்டுண்
டழிவி லாத மறைகூடத்
தணைந்து சுருங்கா நிறையன்பா
மந்தண் கவள மடுத்தடியா
ரார்வ மெனும்பே ரளிசுழல
விழும மான கருணைமத
வெள்ளங் கொழித்து வினைப்புனத்தை
வேரோ டெறிந்து மெய்ஞ்ஞான
வெளியி லுலவித் தெளியுமருள்
பொழியுஞ் செழித்த வரும்பாத்தை
புரிவாழ் களிறே வருகவே
பொருள்சேர் வேத விநாயகமாம்
புனிதா வருக வருகவே. (9)

61. அந்தி யிளவெண் பிறைக்கொழுந்து
மலர்பூங் கொன்றை நறுந்தொடையு
மருமா மணிப்பொற் கரகான்கு
மலங்கும் பவளச் சடாடவியு

நிந்தை யகல்பா சமுமழுவு
நீளு மரவ மணிக்கலனு
நிறத்தி னுயரு மணிமருப்பு
நிலவு குலத்தின் மலர்விழியுஞ்
சந்த மமரும் புரிநூலுந்
தலைவன் றனைப்போ னிலைபெற்றுத்
தரணி தனில்வந் தனைபுரிவார்
தமது குலதெய் வதமாகிப்
புந்தி மகிழு மரும்பாத்தைப்
புரிவாழ் களிறே வருகவே
பொருள்சேர் வேத விநாயகமாம்
புனிதா வருக வருகவே.

---

## அம்புலிப்பருவம்

---

(சாமம்)

62. வட்டமதி வேணிய னிடக்கண்வா லானுருவின்
மடமானை வைத்திடுதலான்
மன்னுயிர்களுக் கருமருந்தா தலான்முழு
மதிக்கடவு ளெனநிலவலா
லிட்டகண பதியென் றிருத்தலாற் பைங்கொடி
யினக்குவளை மலர்விக்கையா
லெவ்வமர ரும்பரவு தெய்வவரை யதனைவல
மிட்டுவரு பலனெய்தலாற்
சுட்டிய பெரும்புவியி லனைவர்க்கு மேலாய்த்
துலங்கலால் மந்தாகினிச்
சுரநதி கண்ணேடி வருதலா லுனையொத்த
துணையிவ னெனக்கருதிநீ
யெட்டதிசை யுந்தொழு மரும்பாத்தை புரியரசோ
டம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (1)

63. தண்டா மரைத்திரள் குவிக்கிலிவ னன்பர்கைத்
தாமரைகுவிக் கவறிவான்
தாரைக ளொழுக்கில்வரு வாயென்னி லிவன்மத்த
தாரைகளொழுக் கில்வருவான்
மண்டாறு தலைபடைத் தாயென்னி லுற்றதுணை
வளராறு தலைபடைத்தான்
வாரிக் கருந்தலை விடாயென்னி லிவனுமணி
வாரிக்கருந் தலைவிடான்
பண்டாய பாரிடஞ் சூழுவா யெனிலிவன்
பாரிடஞ் சூழவருவான்
பகரிலுன் செயலுமெங் கடவுளின் செயலுமிப்
படிகண்டு முடிகொண்டுவா
னண்டாதி பதிதொழு மரும்பாத்தை புரியரசோ
டம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (2)

(பேதம்)

64. காதிக்கொ லுரகத்தை யஞ்சுவா யிவனுரக
கங்கணம் புனையவஞ்சான்
கலைகளீ ரெட்டனறி யில்லையிவ னவஞ்ஞான
கலைகள்வெகு கோடியுடையான்
சோதிக்கி லுடலிற் களங்கமுள் ளாயிவன்
சொல்லிற் களங்கமுள்ளான்
சுற்றிவலம் வருகுவாய் நீயிவன் புவியெலாஞ்
சுற்றிவலம் வரவருகுவா
ஞேதிக் கிளர்ந்தநா ளொன்றில்மறை வாயிவ
னொருக்காலு மறையவறியா
னொருமுறைப்பி லல்லவா யிரமுறை யினும்பார்க்கி
னுன்னிலிவ னதிகமென்றே
யாதிக்க மிகுமரும் பாத்தைபுரி மழகளிறோ
டம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகு வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (3)

(தானம்)

65. முன்புததி யமுதுண்டு நரைதிரை களைந்திட்ட
முப்பத்துமூன் று கோடி

முதலான தேவருஞ் சிதைவாகி யகிலாண்ட
முற்றுங்கலைந் தலைபடும்
பின்புமெழில் குன்ருத பிள்ளையா ரென்வரும்
பிள்ளையிவ னருள்கிடைத்தால்
பெருகியுஞ் சிறுகியுந் திரியாது வாழலாம்
பேர்தூம கேதுவெனலால்
துன்புபுரி கேதுவா லிடையூறு நீங்கித்
துலங்கலா மின்னமொருபேர்
சொல்வால சந்திரனென் றெல்லோரு மேத்தலாற்
றுணையுனக் கிவனென்னவே
யன்புநிறை தருமரும் பாத்தைபுரி மழகளிறோ
டம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (4)

66. ஒளியூறு மாவணித் திங்கட் சதுர்த்தியினி
லுலகுளோர் புரியும்விரதத்
துறுகனிகள் கடலைபய றேடியல் பொரியமுதுண்
டுரத்துப் பெருத்தவுதரங்
களியூறு முக்கட் பிரானைவந் திக்குமக்
காலையிற் கால்மேலுறக்
கண்டுநீ நகைபுரிந் துண்ட சாபமுமுன்
கருத்தறியு மிளையவீரன்
துளியூறு மமுதந் துளிப்பவிரு கால்கொண்டு
துவையவிட் டதுமுனக்கே
தோற்றுமத னலிவனை யேற்றிரவு கோடியேற்
சுகமலாற் பயமில்லையென்
றளியூறு வருமரும் பாத்தைபுரி மழகளிறோ
டம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (5)

67. கவடுற்ற மருதமர மிருவற்கு முன்பெற்ற
கனகசாப மதுநீக்கியுங்
கற்போலு மரிவைபெறு சொற்சாப நீக்கியுங்
கனகமதில் மிதுலைமேவுங்

தவமிக்க சனகனிடு சாபநீக்கி யுமுமை
சபித்தசா பந்தொலைக்கச்
சற்றும் வகையறியாது நெட்டர வமாகத்
தவித்ததிரு மாலுமேனு
ளிவன்முக்கிய தெரிசனத் தாற்சாப மாறியே
யினிதுவாழ்ந் தனனுதலா
லிவனிட்ட சாபமொடு குருவிட்ட சாபமு
மிரண்டும்விட மேன்மைபெறுவா
யவனிக்குண் மிகுமரும் பாத்தைபுரி முதல்வனுட
னம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (6)

68, வருநெலிரு நாழியால் முப்பத் திரண்டறம்
வளர்க்கவல் லமையுள்ளவள்
மகுணன்முன் னுண்டிட்ட வாலகாலந் தன்னை
மன்னுமமு தாய்ச்செய்தவள்
பரவுமொரு புலவற்கு நின்னையு மூவாவினிற்
பண்பொடு வரச் செய்தவள்
பகர்பிரம னுதிநால் வகைமுதல்வ ரொடுவீன்ற
பரமிதிரு வயிறுவாய்த்த
யிருமக னெனச்சொல்லு மொருமகன் விளையாட
யினிதழைத் தனன்வருதியே
லேறிய களங்கமது தீரும்வகை யுமையம்மை
யேயருள்வ ளாதலாலே
யருளினிது தருமரும் பார்த்தைபுரி முதல்வனுட
னம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (7)

69. பாருக்கு மிப்பார் படைத்தவற் கும்பார்
படைத்தனை முன்புதவுமோர்
பங்கயக் கண்ணற்கு மக்கண்ணர் தமையுதவு
பகராறு முருத்திரற்குஞ்
சீருற்ற ருத்திரரை யுதவு மீசற்குமச்
செம்மைபெறு மீசனையருள்
திகழ்சதா சிவனுக்கு மச்சதா சிவமருவு
திகழுமொரு விந்துவுக்கும்

பேருற்ற விந்துவருள் நாதத் தினுக்குமப்
பேர்பெரிய நாதமுறையும்
பிரணவப் பொருளுக்கு முறைதிறம் பாதுவரு
பிள்ளையிவ ளுதலாலே
யாரத் தடம்பெறுமரும்பாத்தை புரிமுதலோ
டம்புலீ யாடவாவே
யாதிகண பதியாகும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (8)

70. வந்தனைசெய் தேற்றுவோ ரிந்திராதி போகமும்
மதனசுந் தரதேகமும்
மதிகதிர்கண் மாறியும் மாருத கீர்த்தியும்
வழுவர்த சுபவார்த்தையும்
செந்தமிழின் வளமைபெறு கல்வியுங் குறையாத
செல்வமும் புகழட்டமா
சித்தியுஞ் சிவஞான பத்தியும் பத்தியாற்
சேருமுத் தியுமெய்தலால்
எந்தநிலை யும்பொருவி லெந்தவலி யும்பெற
விரங்குமிவ னருள்கிடைத்தா
லிகபர மிரண்டுக்கு முறுதியா மெனவெண்ணி
யெண்ணில்விண் ணவர்களுடனே
யந்தணர்க டொழவரு மரும்பாத்தைப் புரியரசோ
டம்புலீ யாடவாவே
யாதிகண பதியென்னும் வேதகண பதியினுட
னம்புலீ யாடவாவே. (9)

(தண்டம்)

71. வேதக் குலம்புகழு மாதிபரஞ் சோதி
வித்தகன் சத்தியுடனே
மேவுறு புணர்ச்சியினின் மாவடு நிகர்த்தவிழி
மெல்லடியி னெல்லொலிதரும்
பாதச் சிலம்பில்வரு நவவீர ரண்டமொடு
பகிரண்ட முதலியாவும்
பத்திப் பிடுங்கியவை வைத்துப் பதித்திடப்
பராக்கிரம ரவர்களுக்
கேதப் படாத்துணைவன் நின்னையொரு பொருளாக
வினிதழைத் தனன்வராயே

லிவன்மனது தான்பொறுத் திடினுமவர் தான்பொறு
 றென்றெண்ணி யாறிரண்டா
மாதித்தர் தொழவரும் அரும்பாத்தை புரியரசோ
 டம்புலீ யாடவாவே
யாதிகண பதியென்னும் வேதகண பதியினுட
 னம்புலீ யாடவாவே. (10)

---

## சிறுபறைப்பருவம்

---

72. வெங்கட் பணிப்பார் நெடுநிலங் களைநூறி
 விசையமங் கலமுழக்க
விண்ணவரும் வருதிசைப் பண்ணவரு மிகல்வென்ற
 வீரதுந் துமிமுழக்கத்
துங்கப் பெருந்தா மரைக்கோயில் மாமியார்
 சோபனத் துதிமுழக்கத்
தும்புருவு நாரதரு மணிவீணை யமுதெனச்
 சுருதியின் னிசைமுழக்கப்
பங்கப் படாதபழ மறையெலா மிடர்தீர்ந்து
 பாவினின் றெதிர்முழக்கப்
பலகோடி வல்லசுரர் வலியும்போய் நெஞ்சினிற்
 படபடென் றெதிர்முழக்கத்
திங்கட் கொழுந்தணி யரும்பாத்தை புரியரசு
 சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவு வேதகண பதியினிய
 சிறுபறை முழக்கியருளே. (1)

73. வில்லார் நுதற்பேதை யுமையம்மை செம்மாந்த
 வியன்முலைத் துணையைநோக்கி
வித்தகம் புனையெனது மத்தக மெனத்தனி
 மிடுக்குறு தடக்கைநீட்டிக்
கல்லாரும் நெற்றிமிசை தடவரது மெம்பிரான்
 கவினெழுகு பவளவேணிக்
காணிக் கிடந்தமல ரோனெற்றை வெண்டலை
 கழிந்தா னெழிந்த கொள்ளைப்

பல்லாடு நகைகண்டு நீயெனை நகைத்தியால்
பண்டுநகை செய்துபழிகூர்
பாதிமதி யுடனிருந் தீதறி கிலாயெனப்
பாலகல் சோலைதோறுஞ்
செல்லாடல் கொண்டிடு மரும்பாத்தை புரியரசு
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவும் வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (2)

74. கோட்டுஞ் சிலைக்காம னெந்தைதிரு நுதல்விழிக்
கொந்தழலில் வெந்தசாம்பற்
குவியலைச் சிவகணத் தொருவனுரு வாக்கவுங்
கோரவா காரத்துடன்
காட்டுங் கொடுந்தொழிற் பண்டா சுரப்பெயர்
கலந்தவுண னுகிமலையக்
கவுமாரி கைவிறலின் வலிபோ யுடைந்தவன்
கடவுளேந் திரம்வைத்தநாள்
பூட்டும் பணித்தொடை யொருத்தனருள் கொண்டத்தை
பூமியில் மிதித்தழித்துப்
பொருநிருத னுடலையுந் தரைமிசை புரட்டியெப்
புவனத்து மெய்க்கீர்த்தியைத்
தீட்டுங் கிருபாகர வரும்பாத்தை புரிமுதல்வ
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவும் வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (3)

75. பொருதிரைப் பேராழி நெடுமுகட் டொருவரை
பொருத்திமா சுணமிறுக்கிப்
புருகூத னிருவகைத் திறலாரோ டும்பண்டு
புடைநின்று கடையவுஞ்சீ
ரருள்து பெருமையா லாலம் பிறக்கவன்
றலம்வந்து சுலவும்வெண்பா
லலைநுரை தனைப்பிடித் துனதுவடி வாக்கியங்
காராத னுதிசெய்யப்
பெருமணியு மிருநிதியு முயர்தருவு மமுதும்
பிறக்கப் பிறந்தவெள்ளைப்
பிள்ளையா ரெனவலஞ் சுழிதன்னி லெழில்மன்னு
பேர்பெறுஞ் செல்வநாளுந்

திருவிளங் குலவிய வரும்பாத்தை புரிமுதல்வ
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவும் வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (4)

76. வேணிக் கலாமதி மணக்குங் கணத்திரள்
விதிர்ந்தன வுதிர்ந்திடாமல்
வீரந் தழைந்தமுக வாரம் பொருந்துதிசை
வேழங் கலங்குறாமல்
காணிற் கிளர்ந்தமும் மதமழையை நிகர்மழைகள்
கருவது கலைந்திடாமற்
காதல்புரி நன்மாமன் மேதகைய நாகணைக்
கண்டுயி லொழிந்திடாமற்
பூணிற் சிறந்தபணி யினமசனி யேறெனப்
பொறிமணி யுகுத்திடாமற்
புண்டரிக மலரன்ன தண்டடக் கைவிரல்
பொருத்தியின் றொலிமிகுத்தச்
சேணிற் கனம்பெறு மரும்பாத்தை புரியரசு
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவும் வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (5)

77. ஏர்மலர் பொழில்வளர் திருக்கோவ லூரகத்
தேரண்ட முனிவன்யாகத்
தெழுகின்ற பச்சைப் பசும்பரித் தெய்வீக
னியல்மண முடிக்குமவ்வை
பேர்நிருபர் மூவர்க்கு மணவோலை யெழுதப்
பிறங்கெழுத் திடுகணக்கப்
பிள்ளையா னென்றவர்க் குள்ளவா றெழுதியொரு
பெண்ணைக்கு மோலைபோக்கி
பார்மருவு மொருமணப் பந்தரிற் பலகோடி
யாசனஞ் சூழிருப்பப்
பாரியங் கவையினொடு சங்கவையு மணமாலை
பாரிக்க வைத்தகளிறே
சீர்மண மியற்றிய வரும்பாத்தை புரியரசு
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவும் வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (6)

78. மல்லற் செழுங்கொன்றை மாலைசூ டிக்கொரு
மருங்கிலே பெண்ணைவைத்தும்
வளர்வேணி முடியிலணி குளிர்வீசு தெண்டிரை
மடந்தையை யெடுத்துவித்தும்
குல்லைப் பசுந்துழாய் மாலுக்கு மார்பிலே
கோதைதனை யேற்றுவித்தும்
கோகனக வயனுக்கு நாவிலே பாவுணர்
கொழுங்கொடியை நாட்டுவித்தும்
எல்லைப் படாதவள மேறுமிந் திரன்மேனி
யெங்குமரன் மனையைவைத்து
மெவ்வெவ ரையும்பொருது வெல்லுமத னன்கையி
லெடுத்துப் பிடித்தசிலையைச்
செல்லக் குறித்திடு மரும்பாத்தை புரியரசு
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவும் வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (7)

79. பொன்னிலத் தரமாத ரின்னிசை முழக்கிடப்
புலவர்முப் பத்துமூவர்
புகர்மதக் கிருமுகா விசையிப வாவென்று
புகலுமென் றொனிமுழக்கக்
கன்னல்மொழி மடவார்கள் முன்னர்நட மிடுகின்ற
காலில்நூ புரமுழக்க
காட்டமும் மதக்களி யானைமன் னவர்கள்
கருதுதோத் திரமுழக்க
விண்ணிலத் தினிலுள்ள தேவாலை யங்கடொறு
மெழில்செய்வாச் சியமுழக்க
வெம்பிரான் மதலைவிளை யாடலிது வென்றெவரு
மேத்துநன் மொழிமுழக்க
செந்நெல்விளை தருமரும் பாத்தைபுரி வருமரசு
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவு வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (8)

80. தாதைதரு கனியேந்து நான்மறைக் கையினாற்
றடவரையி லெழுதுகையாற்
றவளநில வொழுகிடப் பவளமணி முடியினிற்
சந்திரனை வைத்தகையால்

ஆதரவி லீரேழு புவனமெல் லாம்பெற்ற
அன்னைமுலை யுண்டகையா
லசுரப் படைக்கஞ்சு மமரர்தம் படைகளுக்
கபையம் புரிந்தகையால்
போதமலி யவ்வையார் மணவோலை யெழுதப்
புகுந்துகொண் டாடுகையாற்
பொன்னுற்றி விடபொருள் நன்மாத் துரைத்துமுன்
புலவனுக் கீந்தகையால்
சீதவயல் மிகுமரும் பாத்தைபுரி வருமரசு
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவு வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (9)

81. வயமேறு படையிலே யேறினுங் கடலிலே
வங்கமேறிச் செல்லினும்
வாதம் படிக்கினுங் கீதந் தொடுக்கினு
மருந்தொன் றருந்தியிடினும்
பயமேவு மரசர்தம் சபையேறி கவிதைகள்
பன்னினும் புகுநுண்ணினும்
படர்காண் டடக்கினுங் கரவோர் வளைக்கினும்
பல்வேறு பதியெய்தினுஞ்
சுயமாக வெவ்வேறு தொழில்செய்ய நாடினுந்
துணையென்ன வொருகணத்திற்
சுற்றிவலம் வந்துகுட் டிக்கொண்ட வடியவர்
தொடுத்தபடி நிறைவேறிடச்
செயமே யளித்திடு மரும்பாத்தை புரியரசு
சிறுபறை முழக்கியருளே
தேவகண பதிபரவு வேதகண பதியினிய
சிறுபறை முழக்கியருளே. (10)

---

## சிற்றில் பருவம்

---

82. கூற்று நெளியப் பதமுகைத்த
கோதை பாக னுதியராற்
குறையா விடையூறு களனைத்துங்
குறைப்பா னறைத்தா மரைத்தாளிற்

போற்றும் புலவர் மகுடமொடு
மகுட நெருங்கிச் சன்னிதிமுன்
பொற்றாள் கொடுத்த முடியிலிந்தப்
புவித்தாள் கொடுத்தல் திருவுளமோ
ஆற்று மொளிவெண் கோட்டொடெம்மா
னுரத்தி லேனக் கோட்டையிசைத்
துவவு மதிலென் றுவமையில்லா
வுருவி லேறிப் பலவிளையாட்
டாற்றும் வேத விநாயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்பதிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (1)

83. முருகு விரியு நறுங்குஞ்சி
முடித்துத் திலக நுதல்விரித்து
மூரற் குறுவெண் ணிலவரும்ப
முத்த முகந்து மழலையந்தேன்
பருகி மணிமுன் றிலின்புறத்தே
படியே றீனற் கொடியாடல்
பயில விடுத்த வியல்யாங்கள்
படைத்த சிறுவீ டுடைப்பதற்கோ
வுருவு மனையிங் கிதைமிதித்தா
லுன்சே வடிக்கண் மணியுறுத்த
வுமையாள் இருகண் மணியுறுத்து
முடையாய் தகுமோ வடியார்க்கே
யருளும் வேத விநாயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்பதிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (2)

84. மிடல்சேர்ந் திடுபோர் மத்தனென்று
மிகுத்த பேழை வயிற்றனென்றும்
வெருவ வளர்வேற் றுருவனென்றும்
மேக்கு வாயி னமுக்கனென்று
முடல்சேர் நாகத் தொடையனென்று
முரைத்து ளோமோ தெருப்புறத்தே
யுறுபே தையர்சிற் றிலைவாளா
வொழித்தா லுனக்கே பழிப்பாமால்

தொடர்சே ரண்டப் பரப்பனைத்துந்
துடைக்கு மொருவ னிடத்தில்வந்த
தோற்ற மிதுவோ போற்றியென்று
தொழுவார் துயரங் கழுவிவிடும்
யடல்சேர் வேத விநாயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்பதிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (3)

85. தென்னாட் டரசன் மலையினிடத்
திருவாய் வளர்ந்த வப்போதுந்
திரைநீர் வலையன் மகளாகச்
செனித்த போதும் வரைக்கெல்லாம்
மன்னே யெனுமன் னவன்மகளாய்
வளர்ந்த போது மொருதக்கன்
மகளாய் வளர்ந்த போதுமுமை
வல்லி தனக்கு மணமாலை
முன்னே யரிய பரஞ்சுடரா
முதல்வன் சூட்ட வுன்வடிவை
முறையா லமைத்துப் புகழ்நின்ற
முடியா முதலே யன்பர்தமக்
கன்னே வேத விநாயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்பதிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (4)

86. சேரற் கிறைவன் வாம்பரிமேற்
சென்று கயிலை புகுமுன்னே
சிந்தை யுருகிப் பைந்தமிழ்நூல்
செப்பி வழுத்து மப்பொழுது
வீரத் துதிக்கை கொண்டேந்தி
மேனி மெலிந்தவ் வையார்க்கு
மேல்வீ டளித்தாய் சிறுமியர்க்கிவ்
வீடு மளிக்க வேண்டாமோ
வாரத் துயிராம் பயிர்தழைப்ப
வரக்க ரெனும்பொற் களையெறிந்து
மாறாக் கருணை மழைபொழிந்து
வைக ரேறும் வளர்த்தளிக்கும்

பாரப் புயலே வேதவி
யகனே சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்புரிவா
ழதிபா சிற்றிற் சிதையலே. (5)

87. ஏரா வதுவை விதிமுடியா
தெண்ணில் காலம் பலகடந்து
மின்னம் பிரம சாரியென்றே
யிசைத்தோ மல்லால் வல்லசுரப்
பாரா வாரத் திரளெல்லாம்
படிய மாயை யாழ்வயிற்றிற்
பணைக்கை நீட்டி வினைபுரிந்த
பான்மை யறியப் பகர்ந்தேமோ
தீரா வினைகள் பலதீர்க்கும்
தெய்வ மருந்தே புலனடக்கிச்
செயலற் றுணரா துணர்ந்தவர்தம்
சிந்தைக் கடலி லூற்றெடுக்கும்
ஆரா வமுதே வேதவி
யகனே சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்புரிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (6)

88. கரும்புங் கனிந்த விளாங்கனியுங்
கதலிக் கனியும் வெண்ணாவற்
கனியு மிளநீ ருஞ்சூதக்
கனியும் பலவின் கொழுங்கனியும்
விரும்பும் பயறு மதிரசமும்
வீறும் வடையு மோதகமும்
வேறு பலவும் யாங்கள்வைத்து
வினவ வளிக்கா தொளித்தனமோ
பொருந்து மிளையார் பலர்கூடிப்
புனையுஞ் சிறுவீட் டினையுனது
பொற்றாள் வருந்தச் சிதைப்பதுதான்
பொருளோ வருளை யடியார்பால்
அரும்பும் வேத வினயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும் பாத்தைப் புரிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (7)

89. பண்டுந் துணையா முருகனிகழ்
பரவை யேழுக் கப்புறமும்
பாரா ளசுரன் கிளைகளொடும்
பயின்ற மலையோ நன்மாமன்
விண்டு பொருத வரக்கனுறை
வேலை யிலங்கைப் பெரும்பதியோ
மேனு னுனது தாதையுடன்
வெகுண்டா ரிருந்த திரிபுரமோ
மண்டும் வலியா லங்கவனை
மறந்தோ னிழைத்த பேர்மகமோ
மடவோஞ் சிறுவீட் டினையழித்தல்
மாண்போ காண்போ ருளக்கமலத்
தண்டும் வேத விநாயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்புரிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (8)

90. மறுவொன் றில்லா முழுமதியே
மதியை யளிக்குங் குணநிதியே
மணியே வேத முடிக்கணியே
வளர்வித் தகமே போதகமே
யுறுமன் பிலர்தம் மனத்திருளே
யுணர்வி னுயர்ந்தோ ரகப்பொருளே
யுலையா மலையே சிவகலையே
யுறுதித் துணையே மறைக்கணையே
துறவ ருயிரே யருட் பயிரே
தூய வரமே தரும்பரமே
சோதி வடிவே பொருண்முடிவே
துரியங் கடந்த வெறுவெளிக்கே
யறியும் வேத விநாயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்புரிவா
ழதிபா சிற்றிற் சிதையேலே. (9)

91. பணியுந் தலையும் பலகலையும்
படிக்குந் திறமுந் திருவடியைப்
பார்க்கும் விழியுஞ் சுபக்கீதம்
பருகுஞ் செவியும் பருகியதில்

துணியுங் கருத்தும் வலம்வந்து
செலவுங் காலும் பலகாலுந்
துதிக்கும் வாயுங் காமாதி
துன்ப விடையூ றுகளெல்லாந்
தணியுங் குணமு மெய்ஞ்ஞானத்
தவமே பொருளென் றறிவுணர்வுஞ்
சாரும் படியார் களுக்கருளுந்
தலைவா கடுக்கைப் பசுந்தெரிய
லணியும் வேத விநாயகனே
யடியேஞ் சிற்றிற் சிதையேலே
யரசே யரும்பாத் தைப்புரிவா
ழமுதே சிற்றிற் சிதையேலே. (10)

---

## சிறுதேர்ப்பருவம்

---

92. வண்டேரில் வருபரிதி கிலேதேர வளகேசன்
வைத்ததே ரேறநேராய்
வருதேரி ராவணன் பொருதே ருடன்சாய
வானவர்க் கிறைவனேவும்
விண்டேரி லேறியிகல் வென்றுமா தரசியொடு
மீமையிரு தேரினான
வேத்திமக னும்வீர கத்திவிட வேமணி
வியன்றே ரிறங்கிமணிநூற்
பண்டேர் வனத்தினிற் பணியுநா ளப்போ
படைத்தவ னிடுக்கணீக்கிப்
பைந்தொடியு மிளவலும் படைஞருங் கவிகளும்
பணைமதி லயோத்திசேரத்
திண்டேரி லுய்த்திடு மரும்பாத்தைப் புரிமுதல்வ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (1)

93. கொய்தினை யடுக்கத்து மடநடைக் குறமங்கை
கொங்கையை விழைந்தவேலன்
குரலகவ கிளிப்புறத் தெறிகவ ணெறிந்துமெதிர்
கூவிளி யெடுத்திசைத்துங்

கைவிரல் வருந்தக் கிழங்கோடு நறுங்கனிகள்
காட்டியும் பாராட்டியுங்
கட்கடைக் கருணைதனி வேட்கடையு மெய்தாது
கவலைகூர் தருமந்தநாள்
மைவரையி லருவியென மதவருவி பாயநெடு
வால்விசைத் ததிரவோடி
மலையானை யெனவந்து முலையானை யன்னவன்
மணித்தோ ளிடத்தழுந்தச்
செய்துமண நல்கிய வரும்பாத்தைப் புரிமுதல்வ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (2)

94. பிஞ்சுமதி மிளிர்கின்ற பவளச் சடாடவிப்
பெருமானு மூலக மெல்லாம்
பெற்றுமெழில் குன்றாத பேதைப் பிராட்டியும்
பெருகுகவ ரூடலுன்னி
விஞ்சுமணி மாயவன் வென்றிதோல் வைகணி
விளம்புகென வைத்தாடுநாள்
விடையூர்தி குறிகண்டு பொய்யுரை யவன்கூற
மெல்லியல் வெகுண்டமுனிவால்
நஞ்சுறு குருட்டரவ ராகக் கிடக்கின்ற
காரணற் காரருளினல்
நாகணைப் பள்ளிமிசை நளினமலர் மங்கையொடும்
நண்ணும்வகை யெண்ணில்வனசச்
செஞ்சரண முத்திய வரும்பாத்தைப் புரிமுதல்வ
சிறுதே ருருட்டியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதே ருருட்டியருளே. (3)

95. பொன்னியல் கடுக்கையா னுதவுசிவ லிங்கமது
போரிலங் கேசனேந்திப்
பொருதென் றிசைகடுக்க வருகின்ற வழியினிற்
புலவரா குலமுடிப்பான்
வன்னியென நேர்சென்று மற்றதைத் தாங்கியவன்
வாய்கழீஇ வருமுன்முக்கால்
வருகென விளித்ததைப் பெருநில மிருத்தலால்
மற்றவன் வெகுண்டுதனது

கன்னிகர் தடக்கையால் விட்டெறிந் தவனிடுங்
கைக்குட்டு மாறுமங்கை
காதுபிடி வந்தனையு மாதிமுத லானகோ
கருணமேற் கொண்டவுணர்கோன்
சென்னியை வணக்கிய வரும்பாத்தை புரிமுதல்வ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (4)

96. சொர்க்கமுத லருளுமிரு சரணபங் கயமலர்
துதித்துபூ பங்குணர்ந்து
தோலா துளத்திற் றியானத் திறைஞ்சிமெய்த்
தொண்டுகொண் டுருகுமன்பர்
விக்கின மகற்றியவர் பங்கினி லிருந்தருள்
விளங்கிடக் கருணையுதவி
விளையாடு கவுண்மதப் புகர்முகச் சிறுநயன
வேழத் தனிக்கடவுளே
யிக்கிறை யுடற்பொடி படுத்திய நுதற்கண
ரிடத்துமை யளித்தமகவே
யேரம்ப வாரம்ப வெறிதரங் கத்துவ
ரிருங்கடற் பூதலமொடெண்
திக்குமிசை பெறுமரும் பாத்தைபுரி வருமுதல்வ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (5)

97. ஊனே றுடற்சுமை யெடுத்தெடுத் தொழியா
துலைப்புறும் பிறவியெனுமோ
ரோதக் கடற்படிந் துலைவுறு தடியவர்க்
குனது தாள் மலரளித்து
மீனேறு கட்கமலை நாதன்வே தன்பதமு
மிக்கநின் றந்தைபதமு
மேவும்படிக் கன்பின் விக்கின மகற்றியரன்
வேதாந்த முடிவிளக்கே
வானேறு சினையேறி மந்திக் குலங்களால்
மலர்நெக்கு முட்கனியின்வாய்
மதுரச் செழுந்தேறல் வெள்ளப் பெருங்காலில்
மலரில்லறு கால்வழிக்குந்

தேனேறும் வயலரும் பாத்தைமா நகரிறைவ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய் வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (6)

98. கால்பாய நெடும்புவியின் வெவ்வேறு கடவுளர்
கலந்தபைய வரதமென்னுங்
கைக்காட்டி வெவ்வேறு வினைசெய வருத்துங்
கலக்கத் திளைப்புறுமே
நூல்பாயு மதியோடு நொடிப்பொழுதும் வந்திக்கும்
நுண்ணறிவி னடியவர்க்கே
நோயு மிடையூறுங் களைந்துபர கதிகாட்டு
நூபுரச் சரணவயலின்
பால்பா யகற்புனற் கரைமீது கமுகம்
பழக்குலை யுகுத்தபைங்காய்
பங்கயக் கையினுறு கழங்கெனப் புவிமகள்
பரிக்கவிரை வோடெழும்பிச்
சேல்பாய வளமிகு மரும்பாத்தைப் புரியதிப
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (7)

99. கரைசே ரரும்பிறவி வாரிக்கு மதலையுங்
கனவிரு ளுக்கிரவியுங்
கரைபிணி களுக்கரு மருந்தும் வறுமைப்பெருங்
காலத்துக் கானமழையும்
வரையேறு முத்திக் கபாடந் திறப்பதற்
கொருகாலு மிம்மைமறுமைக்
குறுதிக ளளிப்பதற் கொருகுருவு மென்கின்ற
வுத்தமா வைத்துநெடுநாள்
புரைசேர் மதன்கையிற் கிடைவாளி கழுவிப்
புதுக்கியெதிர் நீட்டியதெனப்
புண்டரிக வுலையினிடை நீலமுகை செய்யவப்
பொழுதுகரு மகனிலைசெயும்
திரைநீர் வளம்பெறு மரும்பாத்தைப் புரிமுதல்வ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (8)

100. உருமணிச் சுடிகையும் புனைநுதலு முக்கண்ணு
மொருகொம்பு மிருசெவிகளு
முறுபுயமு மம்புயக் கரமுந் துதிக்கையு
முதரமும் செவ்வதரமும்
மருவுபுரி நூலும்நிறை மார்பமுந் திருநாவி
வட்டமு மகன்றவிடையும்
வல்லபை யிலங்கிய பொலன்துடையு மென்கமல
மலரடியு மணிச்சிலம்பும்
அருள்பொழியு முகநகையு மபையவர தமுமழுவு
மடுபாச முந்தேசுசேர்
ஆகுவா கனமுந்தி யானமே செயுமவர்க்
காருயிர்த் துணைவனை
திருவளம் பெருகிய வரும்பாத்தைப் புரிமுதல்வ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (9)

101. கயமாமுகத் தசுரன் வயமான படையெலாங்
கைத்துணையி னெட்டுயிர்ப்பாற்
ககனமுக டுங்கடலும் வரைவீசி யங்கைப்
படையெலா முந்துரந்தும்
பயமான தின்றிவரு நிருதனுயிர் சிதறிடப்
பணைமருப் பொன்றைவாங்கிப்
படையை வழங்கியவ னுடல்வீ றழித்தலின்
பாலனென வாலெடுத்து
புயல்போலு மூடிகத் துருவா யெதிர்ந்திடப்
பொள்ளெனத் துள்ளியேறிப்
புவனமுழு துஞ்சூழ்ந்து பவனிவரல் கண்டமரர்
பூமழை பொழிந்துவாழ்த்தச்
செயவகை படைத்திடு மரும்பாத்தைப் புரிமுதல்வ
சிறுதேர் நடத்தியருளே
சிந்தைசெய வரும்வேத தந்தியெனு மொருநாத
சிறுதேர் நடத்தியருளே. (10)

(அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.)

---

# அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ்
# குறிப்புரை

---

## காப்புப்பருவம்

1. பொற்குவடு - அழகிய சிகரம்; இமையாசலம் - இமயமலை; கடகளிறு - சிவபெருமான்; ஐங்கரன் - விநாயகர்; கணிபூத்த - அளவு மிகுந்த; கறங்குதெண்டிரை - ஒலிக்கின்ற தெளிந்த அலைகளையுடைய கடல்; மீமிசை - ஒருபொருட் பன்மொழி; பணிபூத்து - ஆபரணங்கள் மிகுந்து; மான்மதம் - கஸ்தூரி; படீரம் - சந்தனம்; பங்கயச்செல்வி - இலக்குமி; பச்சைப் பசுங்கொண்டல் - திருமால்; (1)

2. ஆடகமாமலை - மேருமலை (ஆடகம் - பொன்); மூரி - பெருமை; ஆரண கோடியை நேர்பெறக் கோத்தவர் - வேதங்களின் தொகுதியை அழகுபெற அணிந்தவர்; ஆல் + அடி + மாதவர் - ஆல மரத்தின் கீழிருந்த சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் முனிவர்கள்; காதலைத்தீர்த்தவர் - சிவன் தக்ஷிணாமூர்த்தி வடிவமாயிருந்து உபதேசித்தமையைக் குறிக்கிறது; ஆர் அமுது ஊறல் அருமதி - அரிய அமிர்தத்தைச் சுரந்து கொடுக்கின்ற சந்திரன். இவனுடைய அமிர்தத்தைத் தேவர்கள் முதற் பதினைந்துநாள் அருந்துவர்; மதிக்கீற்றவர் - கீற்று மதியவர் என்று பொருள் கொள்க (இலக்கணப் போலி); மூன்றும் பிறைச்சந்திரனை உடையவர் என்று பொருள்; நாடிய பாணி - தேடி வந்தகங்கை நீர்; வேணி - சடை; பகீரதன் தவத்தால் கீழே விழும் கங்கையைச் சிவன் தன் சடையில் தாங்கி ஒரு துளி எடுத்துவிட அது பெருகி ஆறானது; நாவலன் ஏவிய வேலையைப் பார்த்தவர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவையாரிடம் தூது ஏவிய வேலையைச் செய்தவர்; நாயகி - பார்வதி; வேத வியாதன் - வேத வியாச முனிவர்; கோட்டொரு பாரிசம் - தந்தங்களின் ஒரு பக்கத்தால்; தாக்கனை - பலமானவனை; வீடருள் சீலன் - மோட்சத்தைக் கொடுக்கும் ஒழுக்கமுடையவன்; ஓர் முனைக்கோட்டன் - ஒரேமுனையில் தந்தத்தை உடையவன்; வாருதிபோல் மத்தநீர்த்தன் - கடலைப்போல மதசலத்தை உடைய கடவுள்; மூடிக வாகனம் - பெருச்சாளி வாகனம்; (2)

3. கேதகை - தாழை; தோயாதெவையும் தோய்ந்த - எப்பொருள்களிலும் தோயாது காணப்படுகிற; புழைக்கை - துளையையுடையகை; எப்பொருள்களிலும் காணப்படாமல் காணப்படுகின்ற

சிவபெருமான் தரிக்கின்ற இளஞ்சந்திரனைக் கண்டு கடவுளர் தரிக்காத தாழைமலரோ என்று சந்தேகித்து எனது தந்தை இத்தாழை மலரைத் தரிக்குமோ என்று சடைக்காட்டுள் சென்று அறிந்து வரும் யானை முகத்துடைய வேதவிநாயகன் என்க ; புத்தேள் - தேவர் ; எண்ணான்கு தர்மம் - முப்பத்திரண்டு தருமம் ; ஐந்தொழில் - சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன ; (திரோபவம் - மறைத்தல்) ஓயா - தவறாத ; தனுவாதி - உடலோடு கூடிய உயிர்கள் முதலியன ; ஒன்றும் முதல் - சிவபெருமான் ; ஒன்றாகி உறையும் - பாதி பாகத்தைக்கொண்டு தங்கும் ; பச்சைப் பசுங்கொடி - பார்வதி. (3)

4. தவளச்சரோருகம்-வெண்டாமரை ; வாழ்தருமகள்-வாழ்ந்து வருதலையுடைய சரஸ்வதி ; சித்தசன் மனையகம் வாழ்தருமகள் - மன்மதன் வீட்டில் வாழ்ந்து வரும் இரதி தேவி ; இலக்குமிக்குப் பிரமனும், முற்பிறப்பில் மன்மதனுயிருந்த பிருத்யும்னனும் மக்களாகத் தோன்றியதால் அவர்களுடைய மனைவியர் முறையே சரசுவதியும், இரதியும் மருமகளிர் ஆயினர். கண்ணனுக்கும், உருக்குமணிக்கும் பிறந்தவனே பிரத்தியும்னன். ஒரு மகளைப் புனைதுடையிலே யிருத்தி - ஒப்பற்ற மகளான வல்லபையை அழகிய துடையிலே வைத்து ; அசத்து முகத்து மகட்கு உறுதுணையைப் பொருதரு துணை - ஆட்டு முகத்தையுடைய தக்கன்மகளான தாக்ஷாயணிக்குற்ற கணவனான சிவனையும் பேச்சில் போர்செய்து பின்னிடவல்ல முருகன்; துணை மகிழ - சகோதரனான சுப்பிரமணியர் மகிழ ; குறமகள் - வள்ளி ; பொருமகபதி மகள் - போர் செய்யவல்ல தேவேந்திரன்மகள் தெய்வயானை ; மகபதி - இந்திரன் ; அருட்போதனை - அருளைப் போதிப்பவனை. (4)

5. மாமேவு - பெருமை பொருந்திய ; மழை - மேகம் ; வதன படாம் - முகபடாம் ; படாம் - சீலை ; போதகம் - யானை ; இங்கு விநாயகனைக் குறித்தது ; காமேவும் - காத்தல் பொருந்திய ; மதி - புத்தி ; தேமேவும் - தேவர்கள் பொருந்திய ; ஒளியின் - ஒளியைக் காட்டினும் ; செங்கமலத்தவன் - பிரமன் ; வெண்கமலக்கொடி - சரசுவதி. (5)

6. வளமேவு திரைகடல் - வளம் பொருந்திய பாற்கடல் ; ஆலந்தளிர் - ஆலிலை ; மால் - திருமால் ; மழை - மேகம் ; உந்தி - கொப்பூழ் ; மட்டு - தேன் ; மட்டிலே தளமேவு நளினமலர் - பூ இதழ்களில் தேன் பொருந்திய தாமரை மலர் ; அளியூறு கணபதி - மத சலத்திற்காக வண்டுகள் அடைகின்ற கணபதி ; மானம் பெருக்கும் நீள் ஒளியூறு கணபதி - பெருமை அதிகரிக்கும் நீண்ட பிரகாசம் வாய்ந்த கணபதி. (6)

7. உறைதரும் - தங்கும்; மலர் நெடும் பாற்கடல் - விரிந்த நீண்ட பாற்கடல்; மாநிறம் - கருமை நிறம்; ஆகம் - உடல்; வலியொடுங்காக் களிறு - ஐராவதம்; முனை ஒடுங்காப்படை - வச்சிராயுதம்; மாமழை வாகனம் - பெருமை பொருந்திய மேகவாகனம்; வாழ்வு - ஐந்தருவின் வாழ்க்கை; அலர்மணம் தேக்கிய - மலர்களின் வாசனை நிறைந்த; நறுந்தோப்பு - ஐந்தரு நிறைந்த தோப்பு; அமரர்தம் பார்த்திபன் - தேவர்களின் தலைவனான இந்திரன்; பலர்தரும் தோத்திரன் - பலரும் துதிக்கும்படியானவன்; மலைபொருங் காத்திரன் - மலையிடமும் போர்செய்யும்படியான உடலை உடையவன். நார்அணிவார் அணி பொன் ஆகம் - நாரினால் அழகியதாகச் செய்த கச்சினை அணிந்த அழகிய மார்பு; துணைநெடுங் கோட்டுமுலை-இரண்டான நீண்ட யானைத் தந்தங்களைப்போன்ற தனங்கள்; புரக்க - காக்க; தாட்டிகளை அளியொடுங் காப்பவர் - நீக்குதற்கரிய அகந்தைகளைக் களைந்து அன்போடு பாது காப்பவர்; தாட்டிகம் என்பது தாட்டி என்று நின்றது. களை காப்பவர் எனக்கூட்டி வினைத்தொகையாக்குக. (7)

8. கோகனக வாசமலர் மனையிற் செழித்தவள் - தாமரை மலராகிய வீட்டில் உள்ளவளான, அபிராமி; கோலமகமேருகிரி வளையப் பிடித்தவள், மகேஸ்வரி; கோரமுள சூரர்முடி சிதறத் துணித்தவள் - கோரமுள்ள சூரன் தலையைச் சிதறும்படி வெட்டியவள், கௌமாரி; கோதிலொளி தாவுமுரு மணியைத் தரித்தவள் - குற்றமற்ற ஒளிகள் தாவும் நிறமமைந்த கௌஸ்துபமணியைத் தரித்தவள், நாராயணி; ஆகவலி - உடல்வலி; புவியைப் பெயர்த்தவள் - வராகி; ஆடல்புரி மாமலைகள் அமரப்பணித்தவள் - சிறகுகளுடன் பறந்துகொண்டிருந்த மலைகளை ஒரே இடத்தில் இருக்கச் செய்தவள், இந்திராணி; ஆகாயமீதில் விதி கலையைப் பறித்தவள் - ஆகாயத்தில் விதிக்கப்பட்டு உலவுகின்ற சந்திரனைப் பறித்து அணிந்தவள், காளி; வாகு - வாகுவலயம்; அரவப்புயத்தோன் - பாம்புகளையுடைய புயத்தை உடையவன்; மாசு - குற்றம்; நூபுரம் - காற்சிலம்பு; இதழி - கொன்றை; ஏகமயில் - ஒற்றைமயில்; விக்கிரமத்தன் - பராக்கிராமத்தை உடையவன்; ஏதம் - குற்றம்; (ஈண்டு கணவரது செயல்கள் மனைவிகட்கும் கூறப்பட்டன). (8)

9. கணையைந்து - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம் ஆகிய ஐந்து பூக்களாகிய அம்புகள்; கரிதாக - கருகிப்போமாறு; மாரன் - மன்மதன்; கையின் மலர், பாதமலர் - உருவகம்; கன்னி - உமாதேவி; சிவனை உமாதேவியின்மேல் விருப்பங்கொள்ளச் செய்து தவத்தைக் கெடுப்பதற்கு மாரன் ஐங்கணைகளை யெய்ய, சிவன் நெற்றிக் கண்ணைக் காட்டவும் மன்மதன் எரிந்தான், அப்போது அக்கணை

எங்கும் அணுகாது உள்ள கன்னி என்க; துணைவெங் கருங்கோட்டு மயிடம் - இரண்டு கொடிய கரிய கொம்புகளை உடைய எருமை முக முள்ள அசுரன்; ஆதிசுந்தரி - துர்க்கை; அணைகொண்ட நதி - கங்கா நதி; வான்மதி - உயர்ந்த சந்திரன்; வாளரவு - ஒளிவாய்ந்த பட முடைய பாம்பு; அணியத்தர் - அணிந்துள்ள சிவபெருமான்; வதனத்து அணியும் அதி நதி என்க; மதசலத்தைக் குறித்தது; அதிநதி - கங்கையையும் குறிக்கும்; வெண்கோட்டிளம் பிறை - வெண் மையான தந்தம்போன்ற இளம்பிறைச் சந்திரன்; நல்லரவம் - பாம்பு; திணை செந்தமிழ் - ஐந்து நிலங்களைக்கொண்ட செந்தமிழ்ப்பாட்டுகள்; சீத கணபதி - வாசனைநீரினால் அபிஷேகிக்கப்படும் கணபதி, சிவபெரு மானையொத்து விநாயகனும் பிறைச்சந்திரன், கங்கை, பாம்பு முதலியன அணிந்திருத்தல் திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் வடிவத்தில் காணலாம். (9)

10. வேதை - வேதனை அல்லது துன்பம்; பிணி - நோய்; வேளின் இடர் - மன்மதனால் வரும் காமத் துன்பம்; கொடியதொரு நாளின் இடர் - கொடிய நாட்களினால் வரும் துன்பம்; அடறவரு கோளின் இடர் - துன்புறுத்த வருகின்ற கிரகங்களின் துன்பம்; பக் கிட்டு - திடுக்கிட்டு; இருவினை - நல்வினை, தீவினை, இவையிரண்டுமே பிறப்பைக் கொடுக்குமாதலால் "ஏதமுறு" என்றார்; வாதம் இரு பரசமயம் - தர்க்கத்திற்குப் பொருந்திய இரண்டு பிற மதங்கள்; சிவ சமயம் - சிவமதம்; வைப்பு - பொக்கிஷம்; தட விகடன் - மிகவும் சாமர்த் தியன்; கெசமுகன் - யானைமுகன்; வனப்பு - அழகு; ஆறிருவர் - பன் னிரண்டு பேராகிய சூரியர்கள்; பதினொருவர் - பதினொரு உருத்திரர் கள்; நாலிருவர் - எட்டு வசுக்கள்; இருவர் - இரண்டு மருத்துவர்கள்; இவர்கள் வகைக்கு ஒவ்வொரு கோடியாக முப்பத்து மூன்று கோடி தேவர்களாவார்கள். (10)

11. புரையிருள் - மிகுந்த இருள்; படலம் - தொகுதி; பருதி - சூரியன்; வளர்கதி பரப்பும் முழுமணி - மிக்க கிரணங்களைப் பரப்பு கின்ற முத்துக்கள்; வாருதி - கடல்; சூரியனை யொத்து ஒளிவீசும் முத்துக்களையுடைய கடல் என்க; மன்பதை வாருதி நீராடுவான் அண்டரிய வன்புலத்தேழு சிறுகற் கொண்டு அலங்கும் ஒலி வெண் திரையின் வாய் அங்கை தனிலே கொண்டு அளிக்கும் ஆங்கு அதனைக் கடுக்கு மன்றோ - உலகத்துயிர்கள் கடல் நீரில்மூழ்க, அடைதற்கரிய வலிய குறிஞ்சி யிடத்திலேயுள்ள ஏழு சிறிய கற்களைச் சப்திக்கும் ஒலி கொண்ட வெள்ளிய அலையிடம் கையில் கொண்டுவந்து கொடுக்கும் அதனை ஒத்திருக்குமல்லவா; பல கலைகளும் படித்த மேலோர்களின்

கவியைக் கொண்டிடும் கணபதி என் புன்கவியையும் கொள்வது மக்கள், முத்துக்கள் பல உள்ள கடலில் மூழ்க ஏழு சிறிய கற்களைக் கடலில் போட்டு நீராடுவதை ஒத்திருக்கும்; பண்டைமறை ஒரு நாலு - ஒப்பற்ற பழைய வேதங்கள் நான்கு; ஆறு நூல் - ஆறுவேத அங்கங்கள்; பனுவல் நாலேழு - இருபத்தெட்டு ஆகமங்கள்; எண்ணென் பல கலைக்கியானம் - அறுபத்து நான்கு வகைகளின் கலைகளின் அறிவு; படித்து அடி வழுத்த - படித்துப் பாதத்தைத் துதிக்குமாறு; வடசொல் - சமஸ்கிருதம்; தென்சொல் - தமிழ்; செஞ்சொல் - செம்மை வாய்ந்த சொல்; கடலில் நீராடுவோர் ஏதாவது கடலில் போட்டே நீராடுவர். கடல் விநாயகருக்கும், முத்து முதலிய மணிகள் மேலோர் சொற்கட்கும் குறிஞ்சி நிலக்கற்கள் ஆசிரியர் சொற்கட்கும் உவமை. (11)

---

## செங்கீரைப்பருவம்.

---

12. துகில்கொண்டு நீவி - வஸ்திரங்கொண்டு துடைத்து; வண்காப்புமிட்டு - வளமை பொருந்திய நிலத்தின் மண் குழைத்திட்டு. ஆரம் - முத்துமாலை, பகல் - சூரியன், ஆகுபெயர்; நாணரை - இலக்கணப்போலி, அரை நாண் என்க; பதநூபுரம் - காலில் சிலம்பு; வரித்து - கட்டி; இதமுறு - இன்பமுற்று; கும்பப் படாமுலை - குடம் போன்ற பட்டுடையணிந்த தனம்; தரளம் - முத்து; காவி - நீலோற்பலமலர்; விழிக்காவி - உருவகம். (1)

13. பூவை அயிராணி - பெண்ணாகிய இந்திராணி; கேள்வன் - கணவன், இங்கு இந்திரனைக்குறித்தது; வீணைப்புண்ணியன் - நாரதர்; பொதியன் - அகத்தியன்; கடம் - குடம்; காகம் கவிழ்ந்தாடும் நதி - காவேரி; காழி - சீர்காழி; மூவகைத்தமிழ் ஆட - மூன்றுவகைத் தமிழையும் அறிந்த அகத்திய முனிவன் ஓடிவர; முன்கு ஆக்கை - முன்னிருந்த உடல்; நகையாட்டி - சிரித்தலைச் செய்து; சீர்காழியில் சூரபதுமனுக்குப் பயந்து, இந்திரன் மூங்கிலில் ஒளித்திருந்து, சிவபூசை செய்ய நந்தவனம் வைத்து, அது உலர்ந்ததனால் அதைச் செழிப்பிக்க, அகத்தியரிடம் காவிரி இருப்பதை நாரதரால் உணர்ந்து, விநாயகரை வேண்ட அவர் குடத்திலிருந்த காவிரியைக் காக உருக்கொண்டு கவிழ்த்துப் பின் சிறுவனாகி ஓடவும் அவரைத் துரத்திக்கொண்டு அகத்தியர் ஓடிக் குட்ட தன்னுடைய சுய உரு காட்டவும் தானே குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போட்டார். இங்கு "ஆட" என்ற சொல் பல பொருள்களில் வந்துள்ளதைக் காண்க. (2)

14. குன்றுடு திசையானை - குன்றையொத்த திக்கு யானைகள்; கவுள் - மதச்சுவடு; குழிகள் மேடாட - குழிகள் மேடாகவும்; குளிராழி - குளிர்ந்த சமுத்திரம்; கன்றுடுகை யன்னை - மிகக் கோபங்கொண்ட பார்வதி; இளையாளை உன்னி - இளையவளான கங்கை நதி ஆடுவதை நினைத்து; உடன் உதித்தோன் - கூடப்பிறந்தவனாகிய முருகன்; விண்ணரமகளிர் - ஆகாயத்திலிருக்கும் தேவ மகளிர்; மகவான் - இந்திரன்; செருக்காட - கர்வத்தினால் மகிழ; ஆயிரம் முடிச் சேடன் - ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடன்; துகள் - புழுதி; வால் எடுத்து அவுணர் ஏக்கமாட - பயத்தினால் முகம் வெளுத்து அசுரர்கள் துன்பப்பட; மூடிகம் - பெருச்சாளி. (3)

15. நாதத் தலத்திலெழு பறையினொடு பைசந்தி நல்லமத்திமை வைகரி நாலெழுத்துக்கும் - நாதமாகிய அறிவிடத்தில் எழுந்த பொருளாகிய சூக்குமையோடு பைசந்தி, நல்ல மத்திமை, வைகரி என்ற நான்கு வாக்குகட்கும்; வெகுநூல் எழுத்து - அதிகமான புத்தகங்களிலுள்ள எழுத்துக்கள்; முது நான்மறை எழுத்து - பழைய நான்கு வேதங்களின் எழுத்து; கோதற்ற வடமொழியோடு ஒன்பதிற்றிருவகைக் குறியெழுத்துக்கும் - குற்றமற்ற சமஸ்கிருதத்தோடு பதினெட்டு வகை நிலத்தில் வழங்கும் அடையாள எழுத்துக்கும்; அப்பால் - மேற்பட்ட; எழுத்தாளி - எழுத்தையாள்பவன்; மேலாம் போதம் - மேலான ஞானம்; புந்தி - புத்தி (மனம்); நண்ணரிய - அடைதற்கரிய; தீதற்ற இசை - குற்றமற்ற புகழ்; பரம்பொருள் - மேலான பொருள்; **நாதத்தலத்திலெழு பறை:**—சூக்குமையெனும் வாக்கு நாபியை இடமாகக்கொண்டு நாதமாகிய அறிவுதானே வடிவாக வரும். **பைசந்தி:**—இதற்குத்தானம் உந்தியும், வடிவு பிராணவாயுவுமாம். இது அக்ஷரசுவரூபம் தோன்றுதபடி நினைவு மாத்திரமாய் நிற்கும். **மத்திமை:**—இது நெஞ்சையும் கண்டத்தையும் இடமாகக் கொண்டு அக்ஷர சுவரூபத்தை யொழுங்குபட நிறுத்திச் செவிக்குக் கேளாமல் உள்ளறிவுமாய் நிற்கும். **வைகரி:**—இதனிடம் நாக்கினடியாம். இது செவிப் புலனாம்படி வசனிக்கும். **ஒன்பதிற்றிருவகை நிலம்:**—தமிழும் அதனோடு சேர்ந்த பதினேழு நிலமும்; **பதினேழ் நிலமாவன;** "சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுக்குடகம், கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலிங்கம் கலிங்கம் வங்கம், கங்க மகதம் கடாரம் கவுடம் கடுங்குசலம், தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்நிலந் தாமிவையே" என்ற செய்யுளிற்காண்க. விநாயகன் ஓங்கார வடிவமாயுள்ளதன் விவரிப்பை அம்புலிப்பருவம் 8-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. (4)

16. தேசிகர் - குரு; தாரணி - பூமி; வழுத்தும் - துதிக்கும்; கௌவை - ஒலி; கால் பெயர்த்திடுதல் - நீங்குதல்; நீலமணி கொண்ட மைக்கண்டன் - சிவபெருமான்; மைவைத்த வரையென்ன ஓரானையென - கருமை பொருந்திய மலைபோன்று ஒப்பற்ற யானையாக வந்து; வாரணம் - யானை; தெய்வத்தமிழ் - தேவாரத்தைக் குறித்தது; சைவ மதத்தின் குரவரான பூமியிலுள்ளார் துதிக்கும் ஞானசம்பந்தர், சுந்தரர், நாவரசர் ஆகிய மூவரும் திருக்கடவூரை மிதிப்பதற்குப் பயந்து ஒலியுள்ள வேகமிக்க நீருடைய காவேரி நதி சுற்றிய அவ்வூரையடையாமல் நீங்கும்போது சிவபெருமான் அருள் பெற்று வலிமிக்க கரிய மலை போன்ற யானையென வந்து அவர்களைக் கோயில் வழியே யொதுக்கிக் கொண்டுவந்து அவர்கள் கோயிலின் அருகில் வரவும் யானை கோயிலுட் புகுந்து மறைந்ததைக் கண்டு ஒப்பற்ற வஞ்சகமுடைய யானை என்று புகழ்ந்த தேவாரப் பாட்டைக் கொள்ளும் அரும்பாத்தைப்புரி முதல்வா என்று பொருள் கொள்க. இதனைத் தேவாரத்தில்,

"வெள்ளி மால்வரை போல்வதோ ரானையார்
உள்ள வாறெனை யுள்புகு மானையார்
கொள்ள மாகிய கோயிலு ளானையார்
கள்ள வானை கண்டீர் கடவூரரே"

என்று நாவரசர் பாடியதில் காண்க. அப்பர் - திருநாவுக்கரசர்; கவ்வை - ஒலி; கடவூர் - திருக்கடையூர்; மைக்கண்டன் - சிவபெருமான்; வலிசால் - வலிமிக்க; ஆனை - மரூஉ மொழி; கள்ள வாரணம் - மாறுருவம் கொண்ட யானை. (5)

17. நகைச்சிறு துவரொளி - சிரித்தலின் செவ்வொளி; தனிமணிவடம் - ஒப்பற்ற முத்துமாலை; குழையாடிய செவி - குண்டலங்கள் ஆடப்பெற்ற காது; சிவனது இரண்டு விழிகளான சூரிய சந்திரர்கள் விநாயகனைக் காணுவதற்குப் பரத்தலைச் செய்ய அத்தகைய பொன்மயமான உடல் ஆடிட செங்கீரையாடுக என முடிக்க; மனோகரன் - அழகை உடையவன். (6)

18. இமையோர்கள் - தேவர்கள்; அயன்அரி - பிரமனும் திருமாலும்; அலரிட்டு - மலரிட்டு வணங்கி; தோப்புக்கண்டம் - இக்காலத்தில் தோப்புக்கரணம் என வழங்குகிறது; கன்னியராடுகிறார் - பெண்கள் நடனமாடுகிறார்; கந்தருவப்புலவோர் - இசைப்பாட்டை உடைய அறிஞர்; பந்தி - வரிசை; கடைத்தலை - வாயிற்படி; துவாரபாலகர் - வாயில் காப்பவர்கள்; (7)

**19.** மாவடு நேர்விழி-மாங்காயைப்பிளந்தால் அதில் ஒருபாதியை ஒத்தவிழி; வார்கடல் - நீண்டகடல்; மூவேழுபேர் - முதல் ஏழு வள்ளல்கள், இடை ஏழு வள்ளல்கள், கடை ஏழு வள்ளல்கள்; தியாகம் - கொடை; வசந்தன் - மன்மதனுக்கு ஒருபெயர்; சிகாமணி - ஒருவகை ரத்தினம்; ஈரடி - இரண்டு பாதங்கள்; சீதம் - குளிர்ச்சி; இப்பாட்டு

"போற்றியே போற்றியே என்று புதுச்செல்வம்
தோற்றியார் கண்ணெல்லாம் தொண்டேபோல் - ஆற்றிப்
பயிற்றிப் பயிற்றிப் பலவுரைப்ப தெல்லாம்
வயிற்றுப் பெருமான் பொருட்டு."

என்ற பாட்டை நினைவுபடுத்துகிறது. (8)

**20.** ஆர்கடல் - சப்திக்கின்ற பாற்கடல்; நாகணை - ஆதிசேடனாகிய படுக்கை; உறங்காநின்றோன் - உறங்குகின்ற திருமால்; ஆடு அளி - பூவினின்று பூவுக்குச் செல்லும் வண்டுகள்; ஏடு - புறவிதழ்; தாமரை கொண்டாள்கின்றோன் - பிரமன்; ஏர்கொள் - அழகு மிகுந்த; இருந்தாளுங்கோன் - இந்திரன்; சபாபதி - சபையின் தலைவன்; வாழ்வினும் - வாழ்வைக்காட்டிலும்; மே த கு - மேன்மை பொருந்திய; அருள் எந்தாய் - வினைத்தொகை; அருளுகின்ற எனது தந்தையே என்று பொருள். எம் + தந்தை = எந்தை - மரூஉ மொழி; சந்தாரும் - சந்தனம் பூசிய; வார்கெழு - கச்சுப்பொருந்திய; உமையவள் புணர்கின்றோன் - சிவன்; உலாவரும் - உலவிவரும்; நந்தாத சீர் - கெடாத புகழ். (9)

**21.** மாறு அடு - பகையைக் கொல்லுகின்ற; இணை - இரண்டு; மாதிரம் - திக்கு; மகாதொனி - மிக்க சப்தம்; மே க ப த ம் - மேக மண்டலம்; விண்டோட - பலபிரிவுகளாகச் சிதற; மின் போல் - மின்னல் போன்று; ஏ தி லர் வே தை - பகைவரால் ஏற்படும் துன்பம்; அகோர மதாசல - கொடுமையுள்ள மதசலத்தை உடையவனே; முரண் தோள் - வலிமிக்கதோள்; ஊறு ஒலிசூழ் அடவான் நல்வேணி யலங்காரம் - மிக்க ஒலி சூழ்ந்திருக்கின்ற ஓடும் கங்கையை யணிந்த அழகிய சடை யலங்காரம்; வான் - என்றது மழையைக் காட்டும் சொல்லாகலின் இங்குக் கங்கையைக் காட்டிற்று. விநாயகர் கங்கையை யணிதலின் இவ்வணம் கூறினர். ஓடு மகாசல நாம கணேசன் - ஓடுகின்ற மதசலத்தை யுடைய புகழ்வாய்ந்த கணபதி; முரண் + தோள் - வலிமிக்க தோள்; கணபதி சந்திரனை அணிதலின் "சீத நிலாவணி" யென்றார். (10)

# தாலப்பருவம்

22. பளிக்கு மணிமேனி - கண்ணாடிபோல் அழகிய உடல்; பவளக்கொடி யன்னவர் - பவளக்கொடியை யொத்த பெண்கள்; வரி யளி - வரிகளோடு கூடிய வண்டு; ஊடி - பிணங்கி; பெடையளி - பெண் வண்டு; ஒளிக்கும் - மறையும்; இந்து - பச்சைக்கற்பூரம்; பண்டு - பழைய; மிக்க அழகையுடைய பெண்களது கூந்தலில் பாடிய ஆண் வண்டோடு பிணங்கிப்பறந்த பெண் வண்டு மலரையுடைய அவ்வனத் தில் மறைந்துகொள்ளும். அங்கு வந்து விளையாடுகின்ற பெண்கள் ஓங்கி யடித்ததால் மகரந்தங்கள் தாக்க, வாசனையுடைய தேனை வெளி விட்டு வாசனை வீசும் அக்கொம்பு அசைவதால் மயங்கி வெருண்டு அந்தப் பெண் வண்டுகள் முன்பிருந்த ஆண் வண்டுகளைச் சேர்ந்து சுக மளிக்கும் அரும்பாத்தைப் பதி என்க. நறைத்தேன் உமிழ்ந்து பரிமளிக்கும் என்று பிரிக்க. (1)

23. சுறவு - சுறுமீன்; மூரி - பெரிய; புணை - தெப்பம்; நீளும் பரவைத் தடங்காதில் நெடுங்கால் ஈட்டி - நீண்ட சமுத்திரம் போன்ற விசாலமான செவியில் நீண்டகாலமாக அம்மந்திரத்தை ஒலித்தலால் சேர்த்து; நலியும் - வருத்தும்; பிறவிக்கடல், மோகச்சுறவு, துக்க சுகங்களெனும் வலை முதலியன உருவகங்கள். (2)

24. தனி வெள்ளேறு உடையன் - ஒப்பற்ற வெண்மையான இட பத்தை வாகனமாக உடையவன் (சிவபெருமான்); எயில் மூன்று அடு நாள் - திரிபுரங்களை அழிக்கும் நாளில்; சகடு - தேர்ச்சக்கரம்; ஈரா றுகி - பன்னிரண்டு சுக்கலாகி; பிறிதொன்று - மற்றொரு தேர்ச்சக்க ரம்; ஈரெட்டாகி - பதினாறு சுக்கலாகி; கணை - அம்பு; நாண் - வில் நாண்; சிலை - வில்; துரங்கம் - குதிரை; சிவமூர்த்தி திரிபுரம் எரிக்கத் தொடங்கிய காலத்தில் விநாயகரைத் துதிக்காததால் அச்சு, சக்கரங்கள் முதலியன அழிவுற்ற தெனவும் பூசித்த பிறகு இரதம் செம்மையுற்று நின்றதெனவும் புராணங்கள் கூறுகின்றன. தரியார் - பகைவர்; அங் ஙனம் அச்சு முறிந்தவிடம் அச்சிறுபாக்கம் என வழங்கப்படுகிறது (செங்கற்பட்டு மாவட்டம்.) (3)

25. களபப்பனிச்செப்பு - கலவைச் சாந்தோடு கூடிய குளிர்ந்த குடம்; பதுமமுகை - தாமரை அரும்பு; களியானை - மதயானை; பணைத்து - பருத்து; மருப்பு - தந்தம்; நித்திலம் - முத்துமாலை; சந்

தம் - சந்தனம்; முகிழ் முலையார் - அரும்புபோன்ற முலையுடையவர்; மேனிலை - மேல் மாடம்; தண்ணங்கதிர்சேர் வெண்மதி - குளிர்ந்த அழகிய கிரணங்கள் சேர்ந்த வெண்மையான சந்திரன்; மறு - களங்கம்; கொழுநர் - கணவர்; தேனிறால் - தேன்கூடு; மைந்தர் - வீரமிக்க கணவர்; அந்தி - மாலைக்காலம்; பந்தும் குடமும் தாமரைஅரும்பும் யானையின் தந்தமும் எதிரிட்டுப் புறங்கொடுத்தோட அவ்வளவு பருத்து முத்துமாலை யணிந்து சந்தன வாசனைவீசும் தனத்தையுடைய பெண்கள் நடனமாடும் மேல்மாடத்தின்மீது சந்திரன் பிரகாசிக்க அவனுடைய களங்கத்தை யறியாமல் தங்களை வந்து தழுவும் கணவர்களின் பாதம் வணங்கி சந்திரனைப்பார்த்து, "இதோ தேன்கூடு ஒன்றிருக்கிறது; இதை எடுத்துப் பிழிந்து வடித்துக் கொடுங்கள்" என்று வணங்கவும் கணவர்கள் மகிழ்ச்சி மிகுந்து அங்ஙனம் எடுக்க ஆடுகின்ற அந்திக் காலத்தையுடைய அரும்பாத்தைப் பதி என்க. (4)

26. காலன் - எமன்; காமன் - மன்மதன்; கடிந்த - வென்று ஓட்டிய; மயல் - மயக்கம்; மணிப்பணிகள் - முத்தாபரணங்கள்; ஆழி - சக்கரம்; பொதும்பர் - சோலை; முழவு - குடமுழா; கயல்மீன், அம்பு, கடலில் தோன்றிய ஆலகால விஷம், எமனுடைய வேல், கருவிளை மலர், மன்மதனது அம்புகள் ஆகியவற்றை வென்று ஓட்டிய காதுவரை நீண்ட கண்களையுடைய பெண்கள் ஆசை மயக்கத்தில் கணவன் செய்த பிழைக்காக அவர்களிடமிருந்து பிடுங்கியெறிந்த முத்தாபரணங்கள் சிறு பிள்ளைகள் சிறிய தேரைத் தள்ளிச்செல்ல அதனுடைய சக்கரம் செல்லும் வழியைத் தடுக்கவும் மேல்மாடத்தில் மேக வெளிக்குமப்பால் கொடிக்கூட்டங்கள் சென்று சூரியனது தேர்ச்சக்கரத்தின் வழியைத் தடுக்கவும் அழகிய வீதிகளில் குடமுழாவென்ற வாத்தியத்தின் ஒலிக்கு, சோலை தோறும் மயில்களிக்கவும் உள்ள அரும்பாத்தைப் பதிஎன்க. (5)

27. வீழி - திருவீழிமிழலை; மேருவரைச்சிலையான் - மேருமலையை வில்லாக உடைய சிவபெருமான்; வீறு - பெருமை; சுடராழி; பிரகாசம் மிகுந்த சக்கரம்; பாழியுடை - அகன்ற; பாணி - கை; மூரல் - புன்சிரிப்பு; மகாபலி - மிகுந்த பலத்தையுடையவன்; தாழி - சால்; தாதை - தந்தை; திருவீழிமிழலையில் திருமால் தாமரை கொண்டு சிவபெருமானைப் பூசிக்கையில் அம்மலரில் ஒன்றைக் குறைக்கத், தமது கண்ணைப் பிடுங்கி அர்ச்சித்ததால் களிப்படைந்து தாமரைக் கண்ணனென்ற பெயரையும் சக்கரத்தையும் கொடுத்தார். இச்சக்கரத்தைப் பெற்று மீளுகையில் அதனைப் பூமியிலிட்டு வணங்கினர். அதனை விநாயகர் கௌவிக்கொள்ள விஷ்ணு பிரார்த்திக்க சிவமூர்த்தி அவரைக் களிப்புறச் செய்து பெறுக என்றபடியால் அவர்முன் கோணங்கிக் கூத்தாடி அவர் சிரிக்க விழுந்த சக்கரத்தைப் பெற்றார். குறியா - செய்யா

என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத்திரிந்தது; மாயன் - திருமால்; மற்றும் இக்கதை கீழ்க்கண்டவாறும் கூறப்படுகிறது:—வீர பத்திரர் தக்கனைத் தலைநீங்கத் தாக்கிய காலத்துத் திருமால் எறிந்த சக்கிராயுதத்தை அவர் அணிந்த சிரமாலையில் ஒன்று கவ்வியது. அதைப் பெறும்படி திருமால் கொங்கணிக் கூத்தாடினர். இதைக்கண்டு நகைத்த சிரத்தின் வாயினின்று சக்கரம் விழக்கண்ட விநாயகர், அதனை எடுத்துக் கொண்டு அக்கூத்தைத் தம்முன்னும் ஆடப்பணித்துக் களிப்படைந்து **சக்கரம்** தந்தனர். இவ்வகை, சக்கரத்தின் பொருட்டு விகடம் செய்ததால் விகடச்சக்கர விநாயகர் எனப்பெயர் பெற்றுர் (காஞ்சிப்புராணம்). (6)

28. கருங்குழல்வல்லி - கரிய கூந்தலையுடைய கொடிபோன்ற தமயந்தி; வலாரி - இந்திரன்; திருநள்ளாறு - இது சோழநாட்டில் காவிரியின் தென் கரையிலுள்ள ஓர் தலம். பெருமான் பெயர் தர்ப்பாரண்யேச்சுவரர், தேவி பெயர் போகமார்த்த பூண்முலையம்மை. இங்கு நளன் தன் கலி நீங்குவதற்காகப் பூசித்தான். இப்பொழுது இது ஒரு இரயில்வே நிலையமாக இருக்கிறது. காரைக்காலிலிருந்து மூன்றுமைல்; கொடுங்கலி - கொடுமைமிகுந்த சனிபகவான்; கந்தம் - வாசனை; காசினி - பூமி; திரு - செல்வம். (7)

29. அண்டிய தம்பி நெடும்பெயர் - சுப்பிரமணியர்; துணையாகிய நின்பெயர் - கணபதி; மூதறிவு - மிகுந்த அறிவு; தேசிகர் - குரு; இருமுது குரவர்கள் - தாய்தந்தையர்; இப்பாட்டு இந்நூலாசிரியரைப் பற்றியதாகத்தெரிகிறது. இவருக்கு இரண்டு பிள்ளைகள் உண்டு என்றும் அவர்களின் பெயர் கணபதி, சுப்பிரமணியன் என்றும் (அல்லது அதற்கேற்ற பெயராகவும் இருக்கலாம்) அவர்களை விநாயகரே வளர்த்தனர் என்றும் கணபதியே குருவாக வந்தார் என்றும் நெஞ்சில் நினைத்தவைகளைக் கொடுத்தார் என்றும் ஐம்பெருங்குரவர்களாய் உள்ளார் என்றும் தெரிகிறது. (8)

30. போரேறே-போரில் ஆண்சிங்கத்தை ஒத்தவனே; மாகாயா-சிறந்த காயாம்பூ நிறத்தையொத்தவனே. பசாசம் - பேய்; ஆகாரா - யானை யடையாளத்தை யுடையவனே; ஆகாரம்-அடையாளம்; வாணர்-வாழ்நர் என்பதன் மருவு; தாது - மகரந்தம்; மீதலம் - வானுலகம். மூனோர் - தொகுத்தல் விகாரம். (9)

31. அம்மனை - தாய்; குலுங்குசிலம்பு - வினைத்தொகை; இரைய-சப்திக்க; தொத்து - சார்ந்த; தொங்கல் - மாலை; கைத்துணை - இரண்டு கைகள்; தத்தடி இட்டு - தத்தி, தத்திக்காலடி வைத்து; பண்டி - வயிறு. (10)

---

# சப்பாணிப் பருவம்

---

32. கொத்துவிரி - தொகுதியாக விரிந்த; உரகம் - ஆதிசேடனாகிய பாம்பு; குட்டம் அளறு இட்டு - சிறியதாகி சேறுபடிந்து; குடுமி - சிகரம்; மூதண்டகூடம் - பழைய உலகத்தின் வீடுகள்; இங்கு வீடுகள் ஆகுபெயராய் அங்குள்ள மக்களை உணர்த்தியது; துத்திமுடி - பொறிகளை உடைய தலைகள்; அரவமோரெட்டு - எட்டுத்திக்கு நாகங்கள், இவைகள் பூமியைத் தாங்குவன; முடக்கெயிற்றுச்சூரன் - வளைந்த பற்களையுடைய அசுரன் (சூரபத்மன்) அண்டப்பித்தி பொதிர் எறிய - ஆகாயமாகிய சுவர் நடுக்கங்கொண்டு நட்சத்திரங்களை வீச; நிருதப் படை - இராக்கதப் படைகள்; உயிர்க்கொட்டி நிற்ப - அவர்களுடைய உயிர் நடுக்கத்தால் பறையடித்ததுபோல அடிக்க; கலாபம் - தோகை; பிரசண்டம் - வலிமை; சத்திதரன் - வேலைக் கையிலே உடையவன் (முருகன்); இதில் முருகனைச் சிறப்பித்து அவற்கு "முன் வரும் அரும்பாத்தைப் புரிமுதல்வ" எனக் கூறப்பட்டது காண்க. (1)

33. பனிகொண்ட திங்கள் - குளிர்ச்சியையுடைய சந்திரன்; கண்ணி - தலைக்கணியும் மாலை; திங்களங்கண்ணி - உம்மைத்தொகை; பவளவேணியன்-பவளம்போன்ற சிவந்த சடையைஉடையவன் (சிவன்); பரிசுளோர் - தன்மையுள்ளோர்; கனி - மாங்கனி; உன்னையல்லால் .........எந்தையே முந்தினேன்—உன்னையல்லால் வேறு உலகு ஏது வேறு உயிர் ஏது என்று கூறிச் சுற்றிச் சிவனாகிய எனது தந்தையே முந்திக்கொண்டேன் எனப்பொருள் கொள்க; "ஆல்" அசைநிலை; கடவுள் மாங்கனி - தெய்வத்தன்மையுடைய மாம்பழம்; ஒரு சமயம் கைலாயத்திற்கு நாரதர் தெய்வத்தன்மையுடைய மாம்பழத்தோடுவந்து சிவனிடம் தர அவர் தன் இருபிள்ளைகளையும் பார்த்து யார் இந்தப்பகற் பொழுதிற்குள் உலகைச் சுற்றி வருகிறார்களோ அவர்களே பெறலாம் என முருகன் மயில்வாகன மேறிச்செல்ல, அவர் வருவதற்குள் விநாயகர் தம் தாய்தந்தையரைச் சுற்றி "நீவிரே எல்லாவுலகும் எல்லா உயிர்களும்" என்றுகூறி மாம்பழத்தை வாங்கி வாயில் வைத்தார். வந்த முருகர் கோபித்துப் பழனி மலைக்குச் சென்றுவிட்டார். பின் தாய்தந்தையர் சென்று "பழம் நீ" என்றுகூறிச் சமாதானஞ் செய்தனர். (2)

34. மாதவர் - முனிவர்; வியாதமுனி - வேத வியாசர்; ஐந்தாம் மறை - ஐந்தாம் வேதமாகிய பாரதம்; அறிவான் - வினையெச்சம்; ஆடகச்சிகரம்-பொற்சிகரம்; தேமருவும்-தெய்வத்தன்மை பொருந்தும்;

மைதீர் எழுத்து - குற்றம் நீங்கிய எழுத்து ; தவராசர் - முனிவர்கள் ; வேதவியாசர் பாரதத்தை வடமொழியில் கூற விநாயகன் தன்தந்த மொன்றால் மேருமலையில் எழுதினார். கவித்தொகை இலக்கத்துக்கு மேலும் இருபத்தையாயிரத்தினையும் — கவித்தொகை இலட்சத்து இருபத்தைந்தாயிரத்தையும் ; வியாசபாரதம் 1,25,000 - சுலோகங் களாகும். (3)

35. தரங்கம் - அலை; கரா - முதலை; துடியடி - துடிக்கின்ற பாதம், வினைத்தொகை ; கடாக்களிறு - மதத்தையுடைய ஆண் யானை (கஜேந் திரன்) ; கா - காத்தலைச்செய் (ஏவல் வினை) ; கமலை - இலக்குமி ; கட்செவிக் கடவுள் - பாம்புகளின் தலைவன், (ஆதிசேடன்) ; பொருங் கருடத்துரங்கம் - போர் செய்யவல்ல கருடவாகனம் ; சுபம் - நன்மை ; இந்திரத்துய்மன் என்னும் அரசன் சாபத்தால் யானையாகி அவ்வியானை முதலையால் இழுக்கப்பட கடைசியில் 'ஆதிமூலமே' என்று கூவி முறையிட்டது. அது கேட்ட திருமால் கருடன்மீதேறி வந்து முதலை யைக் கொன்று காப்பாற்றினார். மருகன் - மருமகன் ; திருமாலி னுடைய பெண்களான மோதை, பிரமோதை, சுமதை, சுந்தரி முதலி யவரை விநாயகர் மணந்ததால் மருமகன் என்று கூறப்பட்டார். (4)

36. நால்வகைப் பிறப்பு - கருப்பையில் தோன்றுவது, முட்டை யில் தோன்றுவது, விதை, வேர் முதலியவைகளை மேற்பிளந்து தோன் றுவது, வேர்வையிற்றோன்றுவது என்பன. ஏழுவகைத் தோற்றம் - தேவர், மனிதர், நீர்வாழ்வன, விலங்கு, ஊர்வன, பறவை, தாவரம் ; தண்டாமை - நீங்காமை ; எண்பத்து நாலிலக்கம் யோனி - எண்பத்தி ஞன்கு லக்ஷம் யோனி பேதங்கள் ; தனு - உடல் ; கரணம் - இந்திரியம் ; பாதுகாத்திட உதவ வெளவகை செலுத்தி - பாதுகாத்திடவுதவுதற் காக அவைகளை நீங்குமாறு செலுத்தி ; மூவினை - சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்பவைகளால் வரும் கர்மம் ; தண் + தாமம் - தண் டாமம் ; தாமம் - மார்பிலணியும் மாலை ; மூவினை, (1) தெய்வத்தால் வரு வது, மழை, இடிபோன்றன, (2) தன்னால் வருவது, நோய்கள் முதலி யன, (3) பிறவுயிர்களால் வருவன, விலங்கு முதலியவற்றால் நேருந் துன்பம் ; இங்ஙனமாகவும் கூறலாம். (5)

37. நந்து அணிமால் - சங்கைத் தரிக்கின்ற திருமால் ; நச்சரவத் தரசன் - ஆதிசேடன் ; அந்தி நிறத்தரனார் - செந்நிறம் பொருந்திய சிவன் ; அங்குசபாசம் உவந்து அணி எனப் பிரிக்க ; நால்வாய் - தொங்கு கின்ற வாய் ; கொந்து இதழித் தொடை - கொத்துகளாக வுடைய கொன்றை மாலை. (6)

38. மதாணிகள் பல கொட்ட - பதக்கங்கள் பலபோட; வானவர் கோனுறு தரு - தேவேந்திரன் உலகத்திலுள்ள கற்பகமரம்; மலை கொட்ட - மலைபோன்று கொட்டிப் படைக்க, வினையுவமத் தொகை; பூவையர் - பெண்கள்; முழவு - குடமுழா என்னும் வாத்தியம். இப் பாட்டில் கொட்ட என்றசொற்கள் பல பொருளில் வந்துள்ளன காண்க; கயாசூரன்:—'மரகதமுனிவர்' என்பவருக்கும் 'விநதை' என்ற அரக்கிக்கும் பிறந்தவன். அவர்கள் யானை உருக்கொண்டு புணர்ந்ததால் யானைமுகத்துடன் தோன்றினான். பிறகு சிவமூர்த்தியை எண்ணித் தவம் புரிந்து பலவரங்கள் பெற்று அரசாண்டு தேவரை வருத்தவும் கடைசியில் விநாயகர் தன் தந்தத்தால் போழ்ந்தனர். வரத்தின் பலத்தால் பெருச்சாளியாகி விநாயகருக்கு வாகனமானான். (7)

39. பெட்டகம் - பெட்டி; மணி - முத்துக்கள்; பேரும் முனைப் படை - போர்முனையில் விட்டோடும் சேனைகள்; பேர்தல் - விட்டோடல்; பிறையெயிறுகள் - பிறைபோன்ற வளைந்த கோரைப்பற்கள்; வாசிகள் - குதிரைகள்; தோதகம் - அலங்கோலம்; கட்டு அறவிட்ட - அம்புக்கட்டுகளை முழுதும் விட்ட; மூசுகளம் - நெருங்கின போர்க்களம்; கூளிகள் - பேய்கள்; கொட்டம் - கர்வம். (8)

40. வார்சடை யண்ணல் - நீண்ட சடையுடைய சிவன்; பங்கையலோசன புங்கவன் - தாமரைக் கண்ணன் என்கிற திருமால்; கமலாசனம் மேவிய தந்தை - பிரமன்; வெட்சி - இது ஒருவித மலர், பகைவரது பசுநிரையைக் கவர்தற்கு உரியமாலை; படர் - துன்பம்; குனித்து - அசைத்து; இடபவாகனம், கருடவாகனம், அன்னவாகனம், மயில் வாகனம், சூரிய சந்திரர் வாகனங்கள்; மற்ற தேவர்களின் வாகனம் ஆகியவை பின்னே வர விநாயகர் தன்வாகனமாகிய பெருச்சாளியை முன்னே செலுத்துகிறார்; இனிப்படர் நீங்கிய இரவிகள் சந்திரர் ஏறிய வாகனம் - துன்பம் நீங்குதற்காக வந்த சூரியர்களும் சந்திரர்களும் ஏறிய வாகனம். (9)

41. வாருதிபால் - பாற்கடலினிடம்; தானவர் - அசுரர்; சேணினார் - ஆகாயத்திலுள்ள தேவர்கள்; மழுபாணி காரணர் - மழுவைக் கையிலேயுடைய கடவுள் (சிவன்); கட்டாணி காரணி - பலசாலியாகிய பார்வதி; கோடு - தந்தம்; வெற்புஏணி - மலையை நிலைபெறச் செய்து; பலம் - பலன், இறுதிப்போலி; மிடற்று அமை - கழுத்திலேயே அடக்கிய; அமைகட்டாணி - வினைத்தொகை. (10)

---

# முத்தப்பருவம்

---

42. கொன்றைக் கோதை - கொன்றைமாலை; வரிவண்டு குலவா அலம்பு - இரேகைகளையுடைய வண்டுகள் சேர்ந்து ஒலிக்கும்; கோதைப் பெருமான்-சிவபெருமான்; கோதை-உமாதேவி; குரை வெள்ளருவி-சப்திக்கின்ற வெண்மையான அருவிகளையுடைய; பிடி - பெண் யானை; தேறல் - தேன்; ஒவ்வாது - பொருந்தாது; **இலகு ஓங்காரத்தினிற் பிடியும் களிறும்:**—இவ்வடிவமாக இருப்பதை அம்புலிப்பருவம் எட்டாவது பாட்டின் குறிப்பில் காண்க. குலவா, உலவா-செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத் திரிந்தது. வேத ஆகமக் கடலில் உலவா ஊறிக் கிளர்ந்ததேறல் எனக்கூட்டுக; உமை இடைமேல் ஏறு அங்கு உகந்தே மாற்றரிய உலவா வேத ஆகமக்கடலின் ஊறிக் கிளர்ந்த என்று பிரிக்க. (1)

43. அலையார்வேணி-அலைகளோடு கூடிய கங்கை நதி பொருந்திய சடை, அலை - சினை யாகுபெயர்; நேயம் - அன்பு; **துரிய நிலை :**— ஆன்மா உந்திப்பிரதேசத்தில் பிராணனோடு இலயித்து நிற்கத் தன்னையே விஷயீகரிக்கும் நான்காம் ஆன்மா நிலை. சாக்கிரம், சொப்பனம், சுழியம், துரியம், துரியாதீதம் என்ற ஐந்தவத்தைகளில் நான்காவது. (2)

44. **திருநாளைப் போவார்** - ஆதனூரில் புலையர் குலத்தில் அவதரித்து நந்தனார் எனத் திருநாமம் பெற்றவர்; திறம்பும் கறங்கு - மாறுபடும் காற்றாடி; புலியூர் - சிதம்பரம்; ஆதரம் சேர் - கடவுளிடம் அன்புசேர்ந்த; புங்கூர் - திருப்புங்கூர்; இது காவிரியின் வடகரையிலுள்ளது. அழியாத மயக்கமாகிய இரு வினையினால் மாறுபடும் காற்றாடிபோற் சுழன்று பிறவிக்கடலில் அமிழாமல் தெளிவடைந்த உணர்ச்சியால் உலகியற்கை நீங்கி கடவுளிடம் அன்புசேர்ந்த நந்தனார் சிதம்பரம் சேர்வாரென்று வெளியில் கண்டு சென்று அவர் வருகின்ற நாளை அருச்சகன் கனவில் சொல்லியும் வற்றாத வளமிகுந்த திருப்புன்கூரில் மகிழ்ச்சிகொண்டு எல்லோரும் குளமமைப்பதற்கு முயல, ஒப்பற்ற ஐந்துருவாகி ஆட்களின் வேலைக்குள்ள கூலியைப் பங்கிட்ட ஒப்பற்ற வாயையுடையவனே, அரும்பாத்தைப்பதியில் வாழும் குழந்தையே, முத்தந்தருக என்று பொருள் கொள்க. பெரியபுராணத்தில் நந்தனார் திருப்புன்கூரில் உள்ள ஒரு பள்ளத்தைக்கண்டு பெரிய குளமாக வெட்டியதாக வரலாறுளது. (3)

45. வெண்காடு - திருவெண்காடு, சீர்காழிக்குத் மதன் கிழக்கில் ஏழு மைலில் உள்ளது; பழுத்த மதியார் - சிவன்; திருப்பெண்ணாகடத்தில் சைவ வேளாளர் குலத்தில் பிறந்த அச்சுதகளப்பாளர் என்பவர் நாடோறும் புத்திரப்பேறு வேண்டித் தம் குலகுரு வாகிய 'சகலாகம' பண்டிதரை வணங்கிக் கூற அவர் சம்பந்தர் அருளிச்செய்த திருமுறையில் கயிறு சாத்திப் பார்க்க "பேயடையா பிரிவெய்தும்... ......தோயாவாந் தீவினையே" என்னும் திருப்பதிக முதிக்க அதன் பொருளை ஆசிரியராலறிந்து வெண்காடு (சுவேதாரண்யம்) சென்று 'முக்குள' நீர் மூழ்கிச் சிவபூசை செய்து வருகையில் சிவபெருமான் ஒருநாள் கனவின்கண் எழுந்தருளி "உனக்கு மகவைத் தருகிறோ" மென்று கூறி மறைந்தனர். பின் தம்மூருக்குத் திரும்பிய சில மாதங்களில் அவர் காதலியாரிடத்துக் குழந்தை பிறந்தது. குழந்தைக்குச் "சுவேதனப் பெருமாள்" என்று பெயரிட்டு வளர்த்து வந்தனர். பின் வெண்ணெய் நல்லூரிலிருந்த காங்கேய பூபதியிடத்தில் வளர்ந்துவந்தார். மணலில் சிவலிங்கம் செய்து விளையாடுவதைக் கண்ட அவ்வழியே வந்த பரஞ்சோதிமுனிவர் சிவஞான போதத்தையருளி 'தமிழிற்செய்க' எனக் கட்டளையிட்டனர். இவர் 5-வயதில் திருவெண்ணெய் நல்லூர் பொல்லாப் பிள்ளையாரிடம் வேத சிவாகமங்களைப் பயின்று சிவஞான போதத்திற்குப் பொல்லாப் பிள்ளையார் அருளிச்செய்த சூர்ணிகையைக் கொண்டு தமிழில் சிவஞானபோதமும் அதற்கு வார்த்திக உரையு மியற்றினர். இவ்வகை இவர் பிள்ளையாரிடம் கற்றுவருவதை யுணராது "ஐயோ இப்பிள்ளை ஊமையாய் இருக்கிறதே" என்று விசனப்பட்டனர். ஒருநாள் பிள்ளையாருக்குப் பூசைசெய்யும் 'சிவத்துவசர்' கோயிலுள் சந்தடிகேட்கவே போய்ப் பார்த்தார். ஊமைக்குழந்தையோ பிள்ளையாரிடம் தடை, விடைகளோடு சாஸ்திர பாடம் கேட்பதைக் கண்டு ஆச்சரியமடைந்து ஊரிலும், அப்பிள்ளையின் பெற்றோரிடத்தும் தெரிவித்தார். பெற்றோரோ தாங்களே பிள்ளையாரிடம் வேண்டிக் குழந்தை பேச அருள்பெற்று வந்தனர். இவரே **மெய்கண்டதேவர்.** (4)

46. அன்னம் - அன்னப்பறவை; அகிலேசன் - காசித் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவனுக்குப் பெயர்; வன்னி - நெருப்பு; அரசு செய்துவரு "திவோதானன்" என்று பிரிக்க; **திவோதானன்:—** ஒரு கற்பத்தில் உலகமழிந்தது. அக்காலத்தில் இரிபுவைப் பிரமன் நோக்கி "நீ உலகத்தை யாளுக. உனக்குச் சேஷன் மோகினியைப் பாரியையாக்குவான். தேவர்கள் வேண்டிய கொடுப்பர். அதனுனக்குத் திவோதானன் என்ற பெயர் உண்டாகும்" என்றனன். அவ்வகை திவோதானன் தேவரை மதியாது அரசாட்சி செய்ய தேவர் பொறாமை கொண்டு இவன் தவத்திற்குக் காரணமான அக்கினியைக்

கிரகிக்க அரசன் எல்லாவிடத்தும் நிறைந்து சலியாதிருக்கச் சிவ மூர்த்தி இவன் நிலையை மாற்ற யோகினிகள், கணபதி, பிரமன் ஆகிய வரை ஏவிக் கலக்கினர். அவர்களால் முடியாமை கண்ட திருமால் பௌத்தமதம் போதித்துச் சனங்களை மயக்கியது கண்ட அரசன் **காசியில் சிவப்பிரதிட்டை** செய்து பூசித்து முத்தியடைந்தான். திவோதானன் வன்னியெனப் போந்தனன் என்று கூட்டுக. விநாய கர் பெண்களுக்கும், ஆண்களுக்கும் கனவில் கூறி காசித்தலத்தை மீண்டு வரச்செய்தார் என்று பொருள் கூறுக. திவோதானன் காசி யில் சிவப்பிரதிட்டை செய்து துதித்ததால் இங்ஙனம் கூறினர். (5)

47. பருதி - சூரியன்; குருசில் - ஆண் மக்களில் சிறந்தவன்; கனகம் - பொன் போன்றவன்; மாவின்வகிர் - மாவடு; பரவை - கடல் போன்றவன்; மாயன் - திருமால்; வேள்வியவர் - பிராமணர்; தாவில் கெடுதலில்லாத. (6)

48. மீனம் - மீன்; முடைநாறும் - புலால் நாற்றம் வீசும்; மறிகடல் - அலை மடங்குகின்ற கடல்; வீறுகழை - பெரிய கரும்புகள்; வான்கருவி - மேகம்கறுத்து; தானம் - இடம்; கமுகு - பாக்கு மரம்; சடையனை மகிழும் முத்தம் - சிவபெருமானை மகிழ்விக்கத்தரும் முத்தம்; புவியெலாம் வாழவருளிய முத்தம், ஏழை திருவுள மலரும் முத்தம் எனக்கூட்டுக; தானம் - மதம்; கடலிலிருந்து உண்டாகின்ற முத்தையும், கரும்பினின்று உண்டாகின்ற முத்தையும், மேகத்தினின் றும் உண்டாகின்ற முத்தையும் உயர்ந்த தன்மை என்று நினைக்காமல் சிவபெருமானை மகிழ்விக்கும் முத்தத்தையும், உலகினரை வாழ்விக்கும் அன்பையும் மதமொழுகுகின்ற உன்னுடைய வாயினால் மிகுந்த சுவை யுள்ள முத்தத்தையும் கொடுப்பாயாக; கருவிவான் ஈனம்உறு பல தானம் மிசைவிழ இறையும் முத்தும் - வான்கறுத்துப் பெறுத லடைந்து பல இடங்களின்மீது விழுமாறு சிந்துகின்ற முத்தும்; கமுகிலே யேறுபட வடிசாறும் ஒழி வழியிழியும் முத்தும் - பாக்குமரத் திலே ஏறுதலடைய அதனால் வடிந்த சாறு நீங்கியவிடத்து இறங்கும் முத்தும். (7)

49. அறிதுயில் - யோக நித்திரை; பைந்துளவன் - பசிய துளப மாலையுள்ள திருமால்; கோலமலி இமையோர் - அழகு மிகுந்த தேவர்; பைந்தரு - கற்பகம் முதலிய மரங்கள்; கோதையுமைபுணர் ஆதி - பெண்ணாகிய உமையைச் சேரும் முதன்மையான சிவபெரு மானே; நீலம் - கறுப்பு; நெடுமலைப் பெண்கொடி - நீண்ட இமய மலை அரசன் புத்திரி; அணி ஆலம் இலை - அழகிய ஆலிலை. (8)

**50.** கூளி - பேய்கள்; குறளிகள் - இரண்டடி உயரமுள்ள பூதங்கள்; அலகை - பேயின் ஒரு சாதி; முட்டு - துன்பம்; முது கதிர் ஆதிகிரகம் - பழமையான சூரியன் முதற்கொண்டுள்ள நவக்கிர கங்கள்; அடல் - பகை; படர் - துன்பம்; கொடும் நடக்கும் - கொடுமைகளை உண்டாக்கும்; மதி - புத்தி; நினைதருவோர் - நினைப் பவர், வினையாலணையும் பெயர்; சாடி - மோதியழித்து; ஞானதினகர- ஞான சூரியனே. (9)

**51.** ஏல - இசைவாக; தரு - மரம்; தாலம் - நாக்கு; பிரபையு மாய் - ஒளியாய். (10)

---

## வருகைப்பருவம்

---

**52.** தொங்கற்பெரும் சுடிகை - மாலை சூடிய மயிர்முடி; ஆடகம்- பொன்; சுட்டி - நெற்றியிலணியும் சுட்டி என்னும் அணி; சன்ன வீரம் - ஒரு வென்றிமாலை "பொங்கிய சன்னவீரம் தயங்க"; (பெரிய புராணம் கண்ணப்ப-59) அழைத்த எனது - அழைத்தெனது, அகரம் தொக்கது; கரடம் - யானை மதம். (1)

**53.** கறைகொண்ட - குற்றத்தையே கொண்ட; காலர் என்று - காலதூதர் எனத் தன்னை நினைக்க; கடவுளரில் - தேவர்களைக் காட் டிலும்; கால் ஊதி - தென்றல் காற்றாகிய தேரை ஊர்ந்துகொண்டு; மென்பூச்சிறை கொண்ட கணை - மெல்லிய பூக்களைக் காவலாகக் கொண்ட அம்பு; நாணியளி கொண்டு - நாணியாகிய வண்டுகள் கொண்டு; பூஞ்சிலை - பூவினாலாகிய வில்; காமநூலென்னும் பூ விசே டம் காமனுக்கு வில்லாமென்று தமிழ் நூலிலும் மங்மத தந்த்ர மென்னும் புஷ்பம் மன்மதனுக்கு வில்லாமென்று வட நூலிலும் கூறு மாறு உணர்க. வேள் - மன்மதன்; தெரிவைமார் கொங்கையை யரண் கொண்டு வாழ்தேவர் சிரசு நாண் கொண்டு குனிய - பெண் களின் தனத்தையே பாதுகாப்பாகக் கொண்டு வாழும் தேவர்கள் தங்கள் தலைகளை வெட்கத்தால் தாழ்த்த; அரண் - பாதுகாப்பு; சூறை - கொள்ளை; ஓவை - ஒழிதல்; வாகை - வெற்றி; **பிரமசாரி**:— விநாயகர் "தாயைப்போல தாரம் வேண்டும்" என்று கேட்டு அங் ஙனம் கிடைக்காததால் பிரம்மசாரியாகவே உள்ளார் என்று உலகர் கூறுகிறார்கள். (2)

54. ஆயிரங்கோடி கடல்வெள்ளமும் சேர்ந்து பாதங்களை நனைக்கவும் முடியாத வலிமைகொண்ட சூரபதுமன் அவன் தாயாரின் குடலிடமிருந்து கொண்டு வருகின்ற அசுரர் சேனை வெள்ளம் பெருகுகின்ற போது, கோபித்துப் போர்செய்யும் உதவி வீரர் விநாடிதோறும் இரண்டாயிரம் வெள்ளம் பெருக முருகன் தன் கையிலுள்ள வேலாயுதத்தை விடுத்துப் போர் செய்ய கலங்கியபோது அப்போர்க்களத்தே பிரம்மசாரியாய்ச் சென்று மாயை என்னுமவளைத் தனது அழகிய துடையிலே வைத்துப் பூவை யொத்த துதிக்கையை அவள் அல்குலில் செலுத்திப் பொருந்துதலுண்டான கருப்பப்பையை யழுத்திக் கருவை எடுத்துப் போட்டுத் தம்பிக்கு வெற்றி தந்த பலவானே வருக எனப் பொருள் கொள்க. கணம் - விநாடி; வேலன் - முருகன்; காய் இருந்துணை வீரர் - கோபிக்கும் கொடிய உதவி வீரர்; இக்கதையைச் சிற்றில் பருவம் 6-வது பாட்டில் காண்க. (3)

55. காழி - சீர்காழி; கூடல் - மதுரை; அமண் - சமணர்; குண்டர் - சமணர்கள்; விண்டிட - சிதைந்து ஓட; நீருறு நதி - நீர் சுரக்கின்ற ஆறு; அமைச்சன் - கூன் பாண்டியன் மந்திரி குலச்சிறையார்; புகலிமா முனிவன் - ஞானசம்பந்தன்; சொல்லப்படுகின்ற புகழ் வாய்ந்த சீகாழியில் பிறந்த ஞானசம்பந்தர் மதுரையில் சமணரை யழித்துக் கூன் பொருந்திய பாண்டியன்முன் மீன் பொருந்திய புனலில் வாதம் புரிந்த சமணர் சிதைந்து ஓட, அவ்வமுத நீரினால் சுரக்கின்ற நதியான வைகை யிடத்தில் விபூதியையுடைய சைவமதம் நிலைபெறுக வெனும் ஓதின ஏட்டை விடுதலும் அது நீரின் எதிரோட நல்லியல்பமைந்த அவ்வேட்டைக் கொள்வேனென்று ஓடிய குலச்சிறையாருக்கும் அதைப் பெறச் செய்யாது நீரிலே செல்லவிட்டு மதுரைக் கருகிலிருக்கும் பூவணம் என்ற ஊரின் ஒரு பிள்ளையாய் வந்து வெள்ளத்தின் அலையில் பெருமை பொருந்திய அவ்வேட்டை எடுத்து நீருடன் (ஈரத்தோடு) கொடுக்க பெருமை பொருந்திய சீகாழிப் பிராமணரான ஞானசம்பந்தரால் பெருமை பொருந்திய தேவாரம் பாடப்பெற்ற வீரவிக்ரமனே வருக எனப் பொருள் கொள்க. இவ்வரலாறு திருவிளையாடலில் சிவன் அவ்வேட்டை மறைத்துப் பின்பு துதிக்கக் கொடுத்தனர் என்றுளது. (4)

56. பைத்தலை - கூர்மையான முனை; பகழி - அம்பு; சென்னி - சோழன்; மா மூவர் தேவார வைப்பு - பெருமை பொருந்திய சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்பவரின் தேவார பொக்கிஷங்கள்; சிறுவன் - நம்பியாண்டார் நம்பிகள்; துய்த்தல் - உண்ணுதல்; ஐந்தெழுத்து - பஞ்சாட்சரம்; **நம்பியாண்டார் நம்பி**:—திருநாரையூரிலே சிவ

வேதியர் குலத்தில் பிறந்தவர். இவர் தந்தையார் வேற்றூருக்குப் போயிருந்தபோது தாய், பிள்ளையாரைப் பூசிக்க, அன்னம், பழம் முதலியவை கொடுத்தனுப்பினர். அவ்வண்ணமே '**நம்பி**' சென்று பூசித்துப் பிள்ளையார் சந்நிதியில் அன்னம் முதலிய படைத்துப் புசிக்க வேண்ட அவர் புசிக்காதிருந்ததால் தமது தலையைக் கல்மேல் மோத இருக்கையில் பிள்ளையார் தடுத்து அமுது செய்தனர். பின்னும் நம்பி "காலதாமதம் ஆயிற்று; உபாத்தியாயர் தண்டிப்பார்; கல்வி கற்றுக்கொடு" என வேண்ட, விநாயகர் உண்பதையும் நிறுத்திப் பல கலைகளையும் கற்றுக் கொடுத்தார். இதைக் கேட்ட இராஜராஜ சோழன் நம்பிகளை வணங்கி பிள்ளையாருக்கு மிகுந்த பூசை செய்வித்து மூவர் தேவாரத் திருமுறைகள் இருக்குமிடம் அறிய விரும்பி விநாயகரைக் கேட்கும்படி வேண்டினர். நம்பியார் விநாயகரைக் கேட்டுத் தில்லையில் மேற்குக் கோபுரத்தை யடுத்த திருமதிலில் சேமித்திருப்பதாகக் கூறினர். இப்பிள்ளையாருக்குப் "பொல்லாப் பிள்ளையார்" என்று பெயர். (பொள்ளா - செதுக்குதல் இல்லாத; பொள்ளா என்பது பொல்லா என மரீஇயிற்று) (5)

57. அகல் நீர்வேலை - அகன்ற நீருள்ள சமுத்திரம்; அலையாக் கும்பம் - யானை; அலையும் கும்பம் - செல்வக் குவியல்; ஆணையினு லடங்கா நாகம் - மதயானை; ஆணையினுலடங்கும் நாகம் - பாம்பு; வீணையினுலசையாத் தந்தி - யானை; வீணையினுலசையும் தந்தி - வீணையின் கம்பி; பகராதுயர்ந்த மாதங்கம் - யானை; பகருகின்ற உயர்ந்த மாதங்கம் - தங்க உலோகப் பொருள்; பறவாத் தும்பி - யானை; பறக்கும் தும்பி - ஓர் வண்டு; காயாத பருங்கோட்டத்தி - யானை; காயும் பெரிய கிளைகளையுடைய அத்தி - அத்திமரம்; மாதர் முலை படியாக் களபம் - யானை; மாதர் முலை படியும் களபம் - ஓர் வாசனைச் சாந்து; படியில் விலை நிகழா ஒரு சிந்துரம் - யானை; படியில் விலை நிகழும் ஒரு சிந்துரம் - பொட்டு; தலத்தில் நிறுவாக் கம்பம் - யானை; தலத்தில் நிறுவும் கம்பம் - தூண்; அருங்குளத்தில் நேரா ஆம்பல் - யானை; அருங்குளத்தில் நேரும் ஆம்பல் - அல்லி மலர்; வடுக்கள் பட நெருங்கா இளமா - யானை; வடுக்கள் பட நெருங்கும் இளமா - மாமரம்; இவைகளெல்லாம் குறிப்புச் சொற்கள். (6)

58. 1. சுமுகன், 2. ஏகதந்தன், 3. கபிலன், 4. கசகர்ணன், 5. இலம்போதரன், 6. விகடன், 7. விக்கினராசன், 8. அதி விநாயகன், 9. தூமகேது, 10. பாலசந்திரன், 11. வக்கிரதுண்டன், 12. பூர்வசகாயன், 13. கௌஜியக்கன், 14. ஏரம்பன், 15. சூர்ப்பகர்ணர், 16. ஸ்கந்தபூர்வர் என்ற பெயர்கள் விநாயகருக்குப் பெயர்களாம். **ஏரம்பன்** :— உருத்திரருடைய சமீபத்திலிருப்பவன், அடியாரை வளர்விப்பவன்,

கணுதிபர் என்பது அதிவிஞயகர் என்றும் கணுதியகூர் என்பது கணு தியக்கன் என்றும், கஜாநநர் என்பது பூர்வசகாயன் என்றும் கூறப்பட் டுள்ளன காண்க. **வக்கிரதுண்டர் :-** பிரமசுரன் குமாரஞன துராசரன் தவம்புரிந்து சர்வசித்திபெற்று பிரமன், விஷ்ணு முதலியோர் உலகங் களை வென்று ஆங்காங்கு ஒரு அசுரரை நியமித்துக் கொடுங்கோன்மை செய்து வருகையில் மந்திரிகள் இவனை நோக்கி உனக்குப் பயந்து தேவர் காசியை யடைந்தனர் எனக்கேட்டுப் படைகொண்டு செல்லவும் தேவர் சக்தியை வேண்ட சக்தி ஐந்து திருமுகமும் பத்துத் திருக்கரத்துடனு மிருந்து தன் முகத்தில் வக்கிரதுண்ட விநாயகரைத் தோற்றுவித்து அசு ரனைத் தொலைத்தாள். இவர் அசுரனைக் காலில் மிதித்து எந்நாளுமிருக்க வரம் அளித்தார். **தூமகேது :-** தூமசுரன் என்னும் அசுரனைப் புகை யெழுப்பிக் கொன்றதால் இப்பெயர் அடைந்தார். சுமுதைக்கும் மாதவ ராசனுக்கும் மகனுகத் தோன்றினுர். **பாலசந்திரர் :-** சிறுபிள்ளையாய்ச் சென்று அனலாசுரனை விழுங்கி அவன் வெப்பத்தைச் சகித்துச் சந்தி ரனைப்போலக் குளிர்ந்திருந்தமையாலும் மாதவராசனும் சுமுதையும் காட்டில் தனித்திருந்து துன்பப்படுகையில் அவர்கட்குக் குழந்தை யுருவாய்க் காட்சிதந்து துன்பம் நீக்கியதாலும் இப்பெயர் பெற்ருர். **விக்கினராசர் :-** இவர் வரேணியராசன் தேவி புட்பகை யென்பவள் கருவுயிர்த்த காலையில் அப்புத்திரனை மறைத்து யானைமுகத்துடன் தாம் குழந்தை உருக்கொண்டு இருந்தனர். அரசன் கண்டு காட்டில் இட்டு வரக் கட்டளையிட்டான். அவ்வகை ஏவலர் குழந்தையைப் பராசுவ முனிவர் ஆச்சிரமத்தினருகு வைத்துவிட்டு வர முனிவர் கண்டு வளர்த்து வந்தனர். இவ்வகை யிருக்கையில் பெருச்சாளி உருக்கொண்ட **கிரவுஞ்சன்** விஞயகரிருக்கும் ஆச்சிரமத்திடை வந்து முனிவர்களைத் தொந்தரைபுரிய அவனை வாகனமாகக் கொண்டு வலியடக்கி, இருடிகள் வேண்டுகோளால் **காலரூபி** என்று மறுபெயர் பெற்ற **விக்னனை** வலி யடக்கி அவன் வேண்டிக்கொள்ள உயிருடன் விட்டு **விக்ன**ராசர் எனப் பெயரடைந்தார். **விகடன்** (அ) **விகடசக்கர விநாயகர் :-** வீரபத் திரர் தக்கனைத் தலைநீங்கத் தாக்கிய காலத்தில் திருமால் எறிந்த சக்கரா யுதத்தை அவர் அணிந்த சிரமாலையில் ஒன்று கவ்வியது. அதைப் பெறு மாறு திருமால் கொங்கணிக் கூத்தாடினர். இதைக் கண்டு நகைத்த சிரத்தின் வாயினின்றும் சக்கரம் விழக்கண்ட விநாயகர், அதனை எடுத் துக்கொண்டு அக்கூத்தைத் தம் முன்னும் ஆடப்பணித்துக் களிப் படைந்து சக்கரம் தந்தனர். இவ்வகை சக்கரத்தின் பொருட்டு விகடஞ் செய்ததால் "விகடசக்கர விநாயகர்" என்ற பெயருண்டாயிற்று. **ஏக தந்தன் :-** ஒரே கொம்பைப் பெற்றிருப்பதால் இப்பெயர் உண்டா யிற்று. ஒரு கொம்பை ஒடித்து மேருமலையில் பாரதம் எழுதினுர். **அதி**

**விநாயகர் :–** தன்னை வணங்கினவர்க்கு விக்கினத்தை நீக்குவோரும் அவ்வகை வணங்காதவர்க்கு விக்கினத்தைத் தருபவரும் தனக்குமேல் நாயகரிலாதவருமாதலால் இப்பெயர் வந்தது. **இலம்போதரன் :–**முன் வந்திருக்கும் பெருவயிற்றால் இப்பெயர் பெற்றார். (7)

59. மருது - மருதமரவிலை ; கையாந்தகரை - கரிசிலாங் கண்ணி; சாதிப்பூ - சாதிபத்திரி (அ) சாதிப் பன்னம் ; பச்சை - மாசிப்பத்திரி, இதுதமிழில் மாசிப் பச்சை எனவழங்கும். இது ஒரு பூண்டுவகையைச் சேர்ந்தது. **இருபத்தொரு பத்திரங்களாவன:–** 1. அலரி, 2. துளசி, 3. மருதமரவிலை, 4. எருக்கு, 5. அறுகம்புல், 6. கரிசிலாங் கண்ணி, 7. முள்ளி, 8. அரசமரவிலை, 9. மாசிப்பச்சை, 10. நாயுருவி, 11.அழகுசேர்ந்த நாவல்மரவிலை, 12. எலுமிச்சைமரவிலை, 13. நொச்சில், 14. சாதிப்பூ, 15. இலுப்பைமரவிலை, 16. வன்னிமரவிலை, 17. ஊமத்தையிலை, 18. இலந்தைமரவிலை, 19. தேவதாருமரவிலை, 20. அழகிய மாதுளையிலை, 21. விட்டுணுகாந்தியிலை. குட்டிக்கொடு - குட்டிக்கொண்டு; தாள் - பாதம். (8)

60. துகள் - குற்றம் ; துய்ய தறி - தூய்மையான தூண் ; மறை கூடம் - வேதமாகிய வீடு ; அன்பாம் அந்தண் கவளம் - அன்பு என்னும் அழகிய உணவுருண்டை ; மடுத்து - உண்டு ; அளி - வண்டு ; புனம் - வயல் ; வெளி - ஆகாயம் ; கருத்தென்னும் துய்யதறி, மறைக் கூடம், அன்பாம் அந்தண்கவளம், ஆர்வமெனும் பேரளி, கருணைமத வெள்ளம், வினைப்புனம், மெய்ஞ்ஞான வெளி ஆகியவை உருவகங்கள் ; மாறிமாறி வருகின்ற பிறப்பில் வெறுப்புற்று நிலையாமையை உணர்ந்த சான்றோர்கள் குற்றமற்ற சமயத்தில் மோட்சக் கருத்து என்கின்ற தூய்மையான தூணில் கட்டப்பட்டு அழிவில்லாத வேதமாகிய வீட்டையடைந்து சுருங்காமல் மிகுந்த அன்பாகிய அழகிய உணவுருண்டையை உண்டு அடியார்களின் ஆசை என்னும் பெரிய வண்டுகள் சுழலுமாறு சிறந்த கருணை என்னும் மதவெள்ளம் ஓடி தீவினையாகிய வயலை அடியோடு அழித்து மெய்ஞ்ஞானமாகிய ஆகாயத்தில் உலவித், தெளிகின்ற அருள்மழை பொழியும் செழித்த அரும்பாத்தை நகர் என்க. (9)

61. அலங்கும் - ஒலிசெய்யும் ; புரிநூல் - பூணூல் ; பாசம் - அங்குசபாசம் ; புந்தி - புத்தி இங்கு மனதைக் குறித்தது. இப்பாட்டில் விநயகர் சிவனைப்போன்றுள்ள நிலை கூறப்படுகின்றது. அந்தி நேரத்தில் தோன்றும் இளைய வெண்பிறையையும், மலர்ந்த அழகிய கொன்றைமாலையையும், அரிய அழகிய கரங்கள் நான்கும், விளங்கும் பவளம்போன்ற சிவந்த சடையாகிய காடும், பழிப்பில்லாத அங்குச

பாசமும், மழுவாயுதமும், நீண்ட பாம்பாகிய ஆபரணமும், உயர்ந்த நிறம் பொருந்திய அழகிய தந்தமும், விளங்கும் மலர்ந்த விழியும் சந்தனம் பூசிய மார்பில் தங்கும் பூணூலும் சிவபெருமானைப் போலப் பெற்றுப் பூமியில் துதிப்பவர்கட்குக் குலதெய்வமாகி மனமகிழும் அரும்பாத்தைப்பதிவாழ் விநாயகனே வருக எனப் பொருள் கொள்க. (10)

---

# அம்புலிப்பருவம்

---

62. இப்பாட்டு சந்திரனுக்கும் கணபதிக்கும் சிலேடையாகக் கூறப்படுகிறது. **சந்திரன் மேல் செல்லுமிடத்து** :—வட்டமதிவேணியன் இடக்கண் - வட்டமாகிய சந்திரனைச் சடையிலுள்ள சிவபெருமானது இடப்பக்கமுள்ள கண்ணும் உள்ளான் ; வாலாலுருவின் மடமானை வைத்திடுதல்-வெண்மையான உருவத்தையுடைய விரும்பப்படாத களங்கத்தைக் கொண்டிருத்தல் ; மன்னுயிர்களுக்கு அருமருந்து - நிலைபெற்ற உயிர்களுக்கு அமிர்தம் (சந்திரனுடைய கலையை முதற் பதினைந்து நாள் தேவர் அருந்துவர், மற்றவற்றைத் தென்புலத்தார் அருந்துவர். எனவே இங்ஙனம் கூறினர்). முழுமதிக்கடவுள் - பூர்ணசந்திரன், இது பௌர்ணமிதினம் நிகழும் ; இட்ட கணபதியென்று இருத்தலால் - ஆகாயத்திலிட்ட நட்சத்திர கூட்டங்களுக்குத் தலைவனென்று இருப்பதால் ; பைங்கொடி யினக்குவளை மலர்விக்கை - பசிய கொடிக்கூட்டத்திலிருக்கும் நீலோற்பல மலர்களை மலரச்செய்தல். (சந்திர கிரணங்களால்தான் குவளைப்போது விரியும்) ; எவ்வமரரும் பரவு தெய்வவரை யதனை வலமிட்டுவரு பலன் எய்தல் - எத்தகைய தேவரும் துதிக்கும்படியான மேருமலையைச் சுற்றிவரும் பலனை அடைதல். (சூரியனும் 'சந்திரனும் மேருமலையைச் சுற்றி வருகிறார்கள் என்பது புராண வரலாறு) ; புவியில் அனைவர்க்கும் மேலாய்த் துலங்கல் - பூமியிலுள்ள மனிதர் எல்லோருக்கும் உயரத்திலுள்ள ஆகாயத்தில் பிரகாசித்தல் ; மந்தாகினி சுரநதி கண்ணோடி வருதலால் - கங்கை நதியிருக்கும் சிவபெருமான் சடையினிடம் தக்ஷன் சாபத்தால் பயந்து ஓடிவந்து அவரால் தாங்கப்படுதல் ; **கணபதி மேல் செல்லுமிடத்து** :—வட்டமதி வேணியன் - வட்டமாகிய சந்திரனைச் சடையிலே உடையவனாய் ; இடக்கண் வாலாலுருவின் மடமானை வைத்திடுதலான் - இடப்புறம் வெள்ளிய ஆபரணங்களை

யணிந்த இளையமான்போன்ற **'வல்லபை'** என்பவளை வைத்திடுவதால்; மன்னுயிர்களுக் கருமருந்தாதல் - நிலைபெற்ற உயிர்களுக்குத் தேவாமிர்தத்தை ஒத்து விரும்பிப் பூசிக்கப்படுதல், அங்ஙனம் பூசிப்பதால் தேவாமிர்தம் போன்று இன்னல்களை நீக்குவதால் விநாயகர் அருமருந்து எனப்பட்டார்; அமிர்தம் - நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு ஆகியவைகளை நீக்கக்கூடியது; முழும் அதிக்கடவுள் - உலக முழுமைக்கும் முதன்மையான கடவுள் (யாதொரு காரியம் எடுத்தாலும் விநாயகரைக் கும்பிட்ட பிறகு தொடங்குவது வழக்கம்.); இட்டகணபதி - வணங்குபவர்களுக்கு இஷ்ட சித்தியைக் கொடுக்கும் கணபதி என்ற பெயர் உடையவர்; பைங்கொடி யினக்குவளை மலர்விக்கை - பசுமையான கொடியிலுள்ள கூட்டமான குவளை மலர்போன்ற கண்களுக்கு விநாயகன் தரிசனம் தந்து மலரச்செய்தல்; எவ்வமரரும் பரவும் தெய்வ வரையதனை வலமிட்டு வருபலன் எய்தல் - எத்தேவரும் துதிக்கும் மேருமலையைச் சுற்றி வருபலனைத் தன்தந்தை, தாயையே சுற்றி அடைதல்; பெரும்புவியிலனைவர்க்கும் மேலாய்த் துலங்கல் - பூமியிலுள்ள எல்லோருக்கும் மேலான கடவுளாக விளங்குதல். மந்தாகினிச் சுரநதி கண் ஓடி வருதல் - ஆகாய கங்கை சடையினிடம் ஓடிவந்து தங்குதல். (விநாயகர் சிவனம்சமாதலால் இங்ஙனம் கூறலாகும்.) (1)

63.

| சந்திரன் | கணபதி |
|---|---|
| 1. குளிர்ந்த தாமரை மலர்களின் கூட்டத்தைக் குவித்து விடுவான். | அடியார்களது கைகளாகிய தாமரையைக் குவித்துக் கும்பிடும்படிச் செய்வான். |
| 2. மழைத்தாரைகள் பெய்கையில் நடு நடுவில் தோன்றுவான். | மதநீர்த் தாரைகள் ஒழுக வருவான். |
| 3. மண்டாறு தலை பறித்தாய். நெருங்கின கங்கையாறு உள்ள சிவபெருமான் தலையிலே இருக்கச் சம்பாதித்துக் கொண்டான். | உற்ற துணைவளர் ஆறுதலை படைத்தான் - மிகுந்த சகோதரனான சுப்பிரமண்யன் மிகுதியான ஆறுதலைகளைக் கொண்டுள்ளான். |
| 4. வாரிக் கருந்தலைவிடாய் - செல்லும் வழியில் கரியதலையுடைய கேதுவால் விழுங்குவதினின்றும் விடுவித்துக் கொள்ள மாட்டான், | இவனும் மணிவாரிக் கருந்தலை விடான்-இவனும் முத்து விளை தலையுடைய கரிய யானைத் தலையை விடமாட்டான் (வாரி - விளைவு.) |

| சந்திரன் | கணபதி |
|---|---|
| 5. பழைய பூமியினிடத்தை தன் ஒளிக்கதிர்களால் சூழுவான். | பாரிலுள்ள மக்கள் தான் இருக்குமிடத்தை வலமாகச் சுற்றி வரும்படித் தங்குவான். (2) |
| 64. 1. சீறிக்கொல்லுகின்ற பாம்பான கேதுவைக் கண்டு அஞ்சுவான். | பாம்பிலானுகிய கங்கணத்தை அணிவதற்கு அஞ்சமாட்டான். |
| 2. பதினாறு கலைகளினால் எப்போதும் பிரகாசிப்பதை அறியவில்லை. (கலை - சந்திரன் வளரும் பங்கும் தேயும் பங்கும்.) | புதிய ஞானமாகிய கலைகளை அதிகமாக உடையவன். (கலை-படிப்பு.) |
| 3. சோதித்தால் உடலின் களங்கத்தைப் பெற்றிருக்கிறான். | தக்கன் யாகத்தை யழிக்கிறேனென்று ஈசுவரனிடம் கூறிய சொல்லைக் காப்பாற்றாமல் தக்கனிட்ட பலகார வகைகளையுண்டு பிதிர் வாக்கியத்தைப் பரிபாலனம் செய்யாததால் சொல்லிற் களங்கமுள்ளவனானான். |
| 4. மேரு மலையைச்சுற்றி வலம் வருவான். | பூமியிலுள்ள மனிதர்களெல்லாம் இவனைச்சுற்றி வலம்வரத் தங்குவான். |
| 5. எல்லோராலும் சொல்லப்பட்ட அமாவாசை நாளில் மறைவான். | ஒரு தடவை கூட மறைவதற்கு அறியமாட்டான். |

முறைப்பு - முறை; மழகளிறு - இளமையான யானை. (3)

65. ததியமுது - பாற்கடலில் தோன்றிய அமிர்தம்; தேவர்கள் சிதைவாகி அகிலாண்ட முற்றும் கலைந்து அலைபட்டது - பாற்கடலில் ஆலகால விஷம் தோன்றிய போதாகும். பிள்ளையார் இது இயற்பெயராக பிள்ளையாரையும் குறிப்பு வினையாலணையும் பெயராக பிள்ளைமைத்தன்மை உடையவனையும் குறிக்கும். பிள்ளைமை + ஆர் + பிள்ளையார்; பெருகி வாழ்வது - வளர்பிறை; சிறுகி வாழ்வது - தேய்பிறை; துன்பு புரிகேது - பகைகொண்டு விழுங்குகின்ற கேது எனும் பாம்பு; தூமகேது - விநாயகருக்கு ஓர் பெயர்; வாலச்சந்திரன் (அ) பாலச்சந்திரன் என்பதும் விநாயகருக்கு ஒரு பெயர்; சந்திரனுக்குச் செல்லும்போது வெண்மையான சந்திரன் என்றும் இளைய சந்திரன் என்றும் பொருள் கொள்ளலாம். பேர் - மரூஉமொழி. (4)

66. ஆவணித்திங்கள் - ஆவணிமாதம்; பயன் - பால்; உரத்து - வலிமை கொண்டு; உதரம் - வயிறு; முக்கண் பிரான் - விநாயகன்; இளைய வீரன் - வீரபத்திரன்; துவைய விட்டது - தேய்ப்புண்டது; உனக்கே தோற்றும் - உனக்கே தெரியும்; ஏற்று இரவு - அடைந்து கெஞ்சி; கோடியேல் - கொள்வாயானால்; சந்திரன் விநாயகரது பெருத்த வயிற்றைக் கண்டு நகைத்ததால் விநாயகரால் ஒளி இழக்கவும் சண்டாளத்துவம் பெறவும் சாபம் பெற்று மீண்டும் அவரால் அச்சாபம் வருடத்திற்கு ஒருநாளில் அடைய வரம் பெற்றான். அது ஆவணி மாதம் கிருஷ்ணபட்ச சதுர்த்தி ஆகும். இக்காலத்தில் சந்திரனைக் கண்டோர் சண்டாளத்துவம் அடைவர். ஆகவே அது நீங்க கணபதியைப் பூசித்து இஷ்டசித்தி பெறுவார்கள். சுகமலால் பயமில்லை என்று பிரிக்க. **இளையவீரன் :**—தக்ஷயாகத்தில் வீரபத்திரன் எல்லோரையும் அழிக்கும்போது சந்திரனும் வீரபத்திரரால் தேய்ப்புண்டு அனுக்கிரகம் பெற்றான். இவர் ஆயிரந் தலையும் இரண்டாயிரம் கையும் மூவாயிரம் கண்ணுமுடையவர். துளியூறும் அமுதந் துளிப்ப என்றார் வீரபத்திரரின் கால் தேய்ப்பினால் அமுதங் கக்கியது நோக்கி. (5)

67. கவடு-கிளை; அரிவை-பெண், இங்கு அகலிகையைக் குறித்தது; சனகனிடு சாபம் - சனகனிட்ட வில்; நீக்கியும் - ஒடித்து அழித்தும்; "கவடுற்ற........................சாபமது நீக்கி" :—திருமால் கண்ணவதாரத்தில் யசோதையால் இடுப்பில் உரலுடன் கட்டப்பட அதனோடு தவழ்ந்து சென்று மருத மரங்களை விழச் செய்தார். அதிலிருந்து நளகூபரன், மணிக்கிரீவன் என்பவர்கள் தோன்றி கண்ணனை வணங்கிச் சென்றனர். "கற்போலுங்........................நீக்கியும்" :—இந்திரன் கௌதமரை வஞ்சகமாக ஸ்நானத்திற்கு வெளியே யனுப்பிவிட்டுத் தான் அவர்போல் உருவம் எடுத்துச் சென்று அவர் மனைவி அகலிகையைக் கூடினான். முனிவர் ஞான திருஷ்டியால் அறிந்து வீட்டிற்கு வர இந்திரன் பூனையாக ஓடவும் அவனுக்குத் தேகமெல்லாம் ஆயிரம் யோனிகள் ஆகக்கடவது என்ற சாபமும் அகலிகையைக் கல்லாய்ப் போமாறு சாபமுங் கொடுத்தார். பின் அகலிகை வணங்க இராமர் செல்லும்போது அவர் பாதம் பட்டதும் சாப நீக்கம் ஆகும் என்று கூறினார். **சனகனிடு சாபம் :**—சீதை திருமண நிமித்தமாக சிவதனுசை இராமர் வளைக்கவும் அது இரண்டாக ஒடிந்துவிட்டது. பின் சீதையை மணம் புரிந்தார். எனவே அவ்வில்லை ஒடித்து நீக்கினார். சாபம் - வில், கோபித்துச் சொல்லும் சொல், சொல்லொற்றுமை குறித்துச் சொன்னார்; **உமை சபித்த சாபம் :**—சிவமூர்த்தியும் உமையும் சொக்கட்டான் ஆடுகையில் திருமால் மத்தியஸ்தராய் இருந்தார். அப்போது உமை செயிக்கையில் சிவன் வென்றார் எனப் பொய்ச் சாட்சி கூறி உமையால் மலைப் பாம்பா

யிருக்கச் சபிக்கப்பட்டுப் பாலைவனத்திலிருந்து கணபதியால் சாப நீக்கமடைந்தார். **இவனிட்ட சாபம் :**—முற்செய்யுளில் காண்க. **குருவிட்ட சாபம் :**—குருவாகிய பிரகஸ்பதியின் மனைவி தாரையைச் சேர்ந்ததால் க்ஷயரோகி ஆகுமாறு சபித்தார். இரண்டும் விட - இரண்டும் நீங்கிவிடுவதால். (6)

68. மகுணன் - மகிழ்நன் என்பதின் திரிபு, கணவன் என்று பொருள்; பரவுமொரு புலவர் - அபிராமிபட்டர்; உவா - இங்கு அமாவாசையைக் குறிக்கும்; இரு மகன் - பெரிய மகன், இங்கு மூத்த மகனைக் காட்டுகிறது; "வருநெல்....................வல்லமை யுள்ளவள்" :—பார்வதி பிராட்டியார் சிவபிரானை "நோக்கி நான் அறம் வளர்க்க வேண்டு"மென சிவபிரான் இரு நாழி நெல்லளித்து இதைப் பூலோகத்தில் கொண்டு சென்று உழவுத் தொழிலால் பெருக்குக என அவ்வாறே கங்கை நாட்டு உழவர்பால் நெல்லளித்து விருத்தி செய்யச் செய்து காஞ்சியை யடைந்து தவஞ் செய்து நெற்கொண்டு உழவால் அதைப் பெருக்கி யறம் வளர்த்தனள். "பரவு மொரு புலவர்க்கு............பண்பொடு வரச் செய்தாள்" :—சோழ நாட்டுத் திருக்கடையூரிலிருந்த **அபிராமி பட்டர்** தம் குலதெய்வமாகிய தேவியினிடத்து நீங்காப் பக்தியுடையவராய் இருந்தார். ஒருநாள் இவர் கோவிலி லிருக்கும்போது தஞ்சையை யாண்ட சரபோஜி மன்னன் "தையமாவாசைக்" குக் கடலாடக் காவிரிப்பூம்பட்டினம் வந்தான். வழியிலிருந்த "திருக்கடவூர் நாதரைத்" தரிசிக்கவெண்ணி கோயிலுள் புகுந்தான். அபிராமி பட்டர் அம்மையின் சன்னிதியில் யோகத்தி லிருந்தனர். தன்னை மதிக்காதிருந்த இவரை அரசன் யார் என வினவ, பொறாமை கொண்ட அந்தணர்கள் "இவர் வாம மார்க்கத்தினர். மது மயக்கத்தால் மயங்கியிருக்கின்றார்" என்றார்கள். மன்னன் அதனை நம்பாது அவரிடம், "இன்று என்ன திதி? எவ்வளவு நாழிகை இருக்கிறது?" என்று கேட்டான். பட்டருடைய காதில் அரை குறையாகப் படவும் கடவுளிடம் ஞாபகம் சென்றதாலும், "இன்று சுத்த பௌர்ணமி யாயிற்றே" யென்றார். பின்பு பட்டர் உண்மையுணர்ந்தார். அப்போது அரசன் பட்டரை நோக்கி "இன்று பௌர்ணமி யில்லையாயின் உம்மைத் தண்டனை செய்வேன்" என்று சினந்து சென்றான். பட்டர் "எல்லாம் அவள் செயல்" என்று எண்ணி "உதிக்கின்ற" என்று தொடங்கி எழுபத்தெட்டுப் பாட்டுப் பாடினார். மாலையாயிற்று. எழுபத்தொன்பதாம் பாடலான "விழிக்கே, அருளுண்டு" என்று பாடவும் தேவி தனது தோட்டினைக் கழற்றி வானமண்டலத்தில் வீசி நிலவொளி யுண்டாக்கி யோக நித்திரையிலிருக்கும் பட்டரை யெழுப்பிக் காட்டினாள். அரசனும் மன்னிப்புக் கேட்டான். (7)

69. பார் படைத்தவர் - பிரம்மன்; பார் படைத்தனை முன்பு உதவுமோர் பங்கயக் கண்ணன் - பிரம்மனைப் பெற்ற ஒப்பற்ற திருமால்; அக்கண்ணர் தமையுதவு பகராறு முருத்திரர் - அத் திருமாலைப் பெற்ற சொல்லமுடியாத புகழ்வாய்ந்த உருத்திரர்; நாதத்தினின்று விந்துவும், விந்துவினின்று சதாசிவனும், சதாசிவனிடமிருந்து ஈசனும், ஈசனிடமிருந்து உருத்திரர்களும், உருத்திரர்களிடமிருந்து திருமாலும், திருமாலிடமிருந்து பிரமனும் பெறப்படுகின்றனர்கள் என்பது சைவ சித்தாந்தம். அந் நாதம் பிரணவப் பொருளாய் வரும் என்றும் அப் பிரணவப் பொருளாய் விநாயகன் தங்குகின்றன் என்றும் கூறுகிறார். கடவுளின் திருவுருவங்கள் அரூபம், ரூபா ரூபம், ரூபம் என்ற மூன்று. அவர் அரூபியா யிருக்கும்போது சிவம், சக்தி, நாதம், விந்து என நான்கு பெயர் பெறுவர். அவர் ரூபா ரூபியா யிருக்கும்போது சதாசிவம் எனப் பெயர்பெறுவர். அவர் ரூபியாயிருக்கும்போது மகேசன், உருத்திரன், மால், அயன் எனப் பெயர் பெறுவர். "சிவம் சக்தி நாதம் விந்து சதாசிவன் திகழு மீசன், உவந்தருள் உருத்திரன்தான் மால் அயன் ஒன்றின் ஒன்றாய்ப், பவந்தரும் அருவம் நாலிங்கு உருவம் நாலுபயம் ஒன்றாய், நவந்தரு பேதம் ஏகநாதனே நடிப்பன் என்பர்" (சிவஞானசித்தியார்) **பிரணவப் பொருளுக்கு..........பிள்ளை**:—எல்லாம் வல்ல பரம்பொருளிடமிருந்து முதலாவது உண்டாகிய படைப்பு **ஓம்** எனும் பிரணவ நாதமேயாகும். அந்த 'ஓம்' என்னும் ஒலியின் வரிவடிவமே விநாயகரின் திருவுருவமாம். இறைவனிடமிருந்து முதற்கண் தோன்றியது ஓங்காரப் பிரணவமே யாகையால் இவர், 'பிரணவ கணபதி' யென்றும் 'ஓங்காரரூபன்' என்றும் அழைக்கப்படுகிறார். ஒடிந்த கொம்பு 'ஓ' என்ற எழுத்தின் 'சுழி' யிருக்குமிடம். இவ்வெழுத்து இங்கிருந்து தொடங்கி வலக்கை வழியாகக் கிரீடத்தைச் சுற்றி, இடக்கை பாசம் வரையில் வந்து, திரும்பி வளைந்து, நெற்றிப் பொட்டு வரையிற் போய்த் துதிக்கை வழியாகக் கீழிடக்கை வந்து கால் வரை இறங்கும். இடக்கையும் மோதகமும் 'ம்' என்பதைக் குறிக்கின்றது. ஆகையால் விநாயகர் திருவுருவம் ஓங்கார சொரூபமேயாகும். ஆரத்தடம் பெரும் அரும்பாத்தை - பொருந்திய மிக்க பெருமை பொருந்திய அரும்பாத்தை நகர் என்க. (8)

70. வந்தனை செய்து ஏற்றுவோர் எனப் பிரிக்க; மதன சுந்தர தேகம் - மன்மதனைப் போன்று அழகிய உடம்பு; மதிகதிர்கள் - சந்திர சூரியர்கள்; "மதிகதிர்கள்..................கீர்த்தியும்":—சந்திர சூரியர் மாறினும் எப்போதும் மாறுபடாத கீர்த்தியும்; அட்டமாசித்தி - அணிமா, மகிமா முதலிய எட்டு ஆகும்; எண்ணில் - கணக்கில்லாத. (9)

71. பராக்கிரம் ஆவர் அவர்களுக்கு என்று பிரிக்க; **நவ வீரர் :—** உமாதேவியாரின் காற்சிலம்பினின்று சிந்திய மணிகளில் பிறந்த பெண்களைச் சிவமூர்த்தி விருப்பால் நோக்கக் கருப்பெற்று ஒன்பது வீரர்களைப் பெற்றனர். இவர்கள் முருகனுக்குத் துணையாயிருப்பவர். இவர்களில் முதல்வர் வீரவாகு தேவர். ஏதப்படாத் துணைவன் - குற்றமற்ற சகோதரன்; அவர்தான் பொருூர் என்பதிலுள்ள அவர் என்பது சுட்டாக நவ வீரரைக் குறித்தது. ஆறிரண்டாம் ஆதித்தர் - பன்னிரண்டு சூரியர். (10)

---

## சிறுபறைப்பருவம்

---

72. வெங்கள் பணிப்பார் - போர்க்களத்தில் எதிரிகளைத் தாழ்த்துவார்; வெங்களம் என்பது வெங்கள் என நின்றது "ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே" என்ற விதியினுல்; விசையமங்கலம் - வெற்றியைக் குறித்த மங்கல முரசு; திசைப்பண்ணவர் - திக்குப்பாலகர்களாகிய தேவர்; இகல் - பகை; தாமரைக்கோயில் மாமியார் - இலக்குமி, மாமியார் என்றது விஷ்ணுவின் பெண்களான மோதை, பிரமோதை முதலிய பெண்களை மணந்ததாலாகும்; சுருதி - வேதம்; தேவக்கணபதி - இந்திரன்; கணம் - கூட்டம்; நெடுநிலங்களை நூறி - நீண்ட பூமியை யழித்து; துந்துமி - துந்துபி எனும் பேரிகை; தும்புரு, நாரதர் இருவரும் யாழ் வாசிப்பதில் வல்லவர்; திங்கட்கொழுந்து - பிறைச்சந்திரன். (1)

73. வில்லார்நுதல் - வில்போன்று பொருந்திய நெற்றி; செம்மாந்த - ஏறிட்ட; தடக்கை - பெரிய தும்பிக்கை; கல்லாரும் நெற்றி மிசை - மலையைப்போன்று பொருந்திய தனநுனியின் மீது; பவளவேணிக் காணிக்கிடந்த மலரோன் ஒற்றை வெண்டலை கழிந்தோன் - பவளநிறமான சடையைப் பார்த்துக்கொண்டிருந்த மலரிலுள்ள ஒற்றைத் தலையை இழந்தவனுகிய பிரமன், ஒழிந்த கொள்ளை-நீங்கிய பலர்; பல்லாடு நகை - பல்லால் சப்தம் செய்தாடும்படியான சிரிப்பு; செல்-மேகம்; விநாயகர் இவ்வாறு தும்பிக்கையால் தடவுவதைக் கண்டு பிரமன் ஒழிந்த சந்திரன் சிரிப்பதைக் கண்டு "நீ யென்னைப் பார்த்துச் சிரித்ததால் பிறைச்சந்திரனுயிருந்து தீமையை யறிவா" யென்று கூறின

இடமகன்ற சோலைதோறும் மேகங்கள் சஞ்சரிக்கும் அரும்பாத்தைப் பதியிலுள்ள தலைவ சிறுபறை முழக்குக என்று பொருள் கொள்க. பால்+அகல்+சோலை - இடமகன்ற சோலை. (2)

74. கோட்டுஞ்சிலை - வளைக்கும் வில்; **பண்டாசுரன்** :—மன்மதனிறந்த சாம்பலை ஊடல்கொண்ட பார்வதி நோக்க அதிலிருந்து இவ்வசுரன் பிறந்து உயிர்களின் சுக்கில சோணிதங்களை யுண்டு வருத்தி வருகையில் தேவர் வேண்டுகோளால் சிவமூர்த்தி இவ்வசுரனைப் பிராட்டியை ஏவிக் கொல்வித்தனர்; கௌமாரி - பார்வதி; இப்பாட்டில் மன்மதன் சாம்பலைச் சிவகணத்தொருவன் நோக்கி யுருவாக்கவும் அது பண்டாசுரன் என்ற பெயர்கொண்டு சிவனோடு சண்டையிட பார்வதியினால் தோற்று வலியிழந்து தெய்வத்தன்மையுடைய எதிரிகளைக் கொல்லும் இயந்திரம் ஒன்று அவன் வைத்துக்கொண்டிருந்தபோது விநாயகர் சிவபெருமான் அருள்கொண்டு அந்த இயந்திரத்தைப் பூமியில் விழச்செய்து அழித்துப் போர்செய்த அசுரனையும் கொன்றார் என்று கூறப்பட்டுள்ளது. கோர ஆகாரம் - கோர வடிவம்; உடைந்தவன் - தோற்றவன்; கைவிறலின் - தொழில் திறமையால்; பணித்தொடை ஒருத்தன் - பாம்பை மாலையாகக் கொண்ட சிவபிரான். (3)

75. கிருபாகரன் - கருணையுள்ளவன்; பொருதிரைப் பேராழி - மோதுகின்ற அலைகளையுடைய பாற்கடல்; நெடுமுகட்டொருவரை - நீண்ட சிகரங்களையுடைய ஒப்பற்ற மந்தரமலை; மாசுணம் இறுக்கி - வாசுகி என்ற பாம்பைக் கட்டி; புருகூதன் - இந்திரன்; இருவகைத் திரளார் - தேவர், அசுரர் என்பவர்கள்; புடை - பக்கம்; ஆலம் - ஆலகால விஷம்; பிறக்க+அவன் - பிறக்கவன்; அகரம் தொக்கது; சுலவும் வெண்பாலலை நுரை - சுழலும் வெள்ளிய பால்போன்ற அலைகளாலுண்டாகிய நுரை; உனது வடிவு ஆக்கி அங்கு ஆராதனை ஆதி-என்று பிரிக்க; பெருமணி - சிந்தாமணி; இருநிதி - சங்கநிதி, பதுமநிதி; உயர்தரு - கற்பக விருட்சம்; அமுது - தேவாமிர்தம்; **வலஞ்சுழி** ;— திருவலஞ்சுழி என்னும் சிவத்தலம். கும்பகோணத்திற்கு மேற்கே நாலுமைல் தூரத்திலுள்ளது. இங்குள்ள பிள்ளையார் பெயர் வெள்ளைப் பிள்ளையார். இத்தலத்து பூசிக்கப்பட்ட கணபதி இந்திரனால் பூசிக்கப்பட்ட கணபதி. அவன் மீண்டும் எடுக்க வாராது அழுந்தி இருக்கின்றனர். (4)

76. வேணிக்கலாமதி மணக்குங் கணத்திரள் - சடையில் பிறையோடு கூடிய உருத்திரக் கூட்டங்கள்; விதிர்ந்தன - நடுங்கின; முகவாரம் பொருந்து திசை வேடம் - முகத்தில் மாலைகள் பொருந்தும்

எட்டுத்திக்கு யானைகள்; மும்மத மழையை நிகர் மழைகள் - யானையின் மூன்றுமத சலத்தை யொத்த மழையைப் பெய்யும் மேகங்கள்; கரு - கர்ப்பம்; காதல்புரி நன் மாமன் - ஆசைகொண்ட மாமனுன திருமால்; நாகணை - ஆதிசேடனுகிய படுக்கை; கண் துயில் எனப் பிரிக்க; பூணிற் சிறந்த பணியினம் - சிவபெருமான் முதலியவர்கள் பூணுவதற்குச் சிறந்த பாம்புக்கூட்டங்கள்; அசனியேறு - ஆண் இடி; பொறி மணி யுகுத்திடாமல் - படப்பொறியிலுள்ள மாணிக்கத்தைச் சிந்தாமல், இடி இடித்தால் பாம்புகள் நடுங்கும்; புண்டரிக மலர் - தாமரை மலர்; சேணில் கணம்பெறும் அரும்பாத்தை - ஆகாயத்தின் மீதுள்ள மேகங்கள் தன்மீது படும்படி அவ்வளவு உயரமுடைய மாட மாளிகையுடைய அரும்பாத்தை நகர். (5)

77. ஏர்மலர் - அழகிய மலர்; **தெய்வீக மகாராஜன்:-** இவன் திருக்கோவிலூரைத் தலைநகராகக் கொண்டு நடுநாட்டை யாண்ட அரசருள் ஒருவன். ஏரண்ட முனிவன் என்பவன் செய்த யாகத்தினின்று எழுந்த தெய்வீகக் குதிரையையுடையவன். சாபமடைந்த பர்வதராஜன், குக முனிவர் யாகத்தில் பிறந்து தெய்வீக அரசன் என்று பெயர் பெற்றுன். இவனுக்கு ஔவையார் பாரியின் பெண்களாகிய அங்கவை, சங்கவை என்பவர்களை மணம் செய்வித்தார். அப்போது தெய்வீகராசன் தமிழ்நாட்டு மூவேந்தரும் வரவேண்டுமென்று சொல்ல ஔவையார் விநாயகரைத் தியானித்து, அவரால் மூவருக்கும் திருமுகம் எழுதியனுப்பி மூவரையும் வரச்செய்தார். அரசர் மூவரும் வந்து ஔவையை நோக்கிச் செப்தியறிந்து எதிரிலிருந்த பனந்துண்டம் தளிர்த்துப் பழுக்குமாயின் இப்பெண்களைத் தெய்வீகராசனுக்கு மணப்பிக்கலாமென அவ்வாறே ஔவை பனந்துண்டை நோக்கி "திங்கட் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும், மங்கைக் கறுகிட வந்து நின்றார் மணப்பந்தலிலே............................ பங்குக்கு மூன்று பழம் தரவேண்டும் பனந்துண்டமே" என்று சொல்ல அது பழுத்துக் கனி தந்தது. பின்பு மூவரும் ஒத்துக்கொள்ள தெய்வீகராசனுக்கு இருவரையும் மணஞ்செய்வித்தார். **திருக்கோவிலூர்:-**இப்போது தென்னுற்காடு ஜில்லாவில், தாலுக்காவின் தலைநகராக உள்ளது. **பசும்பரித் தெய்வீகன்:-**பச்சைக் குதிரையையுடைய தெய்வீகன்; **ஔவை:—**கடைச்சங்கக் காலத்திலிருந்த பெண் புலவர்; பேர் நிருபர் மூவர்:-தமிழ்நாட்டு மூவேந்தர்; பிறங்கு எழுத்திடு - விளங்கும்படியான எழுத்துக்களை எழுதும்; கணக்கப்பிள்ளையான் என்று அவர்க்கு - என்று பிரிக்க. அவர்க்கு என்ற சுட்டு மூவேந்தரைக் குறித்தது; ஒரு பெண்ணைக்கும் ஓலை போக்கி - ஒரு பனந்துண்டத்திற்கு ஓலை, கனி முதலியன வரச்செய்து, ஓலை என்பது

உபலக்ஷணமாய், காய்கனிகளைக் காட்டியது ; பாரியங்கவை - பாரிக்குப் பெண்ணான அங்கவை ; **பாரி** :- இவன் கடைச்சங்ககால வள்ளல்களில் ஒருவன். இவனை வஞ்சனையால் மூவேந்தரும் கொன்றனர். கபிலர் இவன் பெண்களை அழைத்துச்சென்று பலரிடம் மணம் செய்யக் கேட்டும் ஒத்துக்கொள்ளாது போகவே திருக்கோவிலூரில் பார்ப்பனரிடம், அடைக்கலமாக விட்டுவிட்டு இறந்தார். பின்னர் ஔவை தெய்வீகனுக்கு அவர்களை மணம் முடித்தார். (6)

78. மல்லல் செழுங் கொன்றைமாலை சூடி - வளப்பமான் செழித்த கொன்றை மாலையைச் சூடினவன் (சிவபெருமான்); ஒரு மருங்கிலே பெண் - ஒப்பற்ற இடப்பக்கத்திலே உமாதேவி ; தெண்டிரை மடந்தை - கங்காதேவி; கோதை-இங்கு இலக்குமியைக் குறிக்கும் ; பாவுணர் கொழுங்கொடி - சரஸ்வதி ; குல்லை - துளசி, குல்லைப் பசுந் துழாய் என்றது - ஒரு பொருட் பன்மொழி ; மதனன் - மன்மதன் ; மன்மதன் தன்னுடைய கரும்பு வில்லின் திறமையால் சிவபெருமானுக்குத் தன் வலியைக் காட்ட ஒரு பக்கத்திலே உமா தேவியை வைக்கும்படிச் செய்தும் தலையிலே கங்கையை எடுக்கும்படிச் செய்தும், திருமாலுக்குத் தன் வலியைக் காட்ட மார்பிலே இலக்குமியை ஏறும் படிச் செய்தும், பிரமனுக்குத் தன் வலியைக் காட்டின அளவில் அவன் நாவிலே சரசுவதியை வைக்கும்படிச் செய்தும், இந்திரனுக்குத் தன் வலிமையைக் காட்டியபோது உடல் பூராவும் யோனிகள் வரச்செய்தும் இன்னும் மற்றவர்களுக்கும் தன் வலியைக் காட்டி வெல்லும்படியானவன் என்க. செல்லக் குறித்திடும் - அழியுமாறு நினைக்கும் ; யானைக்குக் கரும்பு உணவாதலால் அதையும் விநாயகர் அருந்தி அழித்தார். 3-ஆம் பாட்டு ஒற்றுமை காண்க (பி-வி-லீலை). (7)

79. பொன்னிலத்தரமாதர் - சொர்க்கலோகத்திலுள்ள தேவப் பெண்கள் ; புலவர் - தேவர் ; புகர்மதக் கிருமுகா - கருநிற மமைந்த மதநீர் பாயும் கரியமுகத்தை யுடையவனே ; விசையி பவா - வெற்றி யுண்டாகுக, விஜயிபவா என்பதன் வடசொல் ; மென்மை + தொனி - மென்றொனி ; கன்னல் மொழி - கரும்பு போன்ற இனியமொழி, உவமத்தொகை ; காட்ட மும்மதக் களியானை மன்னவர் - காட்டகத்தினுடைய மும்மத யானைகளை யடக்கும் மன்னர்கள் ; இ + நிலம் - இந்நிலம் ; எதுகை நோக்கி றன்னகர மாயிற்று ; (8)

80. தாதைதரு கனி - தந்தையாகிய சிவபெருமான் தன்னை வலம் வந்த விநாயகருக்குக் கொடுத்த மாம்பழம், விநாயகர் படிவத்தில் இப்பொழுதும் ஒரு கையில் மாம்பழம் இருப்பதைக் காண்க ; தடவரையில் எழுது கையால் - பெரிய மேரு மலையில் வியாசர் சொல்லிய

பாரதத்தைத் தன் கொம்பை எடுத்து எழுதிய கையால்; எழுது கை - வினைத்தொகை; தவள நிலவு - வெண்மையான நிலவு; போத மலி - ஞானமிகுந்த; அபயம் - தஞ்சம்; ஔவையார் வரலாறு இப் பருவத்தின் ஆறும் பாட்டில் காண்க. "பொன் ஆற்றிலிட............ ஈந்த கை":-சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுதுகுன்றடைந்து சிவபெருமானைப் பொன்வேண்டி அங்ஙனம் பெற்று அதில் சிறிது வெட்டி வைத்துக்கொண்டு மணிமுத்தா நதியில் இட்டு இதைத் திருவாரூர் குளத்தில் தரவேண்டுமென்று வேண்டி அங்கிருந்து நீங்கி திருவாரூரை அடைந்து பரவையாருடன் குளத்தில் வந்து தேடுகையில் பொன் அகப்படாமல் போகவே பரவையார்"ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடுகிறீரோ" என்று பரிகாசம் செய்ய, பதிகம் ஓதி அப் பொன்னை யடைந்து தான் வெட்டி வைத்த பொன்னிற்கும் அதற்கும் மாத்துக் குறைவதைக் கண்டு வருந்த விநயகர் வணிகனுக வந்து மாத்துரைத்துக் காட்டி நல்ல பொன் என்றார். இவ் விநாயகர் "மாற்றுரை காட்டிய விநாயகர்" எனப் பேர் பெறுவர். ஆறு - மணி முத்தாநதி; புலவன் - சுந்தர மூர்த்தி சுவாமிகள். (9)

81. வயமேறு படையிலே ஏறினும் - வலிபொருந்திய சேனையினிடத்து அரசர்கள் முன்னேறிச் செல்லுமிடத்தும்; வங்கம் - கப்பல்; கீதம் - செய்யுள்; வாதம் - தர்க்கம்; பயம் மேவு - நன்மையமைந்த; பன்னினும் - சொன்னாலும்; புகுநுண்ணினும் -ஆயுளடைதற்கு முயற்சித்தாலும்; கரவோர் - வஞ்சகர்; படர்காண்டு அடக்கினும் - நிறைந்த துன்பம் தன்னைத் தளரச்செய்தாலும், (காண்டு - துன்பம்). (10)

---

## சிற்றில் பருவம்

---

82. கூற்று - எமன்; பதமுகைத்த - பாதத்தால் விழும்படிச் செலுத்திய; கோதை பாகன் - சிவபெருமான்; ஆதியரால் - முதலியவர்களால்; குறைப்பான் - நீக்குவதற்காக; நறைத் தாமரைத் தாளில் போற்றும் புலவர் - வாசனையுடைய தாமரைத் தண்டில் தன்னைப் பாதுகாத்துக்கொண்ட இந்திரர்கள்; மகாபலிக்குப் பயந்து இந்திரன் அனேக காலம் தாமரைத் தண்டில் ஒளித்திருந்தான்; அசுவமேத யாகஞ் செய்துவரும் இந்திரர்கள் பலராதலின் "மகுடமொடு மகுட" மென்றார்; "ஊற்றும்......வேத விநாயகனே":-ஒளிமிகும் வெள்ளிய தந்தத்

தோடு எனது தலைவன் மார்பிலே உள்ள பன்றியின் கொம்பை இசைத்துச் சந்தோஷிக்கும் மதிலென்று உவமையில்லா அவ்வடிவ மார்பிலே றிப் பல விளையாட்டுச் செய்த வேத விநாயகனே ; **உரத்தில் ஏனக் கோட்டை** :-வராக உருக்கொண்ட திருமாலின் கர்வமடக்க அதன் கொம்பை யொடித்து மார்பில் அணிந்தார் சிவன். ஏனக் கோடு - பன்றியின் கொம்பு. (1)

83. முருகு - வாசனை ; குஞ்சி - மயிர் ; மூரல் - பல் ; உருவு மனை - அழகிய வடிவமமைந்த வீடு ; உன் சேவடிக்கண் - உனது சிவந்த பாதத்தினிடம் ; மணி - முத்துக்கள் ; இரு கண் மணி - இரண்டு கண்களிலுள்ள மணி; முன்றிலின் புறத்தே படி ஏறு ஈன் நல் கொடியாடல் பயில விடுத்த இயல் யாங்கள் - வாசலின் பக்கத்தே படிந்து ஏறுதற்கு ஈன்ற நல்ல கொடி ஆடுதற்குப் பழக விடுத்த தன்மையைப் போன்ற நாங்கள். (2)

84. மிடல்-வலிமை; போர் மத்தன்-போர் செய்வதில் களிப்புள்ளவன் ; பேழை வயிற்றன்-பெட்டி போன்ற வயிறுடையவன்; ஔவையார் இயற்றிய "சீதக்களபம்" என்று தொடங்கும் செய்யுளில் "பேழை வயிறும் பெரும் பாரக் கோடும்" என்று வருவதைக் காண்க ; மேக்கு வாய்-மேன்மை பொருந்திய வாய் ; அமுக்கன்-இரகசியத்தை மறைத்து வைப்பவன் (கோட் சொல்லி) ; வெருவ - பயப்பட ; வேற்றுருவன் - மேலே இருப்பது விலங்குருவமும் கீழே யிருப்பது மனித வுருவமும் ஆதலால் "வேற்றுருவன்" எனப்பட்டார் ; முடல்சேர் நாகத்தொடையன் - வளைவு பொருந்திய பாம்பை மாலையாக உடையவன் ; வாளா வொழித்தால் - சும்மா அழித்தால் ; துடைக்கும் ஒருவன் - அழிக்கின்ற சிவபெருமான். (3)

85. தென்னாட்டரசன் மனையில் - தென்னாடான பாண்டிய நாட்டரசன் மலையத்துவசன் வீட்டில் ; திருவாய் வளர்ந்த அப்போது - தடாதகைப் பிராட்டியாராய்ப் பிறந்து சுந்தரபாண்டியரை மணஞ் செய்த போது ; வலையன் மகளாக - சிவபெருமான் சாபத்தால் செம்படவன் புத்திரியாக ; வரைக்கெல்லாம் மன்னே யெனும் மன்னவன் - பருவத ராசன் ; மகளாய் வளர்ந்தது-உமாதேவி எனப் பெயர் கொண்டு பிறந்து வளர்ந்தது ; தக்கன் மகளாய் வளர்ந்தது - தவத்தினால் தக்கனுக்கு மகளாகத் தோன்றி தாக்ஷாயணி என்ற பெயருடன் வளர்ந்தது ; இப்பாட்டில் மணம் செய்யுமுன் கணபதியை யாவரும் தொழுவா ராதலின் சிவபெருமான் தன் மணத்தின்போதும் விநாயகரை வணங்கினர் என்க ; அன்னே - அன்னையே, விளி. (4)

86. சேரர்க்கிறைவன் - சேரமான் பெருமாள் நாயனர்; வாம் பரி - வாவும்பரி, தாவுங் குதிரை; மெலிந்தவ்வையார்க்கு - மெலிந்த + அவ்வையார்க்கு என்று பிரிக்க, அகரம் தொக்கது; வாரத்துயிர் - அன்புடைய உயிர்; வைகல்தோறும் - தினந்தோறும்; பாரப்புயலே - கருக்கொண்ட மேகமே; "சேரர்க் கிறைவன்...........மேல் வீடளித் தாய்":- ஔவையார் சுந்தர மூர்த்தி சுவாமிகளுடன் கைலைக்குச் செல்ல விரும்பி விநாயகரை விரைந்து பூசித்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவ கணங்கள் எதிர்கொள்ள வெள்ளை யானை மீது ஏறிச் சென்றனர். சுந்தர மூர்த்தி சுவாமிகள் சேரமானை மனதில் நினைக்க சேரமான் அறிந்து தன் குதிரையின் காதில் பஞ்சாட்சர மந்திரம் ஓதி ஆகாயத்தி லெழுப்பி சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பிரதக்ஷணம் செய்து அவரை வணங்கி இருவரும் கைலை சென்றனர். விநாயகர், இச்செய்தியால் பர பரப்படைந்த அவ்வையை நோக்கி,"அவர்கட்கு முன்னே சேர்க்கிறேன் நிதானமாகப் பூசிக்க" என்று சொல்ல அங்ஙனமே "சீதக்களபம்" என்னும் விநாயகரகவல் பாடித் துதிசெய்து சுந்தரமூர்த்தி நாயனு ருக்கு முன் விநாயகர் தும்பிக்கையால் எடுத்துவிடக் கைலையை அடைந் தார். இப்பாட்டில் "உடல் மெலிந்த அவ்வையாருக்கு மேன்மையான வீட்டைக் கொடுத்தாய்; அழகுடைய எங்களுக்கு இந்தச் சிறிய வீட் டையும் கொடுக்காமல் கலைக்கிறாயே" என்று சமத்காரமாகக் கூறப் பட்டுள்ளமை காண்க. (5)

87. ஏரா - பொருந்தாத; வதுவை - மணம்; இசைத்தோம் - சொன்னோம்; பாரா வாரம் - கடல்; பணைக்கை - பருத்த துதிக்கை; சிந்தைக் கடல் - உருவகம்; பான்மை - தன்மை; தெய்வ மருந்து - அமுதம்; ஊற்றெடுக்கும் - சுரக்கும்; ஆழ் வயிறு - வினைத்தொகை; உணரா து உணர்ந்தவர் - முனிவர்; ஆராவமுது - தெவிட்டாத வமிர்தம்; பொருந் தாத கலியாணத்திற்கு விதி கூட்டாது கணக்கில்லாத காலம் கடந்தும் இன்னும் பிரம்மசாரியா யிருக்கிறா யென்று சொன்னோமோ தவிர அசு ரக் கூட்டமெல்லாம் பொருந்திய மாயையின் ஆழ்ந்த வயிற்றில் சேர பருத்த துதிக்கை நீட்டிக் கருவை யழித்த செய்கையின் தன்மையைச் சொன்னோமோ, என்னவே வேத விநாயகன் பிரம்மச்சாரியல்ல, முன் னமே ஒரு பெண்ணைத் தொட்டவன் ஆயிற்று என்ற கருத்துத் தொ னித்ததால் கோபங்கொண்ட விநாயகர் கலைத்தார். "தாயைப் போன்று தாரம் வேண்டு" மெனப் பலநாள் நோற்றும் கிடைக்காததால் பிரமசாரி யாகவே இன்னும் உள்ளார் எனக் கூறப்படுவதை இப்பாட்டால் சிறுமி யர் மறுத்தல் காண்க. **பாராவாரத்.........பான்மை:-** முருகன் சூர பதுமனோடு சண்டையிடும்போது பகலில் அசுரர்கள் முருகனால் இறக்க

சூரனின் தாய் மாயை இரவில் அசுரர்களைப் பெற்றுப் போருக்கு விட முருகனால் சண்டைசெய்ய இயலாதாயிற்று. இதுவரையில் விநாயகனை நினைக்காத முருகன் இப்போது நினைக்க அவர் தம்பியிடம் 'அஞ்சேல்' என்று கூறி இரவு சென்று 'மாயை' யின் வயிற்றிலிருந்த கருவைத் தும்பிக்கையால் எடுத்துவிட்டார். பின்பு அசுரர்கள் உண்டாகாது போகவே முருகன் எளிதில் வென்றார். (விநாயக புராணம்) (6)

88. கதலிக்கனி - வாழைப்பழம்; சூதக்கனி - மாம்பழம்; வீறும் வடை - பெருமை பொருந்திய வடை; மோதகம் - அப்பம்; வினவ அளிக்காது ஒளித்தனமோ-நீவிர் கேட்கக் கொடுக்காது மறைத்து விட்டோமோ; இளையார் - இளைய பெண்கள். (7)

89. முருகனிகழ் அசுரன், பரவையேழுக் கப்புறமும் பாராள் அசுரன் என்று பிரித்துக் கூட்டுக. பரவை யேழு-ஏழு கடல்கள்; பாராள சுரன் - பூமியை யாண்ட தாருகாசுரன்; பயின்ற மலை - கிரவுஞ்ச மலை; விண்டு பொருத வரக்கன் - விஷ்ணுவுடன் போர் செய்த இராக்கதனான இராவணன்; வேலை யிலங்கைப் பதி - கடலால் சூழப்பட்ட இலங்கை நகரம்; வெகுண்டார்-மாறு கொண்ட திரிபுர அரக்கர்கள்; தாதை-தந்தையான சிவன்; மண்டும் - நெருங்கின; அவனை மறந்தோன் - அச்சிவபெருமானை யாககர்த்தா வாக்காது செருக்கினால் மறந்த தக்கன்; மகம் - யாகம்; மடவோம் - மடமைத் தன்மையையுடைய எங்கள்; பண்பினடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர்; உளக் கமலம் - மனமாகிய தாமரை, உருவகம்; அண்டும் - சேரும்; **தாருகா சுரன்:-** இவன் சூரபதுமன் சகோதரன். இவன் பட்டணம் மாயாபுரம். முருகனால் இவனும் இவன் மலையான கிரவுஞ்சமும் வெல்லப்பட்டன. (8)

90. மறு - களங்கம்; வளர் வித்தகம் - வளரும் ஞான வடிவம்; போதகம் - யானை; உலையா மலை - அசையாத மலை; மறைக்கு அணையே - வேதத்துக்கு இருப்பிடமே; துறவர் - துறந்த முனிவர்; தூய வரமே தரும் பரம் - தூய வரங்களைத் தரும் மேலானவன்; **துரியம்:**—இந்நூலில் முத்தப் பருவம் 2-வது பாட்டில் காண்க. (9)

91. செலவும் - செல்லவும்; படியார் - குணமுடையவர்; கடுக்கை - கொன்றை. (10)

# சிறுதேர்ப்பருவம்

92. வளப்பம்பொருந்திய ஒற்றைச் சக்கர தேரில் வரும் சூரியன் நிலையை நிச்சயிக்க குபேரன் வைத்த தேரிலேற நேராய் வரும் இராவணனுடன் போர் செய்கின்ற தேர் அழிய அழகிய தேவர்கட்குத்தலைவனை இந்திரன் அனுப்பின ஆகாயத்திலெழும்பும் தேரில் ஏறி பகையை வென்று மாதரசியான சீதையொடும் புஷ்பக விமானத்திலேறிப் போகும்போது தடையினால் அவ்விமான மிறங்கவும் அப்போது அப்பழைய வனத்தினில் விநாயகரை இராமர் பணியும்போது அத்துன்பத்தை நீக்கிச் சீதையும், இலக்குமணனும், சேனைத் தலைவரும், குரங்குகளும் பருத்தமதில் சூழ்ந்த அயோத்தியில் சேரத் திண்ணியதேரி லுய்த்த அரும்பாத்தைப் புரிமுதல்வா எனப் பொருள் கொள்க. அளகேசன் - குபேரன் ; இடுக்கண் - துன்பம் ; கவி - குரங்கு. (1)

93. கொய்தினை அடுக்கம் - கொய்கின்ற தினைப்புனம் உள்ள மலைப்பக்கம் ; குற மங்கை - வள்ளி ; கவண் - தினையைத் தின்ன வரும் பறவைகளை ஓட்டும் கருவி, இதில் கல்லை வைத்து அடிப்பர் ; கிழங்கு - வள்ளிக்கிழங்கு ; கண்கடை - கட்கடை ; வேள் கடை - மன்மதனது கடைக்கண் பார்வை ; கவலை கூர்தரும் - கவலை மிகும் ; கண் கடைக் கருணையும் வேள் கடையும் எய்தாது என்று பொருள் கொள்க ; மைவரை - கரிய மலை ; விசைத்து - வீசி ; மலையானை - போர் புரிகின்ற யானை என்று வினைத்தொகையாகவும், மலையில் வாழும் யானை என ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகையாகவும் கொள்ளலாம் ; மைவரை - யானைக்கு உவமை, அதிலுள்ள அருவியின் பெருக்கு மதநீரின் பெருக்குக்கு உவமை. இங்குள்ள அருவி, நிறம்பற்றிய உவமையல்ல ; முலை யானை - இரண்டு முலைகளாகிய யானையையுடைய வள்ளி ; அன்னவன் மணித்தோளிடம் - அத்தகைய முருகனது அழகிய தோளிடம் ; இது யானையாக வந்து வள்ளியைப் பயங்காட்டி தன் தம்பியின் மணத்திற்குச் சம்மதிக்க வைத்ததைக் காட்டுகிறது ; ஏகதந்தன் என விநாயகருக்கு ஒரு பெயரிருப்பதால் "தந்தி எனும் ஒரு நாத" என்று கூறினார். (2)

94. பிஞ்சுமதி - இளைய சந்திரன் ; சடாடவி - சடையாகிய அடவி, உருவகம் (அடவி - காடு) ; உலகமெல்லாம் பெற்றும் எழில் குன்றாத பேதைப் பிராட்டி - இவ்வடியில் மற்றவர்களெல்லாம் ஓரிரு மக்களைப் பெற்றவுடனே கிழவிபோன்று ஆகிவிடுகின்றனர். ஆனால்

நம் பிராட்டியோ உலகத்திலுள்ள உயிர்களையெல்லாம் பெற்றும் அழகு குறையாத பேதைப் பருவமுள்ள பெண்ணாக இருக்கிறார் என்ற நயம் தோன்றுவது காண்க. பிராட்டி-பார்வதி; கவறு-சொக்கட்டான் ; விஞ்சு மணி மாயவன்-அழகு மிகுந்த கௌத்துபமணி யணிந்த திருமால்; கணி விளம்புக - கணக்கிட்டுச் சொல்லுக ; மெல்லியல் - பார்வதி ; முனிவு - கோபம்; நஞ்சுறு குருட்டரவு - விஷமமைந்த குருடான பாம்பு ; காரணற்கு ஆர் அருளினால் - எனப் பிரிக்க ; காரணன் - இங்கு விஷ்ணுவைக் காட்டும் ; நளினமலர் மங்கை - தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் இலக்குமி ; இதிலுள்ள கதையை அம்புலிப்பருவம் ஆறும் பாட்டில் காண்க. குருட்டு அரவர் ஆக என்று பிரிக்க. அரவர் - பாம்பாயுள்ளவர் ; எண்ணில் வனசச் செஞ்சரணம் - கணக்கற்ற தாமரைபோன்ற சிவந்த பாதங்கள். தாமரை முத்துக் கொடுத்தல் பற்றிச் " சரணம் முத்திய " என்றார். (3)

95. கடுக்கையான் - சிவபெருமான் ; இலங்கேசன் - இலங்கைக்குத் தலைவனான இராவணன் ; புலவராகுலம் முடிப்பான் - தேவர்களது துன்பத்தை நீக்குவதற்கு ; வன்னி என நேர்ச் சென்று - நெருப்பைப்போன்று விரைந்து அவன் எதிரில் சென்று ; கல் நிகர் தடக்கை - மலையை யொத்த பெரிய தும்பிக்கை ; வாய் கழீஇ வருமுன் - இடக்கரடக்கல் ; முக்கால் - மூன்று தடவை ; அவுணர்கோன் - இராவணன் ; சென்னி - தலை ; "பொன்னியல்..... ........புரி முதல்வ": —இலங்கை யழியாதிருக்க சிவபெருமானை நோக்கி இராவணன் தவம் செய்தான். அவர் தரிசனம் தந்து அவன் விருப்பப்படி ஒரு சிவலிங்கத்தைக் கொடுத்து அசுத்தத்துடன் தொடலாகாது, இலங்கை போமளவும் பூமியில் வைக்கக்கூடாதெனச் சொல்லக் கேட்டு அதனைப் பெற்று இலங்கைக்கு வந்து கொண்டிருந்தான். இதனையறிந்த தேவர் இவன் இலங்கையில் இம் மூர்த்தியைக் கொண்டு போனால் இவன் அரசு அழியாதாகையால் தக்க ஆலோசனை செய்து, விநாயகரிடம் குறை கூறி வருணனை ஏவி வயிற்றில் சிறுநீர் சுரக்கச் செய்தனர். அதனால் இராவணனுக்குச் சிறுநீரின் உபத்திரவம் அதிகமாயிற்று. அச் சமயத்தில் விநாயகர் ஓர் பிரம்மசாரியாய் எதிர்வரக் கண்டு "நான் கைகால் சுத்தி செய்து வருமளவும் நீர் இச்சிவ லிங்கத்தைப் பிடியும்" என வேண்டினன். சிறுவனாக வந்த விநாயகரோ இராவணனை நோக்கிச் "சிறுவனாதலால் என்னால் தாங்கமுடியாது ; மூன்று தரம் கூப்பிடுவதற்குள் வந்து விடவேண்டும்" என்று கூறிச் சிறிது நேரத்திற்குள் அவனை யழைத்து அவன் வாராமையால் பூமியில் வைத்துவிட்டார். அவன் "ஏன் கீழே வைத்தாய்?" என்று கேட்க, "இதன் வலிமை என்னால் பொறுக்க முடியவில்லை" யென்றார். இராவணன் தன் ஆற்றல் முழுவதையும் சிவ

லிங்கத்திடம் செலுத்தித் தூக்கியும் சிவலிங்கம் சற்றேனும் பெயராது பசுவின் காதுபோல் குழைந்தது. இந்தச் சிவலிங்கம் பசுவின் காது போல் குழைந்ததுபற்றி அந்தத் தலத்திற்குக் **கோகர்ணம்** எனப் பெயராயிற்று. (கோ - பசு; கர்ணம் - காது); பின்பு இராவணன் பிரம்மசாரியிடம் கோபங் கொண்டு ஓடிப் பிரம்மசாரியைக் குட்ட விநாயக மூர்த்தியாகி இவனைத் தமது துதிக்கையால் செண்டாடினார். இராவணன் வலியொடுங்கி வேண்ட கருணை புரிந்தார்; அங்கை காது பிடிவந்தனை - அழகிய கையினால் காதைப் பிடித்துத் தோப்புக்கண்டம் போடுதல்; வருக என விளித்து அதைப் பெருநிலம் இருத்தலால் - வருக என்று கூப்பிட்டு (வாராததால்) அச்சிவ லிங்கத்தை அகன்ற நிலத்தில் வைத்துவிட்டதனால்; மற்று - அசைநிலை; அவன் வெகுண்டு - இராவணன் கோபித்துக் குட்ட; அவனிடும் கைக்குட்டு மாறும் - அவன் தனக்குச் செய்த குட்டுக்கு மாறாக தானே கைகளால் குட்டிக் கொண்டு செய்வதையும். (4)

96. தோலாது - சமம் குறையாது; பூபங்கு - பூமியின் கூறுகளை யறிந்து; விக்கினம் - குறை; கவுள் மதம் - மதநீர் பாயும் சுவட்டை உடையது; சிறு நயனம் - சிறிய கண்கள்; இக்கு இறை - கரும்பு வில்லுக்குத் தலைவன் (மன்மதன்); இக்கு - கரும்பு; நுதற்கணர் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான்; ஏரம்பன் - விநாயகர் பெயர்களில் ஒன்று; ஆரம்ப - எல்லாத் தொழில்களின் ஆரம்பத்திலும் துதிக்கப்படுபவனே; எறிதரங்கத்து உவர் இருங்கடல் பூதலம் - வீசும் அலைகளையுடைய உப்புத் தன்மையுள்ள கரியகடல் சூழ்ந்த பூமி; இசை - புகழ்; சிந்தை செயவரும் - மகிழ்ச்சி யுண்டாக்க வரும். (5)

97. ஊனேறு உடல் - மாமிசம் பொருந்திய உடல்; உலைப்புறும் - மனதைக்குலைக்கும்; மீனேறு கண் கமலை நாதன் - மீன்போன்றுள்ள கண்களையுடைய இலக்குமியின் கணவன் (திருமால்); வேதன் பதம் - பிரம்மாவின் சத்திய உலகம்; நின் தந்தை பதம் - உன்னுடைய தந்தையான சிவபெருமானின் கைலாய உலகம்; அரன் வேதாந்தம் - சிவனைத் துதிக்கும் வேதங்கள்; மந்தி - பெண் குரங்கு; மலர் நெக்கு - விரிந்து நெகிழ்ந்து; முட்கனி - பலாப்பழம்; மதுரச் செழுந்தேறல் - இனிய செழித்த தேன்; அறுகால் - வண்டு; வழிக்கும் - வடியச் செய்யும்; ஆகாயத்தை யளாவிய கிளைகளில் ஏறிப் பெண்குரங்குகள் விரித்து, நெகிழ்த்திய பலாப்பழத்தினிடமிருந்து இனிய செழித்த தேன் வெள்ளமான பெரிய கால்வாயில், பூக்களிலிருந்து வண்டுகளால் வடிக்கப்படும் தேனும் சேர்ந்து பாய்ந்து உயர்வைச் செய்யும் வயல்கள் சூழ்ந்த அரும்பாத்தை நகர் என்க. (6)

98. கால் பாய - கால்கள் நிலத்தில் பற்றுதல்; அபயக்கை, வரதக்கை என்பதன் விரிவைத் திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ் 10-வது பருவம் கடைசி பாட்டின் குறிப்புரையில் காண்க. நூல்பாயும் மதி - பல புத்தகங்களைப் படித்ததினால் விரிந்த புத்தி; நூபுரச் சரண - பாதத் தண்டைகளையுடைய கால்களையுடையவனே; வயலின்பால் - வயலினிடம்; கமுகம் பழக்குலை - பாக்கு மரத்தின் பழக்குலை; கழங்கு - கழற்காய்; வயலினிடம் பாயும் அகன்ற நீர்க்கரையின்மீது பாக்கு மரத்தின் குலையிலிருந்து வீழ்ந்த காயைத் தாமரைபோன்ற கையில் அடைந்த கழற்காயைப்போல பூமாதேவி தாங்க, சேல்மீன்கள் ஏதோ இரை விழுந்ததென்று வேகத்தோடு யெழும்பிப் பாய, அத்தகைய வள மிகுந்த அரும்பாத்தைப் பதி என்க; பூமியை மகளாக உருவகப் படுத்திப் பூமியில் விழுந்த பாக்குக் காயை அவளது தாமரைபோன்ற கையிலுற்ற கழங்கென உவமிக்கிறார். தேவர்கட்குப் பூமியில் கால்கள் பரவாதிருந்தும் விநாயகரைத் தரிசிக்க வந்து கலந்தனர். “கண்ணிமைத்தலான் அடிகள் காசினியில் தோய்தலான், வண்ணமலர் மாலை வாடுதலான்...........” என்ற நள வெண்பாவை நோக்குக. (7)

99. கரைசேர் அரும்பிறவி வாரி - பேரின்பக் கரையைச் சேர்தற்கு முடியாத பிறவிக்கடல்; இரவி - சூரியன்; கரை பிணி - மனதையுருக்கும் நோய்; வாரிக்கும் மதலை - கடலுக்கான மரக்கலம்; ஆன மழை - பருவகாலத்தில் பெய்யும் மழை; வறுமைக்காலம் - பஞ்சக் காலம்; வரையேறு முத்தி - எல்லையற்ற மோட்சம்; கபாடம் - கதவு; ஒருகாலும் - ஒப்பற்ற காற்றும்; நெடுநாள் வைத்துப் புரைசேர் மதன் கையிற் கிடைவாளி கழுவிப் புதுக்கி எதிர் நீட்டிய தென - நீண்டநாள் ஓரிடத்தில் வைத்துக் குற்றம் (அழுக்குச்) சேர்ந்த மன்மதன் கையில் கிடைத்த அம்பைக் கழுவிப் புதுமை செய்து எதிர் நீட்டியதுபோல; புண்டரிக வுலையினிடை நீலமுகை செய்ய அப்பொழுது கருமகன் நிலை செய்யும் திரை நீர் - தாமரையாகிய உலைக்களத்தினிடையில் (கருமான் பட்டடை) நீல நிறமான மொக்கு இட அப்பொழுது கருமான் நிலைபோன்று செய்யும் அலைகளையுடைய நீர்; கருமகன் - கருமான்; மன்மதன் கையிலுள்ள அம்பைக் கழுவிப் புதுமை செய்து நீட்டியதுபோல தாமரையாகிய உலைக்களத்தின் மத்தியில் நீல நிறமான அரும்பு தோன்றியது. அப்போதுள்ள நிலை கருமான் தாமரையாகிய உலைக்களத்தில் நீல முகையாகிய அம்பைச் செய்வது போன்று விளங்கியது. அத்தகைய அலைநீர் சூழ்ந்து வளம்பெறும் அரும்பாத்தைப் பதி என்க. திரைநீர் கருமானுக்கும், புண்டரிகம் அவன் பட்டடைக்கும், நீலமுகை அவன் செய்த அம்புக்கும் உருவகித்தல் காண்க; உத்தமா - விளி. (8)

100. உருமணிச் சுடிகை - நிறமமைந்த அழகிய நெற்றிச் சுட்டி யெனும் ஆபரணம், சுடிகை என்பதிலுள்ள உம்மை எச்ச உம்மையாக மற்ற ஆபரணங்களையும் காட்டியது. செவ்வதரம் - சிவந்த உதடு; திரு நாவி வட்டம் - அழகிய வட்டமான கொப்பூழ்; இடை - இடுப்பு; **வல்லபை:**—மரீசி முனிவர் ஸ்நானத்திற்குச் சென்றபோது அத் தடா கத்து இருந்த தாமரை ஒன்றில் குழந்தை யிருந்தது. முனிவர் குழந்தையைக் கண்டு எடுத்து வந்து தம் மனைவி தேவவல்லியிடம் கொடுத்து வளர்த்து வல்லபை என்று பெயரிட்டனர். இவள் வளர்ந்து தவமியற்றி வருகையில் விநாயகமூர்த்தி வேதியர் உருக்கொண்டு இவளிடம் வந்து வசிக்கப் பார்த்தனர்; கலங்கவில்லை. பின் தம் சுய உருக் காட்டி மணஞ்செய்து கொண்டனர். பொலன் துடை - அழகிய துடை எனும் உறுப்பு; அடு பாசம் - வருத்தும் பாசம்; தேசு சேர் - ஒளியமைந்த; "தியானமே செயுமவர்க்கு ஆருயிர்த் துணைவன்" எனப் பிரிக்க. (9)

101. கயம் - யானை; அங்கைப்படை - அழகிய கையிலுள்ள ஆயுதங்கள்; துரந்தும் - விட்டும்; பணை மருப்பு - பருத்த தந்தம்; வாங்கி - ஒடித்து எடுத்து; மூடிகம் - பெருச்சாளி; பொள்ளென - இசைக்குறிப்பிடைச் சொல்; கயமுகாசூரன் வரலாற்றைச் சப்பாணிப் பருவத்தில் 7-வது பாட்டின் குறிப்பில் காண்க. நெட்டுயிர்ப்பு - நீண்ட பெருமூச்சு; ககன முகடு - ஆகாயத்தின் உச்சி; கயமுகா சுரனது சேனையை யெல்லாம் விநாயகர் தனது நீண்ட மூச்சினால் ஆகாயத்தின் உச்சி, கடலிடம் ஆகியவைகளிடம் செலுத்தித், தன்னிட முள்ள ஆயுதங்களெல்லாம் நீங்கியும் பயமில்லாமல், எதிர்த்து வந்த அசுரனுயிர் அழிய, பருத்த தந்தத்தை ஒடித்தெடுத்து அவ்வாயுதத்தை வீசி அவனுடலைக் கெடுக்க, அவ்வசுரன் பாலனென்று விநாயகரை நினைத்து வாலுடன் கூடிய மேகம் போன்ற பெருச்சாளி உருவாக எதிர்க்கவும், விரைந்து ஏறி அதன் மீதமர்ந்து பூமியைச் சுற்றி வந்தார். (10)

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ்க் குறிப்புரை,

முற்றிற்று.

---

# வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்

## தெய்வ வணக்கம்

### நம்மாழ்வார்

102. செம்பொன்னி னின்பநிறை சதுமறை பழுத்தொழுகு
தெள்ளமுத சாரமென்னுந்
திவ்வியப்பிர பந்தநா லாயிரமு நாதமுனி
தேறவருள் செய்துகந்து
தம்புகழ் விரித்ததைக் கண்டுல கெலாந்தொழத்
தகைமேவு குருகைதன்னிற்
றயவுட னுதித்தமகிழ் மாறனும் வீரனிரு
சரணமல ரடிபணிகுவாம்
தும்பிமுரல் சோலைசூழ் பலவினிடை முதிர்கனிச்
சுளைநறவு தோய்த்துமதமா
தொடர்பிடிக் குதவிமகிழ் திருவழுதி நாடனுயர்
தூயபிர மன்வணங்கும்
நம்பரன் வைகுந்த நாதன்மணி வண்ணன்மால்
நவநீதசோ ரன்மாயன்
நாரணன் சீர்பரவு பிள்ளைத் தமிழ்க்கவிதை
நவிலுமென் சொற்றழையவே. (1)

### சரசுவதி

103. முப்பரஞ் சோதிதனை மூர்த்திதிரு நாபிதன்
முளரிவந் தவதரித்த
முனிவனின் புறநாவி லுறைவாணி கலைமாது
முத்தர்புகழ் காயத்திரி
செப்பரிய பனுவலாழ் உளாள்பூர வாகினி
செழுந்தமிழ்க் குதவிசெய்யுஞ்
செல்விபா ரதியுலக மாதாவெனுந் தேவி
செம்பொற்பா தம்பணிகுவாம்
மைப்புயல் முழங்கவரி யிபமென்று குதிபாயும்
மலையரவு களிகூர்ந்திடும்
மகிமைபெறு தென்வழுதி நாடனென குலமுழுதும்
மனதுகந் தடிமைகொள்ளும்

அப்பன்வேங் கடவாணன் வைகுந்தை நாதனிணை
யடியேத்துப் பிள்ளைக்கவிக்
கைந்திலக் கணமுமத னுட்பொரு ளும்திகழ்ந்
தமைந்தெனது சொற்றழையவே. (2)

## ஆண்டாள்

104. அண்டர்தவ வேதியர்கள் பூசுரர்கள் மன்னர்கள்
அனைவரு மிறைஞ்சியேத்தும்
அம்புவி புகழ்ப்புதுவை மேவியுரை பட்டர்கோ
னருமைமக ளெனவுதித்து
வண்டுளப மணியரங் கேசர்மகிழ் பாமாலை
வாய்மலர்ந் தருளியினிய
மதுவொழுகு பூமாலை சூடிக் கொடுத்தசெக
மாதாவி னடிபரவுவாம்
கொண்டல்கடல் மொண்டுமலை சென்றுபொழி கின்ற
குடவளைக் குலமதனெடும் [புனல்
குஞ்சரக் கோடுசா தகில்கனக முத்தங்
கொழித்துலவு பொருநைநதி
தண்டுறை வளம்பெருகு தென்றிருவை குந்தைநகர்
தன்னில்வளர் எங்கள்பெருமான்
சலசையணி மார்ப னிசைபரவுபிள் ளைக்கவிதை
சாற்றுமென் சொற்றழையவே. (3)

## பொய்கையாழ்வார்

105. செய்யதே மாப்பலா வரம்பைமுத லியகனித்
தேனுமலர் பொழியுநறவுஞ்
சேர்ந்துசெந் நெல்கழனி பாய்ந்துபைங் கூழ்வளர்
திருக்கச்சி தனிலுதித்தோன்
வையகத் தகழிமிசை வார்கடலை நெய்யிட்டு
மார்த்தாண்ட தீபமேத்தி
மங்கலச் சொன்மாலை செங்கண்மால் கழல்புனையு
மறைமுனிப் பதந்துதிப்பாம்
துய்ய கமலத்தன் வந்தடிதொழுது சுருதிமுறை
சொல்லியா ராதனைசெய்
சுகமுனியை நிகர்பரம பாகவதர் பல்லாண்டு
துங்கமுட னேதிநிற்பப்

பையரவின் விடமுண்ட பண்ணவர் முதற்கடவுள்
தரைமீ திறைஞ்சியேத்த
பாவாணர் புகழுந்தென் வைகுந்தை நாதனிசை
பகருமென் சொற்றமிழையவே. (4)

## பூதத்தாழ்வார்

106. ஓம்நமோ நாராயண வென்று நாமத்தை
யுச்சரித் துள்ளங்களிப்
புறுமன்பு தகழியினி லார்வநெய் பெருகுவென்
புருகுநெஞ் சிடுதிரியென
ஞானதீ பச்சுட ரெடுத்தா தரித்தமுனி
நற்சரணி தம்பரவுவாம்
நறைவண்டு குழல்மொய்ப்ப வதுபொரு திடைதுவளு
நடைகண்டு பிடியொதுங்கும்
மானனையர் வேல்விழியர் மையல்கொள் வனப்புநிறை
மைந்தர்பொருள் மேலாசையால்
மருவிப் பிரிந்தவரை வரவுகண் டுள்ளமகிழ்
மாதர்முக முறுவலெனவே
கானமர் செழுங்கமல முல்லைமல ரெங்குமலி
காவுசூழ் திருவைகுந்தைக்
கள்ளப் பிரான் சரிதை யின்புற்று நவிலுமென்
கவிதையின் சொற்றமிழையவே. (5)

## பேயாழ்வார்

107. திருவும்பொன் மேனியு மருக்கனிற முஞ்செவ்வி
திகழாழி யுஞ்சங்கமுஞ்
சிந்தையுட் கண்டுவந் தேத்தியந் தாதிமொழி
செய்துமகிழ் பரமயோகி
தருவன மலிந்தளிக ளிசைபாட மஞ்ஞையத்
தண்டலைகண் மீதிலாடுந்
தண்கமல வாவிசூழ் மயிலைப் பிரான்தமிழ்
தவமுனிவ னினிதுகாக்க
பருவமுகில் சொரியுமிரு நிதியும்நவ மணிகளும்
பணிலம துயிர்த்தமுத்தும்
பகலொளி பரப்புந்தென் வைகுந்தை நகர்மேவும்
புண்ணவன் வேதனலுங்

கருதரிய முத்திக்கு வித்தான தேவனைக்
கருணைபொழி புண்டரீகக்
கண்ணனைப் பொற்பூவை வண்ணனைப் புகழுமென்
கவிதையின் சொற்றழையவே. (6)

திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், குலசேகராழ்வார்

108. நான்முகனை நாரா யணன்படைத் ததுவுமந்
நான்முகன் றன்முகமதாய்
நக்கனையளித் ததுவும் மிக்கான தேவனந்
நாரண னென்பதனையும்
மானிலத் தோரறியவோதவென் றின்பமொடு
மழிசைவந் தவதரித்தோன்
மதிலரங்கத் துறையு மமலனைக் கண்டகண்
மற்றொன் று காணாதெனக்
கர்னிசை பொருந்துகவி யீரைந் துரைத்துமால்
கழலிணை புனைந்துமகிழ்வோன்
கனகமணி யாரத்தை யன்பாக வாரென் று
கட்செவி தனிற்கையிடுந்
தென்மூர னு மாலையணி சேரர்கோ னிம்மூவர்
சேவடிப் போதுபணிவாந்
தென்வைகுந் தைக்கள்வர் தன்புகழ் விரிக்குமென்
செந்தமிழ்ப் பாத்தழையவே. (7)

பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார்

109. ஈரேழ் பெரும்புவன மெங்குநிறை கின்றதோ
ரீசநா ரணனென்பதை
யிருக்குமறை யோதியுந் தெரியாத நுட்பொருளை
இவ்வுலகு ளோரறியவே
வீரநெடு வன்றிறல்கள் சேர்வழுதி மன்னவன்
வியப்புறக் கிழியறுத்து
மேன்மைதிகழ் பல்லாண்டு பாடிமகிழ் பட்டர்கோன்
மெய்ப்பதப் போதுகளையும்
சீர்கொண்ட திருமாலை யாலரங் கேசனே
தெய்வமென் றறிவையுணருஞ்
செல்வனிரு கழலிணையு முன்னிமுடி சூடியனு
தினமுமஞ் சலிசெய்குவாம்

பாரதிக் கிறைவனு ராதனைசெய் தடிதொழும்
பங்கேருகக் கண்ணனைப்
பார்புகழ்தென் வைகுந்தை மேவியுறை மாயனைப்
பகருமென் சொற்றமிழயவே. (8)

## திருமங்கையாழ்வார், மதுரகவியாழ்வார்

110. மன்னுயிர்க ளுய்யவே தத்தினுறை நுட்பொருளை
வாய்த்ததிரு வாய்மொழியென
மாறன் பணித்ததற் காறங்க முரைசெய்ய
வையகத் தவதரித்தோன்
பன்னுமுத் தமிழினல் நாற்கவிதை யுரைசெய்து
பரமனடி கண்டுவந்த
பரகாலன் மங்கைதிரு மணவாள னிருசரண
பங்கேருகப் போதையும்
நன்னெறியி லுய்ப்பதற் கின்னிலந் தனில்வந்த
நாவீர னேயலாது
நான்வேறு தெய்வங்க ளறியே னெனுங்கவிதை
நாட்டிமகிழ் மதுரகவியின்
பொன்னெழில் பொருந்துகழ றன்னையு நிதந்தொழுது
புங்கமுட னேதுதிப்பாம்
பொங்குபுகழ் வைகுந்தைத் தங்கியுறை கள்வனைப்
புகலுமென் சொற்றமிழயவே. (9)

## இராமானுசர்

111. செகமீது சேதனர்க ளுய்ந்துகரை யேறிடச்
செவ்விபெறு ரகசியத்தைச்
செப்பிநா ராயணன் பரனெனக் காட்டியே
தெளிவித்த கருணைவள்ளல்
இகபர மிரண்டினுங் கதியுதவு மாறனடி
யிணைமலரின் வாழுமன்பன்
இன்பகிறை பூதூரில் வந்துமகி ழெதிராச
னிருசரணிதம் பரவுவாம்
ககனத்தை முடிவளர் கதலியின் கனிதனைக்
கமழ்புதிய நறவுதோய்த்துக்
கடுவன் முசுவுக்குதவு நாடனெழி லைந்தருக்
காமன்வந் தேவணங்கும்

புகழ்மருவு வைகுந்தை நாதனிசை போற்றுநற்
பொலிவுமிகு செந்தமிழ்க்குப்
பொருந்துமீ ரைந்தழகு மேய்ந்துமன தின்புறப்
புகலுமென் சொற்றமைழயவே. (10)

### பெரியநம்பி, மணவாளமுனி

112. சந்தனக் காவுதிகழ் செம்பதும வாவிசூழ்
சாந்தூரி லவதரித்தோன்
தண்குருகை மேவும்ப ராங்குசன் வியந்தவொரு
தாசனெனு நாமமுறுவோன்
எந்தனிரு புயமதிற் சங்காழி தனையணிந்
திம்மையினு மறுமைதனிலும்
ஏழேழ் பிறப்பினு முவந்துவிலை கொண்டுமகி
ழிறையவன் பெரியநம்பி
கந்தமரு வுஞ்சரண பங்கயப் போதையுங்
கருதுததி யார்க்குமுத்தி
காட்டுமண வாளமுனி தாட்டுணை யிரண்டையுங்
கவினுட னிதம்பணிகுவாஞ்
செந்திரு மடந்தையருள் சந்தத நிறைந்துலவு
தென்வைகுந் தைக்கள்வனைத்
தேவாதி தேவனெனு மூவர்க்கு முதல்வனைச்
செப்புமென் சொற்றமைழயவே. (11)

---

## செங்கீரைப்பருவம்

---

113. பூமாது கருணைபொழி சீர்மருவு வயிணவர்கள்
புனிதமறை யோதிநிற்பப்
போதக முகக்கடவுள் ஆறுமுகன் மாதவர்கள்
புத்தேளி ரனைவருடனே
காமாரி வந்தடி பணிந்துமன தார்வமொடு
கைதொழுது புடைநெருங்கக்
கஞ்சமல ராசனன் வணங்கியெப் பொழுதினுங்
கருதியா ராதனைசெயக்

கோமா னெனுந்தலைவர் பாவாணர் சூழ்ந்துகவி
கொண்டுநின் கழலிலணியக்
குவளைவிரி மலரதனை நிகருமிரு விழிகொண்ட
கோசலை பெறுங்கண்மணியே
தேமாவெனுஞ் சொல்மொழி மாமேவு மணிவண்ண
செங்கீரை யாடியருளே
தென் திருவை குந்தைநகர் நின்றுநித மகிழ்கள்வ
செங்கீரை யாடியருளே. (1)

114. ஆவுரு வமைந்துபுவி மாதுதவ மேகருதி
அன்புட னியற்றுமந்நாள்
அருள்கொண் டளித்தவர் பாலனஞ் செய்வதற்
கவதரித் தோங்குபொழுதிற்
பூவைமொழி யைப்பொருவு மேனியெழிலுங் கமலை
பொற்பிலகு மணிமார்பமும்
புரிசங்கு நேமிகதை வாடனுவோ டைம்படை
பொறித்தவொரு நான்குகரமுங்
கோவையின் கனிநிகர்செவ் வாயுமிரு காதிலணி
குண்டலமு மந்தகாசக்
குறுமுறுவ லும்பதும விழியுமணி மகுடமுங்
குல்லைமல ருங்கணுற்றுத்
தேவகி யுகந்துபுகழ் தேவாதி தேவனே
செங்கீரை யாடியருளே
தென்றிருவை குந்தைநகர் நின்றுநித மகிழ்கள்வ
செங்கீரை யாடியருளே. (2)

115. மேதினிப் பாரமது தீரமன தெண்ணிநீ
மேவுபா லாழிநீங்கி
மேதாவி யானவசு தேவர்க்கு மகனுகி
மெல்லியல் கோதையென்னும்
மாதுமுலை யுண்டுகளி கூர்ந்துசக டாசூரன்
மாய்ந்துவிழ வேயுதைத்து
மங்கையென வந்ததொரு பேய்ச்சி யுயிர்கொண்டநிற
மாமணி பொற்கொண்டலே
காதுவேற் கண்ணினர் பாதநூ புரவொலிகள்
கருதியின மென்றுசெல்லக்
காமுறுந் திருவழுதி நாடநங் குலநாதர்
கங்கைநதி யொழுகுபாதச்

சீதரா மலரின்வரு கோதைபுகழ் மணவாள
செங்கீரை யாடியருளே
தென்றிருவை குந்தைநகர் நின்றுநித மகிழ்கள்வ
செங்கீரை யாடியருளே. (3)

116. நந்தன்மனை வந்துகுடி கொண்டுவிளை யாடவந்
நாகணை துறந்துபாடி
நகர்மேவி யெண்ணிரண் டாயிரந் தொகைகொண்ட
நங்கைகோ வியர்களென்னும்
யிந்துநுத லார்களுறை சேரியிட மெங்குநீ
யேய்ந்தகோ லங்கள்தம்மை
யிசைபயிலு மகரயாழ் நாரதன் கண்டடி
யிறைஞ்சவருள் செய்தழுகிலே
சந்தகிற் பீலிநவ மணிக ளங்காடியின்
றன்மையென் றதிசயிப்பச்
சலஞ்சல நிறைந்துதிகழ் பொருநைமா நதிவளத்
தகைமருவு வழுதிநாட
சிந்துரத் திலதமணி யிந்திரைதன் மணவாள
செங்கீரை யாடியருளே
தென்றிருவை குந்தைநகர் நின்றுநித மகிழ்கள்வ
செங்கீரை யாடியருளே. (4)

117. காவிலுறை பூவையிசை கேட்டுக் களிப்புடன்
கமலமதில் வாழுமன்னங்
கருதுதன் பெடைதனை முயங்கிமன தின்பமொடு
கண்படைபொருந்து மெழில்சேர்
வாவியருகுற்றுவளர் கேதகை குரண்டமென
வாளைபுன லூடொழிக்கும்
மாங்கனி பிதிர்ந்தொழுகு சாறுநற வும்பெருகு
மகிமைபெறு வழுதிநாட
மேவுசமர் மீதிரத மேல்வரு கிரீடிக்கு
மெய்ப்பொரு ளுரைத்தழுகிலே
மேலான பலகோடி யண்டப் பரப்பினுள்
வேதன்பு ராரிமுதலாந்
தேவர்க்கு மழுதின்வரு தேவிக்கு மணவாள
செங்கீரை யாடியருளே
தென்திருவை குந்தைநகர் நின்றுநித மகிழ்கள்வ
செங்கீரை யாடியருளே. (5)

**வேறு**

118. காவுறை மந்தி யருந்திட முக்கனி
கடுவ னளிப்பதனைக்
கண்டிடு மள்ள ருரற்ற மறுத்தது
கனிகொடு விட்டெறியும்
பூவிரி வாவியோர் சாகர மெனமுகில்
புனலை நுகர்ந்துடனே
பொன்னெழில் முத்தொடு சோனை வழங்கு
பொலன்றிகழ் வளநாட
தாவர சங்கம தெங்கும் நிறைந்த
தயாபர நற்பொருளே
சங்கரனுக் குயர்கங்கை கொடுத்த
சரோருக பொற்சரணு
தேவர் தொழுங்கரு ணாநிதி ரகுபதி
செங்கோ செங்கீரை
தேனிசை துளவணி வானிள வரசே
செங்கோ செங்கீரை. (6)

119. ஆத வனைத்தொடு நீண்மதி லும்புய
லண்ணிய சோலைகளும்
அம்பவ ளக்கொடி போலிள மங்கைய
ராட லரங்குகளும்
போத முரைத்திடு நங்குர வோர்கள்
பொருந்துநன் மாளிகையும்
பொற்றொடி மெல்லியர் வதுவையுமேவிய
புனிதநகர்க் கிறைவ
மாது துரோபதி மாயவ னேயென்
வன்றுயர் களையெனலும்
மன்னவை முன்னவள் கூறை யருவகை
வரம தளித்தருளுஞ்
சீத மறைப்பொருள் மீதுறை கனியே
செங்கோ செங்கீரை
தேனிசை துளவணி வானிள வரசே
செங்கோ செங்கீரை. (7)

120. பூவல யத்துள காவலர் விப்பிரர்
புகலரு மாமறையோர்
புங்கவ ரன்பொடு நின்விளை யாடல்
புகழ்ந்து பணிந்திடவே

மாவிரி பூநற வுண்டு களிப்பொடு
வண்டுக ளிசைபாடும்
மஞ்ஞைகள் தோகை விரித்து மதர்ப்பொடு
மாடம தனிலாடுங்
காவுறை யோதிம மங்கையர் மென்னடை
கண்டு நிதந்தொடருங்
கதலி நெருங்கிய முளரி வளஞ்செறி
கவின்மிகு வளநாட
தேவகி மணிவயி றுவல்கொள் களிறே
செங்கோ செங்கீரை
தேனிசை துளவணி வானிள வரசே
செங்கோ செங்கீரை. (8)

121. மங்கையர் கொங்கை சுமக்கரி தாய்மிக
மறுகுறு நுண்ணிடையை
வாளரியா மெனவேழ மருண்டு
வெருண்டு மறைந்துறையும்
பொங்கரின் மீது தவழ்ந்திடு திங்கள்
புடைக்கு மிறுலருவி
பொற்புறு சோலை வளர்க்கு நலந்திகழ்
பொதிய மலைக்கிறைவ
கங்கை தரித்தவ னங்கையில் வைத்த
கபால நிறைந்திடவே
கருணை யுடன்பலி யன்று கொடுத்தருள்
கஞ்ச மலர்க் கரனே
செங்கம லத்திரு மேவுமின் னமுதே
செங்கோ செங்கீரை
தேனிசை துளவணி வானிள வரசே
செங்கோ செங்கீரை. (9)

122. அங்கண் விசும்புறை தேவர் தபோதன
ரனைவரு மடிபரவி
யன்புட னின்றிரு லீலை தனைக்கண்
டகமது களிகூரப்
புங்க முடன்புன லாருச் சியுந்திகழ்
பூழ்தி கடுக்கையிளம்
புல்லோ டெருக்கலர் சங்கு மணித்திரள்
புனைசிவ சம்புவெனுஞ்

சங்கர னைப்பெறு பங்கய னைத்தரு
தாமோ தரமுகிலே
தனிமதி வெண்குடை யுவணநெடுங்கொடி
தம்மி லிசைந்துவரச்
செங்கைகொ ளைம்படை தங்கிய மாநிதி
செங்கோ செங்கீரை
தேனிசை துளவணி வானிள வரசே
செங்கோ செங்கீரை. (10)

---

## தாலப்பருவம்

---

123. மதியை நிகர்த்த திருநுதலிற்
மருப்போற் சாந்துத் திலதமிட்டு
வதியுங் களப முலைமடவார்
வாழு மணிமா ளிகைச்சிறப்பும்
உதய கிரணன் வலஞ்சூழ
வோங்கும் பொன்மா மேருகிரி
யொத்த நெடுந்தோ ணிவகுப்பும்
உயரும் புரவித் திரட்செறிவும்
முதிய தவத்தோ ருபயமறை
மொழியுங் கழகச் சாலைகளும்
முகில்போ லொலிக்கு மாய்ச்சியரும்
முயற்சி யிருத்தும் பதிக்கரசே
கதிரோன் குலத்தி லுதித்தசெழுங்
கனியே தாலோ தாலேலோ
கற்றோர் துதிக்கும் வைகுந்தைக்
கனியே தாலோ தாலேலோ. (1)

124. சங்கத் தமரர்க் கிடையூறு
தவிர்க்கச் சலதி தனைமறந்து
சரையு வெனுமா நதித்துறைவன்
றனக்கு மகனென் றுதித்திடுநாள்
எங்க ளமுதே கண்மணியே
யிரவி குலத்துக் கொளிவிளக்கே
இருமைப் பயனுந் தருநிதியே
யிமையோர் தவமே யிளங்களிறே

வங்கக் கடல்சூழ் புவித்தலைவர்
மதலாயெனக் கோசலை மடமான்
மகிழ்வுற் றிருத்தும் பொன்னூசல்
மருவித் துயிலும் மணிவண்ணா
பங்கே ருகனும் பசுபதியும்
பணியும் பரனே தாலேலோ
பதின்மர் பரவும் வைகுந்தைப்
பதிவா ழரசே தாலேலோ. (2)

125. முல்லை முறுவல் பவளவிதழ்
முளரி வதனங் குரும்பைமுலை
மூரிக் குழலார் நடைநிகர்த்த
முகில்போல் மருவும் பிடிக்குழுவுஞ்
செல்லின் முழக்க மெனவார்ப்புஞ்
சினமும் பொருந்து மதவேழத்
திரளுஞ் செறிந்த நெடுஞ்சோலை
திகழும் பதிவா ழிளவரசே
வில்லை வளைத்துக் காத்துநின்ற
விசையன் றுயரந் துடைப்பதற்காய்
விளங்கு மறையோன் மைந்தர்களை
விருப்போ டளித்த பெருமானே
குல்லை நறுந்தா ரணிநீலக்
குன்றே தாலோ தாலேலோ
கோக நகைவாழ் வைகுந்தைக்
கோவே தாலோ தாலேலோ. (3)

126. கலைசேர் சசியைப் பொருவுமுகங்
கனியைக் கடுக்கு மினியமொழி
காவி மலரைச் செறுத்தவிழி
கணிகை மடவார் காப்பேந்த
மலைபோற் புயத்து வயவேந்தர்
வணங்கி நெருங்கக் குருகையர்கோன்
வழங்குந் திருவாய் மொழிப்பிரபந்தம்
மறையோர் நவில வாச்சியங்கள்
அலைபோ லொலிப்பச் சதுர்வேத
மார்ப்பக் கொடிகள் புடைதயங்க
அமரர் கரங்கள் குவிப்பவிழா
வணியும் பதிவா ழிளவரசே

சிலைவா ணுதற்கோ சலைதவத்தின்
றிருவே தாலோ தாலேலோ
செம்பொன் மதில்சூழ் வைகுந்தைத்
தேவே தாலோ தாலேலோ. (4)

127. இசையுந் திருவும் பெரும்படையு
மேய்ந்த மனக்கம் பீரமுடன்
இரைக்குங் கடலை யுடுத்தபுவி
யெங்குந் தனிச்செங் கோல்செலுத்தி
அசையாப் புகழ்பெற் றரசாளு
மண்ணல் தனக்கு மகவெனவே
அயோத்தி நகர்வந் துதித்திடுநா
ளன்னை யெனுஞ்சிற் றவைமனையில்
வசையார் கூனி கூன்புடைக்க
வரிவில் வளைத்துண் டையைத்தெறித்து
மகிழ்வோ டிருந்து மனமுவக்கு
மணியே அமரர் தொழுங்கள்வ
திசையா னனத்தோன் றினம்பணியுஞ்
செல்வக் கொழுந்தே தாலேலோ
செம்பொன் மதில்சூழ் வைகுந்தைத்
தேவே தாலோ தாலேலோ. (5)

128. தண்டா மரைப்பூந் தவிசுறைவோன்
தருக்கா வலனு மைக்கதிபன்
சயிலந் துளைக்க வயில்துரந்தோன்
றபனன் சசியைங் கரன்முதலோர்
கொண்டாட் டங்கொண் டுளங் குளிர்ந்து
குனித்துத் தொழக்கோ வியருடனே
குடையும் புனலில் விளையாடுங்
கோவே யாயர் குலதிலகா
வண்டார் குழற்சத் தியபாமை
மார்பந் தழுவு மணவாளா
மருவுஞ் சீவ கோடியெல்லா
மகிழ்வோ டுன்றன் வயிற்றடக்கிப்
பண்டா லிலையிற் கண்டுயிலும்
பரமா தாலோ தாலேலோ
பதின்மர் பரவும் வைகுந்தைப்
பதிவா ழரசே தாலேலோ. (6)

129. செய்ய திருவாய் பாடிநகர்ச்
சிறுவர் தம்மோ டருங்கானஞ்
சென்று பசுவி னிரைமேய்த்துச்
சின்னாளாடற் புரிந்ததற்பின்
வெய்யக் சமர தனிற்பருதி
வெயிலை யாழி கொடுமறைத்து
விசைய னுயிரைக் காத்தளித்து
விளங்குங் கருணை நிதிக்கடலே
துய்ய தவத்தோ ருளத்துமறைச்
சிரத்துத் தொழும்பும் பூண்டகுலத்
தொண்ட ரிடத்து மாறன்மொழி
சொல்லுந் தலத்து மயனுலு
மெய்தற் கரியபெரும் பூதத்து
மிருக்கும் பொருளே தாலேலோ
இருக்கு முழங்கும் வைகுந்தைக்
கினிதா மமுதே தாலேலோ. (7)

130. படவா ளரவம் பூங்கதலி
பசுந்தேன் குமுதஞ் செப்பனவே
பகரு நிதம்பங் குறங்கிசைவாய்
பருத்த தனஞ்சேர் எழிலாயர்
மடவார் கூறைதனைக் கவர்ந்து
வளருங் குருந்த மரத்தேறி
வாழ்த்துங் குரவை தனைக்கேட்டு
மகிழ்வுற் றிருக்கும் மணிவண்ணு
வடபத் திரமுங் புளிங்குடியு
மதில்சூ ழரங்க மாநகரும்
மறையோர் புகழும் வெண்மைநிற
மதியை நிகர்த்த திருப்பாலின்
கடலும் பொருந்திக் கண்டுயிலுங்
கருமா முகிலே தாலேலோ
கற்றோர் துதிக்கும் வைகுந்தைக்
கனியே தாலோ தாலேலோ. (8)

131. பச்சை பொருந்துங் குழன்மடவார்
படிந்த புனற்போற் விரிதிரையின்
பரவைப் புலவுதனை நீக்கிப்
பகருஞ் சாந்தங் கமழ்நாடர்

கொச்சை யாயர் குடில்வளர்ந்து
கோவி னிரையைக் காப்பதற்குக்
குன்ற மெடுத்து மழைதடுத்த
குழகா நந்தன் பெறுந்தவமே
பிச்சி தவனம் செறிமுட்டம்
பேரை குறுங்கை யிடபகிரி
பீடு கொழிக்குஞ் சேடமலை
பெரியோர் வழுத்தும் நெடுந்துவரை
கச்சிப் பதியுமின் றுவக்கும்
கனகாம் பரனே தாலேலோ
கற்றோர் துதிக்கும் வைகுந்தைக்
கள்வா தாலோ தாலேலோ. (9)

132. பஞ்சை நிகர்க்குந் தளிரடியும்
பணியைப் பழித்த வேள்மணியும்
படையைத் துரத்து மயில்விழியும்
பகரு மெழிற்கோ சலைமடமான்
நெஞ்ச மகிழுந் தவக்களிறே
நித்தர் பரவு மெய்த்தவமே
நேமி நடத்தும் தசரதன்ற
னிதியே நாளு முளங்கருதி
வஞ்ச மறலி யணுகாமல்
மயக்கு மிதர சமையநெடு
வாத ரிடத்தில் சேராமல்
வரமு மதியுந் தருங்கள்வா
கஞ்ச மலராள் தனமுயங்குங்
கருமா முகிலே தாலேலோ
கற்றோர் துதிக்கும் வைகுந்தைக்
கனியே தாலோ தாலேலோ. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

133. நங்கைபெறு மாறனிசை போற்றியுயர் பாகவதர்
நவிலும்பிர பந்தமொருபால்
நாவலர்கள் பாவினிசை வேதவொலி மாதர்சதி
நடனங்கள் புரிவதொருபால்

பங்கயன் முதற்கடவுள் சங்கந் திரண்டடி
பணிந்துகை குவிப்பதொருபால்
பாராளு மன்னவர்க ளோர்பால் வணங்கமகிழ்
பைந்துழா யணியுமுகிலே
மங்கைகோ சலையினிரு கொங்கைவழி பாலுண்டு
மதிவதன நோக்கியவடன்
மடிமீ திருந்தன்ப ருளமேவி விளையாட
வருமர கதக்குன்றமே
சங்கர னுவந்துபுகழ் செங்கமல மணவாள
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (1)

134. நக்கனவன் மக்களனல் வெற்புமுது கிட்டுவழி
நண்ணமன தெண்ணியோடி
நாற்றிசையும் முட்டியினி யாற்றலரி தெனவெண்ணி
நாரண சரணமிருநால்
அக்கரத் துறைமூல காரண சரணமறை
யாரண சரணமெனவே
யன்புடன் வழுத்தவா ணன்பிழை பொறுத்துமகி
ழச்சுதா பச்சைமாலே
யிக்குமொழி மாதர்மனை சிக்கமுறு வெண்டயி
ரெடுத்துணவு கொண்டசோதை
யிருகண் கழிக்கவவ ளொக்கலை மருங்கி
லிருந்துலவு செங்கனகமே
தக்கதரு வாசன்மேற் சக்கர நடாத்துமுகில்
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந்தைச் சோர
சப்பாணி கொட்டியருளே. (2)

135. பூமன்னர் திறையிடச் சோம வெற்றிக்குடை
பொருந்தமா கதர்களேத்தப்
பூசுரர்க ளாசி சொல வேசையர்கள் சாமரை
புரட்டவரி யாசனத்திற்
காமனெழில் கொண்டதென மேவியுல காண்டகளை
கண்ணனே மித்தசரதன்
காமுற் றியற்றுபெரு வேள்விப் பயன்பெறக்
கருதிவந் தருளுநிதியே

வாமமே கலையணியு மாதுகோ சலையிரு
மலர்க்கரங் கொண்டெடுத்து
மஞ்சுதிகழ் பொன்மேனி நீராட்டி முத்தமிட
மகிழுங் குணக்குன்றமே
தாமரைப் போதிலுறை மாமருவு மணிவண்ண
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைச்சோர
சப்பாணி கொட்டியருளே. (3)

136. அந்தணர்கள் விண்ணவர்கள் வன்றுயர் தவிர்க்கநீ
ளலைமோது திரைவீசுபால்
அம்பரத் துயிலமர்ந் திம்பரிற் புகழ்திரு
வயோத்திமா நகர்வந்தநாட்
பந்துமுலை யிந்துநுத லிந்திரை யெனத்திகழ்
பசுந்தொடி புனைகைகேசி
பரதனிப் பாராள நீயடவி செல்லென்று
பார்த்திப னுரைத்ததெனலுஞ்
சிந்தையுள் மகிழ்ந்தனுச னொடுமிதிலைக் கண்வரு
செல்வியொடு நகர்கடந்து
தெண்டக வனத்துமுத் தண்டின ரருஞ்சாலை
சென்றுமரு வுங்கொண்டலே
தந்தைமொழி கடவாத சுந்தரக் கடவுளே
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைச்சோர
சப்பாணி கொட்டியருளே. (4)

137. மாசற்ற வெண்ணிறப் பாற்கடலி னடுவிலொரு
மரகத கிரிபோலுநீ
வனமாலை சூடியிரு மாதரடி வருடமலர்
விழியினி துயின்றமுகிலே
யீசர்க்கு முளரியிதழ் வாசர்க்கு மெட்டா
திருக்காதி யந்தநடுவும்
எம்மைவிலை கொள்ளுமறை யோகிரா மானுசனை
யேத்துநல் லோரிடத்துந்
தேசுபெற விளையாடி யானந்த நிர்த்தனஞ்
செய்யும் பரஞ்சோதியே
செகமீ தரக்கர்குல மடிவிப்ப தற்கென்று
சிலையேந்தி மகிழ்சிங்கமே

தாசரதி காகுத்தகோ சலைபெறுங் கண்மணி
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைச்சோர
சப்பாணி கொட்டியருளே. (5)

138. மதிவதன முறுவலும் காவிநிகர் மேனியு
மட்டுநிறை குல்லைமலரும்
மலைபொருவு தோள்களுஞ் சிலைநுதற் சுட்டியு
மார்பிலகு கனகவடமும்
புதியநற வெனவொழுகு கனிவாயி னூறலும்
புங்கமுங் கண்டசோதை
புளகித் தெடுத்துச்சி மோந்துகாப் பிட்டுமகிழ்
போதமெய்ஞ் ஞானரசமே
கதிபெறு வதற்குதவு மிருமறையி லுற்றபொருள்
காட்டுமண வாளமுனிவன்
கழலிணை பணிந்துபழ வினையற்று முத்திநெறி
கருதுபா கவதரென்னுந்
ததியருள முறைகின்ற பதின்மர்தொழு மணிவண்ண
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (6)

139. மூலமறை யோதுபா வத்துநிலை தெரியவென
முனிபிருகு சென்றுமருவி
முளரிமலர் பொருவுநின் மார்பத் துதைக்கவு
முனியாது செங்கரத்தாற்
காலிணைத் தடவியவன் மாலினை யகற்றியெக்
காலுநித் தியனென்பதைக்
கருதியடி தொழவவர்க் கருளுமா மணிவண்ண
கஞ்சனுயிர் கொண்டகளிறே
சீலக் குணத்துவசு தேவன் றனக்குரிய
தேவகிதன் மனதின்புறச்
சிறுவரா றுவரையுமொரு நொடியிற் கொணர்ந்துதவு
சிங்கமே யமரரேறே
தாலப் பெருந்துவச மாலிவென் றண்ணலே
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைச்சோர
சப்பாணி கொட்டியருளே. (7)

140. வம்பவிழ் மலர்க்குழ லசோதையில் வளர்ந்தாயர்
மகவினுட ஞத்துரத்தி
வசுக்கொடு விளங்கனி யெறிந்துவிழ வதுகண்டு
வுற்றுமகி ழும்பரமனே
அம்பரத் துறையமர ரிம்பரின் மனுத்தலைவ
ரனைவர்க்கு மிடர்செய்திடும்
அசுரப் பருத்திப் பொதிக்கொரு நெருப்பாக
வவனிவரு பிரகலாதனின்
கம்பலை யுறுதுமன தின்பங் குளிர்ந்துனது
கழலிணை வழுத்தவவனற்
காட்டுந் தலந்தோறு முதிக்கவுள் ளங்கொண்டு
கனகனை வதைக்குமன்னுள்
தம்பத்து வந்துபே ரின்பங் கொடுத்தமுகில்
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைச்சோர
சப்பாணி கொட்டியருளே. (8)

141. சீதச் செழுங்கமல வாவிக்கு ளொருமுதலை
செய்யவேதி யனையீர்க்கச்
சிலைவளைத் தம்முதலை தனைவென்று புகழ்பெற்ற
திறல்விசையன் முதலைவரும்
மாதர்க்கு ளெழின்மிக்க கோதற்ற கற்புடைய
மடமங்கை பாஞ்சாலியும்
மனதுகந் தடிபணிய அவர்மனங் களிகூர
மறைமுனிவர் தேவர்பிறரும்
நீதத் துடன்பரவு பாதஞ் சிவப்பெய்த
நெடுநகர்த் தூதுசெலுநாள்
நேசமுறு விதுரன்மனை நண்ணியமு துண்டுமகிழ்
நிமலா பரஞ்சோதியே
தாதவிழ் மலர்க்குழ லசோதைபெறு சிங்கமே
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைச்சோர
சப்பாணி கொட்டியருளே. (9)

142. தினகர னுதித்ததென மணியழுத் துங்கனக
சிங்கா சனத்திருந்து
செங்கோல் செலுத்திமகு டாதிபதி தசரதன்
செய்யுமுற் பயனினுலும்

மனநல முறும்பெரிய தவவிரத வேதியர்கள்
வானவர்கள் வேண்டலாலும்
மாயவினை வஞ்சனைசெ யுங்கொடிய நிருதர்களை
மடிவிப்பதற் குன்னியும்
நனிமிகு கருங்குழலி கவுசலைதன் மகவென்று
நண்ணிவன மேவுமந்நாள்
நற்றவன் பன்னியன சூயையிரு கையினுன்
கையணி யணிந்துவந்த
சனகியுடன் மருவியனு தினமுமகிழ் காகுத்த
சப்பாணி கொட்டியருளே
தருமலர்க் காவுசூழ் திருவைகுந் தைக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. (10)

---

## முத்தப்பருவம்

---

143. சித்தர்புகழ் கேசவா நாரணா மாதவா
சீர்மருவு கோவிந்தனே
திகிரியணி விண்டுவே மதுசூ தனநெடிய
திருவிக்கிர மாவாமனா
அத்திமரு விக்கண்வளர் சீதரா தொண்டருக்
கருள்புரியு மிருடிகேசா
அயனைப் பெறும்பதும நாபதா மோதரா
அகிலகா ரணவென்னவே
கொத்தவிழ் மலர்க்குழ லசோதைபனி மொழியினாற்
கூவிமடி மீதுவைத்துக்
கொஞ்சிமுலை யூட்டிநீ ராட்டிமகிழ் வதுகண்டு
குறுமுறுவல் கொள்ளுமணியே
பத்தருடன் விளையாடு நித்தமுகில் வண்ணநீ
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (1)

144. துட்டவல் லசுரர்களை யட்டல்புரி நேமியும்
சுரிசங்க மும்பாயலுங்
துன்னுமிளை யோர்களென நண்ணிவரு வோமென்று
சுரர்களுக் கபையநல்கி
யிட்டமொழி யெண்ணியே வட்டைநிகர் கொங்கைதிக
ழேந்திழை யெனுங்கவுசலை
யினிதுவகை கொள்ளவவள் திருவயி றுதித்துமகி
ழிறைவனே யெம்பிரானே
மட்டவிழ் நறும்போதை விட்டுச் செழுங்குல்லை
மருவிக் குழந்தையாகி
மல்லிவள நாட்டினுயர் வில்லிபுத் தூர்வந்த
மாதினுக் கொருதந்தையாம்
பட்டர்கோ னடிகள்பணி சிட்டருள மேவுமுகில்
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (2)

145. நீர்த்தரங் கப்புணரி சூழ்புவியி லைவர்க்கு
நிற்கவோ ரடியுங்கொடேன்
நீதூது வந்ததிற் பயனில்லை யென்றரவ
நெடியகே தனனிசைப்பப்
போர்த்தொழில் நடத்திச் சயத்திர தனைக்கொலப்
புங்கமுறு கணைவாங்கவே
போகின்ற வழியிலுன் பாதமணி மலருமுன்
புண்டரிக னல்விளக்குந்
தீர்த்தமுஞ் சிரசிலிட் டகமகிழ் கிரீசனைச்
செய்யவிசை யன்கணுற்றுச்
செப்புமவ் வரனுக்கு மீசனீ யென்றுணர்வு
தெளியவரு ளும்பரமனே
பார்த்தசா ரதியென்ற சீர்த்திபெறு கண்ணநின்
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (3)

146. சங்கையில் லாதகலை கற்றவே தியர்களுந்
தன்னைவந் தடிவணங்குந்
தவநெறி புரிந்துனது வரவுகண் டுள்ளமகிழ்
சவரிபூ சனையுகந்து

துங்கமுள மாருதி வணங்க அவனுக்கருள்
சுரந்துவள சோலைநண்ணி
சுக்கிரீ வனுக்கபுய மிக்குற வளித்தவன்
துயர்துடைத் திடவெண்ணியே
செங்கைவரி வில்வளைத் தொருபகழி கொண்டடற்
றிறல்வாலி தனைமடித்துத்
தினகரன் மகற்குமகு டங்கவித் தாட்கொண்ட
சிங்கமே யங்கணரசே
பங்கய மலர்க்கண்வரு மங்கையுறை மார்பநின்
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (4)

147. குடவளை யடற்றிகிரி கொண்டகை யிரண்டினுங்
கோல்குழ லெடுத்தடவியிற்
கோவினிரை பின்சென்று மாயவிளை யாட்டினது
கோலங்கள் காணவென்றே
மடல்விரிந் துங்கமல மலருறை யயன்கருதி
வசுவினை மறைக்கவதுபோல்
மறுபடியமைத் தவைகள் மனமருவ வுய்த்துமகிழ்
மதிவதன மதிசூதன
கடகரி நெருக்கமென வுறுமிரு ளகற்றவரு
கதிரவன் வயப்புரவியைக்
கட்டலிட வான்முகடு முட்டிவளர் சோலைசூழ்
கானகத் தொருமடுவினிற்
படவரவி னுச்சிமிசை நடனமிடு பொற்சரண
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (5)

148. வார்கெழுமும் கொம்மைமுலை யோர்திக ழுமைக்கதிபன்
வாணியிறை யும்பர்தலைவன்
வாதநெடு வாருதி வசுக்களன லதுக்கதிபன்
வந்துலவு மிந்தாதவன்
சூர்பகை தடிந்தகுக வேழசுரர் முதற்கடவுள்
துய்யமறை யோர்தவத்தோர்
துன்புற்று நைந்துருகி முறையிட்டு வந்துனது
துணையடி வழுத்தியேத்த

நீரிலொரு கேழலென மேவியவ னுற்றெவரு
நிகரிலாப் பொற்கண்ணனை
நெஞ்சைப் பிளந்துயிரை மறலிக் களித்தவுடன்
நீண்டதிண் மருப்பினிடையே
பார்மகளை வைத்துமகிழ் சீர்பெறு வராகநின்
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (6).

149. நச்சர வெனப்பொலி யிராவண னிலங்கைமா
நகரினிற் சிறையிருந்த
நங்கையன லழுங்கிவர நம்பிமுனி வைக்கண்ட
நானில நடுக்கமுறவே
வச்சிர கரத்தலைவன் முச்சிகை யயிற்கடவுள்
வானவர்கள் புண்டரீகன்
வந்துநீ முந்துமறை யோதுபர னிவனுலக
மாதாவெனத் தெரிகிலாக்
கொச்சைமதி யுற்றநிரு தக்கிளை யெனுங்கடல்
குறைத்தெமது துன்பநீக்குங்
கொண்டலே யிக்கத மினித்தவி ரெனக்கரங்
கூப்பிமகி ழுஞ்சிங்கமே
பச்சைமலை யென்னவொளி ரச்சுத மனுத்தலைவ
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (7)

150. விரதமறை யோரும்பர் மருவுசித் திரகூட
மேவியிளை யோனமைத்த
மேலான பரம்பத மாலினிலை கடலென
விளம்புபன் னகசாலையின்
மருவார் குழற்சனகி யருகே யிருப்பமன
மகிழ்வோடு விளையாடுநாள்
மணிமுடி கவித்துன்னை யரியணையில் வைத்தடி
வணங்கவென் றேகைகேசி
தருபுதல்வன் வருவதனை யமர்பொரு வதற்கென்று
தம்பிமுனி வுடனெழுந்து
தாரணி படைப்புணரி நீறெழ மடிக்கவிடை
தரவேணு மென்றுகழறப்

பரதன்வரு கோலத்தை வரதபா ரென்றமுகில்
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (8)

151. வஞ்சியிடை பஞ்சினடி மிஞ்சுமெழில் மங்கையுடன்
மருவுபாண் டவருமேகி
வனமுறையு நாளிருடி யுணவுக் குதவிசெயு
மாமீது முதிர்பழத்தை
விஞ்சைநெறி கற்றவிறல் விசையனொரு கணையேவி
விழவுமற் றதனையறிந்து
மிக்கமறை யோன்வெகுளு மென்றமொழி கேட்ட
வெருவியுன் னடிபணியவே [வுடன்
அஞ்சல்மி னெனப்புகன் றவரவர்க ளுற்றமன
தாசையினை யறையுமெனலும்
ஆதிமுத லீறுவரை சொற்றபொழு தத்தருவி
லக்கனி பொருந்தவருளிப்
பஞ்சவர் சகாயனென மிஞ்சுபுகழ் பெற்றமுகில்
பவளவாய் முத்தமருளே
பன்னுமறை யோர்தொழுந் தென்வைகுந் தைக்கள்வ
பவளவாய் முத்தமருளே. (9)

---

## வாரானைப் பருவம்

---

152. நிறையுங் கலைகள் மருவுஞ் சசியை
நிகர்த்த வதனன் வருகவே
நிருதன் சாபந் துடைத்து மகிழும்
நிமலன் வருக வருகவே
நறைவண் டுளப மாலை யணியு
நம்பன் வருக வருகவே
நாரி பாகன் வேத னெவர்க்கு
நாதன் வருக வருகவே

உரியில் வெண்ணெய் திருடி யுண்ட
வுதரன் வருக வருகவே
உரல்பின் றொடரத் தவழுங் கனக
வோங்கல் வருக வருகவே
மறைகள் பரவு முபய சரண
மாயன் வருக வருகவே
வாசங் கமழுந் திருவை குந்தை
வரதன் வருக வருகவே. (1)

153. பாணி யமர்ந்த வேணி யுங்கா
பால முழுழுச் சூலமும்
பணியுங் கடுக்கை மாலை யுமழுப்
பரசுந் தரித்த கடவுளைப்
பேணித் தவசு புரியு மசுரன்
பீடு மகிழ்ந்து கொடுவரப்
பெருமை தெரிய வவன்பின் றொடரப்
பிழைக்கு மிடங்க ளுடியே
சேணிற் றிரிந்து சிவனுக் கபயஞ்
சிறப்புற் றளித்தவ் வசுரனைச்
சிதைத்துத் துயரந் துடைத்து நிவந்த
சீத ரபரஞ் சோதியே
வாணிக் கிறைவன் பூணும் பொற்பதன்
மாயன் வருக வருகவே
வாசங் கமழுந் திருவை குந்தை
வரதன் வருக வருகவே. (2)

154. சீதத் திவலை துளிக்கு மகரஞ்
செறிந்த கடலி னடுவினிற்
றேவ ராலுமேவ வரிய
தென்னி லங்கை தன்னிலே
பூத மைந்து வேத நான்கு
புவன மூன்று விண்ணினிற்
பொருந்து கின்ற சுடரி ரண்டு
போத மொன்றிவ் வனைத்தையுந்
தாத விழ்ந்த பூவி யந்து
தங்கு கின்ற வயனையுந்
தந்த வன்னை சனகி யான
தைய லைக்கண் டேனென

வாத மைந்தன் வந்து ரைக்க
மகிழு மாயன் வருகவே
வாசங் கமழுந் திருவை குந்தை
வரதன் வருக வருகவே. (3)

## வேறு

155\. முதியோ ரருந்தவர்கள் கதிசேர் நங்கைசெய
மொழியும்பிர பந்தமென்னும்
முன்னூலை யனுதினமு மேத்தியவ் வழிநின்ற
மூடசிக் களேயலாது
நதியார் செழுஞ்சடிலன் விதியோன் முதற்கடவுள்
நண்ணுதற் கெட்டாததாய்
நவிலுதற் கரிதான பரமபத நாதாநீ
நானிலம் புகழ்வைகுந்தைப்
பதிமேவி யர்ச்சாவ தாரமென வந்ததைப்
பாரோ ரறிந்துய்ந்திடப்
பழமறையி லோதுதிரு மந்திரத் துட்பொருள்
பகர்ந்துவெளி யிட்டசீமான்
எதிராச னடிபரவு மதியோர்க ளுளமருவும்
எங்கள்கண் ணன்வருகவே
யிந்திரர்க் கருள்புரியு மெந்தைவா னிளவரச
னிருடிகேசன் வருகவே. (4)

156\. வன்புல நடத்துகரு மேந்திரிய மைந்துடன்
மருவுஞானேந் திரியமைந்து
மடங்காத விடயங்க ளீரைந்தினைச்சேர்ந்து
வளர்கின்ற கரணநான்கு
சொன்னவோ ரிருபத்து நான்கைப் பொருந்தித்
துலங்குஞ் சடத்தினுள்ளே
சோதிமய மாகவுறை யாதது நீயென்று
சுருதிசொலு மெட்டெழுத்தின்
சின்மயப் பொருளோதி யுலகைத் திருத்திமகிழ்
தேசிகன் பெரியநம்பி
சேவடி துதித்துத் தொழும்பரம பாகவதர்
சிந்தைமலர் மேவியென்றும்
இன்பமொடு விளையாடு மிறைவமா தவகண்ண
வெம்பெரும நீவருகவே
யிந்திரர்க் கருள்புரியு மெந்தைவா னிளவரச
னிருடிகேசன் வருகவே. (5)

157. கருமுகில் முழக்கமென வருமிரத வோசையுங்
கடலெனத் திகழ்தானையுங்
ககனகோ ளங்கள்முதல் வெடிப்பட வுரற்றுநெடு
கைம்மதம் பொழிவேழமும்
பருதிவா னவன்வயப் புரவியை நிகர்த்தளவில்
பல்குதிரை யின்றிரள்களும்
பருவரை யொத்தபுய வீரரு நெருங்கியெதிர்
பாரதப்போர் தன்னிலே
யருதியுட னுன்னடி பணிந்துமகிழ் பாண்டவர்க்
காருயிர்த் தரிக்கவுன்னி
யம்பவள வாயில்வெண் சங்குவைத் தூதியவ்
வமராரைச் செயித்தமாலே
யிருநா லெழுத்திலுறை திருமா லசோதைதரு
மிருகண்ணின் மணிவருகவே
யிந்திரர்க் கருள்புரியு மெந்தைவா னிளவரச
னிருடிகேசன் வருகவே. (6)

158. கொங்குகமழ் கோதைமலர் தங்குநற வுண்டுகளி
கொண்டுலவு வண்டுமுரலுங்
கோகில நவிற்றுமிசை பாகினை யியைந்தமொழி
கோகனக மான்பொருட்டுக்
கங்குல்பக லற்றொளி பரப்புகக னத்திலுறு
கற்பகக் காவைமருவிக்
கந்தமலி கின்றதரு வொன்றினை யெடுக்கவது
கண்டகா வலர்கள்சூழ்ந்து
சங்கையற வந்தமர் புரிந்தவர்கள் சாய்ந்திடச்
சங்கினோ தையைமுழக்கித்
தளமுகை நிறைந்துவரி பாரிசா தத்தினைத்
தரைமீது கொணருமுகிலே
யெங்கள்குடி முழுவதும் புங்கமுடன் விலைகொள்ளு
மீசநா ரணன்வருகவே
யிந்திரர்க் கருள்புரியு மெந்தைவா னிளவரச
னிருடிகேசன் வருகவே. (7)

159. ஓராழி பூணிரத மேலே யுலகிருளை
யோட்டுமார்த் தாண்டகிரணத்
தொளிபரவு புவிமுழுது மரசினை நடத்தியுய
ருத்தான பாதனென்னுங்

தாரார்புயத் தண்ணல் சீர்திகழ் மனைக்கிறைவி
சாற்றிய கடுஞ்சொல்லினாற்
றாமரை நிகர்த்தவிழி நீர்பொழிய நெஞ்சினிற்
சலங்கொண்டு கானமருவி
நாராயணன் பரம னீராறு நாமமே
நன்மைதரு மென்றுதுருவன்
நவிலுந் தவங்கருதி யகமகிழ்ந் தன்புபுரி
நம்பனே புருடோத்தமா
ஈரேழு புவியினையு மோர்பொழுதி னுண்டுமி
ழிருக்குமுதல் வன்வருகவே
யிந்திரர்க் கருள்புரியு மெந்தைவா னிளவரச
னிருடிகேசன் வருகவே. (8)

160. சீர்மருவு வெண்கயிலை மேவிவல முஞ்செய்து
தினமும் பணிந்துவருவோன்
செருச்செய வெதிர்த்தவர் வலத்திலொரு பாகமது
சேர்வர முற்றதிறலோன்
நீர்கெழு பெரும்பரவை யேழுமது சூழ்புவிக
ளேழுநெடு மலைகளேழும்
நீலமுகில் ஏழுமிவை போலுட லமைந்துரு
நிவந்தபுய வீரமுடையான்
பாரில்வளர் பூதங்க ளைந்தினையு மிகல்செயும்
பண்புபெற் றுயர்வாலியாம்
பருவரை தனைக்கொல்ல விவனே தெனக்கருது
பருதிமகன் மையலறவே
யேருலவு பகழிகொண் டோரேழு மரத்தினையு
மெய்தரா கவன்வருகவே
யிந்திரர்க் கருள்புரியு மெந்தைவா னிளவரச
னிருடிகேசன் வருகவே. (9)

161. குயினறவு கற்கண்டு பாகுகனி யாமெனக்
கூறிய மிடற்றினிசையுங்
குவளைகரு வண்டுகயல் இயல்பகழி யாமெனக்
கூர்விழியு நீர்மருவிய
புயலெனத் திரளளக பந்தி யுங்கனகப்
பொருப்பைநிக ரிருகொங்கையும்
புண்டரிக வதனமும் புன்முறு வலுங்கொண்ட
பொற்பில கசோதைகுளிர

அயனரன் முதற்கடவு ளண்டகோ டிகள்பல
வணைத்துமுத ரத்தினுள்ளே
யடங்குவதை யம்மா தினுக்குமுன் காட்டியவ
ளகமகிழ வைத்தமணியே
யியல்கொண்ட வயிணவர்கள் பயிலுபய வேதமுத
லெம்பெரும நீவருகவே
யிந்திரர்க் கருள்புரியு மெந்தைவா னிளவரச
னிருடிகேசன் வருகவே. (10)

---

## அம்புலிப்பருவம்

---

(தானம்)

162\. தெண்டிரையி லுற்பவித் தும்பொன் மகமேருவைத்
தினமுநீ வலமாகவே
திகைத்துத் திரிந்ததிலு நீங்காத முயன்மறுத்
தீரவோ ருபாயமதுகேள்
கெண்டைவிழி மாதர்குழல் கண்டுதம ரென்றுளக்
கெருவமுற் றனவரதமுங்
கேகய நடம்புரிதல் பார்த்துவந் தாசையாற்
கெம்பீர மோடெழுந்து
கொண்டல்கள் முழங்கிநெடு மாமலை யிதாமெனக்
குலவுமெழில் மாடமேவிக்
கோமள மதாகநற் சங்குநிதி தரளங்கள்
குவியவள மதுசுரக்கும்
அண்டர்மனை சென்றுததி யுண்டமணி வண்ணனுட
னம்புலீ யாடவாவே
அல்லிமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுடன்
அம்புலீ யாடவாவே. (1)

163\. உம்பர்தேர் இரவியின் புரவிதன் னயர்விணுக்
குரியமிழ லுதவியாற்றும்
உயர்மரச் சோலைசூ ழிந்நகர்ப் பொன்னனு
ருந்தனைப் பார்த்துநாளுஞ்

செம்பவள வாயினொளி காலிட நகைத்துச்
சிரிப்பதற் கஞ்சியேகிச்
செய்யதவழ் வேள்வியா லுதித்தும் பயோததி
செழிக்கக் கடைந்தவன்னாள்
தம்பமென வேநின்று மிமையவர் குழாத்தினொடு
தண்ணமுத முண்டுமகலாச்
சாரமர பக்கமுறு தேய்தல்தீர்த் தருள்செயுந்
தகைபெறச் சமயமிதுகேள்
அம்புவி புகழ்ந்துதொழு நம்பரந் தாமனுட
னம்புலீ யாடவாவே
அல்லிமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (2)

164. எஞ்சலில் லாதபட வரவினது நிழலினு
லிதையமது வாட்டமுற்றே
யெண்ணிப் புலர்ந்துமன துட்குதல் தவிர்ந்துநீ
இன்பமோ டுச்சிதமதாய்
மிஞ்சுபுகழ் கொண்டுனது தண்ணளி பரப்பியே
மேக்குற் றுயர்ச்சியாகி
மிக்கான வேதியர்கள் தேவர்கள் துதித்திடு
மேன்மைபெற வேண்டிலிதுகேள்
குஞ்சர மிளைத்தாதி மூலமென் றோலமிடு
குரலுக் கிரங்கியன்னுட்
குவலயத் தெவருநின் றதிசெயித் தேற்றிடக்
குருமணிப் புள்ளிலேறி
அஞ்சலென வந்துதவு செஞ்சக் கரத்துட
னம்புலீ யாடவாவே
யல்லிமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (3)

165. காதுதோய்ந் தேகுமிழ் மறித்திட வுலாவிமிளிர்
கண்ணைத னினமெனத்தேன்
கண்டணுகி யிடைபொரு தெனவுருகு மெழில்மேவு
கன்னியர்கள் தொழுமுன்றனைக்
கோதைகமழ் மாதர்தங் கொழுநர்பிரி காலையில்
கொடியதழ லெனவீசிடுங்
குறைநீங்கி யனுதினந் தண்மதி யெனப்பொருவு
குணமருவு சமையமிதுகேள்

சீதமலர் பொழிநறவு கனிகள்பிதிர் சாரோடும்
சேர்ந்துமத கூடுபாயும்
திருவழுதி நாடனெனக் குலமதனை விலைகொண்ட
செங்கமலை வாழுமார்பன்
ஆதிமறை தேடரிய சோதிரகு நாதனுட
னம்புலீ யாடவாவே
யல்லிமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (4)

166. மன்னுமெழி லம்பிகையை வாமமதில் வைத்துலவு
வர்தனது சென்னிமேவி
வாழ்ந்தாலு நீங்காத வன்பகை தவிர்த்தருளி
வானவர்கள் கண்டுவாழ்த்த
தென்னிலங் காபுரியி லுன்னொளி செலுத்திடச்
செய்ததை வியந்துன்னிநீ
செங்கமல வாவியரு கூர்வளைக ளீனுநிறை
செவ்விமிகு தரளந்தனைக்
கன்னல்செறி காவில்வாழ் குருகுதன் சினையெனக்
கருதியே யடைகிடக்குங்
கவின்மிகுந் தோங்குபுகழ் திருவழுதி நாடனுயர்
கமலாசனன் பரவிடும்
அன்னவுரு வாகிமறை சொன்னநங் கண்ணனுட
னம்புலீ யாடவாவே
அல்லிமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (5)

167. பரவைசூ ழுலகினை விழுங்குசெங் கதிரவன்
பண்புபெறு பொழியுமழலைப்
பணிநிலவு வீசிவெப் பாற்றியுஞ் சமர்முகப்
பாசறையில் வாகைசூடி
வருமிளைஞர் புயமதில் தனமுயங் கப்புணரு
மாதருக் கமுதாகவே
வளமைபெற் றும்பயிர்க் குறுதுயர மின்றியே
வளரும் படிக்குதவியும்
இருவிருளை யோட்டியுந் தகைபெற்ற வுன்னையே
எம்பிரான் கூவவாரா
திருப்பது பெரும்புகழ்க் கொக்குமோ வாதலா
லெழிலா ரசோதைமகவாம்

அரவினணை மருவியுறை பரமபத நாதனுட
னம்புலீ யாடவாவே
யல்விமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (6)

168. பார்புகழு மாதவர்கள் தேடரியப் பொற்பதப்
பரமனென் றுணருந்ததி
பாண்டனுக் குயர்கதி கொடுத்துமிரு கண்டமுனி
பாலர்க்கு நெறியுதவியும்
மாரன்மனை யானைநகு மெழில்பொருவு பாஞ்சாலி
மருமருவு குழல்முடிக்க
மாற்றலரை வென்றுமகிழ் எம்பிரான் கூவநீ
வந்திடி லுனக்கென்றுமே
சீர்திகழு மீர்முறை சோடச நிறைந்தகலை
சேரவருள் செயுமாதலாற்
செம்பவள முல்லைமலர் வாய்முறுவல் என்னுமத்
தேவகிபெறும் புதல்வனும்
ஆரமொடு மாமகளை மார்பிலணி கண்ணனுட
னம்புலீ யாடவாவே
யல்விமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (7)

169. பூரணக் குடமெனப் பொலியும் பயோதரப்
பொற்பில கசேர்தைமகவாம்
புங்கவ னுனக்கு வருந்துதல் தவிர்த்துப்
பொருந்துகலை யீவதற்குக்
காரணஞ் சோலைசெறி நீர்பெருகு வாவிநிறை
கஞ்சமல ரென்னவொளிரும்
கரதலங் கொண்டுமதி வாவென் றழைத்திடக்
கருதிவா ராததென்னே
வாரணத் துரிவையினை மேனியிற் போர்த்தசிவன்
வாணியிறை யும்பர்தலைவன்
வந்தடி தொழக்கருணை யுந்தும் பிரான்கமலை
வாழுமணி மார்பனெங்கோன்
ஆரணத் துறையுமிந் நாரணக் கடவுளுட
னம்புலீ யாடவாவே
யல்விமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (8)

(தண்டம்)

170. பழமறை தொழும்பரம புருடனென் றறியாது
பண்டுசிசு பாலனென்பான்
பகர்கின்ற விசையினுக் ககமுன்னி யவனுடல்
பதைத்துவிழ வேவிடுத்துந்
தழலெரி யெனும்பங்கி யிருள்செறியு மேனிமிர்
தானவர்கள் கிளைமுழுவதுந்
தரைப்பட மடித்ததுவு மோர்திகிரி செங்கரந்
தனிலிருப் பதையறிந்தும்
மழவிடை யெனத்திகழும் மாயனுனைவாவென் று
வாயிதழ் மலர்ந்துகூவ
வாரா திருக்கிலக் கூராழி விடுவனென
மனதெண்ணி யிந்நேரமே
அழகுபெறும் செங்கமலை யுளமருவு கள்வனுட
னம்புலீ யாடவாவே
யல்லிமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (9)

(தானம்)

171. சென்னெலங் கழனிவள நாடனென் கோன்மலர்த்
திசைமுகன் வணங்குதேவன்
தேவகி பெறும்புதல்வன் வாவென் றழைத்திடச்
சீருடன் விரைந்துவந்தால்
முன்னைநீ செய்தவினை யால்வருந் துயரெலா
முற்றவு மகற்றிநாளும்
முழுமதி யெனப்பொருவ வரமீவ னீதன்றி
மூவுல கினுஞ்செலுத்தத்
துன்னுகிர ணங்கள்செறி செங்கதிர்கள் எங்கினும்
தோன்றிய தெனத்திகழ்வுறுந்
தூய்தான நித்திய விபூதியினு முன்னொளி
துலங்கவருள் செயுமாதலால்
அன்னைதிரு மாதினுள மன்னுநங் கண்ணனுட
னம்புலீ யாடவாவே
யல்லிமகிழ் வைகுந்தை வல்லிமண வாளனுட
னம்புலீ யாடவாவே. (10)

---

# சிற்றில் பருவம்

172. வானோர் குழுவு மவர்க்கிறையு
மதிசே கரனுந் திசைமுகனும்
மலரா லருச்சித் தடிவணங்கி
மாலே கள்வ னெனத்துதித்து
மேனுள் ளேவந் திரந்ததற்காய்
விறல்சேர் மாலி சுமாலிதனை
மேவி யமர்செய் திடக்கருதி
விளங்குங் கருடப் புள்ளேறித்
தானே யெதிர்த்த வரக்கர்தம்மைச்
செயித்த வுவப்போ வுருக்குமணி
தனத்தில் முயங்குங் கெருவிதமோ
தகைந்து விளையாட் டழிக்கின்றாய்
கானார் கமல மான்வருடுங்
கழலாற் சிற்றில் சிதையேலே
கந்தங் கமழும் வைகுந்தைக்
கனியே சிற்றில் சிதையேலே. (1)

173. வடம்பூண் முலையு நுடங்கிடையு
மதிபோல் முகமுஞ் செங்காந்தள்
மலரைப் பொருவுங் கரதலத்தில்
வதிந்த விழியாங் கயல்விழியும்
படமா மெனச்சொற் றடிதடமும்
பாகு போன்ற பனிமொழியும்
பருவ முகில்நேர் குழலுமெனப்
பகரு மெழிலும் பயிர்ப்புநிறை
மடவார் நதியின் கரையருகே
மணலைக் குவித்து மனமுவந்து
வனைந்த விளையாட் டிதைமருவி
மாலே யழித்தல் வழக்கன்று
கடல்சூழ் புவியோர் தினம்பணியும்
காலாற் சிற்றில் சிதையேலே
கந்தங் கமழும் வைகுந்தைக்
கனியே சிற்றில் சிதையேலே, (2)

174. முருக்கின் மலர்போ லிதழ்க்கனிவாய்
முல்லை முறுவ லாய்ச்சியிரு
முலையி னமுதந் தனையூட்டி
முகத்தோ டணைத்து முத்தமிட்டுப்
புரியு மரைநாண் காப்பணிந்து
பொலன்று திரைத்துத் தாலாட்டும்
பொன்னூ சலிற்கண் வளராமற்
புனிற்று நிரைபின் போகாமல்
அரியின் குரல்நேர் மொழிமடவா
ரறியாப் பேதை மதியாலே
யமைக்கு மழகார் மாளிகையை
யழிக்கக் கணக்கோ வனுதினமுங்
கருதுந் தவத்தோர் சிரம்பணியுங்
கழலாற் சிற்றில் சிதையேலே
கந்தங் கமழும் வைகுந்தைக்
கனியே சிற்றில் சிதையேலே. (3)

175. வண்டோ கயலோ மரைப்போதோ
வாளோ கணையோ அயில்வேலோ
மானோ விடமோ நறுங்குவளை
மலரோ வென்னச்செசா லிருவிழியும்
பண்டோ விசையும் பொருந்துமெழில்
பாவை மடவார் பலர்கூடிப்
பணிக்கு மணலின் விளையாட்டைப்
பரமா வழித்தா லுன்னழுக்
குண்டோ பெருமை யன்றுளி
லுளத்தே குறித்து மதியாமல்
ஒருபோ தினிலுங் கருதாம
லுலவித் திரிந்த பாமரனுங்
கண்டா கர்ணற்குக் கதியளித்த
கண்ணே சிற்றில் சிதையேலே
கந்தங் கமழும் வைகுந்தைக்
கனியே சிற்றில் சிதையேலே. (4)

176. அல்லைப் பழித்த நிறத்தரக்க
ரடங்க மடியக் கணையேவி
அமரர் துயரந் தனைதுடைத்த
வடங்காக் களிப்போ மழுராமன்

வில்லை வளைத்த பெருந்திறலோ
விரும்பு மறையோ னுளமுவப்ப
வேண்டும் பசுவி னிரையளித்த
மேன்மைப் புகழோ பழவடியார்
தொல்லை வினைகட் டறுக்குமனத்
துணிவோ திரையார் பொருநைநதித்
துறையின் மடவார் விளையாட்டைத்
துதைப்பே னெனுஞ்சொற் குறிப்பறியேன்
கல்லை யுருவாக் குங்கமலக்
காலாற் சிற்றில் சிதையேலே
கந்தங் கமழும் வைகுந்தைக்
கள்வா சிற்றில் சிதையேலே. (5)

177\. மானேர் விழிக்கஞ் சனமெழுதி
வதியும் பிறையை நிகர்நுதற்கு
மறுப்போற் சாந்துத் திலதமிட்டு
வயங்குங் கனகச் செம்பெனலாய்த்
தானே வளரு மிளமுலைக்குச்
சந்தங் கமழுஞ் சேறணிந்து
தபனன் வருதேர்ப் புரையல்குற்
றடத்தை மறைத்துக் கலையணிந்து
நானஞ் செறிந்த குழன்மடவார்
நளினம் பொருந்து நதிக்கரையில்
நனிமா டங்க ளமைத்ததனை
நண்ணி யுதைத்த லுனக்கழகோ
தேனூர் துளவத் தார்மார்ப
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செகத்தோர் பரவும் வைகுந்தைத்
தேவே சிற்றில் சிதையேலே. (6)

178\. நுகருஞ் சுதையுந் தேனுவையு
நுவலுஞ் சசியுங் கற்பகமும்
நோன்பு புரியிந் திரர்க்குதவி
நோதல் தவிர்த்த பெருமானே
மகர நெடுங்கண் விதுவதன
மடவார் பொருநைத் தடமருவி
மணலைக் குவித்து மணிமுறத்தில்
வாரிப்பரலை யறக்கொழித்து

நிகரில் கனக மரகதமு
நிவந்த மலரு மதினணிந்து
நிதிபோல் மகவைப் பெற்றெடுத்து
நின்பேர் புனைவே னெனக்கருதிச்
சிகரி யமைத்துக் கரங்கூப்புஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செகத்தோர் பரவும் வைகுந்தைத்
தேவே சிற்றில் சிதையேலே. (7)

179. நிவந்து பணைத்து மூலமடவார்
நேசத்துட னுண்மணற் கொணர்ந்து
நெடிய மாட மெனவனைந்து
நின்னைப் பணிமா ளிகைகண்டாய்
பவள விதழுங் குறுநகையும்
பங்கேரு கம்போ லிருவிழியும்
படைத்த கமலை யடிவருடும்
பனித்தா ளிதனி லூறுத்தாமல்
உவரித் திரைசூழ் புவியனைத்து
மும்பர் கணமு மவர்க்கிறையும்
உயர்மா தவரு மைங்கரனு
முடுவின் பதியு குகவேடன்
சிவனு மயனும் தொழுங்கழலாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செகத்தோர் பரவும் வைகுந்தைத்
தேவே சிற்றில் சிதையேலே. (8)

180. அனம்போன் மடவார் நதிக்கரையி
னருகே மணற்கொண் டாடரங்கும்
அழகார் மதில்சூழ் வேதிகையு
மமைத்து மலரா லருச்சனைசெய்
துனையே தொழுதாட் செய்வோமற்
றொன்றுங் கருதோ மெனவுளத்தில்
உன்னிப் பணிமா ளிகையிதனை
யுதைத்தல் பெருமைக் கழகன்றே
வினையும் பாசந் தனைத்துறந்த
மதியோர் கதிசேர் வதற்குரிய
மறையின் பொருளைத் தமிழ்விரித்த
மாறன் றிருவாய் மொழியுரைத்துத்

தினமுங் கருதுஞ் சேவடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செகத்தோர் பரவும் வைகுந்தைத்
தேவே சிற்றில் சிதையேலே. (9)

181. கரைக்கு ளடங்காப் பெருவெள்ளக்
கடலி னடுவோர் கருமலையிற்
கமலம் பூத்த தெனத்திகழுங்
கவின்கண் டரனு ரிறைஞ்சுதற்குப்
பொருந்தும் போத விழியளித்த
புனிதா மனுவின் குலதிலகா
பொன்மா மேருக் கிணையாதி
புடைத்துப் பணைக்கு மிருதனமும்
மருவார் குழலுஞ் செவ்விதழு
மன்னு மடவார் நதிக்கரையில்
வளமா ளிகைசெய் தலங்கரித்துன்
வனப்பே கருதி யாசித்துச்
சிரத்தா லிறைஞ்சித் தினம்பணியுஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செகத்தோர் பரவும் வைகுந்தைத்
தேவே சிற்றில் சிதையேலே. (10)

---

## சிறுபறைப் பருவம்

---

182. இந்துநுத னந்துமிட றுந்துமுலை செந்துவ
ரிதழ்க்கவுரி யென்னுமயிலின்
இன்பமுறு சங்கரனு மீரேழு பெரும்புவியை
யீன்றமலர் தந்தவயனும்
தந்திமுக னுங்குகனு மிந்திரன் முதற்றலைவர்
தாபதர்க ளமரருடனுன்
சன்னிதி நெருங்கியவர் தன்னிரு கரங்கொண்டு
தலைமிசை குவித்துமகிழ

மந்தரக் கிரியுநெடு விந்தமலை யுந்திகழும்
மருவுபுய வீரமுடையான்
வஞ்சனைக் கஞ்சனெனு நஞ்சினு மிகுங்கொடிய
மடநெஞ்சன் மனைவாயிலிற்
சிந்துரக் களிறட்ட நந்தனருள் பாலநீ
சிறுபறை முழக்கியருளே
சென்னல்சூழ் வைகுந்தை மன்னுநங் குலநாத
சிறுபறை முழக்கியருளே. (1)

183. நத்தைநிகர் கண்டமுந் தத்தைமொழி யுஞ்செய்ய
நளினமென மருவுகரமும்
நறைமலர்க் கோதையுந் திகழெழி லசோதையெனு
நங்கைமடி மீதுவைத்துக்
கொத்தலரு மல்லியிரு வாட்சிசிறு செண்பகங்
குல்லைமறு முல்லையுடனே
கொங்குவிரி பிச்சிகழு நீர்முகை குருக்கத்தி
கொண்டணிய மகிழ்கண்ணனே
நித்தனீ மற்றெவையு நினதே யெனக்கருதி
நெஞ்சிலறி வுற்றெனதெனும்
நெடிதான மமதையாங் காரத்தை விட்டுமன
நேசமொடு பணிசெய்யவே
சித்தனக் குரியதெனும் முத்தருள நிறைகள்வ
சிறுபறை முழக்கியருளே
சென்னல்சூழ் வைகுந்தை மன்னுநங் குலநாத
சிறுபறை முழக்கியருளே. (2)

184. மரையோ மருண்டவிழி நறவைப் பொருந்துமொழி
மருவார் செறிந்தகுழலாம்
மலையைச் செறுக்குமுலை சிலையைக் கடிந்தநுதல்
மதியைப் பழிக்குமுகமா
மிரதிக்கு வருகணவன் உருவொத் தியைந்தவிடை
யிரதத்தை யேயல்குலாம்
யெழில்மே வசோதைதிரு மனைமேவி விளையாடி
யின்புற் றிருக்குமன்னுட்
புரையுற்ற மடநெஞ்ச வஞ்சனைக் கஞ்சன்விடு
போர்மல்லர் தமைமடித்துப்
புங்கமுட னகமகிழு மிங்கித குணளனே
புனிதமறை யோர்க்குமுதலே

திரைமோது முத்தமிரு கரைசேர் நதித்துறைவ
சிறுபறை முழக்கியருளே
சென்னல்சூழ் வைகுந்தை மன்னுநங் குலநாத
சிறுபறை முழக்கியருளே. (3)

185. மலைபோல் வயங்குநெடு புயவீர மண்டுதிறல்
வானரப் படைதிரட்டி
மணியோர் திரைக்கடலி னருகே யிருப்பதனை
மருவுவீ டணனறிந்து
கலையோது மறையவ ரருந்தவர்கள் விப்பிரர்கள்
ககனமுறை வோர்புவியுளோர்
கருதியடி தொழுகின்ற மாதுசா னகியின்மேற்
காதலைத் தவிர்தியென்றே
யலைவிலா நற்புத்தி சொல்லினுங் கேளா
தகந்திகழு நிருதர்கோவை
யறவிட்டு வந்துனைப் பணியுமவ் வீடணர்க்
கபையங் கொடுத்தகளிறே
சிலைபொருவு நுதலிகவு சலைமகிழு மேகமே
சிறுபறை முழக்கியருளே
சென்னல்சூழ் வைகுந்தை மன்னுநங் குலநாத
சிறுபறை முழக்கியருளே. (4)

186. இக்குவலயத் திருளை யப்புற மகற்றவோ
ரிரதமிசை வருமிரவியை
யின்சுவை யுறுங்கனிய தாமென மனங்கருதி
யிருவிசும் பூடுபாய்ந்துந்
தக்கமுனி யோகியர்கள் பூசுரர்கள் விப்பிரர்கள்
சாற்றுமறை யின்பொருள்முதல்
தருநவ வியாகரண சகலகலை யினையுமத்
தபனன்முன் நடந்துகற்றும்
மிக்கான புகழ்பெற்ற மாருதி தனக்குவர
மேன்மையுட னீந்தமுகிலே
விண்ணவரு மம்புயனு மாதவனு மைங்கரனு
மேருவில் வளைத்தசிவனும்
திக்கதிப ரும்புவியின் மக்களு மிறைஞ்சுமுதல்
சிறுபறை முழக்கியருளே
சென்னல்சூழ் வைகுந்தை மன்னுநங் குலநாத
சிறுபறை முழக்கியருளே. (5)

187. பாதிமதி வேணியரன் வாழ்கிரியை வேரொடு
பறித்ததிரு தாதிபதியின்
பத்துமுடி வைத்ததலை அற்றுவிழ வுற்றமரர்
பக்தியோ டிறைஞ்சுபரமா
மேதிபடி வாவியிடை மோதுகயல் கன்றெ்ன
விருப்பொடு சுரந்தொழுகுபால்
வேகமுட னேடுநதி யாமென விரைந்துவயல்
மேவிவளர் சூழ்கழனியுஞ்
சூதமர மீதுதளிர் கோதுகுயில் கூவியது
துப்பினிதழ் இந்துவதனத்
தோகைய ரெனக்கருதி யாடவர் வியந்துமருள்
சோலையு நிறைந்தமிதிலைச்
சீதைபுது வைக்கண்வரு கோதையிரு வர்க்கிறைவ
சிறுபறை முழக்கியருளே
சென்னல்சூழ் வைகுந்தை மன்னுநங் குலநாத
சிறுப்பறை முழக்கியருளே. (6)

188. சண்டவே கம்பவனன் மண்டிமா மேருமுடி
சாய்த்தபே ரோசையெனவுந்
தராபதியர் பாசறையில் வாகைபுனை வெற்றியைச்
சாற்றுமணி முரசமெனவும்
மண்டல நிறைந்தபுகழ் கொண்டமுதல் வள்ளியோர்
வாயில்கடை முன்றிலெங்கும்
மனமொடு வந்துநிதி தருகுவோ மென்றுரை
வழங்குபே ரிகையென்னவுங்
கொண்டல்க ளொலிப்பதென் றெண்டிசைக டோறு
கொண்டாடி நடனமிடவுங் [மயில்
குணபா லுறுங்கிழவன் விரைவோடு பவனிவரு
குஞ்சரக் குமுறலெனவுந்
தெண்டிரையி னொர்ப்பெனக் கண்டவர் வியக்கவுஞ்
சிறுபறை முழக்கியருளே
சென்னல்சூழ் வைகுந்தை மன்னுநங் குலநாத
சிறுபறை முழக்கியருளே. (7)

வேறு

189. அடலுறு புயவலி கொண்டிடு மாபெலி
யன்போ டளித்தபுனல்
அங்கை விழாமுன் னடைத்திட வுன்னியோ
ரளியென வருபுகரின்

கடைசிறு வரிபொரு நெடுவிழி திகழுறு
கருமணி யைச்சிதறிக்
கணமென வுரைநவில் பொழுதி லிருபுவி
கால்கொ டளந்தவனே
படைபொரு சிலைநுதல் துடியிடை யெனவரு
பாவை யசோதைதரும்
பால னெனுந்திரு நாம மணிந்தகோ
பாலனெனும் பொருளே
குடவளை யாழி தரித்த கரங்கொடு
கொட்டுக சிறுபறையே
கோக னகத்துறை மாமகிழ் கள்வா
கொட்டுக சிறுபறையே. (8)

190. இங்கித நயமுறு லீலை விரும்பிய
இடைதுவள் மங்கையரும்
இரதி முயங்கிய கணவ னெனத்திக
ழெழிலுறு மைந்தர்களுங்
கங்குலி லன்பொடு செய்கல வித்தொழில்
கருதி யுவப்புடனே
கார்தவ ழரமிய மீதி னிருந்து
கரங்கொடி யாழ்நெருடிச்
செங்கனி வாயிதழ் கொண்டு நவின்றிடு
சில்லிசை கேட்டசுணந்
தினமு நெருங்கிய நவமணி மேடை
சிறந்த நகர்க்கதிப
கொங்கவிழ் கோதை யசோதைதன் னமுதே
கொட்டுக சிறுபறையே
கோக னகத்துறை மாமகிழ் கள்வா
கொட்டுக சிறுபறையே. (9)

191. செகதல மருவிய வுயிர்களை வேரொடு
தின்றிடு மறவுரவோர்
சிகையெரி பங்கினர் புகைசொரி கண்ணினர்
செல்லென வார்ப்புடையோர்
அகமொடு வஞ்சனை கொலைபுரி வன்றொழி
லடல்செறி நடலைவிறல்
ஆண்மை பொருந்திய நீல நிறத்தினர்
அரக்கரை வென்றிடவே

ககனமு றம்மரர்கள் மனநினை வின்படி
கானக மேவிடுநாள்
கங்கை நதிக்கரை யின்க ணெதிர்ந்திரு
கழலிணை யடிபரவுங்
குகனுட னன்புசெ யிகலரி யேறே
கொட்டுக சிறுபறையே
கோக னகத்துறை மாமகிழ் கள்வா
கொட்டுக சிறுபறையே. (10)

---

## சி று தே ர் ப் ப ரு வ ம்

---

192. பாவாரு மின்சொன்மொழி எழில்மா தசோதைதரு
பாலனென் றவதரித்துப்
பாண்டவர்கள் தூதனெனு நீண்டபுகழ் கொண்டுலவு
பரவாசு தேவகண்ண
தாவாத புயவலி பெறுந்திரி புரத்தவுணர்
சண்டவே கத்தினேடுஞ்
சகலபுவ னமுமுற நலிவுசெய் திடுங்கொடியர்
தங்களை மடிப்பதற்காய்
ஆவாகி வில்லின்விடு மேவாகி யுள்ளத்
தமர்ந்துறையு மீசனுகி
யவ்வமர் முடிக்கப் புராந்தக னெனும்பேரை
யரனுக் களித்தருளிய
தேவாதி தேவனெனு மூவர் முதற்றலைவ
சிறுதே ருருட்டியருளே
சீதரதென் வைகுந்தை நாதகோ பாலநீ
சிறுதே ருருட்டியருளே. (1)

193. சுந்தர மடந்தைபுவி மாணிவர்க ளிருவருந்
துணையடிப் போதுவருடத்
துய்யபாற் கடல்நடுவி லறிதுயி லமர்ந்தது
துறந்துமட மாதசோதை
தந்தசே யெனவந்து கலைபயிலு நாளின்மறை
தனையுரைசெய் வித்தகுரவன்
தக்கணைக் காகவவன் மகவினைக் கடல்சென்று
தகைபெற்ற முன்னுருவுடன்

அந்தணர்க் கிந்துமன வன்றுயர் துடைத்தருளு
மண்ணலே நீலமுகிலே
அனுதினமு நின்னடி பணிந்துனது நாமத்தை
யன்புடன் வழுத்தியேத்தச்
செந்தமிழ் எனக்குதவு பைந்துளப மார்பநீ
சிறுதே ருருட்டியருளே
சீதரதென் வைகுந்தை நாதகோ பாலநீ
சிறுதே ருருட்டியருளே. (2)

194 உருத்திரர்க ளாதவர்கள் வசுக்களசு வனியென்னு
மோதுமுப் பத்துமூவர்
உவந்துதொழு மம்பொற் றுவாரகையி லின்பமோ
டுருக்குமணி மாதினுடனே
மருக்கமழு மலரணை யிருந்துவிளை யாடுநாள்
மனதன் புடன்குசேலன்
வந்துதவு மவலினை யொருக்கா லருந்தியே
வடதிசைக் கதிபனிகராய்ப்
பெருநிதி பெறக்கருணை யருளியவன் வறுமையைப்
பெயர்வித்த கற்பதருவே
பீதக மணித்திரள்கள் போதுதிரை கரைமருவு
பெட்புமிகு பொருநைநதிசூழ்
திருவழுதி வளநாட கருடன்மிசை வருகண்ண
சிறுதே ருருட்டியருளே
சீதரதென் வைகுந்தை நாதகோ பாலநீ
சிறுதே ருருட்டியருளே. (3)

195. குந்திபெறு மைந்தர்களி லிந்திரன் மகன்சமர்
குறித்திரத மீதுநிற்பக்
குணபா லெழுந்துவரு கதிரோ னுவந்துதரு
கொடைமிக்க திறல்மன்னன்முன்
முந்தைமறை யோனுரு வெடுத்தவ னிடஞ்சென்று
மூவுலகு மிசைநிற்கவே
முற்செய்த நற்பய னனைத்தையுங் கைக்கொண்ட
மூவர் முதற்கடவுளே
யிந்துலவு செஞ்சடையு மைந்துமுக முந்திகழு
மீசன்மல ராசனன்முத
லெவ்வுயிரி னுள்ளுமுறை யாதிபரன் நீயே
யெனக்கருதி யறிவையுணர்வோர்

சிந்தைகுடி கொண்டுமகிழ் எந்தைகோ விந்தநீ
சிறுதே ருருட்டியருளே
சீதரதென் வைகுந்தை நாதகோ பாலநீ
சிறுதே ருருட்டியருளே. (4)

196. கஞ்சமலர் மேவுமிறை செங்கதி ருடுக்கள்சசி
கங்கைசடை வைத்தகடவுள்
ககனமுறு தேவர்முத லனைவரையு மோர்பொழுது
கம்பலைசெய் வித்தமுனிவன்
விஞ்சைமறை யாகம முதற்கலைகள் சொற்றமுறை
வேள்விசெய வுற்றபகலில்
முடுக்குடைய தாடகையை வீழ்த்திச் சுவாகுவினை
விண்ணுலக மீதிலேற்றி
வஞ்சனைக் கொடியமா ரீசனைக் கடலினுண்
மறைந்திடும் படிவிரட்டி
மதில்சூழு மிதிலைப் பதிக்கரசன் மாளிகையில்
வருசனகி தன்பொருட்டுச்
செஞ்சிலை வளைத்தந்த வஞ்சிகைப் பிடித்தநிதி
சிறுதே ருருட்டியருளே
சீதைபுகழ் வைகுந்தை நாதரகு வீரநீ
சிறுதே ருருட்டியருளே. (5)

197. துய்யமறை யோர்மருவு பஞ்சவடி தன்னிலே
தோன்றிமறை யாகிநாளுன்
றுணைவியைப் பிரிவுசெய வுன்னிவரு நிருதியைத்
துங்கமுள தம்பிகண்டு
நெய்ந்நிண நிறைந்தவுடை வாளுருவி யவளுடைய
நெடியகா திதழினுடனே
நிமிர்கொங்கை நாசியிவை தனையரிய வக்கொடிய
நீலிசூர்ப்ப நகையலறியே
அய்யகோ வென்றலறி யிட்டடி பணிந்தவளை
யன்னைநீ யார்கொலுரையென்
றம்பவள வாயினிற் புன்முறுவல் கொண்டருளி
யகமகிழு மொருசிங்கமே
செய்யவளை மார்பிலணி துய்யமணி வண்ணநீ
சிறுதே ருருட்டியருளே
சீதைபுகழ் வைகுந்தை நாதரகு வீரநீ
சிறுதே ருருட்டியருளே. (6)

198. கலைமதி நுதற்சனகி சிறையுறை யிலங்கைநகர்
காணமுந் நீரரசனைக்
கருதியுவ சித்ததிலு மதியா திருந்ததைக்
கண்டுகணை யொன்றேவவே
மலையைநிகர் புயவருணன் உள்நொந்து நைந்துருகி
வாடியிரு கண்பனித்து
வந்தடி விழக்கருணை யுந்திய பகழியினை
மருவுகாந் தாரதீவிற்
கொலைநடலை வஞ்சனை செயுங்கொடிய நிருதரின்
குலமறுத் திடவிடுத்துக்
கோளரி யெனப்பொருவு மாருதி முதற்றலைவர்
கொண்டுதவு குன்றமென்னுஞ்
சிலைகொண்டு கடலினை யடைத்துமகிழ் காகுத்த
சிறுதே ருருட்டியருளே
சீதைபுகழ் வைகுந்தை நாதரகு வீரநீ
சிறுதே ருருட்டியருளே. (7)

199. கார்நிறக் கோதையும் மதிபொருவு வதனமுங்
கச்சடங் காததனமுங்
கமலவிழி யுங்கொண்ட சனகியுந் தம்பியுங்
கதிரவன் பெறுமதலையும்
ஏருலவு வானரத் தலைவருஞ் சேனையு
மிலங்கையர சன்றனுடனே
யெதிபரத் துவனுறையு மினிதான சாலையினில்
எய்தியவ னுலமைத்த
வார்சுவையி னெட்டிசில போனக முணக்கருதி
வாய்மடுத் துற்றபொழுதில்
வந்துதொழு மாருதியை யெந்தனுட னுண்ணநீ
வாவென் றழைத்துமகிழும்
சீர்மருவு தாரணி யிராகவ கோவிந்தநீ
சிறுதே ருருட்டியருளே
சீதைபுகழ் வைகுந்தை நாதரகு வீரநீ
சிறுதே ருருட்டியருளே. (8)

வேறு

200. மாகத் தமரும் புத்தேளிர்
மறையோர் தவத்தோர் தமைக்காத்து
மகிழ்வோ டிருத்தக் கருத்திலுன்னி
மனுவின் குலத்தி லவதரித்து

பூகப் படைகொண் டணைதிருத்தி
யுவரிக் கடலப் புறமெய்தி
இலங்கணி காக்கு மதிலிலங்கை
யுறையு மரக்கர் தமைமடித்து
வேக முடன்புட் பகமெய்தி
மிதிலை மடமான் றன்னுடனே
மேவிப் பதிவந் தரசுரிமை
விருப்புற் றளிக்குங் காகுத்தன்
கோக நகைக்கு மம்புவிக்குங்
கொழுநன் தடந்தே ருருட்டுகவே
குருகை முனிபணி வைகுந்தை
குட்டந் தடந்தே ருருட்டுகவே. (9)

201. பகலோன் கிரண மெனத்திகழும்
பச்சைக் கொடிஞ்சி யுருளமைத்துப்
பகரு மறையோர் நான்கினையும்
பரியா யிணைத்துப் பழவடியார்
நிகர்க்குந் ததிய ருளமலரை
நெடிய கயிறாய் வடம்பூட்டி
நேசத் துடனே பிடித்திறைஞ்ச
நிமலா சரண மெனக்கருதி
யகமும் புறமுங் களிப்புடனே
யன்பாற் பணிந்து பங்கயனூர்
ஆரா தனைசெய் துவந்தேத்த
வானோர் தொழுது மனமகிழச்
செகத்தோர் செறிந்து கரங்குவிப்ப
செம்பொற் றடந்தே ருருட்டுகவே
திருமா துறையும் வைகுந்தைச்
செல்வன் தடந்தே ருருட்டுகவே. (10)

வாழி

202. திசைமுகன் வணங்குதென் வைகுந்தை நாதனிரு
சேவடிப் போதுவாழி
செங்கமல மாதுநீ ளாபுவி தேவியர்
சேனேச னிவர்கள்வாழி

## வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்

இசைமருவு தமிழ்வேத நவிலுநா வீரன்முத
லீரைந்து பேர்கள்வாழி
யெங்கள்குடி வழியடிமை கொண்டுமகிழ் சாந்தூர
னிணைமலர்த் தாள்கள்வாழி
யசைவிலா நற்பொருளை வெளியிட்ட பூதூர
னம்பொற் பதங்கள்வாழி
யரிதான முத்திக்கு வித்தான நஞ்சீய
ரழகுபெறு கழல்கள்வாழி
வசையற்ற நோன்புபுரி மாதவர்கள் பூசுரர்கள்
மன்னவர் மனுக்கள்வாழி
மன்னுமணி வண்ணனிசை பன்னுபிள் ளைத்தமிழ்
வழங்குசெந் தமிழ்வாழியே.

(வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.)

---

# வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்

## குறிப்புரை

### தெய்வ வணக்கம்

102. செம்பொன்னின்-சிவந்த பொன்னைக் காட்டிலும்; சதுமறை-நான்கு வேதங்கள்; தேற - தெளிவடைய; குருகை - திருக்குருகூர்; மாறன் - நம்மாழ்வார்; சரணமலர் - பாதமாகிய மலர் (உருவகம்); தும்பி - வண்டுகள்; பலவு - பலாமரம்; மதமா - மதம் பொருந்திய யானை; பிடி - பெண் யானை; மாறனார் காரியாருக்கும், உடைய நங்கையார்க்கும் மகனாகத் திருக்குருகூரில் பிறந்தவர். (1)

103. நாபி தன் முளரி - உந்திக் கமலம்; வாணி, கலைமாது, காயத்திரி, பூரவாகினி பாரதி, உலகமாதா இவைகள் சரசுவதியின் பெயர்கள்; முனிவன் - பிரமன்; பனுவல் - நூல்; மைப்புயல்-கருமையான மேகங்கள்; அரி - சிங்கம்; இபம் - யானை; மலைபரவு - மலைப்பாம்பு; வேங்கட வாணன் - திருவேங்கட மலையில் வாழ்ந்திருப்பவன்; ஐந்திலக்கணம் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன; மேகம் இடி இடிக்க அதை யானை பிளிறியதென்று சிங்கம் மலையின்மீது குதித்தலைச் செய்யும்; அங்கிருக்கும் மலைப்பாம்பு தானிருந்த இடத்திற்கே இரைக்கான சிங்கம் வந்ததென்று களித்தலைச் செய்யும். அத்தகைய மலைசூழ்ந்த தென் வழுதி நாடன் என்க. வாழ்நன் என்பதன் மரூஉ வாணன். (2)

104. அண்டர்-தேவர்; தவவேதியர்கள்-தவம் செய்யும் முனிவர்கள்; பூசுரர்கள்-பூமிக்குத் தேவர்கள் என்று சொல்லப்படும் பிராம்மணர்கள்; புதுவை - வில்லிபுத்தூர்; பட்டர்கோன் - பெரியாழ்வார்; அருமை மகள் - ஆண்டாள்; **ஆண்டாள்** வில்லிபுத்தூரில் நந்தவனத்தில் துளசிமலரில் தோன்றினாள். அவளைப் பெரியாழ்வார் கண்டெடுத்து வளர்த்தார். பெரியாழ்வார் கட்டிவைத்த மாலையைத் தான் சூடி அழகு பார்த்துப் பின் வைப்பது வழக்கம். ஒருநாள் இதைக் கண்டு அவர் மனங்கடிந்து மாலை சாத்தவில்லை. அன்று கனவில் ஆழ்வாரிடம் பெருமாள் அதனையே கொணரக் கூறினர். சூடிக்கொடுத்த செகமாதா - ஆண்டாள்; கொண்டல் - மேகம்; மொண்டு - முகந்து (மரூஉமொழி); குடவளை - குடம்போன்ற சங்குகள்; குலம் - கூட்டம்; பொருநை நதி-தாமிரபரணி; குஞ்சரக்கோடு - யானைத்தந்தம்; சாது அகில் - மேன்மையான அகில் எனும் வாசனைப்பொருள்; சலசை - இலக்குமி. (3)

**105.** தேமா-தேன்போன்று இனிய பழங்களைத் தரும் மாமரம்; அரம்பை - வாழை; நறவு - தேன்; பைங்கூழ் - பசியபயிர்; வையகத் தகழி - பூமியாகிய அகல்; வார் - நீண்ட; மார்த்தாண்ட தீபம் - சூரியனாகிய விளக்கு; தூய்ய கமலத்தன் - பிரமன்; சுருதி - வேதம்; சுகமுனி - வியாசர் மகன்; பிறந்தபோதே துறவியானூர்; துங்கம் - பரிசுத்தம்; பையரவின் விடமுண்ட பண்ணவர் முதற்கடவுள் - படமுடைய வாசுகியினால் எழுந்த ஆலகால விஷத்தைச் சாப்பிட்ட தேவர்களின் முதன்மையான கடவுளான சிவபெருமான்; பாவாணர் - பாட்டுப்பாடி வாழ்பவர்; திருக்கச்சிதனில் உதித்தோன் - பொய்கை ஆழ்வார்; கச்சி - காஞ்சிபுரம்; பொய்கையாழ்வார் "வையந்தகழியா, வார்கடலே நெய்யாக" என்ற பாட்டைப் பாடியவர். இது நூறு பாடல்களையுடைய முதற்றிருவந்தாதியாகும். (4)

**106.** அன்பு தகழி-அன்பாகிய அகல்; என்புருகு நெஞ்சு இடுதிரி - எலும்பும் உருகும்படியான இரக்க மனமாகிய திரி என்க; சரணிதம் - சரண் + நிதம் - பாதங்களைத் தினமும்; நறை வண்டு - தேனைக் குடிக்கும் வண்டு; குழல் - கூந்தல்; பிடி - பெண் யானை; வனப்பு - அழகு; முறுவல் - புன்சிரிப்பு; கானமர் - காட்டில் பொருந்திய; காவு - சோலை; எடுத்தா தரித்த முனி - பூதத்தாழ்வார்; தேனைக் குடிக்கும் வண்டுகள் கூந்தலில் மொய்த்துக்கொள்ள அப்பாரம் பொறுது இடை துவளும்படியான நடையைப் பார்த்து பெண்யானையும் வெட்கப்பட்டு ஒருபுறமாகச் செல்லும் அத்தகைய மானை ஒத்தவர்களும் வேல்போன்ற விழியை உடையவர்களுமாகிய பெண்களின்மீது காதல்கொண்ட அழகு நிறைந்த வீரமுடைய ஆண்மக்கள் பொருள்மேல் எழுந்த ஆசையினால் தலைவியைக் கூடிப் பிரிந்து சென்று திரும்பி வருதலைக் கண்டு மனமகிழ்கின்ற தலைவியரின் முகத்தில் தோன்றும் புன்சிரிப்பைப் போன்று காட்டில் பொருந்திய செந்தாமரையும், முல்லை மலரும், எங்கும் மிகுந்த சோலை சூழ்ந்த வைகுந்தை நகர் என்க. அன்பாகிய அகலில் ஆர்வமாகிய நெய்யை விட்டு என்புருகும் மனம் திரியாகவும் ஞானத்தையே விளக்காகவும் ஏற்றியதாகப் பாடிய முனிவர் பூதத்தாழ்வார்; "அன்பே தகழியா" என்ற பாட்டை முதலாகக் கொண்ட இரண்டாந் திருவந்தாதியைப் பாடினூர். (5)

**107.** அருக்கன் - சூரியன்; மேனியுடல் - செவ்வியழகு; ஆழி - சக்கரம்; அந்தாதி - மூன்றாந் திருவந்தாதி; மயிலைப்பிரான் - பேயாழ்வார்; இவர் திருமயிலையில் பிறந்தவர்; "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கும் மூன்றாம் திருவந்தாதியைப் பாடியவர்; தண்டலைகள் - சோலைகள்; தருவனம் - மரங்கள் சூழ்ந்த காடு;

அளிகள் - வண்டுகள் ; மஞ்ஞை - மயில்; வாவி - குளம்; பருவ முகில் - பருவகாலத்தில் வந்து மழையைக் கொடுக்கின்ற மேகங்கள்; இரு நிதி - சங்கநிதி, பதுமநிதி ; நவமணிகள் - ஒன்பதுவகை இரத்தினங்கள் ; பணிலம் - சங்குகள் ; பண்ணவன் - சிவபெருமான் ; வேதன் - பிரமன்; புண்டரீகக் கண்ணன் - தாமரைபோன்ற கண்ணையுடையவன் ; பொற் பூவை - இலக்குமி ; வைகுந்தை நகர் மேவும் தேவன், முத்திக்கு வித்தான தேவன் என்று கூட்டிப் பொருள் கொள்க ; மயிலை-மயிலாப்பூர், சென்னையின் ஓர் பகுதி. (6)

108. நக்கன்-சிவபெருமான் ; மழிசைவந் தவதரித்தோன்-திருமழிசை ஆழ்வார் ; கவி ஈரைந்து உரைத்து மால் கழலிணைப் புனைந்து மகிழ்வோன் - திருப்பாணாழ்வார் ; கட்செவி - பாம்பு ; சேரர்கோன் - குலசேகர ஆழ்வார் ; சேவடி - சிவந்த பாதங்கள் ; திருமழிசை என்ற ஊரில் பார்க்கவருக்கும், கனகவதியாருக்கும் **திருமழிசை யாழ்வார்** குமாரராகத் தோன்றினர். இவர் “நான்முகனை நாராயணன் படைத்தான்” என்று தொடங்கும் நான்முகன் திருவந்தாதியை இயற்றினர். திருச்சந்த விருத்தம் என்பதனையும் பாடினர். **திருப்பாணாழ்வார் :—** இவர் சோழநாட்டில் உறையூரில் நெற்பயிர்க் கதிரில் குழந்தையாக இருந்தார். பாணர் குலத்தானால் வளர்க்கப்பட்டுப் “பாணர்” என்ற பெயர் பெற்றார். இவர் அமலனாதிபிரான் என்ற பிரபந்தம் பாடியுள்ளார். திருவஞ்சைக்களத்தில் திடவரதன் என்பவருக்குக் **குலசேகர ஆழ்வார்** மகனாகப்பிறந்தார். ஒருசமயம் மந்திரிகள் இவருக்கு வைஷ்ணவபக்தி மிகுந்திருந்ததைக் கண்டு அடியார்மேல் வெறுப்பு உண்டாக்க நினைத்துத் திருவாராதன பெருமாளுடைய ஆபரணத்தை மறைத்து, அடியார்களைச் சுட்ட, அரசர் வைணவர் எடுக்கவில்லையெனப் பாம்பின் குடத்தில் கையை வைக்க பாம்பு கையை முத்தமிட்டது. (7)

109. ஈரேழ் பெரும் புவனம் - பதினான்கு உலகங்கள் ; வழுதி மன்னவன் - பாண்டியன் ; பட்டர்கோன் - பெரியாழ்வார் ; அரங்கேசனே தெய்வம் என்று உணரும் செல்வன் - தொண்டரடிப் பொடியாழ்வார் ; உன்னி - நினைத்து ; அஞ்சலி - வணக்கம் ; பாரதிக்கு இறைவன் - பிரமன் ; பங்கேருகம் - தாமரை ; **பெரியாழ்வார் :—** இவர் வில்லிபுத்தூரில் ஒரு புரச்சூட வைணவருக்குப் புத்திரராய்த் தோன்றினர். இவர் பெருமாளுக்கு மாலைதொடுத்துச் சாத்தி வரும்போது ‘வல்லபதேவன்’ என்ற பாண்டிய அரசன் பொற்கிழி கட்ட அதையறுத்து “விசிட்டாத்துவைதம்” என்பதை ஸ்தாபித்தார். வல்லபதேவன் பெரியாழ்வாரைப் பணிந்து அனுக்கிரகம் பெற்றான். இவர்

பாடியவை "பெரியாழ்வார் திருமொழி" என வழங்கும். **தொண்டரடிப்பொடியாழ்வார் :**—இவர் திருமண்டங் குடியில் ஒரு புரச்சூட வைணவருக்கு மகனாகப் பிறந்தார். இவர் திருவரங்கத்தி லிருக்கும் பெருமானுக்குத் திருமாலைகளை அணியும் கைங்கர்யம் செய்துகொண்டு வந்தவர். இவர் பாடியன திருமாலை, திருப்பள்ளி எழுச்சி என்பன. (8)

110. மன்னுயிர்கள் உய்ய - நிலைபெற்ற உயிர்கள் பிழைக்க; மாறன் - நம்மாழ்வார்; ஆறு அங்கம் - சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோ விசிதம், சோதிடம் போன்று உள்ள பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந் தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல்; நாற்கவிதை - ஆசுகவி, வித்தாரகவி, மதுரகவி சித்திரகவி என்பன; பரகாலன் - திருமங்கையாழ்வார். வையகத் தவதரித்தோன் - திருமங்கையாழ்வார். **திருமங்கையாழ்வார் :**— இவர் சோழநாட்டில் ஆலிநாட்டின் கண் திருக்குறையலூரில் ஆலி நாடர் என்பாருக்கும் வல்லித்திரு என்பாருக்கும் மகனாகத் தோன்றினார். இவர் குமுதவல்லி எனும் மங்கையை மணந்து ஆயிர வைணவருக்குத் தினமும் அமுதிட்டவர். இவர்பாடியன ஆறங்கங்களெனப்படும். **மதுரகவியாழ்வார் :**—இவர் திருக்கோளூரில் ஒரு புரச்சூட வைணவ பிராம்மணருக்குக் குமாரராய்ப் பிறந்தவர். "கண்ணிநுண் சிறுத் தாம்பு" என்ற பிரபந்தத்தை எழுதியுள்ளார். இவர் நம்மாழ்வாரின் சீடர். நம்மாழ்வாரைப் புகழ்ந்துள்ளவர். கழல் - கழலணிந்த பாதம் (தானியாகு பெயர்); நம்மாழ்வார் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு தமிழ்மறைகளை அருளினர். இவற்றை முறையே இருக்கு வேதசாரம், யசுர் வேத சாரம், அதர்வண வேதசாரம், சாமவேதசாரம் என்றும் கூறுவர். திருமணவாளன் என்பது அரங்கநாதருக்குப் பெயர். இங்கு மங்கைதிருமணவாளன் என்பது குமுதவல்லியின் கணவன் என்ற பொருளில் கொள்ளலாம் போலும். அங்ஙனம் கொள்ளின் இத்தொடர் திருமங்கையாழ்வாரைக் குறிக்கிறது. (9)

111. சேதனர்கள் - அறிவுடையோர்கள்; கருணைவள்ளல் - கருணையையுடைய வள்ளலான இராமனுசன்; எதிராசன் - இராமானுசாச்சாரியார்; பூதூர் - ஸ்ரீபெரும்பூதூர்; ககனம் - ஆகாயம்; கதலி-வாழை; கடுவன் - ஆண்குரங்கு; முசு - குரங்கில் ஒரு சாதி; ஐந்தருக்கா - ஐந்து தருக்களையுடைய சோலை; மன் - அதற்குரிய மன்னனான இந்திரன்; ஈரைந்து அழகு ஏய்ந்தும்-பத்துவித அழகுகளும் பொருந்திச், சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் முதலியன பத்துவித அழகுகள்; ஆகாயத்தின் உச்சிவரை வளர்கின்ற வாழையின் பழத்தைப் புதிய தேனில் தோய்த்து ஆண் குரங்கு, பெண் குரங்கிற்குக் கொடுக்கும் நாட்டை

உடையவனும் அழகிய கற்பகம், பாரிஜாதம் முதலிய ஐந்தருச் சோலை களையுடைய அரசனுமான இந்திரனும் வந்து வணங்கும் புகழ் நிரம்பிய நாட்டில், வைகுந்தை நகரில் வாழ்பவன் என்க. இராமானுசர் திருக் கோட்டியூர் நம்பியிடம் தெரிந்த இரகசியங்களைச் சௌமிய நாராயணப் பெருமாள் கோபுரத்தின் மீதிலிருந்து எல்லோருக்கும் பயன்பட வெளி யிட்டார். (10)

112. சந்தனக்காவு - சந்தனச் சோலை ; செம்பதும வாவி-சிவந்த தாமரையுள்ள குளம் ; சாந்தூரில் அவதரித்தோன்-இவர் கீழ்க்கூறும் பெரியநம்பியாக இருக்கலாம். **பெரியநம்பி** - திருவரங்கத்தில் திருக்கோட்டியூர் நம்பிக்குப் பின் பிறந்தவர் ; பெருமாள் நியமனத்தால் இளையாழ்வாரைக் காணவருகையில் மதுராந்தகத்தில் இளையாழ்வா ரைக்கண்டு பஞ்ச சமஸ்காரம் செய்து சிலநாள் அவருடனிருந்து திரு நாட்டிற்கு எழுந்தருளியவர். ததியர்-பக்குவமானவர்கள் ; **மணவாள முனி** :-இவர் பாண்டிய நாட்டில் "சிக்கில்கிடாரம்" என்னும் கிராமத்தில் "திருமான் மனத்த அண்ணர்" என்பவருக்குக் குமாரராய்ப் பிறந்தார். தாள் + துணை - தாட்டுணை ; பராங்குசன் - நம்மாழ்வாருக்கு ஒரு பெயர். இவர் தம்முடைய அருளிச்செயல்கள் ஆகிய அங்குசத்தால் பரமனாகிய களிறு தம் வசமாம்படிச் செய்ததால் இப்பெயர் பெற்றனர் என்பர். சந்தனச்சோலை விளங்கும் செந்தாமரை மலர்களையுடைய குளங்கள் சூழ்ந்த சாந்தூரில் பிறந்தவனும் குருகூரில் பிறந்த நம்மாழ் வார் வியப்படையும்படியான தாசனென்ற பெயரையுடையவனும் இந்நூலாசிரியர் புயத்தில் சங்கினையும், சக்கரத்தையுமுடைய குறியை வைத்து இப்பிறப்பு, மறுபிறப்பு, ஏழேழ் பிறப்பிலும் மகிழ்ந்து ஆட் கொண்டு மனமகிழ்கின்ற குருவான பெரிய நம்பியின் வாசனை பொருந் திய பாதமாகிய தாமரைகளையும், நினைக்கின்ற தத்துவம் நிறைந்த பக்கு வமுடையவர்க்கு முத்தியைக் காட்டும் மணவாள மாமுனிவரின் பாதங் களிரண்டையும் அடக்கமாகிய அழகுடன் பணிவோம். இங்கு நூலாசிரி யரின் குருவைப்பற்றிய வணக்கங் கூறப்பட்டது. மற்றபடி விரிவான விஷயங்கள் அறிய முடியவில்லை ; ததியர் - வைணவ அடியாரைக் குறிக் கும் வழக்கு. (11)

## செங்கீரைப்பருவம்

113. பூமாது - இலக்குமி ; போதக முகக் கடவுள் - விநாயகர் ; புத்தேளிர் - தேவர் ; காமாரி - சிவபெருமான் ; கஞ்சமலராசனன் - பிரமன் ; பாவாணர் - புலவர். (1)

114. ஆ - பசு; புவிமாது - பூமிதேவி; பாலனம் - பாதுகாப்பு; பூவை - மைனா; மணி - கௌஸ்துபமணி; கமலை - இலக்குமி; நேமி - சக்கரம்; வாள் + தனு எனப் பிரிக்க; மந்தகாசக் குறுமுறுவல் - புன்னகை (மீமிசைக்கிளவி); குல்லை - துளசி; பூவை மொழியைப் பொருவும் மேனியெழில் - மைனாவின் மொழியை ஒத்திருக்கும் குரலமைந்த உடலின் அழகு. (2)

115. மேதினி-பூமி; பாலாழி-பாற்கடல்; மெல்லியல் கோதை - யசோதை; பேய்ச்சி - பூதகி; கொண்டல் - மேகம்போன்ற நிறத்தவன், உவமவாகு பெயர். காதுவேற் கண்ணினர் - காதுவரை நீண்டு செல்லும் வேல்போன்ற கண்ணையுடையவர்; கண்ணினர் - குறிப்பு வினையாலணையும் பெயர்; மலரின் வருகோதை - இலக்குமி; கங்கை நதி யொழுகினது:-திருவிக்கிரமாவதார காலத்தில், பிரமன் மேலெழும்பிய பாதத்தைப் பூசித்த தீர்த்தம் கங்கா நதியாயிற்று. (3)

116. நாகணை - ஆதிசேட சயனம்; பாடி - ஆயர்பாடி; எண்ணிரண்டாயிரம்-பதினாறாயிரம்; இந்துநுதலார்-பிறைச்சந்திரன் போன்ற நெற்றியுடைய பெண்கள்; சேரி - சேர்ந்திருக்குமிடம்; இறைஞ்சா - துதிக்க; பீலி - மயிற்பீலி; அங்காடி - கடைத்தெரு; சலஞ்சலம் - ஒருவித உயர்ந்த சங்கு; பொருனை - தாமிரபர்ணி; வழுதிநாட - பாண்டிய நாட; சிந்தூரத்திலதம் - சிவந்த பொட்டு; இந்திரை - இலக்குமி; சந்தனம், அகில், மயில்தோகை, நவரத்தினங்கள் கூடிய கடைத்தெருவினையொத்த தன்மையோ வென்று அதிசயிக்குமாறு சலஞ்சலமென்ற சங்குகள் விளங்கும் தாமிரபர்ணி நதி என்க. (4)

117. பூவை - நாகணவாய்ப்புள் (மைனா); கண்படை பொருந்தும் - தூங்கும்; கேதகை - தாழை; குரண்டம் - கொக்கு; வாளை - வாளைமீன்; நறவு - தேன்; கிரீடி - அருச்சுனன்; புராரி - சிவன்; வேதன் - பிரமன்; அமுதின் வருதேவி - இலக்குமி; சோலையிலிருக்கும் மைனா பாட அதைக் கேட்டுத் தாமரையில் வாழு மன்னப்பறவை தனது பெண்ணன்னத்தைத் தழுவி மனதின்பமொடு தூங்கவும் அத்தகைய அழகு மிகுந்த குள்மருகில் வளர்கின்ற தாழையைக் கொக்கு என்று கருதி வாளைமீன்கள் நீரினின்று நீங்கவும் மாம்பழத்தினின்று பிதிர்ந்தொழுகும் சாறும் தேனும் பெருகவுமுள்ள பாண்டியநாடு என்க. கிரீடிக்கு மெய்ப்பொருளுரைத்தது:- முதல்நாள் யுத்தத்தில் பகவத்கீதையுபதேசித்தநாகும். (5)

118. மந்தி - பெண்குரங்கு; கடுவன் - ஆண்குரங்கு; மள்ளர் - மருதநில மக்கள்; உரற்ற - அதட்ட; சாகரம் - கடல்; சோனை -

மழை; சரோருக பொற்சரண் - தாமரைபோன்ற அழகிய பாதம்; துளவு - துளபமாலை; வானிளவரசே - உபேந்திரனாக நின்றதைக் காட்டியது; சோலைகளிலுள்ள பெண்குரங்கு புசிக்குமாறு பலா, வாழை, மா ஆகிய மூன்று கனிகளை ஆண்குரங்கு கொடுக்க அதைக் கண்ட மருதநில மக்கள் அதட்ட அவர்கட்கு இடங்கொடாது மறுத்து அக் கனிகளையே கொண்டு அவர்கள்மீது விட்டெறிவதும், பூக்கள் விரிந்த குளங்கள் கடல்போன்றிருக்க மேகங்கள் நீரை முகந்து அழகிய முத்துக்களோடு மழையைப் பொழிவதும் உள்ள வளநாடு என்க; மேகம் முத்தீனும் பொருள்களில் ஒன்று. இரகுபதி-இரகுவம்சத்தில் இராமனாக அவதரித்துச் சிறந்ததால் இங்ஙனம் கூறினர். "சங்கரனுக்.......... சரணு" - திருவிக்கிரமாவதாரத்தில் பாதம் பிரமலோகஞ் செல்ல அவ்விடம் பிரமன் பூசித்த சலம் பூமியில் வந்து பூமி முழுகுமென்று உருத்திரனைத் தடுத்துச் சடையில் தாங்கக் கட்டளையிட்டார். (6)

119. ஆதவன் - சூரியன்; புயல் - மேகம்; ஆடல் அரங்குகள் - நடன சாலைகள்; போதம் - ஞானம்; வதுவை - திருமணம்; கூறை - உடை; சீதம் - படிப்பவர்க்குக் குளிர்ச்சி தரும். (7)

120. காவலர் - அரசர்; விப்பிரர் - பிராமணர்; மாமறையோர் - பெருமை பொருந்திய வேதமோதும் முனிவர்; புங்கவர் - தேவர்; மாவிரிபூ - மகரந்தத் துகள் விரிந்துள்ள பூ; மஞ்ஞை - மயில்; மாடம் - மெத்தை; ஓதிமம் - அன்னம்; முளரி - தாமரை; வயிறு + ஆவல் - என்க. (8)

121. மறுகு-தெரு; வாளரி-வாள்போன்ற நகங்களுடைய சிங்கம்; பொங்கர் - சோலை; இறால் அருவி - இறால் மீன்களையுடைய அருவி; அகம்+கை - அங்கை; பெண்கள் தங்களது தனங்களைச் சுமக்க முடியாமல் நுண்ணிய இடையுடனே தெருவிலடைய அவ்விடையைச் சிங்கமென்று நினைத்து யானை மயங்கி, கோபித்து மறைந்து வசிக்கும் சோலையின்மீது தவழும் சந்திரனைத் தன் அலைகளாலே வருத்தும் அத்தன்மைய இறால் மீன்களையுடைய அருவிகளின் அழகு மிகுந்த சோலைகளையுடைய பொதியமலைக் கிறைவன் என்க; "கங்கை தரித்தவன்...... கரனே" :—சிவபெருமான் பிரமன் தலையை நகத்தால் கிள்ளிவிட அது அவர் கையிலேயே ஒட்டிக்கொண்டு வருத்தத்தைக் கொடுக்க அப்போது இலக்குமி பிச்சையிடப் பிரம கபாலம் நீங்கும்படியும், தாம் தமது தொடையைக் கீறி யிரத்தமிடப் பிரம கபாலம் வெடிக்கவும், அதுவன்றித் தமது நெற்றியின் வியர்வையை யக்கபாலம் நிறையவிட அது பொடியாகவும் செய்தார். (9)

122. அங்கண் விசும்பு - அழகிய இடமகன்ற ஆகாய உலகம்; களிகூர - மகிழ்ச்சிமிக; புனலூர் உச்சி - கங்கையணிந்த சடைமுடி; பூழ்தி - எலும்பு மாலை, கடுக்கை - கொன்றை; பங்கயன் - பிரமன்; உவணம் - கருடன்; " சங்கரனைப்...........முகில் " :—திருப்பாற்கடலில் ஆதிசேடன்மீது யோக நித்திரை புரிந்து தமது திருநாபியில் உலகச் சிருட்டியின் பொருட்டுப் பிரமனைப் படைத்து அப்பிரமனுடைய நெற்றியினிடம் உருத்திரனைப் படைத்தார். (10)

---

## தாலப்பருவம்

---

123. களபம் - கலவைச் சாந்து; தோணி - ஓடம்; உபயம் - இரண்டு; கதிரோன் குலத்திலுதித்து - தசரதன் மகனாகப் பிறந்து; முயற்சியிருத்தும் பதி - தயிர்க் கடைதல், வெண்ணெயுருக்குதல் போன்ற பலவகை முயற்சிகளையுடைய ஆயர்பாடி; ஆய்ச்சியரும் என்பதிலுள்ள எச்சவும்மை மற்றவர்களையும் காட்டியது. (1)

124. சங்கத்தமரர் - கூட்டமாகிய தேவர்; சலதி - பாற்கடல்; சரையுவெனு மாநதித்துறைவன் - அயோத்தி சக்கரவர்த்தி, தசரதன்; வங்கம் - கப்பல்; மதலை - குழந்தை; பசுபதி - சிவபெருமான்; பதின்மர் - ஆழ்வார்களில் ஆண்டாள், மதுரகவிநீக்கிய பத்துப்பேர். (2)

125. குரும்பை - தென்னங் குரும்பை; மூரி - பெருமை; முகில்போல் மருவும் பிடி - மேகம்போன்ற பெண் யானை; செல் - இடி; மதவேழம் - ஆண் யானை; கோகநகை - இலக்குமி; "வில்லை.........பெருமானே" :— ஓர் பிராமணன்மனைவிக்குப், பிறந்தவுடனே குழந்தைக ளிறந்துவிட அருச்சுனன் அதை இயமன் வாராது தடுக்க வில்லை வளைத்துக் காத்து நின்றனன். அப்போதும் குழந்தை இறந்து பிறந்தது. பின் கண்ணன் வைகுந்தத்தி லிருந்த பிராம்மணக் குழந்தைகளை யருச்சுனனுடனே சென்று மீட்டுப் பிராமணர்க் களித்தனர். (3)

126. சசி - சந்திரன்; காவி - குவளை; வயவேந்தர் - வீரமுடைய அரசர்; குருகையர் கோன் - நம்மாழ்வார்; சிலைவாள் நுதல் கோசலை - வில்போன்று ஒளிவாய்ந்த நெற்றியுடைய கோசலை; கணிகை மடவார் - தேவதாசிகள். (4)

127. எய்ந்த - பொருந்திய ; அண்ணல் - பெருமை பொருந்திய தசரதன் ; சிற்றவை - சிறிய தாய் கைகேயி ; திசை யானனத்தோன் - பிரமன் ; "சிற்றவை மனை............மணியே":—இராமர் சிறிய வயதில் கைகேயியின் தோழியாகிய கூனி(மந்தரை)யின் கூனைக் குறிபார்த்துத் தன் வில்லில் மண்ணுண்டையை வைத்தடிப்பார். அவள் துக்கிக்க இராமர் மனங்களிப்புறுவார். திசை + ஆனனன் - திசைமுகன். (5)

128. தவிசுறைவோன் - பிரமன் ; தருக்காவலன் - இந்திரன் ; உமைக்கதிபன் - சிவபெருமான் ; அயில் துரந்தோன் - வேலை விட்ட முருகன்; தபனன் - சூரியன் ; சசி - சந்திரன் ; ஐங்கரன் - விநாயகன் ; குனித்து - வளைந்து ; புனல் - (யமுனா நதியின்) நீர் ; ஆயர் - இடையர் ; வண்டார் குழல் - பூவின் தேனுக்காக வண்டுகள் நிரம்பிய கூந்தல் ; கோவியருடனே புனலில் விளையாடுவது :- சலக்கிரீடை செய்தது ; பண்டாலிலையிற் கண்டுயில்வது :-பிரளய காலத்தில் திருமால் உலகங்களை யெல்லா முண்டு ஆலிலையில் யோக நித்திரை செய்வார். நீர் வற்றிய பின் பழையபடி உமிழ்ந்து பிரமனைச் சிருட்டித்து ஏற்படுத்துவார். (6)

129. பருதி-சூரியன் ; ஆழி - சக்கரம் ; தொழும்பு - அடிமை ; மாறன் - நம்மாழ்வார் ; அயன் - பிரமன் ; பூதம் - ஐம்பெரும் பூதங்கள் ; இருக்கு - ஓர் வேதம் ; "வெய்ய சமரந்............கருணா நிதிக் கடல்":-அபிமன்யுவைக் கொன்ற சயத்திரதனை "நாளை பகலோன் மறையு முன்பு கொல்லாது விடேன் ; அப்படித் தவறின் தீப் புகுந்து மாய்வேன்" என்று சபதஞ் செய்த அருச்சுனன் உயிரைக் காப்பாற்ற எண்ணிய கண்ணன், சக்கரத்தை விட்டுச் சூரியனை மறைத்து தீப் புக நினைத்த அருச்சுனனைக் காண எதிரில் வந்த சயத்திரதனைக் கொல்ல எண்ணிச் சக்கரத்தை நீக்கவும் சூரியன் பிரகாசித்தது. உடனே அருச்சுனன் கணையேவிச் சயத்திரதன் தலையைக் கொய்தான். (7)

130. படம் பொருந்திய பாம்பு போன்ற நிதம்பம், வாழை யொத்த தொடை, குமுத மலர்போன்ற வாய், செப்புக் குடமொத்த தனம் என்று நிரணிறை யாக்குக ; பூங்கதலி - அழகிய வாழை ; குறங்கு - தொடை ; ஆயர் மடவார் - கோவியர்கள் ; கூறை - சேலை ; குரவை - கைக்கோத்து வாழ்த்தியாடுவது ; வட பத்திரம் - வடவேங்கடமலை; புளிங்குடி-பாண்டி நாட்டுத் திருப்பதிகளிலொன்று; பெருமான் பெயர்-காசினி வேந்தன் ; பிராட்டியின் பெயர்-மலர் மகள் நாயகி. (8)

131. பச்சை- இளமை ; பரவைப் புலவு - கடலினிட முண்டான மீனின் புலால் நாற்றம் ; சாந்தம் - சந்தனம் ; குழகன் - அழகுடையவன் ; பிச்சி-ஓர் மல்லிகைச் செடி ; தவனம் - மருக்கொழுந்து; செறி +

முட்டு + அம் + பேரை - செறிந்து முட்டுகின்ற அழகிய தென் பேரை என்க; பெருமான் பெயர் மகரநெடுங் குழைக்காதர். பீடு - பெருமை; இடபமலை - திருமாலிருஞ் சோலை; துவரை - துவாரகை; கச்சிப்பதி - காஞ்சிபுரம்; சேடமலை - திருவேங்கடம்; குறுங்கை - திருக்குறுங்குடி; பெருமான் பெயர் வைஷ்ணவ நம்பி; பிராட்டியின் பெயர் குறுங்குடி வல்லிநாயகி; கோவினிரை - பசுக்கூட்டம். (9)

132. பணி -படம்; வேள்மனை - மன்மத னுறைவிடம் (நிதம்பம்); பஞ்சு - செம்பஞ்சு; தளிரடி - இலைத்தளிர் போன்ற பாதம்; அயில் - வேல்; நித்தர் - கடவுளர்; நேமி - ஆக்ஞா சக்கரம்; நிதி - செல்வம்: மறலி - யமன்; சமையம் - மதம் (போலி); வாதர் - தர்க்கம் செய்பவர்; கஞ்சமலராள் - இலக்குமி; நாளும்+உளம்+கருதி என்க. உளம் - மனம். (10)

---

## சப்பாணிப்பருவம்

---

133. மாறன் - நம்மாழ்வார்; நவிலும் - சொல்லும்: நாவலர் - புலவர்; சதி நடனம் - தாளத்தோ டொத்த நடனம்; பங்கயன் - பிரமன்; கடவுள் சங்கம் - கடவுளரின் கூட்டம்; பைந்துழாய் - பசிய துளப மாலை; அவள்+தன்=அவடன்; செங்கமலை - செந்தாமரையி லுள்ள இலக்குமி; தரு - மரம். (1)

134. நக்கன் - சிவபெருமான்; அவன் மக்கள்-முருகன், விநாய கன்; வளி - காற்று; இருநால் அக்கரம் - எட்டு அக்ஷரம், அதாவது அஷ்டாக்ஷரம் எனப்படும் நாராயண மந்திரம்; வாணன் - வாணாசுரன்; இக்கு - கரும்பு; சிக்கம் - உறி; ஒக்கலை - இடுப்பு; "நக்கனவன்...... ......மகிழச்சுதா" :- பலியின் குமாரனான பாணாசுரன் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து தன் நகர்க்குக் காவலாயிருக்க சிவனையும், அவன் மக்களையும் பெற்றான்; அவன் மகள் உஷை கனவிற்கண்ட அநிருத் தனைத் தோழியால் வருவித்துக் களவிற் புணர்ச்சியி லீடுபடவும் வாண னறிந்து அநிருத்தனைச் சிறையிலிட்டனன். தன்பேரன் சிறையிலிருப் பதை நாரதரா லறிந்த கண்ணன் பாணாசுரன்மீது யுத்தத்திற்குச்சென்று சிவன், முருகன், விநாயகன் ஆகியோரைப் புறங்காட்டச் செய்து வாண

சுரனுடைய 2-கரங்களைத் தவிர மிகுதி கைகளை யறுத்தார். பின் பாணு சுரன் அநிருத்தனையும், உஷையையும் கண்ணனிடம் சேர்த்துப் பிழை பொறுக்க வேண்ட அவ்வாறே செய்தார். **துருவாசன் மேற் சக்கரம் நடத்தியது :—** அம்பரீஷனை ஏகாதசி விரதபங்கம் செய்யவேண்டு மென்று வந்த துருவாசன் மமதை கெடுமாறு சக்கரத்தால் துரத்து வித்துப் பின் அம்பரீஷனால் மன்னிக்குமாறு செய்தார். (2)

135. திறை - கப்பம்; சோம வெற்றிக்குடை - சந்திரவட்டக் குடை; மாகதர் - இருந்தேத்துவோர்; பூசுரர் - பிராமணர்; வேசையர் - தேவதாசிகள்; களைகண்ணன் நேமித் தசரதன்-பிள்ளையில்லை யென்ற துக்கத்தையுடையவனும் ஆஞ்ஞா சக்கரத்தை யுடையவனுமான தச ரதன்; காமுற்றியற்று பெருவேள்வி - புத்திர காமேட்டி யாகம்; வாம மேகலை - அழகான மேகலாபரணம்; தாமரைப்போதிலுறை மா - இலக்குமி. (3)

136. பால் அம்பரம் - பாற்கடல்; இம்பர் - இவ்வுலகம்; இந்திரை - இலக்குமி; பார்த்திபன் - அரசன் (தசரதன்); அனுசன் - தம்பி (இலக்குமணன்); மிதிலைக்கண் வரு செல்வி - சீதை; தெண்டகவனம் - தண்டகாரண்யம்; முத்தண்டின ரருஞ்சாலை - முனிவரது பன்னகசாலை கள்; சுந்தரம் - அழகு. (4)

137. வனமாலை - துளசிமாலை; இருமாதர் - பூதேவி, இலக்குமி; முளரியிதழ் வாசர் - பிரமன்; இருக்கு + ஆதி + அந்தம் + நடுவு என்க; இருக்கு - நால்வகை வேதத்தில் ஒன்று; இராமானுசன் - இரா மானுசாச்சாரியார்; தாசரதி - தசரதனுக்கு மகன், தத்திதாந்த நாமம். (5)

138. மதிவதனம் - சந்திரனைப்போன்ற முகம்; காவி - கருங்கு வளை; மேனி - உடல்; மட்டு - தேன்; கனகவடம் - பொன் மாலை; ஊறல் - எச்சிலொழுகை; புங்கம் - உயர்ச்சி; பழவினை - பழைய தீவினை கள்; ததியர் - தத்துவம் நிறைந்தவர்; மணவாளமுனிவன் - இவர் பாண்டிநாட்டில் சிக்கில்கிடார மென்னும் ஊரில் “திருமான் மனத்த அண்ணர்” என்பாருக்கு மகனாக உதித்தவர். திருவரங்கநாதரிடம் பக்தி பூண்டவர். (6)

139. பாவத்துநிலை-தன்மைகளின் நிலை; மால்-மயக்கம்; கஞ்சன்-கம்சன்; நித்தியன் - அழிவில்லாதவன்; தாலப் பெருந்துவசம் - பனைக் கொடி; மாலி - மாலியவான், விஷ்ணுசக்கரத்தால் கொலையுண்டவன்; சீதையை விட்டுவிட இராவணனுக்குப் புத்தி கூறினன்; சீலக்குணம் -

ஒழுக்கம் ; " மூலமறை...............மணிவண்ண " - பிருகு முனிவர் சத்துவதேவரை அறியும்படி பிரமன், உருத்திரன், திருமால் இவர்களிடஞ் சென்று அவர்களைக் கோபமூட்டினர். அதனால் பிரமனும் உருத்திரனும் கோபித்தனர். இவர் உருத்திரனை இலிங்கமாக மாறும்படியும், பிரமனுக்குக் கோயில் இல்லாதிருக்கவும் சாபந் தந்து திருமாலிடஞ் சென்று ஓர் உதை கொடுத்தார். திருமால் உதைத்த காலைப் பிடித்து உபசரித்ததால் இவரே சத்துவமூர்த்தி யென்றறிந்து துதித்தார். "சீலக் குணத்து ............சிங்கம்" :-தேவகி வேண்ட கருவிலுதித்த அறுவரையும் தேவகிக்குக் காட்டி அவருக்குத் திவ்யதேக மளித்தார். (7)

140. வம்பு அவிழ் - புதுமையாக மலர்ந்த ; ஆ - பசு ; வசு - பசுங்கன்று ; அம்பரம் - மேலுலகம் ; அமரர் இம்பரின் மனுத்தலைவர் - தேவர்கட்கும், இவ்வுலகத்தின் மனுச்சக்கரவர்த்தி போன்ற அரசர்கட்கும் ; பிரகலாதன் + நின் + கம்பலையுறுது - பிரகலாதன் உன்னால் துன்ப மடையாமல் ; இப்பாட்டில் அசுரர்களைப் பருத்திப் பொதியாகவும் பிரகலாதனை நெருப்பாகவும் உருவகித்திருத்தல் காண்க ; வழுத்த - துதிக்க ; கனகன் - இரண்யன் ; தம்பம் - தூண் ; **வசுக்கொடு விளங்கனி யெறிந்தது** - கம்சனேவலால் கன்றுருவடைந்து வந்த வற்சாசுரனை விளாமரத்தில் மோதிக் கொன்றார். (8)

141. சீதம்-குளிர்ச்சி ; வேதியன் - துரோணாசாரி ; சிலை - வில் ; கோது - குற்றம் ; நீதம் - நன்னெறி ; உகந்து - மகிழ்ந்து ; நெடுநகர் - அத்தினபுரி ; சோர-கள்வ ; விதுரன் - துரியோதனன் சிற்றப்பன். (9)

142. தினகரன்-சூரியன் ; கனகம் - பொன் ; நிருதர் - அசுரர் ; பன்னி - பத்தினி ; நற்றவன் - அத்திரி முனிவர் ; **அனசூயை கையணி யணிந்தது**-ஸ்ரீ ராமன் தண்டகவனத்துக்குச் சீதாபிராட்டியுடன் சென்று அத்திரி ஆச்சிரமத்தில் தங்க இவள் பிராட்டிக்கு வழியில் நீக்கம் வாராது மங்கல அணி அணிந்து வேண்டிய தருமங் கூறி யனுப்பினாள். (10)

---

## முத்தப்பருவம்

---

143. திகிரி- சக்கரம் ; விண்டு - விஷ்ணு ; அத்தி - கடல் ; பதும ரூப, தாமோதரா என்று பிரிக்க. (1)

144. அட்டல் - கொல்லல்; சுரி - வளைந்துள்ள; சக்கரமும் சங்கும் ஆதிசேடனுகிய படுக்கையும் தம்பியராக வந்து பிறப்பர் என்று தேவர்களிடம் கூறினுர். அங்ஙனமே, தான் இராமனுகவும், சக்கரம் பரதனுகவும், சங்கு சத்துருக்கனுகவும், ஆதிசேடன் இலக்குவனுகவும் பிறந்தனர். வட்டை நிகர் கொங்கை - புலியினது உடல்வரி போன்று சந்தனக் குழம்பால் எழுதப்பட்ட கொங்கை; ஏந்திழை - பெண்; நறும்போது - தாமரைமலர்; குல்லை - துளசி; வில்லிபுத்தூர் வந்த மாது - ஆண்டாள்; பட்டர்கோன் - பெரியாழ்வார். (2)

145. தரங்கம் - அலை; புணரி - கடல்; அரவ நெடிய கேதனன்- பாம்புக்கொடியை யுடைய துரியோதனன்; புங்கம் - அம்புக்குதை; கிரீசன் - சிவன்; அரன் - சிவன்; ஈசன் - தலைவன்; பார்த்தசாரதி - பார்த்தனுக்குத் தேர்ச்சாரதி; "சயத்திரதனைக் கொல.........அருளும் பரமனே"-அருச்சுனன் மகனுன அபிமன்யுவைச் சயத்திரதன் வஞ்சனை யினுல் கொல்ல, அருச்சுனன் தன் சபதப்படிச் சயித்திரதனைக் கொல் வதற்கு, அஸ்திரம் வாங்குவதற்குக் கைலாயம் சென்றனன். வழியில் சிவபெருமானைப் பூசிக்கும் நேரம் வர அருச்சுனன் கண்ணனைச் சிவ பெருமானுக நினைத்துப் பூசித்து நித்திரை செய்து கண்ணனுடன் திருக் கயிலையை அடைந்து கண்ணன்மேற் சாத்திய மலர்கள் சிவபெருமான் மீதிருக்கக் கண்டும் முன்பு அக்கண்ணன் காலைக் கழுவின கங்காதீர்த்தம் சிவபெருமான் சிரசில் இருக்கக் கண்டும் கண்ணனே தலைவன் என்று அருச்சுனன் தெளிந்தான். (3)

146. சவரி - ஒரு வேடுவச்சி; மாருதி - அனுமன்; வரிவில் - வரிந்து கட்டிய வில் என்க. (4)

147. குடவளை - குடம்போன்ற சங்கு; அடல் திகிரி - கொல்லு கின்ற சக்கரம்; கோல்குழல் - மூங்கிலினுல் செய்த புள்ளாங்குழல்; வசு - பசுங்கன்று; வயப்புரவி - வெற்றி மிகுந்த குதிரைகள்; ஒரு மடுவினில் பட அரவு - களிங்கம் என்ற மடுவிலிருந்த காளிங்கன் என்ற பாம்பு; "மடல் விரிந்தும்...............மதிகூதனு" - ஒரு சமயம் கண்ணன் மாடுகள் மேய்க்கையில் பசுக்கள், பசுங்கன்றுகள், ஆயச் சிறு வர்கள் எல்லோரையும் பிரமன் மறைத்துவிடக் கண்ணனே பசுவாகவும் பசுங் கன்றுகளாகவும், ஆயச்சிறுவர்களாகவும் ஆகிப் பழையபடியே செய்ய, பிரமன் வெட்கி எல்லோரையும் கொண்டுவந்து விட்டு மன் னிப்புக் கேட்டான். மதம் பொருந்திய யானைகளின் நெருக்கமோ என்று சொல்லும்படியான இருளை நீக்க வருகின்ற சூரியனது குதிரை களைக் கட்டும்படியான ஆகாயமளவு உயர்ந்த சோலை சூழ்ந்த காட்டி லிருக்கும்படியான ஒரு மடு என்க, (5)

148. வார் - கச்சு; கொம்மை - திரட்சி; கெழுமும் - பொருந்திய; ஏர்திகழ் உமைக்கதிபன் - அழகு மிகுந்த பார்வதிக்குத் தலைவன் (சிவ பெருமான்) வாணி இறை - பிரமன்; உம்பர் தலைவன் - இந்திரன்; வாதம் - காற்று; நெடு வாருதி - நீண்ட கடலுக்கிறைவன் (வருணன்); வசுக்கள் - அஷ்ட வசுக்கள்; அனலதுக்கதிபன் - அக்கினி; இந்து - சந்திரன்; ஆதவன் - சூரியன்; சூர் பகை தடிந்த குகன் - சூரபதுமனாகிய பகையைக் கொன்ற சுப்பிரமணியன்; வேழம் - விநாயகன்; சுரர் - தேவர்; கேழல் - பன்றி; பொற் கண்ணன் - இரண்யாக்கதன்; மறலி - இயமன்; மருப்பு - தந்தம் இப்பாட்டு இரண்யாக்கதனைக் கொல்ல வராகவதாரம் எடுத்ததைச் சொல்கிறது. (6)

149. நச்சரவு - விடமுடைய பாம்பு; முனிவு - வெறுப்பு; நங்கை - சீதை; நம்பி - இராமன்; வச்சிர கரத் தலைவன் - இந்திரன்; முச்சிகை யயிற் கடவுள் - சிவன்; வானவர் - தேவர்; புண்டரீகன் - தாமரையிலுள்ள பிரமன்; நிருதக்கிளை - அசுரரது சுற்றம்; கதம் - கோபம்; கொச்சைமதி - இழிவான புத்தி; இப்பாட்டு சீதை இராமனுக்குத் தன் கற்பின் உண்மையை வெளிப்படுத்த அக்கினியில் மூழ்கினதைக் காட்டுகிறது. (7)

150. உம்பர் - தேவர்; இளையோன் - இலக்குமணன்; பரமபதம், ஆலின் இலை, கடல் எனப் பிரிக்க; மருவார்குழல் - வாசனை பொருந்திய கூந்தல்; அரியணை - சிங்காதனம்; கைகேசிதரு புதல்வன் - பரதன்; அமர் - சண்டை; முனிவு - கோபம்; படைப்புணரி - சேனையாகிய கடல்; நீறெழ - சாம்பலாக; இளையோனமைத்த பன்னக சாலையில் இராமன் சனகியுடனிருந்த போது தமையனை இராமனுக்கு முடி சூட்டி மகிழ வரும் பரதனைச் சண்டை செய்ய வருகிறானென்று இலக்குமணன் கோபித்துப் பரதனோடு சண்டைசெய்து படைகளைச் சாம்பலாகச் செய்ய விடைகேட்டான். இராமன் இலக்குமணனுக்கு அவனது தவக்கோலத்தைக் காட்டித் தெளிவுபடுத்தினான். (8)

151. மங்கை - திரௌபதி; மரமீது முதிர்பழம் - நெல்லிக்கனி; விஞ்சை - வித்தை; விறல் - திறமை; அறை - சொல், ஏவல்வினை; அமித்திர முனிவர் பொருட்டுப் பழுக்கும் நெல்லிக்கனியைப் பறித்துக் கொடுக்க திரௌபதி அருச்சுனனைக்கேட்டு அங்ஙனமே அவன் செய்யப்பின் அது இன்னார் பொருட்டென அறிந்து ஐவர் கண்ணனை வேண்டிப் பொருந்துவிக்கத் தங்களது கருத்துக்களையும், பாஞ்சாலியின் கருத்தையும் கூறிப் பொருந்தச் செய்தனர். அத்தருவில் அக்கனி பொருந்த என்க. தரு - மரம்; விழவும் + அற்று + அதனையறிந்து என்க. அற்று விழவும் அதனையறிந்து என்க. (9)

---

# வாராணைப் பருவம்

152. நிருதன்-விராதனெனு மரக்கன்; நாரிபாகன் - சிவபெருமான்; உதரன் - வயிற்றையுடையவன்; கனகவோங்கல்-பொன்மலை; உபயசரண் - இருபாதங்கள். (1)

153. பாணி - கை; வேணி - சடை; கடுக்கை - கொன்றை; தவசு புரியு மசுரன் - பதுமாசுரன்; சேண் - தூரம்; பதுமாசுரனை விருகாசுரன் என்பர்; விருகாசுரன் எவர்சிரத்தில் தன் கையை வைக்கினும் அவர் எரிய வரம் பெற்று அதைச் சோதிக்கத் தம்மிடம் திரும்பியவனைத் தீக்கண்ணால் எரிக்காது ஐவேலங்காயில் மறைந்து விஷ்ணுமூர்த்தியையேவிக் கொலை புரிந்தார். (2)

154. மகரம்-சுறுமீன்; மேவ - அடைய; ஐம்பெரும் பூதங்களையும், நான்கு வேதங்களையும், மூன்று உலகங்களையும் சூரியன், சந்திரர்களையும், அறிவையும், மகரந்தம் செறிந்த தாமரைப் பூவில் வியந்து தங்குகின்ற பிரம்மனையும் படைத்த தாயாகிய சானகி என்க. வாதமைந்தன் - அனுமான். (3)

155. கதிசேர் - மோட்சத்தையடையும்; நங்கை - ஆண்டாள்; நதியார் செழுஞ்சடிலன் - கங்கை நதியைத் தாங்கிய சடையையுடைய சிவபெருமான்; விதியோன் - பிரமன்; அர்ச்சாவதாரம்-எல்லோருக்கும் பயன்படும் கடவுளுருவமாயிருத்தல்; மூடசிக்கள் - அற்ப அறிவுள்ள குற்றம் நிறைந்தவர்; எதிராசன் - இராமானுசர். (4)

156. (1) **கன்மேந்திரியங்கள் ஐந்து** :-1. உபத்தம் 2. கைகள் 3. வாக்கு 4. வாயு 5. பாதம் என்பன. (2) **ஞானேந்திரியங்கள் ஐந்து**:- 1. மூக்கு 2. நாக்கு 3. கண் 4. மெய் 5. செவி என்பன. (3) **விடயங்கள் ஈரைந்து** :-3. பிருதிவி (மண்) 2. அப்பு (நீர்) 3. தேயு (நெருப்பு) 4. வாயு 5. ஆகாசம் (இவை பஞ்ச பூதங்கள்) என்பன 6. நாற்றம் 7. சுவை 8. ஒளி 9. ஊறு 10. ஓசை (இவை சூக்கும பூதங்கள்) என்பன. (4) **அந்தக்கரணம் நான்கு** :-1. மனம் 2. அகங்காரம் 3. புத்தி 4. சித்தம் என்பன. சடம் - உடல்; சுருதி - வேதம்; பெரியநம்பி - பெரிய திருமலை நம்பி போலும். திருப்பதியில் வாழ்ந்தவர். கோவிந்த பட்டரை வைணவராக்கினர். இந்திரபதவி பெறுபவர் பலராகலின் இந்திரர் எனக் கூறினர். எட்டெழுத்து - அஷ்டாக்ஷர மந்திரம். (5)

157. கருமுகில் முழக்கம் - மேகத்தின் இடி; தானை - சேனை; ககனகோளம் - ஆகாயமாகிய உருண்டை; உரற்றும் - பிளிறும்; நெடுகை - நீண்ட துதிக்கை; பருதிவானவன் - சூரியதேவன்; இருபெயரொட்டுப் பண்புத்தொகை; பருவரை - பருத்தமலை; அருதியுடன் - முழு அன்புடன்; பாரதயுத்தத்தில் அபிமன்யு தன் தந்தைக்குத் தான் யுத்தத்தில் ஆபத்திலிருப்பதாகத் தெரிவிக்க சங்கமுழக்க அது கேளாவண்ணம் கண்ணன் தன்வாயில் பாஞ்சசன்னியத்தை வைத்து முழக்கினார். (அ) துரோணர் இறக்குமாறு தருமரை "அசுவத்தாமா அதா குஞ்சரம்" என்று கூறச்செய்யும்போது குஞ்சரம் என்ற வார்த்தையின்போது சங்கத்தை முழக்கினார். (6)

158. கொங்கு - வாசனை; நறவு - தேன்; கோகிலம் - குயில்; கோகனகமான்-சத்தியபாமை; கங்குல்-இரவு; ககனம்-சுவர்க்கலோகம்; கந்தமலிகின்ற தரு - பாரிசாதம்; சங்கிநாதை - பாஞ்ச சன்னிய முழக்கம்; தளமுகை - இதழ் கூடிய மொட்டு; புங்கம் - உயர்ச்சி. (7)

159. மார்த்தாண்டன்-சூரியன்; **உத்தானபாதன்:**-சுவாயம்பு மனுவிற்குச் சதரூபியிடமுதித்த இரண்டாங் குமரன்; இவனுக்குச் சுநீதி, சுருசி என இரண்டு பாரியைகள்; இவ்விருவரில் சுருசியிடத்தில் அரசன் ஆசைவைத்துச் சுநீதியையும் அவள் குமாரனையும் அலட்சியம் செய்ய சுநீதிகுமாரன் துருவன் தாய் தந்தையரை விட்டுத் தவமேற் கொண்டு காசிப ராச்சிரமமடைந்து, உபதேசம் பெற்று, விஷ்ணுவையெண்ணித் தவமியற்றித் துருவபதம் பெற்றனன். தார் - மாலை; மனைக்கிறைவி - அரண்மனைக்கிறைவியாகிய சுருசி; சலம் - வைராக்கியம்; கானம் - காடு ஈராறுநாமம் - துவாதசநாமம்; நாராயணன் - நாரம் + அயனன்; நாரம் - சித் + அசித்; அயனம் - இரண்டிற்கும் இருப்பிடமாக உள்ளது. சித் - ஆத்மா; அசித் - மெய்; அயனம் - உயிர். (8)

160. சிறப்புப் பொருந்திய வெள்ளிய கைலைமலையை அடைந்து வலம்செய்து சிவனைப் பணிபவனும், சண்டையில் நேர்முகமாக எதிர்த்தவரின் வலப்பாகத்தின் பலம் தன்னிடமடைய வரம் பெற்றவனும், சமுத்திரங்களேழும், ஏழு உலகங்களும், மலைகள் ஏழும், மேகங்கள் ஏழும் போன்று உடல் கட்டமைந்த வீரமுடையவனும், ஐம்பெரும் பூதங்களையும் வருத்தும் குணமமைந்தவனு மாகிய வாலி என்க; ஏது - வழி; பருதி மகன் - சுக்கிரீவன்; மையல் - மயக்கம்; ஏர் - அழகு; பகழி - அம்பு; எய்த ராகவன் என்க; சுக்கிரீவன், இராமன் வாலியை வெல்வனோ, மாட்டானோ என்றறிய "ஏழு மராமரங்களையும் ஓரம்பினால் எய்க" என அங்ஙனமே எய்து சந்தேகத்தைப் போக்கினான். (9)

161. குயில்+நறவு எனப்பிரிக்க; பாகு - வெல்லப்பாகு; கனி - கனிரசம்; நறவு - தேன்; குயில் - ஓர் பறவை; மிடற்றினிசை - கழுத்தினின்று வரும் சங்கீதம்; குவளேயோ, கருவண்டோ, கயலோ, இயல்பான அம்போ என்னும்படியான விழி என்க. நீர்மருவிய புயல் - கருக்கொண்ட கருமேகம்; அளகபந்தி - கூந்தற்றெகுதி; கனகப்பொருப்பு - மேருமலை; அயனரன்-பிரமனும், சிவனும்; உதரம்-வயிறு; கண்ணனும், பலராமனும் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கையில் கண்ணன் மண்ணைத்தின்ன, அதைக்கண்டு பலராமர் யசோதையிடம் சொல்ல அவள் கண்ணனைக் கேட்க, வாயைத்திறந்து அயனரன், அண்டகோடிகள் ஆகியவற்றைக் காட்டினர். (10)

---

# அம்புலிப் பருவம்

---

162. தெண்டிரை-தெளிந்த அலைகளையுடைய பாற்கடல்; முயல்மறு - களங்கம்; கேகயம் - மயில்; கோமளம்-அழகு; தரளம்-முத்து; அண்டர்மனை - ஆயர்வீடு; ததி - தயிர்; கெண்டைமீன் விழி போன்ற விழியுடைய மாதர்களின் கூந்தலைக் கண்டு தம்மவரென்று கருவங்கொண்டு தினமும் மயில் நடனமாட அதைப்பார்த்து ஆசையுடன் எழுந்து மேகங்கள் இடித்து நீண்ட மலையோவென்று அழகுமிக்க மெத்தைகளை யடைந்து அழகாக சங்குநிதியையும் முத்துக்களையும் பெய்து வளத்தைப் பெருக்கும்படியான ஆயர் வீடு என்க. (1)

163. உம்பர் - மேலுலகம்; இரவி - சூரியன்; அயர்வு - களைப்பு; பொன்னனூர் - பெண்கள்; காலிட-வெளிப்பட; பயோததி-பாற்கடல்; தம்பம் - தூண்; வேள்வி - யாகம்; சார்+அமர+பக்கம் என்க. சார்ந்த அமரபட்சம் என்று பொருள் கொள்க. (2)

164. அரவு - கேது எனும் பாம்பு; இதயம் - மனம்; உட்குதல் - அச்சம்; உச்சிதம் - இன்பம்; மேக்குற்று - மேலே பொருந்தி; குஞ்சரம் - கஜேந்திரன்; குருமணிப்புள் - கருடன்; செஞ்சக்கரத்துடன் - செம்மையான சக்கரப் படையை யுடையவனிடம்; சக்கரம்-தானியாகுபெயர்; குவலயம்-பூமி; கசேந்திரன் என்ற யானையை முதலை பிடித்துக் கொள்ள "ஆதிமூலமே" என்று யானை கூற திருமால் ஓடிவந்து சக்கரத்தால் முதலையைத் துணித்து யானையைக் காப்பாற்றினர். (3)

165. குமிழ் - குமிழம்பூபோன்ற மூக்கு; இடைபொறுது - இடுப்பு பொறுக்காது; எழில்-அழகு; கன்னியர்கள் தொழுதல்-கணவனை விரும்பி மணமாகாத பெண்கள் பிறையைத் தொழுதல் வழக்கம்; தழல் - நெருப்பு; நறவு - தேன்; மதகு+ஊடு - நீர் மதகின் வழியாக. (4)

166. வாமம் - இடப்பாகம்; வைத்துலவுவர் - சிவபெருமான்; நீங்காத+வன்பகை என்க; தாமரைகள் சூழ்ந்த குளங்களின் அருகில் ஊறுகின்ற சங்குகள் ஈன்ற அழகுமிக்க முத்துக்களைக், கரும்புகள் மிகுந்துள்ள சோலையில் வாழும் நாரை தனது முட்டை என்று நினைத்து அடைகாக்கும் அழகுமிக்க பாண்டியநாடு என்க; கமலாசனன் - நான்முகன்; "தென் இலங்காபுரி..............தீ" :-இலங்கையில் இராவணன் சூரியனை வரவொட்டாமல் தடுத்தான். அதனால் சந்திரனும் பயந்தான். பின் இராமன் இராவணனைக் கொன்று சந்திரனையும் சூரியனையும் நன்கு பிரகாசிக்கச் செய்தான். (5)

167. பரவைசூழ் உலகு-கடல் சூழ்ந்த உலகம்; வெப்பாற்றியும்-வெப்பத்தைத் தணித்தும்; பாசறை - யுத்தத்தின்போது சேனைகள் தங்குமிடம்; வாகை - வெற்றிமாலை; அரவின் அணை - ஆதிசேடனாகிய படுக்கை; கடல்சூழ்ந்த உலகத்தைச் சூரியன் தனது அழலை வீச, நிலவுவீசி வெப்பத்தைத் தணித்தும் சண்டையில் வெற்றி பெற்று வரும் வீரர்களின் தோளைத் தழுவும் பெண்களுக்கு அமுதம்போன்று வளமை பெற்றும் பயிர்கள் துன்பமில்லாமல் நன்கு வளரும்படி உதவியும் கரிய இருளை ஓட்டியும் ஆகிய தகுதிகளைப் பெற்ற சந்திரனாகிய உன்னை என்று முடிக்க. (6)

168. மாரன் மனையாள்-மன்மதன் மனைவியான இரதி; மிருகண்டமுனி பாலர் - மார்க்கண்டேயர்; ஆரம் - மாலை; சோடசம் - பதினாறு; மாமகள் - இலக்குமி; **ததிபாண்டூரங்கன்** :- இவன் ஒரு இடையன்; கண்ணன் இவனிடம் ஒரு நாடகமாக அடைக்கலம் புக இந்த இடையன் இவரைத் தயிர்ப் பானையால் மறைத்தனன். பிறகு கிருஷ்ணமூர்த்தி தம்மை விடைகேட்க இடையன் "எனக்கு மோட்சம்தரின் விடுவேன்" என அவ்வகை வரங்கொடுக்கப் பெற்றான். **மார்க்கண்டேயர்** :-கண்ணனைச் சிவபூசைக்குக் காரணம் வினவி அவரால் முதற்பொருள் அறிந்தார். (7)

169. பயோதரம் - தனம்; புங்கவன் - கடவுள்; கார்+அணம்+சோலை - மேகங்கள் சூழ்ந்த சோலை; கஞ்சமலரென்ன வொளிரும் கரதலம் - தாமரை மலரைப்போன்று பிரகாசிக்கும் கைகள்; வாரணத்துரிவை - யானையின் தோல்; உந்தும் - அதிகமாகும். (8)

170. அகமுன்னி-மனதில் நினைத்து; விசை-வேகம்; தழல் எரி எனும் பங்கி - நெருப்புப் போன்ற சிவந்தமயிர்; தானவர்கள் - இராட்சுதர்கள்; மழவிடை-இளமையான காளை; கூராழி-கூர்மை பொருந்திய சக்கரம். (9)

171. சென்னல் - தேன்கெண்டை மீன்கள்; என்கோன் - எனது தலைவன்; நித்தியவிபூதி - திருமாலின் பரமபதம். (10)

---

# சிற்றில் பருவம்

---

172. மதிசேகரன் - சிவன்; திசைமுகன் - பிரமன்; கமலமான் - இலக்குமி; கந்தம் - வாசனை; கழல் - பாதம் (தானியாகுபெயர்); **மாலி:-**இவன் சுகேசன் குமாரன். பிரம்மனை நோக்கித் தவம்செய்து உலக மெல்லாம் தன் ஒரு குடைக்கீழ் அடங்க வரம்பெற்றவன். கடைசியாக விஷ்ணு சக்கரத்தால் கொல்லப்பட்டவன். **சுமாலி:-** இவன் பாதளத்தில் இருந்த அரசன். இவனைத் தாடகை புத்திரர்களாகிய சுபாகு, மாரீசன் அடைக்கலமாக அடைந்தனர். இவனும் கடைசியில் விஷ்ணு சக்கரத்தால் கொல்லப்பட்டான். **உருக்குமணி:-** பீஷ்மகன் குமாரி. தமையனாகிய உருக்குமி, தன்னைச்சிசுபாலனுக்கு மணப்பிக்க இருந்ததை ஒரு பிராமணர் மூலமாய்க் கண்ணனுக்கு அறிவித்துக் கௌரி பூசை என்ற காரணத்தைக் கொண்டு சென்று அங்கிருந்து கண்ணனுடன் தேரிலேறித் துவாரகை சென்றாள். (1)

173. நுடங்கிடை- துவளுமிடை; அடிதடம்-நிதம்பம்; பயிர்ப்பு-பெண்டிர்க்குரிய நால்வகைக் குணத்திலொன்று. (2)

174. முருக்கின் மலர் - முருக்கமரத்தின் மலர்; இதழ் - உதடு; கனி - கோவைப்பழம்; ஆய்ச்சி - யசோதை; புனிற்று - கன்றுகளை ஈன்ற பசு; அரி - கிளி; பொலன்று - பொற்றுகள்கள். (3)

175. மரைப்போது-தாமரைமலர் (முதற்குறை விகாரம்); பரமா-எல்லாருக்கும் மேலான விஷ்ணுவே; **கண்டாகர்ணன்:-** குபேரன் ஏவலாளிகளில் ஒருவன். பைசாச உருகொண்டவன். இவன் தன்னிடமிருந்த சூலத்தால் மனிதரை வதைத்துச் சிவனுக்கு நிவேதனஞ்

செய்து தான் உண்டு சிவனை முக்தி வேண்ட, அவர் விஷ்ணுவைக் கேள் என அப்படியே விஷ்ணுவைத் துதித்து அவரால் உபதேசிக்கப் பெற்றுத் தானே யன்றித் தன்தம்பியும் முக்திபெற வரம்பெற்றான்.(4)

176. அல்-இருள்; மழுராமன்-பரசுராமன்; திரையார் பொருநை நதி - அலைகளோடு கூடிய தாமிரபரணி; துதைப்பேன்-நெருங்குவேன்; "விரும்பு மறையோன்.........புகழோன்" :- இராமர் கொடை செய்வதைக்கண்ட பிராம்மணனொருவன் தனக்குப் பசுக்கள் வேண்டுமென்று கூற அவன் விருப்பத்தைக் கேட்டு அங்ஙனமே செய்க எனவும் தன் கையிலிருந்த கோலை வீசி அதனுள் அடங்கிய பசுக்கூட்டத்தைக் கொண்டான். "வினைகட்டு அறுக்கும் மனத்துணிவு" என்று பிரிக்க. கல்லை உருவாக்கினது :- இராமாவதாரத்தில் கல்லாயிருந்த அகலிகையைப் பெண்ணாக்கியது. (5)

177. அஞ்சனம் - மை; நுதல் - நெற்றி; மறு - மச்சம்; கனகச்செம்பு - பொன்னால் செய்த செப்புக்குடங்கள்; சந்தங் கமழும் சேறு - வாசனை வீசும் கலவைச் சாந்து; தபனன் - சூரியன்; தேர்ப் புரை யல்குல் - தேரையொத்த அல்குல்; நானம் - வாசனை; நளினம் - தாமரை போன்ற பாதங்கள்; நனி மாடங்கள் - மிகுதியான மாடங்கள் உள்ள வீடு; துளபத் தார் - துளபமாலை. (6)

178. சுதை - அமிர்தம்; தேனு - காமதேனு; சசி - இந்திராணி; நோன்பு புரி இந்திரர் - தவவிரதங்களைச் செய்கின்ற இந்திரர்கள்; மகர நெடுங்கண்-சுறாமீன்போன்ற கண்கள்; விதுவதனம்-சந்திரன்போன்ற முகம்; மணி முறம் - அழகிய முறம்; பரல் - மணலின் பருக்கைக்கல்; அறக்கொழித்து - முழுதுங்கொழித்து; சிகரியமைத்து - கோபுரம் போன்று அமைத்து; சிறுமிகள் மணலைக்குவித்து அதிலுள்ள பருக்கைக் கற்களை முறத்தால் கொழித்தெடுத்துப் பொன்னையும், மரகதத்தையும், மலரையும் அதிலணிந்து செல்வத்தைப் போன்று விளையாட்டில் குழந்தை பெற்றெடுத்து உன்னுடைய பெயரை இடுவேன் என்று நினைத்துக் கோபுரமமைத்துக் கரங்கூப்பித் தொழுபவர்கள் என்க. இங்கு நிதிபோல் மகவைப் பெற்றெடுத்தலாவது:-சிறுமிகள் விளையாட்டிலேயே கற்களைத் தங்கள் பிள்ளைகளாகப் பாவனை செய்வது. பரலைக்கொழிக்கும்போதே பொன்னும் மரகதமும் கிடைத்தன என்க. (7)

179. நிவந்து பணைத்து - நெருங்கிப் பருத்து; நின்னைப் பணி மாளிகை - உன்னைப் பணிவதற்கான கோயில்; கமலை - திருமகள்; புனித்தாள் - குளிர்ச்சி பொருந்திய பாதம்; உவரித் திரைசூழ் - கடல்

அலை சூழ்ந்த; அவர்க்கு இறை - இந்திரன்; ஐங்கரன் - விநாயகர்; உடுவின்பதி - சந்திரன்; குகவேடன் - குகனாகிய வேடன் (இரு பெயரொட்டுப் பண்புத்தொகை). (8)

180. அனம்போன் மடவார் - அன்னம்போன்ற அழகிய பெண்கள்; ஆடு அரங்கு - ஆடுகின்ற இடம்; வேதிகை - திண்ணை; வலையும் பாசம் - கட்டுப்படுத்தும் பாசம்; மறை - வேதம்; மாறன் - நம்மாழ்வார்; செம்மை அடி - சேவடி. (9)

181. கவின் - அழகு; அரன் - சிவன்; புடைத்துப் பணைக்கும் - இடமகன்று பருக்கும்; வனப்பு - அழகு; சிரம் - தலை; "அரனார்...... ......திலகா":—திருமால் தாமரை மலர்களைக் கொண்டு சிவனைப் பூசிக்க, அம்மலரில் ஒன்றைச் சிவன் குறைக்கத், தமது கண்ணைப்பிடுங்கி அர்ச்சித்தார். அதனால் களிப்படைந்த சிவன் சக்கரத்தை அளித்தார். (10)

---

# சிறுபறைப்பருவம்

---

182. நந்துமிடறு - சங்குபோன்ற கழுத்து; உந்துமுலை - முன்னோக்கி வருகின்ற தனம்; செந்துவரிதழ் - சிவந்த பவளம்போன்ற உதடு; கவுரி என்னும் மயில் - பார்வதியாகிய மயில் (உருவகம்); தந்திமுகன் - விநாயகன்; குகன் - சுப்பிரமணியன்; தாபதர்கள் - முனிவர்கள்; கஞ்சன் - கம்சன்; மடநெஞ்சன் - மடமைத்தன்மையோடு கூடிய நெஞ்சுடையவன்; சிந்துரக்களிறு - செந்திலகமணிந்த **குவலயாபீடம்** என்னும் கம்சனது யானை; அட்ட - கொன்ற. (1)

183. நத்தை நிகர் கண்டம் - சங்கையொத்த கழுத்து; தத்தைமொழி - கிளிமொழி; செய்ய நளினமென மருவு கரம் - செந்தாமரை போன்று பொருந்திய கை; கோதை - மாலை; பிச்சி - ஓர் மல்லிகைப்பூ; கழுநீர் - செங்கழுநீர்ப்பூ; முகை குருகு - அரும்புகளையுடைய குருக்கத்திப்பூ; நித்தன் - அழிவில்லாதவன்; முத்தர் - முக்தியடையும் ஞானமுடையவர். (2)

184. மரை - ஒருவகை மான்; நறவைப் பொருந்து மொழி - தேனைப்போன்ற மொழி; மலையைச் செறுக்கும் - மலையையே மூழ்கச் செய்யும்; சிலையைக் கடிந்த நுதல் - வில்லை வென்று ஓட்டிய நெற்றி;

இரதிக்கு வருகணவன் உருவொத்தியைந்த இடை - இரதிக்குக் கணவனாகிய மன்மதனைப்போன்ற இடுப்பு ; மன்மதன் பிறர் கண்ணுக்குக் காணப்படாமல் அருவமாயிருத்தலின் பெண்களினிடையும் அது போன்றுஇருத்தலால் உவமை கூறினர். புரையுற்ற-குற்றம் நிரம்பிய.(3)

185. மண்டு திறல் - நெருங்கின வலிமை ; விப்பிரர்கள் - பிராம் மணர்கள் ; ககனமுறைவோர் - தேவர்கள் ; நிருதர் கோ - இராவணன்; வேதம் ஓதுகின்ற வேதியர், தவமுனிவர்கள், தேவர்கள், பூமியிலுள்ள மனிதர்கள் ஆகியோர் பணிகின்ற சானகி என்க ; நுதலி - நெற்றியை உடையவள் (குறிப்பு வினையாலணையும் பெயர்). (4)

186. குவலயம் - பூமி ; அப்புற மகற்ற - அப்பக்கம் அகன்று போமாறு ; இரவி-சூரியன் ; மாருதி - அனுமான்; அம்புயன்-பிரம்மன்; திக்கதிபன் - அஷ்டதிக்குப் பாலகர்கள் ; அனுமான் பிறந்தபோதே உதிக்கும் சூரியனைச் சிவந்த பழமென நினைத்து ஆகாயத்தில் பாய்ந்தவர். மற்றும் வேதத்தின் பொருளைச் சூரியன் செல்லும்போதே நடந்து கற்றவர். இத்தகைய புகழ்பெற்ற மாருதி என்க. (5)

187. பாதிமதி வேணியரன்-பிறைச்சந்திரனைத் தரித்த சடையை உடைய சிவன் ; மேதி பணி வாவி - எருமைகள் மூழ்கும் குளம் ; சூத மரம்-மாமரம்; கோதை இருவர்-பூமிதேவி, இலக்குமி ; எருமைகள் படிகின்ற குளத்தில் கயல்கள் அதன் மடியை முட்ட கன்றென்று நினைத்து விருப்பத்தோடு சுரக்கின்ற பால்கள் வேகமுடன் நதி போன்று ஓடி வயலிடம் சேர்ந்து பயிர்களை வளர்க்கின்ற அத்தகைய கழனிகளும், மாமர மீது உள்ள தளிரைக் கோதி உண்கின்ற குயில்கள் கூவியதைப், பவளம்போன்ற உதடுகளையும் சந்திரன்போன்ற முகத்தையுமுடைய பெண்கள் என்று நினைத்து ஆண்மக்கள் ஆச்சரியத்தோடு மருண்டு பார்க்கும் சோலையும் நிறைந்த மிதிலைப் பட்டணத்தில் தோன்றிய சீதை என்க. (6)

188. விரைந்த வேகத்தோடு வாயுபகவான் நெருங்கி மேருவின் சிகரங்களைச் சாய்த்த பெரிய ஓசைபோன்றும் தரைக்குத் தலைவர்களாகிய மன்னர்கள் போர்க்களத்தில் வெற்றிமாலை சூடியதைத் தெரிவிக்கின்ற முரசவாத்திய ஒலிபோன்றும் பூமியில் புகழ்கொண்ட கொடையாளர்கள் “வருகிறவர்களுக்குச் செல்வங்களைக் கொடுப்போம்,” என்று கூறுவதற்கான தியாக முரசத்தின் ஒலிபோன்றும் மேகங்களின் ஒலியோ என்று எங்குமுள்ள மயில்கள் நடனமிடும் கிழக்குத்திக்கின் தலைவனாகிய இந்திரன் உலாவருகின்ற ஐராவதம் என்ற யானையின் பிளிறல்

போன்றும் கடலின் சப்தமோ என்று பார்த்தவர்கள் வியக்கவும் சிறு பறை முழக்குவாயாக என்றுமுடிக்க. "சண்டவேகம்..............ஓசை" :- வாயுதேவனுக்கும் ஆதிசேடனுக்கும் ஒருகால் யார் பலவான் என்று வாக்குவாதம் வந்துவிடச், சபதப்படி ஆதிசேடன் மேருமலையைக் கௌவிக் கொள்ள வாயு மலையின் சிகரத்தைப் பெயர்த்துக் கடலில் போட்டான். ஐராவதம் என்ற யானையின் ஒலியை மயில்கள் மேகங்களின் ஒலியெனக் கருதி நடனமாடின என்க. (7)

189. அளி-வண்டு ; புகர்-சுக்கிரன், (அசுரகுரு) ; கணம் - விநாடி ; இருபுவி - பூமி, மேலுலகம் ; அசுரசக்கரவர்த்தி மகாபலி, வாமனனாக வந்த விஷ்ணுவுக்கு அவன் கேட்டவாறு மூவடிமண் கொடுக்கச் சம்மதித்துத் தாரை வார்க்கவும் தாரைவார்க்கும் கெண்டிகையில் சுக்கிரன் வண்டாகித் தடுத்தார். கையில் தண்ணீர் விழாமல் போகவே, வாமனனான விஷ்ணு ஒரு குச்சி எடுத்துக் குத்த, சுக்கிரன் ஒரு கண் குருடானான். (8)

190. கங்குல் - இரவு ; கார்தவழ் அரமியம் - மேகங்கள் தவழப் பெற்ற வீட்டின்மேல் உலாவும் வெளி ; கரங்கொடு யாழ் வருடி - கைகளைக்கொண்டு யாழின் தந்தியைத் தடவி ; கரங்கொடி யாழ் (குற்றிய லிகரம்) ; சில்லிசை - மெல்லிய இசை ; அசுணம் - இசை கேட்கும் ஓர் பறவை ; இன்னாவிசைகேட்கின் உயிர்விடும். (9)

191. மறவுரவோர் - பாபத்தையே வலிமையாக உடையவர்கள் ; சிகையெரி பங்கினர் - நெருப்பெனச் சிவந்த மயிரை உடையவர்கள் ; செல்லென ஆர்ப்புடையோர் - இடிபோன்று சப்திப்பவர் ; நடலை - வஞ்சனை ; ககனமுறு அமரர்கள் - ஆகாயத்தில் பொருந்திய தேவர்கள் ; குகன் - ஓர் வேடன் ; இராமருடன் நட்புப் பூண்டவன். (10)

---

## சிறுதேர்ப்பருவம்

---

192. பாவ்ரும் - வெல்லப்பார்கு போன்று பொருந்திய ; சண்டவேகம் - மிக்க வேகம் ; வில்லின் விடும் எ ஆகி - வில்லிலே விடும் அம்பாகி; புராந்தகன்-புர + அந்தகன், புரங்களுக்கு யமன் என்றுபொருள்; இது சிவனுக்குப் பெயர். ஆவாகி - எருதுவாக ஆகி ; சிவபெருமானை எருதாக ஆகித் தாங்கினர் திருமால். (1)

193. சுந்தர மடந்தை - இலக்குமி ; புவிமான்-பூமிதேவி ; துணை யடிப்போது - இரண்டு பாதங்களாகிய மலர்கள் ; மடமாது அசோதை - மடமைக் குணமுள்ள மாதான யசோதை ; தக்கணை - தட்சணை ; "கலை பயிலு நாளின்............நீலமுகிலே":- சாந்தீப முனிவரிடத்துக் கண்ணன் கல்விகற்று அந்த ஆசிரியருக்குக் குருதட்சணையாக, பிரயாகை தீர்த்தத்திற்குச் சென்று இறந்த குமாரனை, வருணனால் அறிந்து 'பஞ்சசன்' என்பவனைக் கடலில் சென்று வதைத்து இவன் உடலிலாகிய 'பாஞ்சசன்னியம்' என்னும் சங்கைக் கைக்கொண்டு யமபுரம் சென்று ஆச்சாரியார் புத்திரனை மீட்டுக் கொடுத்தார். (2)

194. உருத்திரர்கள் 11, சூரியர்கள் 12, வசுக்கள் 8, அசுவனி தேவர்கள் 4, ஆக 33-தேவர்கள். மருக்கமழும் - வாசனை வீசும் ; வட திசைக்கதிபன் - குபேரன் ; பீதகம் - பொன் ; குசேலன் - துவாரகைக்கு வந்தபோது அவன் கொடுத்த அவலினைக் கண்ணன் உண்ணும் போது குசேலனுக்குச் செல்வம் உண்டாக வேண்டுமென்று நினைக்க அங்ஙனமே ஆயிற்று. (3)

195. இந்திரன் மகன்-அர்ச்சுனன் ; குணபால்-கிழக்குப்பக்கம் ; கொடை மிக்க திறல் மன்னன் - கன்னன் ; மிசை - மீது ; 17-ஆம் நாள் யுத்தத்தில் அர்ச்சுனன் விடும் சரங்களால் கன்னன் சோர்ந்து கிடக்க அப்போது அவன் செய்த தருமமெல்லாம் திரண்டு தருமதேவதையாகி அர்ச்சுனன் விடும் பாணங்களையெல்லாம் விழுங்கக் கண்ணன் பிராம்மணனாகிச் சென்று கன்னனிடமிருந்து, தருமங்களையெல்லாம் தானமாகப் பெற்றார். (4)

196. செங்கதி ருடுக்கள்-சிவந்த கிரணங்களை வீசும் நட்சத்திரங்களின் தலைவனாகிய சந்திரன் ; கம்பலை - நடுக்கம் ; முனிவன் - விசுவாமித்திரன் ; வஞ்சி கைப்பிடித்த நிதி - வஞ்சிக் கொடிபோன்ற சீதாபிராட்டியின் கையைப் பிடித்த செல்வமே ; **தாடகை** :—இவள் ஓர் அரக்கி. இவள் மக்கள் சுபாகு, மாரீசன் என்பவர்கள். (5)

197. நிருதி - அரக்கியான சூர்ப்பனகை; தம்பி - இலக்குமணன்; மறையாகி - வேறு உருவங்கொண்டு : நெய் நிணம் - எண்ணெயும் கொழுப்பும் ; நெடிய காது இதழ் - நீண்ட காதும் உதடும் ; நாசி - மூக்கு; செய்யவள் - இலக்குமி ; கோதாவரி நதிதீரத்தில் பஞ்சவடி என்ற இடத்தில் சூர்ப்பனகை வேறுருவம் எடுத்து இராமனின் துணைவியான சீதையைத் தூக்கிச்செல்ல நினைக்க இலக்குமணன் உடை வாளினால் அவளது காது, உதடு, தனம், மூக்கு இவைகளை அரிந்துவிட அவள் ஓவென்று அலறி இராமன் முன் பணிய, இராமன், "தாயே, நீ யார்?" என்று கேட்டான். (6)

198. முந்நீர் அரசன்-கடலுக்கு அரசனான வருணன்; உவசித்தது-உபாசனை செய்தது; கனை - அக்கினிக்கணை; பனித்து - நீர்சொரிந்து; நடலை - பொய்; கோளரி - கொல்லும் கொள்கையுடைய சிங்கம்; குன்றம் என்னும் சிலை-மலையாகிய கற்கள்; இராமன் சீதையை மீட்க இலங்கை செல்லவேண்டியிருந்தது: அதனால் கடலைக் கடக்க அணைகட்ட வேண்டி வருணனை எண்ணி ஏழுநாள் சர சயனத்திருக்கவும் அவன் வாராததால் கோபித்துப் பாணத்தை எடுக்க வருணன் பயந்து ஒரு மணிமாலை கொண்டு வந்து சரணடைய இராமர் தான் எடுத்த அம்பிற்கு இலக்கு யாதென்று கேட்டு அவன் சொற்படி மருக்காந்தாரத் தீவிலுள்ள இராக்கதர் மேல் ஏவிக் கொலைபுரிந்தார். (7)

199. கார்நிறக்கோதை-மேகம்போன்ற கூந்தல்; தம்பி-இலக்குமணன்; கதிரவன் பெருமதலை - சுக்கிரீவன்; ஏர் - அழகு; இலங்கை அரசன் - விபீஷணன்; எதி பரத்துவன் - துறவியான பரத்துவாச முனிவர்; ஆர் சுவை-பொருந்திய சுவை; போனகம் - உணவு; மாருதி-அனுமான்; பரத்துவாசர் ஆசிரமத்தில் இராமர் வந்தபோது பதினான்கு வருடங்களும் முடிய பரதன் தன் சபதப்படி தீயில் விழுவான் என்று அனுமனை அயோத்திக்கு அனுப்புவிக்க அவர் சென்று செய்தி கூறிச் சாப்பிடுவதற்குள் வந்துவிட்டார். அப்போது இராமர் அனுமனையும் உடன் வைத்துக்கொண்டு உண்டார். (8)

200. மாகத் தமரும் புத்தேளிர்-ஆகாயத்திலுள்ள தேவர்கள்; யூகம்-படை வகுப்பு; இதை வியூகம் என்பர்; அணைதிருத்தி - அணைகட்டி (சேதுபந்தனம்); **இலங்கணி** :- இலங்கையைக் காத்திருந்து அநுமன் வந்த காலத்துத் தடைசெய்து அவனாலறை யுண்டிறந்த அரக்கி; புட்பகம்-புட்பக விமானம்; பதி-அயோத்தி நகரம்; மிதிலை மடமான்-சீதை; குருகை முனிவன் - நம்மாழ்வார்; குட்டநெடுந்தேர் - சிறிய விசாலமான தேர். (9)

201. கொடிஞ்சி-தேர்மொட்டு; உருள்-சக்கரம்; மறை-வேதங்கள்; பரி-குதிரை; ததியருள மலர்-வைணவ அடியாரின் மனமாகிய பூ; ஆராதனை செய்து உவந்து ஏத்த எனப்பிரிக்க; சூரியன் கிரணமோ என்று விளங்கும் மரகதத்தைத் தேர் மொட்டோடு கூடிய தேராக அமைத்து வேதங்கள் நான்கையும் குதிரைகளாகச் சேர்த்து, அடியார்களது மனமாகிய மலரை நீண்ட தேர் வடமாகப் பூட்டி அன்போடு அக்கயிற்றைப் பிடித்துத் துதிக்க என்று பொருள்கொள்க. (10)

வாழி

202. சேனேசன்-இவர் வைணவ ஆச்சாரியார். திருமகளுக்கு அடுத்தபடியாகக்கூறப்படுவர்; இவர் விஷ்வக்ஸேனர் எனப்படுவர். இவர் வரலாற்றை இராகவர் பிள்ளைத்தமிழ் தாலப்பருவம் 6-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. சாந்துரன் - பெரிய நம்பி யாயிருக்கவேண்டும். காப்புப்பருவம் கடைசிப் பாட்டின் குறிப்பில் காண்க. பூதூரன் - இராமானுசர்; இசை-புகழ்; வசை - இகழ்; நாவீரன் முதலீரைந்து பேர்கள் :- மதுரகவியாழ்வார், ஆண்டாள் நீங்கிய பதின்மர்; நாவீரன் - நம்மாழ்வார். **நஞ்சீயர் :-** இவர் திருநாராயணபுரத்தில் 4214-கலிக்குமேல் விஜய வருடம் பிறந்தார். பட்டர் திருவடி சம்பந்தி; இவர் வேதாந்தி என முதலில் நாமம் பெற்று இருக்கையில் வாத பிக்ஷைக்கு வந்த பட்டரால் செயிக்கப் பெற்றுச் சிலநாளிருந்து பிக்ஷைக்கு வந்த ஸ்ரீ வைஷ்ணவருக்குப் பிக்ஷையிட மறுத்த தேவியை வெறுத்துத் திரவியத்தைப் பகுத்துப் பெண்சாதிக் களித்துக் குரு தக்ஷிணை கொண்டு யதியாச்ரமம் அடைந்து ஆசாரியரைக் காணப் போகையில் பட்டர், 'நம் ஜீயர் வந்தார்' என அன்று முதல் இவர்க்கு நஞ்சீயர் எனப்பெயருண்டாயிற்று. இவர்க்கு ஸ்ரீ ரங்கநாதரென்பது தாசியநாமம்(இயற்பெயர்)

(வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்க் குறிப்புரை முற்றிற்று).

# இராகவர் பிள்ளைத்தமிழ்

அனுமான்

துதி

203. சீர்தந்த நிகமமுத லாயபல கலைகளுந்
தெள்ளித் தெளிந்துபொறியிற்
செல்லலற நெஞ்சினைச் செல்லலற மெய்ஞ்ஞான
சிற்பரம் பொருளினிறுவிப்
போர்தந்த வச்சிரப் படையேந்து செங்கைப்
புரந்தரன் முதலாகிய
புத்தேட் குலம்பரவ நின்றமா ருதிபதம்
போற்றியஞ் சலிசெய்குவாம்
பேர்தந்த வுலகினற் றருமமொடு தானமும்
பீழைதபு மனுவேள்வியும்
பீடுபெறு மாதவமு மேலான வாய்மையு
பிறழாம லோங்கவருளா
லேர்தந்த சங்கமொடு திகிரிபாம் பணைகரத்
தெழிலிதவ ழிஞ்சிபுடைசூ
ழிசைமலி யயோத்திநகர் வருமிரா கவன்மீ
தியம்புசெந் தமிழ்தழையவே.

## காப்புப்பருவம்

திருமால்

204. பூமேவு பைந்துணர் கற்பக நிழற்கணுறை
புங்கவர்க ளேனுமன்பு
புரியுநெஞ் சிலரெனி லவர்க்கரிய ரென்பதும்
புல்விலங் கிற்குமுளதேற்
றூமேவு மெளியவ ரென்பது முணர்த்தியொரு
தந்தியெதிர் வந்துநின்ற
சததள மலர்க்குநிக ரெங்கணு யகனுபய
சரணங் களைப்பணிகுவாம்

பாமேவு சொற்புகழ்த் தசரதற் குவகைபுரி
பாலனைக் குணசீலனைப்
பன்னுமறை யந்தணரு மிமையவரு மெய்துமிடர்
பாறவந் தருள்குருசிலைக்
காமேவு வண்டுவரி பாடநீள் செந்துகிர்க்
காலினெகி ழங்களிகொளுங்
கமலத் தடஞ்செறி யயோத்திநக ராளவரு
கருணைமுகி லைக்காக்கவே. (1)

சிவபெருமான்

205. தன்னினத் தோன்றனுரு முழுதுநிறை வுறினேந்து
தண்கதிர்ப் பிள்ளைவெருவச்
சாருங் குரூஉமணிச் சுடிகைவளர் கட்செவி
தனைக்கண்டுமது கரமுரல
பொன்னிதழ்க் கொன்றையந் தொடையுட் கரந்திடப்
புரிசடைத் தாவுறவெழும்
பொற்பினிள மான்மருவு செங்கைப் பிரான்பதாம்
புயமன்பி னெடுபரவுவா
மொன்னலர்க் கஞ்சிவெண் கரியுடை வலாரிதன
தொண்குடையி னிழலொதுங்க
வுறுதுயரொழித்துநன் கோம்புதச ரதனுயிர்க்
குயிரா யுதித்தமணியை
யன்னையிற் பெரிதுள மிரங்கியடி யவர்கண்மொழி
யாற்றினிய வுங்கருணைகூ
ரையனைச் சிலையேந்து கையனைத் தேவர்தொழு
மண்ணலைக் காக்கவென்றே. (2)

பிரமன்
வேறு

206. தாதங் கலைந்து வரிச்சிறைச்சஞ்
சரிக முரல்வா ரிசத்திருந்து
தனது தாரந் தனையெழில்கூர்
தாரந் தனக்கோ ரிடமாக்கி
யேதங் களைந்து சராசரமு
மிடஞ்சே ருலகும் படைத்தளித்த
விசையார்ந் தொளிரு மறைக்கிழவ
னிணைத்தாட் கமலந் துணைக்கொள்வாம்

பூதங் களைந்துந் தானாகிப்
புகலு மவற்றின் வேறாகிப்
பொருவற் றொளிரு மறைமுடிவிற்
பொருந்தும் பொருளாய் மருட்சமய
வாதங் களைந்து பேரறிஞர்
மதியி னுணரு மாட்சியொடு
வளஞ்சே ரயோத்திப் பதியில்வரு
மகவை மகிழ்ந்து புரந்திடற்கே. (3)

**இலக்குமி**

**வேறு**

207. அவனிமிசை யீன மரபு தனைமேவி
யழகுசிறி தேனுமில ரெனுமிழுக்கார்
அழுகிமுடை வீசு பிணியுடைய ராகி
யணவுதுணை யேது மிலைமிலை யிவர்க்கென்
றறையவுழல் வோரு மொருதனது தூய
வருள்சிறிது கூடி னினிதவர் பரப்புடை
யகிலவுல காளு மரசுரிமை யோடு
மலைசெவி யுவாவி னணிகெழு மெருத்தமேற்
பவனிவரு சீரு மறுபத முலாவு
பசியமலர் வாளி மதன்சமழ்ப் பூறும்
படியிலகு மேரு முள்வெரு வருது
பகைவர்தொழு நீடு மதுகையு மளப்பிலாப்
பரிசுடைய தாயப் புகழுமிக வீறு
பயனினைய யாவு மருவுற வியற்றிடும்
பதுமமனை யாளை நிமிருமலை மோது
பரவையெழு தாயை யெழிலியு நயத்தகு
சுவனிலையை மூடு குழலமுதை யாடு
துடியிடையி னாளை நிறைமதி முகத்தியைத்
துகிரனைய சேய வடியெகின மீது
சுரர்பணிய வேறு மதலையுடை யபசுஞ்
சுடரிழையை யாவி முழுதுதவி யோது
துயரமணு காம னுவகையி னளித்திடுந்
துகளில்குண மாவை யடியருள நாடு
துணையடியி னாளை யிசைகொடு பழிச்சுது
மிவனியல் பினாதி நடுமுடி விலாத
விறைவனென வேத முழுவது மரற்றிட
வியையுமொரு தேவை விழைவினொடு கோப
மிகலுற விலானை மலவிரு ளொழித்திடு

மிரவிகுல வாழ்வை யறிவுருவி னானை
யிலகருளி னானை யிமையவர் துதித்திடு
மிருமைபெறு தேவ புரியினுறு கோவை
யினையில்பெரு மானை மகிழொடு புரக்கவே. (4)

உமை

208. நளிமிகுந் துகின வரையில் வந்துமுடி
நதிகொ ளங்கிவரை யின்கணுற் றேற்புற
நயமமைந் துபல மலர்சுமந் துவளர்
நல்பசுங் கொடியை மின்பெறத் தீட்டயி
னயன வொண்சசியு மமரர்மங் கையரு
நவிலருந் துதிசெய் தோன்றிமுற் றூழ்த்திய
நவிரமென் குழலி னறுமணங் கமழு
நளினமென் சரண வம்மையைத் தூச்சுட
ரொளிமிகுங் கனக மலைநெடுங் கையுற
வுரைசெய் வெண்பொனச லந்தனிற் சேர்த்தியி
னுறைதல் கொண்டுநிறை நிதிமிகுந் தனத
னுரிய நண்பினுறு பண்பினிற் றேற்றியு
முணவி தன்றியிலை யெனவிரந் தெளிதி
னுழலு மன்பனுள மின்பினிற் சேர்த்திட
வுயர்வு தங்குபல வறமு முண்மைபெற
வுலகி னன்குபுரி மங்கையைப் போற்றுதும்
களிமி குஞ்செயலி னசுரர் வென்றியொடு
கழுமிருந் துவள மொய்ம்பினுற் றூர்ப்பவுங்
கவலை விஞ்சுசுர ரனைவருங் கடிகொள்
கடையி னின்றுதரு ணம்பெறப் பார்ப்பவுங்
கரிசறுஞ் சுருதி முதலவும் பொருவில்
கடவு ளென்றுதனை முந்தெடுத் தேத்தவுங்
கமழு மைந்தருவு நிதிகளும் பெரிது
கதுவி நின்றுபணி சிந்தையிற் கேட்பவும்
அளிமிகுந் தவமு மொருவி யந்தணர்க
ளகநெகிழ்ந் துகர மஞ்சிமுற் கூப்பவு
மகலிரும் புவன முழுவதுங் கொடிய
வரச மைந்தகன கன்செருக் கோட்டிட
வடல்விளங் குமொரு நரமடங் கலுறு
வருளொடுங் கொள்புக ழெந்தையைச் சாற்றரு
மதிகுணம் பரவு ரகுகுலம் பெருக
வழகின் வந்தவொரு மைந்தனைக் காக்கவே. (5)

சரசுவதி
வேறு

209. இகபர மிரண்டினுஞ் சீர்சா லறம்பொரு
ளின்பமொடு வீடுநெறிய
வெய்துவிக் குங்கலை யுணர்ச்சி முழுதுந்தனை
யிறைஞ்சுமன் பர்க்குநல்கிச்
சகபர முடிக்குறு மனந்தனும் போற்றுமுயர்
தலைமையுற நிறுவுபுகழாற்
றனக்குருவு கொண்டாங்கு தவளநிற மருவுமெந்
தாயைப்பணிந் தேத்துவாஞ்
சுகபரம வானந்த முறுகலைக் கோட்டுமுனி
சூழ்சரயு நதியருகினிற்
றுகளற வியற்றுமொரு வேள்வியாற் றசரதன்
சுதனெனச் செங்கமலநேர்
முகபரதன் முதலாய மூவர்க்கு முன்வந்த
முதல்வனைத் தொழில்கண்மூன் று
முறைபுரியு மூவுருவு மொன்றுய விளங்கருண
மூர்த்தியைக் காக்கவென்றே. (6)

கணபதி

210. திணிகொண்ட கரமைந்தி னீட்சியோ டுயிர்த்தலுஞ்
சேர்ந்தவொன் றற்கடியயற்
றிகழ்கின்ற கோடொன்று காரரவின் வாய்ப்புறஞ்
சேர்ந்தகதி ரெறிபுனிற்று
மணிகொண்ட வெண்பிறை கிடந்தாங்கு தோன்றுமிப
வதனப்பிரா னிணையடி
மலரைமன மொழியினொடு மெய்கொடு வணங்குவாம்
வாய்மையி னமைந்தோங்கிய
வணிகொண்ட தொழுகுலத் தவர்சந்தை யொடுசுருதி
யறையவது கேட்டுணர்வுறீஇ
யஞ்சிறைப் பைங்கிளிக ளுள்ளங் களித்திருந்
தயலவ ரிறும்பூதுறப்
பிணிகொண்ட விதழவிழு மஞ்சரியி னேதுசீர்
பெருகுறுநறும் பொழில்கள்சூழ் [மெம்
பெருவள நிறைந்தொளி ரயோத்திநகர் தோன்று
பெருமான் றனைக்காக்கவே, (7)

## முருகன்

### வேறு

211. மயலுலவு பெட்புடை யவுண ரொருபக்கமு
மருவுநற் கைக்கற்பகச் சோலைவானுறை
வளமைமிகு நற்சுர ரொருபுறமு மத்தென
வரையைநிறுத் திப்பிணித் தேயராவிடம்
வலிமைபெறு கைக்கொடு வலமிட மிழுத்தொலி
வளர்மதிக் கப்பயத் தூயவாரியை
மலையமிழு மப்பொழு தடலிலகு கச்சப
வடிவுமுளத் திற்பொறித் தோதுமாநல
வியலுலவு சொற்றிற மறைகள வினிற்கவ
ரெழினலத் துத்திறற் சோமுகாசுர
னிரைதிரை நெளித்தெழு நரலையி னுளித்திட
விவனையடக் கக்குறித் தோவிலாவலி
யிலகுபெரு மச்சநல் வடிவமு மெடுத்தரு
ளினியகுணத் திற்சிறப் பாமிராகவ
னெனுமொரு வனைக்கரு முகிலுரு வனைப்பெரு
கிதயமகிழ்ச் சித்திறத் தோடுகாவெனுப்
புயலுலவு முச்சியி னுயரசல வைப்புறு
புனவிதனுற் றுத்தினைக் காவலாலடை
புகலுமொழி கட்கிகல் கிளிகடி நலத்தொடு
பொலியுமெழிற் பொற்குறப் பாவையாமொரு
பொருவரு மலர்க்கொடி தனைமருவ வுட்கொடு
புதுமைவிளைத் துச்சிறைத் தேனுறுவலர்
பொதுளிய சினைக்கணி மரவுரு வெடுத்துறை
புகழுமிசைச் சொற்றுனிச் சேயை நீடிய
கயலுலவு மைக்கட விடையடலி னுக்கிர
கலகமுஞற் றிச்சினத் தோடுமேவிய
கபடமிகு கொக்கிரு பிளவுற வழித்தொளிர்
கலபமெடுத் துக்களித் தாடுமாமயில்
கவிர்முடிகொள் குக்குட மெனவுரு வமைத்திடர்
கடியுமயிற் கைத்தலத் தானைநாடுபு
கழலணியு மற்புத வொளிவிரவு பொற்பத
கமலமதித் துத்துதிப் போம்புராவியே. (8)

## இந்திரன்

### வேறு

212. நலந்தருந் தன்னிள வனுக்குமனை யானவ
னயந்திடு மோரடி
நளினத் தடங்கிய மடந்தைதன் மேற்றுங்க
நண்ணுமுயி ரோங்கவுதகம்
பலந்தருந் திறநல்கு வானூர்தி யாகிப்
பரிந்திடக் கொண்டுவிபுதர்
பம்புபொன் னுடாள்வளங் கொள்புரு கூதனிரு
பாதமல ரைப்பரசுதும்
குலந்தரும் பூசுரர்கண் முதலாய நால்வகைக்
கொள்கையரு நெறிமுறைமையிற்
குறைவின்றி மல்லலொடு வேறுவே றுற்றுவாழ்
கோதற்ற மகள்நிரைசேர்
பொலந்தரும் பெருஞெள்ள லெங்குநன் மங்கலம்
பொலிந்தொளி ரயோத்திநகரிற்
போகுமீ ரேழுலக மன்பொடு வணங்கவரு
புனிதனைக் காக்கவென்றே. (9)

## வைரவர்

213. பச்சைநிற வேணியு முரகமுப வீதமும்
பாலநேத் திரமுமடல்கூர்
பகைவலி சிதைந்திடக் காதுமழு முட்பெரும்
படையினெடு மறைநாறுசீர்ப்
பிச்சைகொள் கலமொளிர் பாணியுங் கொண்டமரர்
பேரிசை படிப்பநிற்கும்
பெருமைபெறு முத்தமிழ்க் குரியவொரு வடுகனிரு
பிரசமல ரடிபரவுதும்
விச்சையள விலவுணர்ந் தோங்குகவி வாணர்புகழ்
மேதகுங் கலைமகளொடு
மேவிநற் றிருமகளு மோவாது விளையாடு
விரிகதிர்க் கற்றைகளெறி
யிச்சைமிகு மணிமாட வளமலி யயோத்திநக
ரெய்திவா னவரரந்தை
யிடரெலாந் தேய்வுற மகிழ்ந்துவள ராரியனை
யிசைபெறக் காக்கவென்றே. (10)

சத்தமாதர்கள்

214\. அன்னமிசை யூர்ந்தரு மறைப்படையை யங்கைதாங்
கபிராமி விடைமிசையிவர்ந்
தடலுறு பிநாகமதை யேந்துமா கேச்வரி
யரவடு மயூரமுதுகின்
மன்னுசுடர் வேற்கரங் கொண்டேறு கௌமாரி
மகிழ்வயின தேயன்மீக்கொள்
வயநேமி கொண்டநா ராயணி முடங்குளை
மடங்கலை யுகைத்துழுபடை
யின்னலற வேந்திசை வராகி குலிசத்தோ
டிபத்தில்வரு மிந்திராணி
யெறுழலகை யூர்ந்துமூ விலைதாங்கு மாகாளி
யெனுமெழுவ ரடிபரவுதுங்
கன்னல்பைங் கமுகெனக் கமுகுதா ழைகளெனக்
கண்டவர் மயங்குமருதக்
கழனிசூழ்ந் தோங்கெழி லயோத்திநா டாளவரு
கருணைநிதி யைக்காக்கவே. (11)

முப்பத்துமுக்கோடி தேவர்கள்

215\. விழிபெறு நுதற்றிற லுருத்திரர்கள் பதினொருவர்
மிடையிருள் விழுங்குகதிர்கள்
வீசுமா தித்தர்பன் னிருவர்பெரும் பிணிநீக்கு
விறன்மருத் துவரிருவர்சீர்
மொழிபெறு வசுக்களோ ரெண்ம ரிவர்முப்பத்து
மூவரு மிவர்க்குட்படு
முப்பத்து முக்கோடி தேவரு மனத்திடை
முதிர்மகிழ் சிறந்துகாக்கப்
பழிபெறு வினைப்பவக் கடல்வீழ்ந்து மாழாந்து
பைதலுறு மெமையோம்பெனப்
பண்பொடு நினைப்பவர்க் கருளெனும் புணைநல்கு
பரமனை யயோத்தியிறையைச்
சுழிபெறு புனற்பிர ளயத்தினு மிலையின்மேற்
றுன்னுமீ ரேழுலகையுஞ்
சோர்வற வயிற்றினு ளடக்கிநன் மாட்சியொடு
தோன்றுசிறு குழவிதனையே. (12)

# செங்கீரைப் பருவம்

216. மேடமதி தனிலெய்து புனர்பூச நாளினெடு
மேவுநவ மியலேந்துகோள்
விகலுமொரு சிறிதேனு மின்றியே யுச்சமாய்
மேதகத் தோன்றுறவொரு
வீடதனி லிந்துவுட னுண்டளப் போன்மருவ
வீறுகர்க் கடகமியைய
விட்புலத் தமரரின் மலர்மழை சொரிந்தார்ப்ப
மெய்த்தவர்க ளாசிகூற
நீடற வளம்பெருகி யிலகுகோ சலநாட்டி
னிலேபெறு மயோத்திநகரி
னிகரில்செங் கதிரோன் குலந்தழைத் தேயோங்க
நிறையருளி னவதரித்துச்
சேடமை பெரும்புகழி னுற்றொளி ரிராகவா
செங்கீரை யாடியருளே
தேவருந் தமதறிவின் மேவருந் தனிமுதல்வ
செங்கீரை யாடியருளே. (1)

217. தன்மரபு நிலேபெற்று வாழுமினி யென்றுநின்
றந்தையெய் திடுமுவகையோ
தகைபெறு மிலக்கண மெலாமமைந் தோங்குமொரு
தனேயனேப் பெற்றேனெனு
நன்மனத் தாய்பெறு மகிழ்ச்சியோ யானகில
நாயகனு டன்பயிலவே
நாடரும் பயனெய்தி னேனெனக் குலகுரு
நயந்துமரு வியவோகையோ
பொன்மலர்க் கற்பகத் தருவுடை விசும்பினுறை
புங்கவரு மேனேயோரும்
புன்கணீங் கனமென வுறுங்களிப் போபெரிது
புகலினென் றெவருநாடச்
சென்மணி நிறத்துட னுதித்தொளி ரிராகவா
செங்கீரை யாடியருளே
தேவருந் தமதறிவின் மேவருந் தனிமுதல்வ
செங்கீரை யாடியருளே. (2)

218. சங்கமொடு திகிரிநற் கவரியலர் வாரிசஞ்
சத்திரங் குலிசமங்கு
சங்கே தனங்கும்ப முழுபடை யிரேகைநின்
சரணும் புயத்திலகலா
அங்கவற் றின்பய னுரைக்குநூல் முழுதுமுண
ரறிஞர்பலர் குழுமிநோக்கி
யற்புதத் தினராகி யுவகைகூர்ந் திக்குழவி
யகிலவுல கமுமோர்தனைத்
தங்குமன் பொடுபணிந் துய்திபெற வருளிநெடு
தாங்குமிஃ துண்மையென்றே
சாற்றுமொழி யமுதமஞ் செவிவாயி னுட்கொண்டு
தசரதன் மகிழுறவிளந்
திங்களி னயோத்திநகர் தனில்வள ரிராகவா
செங்கீரை யாடியருளே
தேவருந் தமதறிவின் மேவருந் தனிமுதல்வ
செங்கீரை யாடியருளே. (3)

219 நேயமுறு மஞ்சனப் புனலாட்டி யெழில்பெருகு
நெற்றியிற் றிலகமிட்டு
நிகரிலருள் விழிகளுக் கஞ்சனந் தீட்டியே
நிமிர்சூ ழியக்கொண்டையோ
டாயபொற் சுட்டிமக ரக்குழைகள் நவமணி
யழுத்திய பதக்கமரைஞாண்
அவிர்மணிக் கடகமிளிர் விரலாழி நூபுர
மரும்பொற் சதங்கைமுதலாம்
பாயொளி துளும்பணி திருத்திமடி வைத்தனை
பயோதரத் தமுதூட்டியே
படர்பெரு மகிழ்ச்சியொடு சீராட்ட நீதிவளர்
பண்பினுய ருங்கோசல
தேயமதி லோங்கிசை யயோத்திநகர் வளர்குழவி
செங்கீரை யாடியருளே
தேவருந் தமதறிவின் மேவருந் தனிமுதல்வ
செங்கீரை யாடியருளே. (4)

220. பிறக்குங் கடற்புவியி னேரெலா மெய்துவான்
பெரிதுநோற் குந்தகைமைசால்
பீடுறு சுவர்க்கந் தலத்தினுறை சுரரெலாம்
பிரசநனி யுண்டுகக்கிப்

பறக்குஞ் சுரும்பரிசை பாடுமைந் தருநிதி
பயன்கெழு செருத்தநல்லான்
பற்பல விழைந்தன நிறைக்கு முயர்செல்வம்
பரந்தம துலகையெள்ளித்
துறக்குங் கருத்தொடு தனைச்சார்ந் திடற்குரிய
சூழ்ச்சியே தென்றுநாடத்
துன்னிய வளங்களோ டிரவிகுல நிருபர்பலர்
தோன்றிநல் லரசுசெய்து
சிறக்கும் பெரும்புக ழயோத்திநகர் வருமிறைவ
செங்கீரை யாடியருளே
தேவருந் தமதறிவின் மேவருந் தனிமுதல்வ
செங்கீரை யாடியருளே. (5)

வேறு

221. தமனிய மதினுறு தண்டை சிலம்பு
சதங்கை பதத்தாட
தரள மமைந்திடு சுடிகை நலந்திகழ்
தனிநுதன் மிசையாடத்
திமிர்மிகுங் கதிர்பொல னவிர்தரு கண்டிகை
திருவளர் மார்பாடத்
திவளொளி மரகத மணிகெழு குழையிரு
செவியி னசைந்தாடப்
பமரமு மருள்கர கமல மணிந்தொளிர்
பருமணி வளையாடப்
பளகறு நவமணி யரைவட மிலகுபு
பகரிடை மிசையாட
வமருல கிகழு மயோத்தி யிராகவ
னுடுக செங்கீரை
யகில மூவந்திட முகிலென வந்தவ
னுடுக செங்கீரை. (6)

222. உளமிகு விழைவுறு கௌசலை பெருகிய
வுவகையி னினிநீட
வுவப்புறு செவிலிய ருகின ராயின
துளநினை வனநாடக்
கிளரொளி மணிமுடி யிமையவர் தமதனுர்
கிளையொடு நனிவாடக்
கெழுதகை முனிவரர் தவமது முறையல
கிறியி னலங்கூடக்

களவொடு மிகல்பழி மறமிகு வினையிவை
கடிதி னிரிந்தோடக்
கருதிடு சுருதிக ளுனதரு ணெறியொடு
கழுமிய புகழ்பாட
வளகையை யிகழு மயோத்தி யிராகவ
னுடுக செங்கீரை
யகில முவந்திட முகிலென வந்தவ
னுடுக செங்கீரை. (7)

223. பணிமுடி மிசைவள ரவனி புரந்திடு
படைவலி மிகுதாதை
படர்நசை கொடுவரு கெனவிரை வொடுதவழ்
பண்பினடைந் தோங்கும்
திணிவளர் திரள்புய நெடுவரை மிசையொரு
சிறுமுகி லெனவேறிச்
செவிவழி மழலை யெனுஞ்சுவை பெருகிய
தெளியமு தம்பொழியாத்
தணிவுடை யிவனுள மெனுமொரு தடநிறை
தகைமை புரிந்தாரத்
தழைபெரு மகிழ்வெனு நளினமலர்த்திடு
தன்மையின் விளையாடும்
அணிமதில் சூழு மயோத்தி யிராகவ
னுடுக செங்கீரை
யகில முவந்திட முகிலென வந்தவ
னுடுக செங்கீரை. (8)

வேறு

224. பராக்கிர மத்தொடு மேவிய
வஞ்சர் வெஞ்சேனை
பரார்த்த மளப்பில நீடிய
மைந்தா ருங்கோப
விராக்கதர் முற்றிய தீமை
யினைந்தே நெஞ்சேயு
மினைத்துய ருற்றகல் வானவ
ருய்ந்தோ மென்றீறில்
கராப்பகை செற்றிட மானெடு
முன்போய் நின்றுசில்
கடாக்கரி யைக்கடி தாளுமன்
செந்தா ளின்போத

வராச்சய னத்துயி றீரிறை
செங்கோ செங்கீரை
யயோத்தி நகர்க்க ணிராகவ
செங்கோ செங்கீரை. (9)

225. சுருக்கொடி கைக்கொடு வீசுறு
தென்கா லின்மீது
தொழாப்புடை முற்றியமாத
ரெனுந்தார் கொண்டேறி
நருத்துளி கக்கிடு மம்புய
மொண்கா மன்சீறி
நடாத்திட வுற்றிடு மாகுல
நண்சீ ருன்றூளை
யிருத்தகை பெற்றிடு மேதகு
மன்பா லென்னுளு
மிராப்பக லுட்கொடு நாடுநர்
- தம்பா லின்றுக
வருச்சுக முற்றரு ளாரிய
செங்கோ செங்கீரை
யயோத்தி நகர்க்க ணிராகவ
செங்கோ செங்கீரை. (10)

## தாலப்பருவம்

226. ஒளிசே ரணிகள் நின்பலநல்
லுறுப்பிற் கியையத் திருத்திவிழை
வுளங்கூர் செவிலித் தாயர்பலர்
ஓவா தொருநிற் புறங்காக்கென்
றளிசேர் புகழ்த்தெய் வதம்போற்றி
யைய நினது திருவுருவி
னழகைக் கவின்சால் பிணைத்திரள்க
ளவிர்மாண் பமைந்த மின்னினங்கள்
நளிசே ரொருசிற் றிளமுகில்சூழ்
நலத்திற் செறிந்து நோக்குதலா
னண்ணு தவர்கண் மிச்சிறனே
நவிலு முறையில் கழித்தோமக்

களிசே ரயோத்தி வளருமழ
களிறே தாலோ தாலேலோ
கதிரோன் மரபி லுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. (1)

227. நவிலுந் தடித்துக் கொடிதனதுள்
நாற்கோ ணத்தும் பிணிப்புற்று
நண்ண மிளிரிந் திரதிருவி
னயக்குஞ் சதுர மாய்ச்சூழத்
தவழு மேகப் பசுங்குழவி
தானென் றதற்கு நடுக்கிடப்பத்
தழையார் மஞ்ஞை யினஞ்சூழுந்
தகைபோற் பீத வடநாற்றி
யவிரும் பலநன் மணித்தொட்டி
லகத்தி லொருநீ கண்வளர
வயிற்கண் மடவார் பலர்கூடி
யாட்டித் துயிற்றி மகிழ்கூரக்
கவினு மயோத்தி வளரெமது
கண்ணே தாலோ தாலேலோ
கதிரோன் மரபி லுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. (2)

228. மிடிசேர் மலவெம் பகைதுமித்து
வினையோ ரிரண்டுஞ் சமஞ்செய்து
வேதாந் தத்தின் முடிபமைந்த
மெய்ம்மை பெறுமா றுணராது
படிசேர் நடலைப் புலனுகர்ந்து
பைத லுறுமென் போல்வார்க்கும்
படர்தீர்த் தளித்தற் குளமிரங்கும்
பரனு முனது நிலையறியா
வடிசேர் தடங்கட் செவிலியரெம்
மகனே வருக வெனவழைக்கு
மடமை நோக்கி முனியாது
மடியிற் றவழ்ந்து விளையாடும்
கடிசே ரயோத்தி நகர்வளர்பைங்
கரும்பே தாலோ தாலேலோ
கதிரோன் மரபி லுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. (3)

229. ஆவித் திரள்கள் பற்பலவு
மகில வுலகோ டாக்கிவினை
யளவிற் சுகமுந் துன்பமுமென்
றுரய விவற்றை நுகர்வித்து
மேவித் திளைக்கு மவ்விரண்டின்
விருப்பு வெறுப்புந் தீர்பருவம்
விஞ்சுந் திறஞ்சேர் சிலவுயிர்க்கு
விள்ளும் பருவந் தனிற்சிறந்த
வாவிக் கமல முகையவிழ்க்கு
மார்த்தாண் டனைப்போன் மலத்திமிர
மாற்றி யருளின் மலர்த்துமெங்கள்
வாழ்வே மதுவார் வண்டிசைகூர்
காவித் தடஞ்சூ ழயோத்திவளர்
கனியே தாலோ தாலேலோ
கதிரோன் மரபி லுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. (4)

230. பழகு வினையா லெழுவகைய
பவவா ரியில்வீழ்ந் துளங்கவன்று
பாசத் திரையா லலைப்புண்டு
பற்றென் றின்றி யுழிதருவார்க்
கழகு நிறையு நின்மலர்த்தா
ளன்றிப் புணைவே றின்றெனமூ
தறிஞர் பழிச்சி நைகரந்தீர்
அன்பு புரியு மெய்ஞ்ஞானக்
குழக வதீத வாழ்வருளுங்
கோவே மாசில் குணக்குன்றே
கூறுங் கலைகள் பற்பலவுங்
குறித்தாய்ந் துவக்குங் கவிஞர்பயில்
கழக மலியு மயோத்தியிரா
கவனே தாலோ தாலேலோ
கதிரோன் மரபி லுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. (5)

வேறு

231. போழா வற்ற பனிக்கதிர் வாய்மணி
பூவா மாநாகப்
போகார் சொக்கணை மீதுன தாளொளிர்
பூவா ழும்மானிவ்

வீழா மெய்ப்படு காவல் கொள்பதி
வீறே வானுடர்
மேலா மற்புண்ட சேனையர் கோன்பணி
மேவா மாடேயச்
சூழா வுத்தம யோகியர் தேமலர்
தூவா நாவோதத்
தோலா வற்புத நால்வகை மாறை
தூய்தார் சீர்பாடத்
தாழா நற்றுயில் கூர்வது தீரிறை
தாலோ தாலேலோ
சாகே தப்பதி வாழ்கரு ணாநிதி
தாலோ தாலேலோ. (6)

232\. தீவாய் கட்கொடி யோர்செய லேனுறு
தீதா னீடாமே
தோடுற நிற்பணி வானவ ரானவர்
தேயா வாடாமே
மாவாய் மைக்கிசை மாமனு நீணெறி
வாழா தேகாமே
மானார் கற்பவர் பானிலை வீறோடு
வாயா தாகாமே
பூவாய் மெய்த்தவ மாநல மேவுறல்
பூணா தோயாமே
போதார் கற்பக மானிதி வானிசை
போய்பா சேயாமே
தாவா நற்றிறன் மானுட னவ
தாலோ தாலேலோ
சாகே தப்பதி வாழ்கரு ணாநிதி
தாலோ தாலேலோ. (7)

233\. வாயா ரத்துதி கூறடி யாருள
மாறா வீறுமீ
வானு டர்க்கிடர் வேரற வேவரு
வாழ்வே தாழ்வேயா
மாயா மெய்ச்சுக வாரியி னூடெழு
வாகா வேகாசூழ்
மாலான் மிக்குழ லாணவ நோய்தவிர்
மாயா தூயாகா

வீயார் மைக்குழல் கௌசலை மாதருள்
வீரா சீராளா
வேதா வைத்தரு நாபிய வாரண
மேலா சீலர்வீழ்
தாயா யுற்றிசை மேவு மிராகவ
தாலோ தாலேலோ
சாகே தப்பதி வாழ்கரு ணாநிதி
தாலோ தாலேலோ. (8)

234. ஒருசிறு செங்கை விரல்சுவை பண்பி
னொளிர்வா யின்றேற
லொழுகுற மூடு முளவிருள் சிந்து
முன்மே னியினொளியுட்
கருதி வியந்து சிரமசை தன்மை
காட்டுறு சுடர்பாராக்
கதிர்முடி யும்ப ரறிவரு மொண்பங்
கயமல ரடிதூக்கி
மருவ வுதைந்து குறுநகை கொண்டு
வளர்திற மதுநோக்கி
வளமை யமைந்த கௌசலை நெஞ்சின்
மகிழ்களி நனிகூருந்
தருவளர் தேவ புரிவளர் தேவ
தாலோ தாலேலோ
சரத னெனுந்தச ரதனன் மைந்த
தாலோ தாலேலோ. (9)

235. மதுமலர் பம்புந் தழைசினை நீடும்
வண்டார் பொழிலூடு
வயலிலை வானோ ரவிகொள நல்கு
மரசே யறவேள்வி
முதுமறை யோர்கள் புரிசெய ருனு
மூவா மாவாய்மை
முதிர்செயன் மன்னர் நெறிவளர் செங்கோன்
முறைமையு மொளிகாலும்
விதுமுக மின்னார் நிறைவலி தானு
மின்கார் மதிதோறும்
விழைமழை மும்மை யொழிவற நல்கும்
விரிகோ சலநாட

சதுமறை தாழு முதுமறை நாம
தாலோ தாலேலோ
சரத னெனுந்தச ரதனன் மைந்த
தாலோ தாலேலோ. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

236. கண்ணக னனந்தலை தாத்திரியின் மூடுமிருள்
கால்சீத் திடுஞ்சேட்டிளங்
கதிரவ னெடுங்கடன் முகட்டின்மீ மிசையெழக்
கண்டுமுள் ளரைவாரிச
முண்ணற வினைதெவிட் டுறவுண்டி யாமினி
யுவந்துதம் முட்டுயில்தரு
மொண்சிறைச் சஞ்சரிக மொல்லையி னெழுந்திரைந்
தோடமலர் தன்மையொருநின்
வண்ணமுறு திருவுருக் காட்சிபெறு மெய்யன்பர்
மனமலத் திமிரமிரிய
மல்கருளின் மலர்தனிகர் தீஞ்சுவை யறற்குண்டு
வாவியொடு முகிலுரிஞ்சுந்
தண்ணறும் பொழில்சூ ழயோத்திநக ரெம்பிரான்
சப்பாணி கொட்டியருளே
சத்தியா நந்தவொரு நித்தியா நந்தகுரு
சப்பாணி கொட்டியருளே. (1)

237. பந்தமறு மாதவர் நெடுங்கிரி யினுங்கொடிய
பழுவத்து மேவியூழி
பற்பல கழிந்திடப் புற்றுமர வடிவமாய்ப்
படிவநோன் பாற்றியுமவ
ரெந்தமறு வற்றிடக் காண்பரிய வெனுமுன
திணையடியை யாங்கவரெலா
மெய்தியைந் தருவின்மலர் மணநாறு தசரத
னிலங்குமா ளிகையினேக்கி
யந்தமறு நின்தியல்பை யயலொருவ ருணரா
தகத்தடக் கிப்பெருகிய

வானந்த வாரியி னழுந்திநின் றந்தையெதி
ரண்மிநல் லோகைகூறச்
சந்தமறு கொளிர்தரு மயோத்திநகர் வளரெந்தை
சப்பாணி கொட்டியருளே
சத்தியா நந்தவொரு நித்தியா நந்தகுரு
சப்பாணி கொட்டியருளே. (2)

238. விண்டலை யளிக்குமா கண்டலன்முதற் றலைகொள்
விபுதரனை வர்க்குமேனுள்
விழுமிய நறுஞ்சுவைய வமிழ்தநரை திரைமூப்பு
மேவாதெடுத் துதவிய
கொண்டலைக் காண்பமென நன்றுவர்க் கடன்மேய்ந்து
குவலையந் தனைவளர்க்குங்
கொண்மூ விரும்புமக் கொண்டலருண் மாரிபொழி
கொள்கையொடு முத்துயிர்க்கும்
வண்டலை யெடுத்தெறியு மமுதவீ ரைக்கண்விழி
வளர்தனித் திங்கர்வயின்
வரிநெடுஞ் சிலையேந்தி யுலகெலாங் களைகணாய்
வளர்ப்பவளர் திறமதெண்ணி
தண்டலை யின்மீதுறு மயோத்திநகர் வளர்புனித
சப்பாணி கொட்டியருளே
சத்தியா நந்தவொரு நித்தியா நந்தகுரு
சப்பாணி கொட்டியருளே. (3)

239. துப்பார் நெடுந்திரை சுருட்டும் பயோததித்
தோன்றமுத மங்கண்வானிற்
சுரர்க்குப் பகுத்துமீங் கவுள்வேழ வேந்திடர்
தொலைப்பமிளி ராழிதொட்டு
மொப்பான தின்றிவளர் மெய்ஞ்ஞான மைம்பருவ
முறுதுருவ னுக்குத்தீப
வொளிபெருகு பாஞ்சசன் னியங்கொடு கபோலத்தி
னுள்மகிழ்வி னனீவியுந்
தப்பா வெறுழ்த்திறல்கொண் மாவலிமண் மூவடித்
தானமென வார்க்குகரகத்
தாரையேற் றும்வெரீஇச் சரணென் றடைந்தோர்
தமக்கபய மீந்துமொளிர்கஞ்

சப்பாணி சேயொளி தளும்புற வயோத்தியிறை
சப்பாணி கொட்டியருளே
சத்தியா நந்தவொரு நித்தியா நந்தகுரு
சப்பாணி கொட்டியருளே. (4)

240. தொன்மைதரு காலமதி னென்று யிருந்தமுத்
தொழில்புரிய வுருவமூன்ருய்த்
துகளற விருந்தகயி லைப்பொருப் புட்கினெடு
தூயவுரு வம்விளர்ப்பப்
பன்மைதரு மிதழ்வனச பீடமது கட்புனல்
பனிப்பமக ரங்களுலவும்
பாற்கட லிராப்பக லுறங்கா திரைந்திடப்
பன்னுமிவ் விடமூன்ருேரீஇ
நன்மைதரு விண்ணுலகின் மண்ணுல குயர்ந்ததென
நரர்களிற் சிறந்தோரென
நாடுறி னெனப்புகலு முருமூன்று மொன்ருய்
நயந்துமணி ஞாயின்மதில்சூழ்
தன்மைதரு புகழ்வள ரயோத்திவரு பரமனே
சப்பாணி கொட்டியருளே
சத்தியா நந்தவொரு நித்தியா நந்தகுரு
சப்பாணி கொட்டியருளே. (5)

வேறு

241. மாதவர் தமதுள மீதிரு மொழிவுற
வைத்த வருட்சோதி
மர்மறை முடிவினி லோதிய மொழிநிலை
மைக்கிசை மெய்த்தேவ
பாதக வெயில்விளை யாகுல மறநிமிர்
பைத்தொளிர் பொற்ருரா
பாரொடு ககனமு நீடினை யளவுசெய்
பற்று மலர்ப்பாத
மேதகு தசரத னுருபி ரெனவளர்
வித்தக வெக்காலு
மேவுறு மடியவர் வாவென வெதிர்வரு
மெய்க்குண நற்ருயே
கோதறு மருள்பொழி சீதள விளமுகில்
கொட்டுக சப்பாணி
கோசலை பயில்பவ வீசலை துயில்பவ
கொட்டுக சப்பாணி. (6)

242. சேடுறு முணர்வமை சேடனு நயமொடு
செப்பரு நற்சீர
தீவினை யறவள ராயிர மெனமிளிர்
சிற்குண மெய்ப்பேர
பீடுறு முலகுயிர் யாவையு முதலிய
பெட்புடை சற்போத
பேதமை யொழிதவ யோகிய ருளமுறல்
பெற்ற மலர்ப்பாத
தேடுறு மெமதக மூடிருளொழிய
வுதித்த வருட்பானு
தீதறு மடியவ ராகிய வசுவை
வளர்க்கு மெழிற்றேனு
கோடுறு கரியெதி ரோடிய விளமுகில்
கொட்டுக சப்பாணி
கோசலை பயில்பவ வீசலை துயில்பவ
கொட்டுக சப்பாணி. (7)

243. சேமள வியதரு வானக ரமுமொளிர்
தட்பவளத் தோவில்
சேடுறு மலர்விதி வாழுல கொடுவட
திக்கி னயச்சீர
தாமள கையுநின தாளொரு தரநினை
யற்பின ரெப்போது
மாசுறு மொருபொரு ளாமென வுளமதி
லற்பமு நச்சாது
தாமள வறுபுகழ் நீள்கதி பெறவரு
டத்துவ சற்போத
தாரணி மிசைநிலை சேர்தச ரதசுத
சத்திய பொற்பாருங்
கோமள வளமிகு சாமள விளமுகில்
கொட்டுக சப்பாணி
கோசலை பயில்பவ வீசலை துயில்பவ
கொட்டுக சப்பாணி. (8)

வேறு

244. மிக்கவி னுத்துய ரோவுறு
நற்செயல் விட்டேத

மிச்சையி ணூர்த்திடு தீவினை
முற்றிலா மெய்ப்போத
வக்க மதாற்பர மாமுனை
நித்தலு மற்போடு
மச்ச முரூத்திற நாடிய
வுட்கொள வுற்றோரை
மைக்கிரி போற்சம னேருறு
தற்கரு மைத்தாய
மட்டறு சீர்த்தி யினினெறி
யைத்தரு நற்றூள
தக்க வயோத்தி புராதிப
கொட்டுக சப்பாணி
சத்திய மூர்த்தி யிராகவ
கொட்டுக சப்பாணி. (9)

245. முத்திடு தார்க்குடை மேனிழ
லுற்றிட மொய்த்தாரு
முட்டறு வாட்படை சூழுற
முக்கிய முற்சார
வுய்த்திப மேற்படர் போக
முமைக்குழ லுற்றோரை
யுட்படு வேட்கை யராக
மருட்டுட விற்சீரும்
பொய்த்தழி யாற்றி னெறுத்தனர்
பற்றிடு பொற்பாத
புத்தமு தேய்த்திட யாழிசை
மிக்கதிர் பொற்பாருஞ்
சத்த வயோத்தி புராதிப
கொட்டுக சப்பாணி
சத்திய மூர்த்தி யிராகவ
கொட்டுக சப்பாணி. (10)

# முத்தப்பருவம்

---

246. தேவரொடு மானுடர் விலங்குபுள் ளூருவன
சிந்துவாழ் வனதாவரஞ்
செப்புமிவ் வெழுவகைய பிறவியி னுழன்றுபல
தீயவினை யீட்டிமருளிற்
றூவுறு முயிர்த்திர ளெவற்றிற்கும் வினையளவு
தனுகரண புவனபோகந்
தந்துபின் வினைமாசு தீரநன் னெறிநல்கு
தனிமுதற் கடவுளர்முன்
பூவல ரடித்துணை துணையென் றடைந்தேத்து
புண்ணிய ரகத்தினன்றிப்
பொங்குபே ருவகையினிற் கண்டண் ணெனத்தெரி
புறத்தினுங் காணவெளிதிற்
பாவலர் பெரும்புக ழயோத்திநகர் வருமொருவ
பவளவாய் முத்தமருளே
பாற்கடலி னின்றெம்மை யாளவரு முத்தமே
பவளவாய் முத்தமருளே. (1)

247. வேனிலுறு நண்பகற் போர்துசுடு பாலையின்
வேவுகா னலையறலென
வெஃகியிள மானுண விரைந்தாங்கு சகமாய
மிச்சைபடு வாழ்வைநாடி
யூனிலுழல் பவரேனு முன்பெய ரிரண்டெழுத்
தொருங்கிய வுளத்திநேடு
மொருமுறை விளம்பினும் பாவகோ டிகளெலா
மொருசிலை யெடுத்தோச்சலுங்
கானிலுறு துருமத் தடைந்தபற வைத்திரள்
கடுப்பவக் கணமிரிவுறக்
கலைமறை தெரிந்தோது வீடாத நன்னெறி
கலப்பவருள் கருணைநிதியே
பானலுறு பாம்புரி யுடுத்தொளி ரயோத்தியிறை
பவளவாய் முத்தமருளே
பாற்கடலி னின்றெம்மை யாளவரு முத்தமே
பவளவாய் முத்தமருளே. (2)

248. கோடுவளரோதிமத் திற்கீர்த் தலங்குசீர்க்
குலிசன்வாழ் வையுமொன்றென
குறியா தருந்தவ முழந்துணர்வின் மாட்சிபெறு
கொள்கையர்க ளன்றிநெடுநீர்
மாடுவளர் தாத்திரியி னூடுதவ நெறிபுகா
மாந்தருங் கண்ணுற்றனை
வல்வினைப் பகைவலி நூழில்செய் தானந்த
வாழ்வெளிது மேவவருளாற்
பீடுவளர் கவிகைமகன் வாதியொடு வர்க்கியிவர்
பிரிவிலா தாட்சிமுறையிற்
பெருநூலவ் விஞ்சைபயில் கழகமதி லரையடி
பெயர்வறுத் தோவமாக்கிப்
பாடுவளர் நசைதரு மயோத்திவரு மெம்பிரான்
பவளவாய் முத்தமருளே
பாற்கடலி னின்றெம்மை யாளவரு முத்தமே
பவளவாய் முத்தமருளே. (3)

249. காணத்தி னுறுதில மெனக்கருப் பாசையின்
கட்டவிழ்ந் தறவருந்திக்
கைதவக் கொள்கையி னுதித்திடுஞ் செல்லலுங்
காதலைம் பொறிக்கலங்கி
மாணப் பிணித்தநா டிகணெகிழ்ந் துணர்வின்றி
மருண்மரிப்பின்செல்லலு
மனத்தினுற நினைதொறுங் கடுவென வெருக்கொண்டு
வாடிப்பதைத் தோலமென்
றுணத்தி னின்சர ணடைந்தவர்க் கஞ்சலென
வருள்செயும் பரமகுருவே
யகிலலோ கமுமுனது திருவாணை நெறியின்வைத்
தாளுமெம் மிறைவபொழிலிற்
பாணற சுரும்பட ரயோத்திவள ரடிகணின்
பவளவாய் முத்தமருளே
பாற்கடலி னின்றெம்மை யாளவரு முத்தமே
பவளவாய் முத்தமருளே. (4)

250. நீரினுறு புற்புத மெனத்தகை வளர்புனித
நெஞ்சினர்க் குறுமிடரென
நீனிறக் கொண்மூவின் வாயினுறு மின்னென
நிலையாது தோன்றியழியுஞ்

சூரிலுறு மிப்புலால் யாக்கைதனை நிலையென்று
சூழ்வினையி னுழல்பொறியிலார்
தொடர்புநீத் துன்னடியர் நோன்ருட் கமைந்துளந்
தோன்றுமூ வன்பின்மாருச்
சீரிலுறு குற்றேவல் செய்தொழுகு வார்மலத்
திமிரமற வருபானுவே
தெவிட்டாத வானந்த வமுதமே யிரவிகுல
தீபமே யுவமையிலதாய்ப்
பாரிலுறு மணிமதி லயோத்திவளர் குணமேரு
பவளவாய் முத்தமருளே
பாற்கடலி னின்றெம்மை யாளவரு முத்தமே
பவளவாய் முத்தமருளே. (5)

## வேறு

251. இறைவ னில்லை யெனவுமுயி
ரில்லை யெனவுங் கருமமுற்று
மிவன தெனவு மணங்கனையா
ரின்பே பேரின் பெனவுமருண்
டுறையுங் கொடிய புன்சமய
வளறு தனையெம் பெருமநின
தருளா மூற்றுக் கோலதுகொண்
டன்பிற் கடந்து நன்னெறிசேர்ந்
துறையு மவர்க்குப் பவநோயை
யொழிக்கு மருந்தே யோங்காரத்
தொளியா நின்ற வரும்பொருளே
யும்பர் வணங்குந் தனிமுதலே
கறையில் புகழ்சா லயோத்திவளர்
களிறே முத்த மளித்தருளே
கருணைக் கடலே ராகவனே
கனிவாய் முத்த மளித்தருளே. (6)

252. விரியு முலகி னைம்பூத
விகார வினைவா முடலெனவும்
வினையான் மனையா தியரென்ன
விளம்பு மவையொன் றேடொன்று
தெரியுந் தரங்க வாரியின்வீழ்த்
திரணத் திரள்போற் கூட்டமும்பின்

றிரவு மெனவு முதுக்குறைவாற்
றெளிந்திவ் வுடல்வாழ்க் கையதனிற்
புரியும் விழைவை நீத்துனது
பொன்னங் கழல்சேர் திருவடியிற்
புகலென் றடைந்தோர் தமக்கெளிய
புனிதா மறுகிற் புரவியொடு
கரியு முலவு மயோத்திவரு
களிறே முத்த மளித்தருளே
கருணைக் கடலே ராகவனே
கனிவாய் முத்த மளித்தருளே. (7)

253. வஞ்சப் பொறியிற் புகுந்துமட
மாதர் மயக்கி லலைப்புண்டு
வலையிற் படுசிற் றிளமறிபோல்
வருந்தி யுய்யுந் திறமுணரா
நெஞ்சத் தினரா யிருந்துமுகி
ணிறத்த மயிடப் போத்தின்வரு
நெடிய கழுமுட் படைக்கூற்ற
னெருங்கி யுருமுக் குரல்காட்டி
யஞ்சிக் கிளைஞர் சூழ்ந்தலற
வுவத்திற் கவரப் படுகின்ற
வமையத் தேனு மிராமவென
வறையி னவர்க்குந் துணையாவோய்
கஞ்சத் தடஞ்சே ரயோத்திவரு
களிறே முத்த மளித்தருளே
கருணைக் கடலே ராகவனே
கனிவாய் முத்த மளித்தருளே. (8)

வேறு

254. பற்றுறு வானுளை கைக்களி றூதிய
பைத்தடர் பொச்சைபுரி
பற்பல தீமையுனற் பெயரோதுபு
பற்றற விட்டுநெடும்
புற்றுரு வாயுயர் பத்தியி னீடிய
பொற்பமை நற்றவனும்
புத்தியி னேனுறு முத்தம னாகிய
பொற்கம லத்தவனுங்

கற்றரு வாதி யுருக்குறு யாழிசை
கற்ற முனிக்கரசுங்
கைப்பற வோதிய மிக்கொளிர் நீள்சுவை
கக்குறு மிக்கபுகழ்
முற்றிய கோசலை யுற்ற விராகவ
முத்த மளித்தருளே
முப்பகை போயவர் செப்பிய நாயக
முத்த மளித்தருளே. (9)

255. மற்பொலி மாமணி மொய்த்த பணாடவி
வைத்த கடற்புவியை
மட்டற வெங்கா வுற்றுமி ழோது
வற்கலை முற்றுமறைச்
சொற்பொலி யோகி யருக்கரு ணானெறி
சொற்றது மிச்சைபுரி
துட்டர் கலானனி கொட்கு மூளத்தொடு
துக்க மிகுத்துனது
விற்பொலி தாளி னடுத்தவர் தீதற
மெய்ச்சொ லுரைத்ததெனு
மிக்கமை சீருடை நற்றிரு வாய்கொடு
மெச்சு வளத்திருவின்
முற்பொலி கோசலை யுற்ற விராகவ
முத்த மளித்தருளே
முப்பகை போயவர் செப்பிய நாயக
முத்த மளித்தருளே. (10)

---

## வருகைப்பருவம்

---

256. அகலுறு விசும்பொடு வசுந்தரையின் மல்குபல
வாவித்திரட்கு முதல்வ
னாகியெவ ரெவ்வாறு கருதுபு வணங்கிடினு
மங்காக்கவ் வாறுறியே

புகலுறு மனத்தின்விழை வோர்ந்துதகு முறையினருள்
புரிபெருந் தலைமைபூண்டு
பொருவுயர் விகந்துமுதன் முடிவின்றி யெங்குநிறை
பூரணப் பொருளாய்நல
மிகலுறு மறைக்குமிவ னென்று பெண்ணென்று
வேறென் றுரைப்பவரிய
மெய்ஞ்ஞான வுருவாகி நித்தியா நந்தசுக
வெள்ளப் பெருக்கதாதி
யிகலுறு மலப்பகை யொழித்திடு மயோத்திநக
ரெங்கணு யகன்வருகவே
யெழுபவக் கடலுளாழ்ந் தழுபவர்க் குறுதுணைவ
னெனுமிரா கவன்வருகவே. (1)

257. உலகமொரு மூன்றிற்கு மூலகா ரணமாகி
யோதுமவை தோன்றிமுடிவி
லுரிமையி னெடுங்கப் படுந்தகைய னாகியோ
ருருவுபெய ரில்லனாகி
யலகற்று புகழ்ச்சுருதி முடியினுறை பொருளாகி
யானந்த மூர்த்தியாகி
யமலவச் சுதவனக சிற்பரஞ் சோதியா
யறைபிர ணவத்துண்மையாய்க்
கலகவைம் புலவேடர் கைப்படா தென்னையுங்
காத்திடுங் களைகணாகிக்
கட்செவிப் பாயன்மிசை யறிதுயி லமர்ந்தவொரு
கடவுளா யாவுமாகி
யிலகுறு பரப்பிரம மாகிய வயோத்திநக
ரெங்கணு யகன்வருகவே
யெழுபவக் கடலுளாழ்ந் தழுபவர்க் குறுதுணைவ
னெனுமிரா கவன்வருகவே. (2)

258. நினதுபங் கயவடியை யொருகணப் போதேனு
நிலைபெற் றிடக்கனவிலு
நினையா திரும்புகொல் லோகருஞ் சிலைகொலெனு
நெஞ்சமுள னாகிமறலி
தனதுநகர் வழிநாடி வாய்மைநன் னிலையறந்
தன்னமு மிலாமலிகழ்வு
தங்குபல தீமையு மிழைத்துலக மாயைவலை
தன்னிலுற் றேமயங்கு

மென துபிழை யும்பொறுத் தடிமைகொள் ஞானகுரு
வெனவலிவின் வருகருணேசே
ரிறையாகி யடியர்மன மகலாது குடிகொண்
டிருப்பவனு மாகிநிகமத்
தினதுமுடி வோதுபர னுகிய வயோத்திநக
ரெங்கணு யகன்வருகவே
யெழுபவக் கடலுளாழ்ந் தழுபவர்க் குறுதுணைவ
னெனுமிரா கவன்வருகவே. (3)

259. தங்குபெரு மதுகையா லுலகினுக் கொருகடவு
ளானெனப் புகல்விக்குமோர்
தந்தைதீச் செயன்மறுத் தாங்கவன் படைநெடுஞ்
சயிலமடல் கூர்மாசுணம்
பொங்குசிகை யழல்வேழ மிவைமுதல் கொண்டுகொலை
புரிவிக்க முயலுமேல்வைப்
புரப்பதற் குற்றதுணை வேறின்றி யோமரி
புராதனு நாராயணு
மங்கள குணுகரா வைகுண்ட வாசனே
மாதவா தஞ்சமென்றே
வழுத்திடும் பிரகலாத னனையாண்டு அங்கவன்
வாய்மல ரிடத்தினெழுதற்
கெங்குநர சிங்கவுரு வெய்திய வயோத்திநக
ரெங்கணு யகன்வருகவே
யெழுபவக் கடலுளாழ்ந் தழுபவர்க் குறுதுணைவ
னெனுமிரா கவன்வருகவே. (4)

260. பெருமைபெறு வானமொடு மண்ணுமா வலிதரப்
பெற்றளந் தனவுமளிசூழ்
பிரசமலர் மீதிலுறை பரமேட்டி முதலாய
பீடுகெழு விண்ணவர்குழா
மருமைபெறு விதியுளி வழாதருச் சிப்பனவு
மகநெக் குடைந்துருகிமின்
னுனந்த நீர்விழி யிரைத்தெழத் தொண்டர்தின
மஞ்சலித் தேத்துவனவுங்
கருமைபெறு மலவிரு ளொழித்தென் து நெஞ்செனுங்
கல்லினுறை வனவுமான
காமரிரு தாளின்மிசை பொற்சிலம் பார்ப்பெழக்
காதிலணி குழையிலங்க

விருமைபெறு மணிமாட மறுகொளி ரயோத்திநக
ரெங்கணு யகன்வருகவே
யெழுபவக் கடலுளாழ்ந் தழுபவர்க் குறுதுணைவ
னெனுமிரா கவன்வருகவே. (5)

வேறு

261. பின்னுந் திரைசேர் வாரிதியிற்
பிறவா வமுதே கொடியவினைப்
பிணியை யொழிக்கு மருமருந்தே
பிரியத் துடனே நெஞ்சகத்தி
லுன்னுந் தொழும்பர்க் கருஞ்சுவையை
யுதவுங் கரும்பே யெழிறிரட்டி
யுலகுந் தழைக்க வருள்பொழிந்தே
யோம்பு முகிலே விண்ணுலகிற்
றுன்னுஞ் சுரருங் கைதொழுது
துதிக்குந் தருவே மலவிருளைத்
துரக்கு ஞானத் தினகரனே
துகடீர் வாய்மை நெறியினொடு
மன்னும் புகழ்சேர் தசரதன்கண்
மணியே வருக வருகவே
வளஞ்சே ரயோத்திப் பதிவளரெம்
வாழ்வே வருக வருகவே. (6)

262. ஐய நினது திருநாம
மறையப் புகின்மற் றவையனந்த
மாகு முனது திருவுருவ
மகத்திற் கருதற் கற்றருஞ்
செய்ய மலர்த்தாள் யானெய்தித்
தெரிசிப் பதற்கு நிலையுணராச்
சிறியே னுலக மாயையெனுஞ்
சிறைக்கோட் பட்டு மெலியாம
லுய்ய வடியேன் பாலொருநீ
யுள்ள மிரங்கி யொருகணப்போ
துறுதி யாயின் வினைத்துயர்தீர்ந்
துறுதி பெறுவே னதலினல்
வைய மளிக்குந் தசரதன்கண்
மணியே வருக வருகவே

வளஞ்சே ரயோத்திப் பதிவளரெம்
வாழ்வே வருக வருகவே. (7)

263. பயஞ்சே ரெழிலி வரவையெதிர்
பார்க்கு மயூரப் புள்ளொத்தாய்ப்
பசுவின் வரவை வேட்டுறைமென்
பச்சையிளங் கன்றெனக் கதிர்கால்
வியஞ்சேர் மதியின் வரவையுளம்
விழைந்து நாடும் சகோரமென
மிகுசீ ராமாத் தியன்வரவை
விரும்பும் பிணியோ னெனஞான
நயஞ்சேர் குருவி னல்வரவை
நாடும் பருவத் தவனெனநின்
னளின மலர்த்தா ளெதிர்காண
நசைமிக் குடையேன் றனக்கிரங்கி
வயஞ்சேர் புயனுந் தசரதன்கண்
மணியே வருக வருகவே
வளஞ்சே ரயோத்திப் பதிவளரெம்
வாழ்வே வருக வருகவே. (8)

வேறு

264. பரவி யடியர் விரவு சரண
பதுமயுகளன் வருகவே
பருதி மரபு தழைய மருவு
பசிய துளவன் வருகவே
யுரக வமளி மிசைகொ டுயிலை
யொருவு மொருவன் வருகவே
யுறுவ ரிதைய கமலமலரி
னுறையு மமலன் வருகவே
தரணி யதனி லெனது கொடுமை
தடியு மிறைவன் வருகவே
தகமை குலவு நெறியி னெளிர்த
சரதன் மதலை வருகவே
யரிய மறையு முணர வரிய
யருளி னுறையுள் வருகவே
யகில வுலகு மகிழ்வி னுதவு
மடிகள் வருக வருகவே. (9)

265. எழுத வரிய கரிய முகிலை
யிகழு மிணையி லுருவமு
மிலகு கருணை பெருகு நயன
விணையு நெடிய புருவமும்
பழுதில் சுருதி யமரர் தெரிபு
பகர்வ வரிய சரணமும்
பவள விதழி னகையி னிலவு
படரு மமுத கிரணமு
மிழுது வெயிலி னுருகு முறையி
னிதய முருகி யடியனே
னினிது கருதி வடிவு புளக
மெறிய விழியி னறலுக
வழுது பணிய விரவி மரபி
னழகன் வருக வருகவே
யகில வுலகு மகிழ்வி னுதவு
மடிகள் வருக வருகவே. (10)

---

## அம்புலிப் பருவம்

---

(சாமம்)

266. அங்கலைக் கோட்டுமுனி வந்தோங்கு மெச்சத்தி
யல்வல மிகுத்துற்பவித்
தமைவொடு மிராமனென வுற்றவளி யினம்படர
வார்குவலை யஞ்சிறப்பிற்
றங்குறச் செய்துகலை யகமேய்ந்து புந்தியைத்
தந்துமெய்த் தவள்மொன்றிச்
சாற்றின் மற்றுங்கமல வினமடக் கிப்பெருகு
தகையினீர் மைபெறுதலாற்
பொங்கெழிற் கற்பதனில் வடமீன் வெரிங்கண்ட
புனிதகௌ சலையுதவிய
புவனநா யகனைநிற் கொப்பெனப் பெறுதியுன்
புண்ணிய மெவர்க்குண்டுகா
ணங்குறும் பறவென்ற முனிவர்புக ழெந்தையுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கர் குத்தனுட
னம்புலீ யாடவாவே. (1)

267. வானவர்க் குணவமுது தந்துபுகழ் சாரங்க
மணியுருக் கொண்டுபெரிய
வரைநா டொறுஞ்சூழ்ந்து மற்றஞ் சகோரவிடர்
மாறநகை நிலவுகாட்டி
மேனெறிக் கியல்வாய்மை தங்குமா லோனென்ன
மேவிமுன மாம்பலேட்டை
விண்டிடச் செய்திட்டு மண்டலத் திடையற
மேதக விளங்கிடுதலான்
மானலத் தொளிர்பரத னெழில்கூ ரிலக்குமணன்
வளர்சத்து ருக்கனெனுநன்
மாட்சிபெறு மிளைஞரொரு முனிவரொடு முச்சகமு
மகிழவந் தவனைநிகர்தி
யானவத் திறனுடி வல்விரைந் தெந்தையுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கா குத்தனுட
னம்புலீ யாடவாவே. (2)

## (பேதம்)

268. எதிர்தரு புறத்திருளை யல்லாது நீயகத்
திருளினை யொழிக்கவறியா
யிருநிலப் பைங்கூழை யன்றிநீ மல்குமுயிர்
யாவும் வளர்ப்பதுணராய்
முதிர்தரு சினப்பணிக் கஞ்சுதிற னன்றியதன்
முதுகின்மேற் கண்வளர்கிலாய்
முயங்குசீர் தங்குகலை யெண்ணிரண் டன்றிநீ
மொழியுமெண் ணெண்கலையிலாய்
கதிர்தரு சுடர்ப்பருதி தன்னையும் மின்மினி
கடுத்திடா தெனநீயுமெங்
கடவுட் பெருந்தெய்வ மாமிவனை நோக்கிலாய்
கருதிவா வெனலோர்ந்துநீ
யதிர்தரு கழற்றசர தற்கினிய மைந்தனுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கா குத்தனுட
னம்புலீ யாடவாவே. (3)

269. மடங்கொள்சிறு பேதையர்கள் வணங்கவுறு வாயெந்தை
மதிஞர்கள் வணங்கவொளிவான்

மதிக்கு மத்திக்கு மகனீ யெம்பிரானே
மதிக்குமத் தியையளித்தோன்
சடங்குறைத லொடுவளர்த லுடையையெஞ் ஞான்று [மொரு
தன்மையுட னண்ண லுறுவான்
றங்குங் களங்கனென மேவுதி களங்கமொரு
தன்னமு மிலானெம்மிறை
யிடங்கெழுவு மிரவதில் விளங்குவாய் கருணைமுகி
லெப்போ தினும்விளங்குவா
னிலகுசெம் பொன்னதற் குக்கரும் பொன்னனையை
யிவ்வுள்ள லுக்கென்பதோர்ந்
தடங்கிவள ரன்பினொடு வல்விரைந் தையனுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கா குத்தனுட
னம்புலீ யாடவாவே. (4)

(தானம்)

270. சாற்றுமணி மந்திரத் துடனவிழ்த மூன்றினுஞ்
சற்றுமக லாதகொடிய
சனனநோய் தனையுமொரு தாந்தனது வாரிச
சரணந் தனைக்கண்டற
மாற்றுநெறி பெறவருளு மெம்மிறைவ னருகுநீ
வந்துபயி லப்பெறுவையேல்
வாய்ந்தநின் கறையிருளு மிடர்செய்கய ரோகமு
மார்த்தாண்ட னெதிர்மழுங்கி
வேற்றுருவ மாதலு மொழிந்துநன் மாட்சியொடு
மேவுதற் கையமுண்டோ
விண்ணோர் குழாம்பரவு புருகூத னும்போந்து
மேவுகுற் றேவன்மகிழ
வாற்றுற விளங்குபுக ழிரவிகுல திலகனுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கா குத்தனுட
னம்புலீ யாடவாவே. (5)

271. பிணர்மருவு நெட்டுட லிடங்கர்வாய்ப் பட்டுமெலி
பிறையைநிகர் கோட்டிபமுனம்
பிழையைப் யொழிந்ததும் வாய்மையுடை யறிஞர்புகழ்
பிரகலா தனனென்பவு

னுணர்விலி யெனுந்தந்தை புரியுமா குலமொழிந்
துய்ந்ததுந் துருவனென்போ
ஞெதுசிற் றன்னையிகழ் துன்பொழிந் ததுமுனிவி
னேங்குதுரு வாசனேவுந்
தணவரு மெறும்ப்பூத விகலம்ப ரீடணன்
தடிந்ததுமெம்பிரான் றன்
றண்ணருளி ஞலென்ப தோர்ந்திலாய் போலுநீ
சார்தியெனி லுய்திபெறுவா
யணவுபுவ னம்பலவு மீன்றேம்பு மண்ணனுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கா குத்தனுட
னம்புலீ யாடவாவே. (6)

272. பையரவ முடிவைத்த புவியாள வேண்டினும்
பைந்தரு விசும்புமுழுதும்
பணியுநல் லிறைமைபெற வேண்டினுந் தேனூறு
பதுமபீ டிகைமேலவன்
மையறு பெரும்பதவி வேண்டிடினு மெண்சித்தி
மருவவேண் டினுமென்றுமிவ்
வடிவமழி யாமலுற வேண்டினுஞ் சுரர்குருவு
மகிழ்புலமை பெறவேண்டினு
நையுமல மாயைதீர்ந் தழியாத வீடதனை
நண்ணவேண் டினுமெம்பிரான்
நயனச் சிறக்கணிப் பாலன்றி யெய்தாமை
நவின்மறையி னேர்ந்திலைகொனீ
யையமற நின்விழைவு பெறலாகு மெந்தையுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கா குத்தனுட
னம்புலீ யாடவாவே. (7)

273. கஞ்சமலர் மீதிலுறை பரமேட்டி முதலாய
கடவுளரை யேனையோரைக்
கருணையொடு நிருமித் தளிப்பவனு மாகியிடர்
களையுமொரு களைகணுகி
வஞ்சமறு மன்பினர்க ளுரையினு மனத்தினும்
வைகுபவ னுகியொளிரெம்
வள்ளலுனை வாவென் றழைப்பநீ யன்பினிவண்
வாராதிருத் தன்முறையோ

வெஞ்சலுறு நின்கனுள பிழைபல வுந்தவிர்ந்
தெண்ணுமுன் மனவேட்கையை
யெய்துதிற மெங்கணுல கீரேழி னுந்தெரியி
னெந்தைநிகர் துணையுமுண்டோ
வஞ்சலென நண்ணினரை யாளுமெம திறைவனுட
னம்புலீ யாடவாவே
யணிகொள்சா கேதமுறை திணிகொள்கா குத்தனுட
னம்புலீ யாடவாவே, (8)

(தண்டம்)

வேறு

274. மறந்தழைக் குமத கரிகளெட்டுடைய
மாதிரந் தரணி வானக
மருவு மாவிபல முழுது மாக்கிமலர்
மணமதென்னநிறை வுற்றுள்ஞ்
சிறந்தழைக் குநர்கண் மேவி யானுமொரு
தேவ தேவைப்பெரு மானுடச்
சிறுவனென்றுமன மெண்ணி வந்திலைகொல்
செய்ய வாம்பனிகர் வாயிதழ்
திறந்தழைத் திடவு மிரணியன் மடமை
சேருநெஞ் சின்முன மெள்ளிய
தீமை யாலவ னடைந்த தின்னதெனத்
தேர்ந்து ளாய்க்கிதுவு நன்மையன்
றறந்தழைத் திடும யோத்தி ராமனரு
கம்புலீ வருக வருகவே
யழிவி லாதவருள் பொழியு நாதனரு
கம்புலீ வருக வருகவே. (9)

275. இலகு மெந்தையடி யிணையி லன்புபுரி
யிதையர் தம்மைமுன மிகழ்வுசெய்
தெறுழுடன் பெருகு விபவ மும்வறி
திழந்து வேறுதுணை யில்லரா
யுலகி லெண்ணிலர்கள் பட்ட பாடுகளி
லொன்று நின்னினைவி லுட்கொளா
யொளிகெழுங் குமுத வாய்மலர்ந் துவுனை
யுவந்து பன்முறை யழைக்கவும்

விலகு நின்பிழையை யெண்ணுரு மவிறை
விடினு மற்றிளைஞ ருன்றனை
விடுகிலா ரதனை நாடி யுய்யுநெறி
மேவு மாறுவிழை வுற்றுநீ
யுலகில் சீர்மலி யயோத்தி ராமனரு
கம்புலீ வருக வருகவே
அழிவி லாதவருள் பொழியு நாதனரு
கம்புலீ வருக வருகவே. (10)

---

## சிற்றில்பருவம்

---

276. பம்பு முயிர்கள் எண்ணிலவார்
பதினா லுலக மாயைகொடு
படைத்துப் பெருகுங் கருணையுளம்
பழுத்துப் பரித்து விளையாடும்
உம்பர் தமக்கு முணர்வரிய
வுனது செயற்குப் பேதையரே
முணர்வோர் சிறிது மின்றிநசை
யுளங்கூர்ந் தெய்தி வாலுகத்தா
லிம்ப ரமையச் சிற்றிலிழைத்
திருந்தே வண்ட லாட்டயரு
மிப்புன் செயலு மெதிராமோ
வெம்பாற் பிழைதான் வேறுண்டோ
செம்பொ னடியி னிராகவனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (1)

277. தொல்லை மறையு முணர்வரிய
துணைத்தாட் கமலம் சிவப்பூரத்
தூய்தா மிந்தீவர மலர்போல்
தோன்றும் வடிவிற் பூழியுற
மல்ல லுறுநற் கருணைபொழி
வதன மதியின் முத்தரும்ப

மகிழ்வி னுனது பெரும்புகழை
மறவா தெடுத்துத் துதிசெய்தே
யல்லும் பகலு முனைவணங்கு
மடியேங் கரங்கள் வருந்துறச்செய்
தாடு மிதனைச் சிதைத்தலினு
லைய நினக்குப் பயனுண்டோ
செல்லீ லொழிக்கு மிராகவனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (2)

278. உலக முழுதும் புகழ்ந்தேத்து
முனது மரபி லுதித்தவர்க
ளொருபுன் புறவி னுயிர்காப்ப
வுடல மீந்து நிறைசெய்து
மிலகு நயன மொருமறையோ
னிரப்ப விடந்து நல்கியுஞ்சால்
பெய்தும் வாய்மை தனைப்புரப்ப
வினையி லரசு மிருநிலமு
மலகில் வளமும் கௌசிகனுக்
களித்தே தானுந் தேவியொடு
மயலோர் தமக்கு விலைப்பட்டு
மன்பிற் சிறந்தா ரிரவிகுல
திலக நினது மனமிரங்கிச்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (3)

279. பொருந்து முலகி லெவ்வுயிர்க்கும்
புன்கண் கற்றுத் தன்னுயிர்போற்
புரக்கும் வாய்மைத் தசரதற்கும்
புவன முழுதும் வணங்குமுனை
வருந்தி யீன்ற கௌசலைக்கும்
மாறு வன்பு தழைத்தோங்கி
வளருஞ் சிறிய தாயருக்கு
மகிழ்ச்சி விளைக்கு மோருயிரே
யருந்து மமுதங் கசப்பநல
மமைந்த மதுர மொழியோனே

யடியே முனது திருவடியை
யடைந்தோம் வேறோர் துணைகாணேம்
திருந்தும் புகழ்சே ரருண்முகிலே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (4)

280. துங்க வடிவேற் படையரசர்
சுடரு மௌலித் திரளுருவித்
தொழுமொண் கழற்றச ரதனுந்
தூய நிறைசால் கௌசலையுந்
தங்கண் மரபு தழைத்தோங்கத்
தனைய னிலையென் றிருமூன்றிற்
சாரும் பதினு யிரவருடந்
தளர்வுற் றுரும் பீழைதப
வெங்கள் குலமும் சிறந்தோங்க
வெல்லா வுயிரு முய்ந்துமகிழ்
வெய்த வுதித்த புண்ணியனே
யிராமா நினது திருவடியைச்
செங்கை குவித்துப் பணிகின்ற
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (5)

281. பூவை மலர்நேர் திருவுருவும்
பொங்கு கருணை நிறைவனசப்
பூவை யனைய விழியிணையும்
புருவச் சிலையும் வெண்டரளக்
கோவை யிகலும் இளநிலவும்
குலவு நிரைசேர் முறுவலுஞ்செங்
கோவை நிகர்க்கு மெல்லிதழுங்
குவவுத் தோளுங் கற்பகப்பூங்
காவை முகிலை யிகழ்கரமுங்
கமல வடியுங் கடலுடைநீங்
காவை யகத்திற் போந்தெமக்குக்
காட்டி வருமச் சுதநின்னைச்
சேவை புரிந்து களிகூருஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே

தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (6)

282. ஆதி முதலாய் நித்தியமாய்
யகண்டா காரப் பரஞ்சுடரா
யருவா யுருவா யத்துவித
மாகிக் கலைக ளையமற
வோதி யுணர்ந்தோர் நெஞ்சகத்து
மோதத் திரைசேர் வேலையினு
மொளிசேர் பரம பதந்தனிலு
முயரு நிகமத் துச்சியினு
மேத மறவே வீற்றிருக்கு
மிராமா நினது திருவடிக்கொண்
டிசைந்தோர்க் காக்கை யெனுந்துச்சி
லிடுக்க ணொழித்தே யாட்சிபெற
தீதில் பெருவீ டருள்பெரியோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (7)

283. எந்தை யுனது பூங்கழலை
யிதையத் தொருகா னினைத்திடினு
மிடுக்கண் பலவு மொழிந்துநல
மெய்திப் பெருவீ டடைவரென
முந்தை மறைக ளரற்றிடுமான்
முதல்வ நினது திருவுருவ
முழுதும் விழியாற் கண்டுகர
முகிழ்த்து வணங்கி யன்பிநெடு
நிந்தை யறவே துதிசெய்து
நெஞ்சக் கமல மலர்மீது
நீங்கா திருத்தி விளையாடும்
நெறியோம் வருந்தன் முறையன்றே
சிந்தை யிரங்கி யிராகவனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (8)

284. ஏக முதலாய் நித்தியமாய்
எங்கும் நிறைந்த பரம்பொருளென்

றெந்தா யுனது பெருநிலையை
யியம்புஞ் சிறுவ னுவந்துரைப்பச்
சோக மடைந்த சுரர்முனிவர்
துயரந் தீர மேனளிற்
றூணம் பிளந்து வான்முகட்டின்
முழுது மோடி முடிகடக்க
நாக ருலகுந் திசைகளிரு
நான்குங் கடப்பச் சரண்கரங்கள்
நார சிங்க வுருவானேய்
நயந்து சிறியேந் தொழச்சிறிய
தேக மொடுவந் தருள்பெரியோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (9)

285. காய முழுதும் புளகரும்பக்
கண்ணீர்த் ததும்ப வன்பினுளங்
கரைந்து நினது பெரும்புகழைக்
கருதி வழுத்தி நடலைமிகு
மாய வுலக வாழ்க்கையுடை
வாஞ்சை யொழிந்து மெய்ஞ்ஞான
வழியின் முடிவி லானந்த
மகிழ்ச்சி யதனிற் சிறந்தோங்குந்
தூய வடியார்க் கெளியனெனத்
தோன்றி யருளும் புண்ணியநின்
றுணைத்தாட் கமலத் துணையெனவே
தொண்டு புரியு மெமதுதுயர்
தோய நினது மனமிரங்கிச்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேவ புரிவா ழிளவரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (10)

---

# சிறுபறைப்பருவம்

286. கருவளரு மூதுலகி லரியமறை யோதையுங்
    கான்மாரி யின்முழக்குங்
  கழனிபடு முழவொலியு மெங்குநன் மங்கலங்
    கதுவுபல் லியவரவமு
முருவளரு மிரவிகுல மகிமை புகழுமலையு
    முறுபெருந் தவநெறியினுற்
  றெளிருநன் முனிவரறை யாசியார்ப் புந்தேற
    லூறுமலர் பொதுளியநறுந்
தருவளரு மருவிசும் போம்புமுடி வாசவன்
    றனதுநெடு மணியுராய
  சார்முரசி ஞேசையுந் தொண்டர்மகிழ் சும்மையுந்
    தளர்வன்றி யோங்கிமிரத்
திருவளரு மணிமார்ப மிலகுறு மிராகவா
    சிறுபறை முழக்கியருளே
  திறமருவு சாகேத புரமருவு மாநீத
    சிறுபறை முழக்கியருளே. (1)

287. ஓதுமனு நீதியுஞ் சுருதிபுகல் கருமமு
    மோம்புநன் மனுவேள்வியு
  முரிமைபெறு வாய்மையும் பற்பல வறங்களு
    முயர்பெருந் தவமுமன்புங்
கோதுதபு மாட்சியமை கலைகளுணர் திறமுமைங்
    குரவரைப் பேணுநலமுங்
  குறைவறு மொழுக்கமு பீடுகெழு சீலமுங்
    குறுகினர் தமைக்காத்தலும்
போதுமலி கூந்தலார் கற்புநிலை யுந்தெய்வ
    பூசனையு முலகமெங்கும்
  பொலிவுட னமைந்தோங்க மார்த்தாண்டன் மரபில்
    புராதன வடியர்வாழ்வே [வரு
தீதுதெறு மெந்தைநின் கமலநிகர் செங்கையாற்
    சிறுபறை முழக்கியருளே
  திறமருவு சாகேத புரமருவு மாநீத
    சிறுபறை முழக்கியருளே. (2)

288. மறங்கொண்ட வெஞ்சின வரக்கர்புரி சிறையுற்று
மாதவம் வெளவிபுனித
வளமெய்து சீலமிவை மாறியே யுளநைந்து
வாடுமுனி வோர்கவலையு
நிறங்கொண்ட மணிவாரி சூழ்பெரும் புவிமாது
நிமிர்பாதகப் பொறைகொடு
நெஞ்செழுங் குறுமெலிவு நல்லறக் கடவுளாய்
நிலைபிறழ்ந் திடுசோகமும்
புறங்கொண்ட புன்சமயம் மூழ்கியலை யுமவர்
புன்கணுஞ் சுதனிலையெனப்
புந்திதளர் தசரதன் கொண்டவெம் பீழையும்
போக்கவமு தக்கடலொரீஇத்
திறங்கொண்ட கருணையி னுதித்தொளி ரிராகவா
சிறுபறை முழக்கியருளே
திறமருவு சாகேத புரமருவு மாநீத
சிறுபறை முழக்கியருளே, (3)

289. அத்தனொடு மன்னைக்கு மைந்தர்பணி செய்தக்க
வறமுறைமை யுந்துணைவர்க
ளாயினோர் தம்மிலொருவர்க்கொருவர் செய்தக்க
வன்பின்முறை யும்பூசுர
ருத்தம குணத்தினுயிர் தேசிகர் விளங்கறிஞ
ருக்கினிது செய்தக்கநல்
லுரிமைமுறை யுஞ்சரண மென்றடைந் தவர்கடமை
யோம்பல்செய் தக்கமுறையு
மெய்த்துள வெறுக்கையதி காரமெறும் மிக்கவர்
வியப்புற வடங்கியொழுகன்
மேதகச் செய்தக்க வுய்யுமிவ் வுலகர்க்கு
மேவுறச் செய்துணர்த்த
சித்தமகிழ் கொடுவந் துதித்தரு ளிராகவா
சிறுபறை முழக்கியருளே
திறமருவு சாகேத புரமருவு மாநீத
சிறுபறை முழக்கியருளே. (4)

290. ஞாலமிசை யோம்பலுறு தந்தைதா யில்லார்க்கு
நற்றந்தை தாயராக
நவில்சுற்ற மில்லார்க்கு நற்சுற்ற மாகநசை
நண்ணலுறு சுதனிலார்க்குக்

கோலமிகு சுதனுக வுடனுதித் தவரிலாக்
கொள்கையர்க் கன்னராகக்
குறுகுமா தாரமில் லார்க்கதுவு மாகநிலை
கூடுநன் னெறியையார்க்கு
மாலற வுணர்த்துசற் குருவுமவ ரன்பொடு
வணங்குகட வுளுமாகநன்
மங்கல குணம்பலவு மோவாதமைந் தோங்கு
மாட்சிகொடு நிறையருளினற்
சீலமிகு புகழுட னுதித்தொளி ரிராகவா
சிறுபறை முழக்கியருளே
திறமருவு சாகேத புரமருவு மாநீத
சிறுபறை முழக்கியருளே. (5)

291. வண்மைபெறு மோவியத் துறைகைபோ யவருமிது
வரையவரி தெனமயங்கு
மாட்சிவள ருனதுதிரு வடிவினைக் கண்டுகண்
வாய்த்தபே றுற்றதெனவுந்
தண்மைபெறு மமுதொழுகு முனதுவாய் மலர்மழலை
தனையினிது கேட்டிருசெவி
தனுபயனங் கெய்தென வும்பெரும நின்முனஞ்
சார்ந்துரை செயப்பெறுதலா
லெண்மைபெறு வாயுற்ற பலனன் கடைந்ததிங்
கெனவுமுன் குற்றேவல்செய்
திடலி னுடலினையா மெடுத்ததற் குறுதிநிலை
யெய்ந்ததெனு வுந்தகைமைசேர்
திண்மைபெறு மன்பினர் புகழ்ந்திடு மிராகவா
சிறுபறை முழக்கியருளே
திறமருவு சாகேத புரமருவு மாநீத
சிறுபறை முழக்கியருளே. (6)

292. பாயொளிசெய் திகிரியும் பாஞ்சசன் னியமுயர்
பைம்பொனு டையுநிகரிலாப்
பளகறு கவுத்துவா பரணமும் பலைறலைகொள்
பாந்தளணை யுந்துறந்து
வாயொளி மணித்திரள் கொழிக்குநெடு வேலைசூழ்
மகிதலந் தனையோம்புநல்
வாய்மைபெறு தசரதன் மதலையாய் வந்துறினு
மற்றொருவ ரெய்தொணுத

தாயொளிரு மற்புத குணங்கண்டு பலருமுனை
யருணிறை முதற்கடவுளென்
றறிவுறீஇ யன்பொடு வணங்கவவர் மலமொழித்
தடிமைகொண் டாளுமிறைவ
சேயொளி தளும்புறு மலர்க்கையி னிராகவா
சிறுபறை முழக்கியருளே
திறமருவு சாகேத புரமருவு மாநீத
சிறுபறை முழக்கியருளே. (7)

வேறு

293. நகிற்குட மாதர் முயக்கினில் வீழ
நடத்தியு மிடர்பெருக்கு
நவிற்றரு மாயை யழுத்தி யரூத
நவைப்பழி யுறுதொழிலிற்
புகுத்தியு நோயி னலைத்து மினைத
பொத்தியு மிலகிவளர்
புகழ்ச்சியி னெடுவிற லறத்தொடு வாய்மை
புணர்த்தியு நெறிபிறழ
மிகுத்திடு மாவ லுனைப்பணி நேயர்
விடுத்திட வுயர்கருணை
விளக்கு மெனாத வளத்தொடு வானின்
விறப்புறு மமரர்கர
முகிழ்த்திசை கூறுமயோத்தி யிராம
முழக்குக சிறுபறையே
முதுக்குறை வாளர் துதிக்கிசை தாள
முழக்குக சிறுபறையே. (8)

294. சகத்தினை நீடு படைத்திர ளோடு
தனிக்குடை நிழலினுறத்
தமக்கெதி ரான திறச்செய வீறு
தனைக்கொடு பெருமதுகை
யகத்தின ராகி வளத்துட னுரு
மடற்புய வரசர்களு
மறத்துறை மேவி யுனைப்பணி யாம
லதிர்த்தெரி சினவிழியி
னுகத்தொடர் கால னெடுத்தெறி பாச
மொழித்திட லரிதரிதென்

றுளத்துற நாடு தனிப்பர நேய
ருவப்புறு தலைவமுகின்
முகத்தொளிர் மாடவ யோத்தி யிராம
முழக்குக சிறுபறையே
முதுக்குறை வாளர் துதிக்கிசை தாள
முழக்குக சிறுபறையே. (9)

295. அறுக்க வொணாத வினைப்பகை மாற
வடுத்தருள் புரிகுருவே
யகத்தி னுள்மூய மலத்தம மோட
வழுத்திடு முழுமணியே
பொறுக்க வொணாநர கத்துறு கொடுமை
போக்கிடு மொருகதிரே
புலத்தி னவாவை யொறுத்திட நீதி
புகுத்திடு மொருமுதலே
வெறுக்க வொணாத மகிழ்ச்சுவை மேவ
விளைத்திடு கலைமதியே
விரித்திசை பாடு மளித்திர ளோடி
விழத்துணர் பொதுளுமுகை
முறுக்கவிழ் சோலை யயோத்தி யிராம
முழக்குக சிறுபறையே
முதுக்குறை வாளர் துதிக்கிசை தாள
முழக்குக சிறுபறையே. (10)

---

## சிறுதேர்ப்பருவம்

---

296. பொங்கொளிசெய் தமனியத் திகிரியொடு மரகதப்
புரிகதிர்த் தட்டுமிருளைப்
போக்கிமிளிர் வச்சிரக் கிடுகுமொழி லுற்றோங்கு
பொருவில்பவ ளத்தூணமுந்
துங்கவள மெய்துவயி டூரியக் கூம்புமுயர்
தூயமா ணிக்கத்திலுற்
றோன்றுமொண் கலசமுங் கண்கவர் வனப்பினொடு
தூக்குவெண் டரளவடமும்

பங்கமறு பன்மணிப் பாவையும் விலையறு
படங்குமே தகசித்திரப்
பண்புறு கொடிஞ்சியு மயோத்திநகர் மறுகினிற்
பலருநோக் குற்றுமகிழச்
செங்கமலநிகர் விழியி னருள்வள ரிராகவா
சிறுதேர் நடத்தியருளே
தென்றிசைக் கூற்றனிகல் வென்றிடற் குறுதுணைவ
சிறுதேர் நடத்தியருளே. (1)

297. ஆடகத் தொளிருருளை வாய்ப்பட் டெழும்பூழி
யாகமிசை யொருசிறிதுசென்
றணைவுறப் பெற்றவர்க ளுலகினி லுதித்திறந்
தலைதரு பிழையினேடு
மூடகத் திருளுமழி வுற்றதின் முருகவிழு
முண்டகக் கோயிலுறையு
முதுமறை யின்கிழவன் படைப்பெனுந் தொழி
முத்திநெறி கைக்கொண்டனன் [லொருவி
காடகத் தெய்தியூ ணின்றிநிலை பெறநெடுங்
காலநோற் றூர்க்குமலகில்
கலைகளுணர் புலவர்க்கு மெய்தவரி திஃதெனக்
களிகூர்ந்து துதிசெயவறந்
தேடகத் தினர்மலி யயோத்தியி னிராகவா
சிறுதேர் நடத்தியருளே
தென்றிசைக் கூற்றனிகல் வென்றிடற் குறுதுணைவ
சிறுதேர் நடத்தியருளே. (2)

298. கழுவலொரு தினம்நீங்கின் முடைநாறு வெண்பலைக்
கதிரொளிசெய் முத்தமெனவுங்
கமழுநெய் நீவா துறிற்கரும் புழுமேவு
காரளக மேகமெனவுந்
தழுவுறு தசைத்திரட் கொங்கையைச் செவ்விபெறு
தமனியக் கலசமெனவுஞ்
சந்ததமு மோவாது புன்மலஞ் சொரிவிழிக
டம்மைமுழு நீலமென்றுங்
கழுமிமட வார்திறத் துழலாது நின்பதங்
கருதுமன்பர் களிதயமாம்
கந்துக மிவர்ந்துதனி மெய்ஞ்ஞான நன்னெறிக்
கட்செலுத் தும்புண்ணியா

செழுமலர்ப் பொழில்சூ ழயோத்தியி னிராகவா
சிறுதேர் நடத்தியருளே
தென்றிசைக் கூற்றனிகல் வென்றிடற் குறுதுணைவா
சிறுதேர் நடத்தியருளே. (3)

299. இருண்டநெஞ் சுளராகி மண்ணுதி மூவாசை
யேதத் தழுந்திநிலையா
விப்புன் குரம்பைதனை நிலையென வளப்பிலா
வெண்ணமுள ராகியுலகின்
மருண்டுபல தீவினை யிழைத்துநல் வாய்மைநெறி
மாறியா மெத்தன்மையம்
வாய்த்தவிச் சகமெற் றிவற்றையுடை முதலெவன்
மற்றிவை யுணர்ந்துதீங்கின்
வெருண்டமல விகலொழிந் துய்யுமா றடைதுமென
விரைகிலார் தொடர்புநீங்கி
விட்டமெய் யன்பருக் குலகுபேய்த் தேரென
விளக்கியருண் ஞானகுருவே
தெருண்டமுனி வரர்புக ழயோத்தியி னிராகவா
சிறுதேர் நடத்தியருளே
தென்றிசைக் கூற்றனிகல் வென்றிடற் குறுதுணைவ
சிறுதேர் நடத்தியருளே. (4)

300. காசினி வலஞ்சூழ்ந்து மோங்கசல வைப்பினிற்
கானகத் திற்பயின்றுங்
கடவுணதி யாடியு மழித்து மயிர்நீட்டியுங்
காவிநன் னிறமருவிய
தூசினி துடுத்துமெண் ணறுகலைக ளாய்ந்துமுயர்
தூயநோன் பாற்றியுமருஞ்
சுருதிநெறி யாகங்கள் செய்துமுன் கமலநிகர்
துணையடிக் கன்பதன்றி
மாசினி யொழித்துமெய்ஞ் ஞானநெறி சென்றுகதி
மருவலரி தெனவுணர்ந்து
மறவா துனைத்தினந் தொழுமவரை நீங்கா
மகிழ்ச்சியொடு காக்குமிறைவ
தேசினி யனுறுபுக ழயோத்தியி னிராகவா
சிறுதேர் நடத்தியருளே
தென்றிசைக் கூற்றனிகல் வென்றிடற் குறுதுணைவ
சிறுதேர் நடத்தியருளே. (5)

301. ஊன்மருவு பொறையுட லெடுத்துழலு மிடர்தனை
யொழித்தன் பரைப்புரத்தற்
கொப்பிலா வருள்பெருகு செங்கமல விழியனே
யுலகமுழு துண்டவாயா
வான்மருவு விபுதருங் காணரு மலர்த்தாள
வைகுண்ட வாசஅமுதா
வசனமுதன் முடிவிலா வானந்த வாழ்க்கையோய்
மங்களா வேதமுடிவே
சூன்மருவு முகிலனைய திருவுருவ நறுமலர்த்
துளபமா லிகையவெனநற்
றுதிசெய் திறைஞ்சினோர்க் கென்ஞான்று மழியாத
சுகமுதவு நீதிமுதலே
தேன்மருவு பொழிலுடை யயோத்தியி னிராகவா
சிறுதேர் நடத்தியருளே
தென்றிசைக் கூற்றனிகல் வென்றிடற் குறுதுணைவ
சிறுதேர் நடத்தியருளே. (6)

302. ஒப்புயர் விலாதொளிரு மானந்த வீடருளு
முத்தமா கருணைநிதியே
உலகெலாந் திருவயிற் றுறவைத் தளித்தோம்பு
முரிமைபெறு சாத்துவிகா
வெப்பொருளு மாகியவை யல்லையென வேறு
யிருந்திலகு மாதிதேவே
யெங்கெங்கு நிகழ்கின்ற செய்கைக ளனைத்தினு
மிடைவிடா துறுசத்தியா
வெப்புறு கொடுங்காம மோடுசின மயக்கமிவை
விடுவித் தெமைக்காவென
மேதகு முனைத்துதிப் பவர்யாவ ராயினு
மெய்ம்மைபெற நல்குபுனிதா
செப்புபுக ழோங்குறு மயோத்தியி னிராகவா
சிறுதேர் நடத்தியருளே
தென்றிசைக் கூற்றனிகல் வென்றிடற் குறுதுணைவ
சிறுதேர் நடத்தியருளே. (7)

303. இளைக்குங் கொடும்பிறவி யெனுமுத் தியைக்கடத்
திடவருட் புணையைநல்கு
மிறைவநின் பேரிசையி னொருசிறிது கூறுவோ
ரிதையமக லாதிருந்து

# இராகவர் பிள்ளைத்தமிழ்
## குறிப்புரை

203. நிகமம்-வேதம்; செல்லல்-துன்பம்; புரந்தரன்-இந்திரன்; புத்தேள் குலம் - தேவர் கூட்டம்; மாருதி - அனுமான்; உலகில் நல் தருமமோடு எனப் பிரிக்க. பீழைதபு - துன்பத்தைக் கெடுக்கும்; பிறழாமல் - மாறுபடாமல்; பாம்பணை - ஆதிசேடனாகிய படுக்கை; எழிலி - மேகம்; இஞ்சி - மதில்; சங்கமொடு திகிரி கரத்து இராகவன், பாம்பணை இராகவன் என்று கூட்டுக.

## காப்புப் பருவம்

204. பைந்துணர்-பசுமையான கொத்து; புங்கவர்-கடவுளர்; தாம் மேவும் எளியவர் எனக்கூட்டுக; தந்தி-கஜேந்திரன் என்ற யானை; சததள மலர் - தாமரை; உபயசரணம் - இரண்டு பாதங்கள்; பாற - ஓட; எகினம் - அன்னம்; வண்டு வரிபாட - வண்டுகள் இசைப் பாட்டுகளைப் பாட. (1)

205. தண்கதிர்ப்பிள்ளை-சந்திரன்; குரூஉமணி-பிரகாசம் பொருந்தியமணி; கட்செவி-கண்களையே செவியாக உடைய பாம்பு, காரணப்பெயர்; மதுகரம்-வண்டுகள்; தொடை-மாலை; கரந்திட - மறைய; பதம்+அம்புயம் - பதாம்புயம்; ஒன்னலர் - பகைவர்; ஒண்குடையின் நிழலொதுங்க - வெண்கொற்ற குடையின் நிழலில் தங்க; தன்உரு முழுதும் நிறைவுறின் ஏந்து தண் கதிர்ப்பிள்ளை தன்னினத்தோன் வெருவ - தனது வடிவம் முழுதும் நிறைந்தால் சடையில் தாங்கப்படும் குளிர்ந்த கதிரையுடைய பிறைச்சந்திரன் தன்னினத்தோன் என்று பயப்பட; சிவபெருமான் தன் உடல் முழுதும் விபூதிபூசி வெண்மையாக இருந்தது பிறைச்சந்திரன் தனது வடிவம் நிறைந்து பூரணசந்திரனாகும் போதுள்ள வடிவம்போன்றதால் தன்னினம்போன்ற ஒரு சந்திரனோ எனப் பயந்தது. (2)

206. தர்து - மகரந்தம்; அளைந்து-பூசி; சஞ்சரிகம் - வண்டுகள்; தாரம் என்ற இரண்டு சொற்களில் முதல் சொல் நாக்கையும் இரண்டாவது சொல் மனைவி (சரசுவதி) யையும் குறிக்கிறது; சரம் + அசரம் - சராசரம்; மறைக்கிழவன் - பிரமன்; தாள் கமலம் - உருவகம்; பூதங்களைந்தும் - நிலம், நீர் முதலிய ஐம்பெரும் பூதங்களையும். (3)

207. அவனி-பூமி; ஈனமரபு-தாழ்ந்தசாதி; முடை வீசு-முடைநாற்றம் வீசும்; அணவுதுணை - நெருங்கின உற்றார்; அறைய உழல்வோர் - சொல்லும்படி வருந்துபவர்கள்; அலைசெவி உவா-அலையும் காதுகளையுடைய யானை; எருத்தம் - கழுத்து; அறுபதமுலாவு - வண்டுகள் உலாவுகின்ற; மலர்வாளி-மலரம்பு; மதன் சமழ்ப்பூறும்படி-மன்மதன் நாணும்படி; மேரும்உள்வெருவுறு பகைவர் - மேருமலையையுங் கண்டு தங்கள் மனங்கலங்காது உள்ள அத்தகைய தோள் பலம் படைத்த பகைவர்; மதுகை - வலிமை; அளப்பிலா பரிசு - அளவற்ற குணங்கள்; வீறு பயன் - பெருமை பொருந்திய நன்மைகள்; மருவுற - பொருந்த; பதும மனையாள் - தாமரையாகிய வீட்டையுடையவள்; நிமிரும் அலை மோதும் பரவை யெழுதாய் - உயர்ந்த அலைகளை வீசும் பாற்கடலில் தோன்றிய எல்லா உயிர்க்கும் தாயான இலக்குமி; எழிலியும் நயத்தரும் சுவல் நிலையை மூடுகுழல் - மேகமும் விரும்பும் முதுகுப்புறத்தை மூடி மறைக்கும் கூந்தல்; ஆடுதுடியிடை-அசைகின்ற உடுக்கை போன்ற இடையுடையவள்; துகிர் - பவளம்; சேயவடி எகினம் - சிவந்த பாதமுடைய அன்னம்; ஏறும் மதலையுடைய பசுஞ்சுடரிழை என்று பிரித்துப் பொருள் கொள்க; மதலை - பிள்ளையான பிரமன்; மாவை-இலக்குமியை; துணையடி - இரண்டு பாதங்கள்; இயல்பின் ஆதி நடு முடிவு இலாத இறைவன் என்று பிரித்துப் பொருள் கொள்க; இரவிகுலம் - சூரிய குலம்; அவனி மிசை............உழல்வோரும்:-

“பாதியா யழுகினகால் கைய ரேனும்
பழிதொழிலு மிழிகுலமும் படைத்தா ரேனும்
ஆதியா யரவணையா யென்ப ராகி
லவரன்றே யாம்வணங்கும் அடிக ளாவார்
சாதியா லொழுக்கத்தான் மிக்கோ ரேனும்
சதுர்மறையால் வேள்வியாற் றக்கோ ரேனும்
போதினன் முகன்பணிய பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றுதார் புலையர் தாமே”

என்ற பாட்டின் கருத்து ஒத்திருத்தல் காண்க. இத்தகையவர்கட்கு இலக்குமி தனது அருள் சிறிது காட்டினால் பூமியை யாளு மரசுரிமை

யோடு யானையின் கழுத்தில் உலவிவரும் சிறப்பும், மன்மதன் தாழும் படியும், மேருமலையையும் கண்டு மனம் அஞ்சாத அத்தகைய போர்வலி உள்ள பகைவர் வணங்குமாறு மிக்க வலிமையும், அளவிலாத தன்மை யுடையதான புகழும், மிக்க பயனும் ஆகிய இவையாவும் பொருந்து மாறு செய்யும் தாமரை வீட்டை யுடையவள் எனப்பொருள் கொள்க. எகினமீது சுரர்பணிய ஏறு மதலையுடைய பசுஞ்சுடரிழை - அன்ன மீது தேவர் பணியுமாறு ஏறுகின்ற பிள்ளையான பிரமனையுடைய இலக்குமி. (4)

208. களிமிகுந் துகின வரையில் வந்து-குளிர்ச்சிபொருந்திய பனி மலையான இமயமலையரசனுக்குப் புத்திரியாகப் பிறந்து ; முடிநதி கொள் அங்கிவரையின் கண்ணுற்று - தலையில் கங்கைநதியைக் கொண்டுள்ள நெருப்பு மலைபோன்ற செந்நிறமமைந்த சிவபெருமானிடம் அடைந்து; மலர் சுமந்து - பல மலர் மாலைகளைத் தாங்கி ; அயில் நயன வொண் சசி; வேல்போன்ற கண்களையுடைய ஒள்ளிய சரஸ்வதி ; நவிர மென்குழ லில் - மயில் தோகைபோன்ற மென்மையான கூந்தலில் ; தூச்சுடர் - உயர்ந்த கிரணம் ; கனகமலை நெடுங்கையுற - மேருமலை தன்கையில் வில் லாக வந்து பொருந்த (திரிபுரம் எரிந்தகாலத்தில்) ; உரைசெய் வெண் பொன் அசலம் - புகழ்மிகுந்த வெள்ளி மலை (இமயமலை) ; வெண்பொன் - வெள்ளி ; தனதன் - குபேரன் ; "உணவிதன்றிலை...............மங்க" :— அன்னதானமே முக்கியம் மற்றவை அவ்வளவு முக்கியமல்ல எனச் சிவ பெருமானிடம் கெஞ்சிக்கேட்டு இரு நாழி நெல்பெற்றுச் சுலபமாக பக்தரிடம் சேருகின்ற அன்பனை சிவபெருமானது மனத்தை இன்ப மாக்க உயர்வுள்ள பலவகை அறங்களையும் உலகத்தவருக்கு அறியக் காட்ட நன்கு செய்கின்ற பார்வதி ; கழுமிருந்து - சேர்ந்திருந்து ; மொய்ம்பு - வலிமை ; கவலை விஞ்சு சுரர் - கவலை மிகுந்த தேவர்கள் ; கடிகொள் கடை - கூர்ந்து பார்த்தலைக்கொண்ட கண்கள் ; கரிசறும் சுருதி - குற்றம் நீங்கிய வேதம் ; பொருவில் கடவுள் - ஒப்பில்லாத கடவுள் ; கதுவி நின்று - மிக அருகிலே நின்று ; அளிமிகும் தவமும் ஒருவி - அன்பு மிகுந்த தவத்தையும் விட்டு ; கனகன் - இரணியன் ; நர மடங்கல் - நரசிங்கம் ; இரகு குலம் - இரகு என்பவன் சூரிய வம்சத்தில் பிறந்து சிறப்புடன் ஆண்டான். ஆகவே அக்குலத்திற்கு 'இரகு குலம்' என்ற பெயர் உண்டு. (5)

209. இகம் பரம் - இவ்வுலகம், மேல் உலகம். இகத்தில் அறம், பொருளின்பம் ஆகியவைவும் பரத்தில் வீடும் கொடுக்கும் கலையாதலால் ஒடு என்ற உருபு கொடுத்து வீடு என்ற சொல்லைத் தனியே பிரித்தார்; சகபர முடிக்குறு மனந்தன் - பூமியை முன் முடியினால் தாங்கும் ஆதி

சேடன்; நிறுவு புகழால் தனக்கு உருவு கொண்டாங்கு தவள நிறம் மருவும் - ஆதிசேடனுக்கு நிறுவிய புகழினால் அப்புகழ் தனக்கு ஒரு உருவம் அமைத்துக்கொண்டதைப்போல வெண்மை நிறம் பொருந்தும்; புகழுக்கு எப்பொழுதும் வெண்மை நிறமே கவிகளால் கூறப்படும்; தாய் என்பது இங்குச் சரசுவதியைக் குறித்தது; **கலைக்கோட்டு முனி :-** அரணி முனிவர் ஸ்நானத்திற்குச் சென்று அரம்பையைக் கண்டு மோகித்து வீரியத்தைக் கங்கையில் விட அச்சலத்தை மான் ஒன்று குடிக்க, அதன் வயிற்றில் இம்முனிவர் பிறந்தார். இவருக்குத் தலையில் ஒரு கொம்புண்டு. தசரதனுக்குப் புத்திர காமேஷ்டி யாகம் செய்வித்தவர்; கமலநேர்முக பரதன் - தாமரை யொத்த முகத்தையுடைய பரதன்; மூன்று தொழில்கள் - படைத்தல், காத்தல், அழித்தல்; விளங்கு+ கருணைமூர்த்தி - விளங்கருணை மூர்த்தி என வந்தது. 'கு'கர உயிர் மெய் தொக்கது. (6)

210. கரம் ஐந்தில் நீட்சியொடு உயிர்த்தலும் சேர்ந்த ஒன்று - ஐந்து கைகளில் நீளத்தோடு மூச்சு விடுதலும் உடைய ஒன்றான தும்பிக்கை; அடி இயல் திகழ்கின்ற கோடு - கீழ்ப்புறத்தில் வெளிப்பட்டுக் காணப்படுகின்ற தந்தம்; கோடு ஒன்று கார் அரவின் வாய்ப்புறம் சேர்ந்த கதிர் எறி புனிற்று மணிகொண்ட வெண்பிறை கிடந்தாங்கு தோன்றும் இபவதனம் - ஒரு தந்தமானது, கரிய இராகு என்ற பாம்பின் வாய்ப்பக்கம் சேர்ந்த கிரணங்களை வீசும் இளைய அழகுகொண்ட வெள்ளிய பிறைச்சந்திரன் இருந்ததுபோலத் தோன்றும் யானை முகம்; கிரகண காலத்தில் கேது ஒரு பக்கத்தில் சந்திரனைப் பிணித்துக் கொண்டிருப்ப மற்றொரு பக்கம் வளைந்து கூர்மையாக உள்ளது. அதைப் போன்று விநயகர் தந்தமும் கரிய யானைமுகத்தில் ஒரு பாகம் அழுந்த மிகுதி வளைந்து கூர்மையாகத் தெரிகிறது. தொழுகுலத்தவர் - பிராம்மணர்; உணர்வுரீஇ-உணர்வுற்று, உயிரளபெடை, (சொல்லிசை); பிணி கொண்ட இதழ் - மொக்கு; மஞ்சரி - பூங்கொத்து; உண்மையே விரதமாகக் கொண்ட பிராம்மணர்கள் சந்தத்தோடு வேதங்களைச் சொல்ல அதுகேட்டறிந்து அழகிய சிறகுகளையுடைய பச்சைக் கிளிகள் மனங் களிக்கவும், அயலிலிருந்தவர்கள் சந்தோஷமடையவும், அரும்புகள் இதழ்களை மலர்விக்கும் பூங்கொத்துக்களையுடைய சிறந்த மணமுள்ள சோலைகள் சூழ்ந்த வளம் நிறைந்த அயோத்தி என்க. இறும்பூது - சந்தோஷம். (7)

211. மயலுலவு பெட்புடை யவுணன் - மயக்கங்கொண்ட ஆசையுடைய அசுரன்; கைக் கற்பகச்சோலை - வரிசையாகவுடைய கற்பகம், மந்தாரம் முதலிய மரச்சோலை; வரை - மந்தர மலை; அரா - வாசுகி

என்னும் பாம்பு; கைக்கொடு - கைகளைக்கொண்டு; மதிக்க - கடைய; பயத்தூயவாரி - பாற்கடல்; பயம் - பால்; அடல் இலகு கச்சபம் - வலிமை பொருந்திய ஆமை; ஓதும் மாநலம் இயலுலவு சொல் திறம் மறை - துதிக்கின்ற சிறந்த நல்ல தன்மைகளையுடைய சொற்களின் திறமமைந்த வேதங்கள்; களவு - திருட்டுத்தனம்; இரை திரை - சப்திக்கின்ற அலை; நரலை - கடல்; ஓவிலா வலி இலகு பெருமச்சம் - நீங்காத வலிமை பொருந்தி விளங்கும் மீன்; புயல் உலவும் உச்சியின் உயர் அசலம் - மேகங்கள் உலவுகின்ற சிகரங்களால் உயர்ந்த மலை; வைப்பு உறு புனம் இதண்-பொக்கிஷம் போன்ற மிக்க வயல்களில் உள்ள பரண்; அடைமொழி, புகலும் மொழி எனக் கூட்டுக; புகலும் மொழிகட்கு இகல் கிளிகடி நலம் - சொல்லும் மொழிகட்கு மாறுபடுகின்ற கிளியை ஓட்டும் அழகு; குறப்பாவை - வள்ளி; பொருவறு - ஒப்பில்லாத; உட்கொடு - அச்சக் குறிப்புக் காட்டுவதோடு (யானையினால் வள்ளிக்கு முருகன் பயங்காட்டினார்); சிறைத்தேன் உணு அலர் பொதுளிய சினைக்கணி மரம் - இறகுகளுடைய வண்டுகள் உண்ணுத மலர்கள் நிறைந்த கிளைகள் உள்ள வேங்கை மரம்; இம்மலர்களை வண்டுகள் உண்ணாது; துனிச்சேய்-துன்னிய சேய் என்பது துனிச்சேய்-என்று ஆயிற்று, புகழ்ச்சொல் நிரம்பிய முருகன் என்க; மைக்கடல்-கரியகடல்; உஞற்றி - செய்து; கபட மிகு கொக்கு - வஞ்சனை மிகுந்த மாமரமாகிய சூரபதுமன்; களபம் - தோகை; குக்குடம் - கோழி; அயில் கை தலத்தான் - வேலைக் கையிடமுடையவன்; "அவுணர் ஒரு பக்கமும் சுரர் ஒரு பக்கமும் வரையை மத்தென நிறுத்தி விட அராவைப் பிணித்துப் பயத்தூய வாரியை கைக்கொடு வலமிடம் இழுத்து மதிக்க மலையமிழும் அப்பொழுது கச்சப வடிவமும் மறை களவினிற் கவர் சோமுகாசுரன் நரலையின் ஒளித்திட அடக்கற்குறித்து வலியிலகு மச்ச நல்வடிவமும் எடுத்தருள் இராகவன்" என முடிக்க. **சோமுகாசுரன்** :—சோமுகாசுரன் வேதங்களைத் திருடிக்கொண்டு செல்ல அவனைத் தேவர் வேண்டுகோளால் திருமால் மச்சாவதாரம் கொண்டு சென்று அவனைக் கொன்று வேதத்தைக் கொணர்ந்து பிரமனுக்குத் தந்தார். (8)

**212.** நலம் தரும் தன் இளவலுக்கும் மனையான் அவன் நயந்திடும் ஓரடி நளினத் தடங்கிய மடந்தை தன்மேல் தாங்க நண்ணும் உயிர் ஓங்க - நன்மை தரும் தன் இளவலான உபேந்திரனுக்கும் இருக்க வீட்டையுடையவன். அவ்வுபேந்திரன் மாபலியிடம் விரும்பின ஓரடியை இலக்குமி தன்மேல் தாங்கவும் அடைந்த உயிர்கள் உயரவும்; உதகம் பலம்தரும் திறநல்கு வானூர்தியாகி - பூமி நன்மை தரும்படி மழைத் திறத்தைக் கொடுக்கும் மேகத்தை வாகனமாகப் பெற்று; விபுதர் பம்பு

பொன்னாடு - தேவர்கள் நெருங்கிய சொர்க்கலோகம்; புருகூதன் - இந்திரன்; பரசுதும் - துதிப்போம்; நால்வகைக் கொள்கையர்-அரசர், அந்தணர், வைசியர், சூத்திரர்; மல்லல் - வளப்பம்; ஞெள்ளல் - வீதி; மங்கலம் - சுபம்; போகும் ஈரேழ் உலகும் - அடுக்கிய பதினான்கு உலகங்கள்; **உபேந்திரன்** :—அசுரரால் இந்திரனுக்குத் துன்பம் நேரிடாதவாறு திருமால் காசிப முனிவருக்குப் புத்திரராகத் தோன்றி இந்திரன் தம்பியாய் உபேந்திரன் எனப் பெயர் பெற்றுத் தேவேந்திரனுக் கருகிலேயே யிருக்க ஆரம்பித்தார். (9)

**213.** வேணி - சடை; உரக உபவீதம் - பாம்பாகிய பூணூல்; நேத்திரம் - கண்; காது மழு முள் பெரும் படை - கொல்லுகின்ற முட்போன்று கூர்மையான மழுவாயுதம்; பிச்சைகொள் கலம் - பிச்சை கொள்ளும் பாத்திரம்; பாணி - கை; வடுகன் - பைரவன்; பிரசமலர் - தாமரைமலர்; விச்சை - வித்தை; கற்றை - தொகுதி; அரந்தை - துன்பம்; அரந்தை யிடர் - ஒருபொருட் பன்மொழி; ஆரியன் - மேலானவன். (10)

**214.** அரும்மறைப்படை-அருமையான மறை ஆயுதம்; விடை-இடபம்; பிநாகம் - கண்ணுவமுனிவர் தவத்திலிருந்தபோது இவரைப் புற்று மூடி ஒரு மூங்கில் முளைத்தது. இதைப் பிரமன் மூன்று விற்களாக்கி காண்டீப மென்பதைத் தான் வைத்துக்கொண்டு, பிநாக மென்பதைச் சிவனுக்கும், சார்ங்க மென்பதைத் திருமாலுக்கும் கொடுத்தார். அரவு அடு மயூரம் - பாம்பைக் கொல்லுகின்ற மயில்; வயினதேயன்-கருடன்; வயநேமி-வெற்றியைக் கொடுக்கும் சக்கரம்; முடங்கு உளை மடங்கல்-மடங்குகின்ற பிடரிமயிர் உடைய சிங்கம்; உழுபடை - கலப்பை ஆயுதம்; உகைத்து-செலுத்தி; ஏந்திசை வராகி - தாங்கிய புகழமைந்த வராகி; குலிசம் - வச்சிராயுதம்; இபம் - யானை (ஐராவதம்); எறுழ் அலகை-வலிமை பொருந்திய பேய் வாகனம்; மூவிலை - மூன்று முனைகளையுடைய சூலாயுதம்; "கன்னல்.......... தாழைகளென":- கரும்பு பசிய பாக்கு மரத்தைப்போன்றும், பாக்கு மரங்கள் தென்னை மரங்களைப் போன்றும்; மருதக்கழனி-மருதநிலத்தைச்சேர்ந்த வயல்; மருதம் நால்வகை நிலத்தில் ஒன்று. (11)

**215.** விழிபெறு நுதற்றிற லுருத்திரர்கள்-நெற்றியில் கண்களைப் பெற்ற திறமை மிக்க உருத்திரர்கள்; மிடை இருள்-நெருங்கிய இருள்; ஆதித்தர் - சூரியர்; வினைப்பவக்கடல் - தீவினையாகிய பாவக்கடல்; ஆழாந்து - மூழ்கி; பைதலுறு - துன்பமுறுகின்ற; ஓம்பு - பாதுகா; அருளெனும் புணை - உருவகம்; பிரளயம் - யுகப்பிரளயம், அப்போது திருமால் ஆலிலைமேல் ஏழுலகையும் உண்டு வயிற்றிலடக்கி யோகநித்திரைசெய்து பிரளயம் அடங்கிய பிறகு உமிழ்வார். (12)

## செங்கீரைப்பருவம்

216. மேடம்-சித்திரைமாதம்; நவமி-நவமிதிதி; இகலுமொருசிறி தேனும் இன்றி - பகை கொஞ்சமுமின்றி; மேதக - மேன்மையாக; வீடு - கிரகவீடு; இந்து - சந்திரன்; ஆண்டளப்போன் - வியாழன்; ஐந்து கோள் - சூரியன், செவ்வாய், வியாழன், வெள்ளி, சனி ஆகிய 5-கிரகங்களும்; சேடு - நன்மை; மேவரும் - அடையமுடியாத; கடைசி அடி, "கற்றதனா லாய பயனென் கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்" என்ற குறளை ஞாபகப்படுத்துகிறது. விண்புலத்து அமரர் இன்மலர் மழை சொரிந்தார்ப்ப என்றுபிரிக்க; 28-வது சதுர்யுகத்தில் ஹேவிளம்பி வருஷம், சித்திரைமாதம், 11-ஆந் தேதி, புனர்பூச நட்சத்திரம், நவமிதிதியில் பகல் நாழி 11-விநாடி 59. ஸ்ரீராமச்சந்திரன் அவதாரம். (1)

<table>
<tr><td>சுக்கிரன்</td><td>ரவி,<br>புதன்</td><td></td><td>கேது</td></tr>
<tr><td rowspan="2"></td><td colspan="2" rowspan="4">ராசி<br>சக்கரம்</td><td>ல</td></tr>
<tr><td>குரு, திங்கள்</td></tr>
<tr><td rowspan="2">அங்காரகன்</td><td rowspan="2"></td></tr>
<tr></tr>
<tr><td>ராகு</td><td></td><td>சனி</td><td></td></tr>
</table>

217. எல்லாமென்பது "எலா" மெனத்தொக்கது; தாய்-கோசலை; இலக்கணம் - 32-இலக்ஷணங்கள்; குலகுரு-வசிட்டர்; உவகை-மகிழ்ச்சி;

விசும்பு - ஆகாயவுலகம்; புங்கவர் - தேவர்; புனகண - துன்பம்; மசல் மணி நிறத்துடன் உதித்து ஒளிர் இராகவ என்று பிரிக்க. செல்-மேகம்; மேகம் போன்ற அழகிய நிறத்துடன் பிறந்து பிரகாசிக்கும் இராகவன் என்று பொருள் கொள்க. (2)

218. வாரிசம்-தாமரை; சத்திரம்-குடை; குலிசம்-வச்சிராயுதம்; கேதனம் - கொடி; கும்பம் - குடம்; உழுபடை - கலப்பை; அகில உலகமும் ஓர்தனை அன்பொடு பணிந்துதங்கும் - எல்லா உலகத்தவரும் ஒப்பற்ற தன்னை யன்போடு பணிந்து தங்குவர்; இளந்திங்களின் வளர் இராகவா என்று முடிக்க; "இன்" ஐந்தாம் வேற்றுமை உவமப்பொருவு; உய்திபெற அருளினோடு தாங்கும் - அவர்கள் நற்கதியிலுய்ய தான் அருளினொடு அரசாட்சி செய்வான். (3)

219. சூழி-உச்சி; அவிர் மணிக்கடகம் - விளங்கும் முத்துக்கள் பதித்த கடகமென்னு மாபரணம்; துளும்ப + அணி-துளும்பணி, சொலிக்கும் ஆபரணங்கள்; வைத்து + அனை-வைத்தனை, "அனை" என்பது அன்னை என்பதன் தொகுத்தல்; பயோதரம் - தனம். (4)

220. பிரசம்-தேன்; தேனை யுண்டு கக்கி பறக்கும் வண்டுகள் என்க; நிதி - சங்கநிதி, பதுமநிதி என்பன; பயன்கெழு + செருத்தல் + நல் + ஆன் - பால் மிக்க மடியையுடைய நல்ல "காமதேனு" என்னும் பசு; ஐந்து தருக்கள், சங்கநிதி, பதுமநிதி, காமதேனு ஆகியன தேவர்கள் வேண்டியனவற்றை நிறைக்கின்றன. பரந்த + தமது - பரந்தமது, அகரம் தொகுத்தல் விகாரம்; எள்ளித்துறந்து - இகழ்ந்து கைவிட்டு; தனைச்சார்ந்து - இராமன் தன்னைச் சார்ந்து; தேவர்களும் தங்களது நாட்டை இகழ்ந்து இராமன் தன்னை அடைவதற்குரிய தந்திரம் யாதென்று நாடுமாறு அத்தகைய வளம்பொருந்திய அயோத்தி நகர், இரவி குல நிருபர் பலர் தோன்றி நல்லரசு செய்து சிறக்கும் புகழயோத்தி நகர் எனக் கூட்டுக. (5)

221. தமனிய மதினுறு தண்டை சிலம்பு சதங்கை-பொன்னாலாகிய தண்டையும் சிலம்பும் சதங்கையும்; தரளம் அமைந்த சுடிகை - முத்துக்கள் பதித்த நெற்றிச்சுட்டி; திமிரம் மிகும் - இருள் ஓட்டும் மிக்க; கண்டிகை - பதக்கம்; திவள் - துவள்கின்ற; திவளொளி- வினைத்தொகை; குழை - குண்டலம்; பமரம் - வண்டு; கர கமலம்-உருவகம்; மணிவளை-மாணிக்க வளையல்; பளகுஅறு-குற்றமற்ற; அரைவடம்-இடுப்பிலணியுமோராபரணம்; இடை - இடுப்பு. (6)

222. இமையவர் தமது அஞர் கிளேயோடும் நனிவாட-தேவர்கள் தமது துன்பத்தை உணர்ந்து சுற்றத்தோடு மிகவும் துன்பப்பட; கெழு தகை-தவவுரிமை; கிறி-வழி; இரிந்தோட-நீங்கிஓட; மறமிகு வினே-பாவம் மிகுந்த தீவினே; கடிது - விரைந்து; ஒளிமிக்க முடியணிந்த தேவர்கள் இராமனைப்போன்று ஒளி படைக்கவில்லேயே என்ற தமது துன்பத்தால் தமது சுற்றத்தோடும் வாடினர். இராமனுடைய ஒளியைக் கம்பர் கூறிய "வெய்யோனொளி தன் மேனியின் விரி சோதியின் மறைய" என்ற பாட்டால் உணரலாம். "முனிவர்கள்செய்கின்ற தவங்கள் முறையல்லாத வழிகளில் சென்று நலமடைய" என்று வருவது இராமனது அழகைக் காட்டிற்று. இதைக் கம்பர் "தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழல் கமலம் அன்ன, தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாரு மஃதே" என்ற பாட்டில்விரித்துக் கூறுகிறர். இராமனது அழகைக்கண்டு விரும்பிய முனிவர்கள் சீதையைப் போன்று தேவியாக வேண்டுமென்று கூறவும் அவ்வாசையை கண்ணுவதாரத்தில் மங்களன் எனும் இடையனுக்கிருந்த 5000-தேவியருக்குப் பல குமாரிகளாகப் பிறக்கச் செய்தார்; அவர்கள் காளிந்தி உபாசனையால் கண்ணன் தங்களேக்கூடக் களித்தனர். கோபிகைகள் பிறப்புப் பலவாறு கூறப்படுகிறது. (7)

223. பணிமுடி மிசைவளர் அவனி - ஆதிசேடனுகிய பாம்பின் தலேமேல் தங்கும் பூமி; நசை - விருப்பம்; தழைபெறு மகிழ்வெனும் நளினம் - இலேபெறுத மகிழ்ச்சி என்கின்ற தாமரை; தந்தையாகிய தசரதர் மிகுந்த ஆசைகொண்டு இராமனே வருகவென்று அழைக்க வேகமாகத் தவழும் தன்மையில் அடைந்து உயர்ந்த வலிமை வாய்ந்த திரண்ட புயமாகிய நீண்ட மலேயின்மேல் ஒப்பற்ற சிறிய மேகம் போன்று ஏறி காதுவழியாக குதலேச் சொற்களெனும் இன்சுவை மிகுந்த தெளிந்த வமிர்தத்தைப் பொழிந்து தணித்தலேயுடைய அவனது மனமாகிய ஒப்பற்ற குளத்தை நிரப்பி மிக்க மகிழ்ச்சியெனும் இலேபெறுத தாமரையை மலர்த்திடுகின்ற தன்மையில் விளேயாடும் இராகவா என்று முடிக்க. புயநெடுவரை, மழலேயெனும் அமுதம், உளமெனும் தடம், மகிழ்வெனும் தழைபெறு நளினம் ஆகியவை உருவகங்கள். (8)

224. வெஞ்சேனு - கொடியசேனே; பரார்த்தம்-ஆயிரங்கோடா கோடி; மைந்தாரும் கோப இராக்கதர் - வீரம்பொருந்திய கோபத்தையுடைய இராக்கதர்கள்; இனேந்து - வருந்தி; இனுத்துயர் உற்ற அகல் வானவர் - கீழ்மையான துன்பங்களே அடைந்த அகன்ற வானத்திலுள்ள தேவர்கள்; இன்னு என்பது இனு எனத்தொக்கது. கராப்பகை செற்றிட - கஜேந்திரனேப் பிடித்த முதலேயாகிய பகையழிய; மான் •

கருடனாகிய வாகனம்; கடாக்கரி-மதமொழுகும் கஜேந்திரனாகிய யானை; கடிது ஆள் உன் செந்தாள்-விரைந்து ஆளுகின்ற உனது சிவந்த பாதங்கள்; போத - அறிவுடையவனே; அராச்சயனம் - ஆதிசேடனாகிய படுக்கை; துயில்தீரிறை - யோக நித்திரையினின்று நீங்கி மனிதனாகப் பிறந்த கடவுளே. (9)

225. தென்கால் - தென்றற்காற்று; கைக்கொடு - கைக்கொண்டு; புடை முற்றிய மாதர் எனும்தார் - பக்கங்களில் மிகுந்த பெண்களாகிய சேனை; தார் - தூசிப்படை; நறுத்துளி கக்கிடும் அம்புயம் - தேன் துளிகளை வெளிப்படுத்துகின்ற தாமரை முதலிய ஐந்து மலரம்புகள்; காமன்-மன்மதன்; இருத்தகை - அழியாதவகை; மேதகு - மேன்மை பொருந்திய; உட்கு-அச்சம்; அருச்சுகம்-நீங்காத இன்பம் (மோட்சம்); தம்பால் நாடுநர் - தம்மிட மடைகின்றவர்; தம்மிடம் அடைகின்றவர் இல்லையாக மோட்சத்தைக் கொடுத்தருளு மிராகவனே என்று பொருள் கொள்க. (10)

---

## தாலப் பருவம்

---

226. ஓவாது - நீங்காது; காக்க என்று - காக்கென்று, அகரம் - தொகுத்தல்; அளிசேர் - அன்பு மிகுந்த; கவின்சால் பிணாத்திரள்கள்-அழகு மிகுந்த பெண் கூட்டங்கள்; பிணா என்பது விலங்கின் பெண்ணினத்தைக் குறிப்பினும் இங்குக் கவின்சால் பிணா என்றதனால் மனிதரைக் குறித்தது; மின்னினங்கள் களிசேர் உரு சிற்றிள முகில் - மின்னலின் கூட்டங்களோடு குளிர்ச்சி சேர்ந்த ஒப்பற்ற இளைய மேகம் நலத்தின் - நலத்தைப்போல; நண்ணாதவர் - பகைவர்; கண்மிச்சில் தனை - திருஷ்டியால் ஏற்படும் தோஷத்தை. (1)

227. நவிலுந் தடித்துக் கொடி தனதுள் - கூறிப் புகழும் கரிய மேகத்தால் தடித்துக் கிழக்குத் திசையில்; கூறிப் புகழும் கரிய மேகத்தால் தடித்துக் கிழக்குத் திசையில் நான்கு மூலைகளிலும் சேர்ந்து அடைந்து விளங்கும் இந்திர வில்லாகிய செல்வத்தில் விரும்பிச் சதுரமாய்ச் சூழ்வதற்குத் தவழுகின்ற ஒரு மேகமாகிய பசுங் குழந்தை அதற்கு நடுவிலேயிருக்கக் களிப்போடுகூடிய மயில் கூட்டங்கள் அம்மேகக் குழவியைப் பார்த்துச் சுற்றியிருத்தல் போலப் பொன் கயிற்றைத் தூக்கி (கட்டி), விளங்கும் பல மணிகள் பதித்த தொட்டிலில் ஒப்பற்ற இராகவன் தூங்க பல பெண்கள் கூடித் தொட்டிலாட்டித் துயில்செய்து மகிழ்ந்தனர். தொட்டிலகத்தில் - தொட்டிலின் உள்ளிடத்தில்; கண்வளர - தூங்க; அயில்கண் - வேல்போன்ற கண்; பீதம்-பொன்; வடம் - கயிறு; நாற்றி - கட்டி; மஞ்ஞை - மயில்.

228. மிடிசேர் - துன்பம் மிகுந்த; மலம் - ஆணவம், மாயை, கன்மம் என்ற மூம் மலங்கள்; துமித்து - அறுத்து; படிசேர் நடலைப் புலன் - அங்கத்திலமைந்த பொய்யான ஐம்பெரும் புலன்கள்; நடலை - பொய்; பைதலுறும் - துன்பப்படுத்தும்; என் போல்வார்க்கும் படர் தீர்த்து - என்னைப் போன்றவர்களுக்கும் துன்பத்தை நீக்கி; வடிசேர் தடங்கண் - கூர்மை பொருந்திய விசாலமான கண்; கடிசேர் அயோத்தி- காவல் மிகுந்த அயோத்தி. (3)

229. ஆவித்திரள்கள் - உயிர்க் கூட்டங்கள்; வினையளவில் - அவரவர்கள் செய்த தீவினை நல்வினை அளவிற்குத் தக்கவாறு; நுகர் வித்து-அனுபவிக்கச் செய்து; விருப்பும் வெறுப்பும் தீர்பருவம் விஞ்சும் திறஞ்சேர் சில உயிர்க்கு - விருப்பையும் வெறுப்பையும் நீங்கின முதிர் பருவத்தில் திறமை மிக்க சில உயிர்களுக்கு; மார்த்தாண்டன்-சூரியன்; மலத்திமிரம் - குற்றமாகிய இருள்; மதுவார் வண்டு-தேனை உண்ணும் வண்டு; விள்ளும் பருவம் - மலரும் காலம்; சில உயிர்க்கு மலத்திமிரம் மாற்றி எனக் கூட்டுக; "விள்ளும் பருவங்.........மார்த்தாண்டனைப் போல் - உவமை. (4)

230. எழு வகைய பவவாரி - ஏழு வகையான பிறப்பு என்னும் கடல்; பாசம் - மனைவி மக்கள் மேலுள்ள ஆசை; உழிதருவார் - சுழல்பவர்; புணை - தெப்பம்; மூதறிஞர் - பழைய அறிஞர்கள்; நை கரம் - துன்பம்; குழக - அழகுடையவனே; அதீதவாழ்வு - பரமபத வாழ்வு; அதீதம் - எல்லாவற்றையும் கடந்தது; பயில் கழகம் - வினைத் தொகை. (5)

231. போழாவற்ற-பிளந்துள்ள; போழ் + ஆ + அல் + ற் + அ = இதிலுள்ள "ஆ," "அல்" என்ற இரு எதிர் மறைகள் ஒருடன் பாட்டைக் குறித்தது. பனிக்கதிர் - குளிர்ந்த கிரணம்; மணி -மாணிக் கம்; பூவா - பூத்து; செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத் திரிந்தது; மாநாகப் போகார் சொக்கணை - பெரிய பாம்பாகிய (ஆதிசேடனுகிய) அடுக்குதலமைந்த அழகிய படுக்கை; பூவாழ் அம்மான்- தாமரையில் வசிக்கும் அழகிய இலக்குமி; வீழா மெய்ப்படு காவல் - விரும்பும் உண்மை பொருந்திய காவல்; வானுடர் மேலாம் அற்பு உடை- தேவர்கட்கு மேலான அன்பு உடைய; 'அன்பு', 'அற்பு' என வன் றொடராயிற்று; **சேனையர்கோன்** :—ஒருகாலத்துத் தூருவாசர் செய்த தருமத்தைக் கெடுக்க இந்திரன் குந்தளை யென்பவளை ஏவினன்; அவள் உடன்பட்டுச் சென்று நிற்கையில் முனிவர் கண்டு கோபித்து நீ வேடச்

சியாக எனச் சபித்தனர். இத்தேவ மகள் நடுங்கித் தீர்வு வேண்டினள். முனிவர் "உன்வயிற்றில் நற்குணமுள்ள மகன் பிறப்பான்; அப்போது நீங்கும்" என்றார். அப்படியே இவள் வீரவாகு என்னும் வேடனுக்குச் "சுவற்கலே" என்னும் பெயருடன் பிறந்து பத்திரன் என்போனை மணந்து ஒருநாள் நருமதையில் ஸ்நானஞ் செய்து மரத்தடியில் நின்றனள். இவளை வருணன் கண்டு கூடினன். இவளிடத்து அக்காலத்து விஷ்வக் சேனர் பிறந்து காசிபரிடம் கல்வி கற்றுத் தவத்தால் சேனைமுதலி யாயினர். சேனையர் கோன்பணி அவ்வுத்தம யோகியர் மேவா மாடே சூழா தேமலர் தூவா — சேனைமுதலியைப் பணிகின்ற அந்த வுத்தம யோகியர் அவ்விரை யடைந்து பக்கத்தில் சூழ்ந்து தேன் பொருந்திய மலர்களைத் தூவி; தோலா - குறையாத; மறை என்பது மாறை என நீட்டல் விகாரம் பெற்றது. தாழா - குறையாத; துயில்கூர்வது தீர் இறை - துயில்மிகுவதினின்று நீங்காத இறைவனே; சாகேதப்பதி - அயோத்தி நகரம்; வீழா, மேவா, சூழா, தூவா ஆகிய செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சங்கள் செய்து எனத் திரிந்தன. மாறை யென் பது மாமறை யென்றிருப்பின் நன்று. (6)

232. தீவாய் கண் கொடியோர் - நெருப்பிடம்போன்ற கண்களை யுடைய கொடியவர்கள்; ஏனுறு தீதால் நீடாமே - உயர்ந்த தீமைகள் அதிகரிக்காதவாறு; தோடுற-கூட்டத்தோடு பொருந்த; மா வாய்மைக்கு இசை மாமனு நீள்நெறி வாழாது ஏகாமே - சிறந்த உண்மைக்கு இருப்பிடமான மனுநெறி வாழாது செல்லாமல். தோடுற என்பது தேடுற என்றிருப்பின் நன்று. (7)

233. மாறு வீறு - மாறுபடாத பெருமை பொருந்தியவன்; மீவானுடர் - மேலுள்ள வானுலக தேவர்கள்; யாம் மாயா மெய்ச்சுக வாரியினூ டெழு வாகா-எமது கெடாத பேரின்பக் கடலின் மத்தியில் எழுகின்ற அழகனே; ஏகா - ஒப்பற்றவனே; மெய்ச்சுகம் - பேரின்பம்; சிற்றின்பம் நிலைத்திராததால் பொய்ச்சுகமாகும்; சூழ்மாலான் மிக்கு + உழல் + ஆணவநோய் - சூழ்ந்த மயக்கத்தால் மிகுந்து கஷ்டப்படுகிற ஆணவமலமாகிய துன்பம்; மாயா தூயா-மாயம் பொருந்தியவனே, பரிசுத்தமானவனே; கா + வீயார் மைக்குழல் - சோலையிலுள்ள வண்டு கள் தேனுக்காக வந்து பொருந்திய கரிய கூந்தல்; மாது + அருள் எனப்பிரிக்க; சீராள - சீர் + ஆளன் (சிறப்பை ஆள்பவன்); வேதா - பிரமன்; நாபிய - உந்திக்கமலத்தை யுடையவன்; ஆரணமேலா - வேதத்திற்கு மப்பாற் பட்டவனே; வீழ் தாய் - விருப்ப மிகுந்த தாய்; கடவுளை ஆணுகவும் பெண்ணுகவும் சொல்வர், "அம்மையே அப்பா ஒப்பிலா மணியே" என்பது காண்க. (8)

234. தேறல் - எச்சிலாகிய தேன்; உளம் + இருள் + சிந்தும் - மனதிலுள்ள அஞ்ஞானமாகிய இருளைக் கொல்லும்; ஒழுகுற மூடும் மேனி, இருள் சிந்தும் மேனி எனக்கூட்டுக; உள் + கருதி - மனதில் நினைத்து; மேனி - உடல்; தலையசைக்கும் தன்மையில் காட்டும் ஒளியைப் பார்த்து; பாரா - செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத்திரிந்தது; கதிர் முடி உம்பர் - ஒளிவாய்ந்த கிரீடங்களையணிந்த தேவர்; நனி, கூர் - உரிச்சொற்கள் மிகுதிப் பொருளைக் காட்டின. சரதன் - உண்மையையுடையவன்; தசரதன் + நன் + மைந்த எனப்பிரிக்க; சரதம் - உண்மை; கைவிரலைச் சப்புவதாலுண்டான சுவை மிகுந்த தன்மையுடைய வாயினின் றொழுகும் தேன்போன்ற எச்சில் உடலை மூடவும் மனதின் அஞ்ஞான விருளை யொழிக்கவும் உள்ள உனது உடலின் பிரகாசத்தை மனதில் கருதி ஆச்சரியப்பட்டுத் தலையை யசைக்கின்ற தன்மையைக் காட்டுவதனாலுண்டான **ஒளியைக்கண்டும்** ஒளிவாய்ந்த கிரீடங்களையுடைய தேவர்களும் அறிவதற்கு அருமையான தாமரை மலர் போன்ற பாதங்களைத் தூக்கி உதைத்துக் கொண்டும், புன்சிரிப்புக் கொண்டு வளரும் **திறத்தைக்கண்டும்** கௌசலை மகிழ்ச்சி மிகும் தேவ எனக்கூட்டுக. (9)

235. மதுமலர் பம்பும் - தேன் பொருந்திய மலர்கள் நிரம்பிய; சினை - கிளை; வண்டு + ஆர் + பொழில் - வண்டுகள் நிறைந்த சோலை; வயம் - வீரம்; அவி - அவிர்ப்பாகம், அசுவமேதயாகம் செய்வதைக் குறித்தது; புரிசெயல் + தானும் - என்று பிரிக்க; மூவா - கெடாத; மாவாய்மை - சிறந்த உண்மை; ஒளி காலும் விதுமுகம் - தண்ணொளி விடும் சந்திரன் போன்ற முகம்; மின்னார்-மின்னலையொத்த பெண்கள்; நிறைவலி - கற்பின் வலிமை; மின்கார் மதிதோறும் -மின்னலையுடைய மேகம் மாதந்தோறும்; மும்மை - மூன்று; மறையோர்கள் நற்செயலினும், மன்னர் செங்கோன் முறைமையினும், பெண்களது கற்பின் வலியாலும் மேகம் மாதத்திற்கு மூன்று மழை பொழியும் கோசல நாடு என்க. இது விவேக சிந்தாமணியில் "வேதமோதிடும் வேதியர்க்கோர் மழை...............மாதமூன்று மழையெனப் பெய்யுமே" எனக்கூறப் பட்டிருத்தல் காண்க. முதுமறைநாம - பழைய வேதங்களால் புகழப் பட்டவனே; நாமன் - கீர்த்திவாய்ந்தவன். (10)

# சப்பாணிப்பருவம்

---

236. கண் + அகல் + ஞனந்தலை + தாத்திரி - இடமகன்ற உச்சியை யுடையபூமி ; கால்சீத்திடும்-இருளை யகற்றிடும் ; சேடு + இளமை + கதிர வன் எனப் பிரிக்க ; சேடு-அழகு ; முள் + அரை + வாரிசம் - முட்களை இடையிலேயுடைய தாமரை ; உள் + நறவினை + தெவிட்டுற + உண்டு என்க. நறவு - தேன் ; உண்டு + யாம்-உண்டியாம், குற்றியலிகரம் ; சஞ்ச ரிகம்-வண்டு; மல்கு + அருள்-பெருகிய அருள்; அறல் + குண்டு + வாவி- நீரையுடைய ஆழமான குளம் ; வண்டுகள் மதுவுண்ட மயக்கத்தால் தாமரைமலரில் தூங்கிவிட இரவு வந்ததும் மூடிக்கொள்ள, மறு நாள் சூரியனுதிக்கும்போது வண்டுகள் விரைந்து எழுந்து மறுபடி மூடுமோ என்ற பயத்தால் ஓடிவிடுவதற்காக தாமரை மலர்வதைப் போன்று இராமனது திருவடிவத்தின் காட்சியால் மெய்யன்பர் மனமா கிய தாமரையினின்று குற்றமாகிய இருள் ஓட என்று கொள்க. இராமன் வடிவத்திற்குச் சூரியனும், மெய்யன்பர் மனத்திற்குத் தாமரையும் மலத்திமிரத்திற்கு வண்டுகளும் உவமைகளாகக் கூறப்பட்டன. மலர்தல் நிகர் மல்கு அருளின் தீஞ்சுவை எம்பிரான் என்று கூட்டுக ; அறல் குண்டு வாவியொடு முகில் உரிஞ்சும் பொழில் என்க. வாவி - குளநீர் சத்திய + ஆநந்த - சத்தியாநந்த ; சத்தியத்தையே மகிழ்ச்சியாகக் கொண்டவன். (1)

237. பந்தமறு மாதவர் - ஆசையைவிட்ட முனிவர் ; கிரி - மலை ; 'இன்' என்ற ஐந்தாம் வேற்றுமை உருபு உறழ் பொருவு ; பழுவம் - காடு ; புற்றும் + மரவடிவமாய் என்க ; வான்மீக முனிவர் தவஞ்செய்யும் போது புற்று மூடி மரம் முளைத்தது என்று புராணம் கூறுகிறது ; படிவ நோன்பு - ஒருபொருட் பன்மொழி ; நோன்பு - விரதம் ; எந்த மறு அற்றிட - எத்தகைய குற்றங்களும் நீங்கிட ; உளது இணை அடி என்க ; ஆனந்தவாரி-களிப்புக்கடல் ; யாங்கவரெலாம் நோன்பாற்றியும் மாதவர் காண்பரிய அடியை யெய்தி, நின் தந்தையெதிர் அண்மி நோக்கி ஓகை கூற என முடிக்க ; அண்மி-நெருங்கி ; மறுகு-வீதி ; ஓகை-மகிழ்ச்சி. (2)

238. விண்தலை அளிக்கும் ஆகண்டலன்-விண்ணிடத்தைப் பாது காக்கும் இந்திரன் ; முதற்று + அல்கு + கொள்—முதலாக நுணக்குக் கொண்ட (முப்பத்து மூன்றுகோடி); விபுதர்-தேவர்; நறுஞ்சுவைய நரை- திரை மூப்பு மேவாத அமிழ்தம் எடுத்துதவிய எனக்கூட்டுக; கொண்டல்-

மேகம்போன்ற நிறத்தவன் (இராமன்); நன்று + உவர்க்கடல் + மேய்ந்து -நன்மை பொருந்திய உப்புக்கடலில் தண்ணீர் குடித்து; கொண்மூ விரும்பும் கொண்டல் - ஆகாயத்தை விரும்பி இடமாகக் கொள்ளும் மேகம்; வண்டலை எடுத்தெறியும் அமுத வீரைக்கண்-மகளிர் விளையாடும் சிறுவீட்டை அலைகளால் எடுத்தெறியும் பாற்கடலினிடம்; விழிவளர் தனித்து - யோகநித்திரை செய்வதை விட்டு நீங்கி; வயின் - ஏழாம் வேற்றுமை உருபு; களைகண் - துன்பம்; தண்டலை - சோலை; உதவிய கொண்டலைக் காண்பமென கொண்மூ விரும்பும் கொண்டல் இங்கர் வயின் தண்டலையின் மீதுற்று வளர்திறமது எண்ணி மாரிபொழி கொள்கையோடு முத்துயிர்க்கும் அயோத்திநகர் என்க. (3)

**239.** துப்பார் நெடுந்திரை சுருட்டும் பயோததி-பவளங்கள் பொருந்திய நீண்டஅலைகள் மடங்கும் பாற்கடல்; ஈர்ங்கவுள் வேழ வேந்து-குளிர்ந்த மதச்சுவட்டையுடைய யானைகளின் அரசன், (கஜேந்திரன்); மிளிராழி - விளங்கும் சக்கரம்; ஐம்பருவம் - ஐந்து வயது; பாஞ்சசன்னியம் - திருமாலின் சக்கரம்; கபோலம் - கழுத்தின் பாகம்; நீவி - தடவி; கரகம் - கெண்டிகை; வெரீஇ - அஞ்சி; கஞ்சப் பாணி-தாமரை போன்ற கை; தேவருக்குப் பகுத்தும், கஜேந்திரனது துன்பத்தை நீக்க சக்கரத்தைத் தொட்டும், துருவனுக்குப் பாஞ்சசன்யம் என்ற சங்கைக் கொண்டு கழுத்தின் பாகத்தைத்தடவியும், மாபலியின் மூவடி மண் தானத்தைத் தாரையாக ஏற்றும் அஞ்சி அபயம் என்று அடைந்தவர்களுக்கு அபயம் கொடுத்தும் ஒளிர்கின்ற தாமரைபோன்ற கையினால் சப்பாணிகொட்டுவாயாக என்று முடிக்க; ஆக்கு கரகம்-வினைத்தொகை. (4)

**240.** தொன்மை-பழைமை; உட்கினோடு - பய உணர்ச்சியால்; வனசபீடம் - தாமரை ஆசனம்; ஒரீஇ - நீக்கி; விண்ணுலகின் - விண்ணுலகைக் காட்டிலும்; நரர்களில் சிறந்தோராம் நாடுறின் எனப்புகலும் உருமூன்றும் ஒன்றாய் - மனிதர்களில் சிறந்தவர்களைத் தேடி அடைந்ததைப்போன்று சொல்லும் சிவன், பிரம்மன், திருமால் ஆகிய மூன்று வடிவங்களும் ஒன்றாய்; ஞாயில்மதில் - உறுப்புக்களோடு கூடிய மதில்; கைலைமலையிலிருந்தால் அச்சத்தினால் தனது தூயவடிவம் வெளுக்கவும் பல இதழ்களுள்ள தாமரைப் பீடத்திலிருந்தால் கண்ணிலிருந்து நீர் துளிக்கவும், பாற்கடலிலிருந்தால் அலைகள் இரைவதனால் இராப்பகல் தூங்காமல் இருக்கவும் நேருமாதலால் அம்மூன்று இடத்தையும் விட்டு அயோத்தியில் வந்து பிறந்தார். (5)

**241.** 'மொழிநிலைமைக்கு இசை மெய்த்தேவ'-எனப்பிரிக்க; ஆகுலம் அறமிமிர் - துன்பம் முழுதும் ஓடும்; பாதக வெயில் விளை ஆகுலம் -

பாபமாகிய வெயிலினால் விளைந்த துன்பம்; பொன்தார் - அழகிய மாலை; பாரோடு ககனமும் நீண்டது-திருவிக்ரமவதாரத்தில்; கோதரும் அருள் - குற்றமற்ற அருள்; நன்மை+தாய் - நற்றாய்; வீசுஅலை - வீசுகின்ற அலைகளையுடைய பாற்கடல். (6)

242. உணர்வமை சேடன் - அறிவுள்ள ஆதிசேடன்; மெய்ப் பேர - உண்மைப் பொருளை உணர்த்தும் பெயர்களை உடையவனே; சிற்குணன் - கடவுள்; பெட்புடை - அன்புடைய; சற்போத - நல்ல ஞானமுடையவனே; உளமுறல் பெற்ற - மனதில் அடையப்பெற்ற; மலர்ப்பாத - தாமரைபோன்ற பாதத்தை உடையவனே; எமது அகம் மூடு இருள் - எமது மனத்தை மூடிய அஞ்ஞான இருள்; பானு - சூரியன்; வசு - பசுங்கன்று; எழில்தேனு - அழகையுடைய பசு; கோடுறு கரி - கஜேந்திரன். (7)

243. சேமம் அளவிய - சேமளவிய என்று வந்தது, இன்பம் நிறைந்த என்று பொருள்; தரு வான் நகரம் - ஐந்தருக்களையுடைய ஆகாயத்திலுள்ள அமராவதி; ஒளிர்தட்ப வளத்து ஓவில் சேடுறு மலர்விதி வாழுலகு - பிரகாசமும் குளிர்ச்சியுமுடைய வளங்களில் குறைவில்லாத அழகுடைய தாமரை மலரில் உள்ள பிரமன் வாழுமுலகான சத்தியலோகம்; வடதிக்கின் நயச்சீரதாம் அளகை - வடக்குத் திக்கிலுள்ள இன்பமும் சிறப்புமமைந்த குபேரனது பட்டணமான அளகாபுரி; அற்பினர் - அன்பையுடைய அடியார்கள்; நச்சாது - விரும்பாது; தாம் அளவறு புகழ் நீள்கதிபெற - அடியவர்தாம் அளவற்றபுகழ் வாய்ந்த உயர்ந்த மோட்சத்தைப் பெற; அருள் தத்துவ என்று பிரிக்க; சுதன் - மகன்; சாமளம் - பச்சை; திருமால் பச்சை நிறத்தவன் என்பர். "பச்சைமா மலைபோல்மேனி" என்ற பாட்டைக் காண்க; உனது பாதத்தை நினைக்கும் பக்தர்கள் அமராவதியையும், சத்திய உலகையும், அளகாபுரியையும் குற்றமுள்ள ஒரு பொருள் என்று மனதில் சிறிதும் விரும்பாது அவர்கள் அளவற்ற புகழ்வாய்ந்த மோட்சத்தைப் பெற விரும்ப அதைக் கொடுக்கின்ற தத்துவன் என்று முடிக்க. (8)

244. இறைத்துயர் - கொடியதுன்பம்; ஓவுறு - வருந்தும்; ஏதம் இச்சையின் - குற்றமாகிய ஆசையினால்; மெய்ப்போத அக்கமதால் - உண்மையான ஞானக்கண்ணால்; உட்கொளலுற்றோர் - மனதிலிருத்துபவர்கள்; உள் - மனம்; மட்டறுசீர்த்தி - அளவற்ற சிறப்பு; வருந்தும் மிகுந்த கொடிய துன்பத்தினால் நற்செயலைவிட்டுக் குற்றமாகிய ஆசைமிகும் பாபம் அதிகம் செய்யாத ஞானக்கண்ணினால் எல்லாருக்

கும் மேலானவனுன உன்னைத் தினமும் அன்போடும் பயபக்தியோடும் ஆராய்ந்து உன் நாமத்தை மனதிலிருத்திக்கொள்வோரை மேகம் சூழ்ந்த மலைபோல் சமமாய் இன்பம் அடைதற்கு அருமை உடைத்தான எல்லையில்லாத சிறப்புக்களின் உயர்ந்தமுத்தி வழியைக் கொடுக்கும் பாதங்களை யுடையவனே என்க; புர அதிபன் - புராதிபன்; ஏர் - இன்பம். (9)

245. முத்திடு தார்க்குடை - முத்து மாலைகள் பொருந்திய வெண் கொற்றக்குடை; மேல் நிழல் உற்றிட மொய்த்தார் - தங்கள்மேல் நிழல் தங்குமாறு நெருங்கின அரசர்கள்; முட்டு அருவாட்படை - துன் பத்தை நீக்கும் வாளாயுதம்; முக்கிய முன்சார - முக்கியமானவைகளை முன்புறம் அடைவிக்க; உய்த்து இபமேற்படர் போகம்-செலுத்தி யானை மேல் செல்லும் இன்பம்; மைக்குழலுற்றுரை உள்படு வேட்கையராக மருட்டு உடலில் சீரும் - கரியகூந்தலை உடைய பெண்களை மனதில் கொள்ளும் ஆசையுடையவராக மருட்டும் அவர்களது உடலின் சிறப்பை யும்; பொய்த்து அழி ஆற்றின் ஒறுத்தனர் பற்றிடு பொற்பாத - பொய்த்து அழிகின்ற வழியினால் வெறுத்துப் பற்றிடும் அழகிய பாதனே; புத்தமுது ஏய்த்திட யாழ் இசை மிக்கு அதிர் பொற் பாரும் சத்த அயோத்தி - புதிய அமுதத்தை ஒத்த இனிய யாழின் இசை மிகுந்து, அதிர்கின்ற சத்தத்தையும் அழகையு முடைய அயோத்தி; தார்க்குடை மொய்த்தார் இபமேற் படர் போகமும் பெண்களின் உடலழகின் சிறப்பும் பொய்த்து அழியும் தன்மை யுடையது என்று வெறுத்து நீக்கி உன்னையே துணையாகப் பற்றிடும் பாதங்களையுடையவனே என்று முடிபு கொள்க. ஒறுத்தனர் - முற் றெச்சம். (10)

---

# முத்தப்பருவம்

---

246. புள் - பறவை; சிந்து - நீர்; மருளில் தாவுறும் உயிர்த் திரள் - வினை மயக்கத்தால் தக்கவாறு அடையும் உயிர்க்கூட்டங்கள்; கரணம்-அந்தக்கரணம் நான்கு; வினைமாசு தீர-தீவினையாகிய குற்றம் நீங்க; பூவலர் அடித்துணை துணையென்று - அழகிய தாமரைபோன்ற இரண்டு பாதங்களை பற்றிக்கொள்ளும் துணையென்று; பொங்கு பேருவகை - மிக்க மகிழ்ச்சி; கண் தண்ணெனத் தெரிபுறத்தினும் - கண்குளிரத் தெரியுமாறு வெளியிலும்; ஆளவரும் முத்தமே - ஆளவரு கின்ற முத்துமணி போன்றவனே; புண்ணியர் மனத்தில் காணுவதே யல்லாமல் ஊனக்கண்ணால் புறத்தில் காணவும் அயோத்தி நகரில் பிறந்த ஒருவன் என்று முடிக்க. (1)

247. வேனில் - கோடைக்காலம்; வேவுகானலை ஆறல் - வெப்பத்தைக் கொடுக்கின்ற கானலை நீரென்று; வெஃகி - விரும்பி; சகம் மாயம் இச்சைபடு வாழ்வு - பூமியிலுள்ள மாயமான ஆசைபொருந்திய வாழ்க்கை; ஊனில் உழல்பவர் - உடலோடு வருந்துபவர்; உன்பெயர் இரண்டெழுத்து - 'ராம' என்னும் தாரக மந்திரம்; ஒருங்கியவுளம் - ஐம்பொறிகளும் ஒன்று சேர்ந்த மனம்; ஒருசிலை - ஒருகல்; துருமம் - மரம்; வீடாத - அழியாத; பானல் - கடல்; உரி - மரப்பட்டை; இவர் காட்டிற்குச் செல்லும்போது மரப்பட்டையிலாம் உடையை உடுத்தியதை யறிக. கோடைக் காலத்தின் நண்பகலில் சுடுகின்ற பாலைநிலத்தில் வெப்பம் பொருந்திய கானலை நீரென்று விரும்பி இளைய மான் உண்ணுவதற்கு விரைந்ததைப்போல பூமியில் மாயமான ஆசைபொருந்திய வாழ்வை விரும்பி உடலோடு கஷ்டப்படுபவராயினும் உன்னுடைய இரண்டெழுத்துப் பெயராகிய 'ராம' என்பதை ஒன்று சேர்ந்த மனத்தோடு ஒருமுறை சொன்னாலே பலகோடி பாபங்கள் ஒரு கல்லெடுத்து வீசிய அளவில் காட்டில் பொருந்திய மரத்திலடைந்த பறவைக் கூட்டங்கள் ஓடுவதைப்போன்று பாவக்கூட்டங்களெல்லாம் ஓட வேதங்களெல்லாம் துதிக்கும் அழியாத நல்ல மோட்சத்தில் கலப்பதற்கு அருள்புரிகின்ற கருணைச்செல்வமே என்று முடிக்க; கடுப்ப், ஆங்கு - உவம உருபுகள்; அக்கணம், இதிலுள்ள அ என்ற சுட்டு, பாவகோடிகளைக் குறித்தது. (2)

248. கோடுவளர் ஓதிமத்தில் கீர்த்தலங்குசீர் - சிகரங்கள் பெருகுகின்ற மலையைக்காட்டிலும் கீர்த்தி விளங்கும் சிறப்பையுடைய; அருந்தவம் உழந்து - கொடிய தவத்தைக் கஷ்டத்தோடு செய்து; குலிசன் - வச்சிரப்படையுடைய இந்திரன்; குறியாது - கருதாது; நூழில்செய்து-பகைவரைக்கொன்று,வேலைச் சுழற்றியாடும் ஒருகூத்து; மாட்சிபெறு கொள்கையர்கள் - தவமுனிவர்கள்; தாத்திரி - பூமி; தவநெறிபுகா மாந்தர் - இல்லறத்தோர்; பீடுவளர் கவிகைமகன் வாதியொடு ஆக்கி இவர் பிரிவிலாது ஆட்சிமுறையில் பெருநூல் அவ்விஞ்சைபயில் கழகம் - பெருமைமிக்க வெண்கொற்றக் குடையையுடைய வாசன், புலமையோர் நால்வருள் வாதில் ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டிப் பிறர்கோள் மறுத்துத் தன்கொள்கையை நிலைநிறுத்துபவரோடு சேர்ந்து இவர் பிரியவொட்டாமல் செய்யும் ஆட்சிமுறையில் பெரிய நூலாகிய அவ்வித்தையைப் பழகும் சங்கம்; மூன்றாவது அடிக்கு மூலத்தின்படி பொருள்காண எவ்வகைக் கண்டும் பயன்படவில்லை. வல்லாரறிக. (3)

**249.** காணத்திலுறு திலமென - செக்கிலிட்ட எள்போன்று; கருப்பாசையின் கட்டவிழ்ந்து அறவருந்தி - அரிய ஆசையாகிய பந்தம் அவிழ்ந்து மிகவும் வருந்தி; கைதவம் - வஞ்சனை; காதல் ஐம்பொறி கலங்கி - ஆசையினால் ஐந்து பொறிகளும் கலக்கங்கொண்டு; மருள் மரிப்பின் - மயக்கங்கொண்டு சாவதில்; கடுவென - விஷம்போன்று; வெருக்கொண்டு - அச்சங்கொண்டு; ஆணம் - அன்பு; பாண்நற சுரும்பு அடர் - இசைப்பாட்டோடு தேனுக்காக வண்டுகள் நெருங்குகின்ற; "ஒருமொழி மூவழிக்குறைதலும் அனைத்தே" என்ற சூத்திரத்தால் நற என்று நின்றது; அடிகள் + நின் - அடிகணின். (4)

**250.** புற்புதம் - குமிழி; கொண்மூ - மேகம்; நீல்நிறம் - கறுப்பு நிறம்; சூரில் உறு இப்புலால் யாக்கை - துன்பத்திலுற்ற இந்த மாமிசம் பொருந்திய உடல்; பொறியிலார் - அறிவில்லாதவர்; அடியர் நோன்முட்கு - அடியார்களுக்கான பணிவிடை செய்யும் வலிய முயற்சிகளுக்கு; மூவன்பு - தலையன்பு, இடையன்பு, கடையன்பு என்ற மூன்று அன்பு. ஒழுகுவார் - வினையாலணையும் பெயர்; மலத் திமிரம் - குற்றமாகிய இருள்; அற - நீங்க. (5)

**251.** கருமம் முற்றும் இவனது எனவும் - செய்யும் வேலைகள் எல்லாம் இவனுடையதே என்றும்; அணங்கனையார் இன்பே - தெய்வப் பெண்களைப்போன்ற பெண்களது சிற்றின்பமே; அறையும் கொடிய புன்சமயம் - சொல்லும் கொடிய அற்பக் கருத்துக்களைக் கொண்டுள்ள மதம், (உலோகாயத மதம்); அளறு - சேறு; ஊற்றுக்கோல் - ஊன்றுகோல், மென்தொடர் வன்தொடரானது; பவநோய் - பாவமாகிய துன்பம்; ஓங்காரம் - ஓம் என்னும் மந்திரம்; கறையில் புகழ் - களங்கமில்லாத புகழ். (6)

**252.** மனை ஆதியர் - மனைவியை முதலாகக் கொண்டுள்ள பெண்கள், பிள்ளைகள் முதலானோர்; தரங்கவாரி - அலையையுடைய கடல்; திரணம் - செத்தை; திரவும் என்பது திரவம் என இருந்திருக்கவேண்டும்; திரவம் - நீர்மேல் குமிழி ஒத்தது. முதுக்குறைவு - பேரறிவு; கழல் - வீரரணியும் ஆபரணம்; கழல் - வீரக்கழல்; மறுகு - வீதி. (7)

**253.** முயக்கில் அலைப்புண்டு - தழுவுதலில் வருந்தி; மறி - மான் குட்டி; மயிடப்போத்து - எருமைக்கிடா; கூற்றன் - எமன்; உருமுக் குரல் - இடிபோன்ற குரல்; கிளைஞர் - சுற்றத்தார்; அவத்தில் கவரப் படுகின்ற அமையத்தேனும் - கெடுதியான மரணத்தில் பாசம் வீசி உயிரைக் கவருகின்ற சமயத்திலாகிலும்; கஞ்சத்தடம் - தாமரை பொருந்திய குளம். (8)

254. வாலுளை கைக்களிறு - மிகுதியான பிடரி மயிருடைய சிங்கமும் தும்பிக்கையையுடைய ஆண் யானையும்; உளை சினையாகுபெயர்; பைத்துஅடர் பொச்சை-பசுமை நெருங்கின காடு; பொற்புமை நற்றவன் - வால்மீகி; ஏண் உறு-உயர்ச்சியடைந்த; கமலத்தவன் - பிரமன்; கல்தரு ஆதி உருக்குறுயாழ் - கல்லையும், மரங்களையும் தன் இசையினால் உருக்கும்படியான யாழ்; கற்ற முனிக்கரசர்-நாரதர்; கைப்பு அற ஓதிய மிக்கு ஒளிர் நீள்சுவை கக்குறு மிக்க புகழ் - கசப்பு நீங்கச் சொல்லப்பட்ட மிகுந்து ஒளிர்கின்ற உயர்ந்த இன்பம் வெளிப்படுத்தி யடைந்த மிக்க புகழ்; **வான்மீகி :**—இவர் பிறப்பால் வேதியர்; ஒழுக்கம் குன்றி வேடருடன் கூடிக் களவுசெய்து வாழ்ந்து வருகையில் ஒருநாள் ஒரு முனிவரை வழிமறித்துப் பறிக்க, அப்போது முனிவர் இவரிடம், "நீர் செய்யும் பாபத்தொழில் உமது வருவாயால் ஜீவிக்கும் உமது இல்லோர்க்கும் உண்டோவெனக் கேட்டு வருக" என ஏவ, அவ்வாறு சென்று கேட்கையில் அவர்கள் மறுக்கக் கேட்டு, முனிவரிடம் கூறி, மயங்கி நிற்கையில், முனிவர் எதிரிலிருந்த மராமரத்தின் பெயரைக் கூறச் சொல்லிப் போயினர். கள்வர் அவ்வாறேயிருந்து நெடுநாள் செபிக்க, மேல் ஒரு புற்று மூடியது. சிலநாள் பொறுத்துப் புற்றிலிருந்து வெளிப்படுகையில், வேடன் ஒருவன் கிரவுஞ்சப் பட்சிகளைக் கொல்லவர அதைக்கண்டு சினந்து சாபமிட அச்சாபம் சுலோகரூபமாக வெளிப்பட்டு இராம காதையாயிற்று; பற்பல தீமை - இங்குக் கொலை, களவு முதலிய தீமைகளைக் குறித்தது. (9)

255. மல் பொலி மாமணி - திண்மையமைந்த மாணிக்கங்கள் பணுடவி - படங்களின் கூட்டம்; கடல்புவி - கடலால் சூழப்பட்ட பூமி; மட்டுஅற வெங்காவுற்று இமிழ் ஓது வற்களை முற்றும் மறை சொற்பொலி யோகியர் - எல்லையாக நீங்க கொடிய காட்டையடைந்து இனிமை மிகுந்த மரவுரியை முழுவதும் அணிந்து வேதச் சொற்கள் பொலியும் தவயோகியர்; அருள் நூல் நெறி என்று பிரிக்க; சொற்றதும் - சொன்னதும்; கனிகொட்கும் உளம் - மிகுதியும் சுழலும் மனம்; விற்பொலிதாள் - வில்லின் ஒரு குதை விளங்குகின்ற பாதம்; அடுத்தவர் - அடைக்கலமாகச் சேர்ந்தவர்; யோகியருக்கு அருள் நூல் நெறி சொன்னதும் துஷ்டர்களால் வருந்திய தேவர் உனது பாதங்களில் சரணமடைய அவர்கள் தீமை நீங்க யாம் இராமனாக மற்ற மூவருடன் தோன்றி உம் குறையைத்தீர்க்கின்றோம் என்று மெய்ச்சொல் உரைத்ததுமான அழகு மிக்க சிறப்புடைய வாய் கொண்டு முத்தம் கொடுத்தருள் என்று முடிக்க; முப்புகை போயவர்-மண், பெண், பொன் என்ற மூவாசைகளினின்று நீங்கியவர்; 'மெய்ச்சொல் உரைத்தது எனும் மிக்கு அமைசீர் உடை நல் திருவாய்' எனப் பிரிக்க; எனும் - என்று கூறப்படும். (10)

**256.** வசுந்தரை - பூமி ; ஆவித்திரள்-உயிர்க்கூட்டங்கள் ; அங்கு ஆக்க ஆறு உறி-ஆங்கு (அவர்கள் கருத்தில்) படைத்தவிதம் அடைகின்றாய் ; பொருவுஉயர் இகந்து - ஒப்பு உயர்வு நீங்கி ; இகலுறு—மாறுபாடுகொண்ட ; உறு + இ - உறி, முன்னிலை வினைமுற்று. (1)

**257.** ஓதுமவை - சொல்லப்படுகின்ற உலகங்கள் ; உரிமையின் ஒடுங்கப்படுதல் - பிரளயகாலத்தில் உண்டு ஆலிலையிலிருத்தல் ; உருவு - வடிவம்; அலகுஅறு-அளவில்லாத; அமலன்-குற்றமற்றவன் ; அச்சுதன்-அழிவில்லாதவன்; அனகன்-பாவமில்லாதவன்; ஐம்புலவேடர்-உருவகம்; களைகண் - உதவுபவன் ; அறிதுயில் - யோகநித்திரை ; பரப்பிரமம் - கடவுள். (2)

**258.** கணப்போது - ஒரு விநாடிநேரம்; இரும்பு கொல்லோ கருஞ்சிலைகொல் என்று பிரிக்க ; சிலை - கல் ; மறலி - எமன் ; வாய்மை நன்னிலை அறம் தன்னமும்-உண்மை நல்ல நிலையாகிய தருமம் ஆகியவை சிறிதும் ; இழைத்து - செய்து ; நிகமம் - வேதம். (3)

**259.** மதுகை - வலிமை ; உலகினுக்கு ஒரு கடவுள் தானென புகல்விக்கும் ஓர் தந்தை என்று பிரிக்க ; இங்குத் தந்தை என்றது இரணியனைக் குறித்தது ; நெடுஞ்சயிலம் - நீண்டமலை ; அடல்கூர் மாசுணம் - கொல்லுவதில் விஷம் மிக்க பாம்பு ; பொங்கு சிகை அழல் - மேல்மேல் வருகின்ற உச்சியையுடைய நெருப்பு ; வேழம்-யானை ; முயலும் எல்லை-முயலும் சமயத்தில் ; 'ஓம்அரி புராதன நாராயண' என்று பிரிக்க ; **பிரகலாதனன் :—** இவன் இரண்யனுக்கும் லீலாவதிக்கும் பிறந்தவன். கருவிலிருக்குபோதே நாரதரால் லீலாவதிக்கு உபதேசிக்கும்போது நாராயணமந்திரத்தை அறிந்தவன். இளமையில் சுக்கிரன் புத்திரனாகிய சண்டனிடத்தில் கல்விகற்க தந்தையால் ஏவப்பெற்றபோது 'இரண்யாய நம'வென்று ஆசிரியர் சொல்ல இவன் 'அரி ஓம் நம'வென்று கூறினன். இதைத் தந்தைக்கு அறிவிக்கவும் அரசன் மைந்தனிடத்தில் கோபித்து மலைமேல் ஏற்றித்தள்ளியும் ஆயுதம் முதலியவைகளைப் பிரயோகித்தும், பாம்புகளைக் கொண்டு கடிக்கச்செய்தும், அக்கினியில் தள்ளியும், மதயானையை மேல் ஏவியும் கொல்லுவதற்கு முயல பிரகலாதனன் அரிநாமம் உச்சரித்துப் பயமின்றி இருந்தான். இதைக்கண்ட அசுரன் கோபித்து "உன்தேவன் எங்கிருக்கிறான்" என்று கேட்டு "இத்தூணில் இருப்பானா?" என்று கேட்க குமரன் 'ஆம்' என அரசன் அதை உதைக்கத் தூணிலிருந்து வெளிவந்த நரசிங்கத் திருவுருவை அவனுக்குக் காட்டித் தந்தையின் உயிரைப் போக்குவித்தான். (4)

**260.** மாவலி - ஒரு அசுர அரசன், திருமால் இவனிடம் வாமன அவதாரம் கொண்டு சென்று மூவடி மண் வாங்கினர்; பெற்றளந்தனவும்-

பெற்று அளந்த வானுலகத்தவரும் மண்ணுலகத்தவரும்; அளந்தன் இடவாகுபெயர்; அளிசூழ் பிரசமலர் மீதிலுறை பரமேட்டி - வண்டுகள் சூழ்ந்த தாமரைமலர்மேல் தங்கும் பிரமன்; பீடுகெழுவிண்ணவர்குழாம்-பெருமை தங்கிய கடவுளர் கூட்டங்கள்; விதியுளிவழா - விதிமுறை தவறுமல்; காமர் - அழகு; இருமைபெறு-இரண்டு பக்கங்களிலும் பெற்ற; ஆனந்தநீர் விழி இரைத்து எழ - ஆனந்தத்தால் உண்டாகிய நீர் விழியினின்றும் சொரிய; அஞ்சலித்து - வணங்கி. (5)

261. தொழும்பர் - அடியவர்; நெஞ்சகத்தி லுன்னும் - நெஞ்சிடத்தில் நினைக்கும்; தினகரன்-சூரியன்; துரக்கும் - ஓட்டும்; துகள்தீர் வாய்மை - குற்றம் நீங்கிய உண்மை; விண்உலகில் துன்னும் சுரர் என்க; சுரர் - தேவர். (6)

262. மற்றவை என்பதில் மற்று அசைநிலை; அனந்தம் - பல; அகத்தில் கருதற்கு அற்றுகும் - நெஞ்சில் நினைப்பதற்கும் பெயரைச் சொல்லப் புகுந்து பல ஆறுற்போல இங்கும் அத்தன்மையை உடைத்தாகும்; செய்ய மலர் - சிவந்த தாமரை மலர், "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்றதால் மலர் என்பது இங்குத்தாமரைமலர் ஆயிற்று; சிறைக் கோட்பட்டு - சிறையில் கொள்ளப்பட்டு; பால் - ஏழாம் வேற்றுமை உருபு; உறுதியாயின்-அடைந்தாயானல்: உறுதி-உறு + த் + இ, முன்னிலை வினைமுற்று; உறுதிபெறுவேன் -நன்மையடைவேன்; வையமளிக்கும்-உலகைத் தன் செங்கோலினுல் பாதுகாக்கும்; மாயை எனும் சிறை - உருவகம். (7)

263. எழிலி - மேகம்; மயூரப்புள் - மயில்பறவை; வேட்டு உறை-விரும்பித் தங்கும்; கதிர்கால் - கிரணம் வெளிவிடும்; வியம்-பெருமை; சகோரம்-ஓர் பறவை, நிலவையுண்டு வாழ்வது; ஆமாத்தியன்-வைத்தியன்; பிணியோன் - நோயாளி; பருவத்தவன் - கற்கும் பருவத்தையுடைய மாணுக்கன்; நசை - விருப்பம். (8)

264. சரண பதும உகளன் - பாதங்களாகிய தாமரை இரண்டுடையவன்; பருதிமரபு - சூரியகுலம்; உரக அமளி - பாம்புப் படுக்கை; கொள் துயிலையொருவு மொருவன்-கொண்டு தூக்கத்தை நீக்கி யோகத்திலுள்ள; பெருமாள் கண்களை மூடியிருப்பினும் தூங்கவில்லை என்க; உறுவர் - நின்னை அடையும் அடியார்கள்; தடியும் - வெட்டும்; தசரதன் மதலை என்க; அருளின் உறையுள்-அருளுக்கு இருப்பிடமானவனே. (9)

265. நயனவிணை - இருகண்கள்; பகவன் - ஆறு குணங்களையுடையவன்; நகை - பல்; இழுது - நெய்; புளகம் எறிய -மயிர்ச்சிலிர்ப்படைய; விழியின் + அறல் + உக—கண்களினின்று நீர் சிந்த; இரவிமரபின் அழகன் என்க, (10)

# அம்புலிப் பருவம்

266. **சந்திரன் மேற் செல்லும்போது :-** அங்கலைக் கோட்டு முனி வந்தோங்கும் எச்சத்தியல் வலம்மிகுத்து உற்பவித்து-அழகிய கலைகளின் சிகரமான அத்திரி முனிவன் தோன்றின உயர்ந்த சந்ததியின் தன்மையில் மகனாக வெற்றிமிகத் தோன்றி ; அமைவொடும் இராமனென உற்று- அமைதியோடும் சந்திரன் என்ற பெயரடைந்து (இராமன் - சந்திரன்) அளியினம் படர வார்குவலையஞ் சிறப்பில் தங்குறச் செய்து - அன்பின் மிகுதி பெருக நீண்ட உலகத்தைச் சிறப்பாகத் தன் நிலவொளியினால் தங்கச் செய்து ; கலையகம் ஏய்ந்து - பதினாறு கலைகளையும் தன்னிடம் பொருந்தி ; புந்தியைத் தந்து -புதனைப்பெற்று ; மெய்த்தவளம் ஒன்றி- வெண்மை நிறத்தைச் சேர்ந்து ; சாற்றின் மற்றுங் கமல இனம் மடக்கி- சொல்லுங்கால் தாமரைமலர்க் கூட்டங்களைக் குவியச்செய்து ; **இராமன் மேற் செல்லும்போது :-** அம் கலைக்கோட்டுமுனி வந்தோங்கும் எச்சத்தியல் வலம் மிகுத்து - அழகிய 'கலைக்கோட்டு முனிவர்' வந்து உயர்வாகச் செய்த புத்திர காமேஷ்டி யாகத்தின் தன்மையால் வெற்றி மிகத் தோன்றி ; (எச்சம் - சந்ததி, யாகம்) அமைவொடும் இராமனென உற்று - அமைதியோடும் 'இராம' னெனும் பெயரையடைந்து ; அளியினம் படர வார்குவலையம் சிறப்பில் தங்குறச் செய்து - அன்பினம் பெருக நீண்ட உலகிலுள்ள மக்களைத் தன் சிறப்பான அரசாட்சியால் குறைகளின்றித் தங்கச் செய்து ; கலைஅகம் ஏய்ந்து - 64-கலைகளையும் மனதில் பொருந்தக் கற்று ; புந்தியைத் தந்து - அறிவைப் பெற்று ; மெய்த்த வளமொன்றி - நிலைத்த பல வளப்பங்களையும் அடைந்து ; சாற்றின் மல் துங்கம்+அல+இனம்+அடக்கி - சொல்லுங்கால் மற்போரினால் பரிசுத்தமல்லாத கூட்டங்களை (இராட்சதர்கள்) அடக்கியொழித்து (மல் - மல்போர், உபலட்சணத்தால் மற்ற விற்போரையும் காட்டிற்று) ; பெருகுதகை - இராமன் ; நீர்மை - குணம் ; வடமீன் - அருந்ததி ; வெரிந் - புறமுதுகு ; நிற்கு ஒப்பென - நினக்கு ஒப்பென ; ஐங்குறும்பு அறவென்ற - நீர், நிலம், காடு, மலை, மதில் என்ற ஐந்து பாதுகாப்புக்களையும் கடந்து அவை அழிய இராவணனை வென்ற. (1)

267. **சந்திரன் மேல் செல்லும்போது :-** வானவர்க்கு உண அமுது தந்து - தேவர்கட்கு உண்ணுதற்காகத் தன்னிடமிருந்து முதல் 15-நாள் வரை அமிருதத்தைக் கொடுத்து; புகழ்சார் அங்கம் அணி உருக்கொண்டு - புகழ்பொருந்திய அடையாளமாக சிவனிடத்தில் அழகிய வடிவத்தைக் கொண்டு ; பெரிய வரை நாள்

தோறும் சூழ்ந்து - பெரிய மலையான மேருமலையைத் தினமும் சுற்றி; மற்று அம் சகோர இடர்மாற நகை நிலவுகாட்டி - மற்றும் அழகிய சகோரப் பட்சியின் துன்பம் நீங்க உண்ணுதற்கு ஒளிவாய்ந்த குளிர்ந்த நிலவுகாட்டி; மேல்நெறிக்கு இயல்வாய் மைதங்கும் ஆலோன் என்ன மேவி - ஆகாய வழிக்குத் தகுதியாய்க் களங்கம் தங்கும் சந்திரனெனப் பொருந்தி, (ஆலோன் - சந்திரன், இயல்பாய் என்பதன் போலி இயல்வாய்); முனம் ஆம்பல் எட்டை விண்டிடச் செய்திட்டு-உன் முன்னுள்ள அல்லி மலர்களின் இதழ்களை மலரச்செய்து; மண்டலத்து இடையற மேதக விளங்கிடுதலான் - சந்திர மண்டலத்தினின்று நீங்காமல் மேன்மை பொருந்த விளங்குவதால்; **இராமன்மேற் செல்லும்போது :-** வானவர்க்கு உண அமுது தந்து - தேவர்கட்கு உண்ணுதற்காக அமிர்தத்தைக் கொடுத்து; சாரங்கம்அணி உருக்கொண்டு - சாரங்கம் என்ற வில்லை அணிந்த வடிவத்தைக் கொண்டும்; பெரியவரை நாள்தோறும் சூழ்ந்து-பெரிய தவமுனிவரை நாள்தோறும் சென்று வணங்கி; மற்று அஞ்சு அகோர இடர்மாற நகைநிலவு காட்டி; - மற்றும், பயப்படத் தக்க அகோரமான இராட்சதர்களால் நேரிடும் துன்பம் நீங்குதற்கு அபயமாக முனிவர்களிடம் புன்சிரிப்பாகிய ஒளிகாட்டி; மேல்நெறிக்கு இயல்வாய்மை தங்கு மாலோனென்ன-மேலான ஒழுக்க நெறிக்குத் தகுந்த உண்மை தங்கும் திருமாலென்று பெயர் அடைந்து; முனம் ஆம் பல் எட்டை விண்டிடச் செய்திட்டு-முன்னுள்ளதான பல பெண்களின் கண்ணிமைகளைத் திறக்கச்செய்து; "தோள்கண்டார் தோளேகண்டார்........" என்ற பாட்டைக் காண்க; மண்தலத்திடை யறம்மேதக விளங்கிடுதலான்-பூமியினிடம் தருமம் மேன்மை பெறுமாறு ஆட்சி புரிந்திட்டதால்; மாநலத்து ஒளிர்பரதன் - மிக்க அழகு விளங்கும் பரதன்; எழில்கூர்-அழகுமிக்க; முச்சகம்-மூன்று உலகம்; ஆன அத்திறன்நாடி - பொருந்திய அத்திறமைகளை ஆராய்ந்து; வல்விரைந்து - மிகவேகமாய். (2)

| 268. சந்திரன் | இராகவன் |
|---|---|
| 1. எதிர்க்கின்ற புறத்திருளை ஒழிப்பவன். | அகத்திருளை ஒழிப்பவன், (அகம் - மனம்). |
| 2. நிலத்திலுள்ள பைங்கூழை (பசியபயிரை) வளர்ப்பவன். (சந்திரன் அமிர்தம் பயிரை வளர்க்கிறது.) | விளங்கும் உயிர்கள்பலவும் வளர்ப்பவன். |
| 3. மிக்க சினங்கொண்ட பணிக்குப் (கேது என்ற பாம்புக்குப்) பயப்படுபவன். | அத்தகைய பாம்பின் முதுகின் மேல் பள்ளி கொள்பவன். |

| | |
|---|---|
| 4. சிறப்புப் பொருந்திய பதி ஞாறு கலைகளை உள்ளவன். (கலை-சந்திரனின் வளரும், தேயும் பாகம்) | அறுபத்துநாலு கலைகள் பெற்றவன். |

பருதி - சூரியன்; மின்மினி-ஓர் பூச்சி; இது செடி கொடிகளின் மேல் இருந்து மினுக் மினுக்கென்று பிரகாசிக்கும் ஓர் பூச்சி; கடுத்திடாது - போன்றிராது; ஓர்ந்து-ஆராய்ந்து; கழல் தசரதற்கு இனிய மைந்தன் என்று பிரிக்க. (3)

| 269. சந்திரன் | இராகவன் |
|---|---|
| 1. மடமைக்குணம் கொண்ட சிறிய பேதைப் பருவப் பெண்கள் தன்னைத்தொழுமாறு அமைவான். | அறிவுடையோர்கள் வணங்க எளிதில் வாராது மறைவான். |
| 2. மதிக்கும் அத்திக்கும் மகன் நீ-எல்லோராலும் மதிக்கப்படும் அத்திரி என்ற முனிவனுக்கு நீ மகன். | மதிக்கும் அத்தியை அளித்தோன் - மதிக்கப்படும் கஜேந்திரன் என்னும் யானையைக் காப்பாற்றினவன். |
| 3. உடல் குறைதலும் வளர்தலும் உள்ளவன். | எப்பொழுதும் ஒரேதன்மை உடையவன். |
| 4. களங்கத்தோடு தங்குவான். | களங்கம் கொஞ்சமும் இல்லாதவன். |
| 5. இரவுக்காலத்தில் விளங்குவான். | எப்போதும் விளங்குவான். |

கரும்பொன் - இரும்பு. (4)

270. மணி மந்திரம் ஔடதம் என்பன மூன்றும் வியாதிகளைப் போக்குவன; ஜனனநோய்-பிறவித்துன்பம்; அற-முழுவதும்; பயில-பழக; கறையிருள் - களங்கமாகிய இருள்; கயரோகம் - க்ஷயரோகம்; ஆற்றுற - செய்ய. (5)

271. இடங்கர் - முதலை; பிறையை நிகர் கோட்டிபம் - பிறைச் சந்திரனை ஒத்த தந்தத்தையுடைய யானை (கஜேந்திரன்); பீழை-துன்பம்; ஆகுலம் - துன்பம்; சிற்றன்னை-சுருசி என்பவள்; **துருவாசன்** :- அம்பரீஷன் என்பவன் அயோத்தியை ஆண்ட அரசன். இவன் ஏகாதசி விரதம் அனுட்டித்து முடிவில் அறுபது கோதானம் செய்து துவாதசி

யில் பாரணைசெய்ய இருக்கையில் துருவாச முனிவர் அதிதியாகவந்து அன்னம் வேண்ட அரசன் களிப்புற்று எதிர்கொண்டான். முனிவர் காளிந்தி நதி சென்று தீர்த்தமாடுகையில் அரசன் துவாதசி கடத்தலை எண்ணிப் பயந்தவனாய்த் துளசித் தண்ணீர் சாப்பிட்டான். தன் வேலை முடிந்து திரும்பிய முனிவர் அரசன் செய்கையை யறிந்து கோபித்துத் தன்னை அவமதித்து நீரையுண்ட அரசனைக் கொல்வதற்காகத் தமது சடையில் ஒன்றைக் கோபத்துடன் வீசி யெறிய அதினின்றும் ஒரு பூதம் உண்டாகி அரசனை எதிர்க்க அரசன் அதை விஷ்ணு சக்கரத்தால் கொன்றான். சக்கரம்பின்பு முனிவனைத் துரத்த அவர் மும்மூர்த்திகளிடம் சென்று அடைக்கலமடைந்தும் விடாமை கண்டு அரசனை அடைக்கலம் புகுந்துவேண்ட அரசன் சக்கரத்தை வேண்டி முனிவனைக் கொல்லாது காப்பாற்றினன். தணவுஅரும் எறுழ்ப்பூதம் - நீங்குதற்கரிய வலியுள்ள பூதம்; இகல் - பகை; தடிந்தது - கொன்றது; ஓர்ந்திலான் - நினைக்க வில்லை; உய்தி - பிழைத்தல்; அணவு-சேர்ந்த; ஈன்று ஓம்பும் அண்ணல் என்று பிரிக்க. (6)

272. பையரவு - படமுடைய பாம்பு; பைந்தரு விசும்பு - பசுமை யான கற்பகத்தரு சூழ்ந்த ஆகாய உலகம்; தேனூறு பதுமபீடிகை மேலவன் - தேனுற்ற தாமரை ஆசனத்தில் இருக்கும் பிரமன்; எண் சித்தி-அஷ்டமா சித்திகள்; சுரர்குருவு-பிரகஸ்பதி; இவரைக் கலைகளில் வல்லவர் என்பர்; நையும்-அழியும்; வீடு-மோட்சம்; நயனச்சிறக்கணிப்பு- கண்களின் கடைப்பார்வை; கொல்-ஐயப்பொருளைக் காட்டும் இடைச் சொல். (7)

273. கஞ்சமலர் மீதிலுறை பரமேட்டி - தாமரை மலரின்மீது வசிக்கும் பிரமன்; நிருமித்து - படைத்து; களைகண் - ஆதரவாளன்; ஆகுபெயர்; உரை-சொல்; வைகுபவன்-தங்குபவன்; எஞ்சலுறு- மிகுந்திருக்கின்ற; தெரியின்-ஆராயின்; அஞ்சலென-பயப்படாதேயென்று. (8)

274. மறம் தழைக்கும் மதகரிகள் - வீரம் அதிகமாயுள்ள மதம் பொருந்திய யானைகள்; ஆவி பல - உயிர்கள் பல; மலர் மணமதென்ன நிறைவுற்று - மலரிலிருக்கும் மணத்தைப்போன்று கண்ணுக்குத்தெரியாமல் எல்லாவிடங்களிலும் நிறைந்து; உளம் சிறந்தழைக்குநர் கண் மனதில் பக்திமிகுந்து அழைக்கும் அடியார்களிடம்; மேவியானும் ஒரு தேவதேவை - அடைந்தவனுமாகிய ஒப்பற்ற கடவுளர்க்குக் கடவுளை; பெரு மானுடச் சிறுவனென்று-பெருமை பொருந்திய மனித இனத்துச் சிறுவனென்று; செய்யாம்பல் - சிவந்த அல்லிமலர்; இதழ் - உதடு; எள்ளிய-இகழ்ந்த; இரணியன் வரலாற்றை வருகைப்பருவத்தின் நாலாவது பாட்டில் காண்க. (9)

275. இதயர் - மனமுள்ள அடியவர்கள் ; எறுழுடன்-வலியுடன் ; வியவம் - வாழ்வு ; வறிது இழந்து - வீணே இழந்து ; உட்கொளாய் - மனதில் கொள்ளமாட்டாய்; குமுதவாய் திறந்து - அல்லிமலர்போன்ற வாய்திறந்து ; நின்பிழையை எண்ணுருமல் இன்ற விடினும் - நின் பிழையை நினைக்காமல் இராமன் விட்டாலும்; இளைஞர் - பரதன், இலக்குமணன், சத்துருக்கன் ஆகிய சகோதரர்கள் ; உய்யும்நெறி - பிழைக்கும் வழி ; இராமன் அருகு அம்புலி எனப்பிரிக்க. (10)

---

## சிற்றில்பருவம்

---

276. பம்பும் - நெருங்கும் ; வார் - நீண்ட ; பரித்து - காத்து ; பேதையரேம் - பேதைப்பருவத்தாராகிய நாங்கள் ; நசை - விருப்பம்; வாலுகம் - மணல் ; இம்பர் - இவ்விடம் ; வண்டல் - மகளிர் விளையாடும் விளையாட்டு. (1)

277. சிவப்பூர - சிவப்புநிறம் பரவ ; இந்தீவரமலர் - கருங்குவளைமலர் ; பூழி - புழுதி ; செல்லல் - துன்பம். (2)

278. ஒரு புன்புறவின்......நிறை செய்து :- இவன் **சிபிசக்கரவர்த்தி.** அக்கினியும் இந்திரனும் முறையே புருவும் வேடனுமாய்ப் பரிசோதிக்க வர, புரு அரசனை அபயமடைய அதற்கு நிறையாகத் தசை கொடுத்தால் அதனைப் பெற்றுக்கொண்டுபோக வேடன் சம்மதிக்க, எவ்வளவு வைப்பினும் தட்டு மேலே இருக்கத் தானே ஏறி உட்கார்ந்தான். நிறையும் சமனுனது. இலகும் நயனம் ஒரு மறையோன் இரப்ப இடந்து நல்கியும்-விளங்கும் கண்களை ஒரு பிராமணன் யாசிக்கத் தோண்டிக்கொடுத்தும் ; இவன் ஒரு சூரிய குலத்தரசனுயிருத்தல் வேண்டும். சால்பு எய்தும் வாய்மை - மேன்மையடையும் உண்மை ; சால்பெய்தும் ..........அன்பிற் சிறந்தார் :—இவன் **அரிச்சந்திரன்.** இவன் உண்மையைக் காப்பாற்ற விசுவாமித்திரனிடம் பல துன்பங்கள் அனுபவித்ததும் இறுதியில் தன் மனைவி, மகன் இவர்களைக் காலகண்டனென்ற பிராம்மணனுக்கு அடிமையாக்கியதும் தான் ஒரு புலையனுக்கு அடிமைப்பட்டதும் இறுதியில் தேவர்கள் அவனை ஆசீர்வதித்ததும் அரிச்சந்திர புராணத்தில் காண்க. இணையில் அரசு - ஒப்பில்லாத அரசு. (3)

279. புன்கண் கன்றுஆ தன்னுயிர்போல் புரக்கும் - துன்ப முடைய கன்றைத் தாய்ப்பசு தன்னுயிராகக் காப்பதைப்போன்று காக்கும்; கசப்ப, மதுரம் - முரண்தொடை; சிறிய தாயர் - கைகேயி, சுமித்திரை ஆகியோர். (4)

280. வடிவேல் - வினைத்தொகை; மௌலி - கிரீடம்; உரிஞி - உராய்ந்து; நிறைசால் - கற்புமிகுந்த; தனையனிலை என்று - புத்திரனில்லை என்று; இருமூன்றில் சாரும் பதினாயிரம் வருடம் - அறுபதினாயிரம் வருடம்; ஆரும்பிழை தப - பொருந்திய துன்பம் கெட. (5)

281. பூவை மலர்நேர் திருவுருவு - காயாம்பூவை ஒத்த வடிவம்; வனசப்பூ - தாமரைப் பூ; புருவச்சிலை - உருவகம்; சிலை - வில்; வெண்டாளக் கோவை இகலும் - வெண்மையான முத்துக்களின் தொகுதியை மாறுபடும்; குலவும் - சேரும்; நிறைசேர் முறுவல் - வரிசையாக வமைந்த பற்கள்; செங்கோவை நிகர்க்கும்-சிவந்த கோவைப் பழத்தை ஒத்திருக்கும்; இதழ்-உதடு; குவவுத்தோள்-திரட்சி அமைந்த தோள்; **கற்பகப் பூங்கா** :-இது தன்னை வேண்டியார்க்கு வேண்டுவன தருவது; இந்திரன் நகரத்தில் உள்ளது. **முகில்** :-இது கைம்மாறு கருதாது பூமியிலுள்ளவர்களுக்கு மழை வளத்தைக் கொடுப்பது; எனவே இராமனது கரமும் வேண்டியார்க்கு வேண்டுவன அளித்தலால் கற்பகச் சோலையையும், கைம்மாறு கருதாது கொடைவளம் செய்தலால் முகிலையும் உவமைப் படுத்தி அவைகளையும் இகழச்செய்யும் கரம் என்று கூறினர். கடலுடை நீங்கா-கடலைத் தனக்கு உடைமையாக இருப்பதினின்றும் நீங்கி; வையகத்தில் போந்து - பூமியில் வந்து. (6)

282. அகண்டாகாரம் - அளவுபடாத வடிவம்; நித்தியம் - அழிவில்லாதது; அருவாய் - உருவமில்லாததாய்; உருவாய் - வடிவமுள்ளதாய்; அத்துவிதம் ஆகி - பரமாத்மாவும், ஜீவாத்மாவும் ஒன்றாகி; ஐயமற - சந்தேகம் நீங்க; நெஞ்சகத்தும் - மனதினிடத்தும்; ஓதத்திரைசேர் வேலையினும் - ஒலியோடு கூடிய அலைகள் சேர்ந்த பாற்கடலினும்; பரம்பதம் - வைகுண்டம்; நிகமத்துச்சி - வேதாந்தம்; ஏதமற - குற்றம் நீங்க; இசைந்தோர்க்கு - தியானித்தோர்க்கு; ஆக்கையெனும் துச்சில் - உடலென்ற ஒதுக்கிடம்; இடுக்கண் - துன்பம்; வீடு - மோட்சம். (7)

283. பூங்கழல் - அழகிய கழலணிந்த பாதம்; கழல் - தானியாகு பெயர்; மறைகள் அரற்றிடுமால் - இதில் வந்துள்ள ஆல் அசை; கரம்

முகிழ்த்து - கைக்கூப்பி; நிந்தை - பழிப்பு; நெஞ்சக்கமலம் - உருவகம்; நெறியோம் - முறையை உடைய நாங்கள்; முறையன்றே - ஏகாரம் அசைநிலை. (8)

284. ஏகமுதலாய் - ஒரே முதல்வனாய்; எந்தாய் - எம் + தந்தை என்பதன் விளி, மரூஉ மொழி; சோகம்-துன்பம்; திசைகளிரு நான்கு- எட்டுத் திக்குகள்; நாகருலகு - பாம்புகள் வசிக்கும் பாதள உலகம்; நாகருலகு சரண்கடப்ப திசைகளிரு நான்கும் கரங்கடப்ப என நிரனிரை கொள்க; நாரசிங்கம் - இரண்யகசிபுவைக் கொல்லத் தூணில் தோன்றிய திருமாலின் அவதாரம்; சிறிய தேகமொடு வந்தது - இராமாவதாரம். (9)

285. காயம் - உடல்; புளகரும்ப - மயிர்சிலிர்ப்புக் கொள்ள; வழுத்தி - துதித்து; நடலை - வஞ்சனை; வாஞ்சை - அன்பு; தேய - கெட. (10)

---

# சிறுபறைப்பருவம்

---

286. கருவளரும் - மேன்மை மிக்க; கால்மாரி - காலிறங்கிப் பெய்யும் மழை; முழவு - ஓர் வாத்தியம்; கதவு-பற்றுகின்ற; பல்லிய அரவம் - பல வாத்தியங்களின் சப்தம்; அமலை - ஒலி; முனிவர் அறை ஆசி ஆர்ப்பு - முனிவர் சொல்லுகின்ற ஆசீர்வாதத்தின் ஒலி; தேறல் ஊறு - தேன் சுரக்கின்ற; பொதுளிய - நெருங்கிய; நறுந்தரு - கற்பகம் முதலிய ஐந்தருக்கள்; விசும்பு ஓம்பும் - ஆகாயத்திலுள்ள தேவர்களைக் காப்பாற்றும்; சும்மை - ஒலி. (1)

287. கோதுதபு - குற்றங்களைக் கெடுத்த; ஐங்குரவர் - தந்தை, தாய், குரு, அரசன், தன்முன்னோன் ஆகியவர்கள்; சீலம் - ஆசாரம்; குறுகினர் - அடைந்தவர்; போதுமலி - பூக்கள் மிகுந்துள்ள; மார்த்தாண்டன் - சூரியன். (2)

288. மறம்-பாபம்; வெளவி-அபகரிக்கவிட்டு; வாடு முனிவோர்-வினைத்தொகை; மணிவாரி-முத்துக்களைக்கொண்ட கடல்; நிமிர்பாதகப் பொறைகொடு - நீண்ட பாதகத்தினாலாகிய பொறுத்தலைக்கொண்டு; புன்சமயம் - அற்பக் கருத்துக்களைக் கொண்ட மதம்; புன்கணும் -

துன்பமும்; சுதன் இலையென புந்திதளர் தசரதன்-மகனில்லையே என்று புத்தி தடுமாறும் தசரதன்; பீழை - துன்பம்; அமுதக்கடல் ஓரீஇ - பாற்கடலை விட்டு நீங்கி; கவலையும் சோகமும் புன்கணும் பீழையும் போக்க உதித்த இராகவா என்று கூட்டுக. (3)

**289.** அத்தன் - தந்தை; துணைவர்கள் - சகோதரர்கள்; பூசுரர் - பிராம்மணர்; தேசிகர் - குரு, இங்கு வசிட்டர், விசுவாமித்திரர் ஆகியோர்களைக் குறிக்கிறது; விளங்கறிஞர்-இங்கு அத்திரி, பரத்துவாச முனிவர் ஆகியோர்களைக் குறிக்கிறது; சரணமென்றடைந்தோர்கள் - விபீஷணர், சுக்கிரீவர் ஆகியோர்; ஓம்பல் - பாதுகாத்தல்; மெய்த்துள் வெறுக்கை அதிகாரம் எறுழ் மிக்கவர் - கையில் கொண்டுள்ள செல்வமும், அதிகாரமும், வலியும் மிகுந்தவர், (வாலி, வருணன் ஆகியவர்கள்); அறமுறையும், அன்பின் முறையும், உரிமை முறையும், ஓம்பல் செய்தக்க முறையும், அடங்கி ஒழுகலும் உலகற்கு உணர்த்த உதித்தருள் இராகவா என்று முடிக்க. (4)

**290.** ஞாலம் - பூமி; நகை நண்ணுலுறு - விருப்பம் அடைதலைப் பெற்று; அன்னராக என்பது சகோதரர்களைக் குறித்தது; மாலற - மயக்கம் நீங்க; அன்பொடு வணங்கும் கடவுள் - குலதெய்வம்; ஓவாதமைந்து - நீங்காதமைந்து. (5)

**291.** ஓவியத்துறை கைபோயவர் - சித்திரத் துறையில் கைதேர்ந்தவர்; வரையவரிது - எழுதமுடியாது; அமுதொழுகு - பால் ஒழுகுகின்ற; வாய்மலர் மழலை - வாயிலிருந்து புறப்படும் கொச்சைச் சொற்கள்; செவி தனு பயன் - செவியாகிய உடலுறுப்பின் பயன்; எண்மை பெறு வாய் - எளிமை பொருந்திய வாய்; பலன் நன்கு அடைந்தது இங்கு எனப் பிரிக்க; உன் குற்றேவல் செய்திடல் - உனக்குச் சிறிய தொண்டுகளைச் செய்திடுவதால்; ஏய்ந்தது - பொருந்தியது. (6)

**292.** பாயொளிசெய் - பரவி ஒளி செய்கின்ற; பளகு அறு - குற்றமற்ற; பஃறலை கொள் பாந்த ளணை - பல தலைகளைக்கொண்ட பாம்பாகிய (ஆதிசேடன்) படுக்கை; வேலை - கடல்; மணி - முத்து; மகிதலம் - பூமி; மற்றொருவர் எய்தொணுததாய் ஒளிரும் குணம் எனப்பிரிக்க; எய்தொணுதது - அடையமுடியாதது; உறீஇ - உற்று, சொல்லிசை யளபெடை; மலம் - குற்றம். (7)

**293.** நகிற்குடம் - தனமாகிய குடம், உருவகம்; முயக்கு - தழுவுதல்; நவிற்று அரு மாயை - சொல்லுதற்கு முடியாத மாயை;

நவைப்பழி - குற்றமாகிய பழி; நோயின் அலைத்தும் - நோயினால் வருத்தியும்; இனைத பொத்தியும் - இத்தகையவைகளை மறைத்தும்; நெறி பிறழ மிகுத்திடும் ஆவல் - இல்லறநெறியினின்று துறவறநெறி பிறழ்வதற்கு மிக்க ஆசை; வானின் விறப்புறு - சுவர்க்கலோகத்தின் வெற்றிமிகுந்த; முதுக்குறைவாளர் - அறிவுமிக்கவர்; துதிக்கு இசை தாள - துதிப்பதற்குப் பொருந்திய பாதமுடையவனே; '**நெறிபிறழ ....விடுத்திட**':—இராமன் இல்லறத்தினின்றே பல அற்புதச் செயல்களைச் செய்ததால் அவனைப்பணிந்த நேயர்களும் துறவற நெறிக்கு மாறுது அவ்வாசையை நீக்கிவிட்டனர். (8)

294. சகம் - பூமி; தனிக்குடை - ஒப்பற்ற வெண்கொற்றக் குடை; தமக்கெதிர் ஆனதிறம் செய வீறு கொடு - தமக்குப் பகையாயுள்ள எல்லாத்திறங்களையும் செயித்த செயப்பெருமைகொண்டு; மதுகை - வலி; அடல்புயம் - வலிபொருந்திய புயம்; அறத்துறை - தருமவழி; சினம் விழியில் உக - கோபம் கண்களினின்று சிந்த; காலன் - யமன்; பூமியை யாளு மரசர்களும் உனைப்பணியாமல் கோப மிகும் கண்களையுடைய யமனது பாசத்தை ஒழிப்பது முடியாதென்று மனதில் நாடும் ஒப்பற்ற மேலானவனே! அன்பர்கள் சந்தோஷிக்கும் தலைவனே! எனப்பொருள் கொள்க. (9)

295. வினைப்பகை - தீவினையாகிய பகை; மாற - கெடுக்க; அகத்தினுள் மூய - மனத்தினுள் மூடிய; மலத் தமம் - குற்றமாகிய இருள்; புலத்தி னவாவை யொறுத்திட - ஐம்புலன்களின் ஆசையை அடக்க; அளித்திரள் - வண்டுக் கூட்டங்கள்; துணர் பொதுளும் முகை முறுக்கு அவிழ்சோலை - பூங்கொத்துக்கள் நிரம்பும் அரும்பின் இதழ் மலர்கின்ற சோலைகள்; வண்டுகள் இசைபாடி மொக்குமீது வீழ்வதனால் முகைகள் முறுக்கவிழ்கின்றன. (10)

---

## சிறுதேர்ப்பருவம்

---

296. தமனியத்திகிரி-பொன்னாலாகிய சக்கரம்; மரகதப் புரிகதிர் தட்டு - மரகதக் கல்லினால் செய்த ஒளிவாய்ந்த தேர்த்தட்டு; வச்சிரக் கிடுகு-வச்சிரத்தினால் செய்ததேர் மரச்சுற்று; பவளத்தூண் - பவளத்தினால் செய்த தேர்த்தூண்கள்; துங்க வளம் - பரிசுத்தமான வளம்;

வயிடூர்யக் கூம்பு - வைடூரியத்தினுலாகிய தேர்க்கொடிஞ்சி ; கலசம் - தேரின்மேல் வைக்கும் ஒருவகைக் குடம்போன்று முனை உள்ளது ; தூக்கு வெண்தரள வடம் - உயர்ந்த வெண்மையான முத்துக்களாலாகிய தேரிழுக்கும் கயிறு ; பன்மணிப்பாவை - பலவகை இரத்தினங்களால் ஆகிய தேர்ப் பொம்மைகள் ; விலையறு படங்கும் - மதிப்பற்ற பெருங் கொடியும் ; மேதக சித்திர பண்புறு கொடிஞ்சியும் - மேன்மை பொருந்த சித்திரம் எழுதி நன்கு அமைந்த தேர் மொட்டும் ; கூற்றன் இகல் - எமனது பகையை ; பொன்னுல் தேர்ச் சக்கரங்களும், மரகதத்தினுல் செய்த தேர்த்தட்டும், வச்சிரத்தினுல் தேர்ச் சுற்றும், பவளத்தினுல் தூண்களும், வைடூரியத்தினுல் தேரின் மேல்பாகமும், மாணிக்கத்தினுல் கலசமும், தரளத்தினுல் வடமும், நவரத்தினங்களால் பொம்மைகளும், கொடியும் சித்திரமு மெழுதிய கொடிஞ்சியும் கொண்ட சிறிய தேரை அயோத்தி நகர் மறுகினில் பலரும் நோக்குற்று மகிழ இராகவா நடத்தியருள் என முடிக்க. (1)

297. ஆடகத்து ஒளிர் உருளை - பொன்னுலாகிப் பிரகாசிக்கும் தேர்ச்சக்கரம் ; பூழி-புழுதி ; ஆகமிசை-உடல்மீது ; அணைவுற-அடைய ; அலைதரு பிழை - வருந்தும் தவறு. மூடு அகத்திருள் - மூடுகின்ற மனதின் அஞ்ஞானமாகிய விருள் ; அழிவுற்றது இன்முருகு எனப் பிரிக்க ; இன்முருகு அவிழும் முண்டகக்கோயில் - இனிய வாசனையுடன் மலரும் தாமரையாகிய இருப்பிடம் ; முதுமறைக் கிழவன் - வேதத்திற்கு உரிமையானவன்-(பிரமன்) ; ஒருவி - நீங்கி ; காடகம் - காட்டினிடம் ; ஊணின்றி - உணவில்லாமல் ; நெடுங்காலம் நோற்றூர்க்கும் - நீண்டகாலம் தவஞ்செய்பவர்களுக்கும் ; அலகில் - அளவற்ற ; அறந்தேடு அகத்தினர் மலி-தருமத்தைத் தேடிச்செய்கின்ற மனதையுடையவர்கள் மிகுந்த ; பொன்னுலாகிய தேர்ச்சக்கரத்திடம் பட்டு எழுகின்ற பூமியினது புழுதி கொஞ்சம் சென்று அடையப்பெற்றவர்கள் உலகினில் பிறந்து மிறந்தும் வரும் தவற்றினின்று நீங்கி, மூடுகின்ற அஞ்ஞான விருள் அழிக்கப்பட்டுப், பிரமனுல் படைக்கப்படும் தொழிலினின்று நீங்கி, முத்திநெறி கைக்கொண்டு, காட்டிலடைந்து தவஞ்செய்யும் முனிவர்க்கும், பலகலைகளுணர்ந்துள்ள புலவர்க்கும் அடையமுடியாதது இது என்று மகிழ்ச்சி மிகுந்து துதிசெய்ய சிறுதேர் நடத்துவாயாக என்று கூறுக. அழிவுற்றது, கைக்கொண்டனன் - முற்றெச்சம். (2)

298. கழுவுமொரு தினம் நீங்கின் - உடம்பைத் தேய்த்துக் கழுவுவது ஒருநாள் நீங்கினுல் ; முடைநாறு வெண்பலை-முடைநாற்றம் வீசும் வெண்மைநிறம் பொருந்திய பற்களை ; முத்தம்-முத்து ; கமழும் நெய் நீவாது உறின் - வாசனை வீசும் எண்ணெய் தடவாவிட்டால் ;

கரும்புழுமேவும் காரளகம் - பேன்கள் அடையும் கரியகூந்தல்; தசைத் திரள் - தசைத்தொகுதி; தமனியக்கலசம் - பொன்குடம்; சந்ததமும் ஓவாது - தினமும் நீங்காது; புன்மலம்சொரி விழிகள் தம்மை - பீளை சிந்தும் கண்களை; நீலம் - நீலமலர்; கழுமி - மயங்கி; மடவார்த்திறத்து உழலாது - பெண்களிடத்தில் சுற்றித் திரியாது; இதயமாம் கந்துகம் - மனமாகிய குதிரை, உருவகம்; இவர்ந்து - செலுத்திச்சென்று; கெழு மலர் - நிறம்பொருந்திய மலர். (3)

299. மண்ணுதி மூவாசை ஏதம் - மண், பெண், பொன் என்ற மூன்று ஆசைகளின் குற்றம்; இப்புன் குரம்பை - இந்த அற்பமான உடல்; அளப்பிலா எண்ணம் - அளவில்லாத நினைவு; மருண்டு- மயங்கி; இழைத்து - செய்து; யாம் எத்தன்மையம், வாய்த்த இச்சகம் எற்று, இவற்றை உடை முதல் எவன், மற்றிவை உணர்ந்து - யாம் எத்தன் மையை உடையோம், நாம் பொருந்தி யிருக்கின்ற இந்தப் பூமி எத் தன்மையை உடையது, பூமியையும் நம்மையும் உடைய முதல் யாவன் இவைபோன்ற மற்றவைகளையும் அறிந்து; மலவிகல் - குற்றமாகிய பகை; உய்யும் ஆறு - பிழைக்கும் விதம்; விரைகிலார் தொடர்பு - விரைந்து செய்யமாட்டாதார் சிநேகம்; உலகு பேய்த்தேர் என - உலகம் கானல் நீரைப்போன்றது என்று. (4)

300. ஓங்கு அசல வைப்பு - உயர்ந்த மலையிடம்; காசினி - பூமி; வைப்பினிற் கானகம்-இடத்திலுள்ள காடு என்க; கடவுள் நதி ஆடியும்- தெய்வத்தன்மையுடைய ஆறுகளில் ஸ்நானம் செய்தும்; மழித்தும் - மொட்டையடித்தும்; மயிர் நீட்டியும் - மயிர் வளர்த்தும்; காவி நன்னிறம் மருவிய தூசு இனிது உடுத்தும் - காவி நிறம்பொருந்திய உடையைக் கட்டிக்கொண்டும்; எண்ணறு கலைகள் ஆய்ந்து - கணக்கற்ற கலைகளை ஆராய்ந்து; நோன்பு - விரதம்; அரும் சுருதி நெறி யாகங்கள் - அரிய வேதங்களின் முறைமைப்படி யாகங்களை; மாசு இனி ஒழித்து - குற்றத்தை இனி நீக்கி; மருவலர் - அடையாதவர்; தேசின் இயல் உறு புகழ் - ஒளித்தன்மையுடைய புகழ்; பூமியைச் சுற்றியும், மலை யிடத்துள்ள காடுகளில் பழகியும், தெய்வத்தன்மையுடைய நதிகளில் தீர்த்தமாடியும், மயிரை மொட்டையடித்தும், வளர்த்தும், காவி யுடை யுடுத்தியும், உயர்ந்த விரதங்களைச் செய்தும், வேதமுறைப்படி யாகங்கள் செய்தும் உள்ளவர்கள் உன் தாமரையொத்த பாதங்களுக்கு அன்பில்லா விட்டால் குற்றம் நீங்கிய ஞானநெறி சென்று மோட்சமடைய மாட் டார்கள் என்ற இதனையுணர்ந்து மறவாது உனைத் தினந்தொழு மடி யார்களை நீங்காத மகிழ்ச்சியோடு காக்கு மிறைவ என்க. (5)

301. ஊன்மருவு பொறையுடல் - மாமிசம் பொருந்திய உயிரைத் தாங்கும் உடல்; புரத்தல் - காப்பாற்றல்; அமுதமார் வசன - அமுதத்தை யொத்த சொல்லையுடையவனே; சூல் மருவு முகில் - கர்ப்பங் கொண்ட மேகம்; மாலிகை - மாலை; திருவுருவ - அழகிய வடிவத்தை யுடையவனே; விழியனே, வாயா, தாள, வாச, வசன, வாழ்க்கையோய், மங்களா, வேதமுடிவே, துளபமாலிகைய ஆகியன விளிகள். (6)

302. திருவயிற்று உற வைத்து அளித்து ஓம்பும்-வயிற்றினிடம் வைத்துப் பாதுகாக்கும்; சாத்துவீகா - சாத்துவீக குணம் உடையவனே. இது முக்குணங்களில் ஒன்று; சத்தியா - சத்தியத்தையுடையவனே; உறுதல் - அடைதல்; வெப்புறு கொடுங்காமம் - வெப்பத்தைச் செய்கின்ற கொடிய காமத்துன்பம்; காமம் கொண்டவர்களுக்குச் சந்திரன் அனல் என வீசும், சந்தனம் தடவின் பொரியும்; மேதகும் உனை - மேன்மைபொருந்திய உன்னை. (7)

303. பிறவியெனும் உததி - பிறவி யென்கின்ற கடல், உருவகம்; விமல - குற்றமற்றவனே; வித்தக - ஞானமுடையவனே; விசைய - வெற்றியுடையவனே; விக்கிரம - பராக்கிரமத்தை யுடையவனே; விரத - சத்தியத்தை யுடையவனே; விசுவசின்மய ஜோதியே - உலகத்திற்கே ஞானமயமான பிரகாசமுடையவனே; விசுவம் - உலகம்; பொச்சாப்பு - மறதி; இகந்து - நீங்கி; சதுமுகப் புத்தேள் - பிரமன்; விபு நித்தியா - கடவுளரில் அழியாதவனே. (8)

304. மண்ணில் அனை யுதரத் திருந்து - பூமியில் தாய் வயிற்றிலிருந்து; அனை-தொகுத்தல் விகாரம்; வறிது - சும்மா; யௌவனம் - வாலிபப்பருவம்; வஞ்சம் முழுதும் உள் நிகழும் மாதரார் - வஞ்சகச் செயல்கள் பூராவும் மனதில் குடிகொண்டிருக்கும் பெண்கள்; அவலமுறு - வருத்தமுறுகின்ற; கொடும் + பையுள் + மருவி - கொடிய துன்பத்தை யடைந்து; கௌமாரம் - இளமைப் பருவம்; உஞற்றி - செய்து; கண்ணுறீஇ - கண்ணுற்று; சுதை கிடந்து தெண்ணிலவின் இலகுறும் அயோத்தி - சுண்ணாம்பு, சுவற்றிலிருந்து தெளிந்த நிலவினைப்போல் பிரகாசிக்கும் அயோத்தி. **அவலச்சுவை :**—பொறியுணர்வாலாகி யுள்ளத்திலே நிகழுந்துயரைக் குறிப்பது. (9)

(இராகவர் பிள்ளைத்தமிழ்க் குறிப்புரை முற்றிற்று.)

# தில்லைச்
# சிவகாமி அம்மைப் பிள்ளைத்தமிழ்

### கற்பக விநாயகர் துதி
வெண்பா

305. தெள்ளுதமிழ்த் தில்லைச் சிவகாம சுந்தரிமேற்
பிள்ளைத் தமிழ்கூறும் பேதையேற்—குள்ளுசடைக்
கங்கைபெற்றான் கங்கைபெற்றான் கற்பகநற் பேர்பெற்
கங்கைபெற்றான் கங்கைபெற்றான் காப்பு. [றான்

## காப்புப் பருவம்

### திருவேலங்காடு நடராசர்

306. சீர்பூத்த பராபரத்தி
ஓதித்த பராசத்தி
சிவகாம சுந்தரியாய்ச்
செகமனைத்தும் பூப்ப
பார்பூத்த விராட்புருட
னிதைய புண்டரீகப்
பசும்பொகுட்டில் விளையாடும்
பைந்தொடியைக் காக்க
பேர்பூத்த நான்குருவ
நான்கருவ நடுவே
பேருருவ மருவமெனப்
பெறுநவ பேதத்தின்
ஆர்பூத்த சத்திசதா
சிவத்துச்சி பூத்து
துலங்குதிரு [1]நடங்காட்டில்
விளங்குசபா பதியே. (1)

பொது
வேறு

307. உருவாகி யருவாகி யொளியாகி வெளியாகி
யுள்ளும் புறம்புமாகி
யோரெழுத் தீரெழுத் தஞ்செழுத் தெட்டெழுத்
தொன் றிரண் டைந்தெட்டினால்

பிரதிபாடம் :—
1. நடங்காட்டி.

விரிவாகி யெண்பத்து நான்குநூ றாயிர
மித்தையைந் தாறெனவே
வேறாகி வேதாந்த நாதாந்த மானதொரு
மெய்ப்பொருளினைப் பரவுவாந்
தருஞான மிச்சைகிரி யாசத்தி யொடுபஞ்ச
சத்திமோ கினிவிந்துமான்
றனுகரண புவனபோ கமுமாகி யளவிலாச்
சகலநிட் களமுமாகி
திருஞான சபையினிற் சிற்சத்தி யாகியே
திகழ்பரா சத்தியான
சிவகாமி யம்மையை யருளோடும் பிரியாத
திருவுளம் காத்தருளவே. (2)

தில்லை நடராசர்

வேறு

308. இருவினைக்களி றோடத் தாக்கிடு
மெழுபிறப்பிற வானிற் றூக்கிடு
மெமதுயிர்த்துணை யாகக் காத்திடு
மிமையவர்க்கிடை யூறைப் போக்கிடு
நிருமலப்பொருள் ஞானப் பாற்றது
நிருவிகற்பனு பூதித் தேற்றது
நிகழ்பிறைச்சுடர் போன்முக் கீற்றது
நெடுமறைச்சிகை மீதிற் பூத்தது
திருபுரைப்பெயர் ஞானப் பார்பதி
திருவருட்சிவ காமித் தாய்க்கிது
திகழ்தரப்புனை தூளிக் கேற்பது
திருநுதற்கணி யாகச் சேர்க்கவே
கருதுமுச்சிர மாகச் சீர்த்தது
கரம்விழிக்கதிர் கால்முக் கூற்றது
கனகசிற்சபை ஞானக் கூத்துறு
கடவுளர்க்கனு பூதிக் காப்பதே. (3)

பிரணவம்

வேறு

309. மிடறு திருந்திய குரலிசை வண்டின
மிடலுறு பங்கயமேல்
விரைமக ரந்தமு நறவு மருந்திட
விழைவுறு தென்புலியூர்

கடவுளர் வந்தடி பரவ வரந்தரு
கருணை சுரந்தருள்சீர்
கமழ்சிவ சுந்தரி மனது மகிழ்ந்திட
வினிது புரந்திடவே
யுடலுயி ரொண்பொருண் மறைமுடி வின்புக
லுபநிட விஞ்சையெனு
வுளதில தென்பது மொளிவெளி யென்பது
மொழிவற நின்றதெனு
பெடைநடை மங்கையோ டிலகுதிரி யம்பகர்
பெறுசெவி யின்புறவே
பெரிது மொழிந்திட வொருமொழி யென்றுள
பிரணவ மந்திரமே. (4)

விநாயகர்

வேறு

310. ஐந்து கரமுந் தோனென்கு
மாறு தலையு நால்வாயு
மடிக ளிரண்டுங் கொம்பொன்று
மத்தி [1]யலர்கற் பகமொன்று
முந்தி யெனப்பாய் மும்மதமும்
ஒருத்தண் முகமும் படைத்தருளு
[2]மொருவன் றனையே யெஞ்ஞான்று
முள்ளன் புருகப் பணிந்திடுவாந்
தந்தை யுடற்செம் பாதியுடன்
றுனோர் பச்சைப் பாதியுங்கண்
[3]டானே ரரையுந் தோடொன்றுந்
தடந்தோ ளிரண்டுங் கிளியொன்றுஞ்
சிந்தை மகிழ்செந் தாளொன்றுஞ்
செழுங்குங் குமஞ்சேர் கொங்கையொன்றுஞ்
சிவகா மித்தாய் தனையென்றுஞ்
செழுங்கோ விலிற்காத் தருள்கென்றே. (5)

---

பிரதிபாடம் :—

1. அத்தியல் கற்பகம் ஒன்றும், அத்தியகலக் கற்பம் என்றும்,
2. ஒருவன்றனைப் பேறெஞ்ஞான்றும்,
3. தானேன்றரையும்,

முருகன்

வேறு

311. வெள்ளியும் பொன்னுங் கொழித்தகி லரைத்து
விரிகதிர்த் தரளமுந் துகிருந்
தெள்ளுகல் லோலக் காவிரிப் புலியூர்
சிவகாம சுந்தரித் தாயை
முள்ளரை முளரிப் பொகுட்டில் வீற்றிருக்கு
முதல்வனை முடிதுளங் கிடத்தா
யெள்ளுறப் புடைக்கும் வள்ளி நாயகனை
யினிதுகாத் திடப்பணி குவமே. (6)

திருமால்

புயவகுப்பு

312. மரகதக் கிரிதோள்கள் மகரமைக் கடன்மார்ப
மழைமுகிற் புயன்மேனி [1]வண்ணமேய் தீர்த்தனை
மதகரிக் கிடர்தீர முதலைகக் கிடவாயை
வகிர்கதிர்த் தனியாழி யண்ணலைப் பாற்கட
லுரகமெத் தையின்மீதி லறிதுயிற் றுயில்வோனை
யுலகமுற் றினும்வாரி யுண்ணுமுற் சேட்டனை
யொளிர்சிறைக் கணைவாரி யுலரவிட் டெதிர்போரி
லுறுமரக் கரைநூறு மண்ணலைப் போற்றுதும்
நரைதிரைக் குடில்போக நரகினுக் கிரையான
நரர்தமைத் துதியாமல் நன்மையிற் சேர்த்தேமை
நலிகலிக் கடலேறி நவநிதிக் கரைசேர
நலமிகப் பெருவாழ்வு நண்ணுறக் காப்பவள்
திருவுளத் தினிலேறு தெளிதமிழ்ச் சுவைகூறுந்
[2]தெளிமதிப் புலவோர்கள் மும்மையிற் போற்றிய
சிவகதிப் புலியூரின் மருவுதற் பரையான
திருவருட் சிவகாமி யம்மையைக் காக்கவே. (7)

பிரமன்

வேறு

313. நால்வகைத் [3]தோற்றமு மெழுவகைப் பிறவியும்
நண்ணுமிரு வினையும்வழுவா
நான்குபத் தெண்மர்க்கு முப்பத்து முக்கோடி
நாதர்க்கும் மற்றெவர்க்கும்

---

பிரதிபாடம் :—

1. வண்ணமெய்த் தீர்த்தனை
2. தெரிமதி
3. தோற்றமுடன் எழுவகை.

பால்வகை வகுத்தண்ட முழுதும் படைத்தினிய
பதுமபீ டத்திருக்கும்
பரமனைப் பிரமனைக் குரவனைக் கரமலர்ப்
பதஞ்சொரிந் தஞ்சலிசெய்வாம்
மால்வகைச் செபமாலை வலையமொரு கையினின்
மழலைவாய்க் கிள்ளையொருகை
மருங்கொருகை யொருகையிற் பல்மலரும் வைத்தினிய
மன்னுயிர்க் கருள்சுரக்குஞ்
சூல்வகை யறிந்திடச் சிவனலது சுருதியுஞ்
சொல்லொணு வதிரகசியஞ்
சோதியதி காரசிவ காமசுந் தரிதனைத்
தொழுதுகாத் தருள்புரியவே. (8)

திருமகள்

வேறு

314. பல்லுயிர்த் தொகையாவும் வல்லிதிற் காட்டிய
பிள்ளையைப் பெறுதாயை வெல்ல விற்பூட்டிய
பல்லம்விட் டடலாதி வள்ளலைத் தாக்கிய
பலவயத்தனை யீனு நல்லகற் பாட்டியை
மல்லலுற் றுலகேழு மொல்லையிற் பூத்தொளிர்
வல்லிதழ்ச் சுருள்போல விள்ளுகொப் பூழ்ப்பரன்
வல்லுரத் தினில்வாழு மெல்லியைப் பாக்கிய
வல்லியைத் தொலையாத செல்வியைப் போற்றுதும்
மல்லுடுக் கண்ணேர மல்லிகைப் பூப்பல
கொள்ளுமைக் குழலாளை முல்லையிற் பொற்கவி
னெல்லையிற் றணியாளை வள்ளையிற் காட்டிய
வள்ளினைப் பொருசேலை வெல்லுகட் சேப்பியை
செல்லலுற் றவர்வாதை யெல்லைவிட் டோட்டிய
புல்லுமெய்ச் சிவலோக மொல்லையிற் காட்டிய
செல்வமுற் றியவாழ்வை யள்ளிவைத் தாட்டிய
தில்லையிற் சிவகாம வல்லியைக் காக்கவே. (9)

கலைமகள்

வேறு

315. முத்திக்கு வித்தாகி ஞானக் கொழுந்தாகி
முதிரும்வேர்ச் சுருதியாகி
முடியாத சங்கீத சாகித்தி யங்களே
முலையரும் பாகிமலர்க்கண்

சித்திதரு சத்தமுஞ் சோதிடமு மாகியே
செந்தளிர்க் கைகள்கலையாய்த்
தித்தித்த பேரின்ப நற்கனி பழுக்குஞ்
செழுங்கொடி தனைப்பணிகுவாம்
பத்தியாய்ச் சந்திரன் சூரியன் கண்களாய்ப்
பகிரண்ட மகுடமாகிப்
பாதலம் பாதமாய் மாதிரந் தோள்களாய்ப்
படிகடல் நிதம்பதடமா
யுத்தரிக மேகமாய்ச் செம்பொன்மலை வெள்ளிமலை
யுபையகொங் கைகளாகியே
யுலகமாய் விளையாடு சிவகாம சுந்தரியை
யுலவாது காத்தருளவே. (10)

சப்தமாதர் முதலியோர்

316. சத்தமா தாவையும் நவசத்தி மாரையுந்
தகுபத்திர காளிதனையுஞ்
சந்திரசூ ரியர்தமையு முப்பத்து மூத்தேவர்
தமைவீர பத்திரர்தமையுஞ்
சித்தமகிழ் [1]திருவொத்த யாமத்தர் தம்மையுஞ்
சிவபூத கணர்தம்மையுஞ்
சிவகங்கை ஞானபர மானந்த சத்தியொடு
தீர்த்தசத் திகடம்மையு
மெத்திசையு மேற்றிடும் பிரமசா முண்டியுட
னெண்டிக்குப் பாலர்தமையு
மிருவருக் கொருவரையு மொருவருக் கிருவரையு
மெப்பொழுது மேபணிகுவாம்
முத்திதரு சிவகாம சுந்தரி திருக்கோவில்
மூதண்ட கோளமளவு
முடியாத பாதலமு மப்புறமு மிப்புறமு
முறைமையிற் காத்தருளவே. (11)

---

## செங்கீரைப் பருவம்

---

317. ஒருவாறு முணர்வரிய பிரமத்தி லொருசோதி
யுற்பத்தி யாகியதுநீ
யொருசிறிய பச்சைப் பசுங்குழவி யாகியே
யோரைந்து [2]முத்தியுலகம்

---

பிரதிபாடம் :—
1. திருவொத்தர்.
2. மூர்த்தியுலகம்.

வருநாத மாம்ஞான தவிசில் விளையாட
வருசரா சரமுமாட
மல்காந்து மெல்லக் கவிழ்ந்துவிளை யாடவே
மன்னுயிர்கள் யாவுமாட
விருதாளு மூன்றியிரு கையுமூன் றித்தலை
யெடுத்துத் தவழ்ந்திடவுமே
யிருவினையு மின்பமுந் துன்பமுந் தலையெடுத்
தெப்புவன முந்தவழவே
திருவாழ்வு தரமன்றில் விளையாட வருகுழவி
செங்கீரை யாடியருளே
தில்லைமா நகர்மருவு சிவகாம வல்லியே
செங்கீரை யாடியருளே. (1)

318. ஆதார சத்தியன் பத்தொருவர் யாழ்வீணை
தாளமா குளியராக
மமருமுப் பத்திரண் டறுபத்து நாலுமித்
திறமாதி பாடியாட
சூதான மானகுண் டலிசத்தி நடுநிலைச்
சுழிமுனை சத்தியுடனே
துலங்குமிடை பிங்கலைச் சத்திய ருணைக்கண்டு
தொழுதுநட னங்களாடப்
பாதார விந்தமலர் பரவியருள் பாடவே
பஞ்சகிர்த் தியசத்தியாய்ப்
பத்திசேர் நாற்பத்து முக்கோண சத்தியொடு
பரசுதிரு புரசத்தியுஞ்
சீதாம் புயத்தவசி லருகுவிளை யாடநீ
செங்கீரை யாடியருளே
தில்லைமா நகர்மருவு சிவகாம வல்லியே
செங்கீரை யாடியருளே. (2)

319. பவளவார் சடையாட மாணிக்க மணியொளிரு
படம்விரித் தாடவரவம்
பத்துபிறை யக்கறுகு கொக்கிறகு மாடவிரு
பக்கநடு முக்கணுடைத்
துவள்வார் குழையாட அவியாது புகையாது
சுடருமொரு கையிலாடத்
துடியாட வொருகை யொருகையஞ் சலென்றிடச்
சுற்றியொரு கையாடவே

தவளவாய்ச் சில்லரிக் கிண்கிணிக் குஞ்சிதத்
தரளதா மரையாடநற்
றுள்தா மரையொன்று முயலகன் முதுகொன்று
தருசிலம் புடனுடவே
திவளவான் முறுவலுட னம்பலவ ராடநீ
செங்கீரை யாடியருளே
தில்லைமா நகர்மருவு சிவகாம வல்லியே
செங்கீரை யாடியருளே. (3)

320. பரிமளக் குழலிலணி பொற்பாளை பொற்சுட்டி
பருதிபிறை பட்டமாடப்
பத்தியாய் வச்சிரக் குழையாட காதினிடை
பலமணிக் கொப்புமாட
மரகதப் படலமணி மகரமக ரிகையாட
வாகுவலை யங்களாட
மாணிக்க மெல்வளையு முன்கையின் முதலரியு
மருவுபொற் சரியுமாட
அரதன மதாணியுட னுதரபந் தனமாட
வணியுமே கலையுமாட
வாடகப் பாடகங் கிண்கிணி சதங்கையும்
அலம்புமிரு சிலம்புமாட
திருவுள மகிழ்ந்துசிற் றம்பலவ ராடநீ
செங்கீரை யாடியருளே
சிவசிதம் பரமருவு சிவகாமி யம்மையே
செங்கீரை யாடியருளே. (4)

321. மறிதிரைப் புணரியைப் புணருவாய்ப் புனலுண்டு
மாலிருஞ் சூல்கொண்டுமின்
மழைகிடந் துருமிடுஞ் சுடர்மணிக் குடுமிநெடு
மால்வரைச் சாரல்சேருங்
குறுவிழிப் புகர்முகக் களிநல்லியா னைக்குலங்
குவடுகுலு றப்பிளிறிவெண்
கோடலைத் தோடமுட் காடகத் தடைகின்ற
கோளரிக் குருளைமுட்காந்
தெறும்வலிக் களிநிமிர்த் துளைசிலிர்த் தழல்சிந்த
வெரிகண் டிறந்துநெடுவா
லெடுத்துடன் முறுக்கிப் புடைத்துமுழை வாய்பிளந்
திவர்கற் பதுக்கைநெறியத்

தெறிவுறு குறிஞ்சிவரு [1]வேடனைப் பெறுகுழவி
செங்கீரை யாடியருளே
சிவசிதம் பரமருவு சிவகாமி யம்மையே
செங்கீரை யாடியருளே. (5)

வேறு

322. அல்லி மலர்த்தவி சேறி யிருந்துல
[2]கன் றீ கின்றோனு
மல்லர விற்றுயி லாதி புரந்துள
வின்றாய் நின்றோனும்
வல்லை யழித்தழி யாது நடம்புரி
மஞ்சு ணஞ்சோனும்
வல்லி யிடைச்சசி மாதிரு கொங்கை
மணந்தோ யுங்கோவு
மெல்லை யின்முத்தமிழ் மூவரு மன்பிய
லெஞ்சா நெஞ்சோரும்
எள்ளரு மெய்ப்புலி யோடு பதஞ்சலி
யென்போருங் கூடி
சில்லரி வச்சிறு பாதம் வணங்குமை
செங்கோ செங்கீரை
தில்லை நகர்ச்சிவ காம சவுந்தரி
செங்கோ செங்கீரை.

323. அவ்விய முற்றிடு லோக [3]வசந்தரை
யங்கோ டிங்கோடு
மவ்வுட லுற்றுயி ருசல் பொருந்து
மற்பாவஞ் சோர
வெவ்விய துக்க சுகானு பவங்கள்
வெறும்போ கம்போக
விள்ளரு முத்தி பெறாத வரும்பெறல்
வெம்பா சம்பாறத்
தவ்வில மத்தள தாள வளத்தொடு
சங்கீதங் கோடி
சல்லரி யொத்திட ஞான நடம்புரி
தண்டாள் கண்டோர்கள்

பிரதிபாடம்:—

1. கிழவனை.
2. கின்றீகின்றோனும்.
3. வசுந்தரை.

திவ்விய முற்ற சபாபதி பங்கினை
செங்கோ செங்கீரை
தில்லை நகர்ச்சிவ காம சவுந்தரி
செங்கோ செங்கீரை. (7)

324. கூறுரு வைத்தெரி யாடி கரத்தொரு
கோதை யெடுத்ததுபோற்
கோல மதிக்கதிர் வாயி லெடுத்தெழு
கோளர வைக்குலைவாய்ப்
பீறி யெடுத்து நிலாவு மெறித்திட
வோடி நடித்திடுசீர்
பேறு படைத்த கலாப மயிற்பரி
யேறும் விறற்சேயும்
வீறு துதிக்கையோ ரானை முகத்தனை
மாறு துதிக்கை கொடே
வேறு துதிக்கையி னுலடும் வேழமு
மெத்திசை யுந்தொழுவே
ஆறு சிரத்தைம் முகத்தனு மேத்துமை
யாடுக செங்கீரை
யாதி யெனுஞ்சிவ காம சவுந்தரி
யாடுக செங்கீரை. (8)

325. மாதவ ரன்பு கரைந்த வர்சிந்திய
மாவடு செங்கீரை
வாய்க மரின்பம் விடேலென வந்தருள்
வாழ்வினர் செங்கீரை
கோதறு மஞ்சரி சூடினர் பங்கின
குங்கும செங்கீரை
கோமள மஞ்சன மாடு மிளங்கொடி
கொஞ்சிய செங்கீரை
யோது பசுங்கிளி மேதகு சங்க
முலாவிய செங்கீரை
யூனமில் செந்தமிழ் மாலை புனைந்தனை
யுங்கொடு செங்கீரை
ஆதர வாகி யணங்கின ராடின
ராடுக செங்கீரை
யாதி யெனுஞ்சிவ காம சவுந்தரி
யாடுக செங்கீரை. (9)

326. பாதள முந்திள வாளை யெழுந்துழு
வாளை முனிந்துபலாப்
பழம்விழ வாழைப் பழம்விழ மாவின்
பழம்விழ வும்பாயுந்
தாதவிழ் தாமரை யோடை [1]விழாறு
தடாக நெடுங்கரைசூழ்
தண்கா விரியொடு வண்கா விரிமலர்
தருமணி முத்தாறும்
போதவிழ் சண்பக மாதவி தாதகி
[2]போதணை மாதளைநீள்
பூகம் விளைந்திடு பாகு கரும்புகள்
பொன்சொரி செஞ்சாலி
ஆதிநி றைந்திடு தென்புலி யூரினை
யாடுக செங்கீரை
ஆதி யெனுஞ்சிவ காம சவுந்தரி
யாடுக செங்கீரை. (10)

---

## தாலப்பருவம்

327. ஒருநா லரசும் பசும்பொற்கா
லொருவா யருவா யுருவாகு
மொருமா ணிக்க மணித்தொட்டி
லுருவாய்ச் சிற்றம் பலந்தவிசாம்
அருவாம் பொருளுன் கவைபூட்டி
யாடுங் கதிர்ச்சங் கிலியாக்கி
யகண்ட பரிபூ ரணவீட்டி
லதன்மே லுகந்து துயில்கூரத்
திருநா விருக்கும் பாரதியுஞ்
செழுந்தா மரையிற் செழுந்திருவுந்
திருத்தா ரணியு முருத்திரையுந்
[3]திரோதா னத்தின் மனோன்மணியுந்
தருசீ ராட்டும் பெரியபரா
சத்தி தாலோ தாலேலோ

---

பிரதி பாடம்:—

1. வழாறு.
2. போதனை, போதளை.
3. திரோதாசத்தி.

தண்ணம் புலியூர்ச் சிவகாமித்
தாயே தாலோ தாலேலோ. (1)

328. ஒருதாய் வயிற்றும் பிறவாமே
யொருவர் முலையு முண்ணுமே
யுந்திக் கொடிவர் ளொசியாமே
யுருவத் தவசி லுகளாமே
வரிவிற் புருவம் பிறழாமே
மைக்கண் முகிழ்த்து விழியாமே
வள்ளைக் குழையும் பிடியாமே
மணிவா யதரந் துடியாமே
வெருவிக் கனவின் மருளாமே
விம்மிக் குரலுங் கம்மாமே
மிளிர்பூந் தொட்டி லுதையாமே
விரலூ றமுதஞ் சுவையாமே
தருநாண் மதிபோல் நாடோறும்
வளர்வாய் தாலோ தாலேலோ
தண்ணம் புலியூர்ச் சிவகாமித்
தாயே தாலோ தாலேலோ. (2)

329. கல்லோ லங்க டாலாட்டக்
கவிகைப் படத்து மாணிக்கக்
கல்லா யிரங்கள் விளக்கெரிப்பக்
கடற்கட் செவிப்பூந் தொட்டிலிலும்
மெல்லா வுலகு மெடுத்துண்டாங்
கெழிலா லிலைப்பூந் தொட்டிலிலு
மிருகண் டுயிலு மாண்பிள்ளைக்
கிளைய பச்சைப் பெண்பிள்ளாய்
தொல்லா யிரத்தெட் டண்டமெல்லாந்
துலையா நூற்றெட் டுகம்புரக்குஞ்
சூரைத் துலைக்குஞ் சரவணப்பூந்
தொட்டிற் குழவி தனைப்பெற்றே
சல்லா பத்தின் றாலாட்டும்
மதலாய் தாலோ தாலேலோ
தண்ணம் புலியூர்ச் சிவகாமித்
தாயே தாலோ தாலேலோ. (3)

330. எள்ளில் விளைந்த நறுந்தயில
முச்சிக் கணிந்து பசுந்தாது

[1]மிளம்பச் சறுகு மரிசனமு
மிலங்கத் திமிர்ந்து வான்கங்கை
யள்ளித் திரட்டும் புனலாட்டி
யலர்பூந் துகிலா னீர்துவட்டி
யணிமூக் குருவி விழியூதி
நிலக்காப் பணிந்தஞ் சனமெழுதி
யுள்ளங் குளிரத் திருமுகத்தி
னொருதண் மதியி னிளம்பிறைமூன்
றுதித்த தெனவெண் பொடிசாத்தி
யொளிர்சித் தாடை யணிபூட்டித்
தள்ளி மணித்தொட் டிலிலாட்டும்
மதலாய் தாலோ தாலேலோ
தண்ணம் புலியூர்ச் சிவகாமித்
தாயே தாலோ தாலேலோ. (4)

331 தேனே கரும்பே சருக்கரையே
தெவிட்டா வமுதே யுவட்டாத
செல்வச் செருக்கே தருக்கான
செஞ்சொற் கிளியே செழுங்குயிலே
மானே பிடியே மடமயிலே
வாழைப் பழத்தின் பலாப்பழத்தின்
மதுரம் பழுத்த மாம்பழத்தின்
வடித்தே யெடுத்த தேன்குழம்பே
யூனே யுயிரே யுயிர்க்குயிரே
யுள்ளே புறம்பே நடுவேவா
மொளியே வெளியே யொளிக்கொளியே
யொளியில் விளைந்த கருணையெல்லாந்
தானே வடிவாய் வந்துதித்த
மதலாய் தாலோ தாலேலோ
தமிழ்சேர் புலியூர்ச் சிவகாமித்
தாயே தாலோ தாலேலோ. (5)

---

பிரதிபாடம் :—

1. மின்பச்சறுகும்.

### வேறு

332. கொற்றாய் மறையோ துற்றாய் தாலோ தாலேலோ
கொப்பாய் குழையாய் பொற்பாய் தாலோ தாலேலோ
விற்றாய் விளைவாய் வைத்தாய் தாலோ தாலேலோ
வெற்பாய் வெளியாய் நிற்பாய் தாலோ தாலேலோ
முற்றே வரையே பெற்றாய் தாலோ தாலேலோ
முத்தே மணியே சித்தே தாலோ தாலேலோ
நற்றூர் புலியூ ருற்றாய் தாலோ தாலேலோ
நற்றாய் சிவகா மித்தாய் தாலோ தாலேலோ. (6)

333. நச்சா ருளமே கச்சாய் தாலோ தாலேலோ
நச்சா ரரவக் கச்சாய் தாலோ தாலேலோ
வைச்சே [1]முலையாய் விச்சே தாலோ தாலேலோ
மற்றா ருனையார் பெற்றார் தாலோ தாலேலோ
இச்சா கிரியா சத்தி தாலோ தாலேலோ
யெப்போ தெனைவாழ் விப்பாய் தாலோ தாலேலோ
விச்சா தரர்பூ சிப்பாய் தாலோ தாலேலோ
மெய்த்தாய் சிவகா மித்தாய் தாலோ தாலேலோ. (7)

334. முற்றா முலையாய் முற்றா வலியாய் தாலேலோ
முத்தா நதியாய் நற்கா விரியாய் தாலேலோ
பொற்றா மரைமே னற்கோ மளமே தாலேலோ
பொற்பூர் புலியூ ரிற்பூ ருவமே தாலேலோ
கற்றா ருளம்வாழ் சொற்கோ கிலமே தாலேலோ
கைக்கே செபமா லைக்கே கிளியாய் தாலேலோ
வெற்றாய் வெளியுள் ளூற்றா யொளியாய் தாலேலோ
மெய்த்தாய் சிவகா மித்தாய் தாலோ தாலேலோ. (8)

335. பொற்பூ மணமே பொற்பூ நிறமே பூமாதே
பொற்கே க்யமே சொற்கா வியமே பூவாயே
தற்பூ ரணமே தற்கா ரணமே தாவாதே
தற்போ தமெலாம் விட்டே யகலா தார்வாழ்வே
கற்பூ ரவிபூ தித்தூ ளிதநீள் காபாலி
கட்கா மினிமோ கக்கா தலிநீ கர்மாரி
விற்போ னுதலாய் வெற்போன் மதலாய் தாலேலோ
மெய்த்தாய் சிவகா மித்தாய் தாலோ தாலேலோ. (9)

---

பிரதிபாடம் :—

1. முளையாய்.

336. எக்கா லமுமே நிற்பாய் நீயே வீயாதே
யெத்தே வருமே செத்தே போவார் சாவாதே
அக்கார் விடமே துய்த்தார் பரனீ யானுதே
யப்போ தமிர்தாய் வைத்தாய் வேயார் தோளாயே
தக்கோர் தமைவாழ் விப்பாய் தாயே மாதாவே
தப்பா நிதியே பொற்பார் கோதாய் கோமாதே
மிக்கா ருனையா ரொப்பார் விமலாய் தாலேலோ
மெய்த்தாய் சிவகா மித்தாய் தாலோ தாலேலோ. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

337. கட்டுறு சுருங்கிடைத் துடிகொட்டி வட்டம்வரு
கடவுள்கொடு கொட்டிநடனங்
கண்டுதா ளங்கொட்ட வுனது செங் கையினுற்
கற்றிடக் கொட்டுவதுபோற்
கொட்டமிடு மவுணர்வாய் குருதிகொட் டப்புடை
குடைந்துகுடர் மாலையிட்டுக்
கொட்டிநட மிட்டிடுங் கொட்டாத நெட்டிலைக்
குடுமிவேற் குழவிமுத்த
மிட்டுமுத் தாடவா வென்றுகைக் கொட்டல்போ
லினியமுத் தமிழமிழ்த்தி
யிருகைமலர் கொட்டல்போ லெட்டுமிரு பத்துநா
லெட்டிலக் கத்தவர்க்கும்
சட்டுவத் திட்டமுது கொட்டுமுன் கையினுற்
சப்பாணி கொட்டியருளே
தற்பரா சத்தியே சிவகாமி யம்மையே
சப்பாணி கொட்டியருளே. (1)

338. முட்டா மறைப்பொருட் டரசனுங் குரைகடல்
முகட்டர வணைச்செல்வனுங்
முக்கட் டிருக்கடவு ளுங்கண்டு முடிபணிய
முறைமுறை யழைத்துலகெலாங்

கட்டாக நீபடைத் திடுகநீ காத்திடுக
களைகநீ யென்றுவெள்ளைக்
கலையுடன் பொன்னிறக் கலையுடன் ரேழுடைக்
கலையுமே யருள்கையினை
லெட்டாத பேரின்ப மெட்டவரு மந்திர
மிசைத்திடு பசுங்கிள்ளையு
மெட்டினையு மறவா திரட்டுசெப மாலையு
மென்றுநா லெட்டறமுமே
தட்டாது வைத்தளித் திடுமுனது கையினாற்
சப்பாணி கொட்டியருளே
தற்பரா சத்தியே சிவகாமி யம்மையே
சப்பாணி கொட்டியருளே. (2)

339. கற்பகத் தருவுமே நீலநிதி பதுமநிதி
கள்ளமுற்ற துதேனுவுங்
கட்டுமுட் டுண்டது கொடுத்திடுங் கொடையினிற்
கடைபடுஞ் சிந்தாமணி
பொற்புலவு சங்கநிதி பங்கமுறு சலமுறும்
பொழியுமழை முகில்குமிறிடும்
புவிமீது நவநிதிய நல்நீதி யாகவே
புகலா துலர்க்குமுதலா
மற்புதமு நித்தியமு மட்டமா சித்திகளு
மகிலவலை யம்புரக்கு
மத்திறமு முத்தியு மளிக்குமோ வென்றுநின்
னங்கைமலர் கொட்டுவதுபோற்
தற்பர கலாசத்தி சகலாக மத்தியே
சப்பாணி கொட்டியருளே
தற்பரா சத்தியே சிவகாமி யம்மையே
சப்பாணி கொட்டியருளே. (3)

340. அடிதொடங் கிப்புடையு மிடையுள்ளு முடிகாறு
மடையுமைம் பொறிவிடையமு
மாசையொடு வெகுளியு மயக்கமொடு முக்குணமு
மலகிலிடை பிங்கலையுமோ
ரிடைகிடந் தலம்வந்து திரிநனவு கனவுமற்
றிறைவிநின் னடிபற்றியே
யிலகுமெய்ச் சிவயோக ரிதையமலர் கொட்டியே
யிருகைமல ருங்கொட்டவே

படியடங் கலுநின்று பார்த்திடந் தோறுநின்
படிவமே கண்டுபணியும்
பரமஞா னியர்கள்கண் களித்தங்கை கொட்டவே
படருமுக் காலமுணரும்
சடிலமுனி வர்கள்கண்டு தமதங்கை கொட்டவே
சப்பாணி கொட்டியருளே
தற்பரா சத்தியே சிவகாமி யம்மையே
சப்பாணி கொட்டியருளே. (4)

341. ஐவரைப் பெற்றே வளர்த்திடுங் கையினு
லைந்தொழிலு மருள்கையினு
லைம்பெரும் பூதம மைத்திடுங் கையினு
லலகிலா வுயிரனைத்தும்
பைவரு குரம்பையி லடைத்துவிளை யாடுசிறு
பம்பரச் செங்கையினுற்
பற்றுயம ராசன்வரு போதஞ்ச லென்றெமைப்
பாதுகாத் தருள்கையினுல்
மொய்வரைக் கரசன்மக ளாகிமுக் கண்ணனுர்
முழுமணக் கோலமதனில்
முளரிமலர் விரல்கொடுத் தருள்கையி னுலிள
முலைத்தழும் போடுவளையற்
றைறவரு தழும்புவைத் தருள்கையி னுலினிய
சப்பாணி கொட்டியருளே
தற்பரா சத்தியே சிவகாமி யம்மையே
சப்பாணி கொட்டியருளே. (5)

வேறு

342. வெட்சி மலர்ப்பத மொப்ப நடப்பது
கற்ப வனப்பேடை
மெச்ச நடித்து வியப்பொடு கற்பன
பச்சைமயிற் சாயல்
கட்சி வனக்குயில் பச்சை மடக்கிளி
கற்பன சொற்பூவை
கட்கம லச்செய லொப்ப வரிப்பெடை
கற்ப வுனைப்போல
வெட்செய லெத்தனை கற்றில மெப்படி
நிற்ப வெனக்கூடி

வெட்கின வெட்கி யிருப்ப திலச்சை
யற்ப மெனப்பேசி
கொட்சிறை கொட்டுவ கட்டழ குற்றவள்
கொட்டுக சப்பாணி
குற்ற மகற்றிய பொற்பி லிசைக்கொடி
கொட்டுக சப்பாணி. (6)

343. முத்து நிரைத்தபல் முக்கனி யொத்தசொல்
முச்சி மலர்க்கோதை
முத்தமிழ் சொற்கழ கத்தமர் பொத்தக
முத்தி யருட்பாதம்
வித்துரு மத்தினை யொத்த சிவப்பிதழ்
மெச்சிடைக் கச்சோதம்
வெற்றி நுதற்சிலை மைக்கண் மலர்க்கணை
வெற்பு முலைப்பூவை
யுத்தமி பத்தினி கற்பு மிகுத்தனி
யுற்றொளிர் பொற்றேளி
யுற்பல கைத்தலி பச்சை நிறப்பிடி
யொப்பிடு மத்தாணி
கொத்துறு தத்துவ மத்தி லிருப்பவள்
கொட்டுக சப்பாணி
குற்ற மகற்றிய பொற்பி லிசைக்கொடி
கொட்டுக சப்பாணி. (7)

344. பச்சை நிறத்தி மிகுத்த சிவப்பி
பளுங்கின் வெளுப்பான
பற்பல சத்தினி பத்தி விளக்கிடு
பத்த ருளக்கோயி
லிச்சையி லுற்றனை துச்சி லெனத்தளி
விட்டிலை பொற்பாத
மெற்குளம் வைத்தனை கற்குள முற்ற
வெழிற்கம லப்போதின்
அச்சுத னச்சுத னச்சுழி வுற்றழி
வுறவே ரதிக்காக
வற்பி னெழுப்பி மலர்க்கணை யிக்கு
மளித்த மலர்ப்பாணி
குச்சரி கச்சரி கச்ச புடத்தொடு
கொட்டுக சப்பாணி

குற்ற மகற்றிய பொற்பி லிசைக்கொடி
கொட்டுக சப்பாணி. (8)

345. நித்தில முத்தரு வித்தெரி யற்பெரு
நெட்டுரு விற்சூழ
நெட்டர வத்தெழு செக்கர் மணிச்சுட
ருச்சி முடிப்பூணக்
கைத்தல சக்கர நற்பரு திச்சுடர்
பக்க முறச்சீத '
கட்கம லச்சுனை மிக்க [1]விழிக்கிணை
கட்டழ கிற்காண
வைத்த நகைப்பெரு வட்ட மணிச்செவி
யிட்ட குழைகோல
வற்புறு பச்சை நிறக்கழை போற்புய
மச்சுத னொப்பான
கொத்துறு வெற்பர சற்கொரு புத்திரி
கொட்டுக சப்பாணி
குற்ற மகற்றிய பொற்பி லிசைக்கொடி
கொட்டுக சப்பாணி. (9)

346. கற்ற வருக்கருள் கற்பக மைப்புய
லொத்த கழைத்தோளி
கற்புர நற்புழு கப்பிய பொற்கள
பத்தொடு கத்தூரி
யுற்றிடு மத்தக மொத்த தனத்திரு
யுத்தமி யிப்பூவி
லொப்பென [2]வைத்திட லெப்புவ னத்திலு
மொப்பிலி பற்றுரை
வெற்றிகொள் முக்கணி பொற்கணி யக்கணி
வித்தகி முத்தார
வித்துரு மப்பணி சித்திர நற்பணி
மெய்க்கணி பொற்பூணி
கொற்றவை மற்றுள சத்திகள் நத்தினர்
கொட்டுக சப்பாணி
குற்ற மகற்றிய பொற்பி லிசைக்கொடி
கொட்டுக சப்பாணி. (10)

---

பிரதிபாடம் :—
1. விழிக்கணை.
2. வைத்திடு லெப்பு வனத்திலும்,

# முத்தப்பருவம்

347. சுருதி மணக்குஞ் சிவாகமத்தின்
றேற்ற மணக்கும் வடகலைநூற்
றுலங்க மணக்குந் திராவிடத்தின்
சுவையே மணக்கும் பிராகிருத
மருவி மணக்கு முலகளிக்கும்
மகிமை [1]தருமந் திரமணக்கும்
மலையு முருக்கு மியலிசையும்
வளர்மந் திரமத் திமதாரம்
பெருகி மணக்குஞ் சமயநெறி
பிறழாச் சகல சாத்திரமும்
பேதா பேத வகைமணக்கும்
[2]பேரம் பலநா டகத்தாளத்
தரும மணக்குங் கனிவாயிற்
றழைசேர் முத்தந் தருவாயே
தழைக்கும் புலியூர்ச் சிவகாமித்
தாயே முத்தந் தருவாயே. (1)

348. செயிருற் றிடுதீ வினைபோக்குந்
தீராப் பிறவித் துயர்தீர்க்குஞ்
செனிக்கும் பிறவி தொறுஞ்சேர்ந்து
செறிசஞ் சிதமு நீறுக்கும்
பயிலுற் றிடுமா காமியமும்
பழுதாம் பூதப் பவுஷியமும்
பற்றுப் பற்றற் றிடுமாயைப்
பாசிப் பாச வாசனையு
முயிரிற் கலந்த மும்மலமு
மூறுங் களிப்பு மொருங்ககற்று
முமியுந் தவிடு முளையும்போ
லுறுதத் துவத்தின் வேரறுக்குங்

பிரதிபாடம்:—
1. திருமந்திர
2. பேரம்பல நாடகத்தானத்.

தயிரிற் பிறைபோற் சிவமாக்குந்
[1]தழைசேர் முத்தந் தருவாயே
தழைக்கும் புலியூர்ச் சிவகாமித்
தாயே முத்தந் தருவாயே. (2)

349. முத்தார் நகையால் முத்தநின்பால்
முகமா மதியால் முத்தநின்பால்
முகிழ்க்கூந் தலினல் முத்தநின்பால்
முலையா னையினல் முத்தநின்பால்
நத்தார் களத்தால் முத்தநின்பால்
நயனக் கயலால் முத்தநின்பால்
நடுக்கட் செவியால் முத்தநின்பால்
நறுநெற் படியால் முத்தநின்பால்
கைத்தா மரையால் முத்தநின்பால்
கன்னற் சிலையால் முத்தநின்பால்
கழைத்தோ ளதனல் முத்தநின்பால்
கனிவாய் முத்த முனக்கரிதோ
சத்தாய்ச் சித்தாய்ச் சத்சித்தாய்த்
தகைசேர் முத்தந் தருவாயே
தழைக்கும் புலியூர்ச் சிவகாமித்
தாயே முத்தந் தருவாயே. (3)

350. மச்சத் துழியிற் பிறந்தமுத்தம்
வராகத் திடையிற் பிறந்தமுத்தம்
மார்பத் தணியும் வேயீன்ற
மணிவாய் முத்தஞ் சுவைத்தருளும்
பச்சைக் கிளியே மாணிக்கப்
பவழக் கோவைக் கனிவீழிப்
பழமா துளமிந் திரகோபம்
பங்கே ருகப்பூ முருக்கிலவ
முச்சித் திலக மரக்காம்பல்
லுறழும் பசுந்தேன் கசிந்தூறு
முள்ளும் புறம்பு மணநாறு
முனது கனிவாய் மணிமுத்தஞ்

---

பிரதிபாடம்:—

1. தகைசேர்

சச்சைச் செழுங்கும் குமதனத்தாய்
தகைசேர் முத்தந் தருவாயே
தழைக்கும் புலியூர்ச் சிவகாமித்
தாயே முத்தந் தருவாயே. (4)

351. கண்ணு னுனது மலர்ப்பாதங்
கண்டே களிக்க விருகரமுங்
கமழ்பூ மலரால் பூசிக்கக்
காலுன் கோயில் வலஞ்செய்ய
எண்ணார் செவிக்குள் நின்கீர்த்தி
யிசையே கேட்கத் தலைவணங்க
வேழேழ் சென்ன மெடுத்தாலு
மென்னா நின்னைத் தொழுதேத்தப்
பெண்ணா ரமுதே மலையரையன்
பெற்ற மதலாய் உலகமெல்லாம்
பிறக்க வேண்டிப் பிறந்தபிள்ளாய்
பேரா னந்த வெள்ளத்திற்
தண்ணா ரமுதச் சுவையூறுந்
தகைசேர் முத்தந் தருவாயே
தழைக்கும் புலியூர்ச் சிவகாமித்
தாயே முத்தந் தருவாயே. (5)

வேறு

352. அகில முற்றும் பலவுயிர்க்குந்
திடமளிக்குஞ் சடமெனு
வருடமைக் கும்படி யளிக்குந்
தொழிலுடைப்பங் கயனும்வாழ்
சிகர வெற்புந் திகிரிவெற்புஞ்
செகமனைத்துஞ் சுழலவே
திரைகடற்செம் [1]புனலலைக்குஞ்
சுதையளிக்கும் புயனும்வான்
ககன முற்றுங் குடியிருக்குங்
கடவுளர்கொன் றிடுவதோர்
கடுவினைத்தின் றுயிர ளிக்குங்
கருணைவைக்கும் பரனுமே
தகவு னைக்கண் டவர்துதிக்குந்
தருகமுத்தந் தருகவே
சபையி னிற்சுந் தரியெமக்குந்
தருகமுத்தந் தருகவே. (6)

---

பிரதிபாடம்:—1. புனல்கலக்கும்.

353. கனல்விளைக்குங் கிளையின் முத்தங்
கதமெ ழிரிக்கண் பொரியுமே
கடுந டைச்செம் புகர்முகத்தின்
கரியின்முத்தங் கரியுமே
புனல் விளைக்கும் புயலின் முத்தம்
கதறிடிக்கண் சிதறுமே
புதுமதிக்கண் டிகழு முத்தங்
குறுமுயற்கொண் டொளிருமே
தினவிளைக்கும் கழையின் முத்தந்
திருகணிக்கண் குழையுமே
செறியிதழ்ச்செங் கமல முத்தங்
களிறினிச்சென் றுளருமே
தனதுமுத்த முனது முத்தந்
தருகமுத்தந் தருகவே
சபையி னிற்சுந் தரியெமக்குந்
தருகமுத்தந் தருகவே. (7)

354. சிமிழினிற்றண் டரள முத்தஞ்
செகமனைத்தும் பெறினுமே
சிறிது மத்தங் கதிபெறச்சிந்
தையினினைக்குங் குறியிலேங்
[1]குமிழினிற்றண் டரள முத்தங்
குளிர்மதிப் பிஞ்செனினுமே
கொளநினைக்கும் பரிசி லேக்குங்
குமமணக்குங் கமுகின்வா
யமிழ்தினிற்றண் டரள முத்தங்
ககிலகற்பங் கெடினுமே
யழிவில் பொற்பங் கதுவெமக்கும்
பெறுதல் சற்றுங் கருதிலேந்
தமிழ்மணக்குங் குமுத முத்தந்
தருகமுத்தந் தருகவே
சபையி னிற்சுந் தரியெமக்குந்
தருகமுத்தந் தருகவே. (8)

---

பிரதிபாடம்:

1. குமிழிநிறத்தண்டரள முத்தம்.

355. குமரி வெற்பன் குமரிதக்கன்
குமரிமுற்றுங் குமரியே
குமரர் முக்கண் குமரர் முக்கண்
குமரர்பெற்றுங் குமரியே
அமர ருக்கங் கமராரைக் கொன்
றமர்தவிர்த்த வமரியே
யமரி நற்சங் கரிமுலைக்குஞ்
சரிநிலைப் பொன் சிகரியே
திமிர முட்குந் தினகரற்குங்
கிரணமுய்க்குங் கருணியே
திருமகட்குங் கலைம கட்குந்
திறமளிக்குந் தமரியே
தமரின் முத்தந் தமரின் முத்தந்
தருகமுத்தந் தருகவே
சபையி னிற்சுந் தரியெமக்குந்
தருகமுத்தந் தருகவே. (9)

356. வலையி னிற்செங் கயலையுய்க்கும்
பிணையையச்சம் புரியுமா
வடுவை யுப்பின் படலவிக்குங்
கடுவிணைப்பின் றொடருமே
யலையி னைச்சென் றலைய்வைக்குஞ்
சுதையினைத்தின் றுமிழுமே
யலரி னைச்சென் றலர்படுக்கும்
பகழியைக்கண் டிகழுமே
கொலைப டைக்குஞ் சமனிறக்கும்
படிவிழிக்குங் குமரியே
குறுகி நிற்குங் குழையடர்க்குங்
கமலமைக்கண் கமலையே
தலையளிச்செங் கருணை வைக்கும்
தருகமுத்தந் தருகவே
சபையி னிற்சுந் தரியெமக்குந்
தருகமுத்தந் தருகவே. (10)

## வருகைப் பருவம்

357. மகமே ருவைநேர் கோபுரமோ
வானு டளாவு மாமதிலோ
வளர்பாம் புரியோ வாயிற்காவ்
மணிமண் டபமோ காவணமோ
அகமே மகிழ்கல் லூரிகளோ
வணிமா ளிகையோ சூளிகையோ
[1]வளர்பூங் கொடிஞ்சி நெடுந்தேரோ
வணிவீ திகளோ பலகோடி
உகமே விளங்குஞ் சினகரமோ
ஒளிர்கற் றளியோ நேர்த்திகளோ
யுயர்சா ளரமோ வாவியமோ
லொன்று லொன்றுங் குறைவில்லாச்
செகமே புகழும் புலியூர்வாழ்
திருவே வருக வருகவே
தேயா மதியே சிவகாமித்
தாயே வருக வருகவே. (1)

358. நந்தா வனங்கள் பூவிசிறி
நனைதேன் சுவறித் தான்விசிற
நறும்பொற் பாளை யிணைக்கவரி
நாளி கேரங் கமுகிரட்ட
மந்தா நிலம்பன் னீர்தெளிப்ப
மலர்த்தா மரைகள் விளக்கெடுப்ப
மணியாழ் ஞிமிறு வாசிப்ப
மயில்க ளாடக் குயில்பாடக்
கொந்தா ரிலவ மாலவட்டங்
கூந்தற் கமுகு குடைபிடிப்பக்
குவளை விழிப்பச் செஞ்சாலிக்
குலவேந் தரசு கொலுவிருக்குஞ்
சிந்தா மணிப்பொற் புலியூர்வாழ்
திருவே வருக வருகவே
தேயா மதியே சிவகாமித்
தாயே வருக வருகவே. (2)

---

பிரதிபாடம்:

1. அலர்.

359. கருந்தா முளகக் கடைசியர்த்ங்
கண்ணே தண்ணீ ரிடைசுழலக்
கயலா மெனவே கிழநாரை
கரைவாய் கவரக் காத்திருக்கும்
பருந்தாழ்ந் திறைஞ்சப் பறந்து சுற்றும்
பள்ளப் பயல்கள் பறிதூக்கும்
பழமீன் கரும்பின் முத்துநிலாப்
பார்த்தே மலர்த்தா மரைமுகிழ்க்கும்
பெருந்தாழ்க் குவளை முகையவிழ்க்கும்
பிள்ளை யெனச்சூற் சங்கணைக்கும்
பெடைமென் குமரி மடவன்னம்
பெறுமுட் டைகளென் றடைகிடக்கும்
செருந்தாழ்ச் சோலைப் புலியூர்வாழ்
திருவே வருக வருகவே
தேயா மதியே சிவகாமித்
தோய வருக வருகவே. (3)

360. வாழ்வே வருக வெமதுகண்ணின்
மணியே வருக மணியூடு
வந்தே விளங்கு மொளிவருக
வளரு [1]மொளிக்கு மொளிவருக
தாழ்வே யகலும் சிவம்வருக
தழைக்குஞ் சிவத்தின் செயல்வருக
சகல வுயிர்க்கு முயிர்வருக
சகமு முயிருந் தான்பூத்த
பூவே வருக பூவுலகம்
பூத்தே காய்த்துப் பழுத்தவத்தின்
பொருளே வருக பொருளாகிப்
போகம் விளைக்கு மானந்தத்
தேவே வருக புலியூர்வாழ்
திருவே வருக வருகவே
தேயா மதியே சிவகாமித்
தாயே வருக வருகவே. (4)

---

பிரதிபாடம் :—

1. ஒளிக்குளொளி

361. கொழிக்குங் கருணை மழைமுகிலே
குழையா நறுங்குங் குமக்கொழுந்தே
கொழுங்கற் பகமே கோமளமே
கோமே தகமே மரகதமே
யிழைக்கு மணிப்பூ ணணிகலமே
யிழையா முழுச்சிந் தாமணியே
யெழுந்த வொர்ளிபொன் மலர்க்கொழுந்தே
யெழுபுன் பிறவிக் கொருமருந்தே
தழைக்கும் பெருவாழ் வருள்சிவமே
தவமே ஞானத் தனிவிளக்கே
தமிழ்க்கே யுதவுஞ் சதகோடி
சங்க நிதியே சரோருகமே
செழிக்கும் புலியூர் வாழ்வருக
திருவே வருக வருகவே
தேயா மதியே சிவகாமித்
தாயே வருக வருகவே. (5)

வேறு

362. திரிபுர சுந்தரி வருக வேவெகு
தேவ துரந்தரி வருகவே
தினகர குண்டலி வருக வேமுக
சீதள மண்டலி வருகவே
மரகத வண்கொடி வருக வேமயி
டாசுர சங்கரி வருகவே
வசிகர [1]மங்கலி வருக வேவசு
தேவர் வணங்குமை வருகவே
பரிபுர முண்டகி வருக வேபர
வாதவர் கண்டகி வருகவே
பரசிவ ரஞ்சகி வருக வேபரி
வாகிய நெஞ்சகி வருகவே
கரதல கந்தரி வருக வேகலி
கால புரந்தரி வருகவே
கனக சிதம்பரி வருக வேசிவ
காம சவுந்தரி வருகவே. (6)

பிரதிபாடம் :—
1. மங்களி

363. அரகர சங்கரி வருக வேயசு
ரேசர் பயங்கரி வருகவே
யமலி சுமங்கலி வருக வேயதி
ரூப வலங்கரி வருகவே
சிரகர சிந்துரி வருக வேசிர
மாலி திகம்பரி வருகவே
சிவசிவ வம்பிகை வருக வேசிவ
லோக திரியம்பிகை வருகவே
பரம நிரந்தரி வருக வேபரி
பூரண பஞ்சமி வருகவே
பவள விளங்கொடி வருக வேபற
வாத பசுங்கிளி வருகவே
கருணை தருந்திரு வருக வேகயி
லாய பரம்பரி வருகவே
கனக சிதம்பரி வருக வேசிவ
காம சவுந்தரி வருகவே. (7)

364. குமரி குறுந்தொடி வருக வேகுரா
வேகமழ் கொந்தளி வருகவே
குடமிகர் கொங்கைகள் வருக வேகுட
காவிரி கங்கையள் வருகவே
அமரி பசும்பிடி வருக வேயடை
யார்படை வென்றவள் வருகவே
யடியவர் கும்பிட வருக வேயடி
யேன்மிடி யுங்கெட வருகவே
தமருக விஞ்சையள் வருக வேசதுர்
வேத விபஞ்சியள் வருகவே
தயகுண பஞ்சரி வருக வேசக
லாகம மஞ்சரி வருகவே
கமல முகந்தவள் வருக வேகரு
ணாகர வம்பிகை வருகவே
கனக சிதம்பரி வருக வேசிவ
காம சவுந்தரி வருகவே. (8)

365. அவமதி பொன்றிட வருக வேயழி
யாநிதி தந்திட வருகவே
யகில பவங்கெட வருக வேயக
லாவிப வந்தர வருகவே

சிவகதி தந்திட வருக வேசிவ
போகம் விளைந்திட வருகவே
திருவடி தந்திட வருக வேசெக
மாயை தெளிந்திட வருகவே
குவலைய மூய்ந்திட வருக வேவளர்
கோயில் விளங்கிட வருகவே
குறைக டவிர்ந்திட வருக வேகொடி
யேனும் வணங்கிட வருகவே
கவலை தவிர்ந்திட வருகவேகலி
கால பவங்கெட வருகவே
கனக சிதம்பரி வருக வேசிவ
காம சவுந்தரி வருகவே. (9)

366. மறமலி கஞ்சுகி வருக வேமற
வாதவர் நெஞ்சகி வருகவே
மதுபதி கஞ்சகி வருக வேமது
வால்நிறை யுந்துளி வருகவே
பருவத நந்தினி வருக வேமுது
பாரதி யிந்திரை வருகவே
பரகதி தந்திட வருக வேபசு
பாச மகன்றிட வருகவே
பொறையில் மிகுந்தவள் வருக வேபுலி
யூரினில் வந்தவள் வருகவே
புரமெரி தந்தவள் வருக வேபுவ
னதிக டந்தவள் வருகவே
கறையர கங்கணி வருக வேகணே
யோவெனும் வெங்கணி வருகவே
கனக சிதம்பரி வருக வேசிவ
காம சவுந்தரி வருகவே. (10)

---

## அம்புலிப் பருவம்

(சாமம்)

367. சிவனிடப் பாகத் திருந்துவிளை யாடுமிவள்
செஞ்சடையில் விளையாடுநீ
சிவனிடக் கண்ணுமிவள் கண்ணுக்கு நீயுமோ
சிவனிடக் கண்ணதாகும்

கவனமுறு கலையுள துனக்கிவ டனக்குமோ
கவனமுறு கலைவாகனங்
ககனவிபு தர்க்கமுத முதவுநீ யிவளுமோ
கருணைவிழி யமுதமுதவும்
பவனமுறு பாற்கட லுதிக்குமீ யிவளுமோ
பராபரக் கடலுதிக்கும்
பைங்குவளை நண்பநீ யிவளுமோ செங்கைப்
பசுங்குவளை நண்பினேந்தும்
அவனிமிசை யிருவர்களு நிகராகு முகமன்ன
வம்புலீ யாடவாவே
வம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (1)

(பேதம்)

368. வடிவெலா நின்கட் களங்கமுள திவடன்
மனத்துங் களங்கமுளதோ
மதிமுகப் பிள்ளைதனை மதியா திருப்பதுன்
மதிகுறைந் திடுதலாலோ
முடியின்மிசை நீயிருந் தாலுமிவ ளடியிணையை
முடியொடும் பணியவிலையோ
முயலுள துனக்கிவ டனக்குமோ புலியுளது
முதுபுலியை முயல்வெல்லுமோ
படியின்மிசை கடிதுவா வாரா திருந்திடிற்
பாரா திருந்துவிடுமோ
பதஞ்சலி யெனும்பெரிய பாம்பினை யெடுத்துநம்
பாவைதிரு முன்வைத்திடு
மடியினு லமுதம் [1]பலித்தலு மறிந்திலைகொ
லம்புலீ யாடவாவே
யம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (2)

369. விற்பகரு முத்தம் பிறக்குநின் கிரணத்தின்
வேயீன்ற முத்தமணிய
வேய்புரை பசுந்தோளின் மிடறெனும் பூகத்தின்
வெண்முத்த மும்பிறக்கும்
பொற்புறு விமானத்தி லுலகவிரு ளகலவே
பொன்வரையை வலம்வருவைநீ
பொற்புறு விமானத்தில் புந்தியிரு ளகலவிவள்
பொன்னடியை வலம்வருகுவார்

பிரதிபாடம் ;—1. பிலுத்தல்.

கற்புடைய கன்னிய ருனைப்பணிய லாகாது
கன்னியிவ ளைப்பணியவே
கற்பது மிகுத்திடு மெப்போது முப்போதுங்
காணப் படாதுன்னையே
யற்புத மிதற்குமே லெவனுளது வினையகல
வம்புலீ யாடவாவே
யம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (3)

370. பாகாய மொழிவஞ்சி முகமா யிரங்கலைகள்
பளபளத் திடுமதியமே
பச்சைப் பசுங்கதிரின் [1]நறவுண்டு பசியாது
பசிதணி சகோரம்விழியே
போகாத குறுமுயற் கறையு மிருபுருவமும்
பொட்டிடு நுதற்குறியுமே
புரியளக பந்தியுஞ் சிகழிகையு மழியாது
புடையிலிடு பரிவேடமே
வாகாய மாணிக்க மணிமன்றுள் நடனமிடு
வள்ளலுண்ணக் குறைபடா
வளர்கலைப்பெண்பிள்ளை நின்னோ டொப்பென்னவே
மன்னுசெஞ் சடைமுடியின்மே
லாகாய கங்கையுடன் விளையாடு மதியமே
யம்புலீ யாடவாவே
யம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (4)

371. முழுமுகத் திங்களொடு நெற்றியொரு பாதிமதி
முக்கீற்று நீற்றுமதியாள்
முடியிலொரு கீற்றுமதி யடியிலொரு கீற்றுமதி
முக்கணிலோர் கொற்றமதியாள்
கொழுநகைப் பிறையுமிரு பதுநகைப் பிறையினெடு
கொத்துமுத் துப்பிறையினள்
கும்பிடுந் தாமரைகள் குவியுமிசை யமுதொழுகு
குமுதங்கள் முகைவிண்டிடும்
பழுதகலும் வெண்டிங்கள் வடிவமிவள் வடிவெலாம்
பசுபாச விருளகற்றும்

---

பிரதிபாடம் :—

1. பறவாது.

பதியெனும் பருதியொடு கூடிக் கலந்திடும்
பலகோடி சந்திரகலையே
அழிவிலாப் பெண்பிள்ளை வடிவாகி வந்ததா
லம்புலீ யாடவாவே
யம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (5)

(நாளர்)

372. மயில்வடிவ நம்மன்னை வந்துவிளை யாடலாம்
வாராது ராகுகேது
வந்தாலு மென்ன பயம் மகன்வா கனத்துக்கு
வலியகோ ரிரையதாகும்
குயில்வடிவு கொண்டதொரு கோதையைச் சேர்ந்திடுங்
குற்றமும் பற்றற்றிடும்
குறையாது கலைகளுங் கயரோக வினையறுங்
குறுமுயற் கறையுமகலும்
வெயில்வடி வினைச்சேர்ந்த சோபமுந் தீர்ந்திடும்
வேண்டிய வரம்பெறலுமாம்
விரிசெனு மித்தைதவிர் தெரிசனு முத்தியும்
வெற்றியும் பெற்றுவரலாம்
அயில்வடிவு கொண்டமுக் கண்ணியிவள் விளையாட
வம்புலீ யாடவாவே
யம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (6)

373. ஏகாமலேனத் தொடர்ந்துவரு நின்குலத்
தெழிலரசு மேனமுடனே
யேறிவரு புரவியுஞ் சிவகங்கை மூழ்கியே
யினியபொன் னிறமானதும்
போகாத வெண்குட்ட மதுபோக வடிவெலாம்
பொன்வடிவு தானுகவே
பொன்மகுட கெவுடதே சக்குரிசில் பெற்றதும்
புவியினிற் கண்டதிலையோ
மோகா விகாரத்தின் முனிவரன் கோபத்தின்
முன்னிட்ட சாபத்தையு
மூளா தொழிக்கலா மாளா வரம்பெற்று
முற்றுமே வாழலாகும்

ஆகாத நின்கட் கருங்குட்ட முந்திரு
மம்புலீ யாடவாவே
யம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (7)

(தண்டம்)

374. பச்சைமால் பஞ்சசய னத்தின்மேல் நீவெண்
படாமென விருந்ததிலையோ
பங்கே ருகக்கடவுள் சொன்னபடி கேட்டுநீ
பகலிரவு திரியவிலையோ
கச்சையாய் நச்சரா வைப்புனையு முன்மத்தர்
காணப்படா முடியின்மேற்
கத்தைச் சடைச்சக் களத்தி முற்றத்தினில்
காத்தே கிடக்கவிலையோ
விச்சையா யண்டங்க ளெல்லாம் பெறும்பிள்ளை
யினிதுவிளை யாடநின்னை
யிங்குவா வென்னவே யங்குநீ வாரா
திருப்பதுவு மேழை மதியோ
அச்சமோ கருவமோ யிவளில்நீ மிச்சமோ
வம்புலீ யாடவாவே
வம்பலவ ருடன் மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (8)

375. சுந்தரக் கடவுளாற் சூடுண்ட மன்மதன்
சுடர்முடிக் குடையானநீ
தொண்டுபட் டையார் புரஞ்சுட் டிடப்பண்டு
சுழல்கின்ற தேர்வண்டிநீ
கந்தரத் தேவர்தின் றுமிழ்கின்ற சக்கைநீ
காலினுற் றேய்பட்டநீ
கைச்சட்டு வத்தினுல் வெட்டுண்ட வரவுண்டு
கக்கிட்ட வுச்சிட்டம்நீ
மந்தரக் கிரியான மத்தொடுஞ் சுழல்பட்டு
வாரியிற் கடைபட்டநீ
வாவென்று நின்னையொரு பொருளா யழைப்பதுவும்
வாரா திருப்பதென்னே
அந்தரத் தினிலொளித் தாலு[1]மினி விடுவரோ
வம்புலீ யாடவாவே
வம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (9)

பிரதிபாடம் :—1. உனை.

376. இதழ்மடித் தேயிருதின் றெழுசினத் தசுரனுட
லிருபிளவி னொருபிளவுசென்
றிடியெனப் பிளிறியிடும் பொறியெனத் திண்டாட
வேனைய பிளவுசென்றே
கதழ்சகத் திரமுடி கொடியகட் செவிதின்று
காளமே கப்பீலிவான்
கங்குலி னெடுத்தாட வேலெடுத் தாடுமொரு
கந்தனிவள் மைந்தனுகுஞ்
சதமுற வழக்கிலா யிரகோடி யண்டங்க
டவழும்வெண் டிங்கள்முத்துந்
தண்டாது வருமகிமை கண்டா லுனக்குமதி
தானுமதி யுண்டாகுமோ
அதிகமுறு மண்டலத்தில் மதிகள்வரு முன்னமே
யம்புலீ யாடவாவே
யம்பலவ ருடன்மருவு சிவகாமி யம்மையுட
னம்புலீ யாடவாவே. (10)

---

## சிற்றில் பருவம்

---

377. அடிமுடியு மாயிரத் தெட்டுமாத் துச்செங்க
லழகுறச் சுவரியற்றி
யட்டதிக் குங்கால்கள் நட்டுமக மேருநடு
வசையாத தூணிறுத்தி
யிடையிலறை வீடுபதி ஞலென வகுத்துமுக
டினியசெம் பொற்கத்தையிட்
டெழுகிணறு கட்டியிர வும்பகலும் எரியவே
யிருவிளக் கிட்டுவைத்துப்
படியிலகு பதவிப் பழங்கல மடுக்கிவிளை
பச்சைநெல் லிருநாழியிற்
பல்லுயிரு முண்டுதேக் கிட்டிடு மடுக்களைப்
பலவடுப் புஞ்சமைப்பித்
திடமருவு பெருவீடு கட்டிவிளை யாடுமுமை
சிறுவீடு கட்டியருளே
சிவகாம சுந்தரி யெனும்பெரிய விமலையே
சிறுவீடு கட்டியருளே. (1)

378. மண்பற்று கால்கள்வைத் தூனிறுற் சுவர்வைத்து
வலியகைம் மரமும்வைத்து
வாசலொன் பதும்விட்டு மோட்டுவளை பக்கத்து
வளைவரிச் சலுநரம்பாற்
பண்பெற் றிடக்கட்டி மேலெல்லாந் தோலுடன்
பலமயிர்க் கத்தையிட்டுப்
பழவினைச் சேர்கட்டி யின்பதுன் பங்கள்கண்
பாத்துண விளக்குமேற்றி
எண்பத்து நான்குநூ றாயிரம் பேதமா
மினியசிறு வீடுதோறு
மெவ்வுயிர் களுங்குடி யிருந்துவிளை யாடவே
யின்னமு மழித்தழித்துத்
திண்பெற்ற பலவீடு கட்டிவிளை யாடுமுமை
சிறுவீடு கட்டியருளே
சிவகாம சுந்தரி யெனும்பெரிய விமலையே
சிறுவீடு கட்டியருளே. (2)

379. ஆறுசாத் திரம்நாலு வேத மதிதூணாகை
மங்களிரு பத்தெட்டுடன்
[1]ஐம்பெரும் பூதங்கள் பதினெண் புராணங்க
ளரியசிறு தூணுத்திர
மேறுகலை யறுபத்து நாலுகைம் மரநாடி
யெழுபத் திரண்டாயிர
மெழில்வரிச் சுடனணி புவனமிரு நூற்றேடு
மிருபத்து நாலுகமலங்
கூறுதொண் ணூற்றாறு தத்துவம் பலகணிகள்
கும்பமொன் பதுவாசலுங்
குலவுசிற் றேடுமிரு பத்தோரா யிரமுடன்
கூறுமறு நூறுமாகத்
தேறுமொரு வீடுகட் டிக்குடி யிருக்குமுமை
சிறுவீடு கட்டியருளே
சிவகாம சுந்தரி யெனும்பெரிய விமலையே
சிறுவீடு கட்டியருளே. (3)

380. மறுதே ருருட்டிவரு பொய்த்தேரை யொத்தபெரு
வாழ்வைக் குறித்துலகெலாம்
வலசாரி யிடசாரி வருமிந்தி ரன்தேரும்
வளர்தூளி படலமாக

பிரதிபாடம் :—1. வன்பெரும்பூதங்கள்.

உறுதே ருருட்டிவொரு மறுதேரி லாதண்ட
மோராயிரத் தெட்டுமே
யொருகுடைக் கீழாகு மேலாகு தேவர்களு
முருவுசிறு தூளாகவே
எறிதே ருருட்டிவரு சந்திரசூ ரியர்தேரு
மெழுதூளி படலமறைய
விந்திரஞா லத்தே ருருட்டிவரு சூரனுட
லிருபிளவு தானகவே
சிறுதே ருருட்டிவரு சிறுவனைப் பெறுசிறுமி
சிறுவீடு கட்டியருளே
சிவகாம சுந்தரி யெனும்பெரிய விமலையே
சிறுவீடு கட்டியருளே. (4)

381. பொன்மணற் சிற்றிலின் முத்தரிசி குத்தியே
பொன்முச்சி லிற்புடைத்துப்
புஷ்பரா கக்குழிசில் செந்தே னுலைப்பெய்து
புதியவச் சிரவடுப்பின்
பன்மணிப் பவளவிற கிட்டுமா ணிக்கமணி
பற்றிட நெருப்புமூட்டிப்
பச்சைமணி பச்சடி பொறிக்கறிகள் கோமே
தகப்பல விதக்கறியுடன்
நன்மணத் தொடுசமைத் திடுசோறு சேடியர்
நலம்பெற வடித்துவைப்ப
நஞ்சமுண் டவரமுது கொண்டுபசி தீரவே
நல்லபா லடிசிலிடநீ
சின்மயக் கணவர்தா முண்டுவிளை யாடவே
சிற்றில்விளை யாடியருளே
சிவகாம சுந்தரி யெனும்பெரிய விமலையே
சிற்றில்விளை யாடியருளே. (5)

### வேறு

382. பத்தி மிகுத்தவர் மாதவ ரன்பு
படைத்தவர் பக்கலின்வாழ்
பச்சை நிறத்தவ ளேசிவ சங்கரர்
பட்ச மிகுத்தவளே
சத்தினி சத்தினி பாத மடைந்தவர்
தற்பரை சிற்புரையே

சக்கரை முக்கனி தேனே டளைந்திடு
சற்குணி நிற்குணியே
வித்தகி வித்திம வான்மக ளென்றிட
வெற்பி லுதிப்பவளே
விற்கணை யொத்த புரூர நெடுங்கணி
மெய்க்கணி யக்கணியாய்
சித்தினி பற்பினி சாமளி சங்கினி
சிற்றி லிழைத்தருளே
சிற்சபை யிற்சிவ காம சவுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (6)

383\. முற்பர தத்து நிதான நடம்புரி
முக்கணர் பொக்கணர்சீர்
முத்தமிழ் சொற்றவர் வேத மொழிந்தவர்
முத்தியளித் தருள்வார்
தற்பர தத்துவர் கீத மறிந்தவர்
தர்க்கமு மிட்டிடுவார்
தக்கனை யட்டவர் காமனை வென்றவர்
சத்து மசத்தும்விடார்
அற்பர தத்துவர் நீபுனை தந்திடு
மத்தனை சிற்றிலுமே
யப்போ தழித்தரு ளாமவ ரின்று
மழிப்ப ரெனக்கருதேல்
சிற்பர சிற்குணி தேவி திகம்பரி
சிற்றி லிழைத்தருளே
சிற்சபை யிற்சிவ காம சவுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (7)

384\. சித்த மகிழ்ச்சியின் மூவர் விளங்கிடு
சிற்றி லிழைத்தவணீ
சிட்டி நுதற்றொழி லாகி நிகழ்ந்திடு
சிற்றி லிழைத்தவணீ
சித்தர் தயித்தியர் தேவ ருறைந்திடு
சிற்றி லிழைத்தவணீ
சிற்றுயி ரைக்கொடு காலன் வணங்கிடு
சிற்றி லிழைத்தவணீ
சித்தென முச்சக மாயை புரிந்திடு
சிற்றி லிழைத்தவணீ
சிக்கற நற்சிவ போகம் விளைந்திடு
சிற்றி லிழைத்தவணீ

சித்தியு முத்தியு மாகி நலங்கிளர்
சிற்றி லிழைத்தருளே
சிற்சபை யிற்சிவ காம சவுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (8)

385. பச்சை மடக்கிளி பாசிழை பைந்தொடி
பச்சை மயிற்பெடையே
பச்சிள நீர்த்தன பார விளங்கொடி
பச்சை மடப்பிடியே
அச்சுத னுக்கிளை யாய்கள வின்கனி
யச்சுறு மைக்குழலாய்
யச்சிவ னச்சொடு தேர்பொடி சிந்திடு
மச்சுதனைப் பெறுவாய்
வச்சிர வச்சிரன் மார்பு பிளந்திட
வச்சிர வச்சிரவேல்
வச்சிர கற்புடை தோளுடை மைந்தனை
வச்சிர மெனப்பெறுவாய்
செச்சை மலர்ச்சிறு பாணி வருந்திடு
சிற்றி லிழைத்தருளே
சிற்சபை யிற்சிவ காம சவுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (9)

386. எத்தனை யெத்தனை கால மிருந்திட
விப்படி யிப்படியே
யெத்தனை யெத்தனை கோடி [1]நவண்ட
மிழைத்தனை சிற்றிலெனு
அத்தனை சிற்றிலு மோடி வளைந்துமு
னத்த ரழித்தனரா
மக்கிர மத்தவ ராமவர் தங்குண
மப்படி நிற்கிலையால்
உத்தமி பத்தினி யாதி பரம்பரி
யுற்றிடு கற்புடையா
யுற்பலம் வைத்திடு பாணி வருந்தியு
முற்றிடு பொற்றுகளாற்
சித்திர விசித்திர மாக வளம்பெறு
சிற்றி லிழைத்தருளே
சிற்சபை யிற்சிவ காம சவுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (10)

---

பிரதிபாடம் :—1. நவகண்டம்.

# அம்மானைப்பருவம்

387. முழுமதியி னமுதமுந் தெண்டிரைப் பாற்கடலின்
முன்கடைந் திடுமமுதமும்
முத்திதரு மோவதனை யொப்பென வுரைத்திடினு
முக்கனி சருக்கரையொடு
பழுதகல பசுந்தேனு மிருசெவிக் கின்பம்
பயக்குமோ காமதேனின்
பாற்சுவையு நாற்சுவைக் கொஞ்சுகிளி யின்சொலும்
பாசவிரு ணீக்கிவிடுமோ
வழுவகலு மிம்மைக்கு மறுமைக்கு முத்திதரும்
மற்றினி யுரைப்பதென்னே
மைந்தர்தன் சொற்கேட்கில் இன்பம் செவிக்கெனும்
வாய்மையும் பொய்ம்மையாமோ
குழலினிது யாழினிது மன்றுநின் மழலைவாய்க்
குதலைமொழி யாடியருளே
குழகன்மகிழ் சிவகாம சுந்தரிநின் மழலைவாய்க்
குதலைமொழி யாடியருளே. (1)

388. குக்குமை விளங்குபை சந்திமத் திமையொடு
துலங்குவை கரியாகியே
சொல்லரு மிலஞ்சியுர னெடுகண்ட முச்சியொலி
தொடுநாசி யொடுகலந்தே
வாக்கினி லெழுந்துபல் லண்ணமிதழ் நாவினில்
வழங்குமழ லைச்சொல்லுமே
மைந்தரைக் கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றின்ப
மாதா பிதாவுமெய்தும்
பாக்கியந் தரவந்த மாதா பிதாவுநீ
பரவுமெங் குலதெய்வநீ
பழுதகலு முயிருநீ யுடலுநீ யுடலினிற்
படருமைம் புலனுநீயே
கூக்குரல் குயிற்பூவை கொஞ்சுகிளி யஞ்சுநின்
குதலைமொழி யாடியருளே
குழகன்மகிழ் சிவகாம சுந்தரிநின் மழலைவாய்க்
குதலைமொழி யாடியருளே. (2)

389. வல்லதெய் வப்பாவை மானிடப் பாவையொடு
வாழ்விலங் கின்பாவையும்
மறிதிரைப் புனலிடை வழங்கிடும் பாவையும்
மருவுபற வைப்பாவையு
மொல்லையி னெளிந்துதா மூர்ந்திடும் பாவையு
முறுதா மரப்பாவையு
மொருபொருப் பாவைமுத லைம்பொறிப் பாவையு
முற்றிடும் பாவையெல்லா
மெல்லறிவு [1]சாக்கரக் கனலொடு சுழித்திட
னெழுபூத சாரவடிவா
மெண்பத்து நாலிலக் கத்தான கொள்கையி
லெண்ணிறந் திடுகாலமும்
பல்லுயிர்ப் பாவைவிளை யாடுநற் பூவைபொற்
பாவைவிளை யாடியருளே
பரமசிவ காமசுந் தரியம்மை யினியபொற்
பாவைவிளை யாடியருளே. (3)

390. கன்னியர் மணற்சிற்றில் விளையாடு போதுமுக்
கண்ணிநீ தேவியெனவுங்
கடவுள்மண வாளனென மணமாலை சூட்டவுங்
கமழ்சட்டு வம்பழக்கி
யின்னமுத மூட்டியே பிள்ளையெண் மர்த்திரியு
மேணையிற் ருலாட்டியு
[2]மெமதுபே ராட்டிநீ வீணழற் பாலையென
விருகையி னுலெடுத்து
மன்னுவிழி நீர்துடைத் தூறு[3]பா லுண்ணுகென
மணிவாயின் முத்தமிட்டு
மார்பத் தணைத்தரும் பாமுலை கொடுத்தயலின்
மற்றுநாளிற் கவிழ்ந்து
பன்னுமொழி சேடிய ருடன்கூடி மேருபொற்
பாவைவிளை யாடியருளே
பரமசிவ காமசுந் தரியம்மை யினியபொற்
பாவைவிளை யாடியருளே. (4)

---

**பிரதிபாடம் :—**

1. சாக்கரக்கனலொடுசுழித்தியுட.
2. எமதுபோராட்டினீ.
3. பாலுண்ணுதேன்.

391. நாடருஞ் சாம்பூ நதச்செம்பொன் மாலையுடன்
நவமணி யணிந்தபாவை
நவம்பெறும் புவனங்கள் முழுவதுந் தன்வயின்
நடத்தவே வந்தபாவை
கூடருங் குடிலையுங் கூடவந் திடுபாவை
குவலயத் ததிசெயமெனக்
கொல்லியம் பாவையுங் கும்பிடு பசும்பாவை
குலவுபல் லுயிர்கட்கெலாம்
வீடருங் கைத்தா யெனுஞ்சித் திரப்பாவை
விந்தைமோ கினிமானுமே
மேவுதன் வடிவமென மேவிளங் கிடுபாவை
மெய்ப்பொருளி னைப்பரவினோர்
பாடவந் தவர்சித்தி முத்திவடி வானபொற்
பாவைவிளை யாடியருளே
பரமசிவ காமசுந் தரியம்மை யினியபொற்
பாவைவிளை யாடியருளே. (5)

392. பாந்தண்மா ணிக்கமணி பொற்பூவின் மரகதம்
பத்திபாய்ந் தாடலெனவும்
பைந்தா மரைப்பொகுட் டுறுகுறுங் கெண்டைநிரை
பாய்ந்துவிளை யாடலெனவு
மாந்தளிரின் மிசையோடி வந்துவந் திளமாவின்
வடுவசைந் தாடலெனவும்
மதராரிக் கண்கணின் பலமணிக் கொப்பின
மறிந்துவிளை யாடலெனவுஞ்
சாந்திளங் கொங்கைமிசை நின்கணவர் கண்கடாந்
தாவிவிளை யாடலெனவுந்
தண்டாது வரிவண்டு செங்காந்தண் மலர்மீது
தண்டாது நுகர்வதெனவுங்
காந்திதரு [1]செம்பொன்னிசை யிந்திர நறுநீலக்
கழங்குவிளை யாடியருளே
கனகசிற் சபையில்வாழ் சிவகாம சுந்தரி
கழங்குவிளை யாடியருளே. (6)

393. [2]பழகுபெறு பச்சிளங் கிள்ளையொடு கொஞ்சியும்
பஞ்சரம் வளர்கற்றுறும்
பஞ்சிறைப் பூவைக்கு மென்மொழி பயிற்றியும்
பன்மணி யிழைத்தபடிவக்

---

பிரதிபாடம் :—1. செம்பொன்னிழை. 2. பழகுபொற்.

குழமணப் பிள்ளைகொடு வண்டல்விளை யாடியுங்
குங்குமச் சேருடியுங்
கொடுங்கையாழ் குரலிசை நரம்பினெடு பாடியுங்
குறுமலர்ச் செண்டாடியு
மழகுபொலி பேராய வெள்ளத்தில் விளையாடி
யணிசுண்ண நீராடியு
மன்னத்தி னீலக் கலாபமயி லானந்த
மார்ந்தேறி விளையாடியுங்
கழகமுத் தமிழ்பாடு மிகுளைய ரோடுபொற்
கழங்குவிளை யாடியருளே
கனகசிற் சபையில்வாழ் சிவகாம சுந்தரி
கழங்குவிளை யாடியருளே. (7)

**வேறு**

394. சந்திர சூரிய ரோதையதாய்த்
தார கணம்பதி யாரமதாய்த்
தரிசுகள் சுருதிக டாளுகத்
தனவரை தமனிய வரையாகச்
சுந்தர விருகர மெறிதரவே
சுழன்று சுழன்றிட வலம்வரவே
சுரிதரு கூந்தலு முகிலெனவே
துலங்கு நுடங்கிடை மின்னெனவே
யிந்திர வில்லிட விருபுருவ
மிழையணி மணிசொரி துளியெனவே
யெங்கணு மதிவிழி கயலெனவே
யெதிரிடு கண்ணடி யெனவரவே
அந்தரி யுலகினில் யாவருக்கு
மம்மே யம்மனை யாடுகவே
யரசே யரகர சிவகாமி
யம்மே யம்மனை யாடுகவே. (8)

395. வடிவும் பளபள வெனமாலை
மணமுங் குமுகுமு வெனநீல
வரியும் மொகுமொகு வெனமுன்கை
வளையுங் கிலுகிலு வெனவேறு
முடியுந் தளையவிழ் தரமூரல்
முகமும் நிகநிக வெனமார்பின்

முலையுந் தளதள வெனவாயின்
மொழியுங் குலுகுலு வென நூலின்
இடையும் மின்மின லெனவாடை
யெழிலுந் தகதக வெனவோரை
யெறியுங் கலகல வென[1]வோத
விசையும் நமநம வென நாவின்
நடையுஞ் சிவசிவ வெனவெங்க
ளம்மே யம்மனை யாடுகவே
யரசே யரகர சிவகாமி
யம்மே யம்மனை யாடுகவே. (9)

---

## பந்தாடற் பருவம்

396. சந்திரசூ ரியர்தமைச் சில்லெறிந் தாடவளைச்
சக்கரவா ளக்கிரிதனைச்
சக்கரம தாகவே ராகுகே துக்கயிறு
தான்சுற்றி விளையாடியே
அந்தரத் தாரா கணங்கழற் காயாக
வாடிமக மேருகிரியை
யம்பரந் தனிலாடு பம்பரம தென்னவே
யாயிரம் படமாடுறும்
விந்தைமா ணிக்கநற் கயிறுகொடு விளையாடி
வெள்ளிவே தண்டமொழிய
மேலெண் டிசாமுகமு மூதண்ட கூடத்து
வேதண்ட மத்தனையுமே
பந்துவிளை யாடிவரு மைந்தனைப் பெறுசிறுமி
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. (1)

397. செந்தா மரைப்பதம் [2]பந்தசைந் தாடவிரு
திருமுழந் தாள்பந்துமே
திண்புவி பதிந்தாட வினியபந்துக் கொண்டை
செண்டுடன் பந்தாடவே

---

பிரதிபாடம் :—

1. வேதவிசையும்.
2. பந்தசைந்தாடவரு.

நந்தாத குங்குமக் கொங்கைபந் தாடவிரு
நயனங் கழுங்காடவே
நவமணி யிழைத்தகுழை செவியிலம் மனையாட
நட்சத்திர மாலையுடனே
சந்திரோ தையச்சுட்டி யுஞ்சலா டப்பணிகள்
சதுரங்கம் விளையாடவே
சதகோடி சிலதியர்கள் புடைசூழ நவகோடி
சத்திய ருடன்கூடியே
பந்தாட வேதண்ட மூதண்ட கூடங்கள்
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. (2)

398. முத்திபெறு மூதண்ட கோளபா தளமளவு
முதுசித்து விளையாடல்போல்
முட்டைதனில் வித்தினில் நிலத்தினிற் பைதனில்
மூளைத்தள விலாதபேதந்
தத்துவன வூர்வன தவிழ்ந்திடுவ நிற்பன
தனித்தனி பறப்பனவுமே
சத்தொடு நடப்பன கிடப்பன விருப்பன
தருக்கொடு முறுக்கிநெளியா
வித்தக மிதத்திடுவ சொற்றிடுவ கத்துவன
வெத்தனை யிரைத்துமிரையா
விப்படி வகுத்தபல செப்புடலின் மாரும
லென்றுமே மாறிமாறி
பத்திபெறு பல்லுயிர்ப் பந்தொளித் தாடுமுமை
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. (3)

399. செங்கைச் சிவப்பினற் பவளமணி நிறமெனத்
திருமேனி யொளிதவழவே
செம்பவள நிறமெலாம் பச்சைநிற மாகவே
திகழ்நீல வரிவிழியிணை
லங்குநறு நீலநிற மாகித் திரும்பிமணி
யதரஞ் சிவப்பேறவே
யதுகண்டு நகைபுரிய வெளிரிவண் டரளவடி
வாகியே படியிலடிபட்

டுங்கினின் ரேடியிரு குங்குமக் கொங்கையரு
கூடுபொன் னிறமூடியே
யொளிருமள கப்பந்தி யருகிலெறி யப்பந்து
முறுகறுப் புந்தியிடவே
பங்கயக் கடவுள்வெண் முத்திறைற் றைத்தபொற்
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. (4)

400. பிடித்திடுங் கிள்ளையும் பிறழுமயி லன்னமும்
பிள்ளைநா கணைவாய்ப்புளும்
பெரிதுநடை நொடிபா வனைக்கினித் தண்டனை
பிறக்குமென வேபறக்க
அடித்திடுங் கந்துகங் கண்டுசக் கரவாக
மஞ்சிப் பறந்தொளிக்க
வஞ்சன விழிக்குமிக ரானசஞ் சரிகமுட
னணிதிகழ்ச் சகோரம்வெருவ
பொடித்தெழுங் குங்குமக் கொங்கைக்கு நிகரென்று
புகல்கின்ற தென்னையென்று
பூந்தவள நகைசெய்து காந்தளங் கையினல்
[1]போர்கட் டடிப்பதென்ன
படித்தலந் தன்னிலெதிர் நின்றபாங் கியருடன்
பந்துவிளை யாடியருளே
பங்கயச் சிவகாம சுந்தரியென் னம்மையே
பந்துவிளை யாடியருளே. (5)

வேறு

401 கொங்கை வெற்பென வேய சைந்து
குலுங்க முத்தெனவே
குங்கு மச்சிறு வேர்வை சிந்திட
நொந்து சிற்றிடையே
தங்கு பொற்கொடி போனு டங்கிட
வங்கண் மைக்கயலே
தங்கு நற்குழை மேல்ம றிந்திட
வந்து பொற்பிடர்மேல்
கங்குல் மைக்குழ லேச ரிந்திட
மங்கை யர்க்கரசே

பிரதிபேதம் :—1. போகட்டடிப்பதென்ன.

கந்த ரக்குர லோசை யுமிகு
விங்கி தத்துடனே
பங்க யத்திரு வேவி ளங்கிடு
பந்த டித்தருளே
பங்க யச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. (6)

402 கண்செ விக்குழை யாளர் கண்டொளிர்
கண்ப சப்புறவே
கண்க றுப்புற வாழ்கு டங்கை
கடுஞ்சி வப்புறவே
தண்சு டர்ச்சிறு பாட கங்கள்
சதங்கை யொத்திடவே
சண்ப கப்புது மாலை சிந்திட
வண்டொ லித்திடவே
யெண்சொ லிச்சொலி மாறி யங்கை
யிரண்டு மொத்திடவே
யெஞ்சு சிற்றிடை நூலு டங்க
விருந்து பொற்புடனே
பண்சொ லிச்சிறு தாள மொத்திடு
பந்த டித்தருளே
பங்க யச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. (7)

403. பஞ்ச கிர்த்திய மேயு கந்தவர்
பங்கி னிற்பவளே
பஞ்ச வர்க்கொரு தூது சென்றவர்
தங்கை நற்பரையே
பஞ்ச வத்திர சோதி யந்தரி
மந்தி ரப்பொருளே
பஞ்ச லட்சண காவி யம்புக
லஞ்ச னக்குயிலே
பஞ்சர க்கிளி பாணி கொஞ்சிய
வஞ்சி நற்கொடியே
பஞ்சு ரத்தெழு கீதம் விஞ்சுவி
பஞ்சி வித்தகியே

பஞ்சி யொத்திடு பாத சிந்துரி
பந்த டித்தருளே
பங்க யச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. (8)

404. பந்த னைப்பிணி தீர வந்தவள்
பந்த டித்தருளே
பைந்த மிழ்ப்புலி யூரு றைந்தவள்
பந்த டித்தருளே
பந்தி னைத்தன பார மந்தரி
பந்த டித்தருளே
பைந்த ளிர்த்திரு மேனி யம்பிகை
பந்த டித்தருளே
பந்த மற்றப வானி யம்பிகை
பந்த டித்தருளே
பந்த ரிட்டுல கேழு நின்றவள்
பந்த டித்தருளே
[1]பைந்த ருக்கிணை யான சங்கரி
பந்த டித்தருளே
பைந்தொ டிச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. (9

405. பைம்பொன் முத்தணி சோதி தந்திடு
பந்த டித்தருளே
பஞ்ச ரத்தின மேபு னைந்திடு
பந்த டித்தருளே
பண்பு வைத்திம வான்வ ழங்கிடு
பந்த டித்தருளே
பங்கி னிற்சுப மேபி றந்திடு
பந்த டித்தருளே
பண்டு நற்பசு பாசம் வந்திடு
பந்த டித்தருளே
பஞ்ச கிர்த்திய மேவி னைந்திடு
பந்த டித்தருளே

---

பிரதிபாடம் :—

1. பைந்தருக்கிளை.

பஞ்ச சத்திநல் வாம தந்திரி
பந்த டித்தருளே
பைந்தொ டிச்சிவ காம சுந்தரி
பந்த டித்தருளே. (10)

## பொன்னூசற் பருவம்

406. பொன்னூச லாடமுகி லளகாட விக்கருகு
பிறைமகர குண்டலங்கள்
பெரியவள் ளைச்செவியி [1]லிருபருதி போலப்
பிறங்குசிற் றூசலாட
மன்னூச லாடமுத் தாரவட மிருகொங்கை
மதிமீதி லுடுவென்னவே
வட்டமிடு பச்சைவி லிரட்டைவரி வில்லென்ன
வாகுவளை யங்களாட
வென்னூச லாடும்வினை தன்னூச லாடாம
லிருபாத கமலத்திலு
மினியதம னியமிழைத் தணியுநூ புரமாட
வெழின்மஞ்ஞை வொடுகலாபம்
பொன்னூச லாட [2]லிரு மின்னூச லாடவே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச்செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. (1)

407. செறியுமல ரிடைவண்டு தேனுண்டு மீண்டுந்
திரும்பித்தி ரும்பிவரல்போற்
றீவினையு நல்வினையும் வந்துவந் தேபோய்த்
திரும்பித்தி ரும்பிவரல்போ

---

**பிரதிபாடம் :—**

1. மதிபருதிபோல.
2, இடை.

லறிவுமைம் பொறிதோறும் வீடாமல் விடையம்
அடுத்தடுத் தோடிவரல்போ
லங்கோடு மிங்கோடும் வந்தோடு முயிர்கள்போ
லலகிலிடை பிங்கலைகள்போ
லெறிசுடர் விளங்குவிண் மணிபலகை யாகவுல
கிடையான வடமேருவு
மிரசதக் கிரியுநடு தூணாக வண்டமுக
டேறுமுத் திரமாகவே
பொறியர வினுக்கரசு மாணிக்க வடமான
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச்செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. (2)

408. இரவுபகல் மதிபருதி பெரிதூச லாடவுயி
ரெழுவகைப் பிறவிதோறு
மினியசிற் றூசலா டப்பஞ்ச பூதங்க
ளெங்குநின் றூசலாட
நரகொடு [1]சுவர்க்கத்தி லுறுபோக புவனத்தில்
நாடுமுயி ரூசலாட
நல்வினைக டீவினைக டுன்பமுட னின்பங்கள்
நாடோறு மூசலாட
விரவுமும் மூர்த்திகளு முத்தொழிலு மெக்காலும்
வீடாம லூசலாட
வீடுதரு மணிமன்று நாடகங் கண்டவர்
விமானங்க ளூசலாட
பொருவில்மண வீசன்முக் கணனூச லாடவே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச்செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. (3)

409. மின்சொரி பசும்பொன் விமானம்வரு மாமகளிர்
விறலிய ரெனக்குழுமியே
விளரியா ழிசைமுரல் மருவுசில் லரிமுழவு
விஞ்சைமெல் லியரிரட்டக்

பிரதிபாடம் :—
1. துறக்கத்தி.

கொன்சொரியும் வேல்விழிப் பஞ்சினடி வஞ்சியிடை
கொஞ்சுகிளி யஞ்சொன்மடவார்
குமரிமயி லெனவருகு கவரிபணி மாறவே
கோடிசிவ சத்தியருடன்
தென்சொரி பசும்பாகு விளைகிளவி மங்களஞ்
சிலதியர்கள் பலகூறவே
சிற்ருல வட்டம்விசி றிப்பாரி சாதமலர்
சிவிறிபன் னீர்தூவவே
பொன்சொரி பசும்பாவை புதியபொற் பூவையே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச்செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. (4)

410. அன்னையே தாயேயென் மாதா பிதாவேயென்
ஞவியே பூவில்வாழு
மன்னமே யென்னமே யின்னமே கன்மத்தி
லலையாம லெனைவைத்திடும்
மன்னுநீ பின்னுநீ முன்னுநீ யல்லாமல்
மற்றுமொரு தெய்வமுளதோ
மற்ருெப்பி லார்பஞ்ச கர்த்தாவை யும்பெற்ற
மாதாவு நீதானெனிற்
கன்னியே குமரியே கன்னிகா ரத்திற்
களித்தவிரு கொங்கைமயிலே
கன்னலே மின்னலே யின்னலே தீரவரு
கருணு கரக்கவுரியே
பொன்னிசூழ் புலிசைவாழ் பொன்னிறப் பூவையே
பொன்னூச லாடியருளே
பொன்னம் பலச்செல்வி சிவகாம வல்லியே
பொன்னூச லாடியருளே. (5)

வேறு

411. நாறு பூமலர் விடாது நந்தவன
வாடை வீச வொருபால்
நாளி கேரவிள நீர்கள் சிந்தமுது
'வாளை பாய வொருபால்
வீறு சோலைதொறும் வீழுமென் கனியின்
தேவரி பாய வொருபால்

மேவு சேறுழுது நாறு கொண்டுநடும்
வேலை வேலியொருபா
லாறு போல்கழைபி னீர்கள் பொங்கவதி
ஞலை பாயவொருபா
லால வாலநிறை சாலி பொன்சொரியு
மாறு பாயவொருபா
லூறு கேணியுடை சூழ்சிதம் பரிபொன்
னூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
னூச லாடியருளே. (6)

412. ஊழி யூழிதொறும் வாழ்சுமங் கலிபொன்
னூச லாடியருளே
யூர்வி மானம்வரு வாம தந்திரிபொன்
னூச லாடியருளே
யோவில் மோனசிவ யோகர்நெஞ் சகிபொன்
னூச லாடியருளே
யூறுதே னெழுகு வாசமஞ் சரிபொன்
னூச லாடியருளே
யோடி யோடியொழி யாதுவந் திடுபொன்
னூச லாடியருளே
யோடை சூழ்புலிசை வாழுமம் பிகைபொன்
னூச லாடியருளே
யோதொ ணுதபர லோகசங் கரிபொன்
னூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
னூச லாடியருளே. (7)

413. காசு லாவிய கலாப கஞ்சுளிபொன்
னூச லாடியருளே
காரி மாரிகவு மாரி சுந்தரிபொன்
னூச லாடியருளே
வாச மேவுபுலி யூரில் வந்தவள்பொன்
னூச லாடியருளே
மாசி லாதமணி யானவங் கணைபொன்
னூச லாடியருளே
பாச மானதுவி மோசனந் தருபொன்
னூச லாடியருளே

பாரி சாதமணம் வீசுகொந் தளிபொன்
ஞூச லாடியருளே
ஊச லாடும்வினை தீரவந் தவள்பொன்
ஞூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
ஞூச லாடியருளே. (8)

414. ஆதி போதனிய ஞகியஞ் சனிபொன்
ஞூச லாடியருளே
[1]ஆர பார்வதி காரசங் கரிபொன்
ஞூச லாடியருளே
நீதி நூனெறி வழாதசைந் திடுபொன்
ஞூச லாடியருளே
நீல லோசனவி சாலவஞ் சினிபொன்
ஞூச லாடியருளே
நாத கீதநவ கீத ரஞ்சகிபொன்
ஞூச லாடியருளே
ஞான தேசகி பினாகநெஞ் சகிபொன்
ஞூச லாடியருளே
யோதை நாதன்மகி ழாயியம் பிகைபொன்
ஞூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
ஞூச லாடியருளே. (9)

415. காது லாவுகுழை தோளிவர்ந் தொளிர்பொன்
ஞூச லாடவிருள்சேர்
கார பாரகுழல் சூழும்வண் டுகள்பொன்
ஞூச லாடமுலைமார்
மீது லாவுமது மாலைமஞ் சரிபொன்
ஞூச லாடவிருபால்
வீசு சாமரைகள் மூசும் வெண்டிரையி
ஞூச லாடவொளிசேர்
பாத தாமரையி ஞாபுரங் களொலி
யூச லாடமிகவே

---

பிரதிபாடம் :—

1. ஆரவாரவடு தார சங்கரி.

பாவியே னுனது பாத நம்பிமன
மூச லாடமுந்துநீ
ரோதை சேர்புலிசை வாழுமம் பிகைபொன்
னூச லாடியருளே
யோதும் வேதசிவ காமசுந் தரிபொன்
னூச லாடியருளே. (10)

---

## நீராடற்பருவம்

---

416. அடியிணைகள் புடவிதிக ழண்டமுக டதுமகுட
மட்டதிக் கும்புயங்க
ளலைகட லுடுத்ததுகில் [1]புடைபெருகு மிருகண்க
ளரியகு ரியசந்திரர்
வடகயிலை மகமேரு விருகொங்கை தாரகண
மார்பணியு முத்துமாலை
வாடையொடு கோடையும் நாசியிடை பிங்கலைகள்
வடிவெலாம் நின்வடிவமே
[2]யிடையிலணி முழுகிவிளை யாடுதட முண்டென்
றெவர்க்குமே புகலவரிதா
மென்றாலு மண்டங்க ளெல்லா மிதக்கவே
யினியநட னம்புரிந்து
புடைபெயரு மானந்த வெள்ளத்தி லாடுமுமை
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. (1)

417. கண்கள்கய லென்னக் கணைக்கால் வராலெனக்
கைவிரல்கள் களிறென்னவே
கமழ்முழந் தாளிணைக ளுக்குஞெண் டென்னவே
கமலவடி கமடமெனவே
வண்களமும் வெண்சங்க மென்னவே வீசவே
வளராசை வலைவீசவே
மைவிரவு சுருளோதி சைவலம தென்னவே
வார்காது வள்ளையெனவே

---

பிரதிபாடம் :—1. புடைபெயரும். 2. இடையினீ.

பெண்கள்மன மருள்விரு கொங்கைமுக நகைமுகம்
பெரியதா மரையென்னவே
பிரசவிதழ் குமுதமென வுரைசெய்தும் பிகளொடு
பெடைவண்டு புடைசுழலவே
புண்கொள்நெடு வேலனைய கண்கள்களி கொள்ளவரு
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. (2)

418. பாராட வேதண்ட வேராட மூதண்ட
பகிரண்ட கூடமாடப்
பாதாள மாடவெகு வேதாள மாடமிகு
பலசீவ கோடியாடத்
தாராட வாழ்வுதலை மாலையா டச்சூடு
தவளவெண் பிறையாடவே
தமனியப் பொதுவினின் றுடுநின் கணவனுர்
தலைமீது நின்றுடுவாள்
சீராடி விளையாட வவளுடன் கூடித்
திளைப்பவே துளையமாடிச்
சித்தங் களித்துமுத் தாடயள காடவித்
திரும்பிக் குடைந்தாடியே
போராடு கங்கையுட னுறவாடல் போலவே
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. (3)

419. பாகீ ரதன்றந்த கங்கைப்பிர வாகம்
பரந்துவரு கின்றநாளிற்
பவளவார் சடையொடும் பிறைத்தோணி விட்டுநம்
பரமன்விளை யாடலெனவே
யேகாந்த மாகியசு காந்தயோ கந்தனி
லிருந்துசிவ பூசைபுரியு
மேகாம் பரந்தனிற் காமாட்சி யம்மையு
மேகம்ப நதியாடல்போ
லாகாய கங்கைசர சுவதியமுனை காளிந்தி
யதலபா தாளகங்கை
யண்டபகி ரண்டங்க ளனுவென மிதந்திடு
மனுதிநதி யதுவுமுனிபாற்

போகாத காவேரி யும்பெருகி வருகின்ற
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமிர்த வாரியே
புதியநீ ராடியருளே. (4)

420. நறுமலர்ப் பூங்கா வனந்தனி லெழுந்தருளி
நாண்மலர்க ளளிர்கள்கொய்தும்
நாடகக் கணிகைநிகர் கோலக் கலாபமயில்
நடனங்க ளினிதுகண்டுங்
குறுநடைக் குமரிமட வன்னமொடு கூடியே
குலவிமெல் லெனநடந்துங்
குயில்களொடு கூவியுங் கிளிகளொடு பேசியுங்
குயில்சிறுங் குறும்பிழைத்துஞ்
சிறுபொதும் பரினின் றூடித்துவிளை யாடியுஞ்
சேடிய ருடன்கூடியுஞ்
சிறுதும்பி யம்மனை கழங்குதெள் ளேணமொடு
சிவிறிநீர் விளையாடியும்
பொறிவரிப் பாவை[2] பொற் குரவைவிளை யாடியும்
புதியநீ ராடியருளே
புனிதசிவ காமசுந் தரியமுத வாரியே
புதியநீ ராடியருளே. (5)

**வேறு**

421. காலிற் கிண்கிணி சிலம்புக ளொலித்திடக்
காஞ்சன மணிக்காஞ்சிக்
கலையி ரங்கிட வதரமும் வெளுப்புறக்
கண்களுஞ் சிவப்பேறக்
கோலக் குங்குமக் கொங்கைகள் குலுங்கிடக்
கொடியிடை துடியாடக்
குலவு நீரிடைத் தோன்றிடு தோழியர்
குளித்தெதிர் விளையாட
மாலைக் கூந்தலில் சாந்தமு மேனியில்
மான்மதங் கத்தூரி
வர்டை யுங்குடை நீர்கடந் திடமுலை
மாமணிக் குடநீந்தி

பிரதிபாடம்:—

1. சிறுபோதும் பரினின் றூடித்து. 2. போற்குரவை.

யாலிக் குஞ்சில சேடியர் சிலருட
னுடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. (6)

422. நெருப்பிற் பூத்தபொற் பூந்தொடை மாணிக்க
நீரிடை நிழற்றேன்ற
நீரிற் பூத்தபொற் பூவினைப் பாரென்று
நீரிடை யவியாமல்
விருப்பிற் செஞ்சுடர்க் கொழுந்துவிட் டெரிகின்ற
விளக்கினைப் பாரென்றும்
விழித்துக் கண்களைக் கெண்டைகள் [1]மேய்கின்ற
வியப்பினைப் பாரென்றும்
பருப்ப தக்குயந் தாமரை யரும்பெனப்
பருமத்தைப் பாரென்றும்
பச்சை வெண்ணிறஞ் சிவப்பொடு பொன்னிறம்
பத்தியாய்ப் புனல்கண்டே
யரும்பு நன்னகைச் சிலதியர் விருப்புற
வாடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. (7)

423. பாங்கிற் றேன்றிடும் பாங்கியர் வடிவெலாம்
படிமநற் கலந்தோன்றும்
படிவிளங் கிடவொரு வர்தா மிருவராய்ப்
பார்த்ததி சயந்தோன்றக்
கோங்க ரும்பிடவே முல்லையு முகிழ்த்திடக்
குமிழுடன் குலைக்காந்தட்
கூடிப் பூத்திட வண்டுக ளார்த்திடக்
கோவையின் கனிதோன்ற
வாங்கி வஞ்சியுங் காஞ்சியு மலர்ந்திட
வஞ்சியின் கொடியாட
மயிலு மன்னமும் கிள்ளையும் பூவையும்
வந்திடப் புனலூடே
ஆங்கு நின்பர மானந்தத் துறையினி
லாடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. (8)

பிரதிபேதம் :—1. மொய்க்கின்ற.

424. குளித்து மூழ்கியும் நீந்தியும் வாய்ந்திடுங்
கூந்தலுஞ் சரிந்தோடக்
குங்கு மத்துட னரந்தமுங் கலந்திடக்
[1]குளித்திடும் புனலூடே
ஒளித்து நீள்கரை யேறியு மோய்ந்துநின்
றொருவர்மே லொருவர்தா
மூறுக்கும் வண்புன லிறைத்துமென் சிவிறியி
லுறுநறும் புனலூடே
தெளித்து மங்களம் பாடியு மாடியுஞ்
சிலதியர் விளையாடத்
திரைக்கு மேழ்கட லொருசிறு துளியெனச்
சிவானந்தப் பெருவெள்ள
மளிக்கு நின்பெருங் கருணைபோற் பெருகநீ
யாடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. (9)

425. வாழி வாழியென் றேத்திடக் கலைமகள்
மங்களம் பலகூறி
வாழி வாழியென் றேத்திடத் திருமகள்
மகிழ்பல் லாண்டுகள்கூறி
யூழி யூழியும் வாழியென் றேத்திட
வுருத்திரை யெனுந்தேவி
யுகந்து வாழியென் றேத்தியே வாழ்த்திட
வொளிர்திரோ தானத்திற்
தோழி மாருடன் வாழியென் றேத்திடச்
சுகமனோன் மணிசத்தி
சூழ்ந்து மற்றுள சத்திகள் யாவருஞ்
சோபனம் பலகூற
ஆழி சூழ்புவி வாழியென் றேத்தநீ
யாடுக புதுநீரே
யாட லஞ்சிவ காமசுந் தரியுமை
யாடுக புதுநீரே. (10)

(தில்லைச் சிவகாமி அம்மைப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.)

---

பிரதிபாடம்:—

1. குடைந்திடும்.

# தில்லைச்
# சிவகாமி அம்மைப் பிள்ளைத்தமிழ்க்
# குறிப்புரை

305. தமிழ்த்தில்லை - தமிழ் வழங்கும் தில்லை. சடைக் கங்கை பெற்றான் கங்கை பெற்றான் - சடையில் கங்கையைத் தரித்த சிவனைப் போல் கங்கையைத் தனது சடைத்தலையிலும் பெற்ற விநாயகன்; கற்பக நற்பேர் பெற்றான் - கற்பக விநாயகர் என்ற பெயரைப் பெற்றவன். சிதம்பரத்திலுள்ள விநாயகருக்கு இப்பெயர். கம் + கை + பெற்றான் - கங்கைபெற்றான், மதநீரொழுகும் தும்பிக்கையைப் பெற்றவன்; கங்கை பெற்றான் - சிவன் தேவியான கங்கைக்கு மைந்தன், இங்கு ஒற்றுமை பற்றி பார்வதியின் மைந்தனுணுைம் கங்கைக்கும் மைந்தனுகக் கூறப் பட்டது. கம் - நீர்; இது மதநீரைக் காட்டிற்று. முதலிலுள்ள கங்கை பெற்றான் என்பது கம் + கை பெற்றான் என்றாக்கி பிரம கபாலத்தைக் கையிலே பெற்றவன் என ஒற்றுமைபற்றி விநாயகருக்கேயாக்கலுமாம். தமிழ் - இனிமையெனவுமாம்.

## காப்புப் பருவம்

306. விராட்புருடனுக்குச் சிதம்பரம் இதய ஸ்தானமாகக் கூறப் படுகிறது. இமயமலை நெற்றியாகக் கூறப்படுகிறது. புண்டரீகம் - தாமரை; பொகுட்டு - தாமரைக்கொட்டை; விராட்புருடன் - உலகம்; பேர்பூத்த நான்குருவம் - மகேசன், ருத்திரன், மால், அயன்; நான்கு அருவம் - சிவம், சத்தி, நாதம், விந்து; பேர் உருவ அருவம் - சதா சிவம்; தூர்பூத்த - வேரினின்று தோன்றிய; துலங்கு - விளங் கும்; நவம் - ஒன்பது; இதன் விரிவை வேதவிநாயகர் பிள்ளைத் தமிழ் 69-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. பிரமாண்டமாகிய சரீரத் திலே இடைகலைநாடி இலங்கையிலும், பிங்கலைநாடி இமயமலையிலும் சுழுமுனைநாடி தில்லை வனத்திலும் ஓடுகின்றன. தில்லை-ஓர் வகை மரம். இச்சுழுமுனை நாடியில் தான் என்றும் இறைவன் ஆனந்தத் தாண் டவம் புரிகின்றார். நடங்காடு திருவாலங்காடாயிருக்கலாம். இது காஞ்சீபுரத்திற் கருகிலுள்ள நடராசர் ஸ்தலம். ஒரு பிரதியின்படி இது தில்லை நடராசரையே குறிக்கிறது.

307. வெளி - ஆகாயம்; ஓரெழுத்து-ஓம் என்பது. இது வட மொழியில் ஓம் என ஓரெழுத்தாக நிற்கும்; கொடிக்கவி கடைசி பாட்டின் படி 'சி' என்பது தான்தக்கதாகும். ஈரெழுத்து 'சிவ' என்பது. அஞ்செழுத்து 'சிவாயநம' என்பது; எட்டெழுத்து-'ஓம்-ஆம் (ஹாம்)-அவ்வும்(ஹௌம்)-சிவாயநம' என்பது; ஐந்து-ஐந்துகலைகள்; ஆறு ஆறு என-36 தத்துவங்கள் என்ற; தருஞானம் இச்சை கிரியாசத்தி-ஞான சத்தி, இச்சாசத்தி கிரியாசத்தி எனக் கூட்டுக. பஞ்சசத்தி-ஆதிசத்தி, இச்சாசத்தி பராசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி;விந்து-இது பரவிந்து, அபரவிந்து என இருவகைப்படும். பரவிந்து என்பது உன்மனுகலாதி காரியப் பிரபஞ்சம்; ஒரு பிரதேசத்திலுண்டாய் ஒடுங்கின மகாமாயை யினது ஓரிடம். இந்தப் பரவிந்து சூக்குமை, அதிசூக்குமை, மிருதை, அமிருதை வியாபினியாகிய கலைகளை வியாபித்திருக்கும். இக்கலைகள் அபரவிந்துவைப் பிரேரிக்கும். அபரவிந்து நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை முதலிய கலைகளைப் பிரேரித்து நிற்கும். பராற்பவவிந்து - இதனைச் சமனை யென்பர். மான் - அசுத்த மாயை; தனு - உடல்; கரணம் - இந்திரியங்கள்; சகலம்-உடலுறுப்புக்களுடன் கூடியது. நிட்களம்-உருவின்மை; **தனுவாவது :-** சராயுசம், அண்டசம், சுவேதசம், உற்பிசம் ஆகிய நால்வகை யோனிகளிலும் பிறப்பதாய் தேவர் பதினொரு நூறுயிரமும், மானிடர் ஒன்பது நூறுயிரமும், தாவரம் பத்தொன்பது நூறுயிரமும், மிருகம் பத்துநூறுயிரமும், பறவை பத்து நூறுயிரமும், நீர்வாழ்வன பத்து நூறுயிரமும், ஊர்வன பதினைந்து நூறுயிரமும் ஆகிய எழுவகைத் தோற்றத்திலும் 84-லட்சயோனி பேதமாயிருக்கும். அத்தனு தூலமாகவும், சூக்கும மாகவும் காரணமாகவுமிருக்கும். **கரணம் :-**அத்தனுவுக்கேற்ற பல விதங்களாயிருக்கும். **புவனம் :-**இருநூற்றிருபத்து நான்கிலுமுள்ள ஊரும், நாடும், தேயமுமாய்ப் புண்ணிய கன்மமுடையவர்கட்குச் சுவர்க் காதி பதங்களுமாயிருக்கும். **போகமாவது :—**அவரவர் கன்மத்துக் கேது வான உண்பன, தின்பன, குடிப்பன, நக்குவன, விழுங்குவன, உடுப்பன, முடிப்பன, பூண்பன, பூசுவன, பெண்டு, பிள்ளை, சுற்றம், பொன், மணி முதலிய பிரபஞ்சமாயிருக்கும். இப்பாட்டு தில்லைநடரா சரைப்பற்றியது. மித்தை - யோனிபேதம் அழியும் மாலைத்தாகலின் இச்சொல் யோனிகளைக் காட்டிற்று; மோகினி-சுத்தமாயை. (2)

308. இருவினைக் களிறு-உருவகம்; இருவினை-நல்வினை, தீவினை; நல்வினையும் பிறத்தற் கேதுவாகலின் இங்ஙனம் கூறினர். களிறு - யானை; இதனை "இருள்சே ரிருவினையும் சேரா விறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு" என்றார் வள்ளுவர். எழு பிறப்பு இற - எழு பிறப்புக்களும் முடிவடையுமாறு; வான் - இங்கு மோட்சத்தைக்

காட்டிற்று; இடையூறு - துன்பம்; பாற்றது - குணத்தையுடையது; பால் - பகுதி; நிருவிகற்ப+அனுபூதி, அகரம் தொகுத்தல், வேறு பாடில்லாத பிரமாணங்களைக் கொண்டறிந்தஅனுபவ அறிவு எனப் பொருள்.தேற்றது - தெளிவையுடையது; முக்கீற்றது - மூன்று கீற்றுகளையுடையது; மறைச்சிகை-உருவகம்; சிகை-குடுமி; திருபுரைப் பெயர் - திரிபுரசுந்தரி என்ற பெயர்; தூளி - விபூதி; சீர்த்தது - சிறப்பை யுடையது; கதிர்கால்-கிரணங்களை வெளிவிடும்; கடவுளர்க்கு அனுபூதி என்க. இம்மூன்று பாடல்களும் தில்லைநடராசரைப் பற்றிய வையே. இங்ஙனமே கோயிற்புராணத்தின் முதல்மூன்று பாட்டுக்களில் காண்க. (3)

309. மிடறு - தொண்டை; மிடலுறு - வலிமை பொருந்திய; விரை - வாசனை; நறவு-தேன்; மறை முடிவின் புகல் உபநிட விஞ்சை - வேதமுடிவில் கூறப்படும் உபநிடதமாகிய வித்தை; உளது இலது என்பதும் ஒளி வெளி என்பதும் என்று பிரிக்க; வெளி - ஆகாயம்; மொழிவற - சொல்லொணுதபடி; பெடை நடை - அன்னப்பெடை போன்ற நடை; பெடை - இங்குப் பெண் அன்னத்தைக் காட்டிற்று; திரியம்பகர் - சிவன்; மங்கை - இங்கு உமாதேவியைக் காட்டிற்று; ஒருமொழி பிரணவ மந்திரம் - ஒப்பற்ற மொழியான 'ஓம்' என்ற பிரணவ மந்திரம்; **பிரணவ மந்திரம்** :-இதுமூன்றக்ஷரமாய், மூன்று பதமாய், மூன்றர்த்தப் பிரகாசமாய் ஏகாக்ஷரமாய் ஏகபதமாய், ஏகார்த் தப்பிரகாசமாய் இருக்கும். இதில் முதலெழுத்தாகிய அகரம் ஒப்பற்ற முதல்வனுகிய பகவானைத் தெரிவிக்கும். மத்திய பதமான உகாரம் அவதாரண வாசியா யிருக்கும். மூன்றுவதான மகரம் ஆத்மவஸ்வரூபத் தை விளக்கும். இம்மூன்று எழுத்துக்களும் மூன்று வேதங்களின் சார மாகும். இதன் முதலெழுத்துக்குப் பொருள் ரக்ஷகம்; ஆனமையால் அத்தொழிலுக்குரிய தர்மம் சகல ஐச்வர்யத்தோடு கூடிய ஈச்வரனுக்கே யன்றி மற்றவருக்கில்லாமையால் அது பகவானைத் தெரிவிக்கும். மற்ற அக்ஷரங்கள் முன் சொன்னபடி உணர்த்தும். இது வைத்துதி, தாமசி, நிர்க்குணவிர்த்தி என மூவிதப்படும். இது சகல தேவர்க்கும் பிறப்பிட மாயும் மந்திரங்களுக்கெல்லாம் மூலமாயுமிருக்கும். இது சமஷ்டி, வியஷ்டி என இருவிதப்படும். இதனை வேத ஆரம்பத்திலும் முடிவிலும் உச்சரிப்பர். இதனை உத்கீதையெனவும் சுத்தமாயையெனவும் கூறுவர். இதில் எல்லா உலகங்களும் எல்லாச் சுருதிகளும் தோன்றி ஒடுங்கு மென்பர். இவ்வாறு இம்மந்திரத்தைப்பற்றிச் சூதசம்ஹிதையில் கூறி யுளது. ஒருமுறை பிரமன் திரிலோகங்களை நீருக்க அதினின்றும் அக்கினி, காற்று, சூரியன் தோன்றினர். மீண்டும் தபாக்கினியால் அவைகளை யழிக்க மூன்று வேதங்கள் உண்டாயின. அவற்றையு மழிக்க

அவற்றினின்றும் அகர உகர மகரங்கள் உண்டாயின. அம் மூன்று எழுத்துக்களையும் திரட்டி 'ஓம்' என வைத்தனன். வலம்புரிச் சங்கின் வடிவினது இது. அகரம் பிர்மாவையும் உகரம் விஷ்ணுவையும் மகரம் உருத்திரனையும் குறிக்குமென்பாரும் அகரம் விஷ்ணுவையும் உகரம் உருத்திரனையும் மகரம் பிரமாவையும் குறிக்குமென்பாருமாக சைவ வைணவ மதத்தவர் இப்பிரணவப் பொருளில் மாறுபடுவர். அகரம் பிரமத்தைக் குறித்தலால் அந்தப் பிரமத்தை விஷ்ணுவென்றும் சிவனென்றும் இஷ்டமான பெயர்களால் வழங்குவதன் குறிக்கோள் ஒன்றேயாம். (4)

310. தோள் நான்கு - தும்பிக்கையும் ஒரு கையாதலால் இதனை நீக்க மிகுதி நான்கு கரத்திற்கும் நான்கு தோள்களாயின. மாறுதலை - மாறினதலை - ஈண்டு யானை முகத்தைக் குறிக்கிறது. நால்வாய் - தொங்குகின்றவாய்; கொம்பு - தந்தம்; ஒரு தந்தத்தை ஒடித்து மேருமலையில் பாரதம் எழுதியதால் இங்ஙனம் கூறினர். உந்தி - நதி; ஒருத்தண்முகம் - ஒப்பற்ற மலர்ந்த முகம்; எஞ்ஞான்றும் - எப்போதும்; செம்பாதி - செம்மை நிறம்பொருந்திய பாதிபாகம்; செம்மை + பாதி - செம்பாதி; "ஈறுபோதல் இடையுகரம் இ ஆதல்" என்ற சூத்திரம் காண்க; தானோர் பச்சைப் பாதியும் - தான் ஒப்பற்ற பசுமை நிறம் பொருந்திய பாதிபாகமும்; தான் என்பது உமாதேவியைக் காட்டியது. சிவன் செந்நிறமும், அவனிடம் பாதிபாகம் பெற்ற உமைக்குப் பச்சைநிறமுமுண்மையால் இங்ஙனம் கூறினர். திருமாலைப் "பச்சை மா மலைபோல் மேனி" என்பதனால் அவர் தங்கைக்கும் கொள்ளப்பட்டது. பச்சை நிறமுடைமையால் "கௌரி" எனப்பட்டாள். தான் என்றஇடைச் சொல் தேற்றத்தைக் குறித்தது. பாதியுங்கண் என்பது பாதி யங்கண் என்றிருப்பின் நன்று. (5)

311. வெள்ளியும் பொன்னும் கொழித்து - வெண்பொன்னும் செம்பொன்னும் அலைகளால் கரைகளில் ஒதுக்கி, இதனால்தான் காவிரிக்குப் "பொன்னி" என்ற பெயருண்டாயிற்று; அகில் அரைத்து - அகில் எனும் வாசனைப் பொருளைக் கற்களில் தாக்கி அரைப்பித்தும்; தரளமும் துகிரும் தெள்ளு கல்லோலக் காவிரி - முத்தும் பவளமும் கொழிக்கும் நீரலைகளையுடைய காவிரிநதி; முள்ளரை முளரிப் பொகுட்டு - முட்களை யிடையிலேயுடைய தாமரைக் கொட்டை; பொகுட்டு - ஈண்டு மலரைக் காட்டிற்று; முதல்வன் - பிரமன்; முடிதுளங்கிடத்தாய் எள்ளுறப் புடைக்கும் வள்ளி நாயகன் - தலைவணங்கும்படி இகழ்ச்சி யடையத் தண்டிக்கும் முருகன்; முருகன் பிரமனைப் பிர்ணவ மந்திரத்திற்குப் பொருள் கேட்க அவன் பொருள் கூறாது திகைக்கவே குட்டிக் கந்தமா

தனத்திற் சிறையிட்டனர். பின் சிவபிரான் கட்டளையால் சிறை நீக்கிச் சிவமூர்த்திக்குப் பிரணவத்தின் பொருளை உபதேசித்தார். சிவகாமச் சுந்தரித் தாயைக் காத்திட வள்ளிநாயகனைப் பணிகுவமே என முடிக்க.(6)

312. மரகதக்கிரி தோள்கள்-மரகதமலை போன்ற தோள்கள்; மகரமைக் கடல் மார்ப-சுறு மீன்கள் உலாவும் கரிய கடல்போன் றகன்ற மார்புடைய ; மழைமுகிற் புயன்மேனி-மழை பெய்யும் மேகத்தைப்போன்ற புஜத்தையுடைய உடல் ; புயம் - புயன், இறுதிப்போலி ; வண்ணம் எய் தீர்த்தனை—நிறமமைந்த கடவுளை ; மதகரி - கசேந்திரன் என்ற யானை ; முதலை கக்கிடவாயை வகிர்-முதலை தனது பிடியைவிட வாயைப்பிளக்கும்; கதிர்த் தனியாழி யண்ணல்-கிரணங்களை வெளிவிடும் ஒப்பற்ற சக்கரத்தையுடைய திருமால்; உரகமெத்தை - ஆதிசேடனாகிய படுக்கை ; உரகம்-பாம்பு; அறிதுயில்-யோகநித்திரை ; உலகம் முற்றினும் வாரி உண்ணும் முற்சேட்டன் - (பிரளயகாலத்தில்) உலக முழுமையும் வாரி உண்ணும் படியான முதன்மையான அழகுள்ளவன் ; ஒளிர்சிறைக் கணை - பிரகாசிக்கின்ற சிறகுகளையுடைய அம்புகள் ; உலரவிட்டு - வாடுமாறு விட்டு ; நூறும் - அழிக்கும் ; நரைதிரைக் குடில்போக - மயிர் நரைத்தலும், தோல் சுருங்குதலும் தம்மிடத்தினின்று குடியெழும்பிச் செல்ல ; நரர்-மனிதர் ; சேர்த்தேமை-சேர்த்த எம்மை என்று பிரிக்க ; நலிகலிக்கடல்-வருத்தும் வறுமைக்கடல் ; நண்ணுற -அடைய ; திருவுளத்தினிலேறு - மனத்திற்குத் தக்க ; தெரிமதி - ஆராயும் புத்தி ; மும்மை - உம்மை, இம்மை, மறுமை என்னும் முப்பிறப்பு ; புலியூர் - சிதம்பரம் ; வியாக்கிரபாதர் (புலிக்கால் உடையவர்) என்ற முனிவர் தரிசித்ததால் இப் பெயர் ஏற்பட்டது. தற்பரை-பார்வதி. (7)

313. நால்வகைத் தோற்றம் - கருப்பை, முட்டை, வித்து வேர் முதலியன, வேர்வை ஆகியவற்றினின்று தோன்றுவது. நான்குபத்து எண்மர் - 48-ஆயிரம் முனிவர் ; பால்வகை - விதிவகை ; பதும பீடம்-தாமரை யாசனம் ; கரமலர்ப் பதஞ்சொரிந்து - கைகளாகிய மலரைப் பாதத்தில் சொரிந்து ; கரமலர்-உருவகம் ; மால்வகை-பெருமை தங்கிய வகை ; வலையம் - கைக்கடகம் ; மழலை வாய்க் கிள்ளை - குதலைச் சொற்களைப் பேசும் வாயையுடைய கிளி ; மருங்கு ஒருகை - இடுப்பிலே யொருகை ; சூல்வகை - கருப்ப வகை. ஒருகையில் பல்மலரும் என்ற மூலபாடம் ஒருகை யுற்பலமலர் என்றிருப்பின் பொருள் சிறக்கும். உற்பலம் - குவளை மலர். (8)

314. பல்லுயிர்த் தொகையாவும் வல்லிதிற் கரட்டிய பிள்ளை - பலவுயிர்களையும் படைக்கும் பிரமன் ; பல்லம் - அம்பு ; வள்ளல் - சிவபெருமான் ; மன்மதன் சிவபெருமானை எதிர்த்து எரிந்ததும் பின்பு

மன்மதன் "பிரத்தியும்னன்" என்ற பெயரினனாக கண்ணனுக்கு மகனாகப் பிறந்ததும் காண்க. கற்பு + ஆட்டி - கற்பை ஆண்டவள் (கற்புடையவள்); பலவயத்தன்-பலம் பொருந்திய வீரமுடையவன், (மன்மதன்); மல்லல் உற்று-வளப்பமடைந்து; ஒல்லை-விரைவுப் பொருளைக் காட்டுகிறது. கொப்பூழ்ப்பரன் - திருமால், இவரது உந்தியினின்று தாமரை தோன்றி அதில் பிரமனைச் சிருட்டித்து உலகப் படைப்பை நடத்துதலால் 'உலகேழு பூத்தொளிர் கொப்பூழ்' என்றார்; உரம்-மார்பு; எல்லி - சூரியன்போன்று பிரகாசமுடையவள்; தொலைபாத செல்வி - வற்றாத செல்வத்தையுடைய இலக்குமி; மல் உடுக்கள் நேர மல்லிகைப் பூ - வளமான நட்சத்திரங்களைப்போன்ற மல்லிகைப்பூ; மைக்குழல் - கரியகூந்தல்; முல்லையில் - முலையில், விரித்தல் விகாரம்; பொற்கவின் - மிக்க அழகு; ஒல்லையிற் றணியாளை - பழமையினின்று நீங்காதவளை; வள்ளையிற் காட்டிய வள்ளிணைப் பொருசேலை வெல்லு கண்சேப்பி - வள்ளைப் பூப்போன்று காட்டிய காதினிடம் போர் செய்கின்ற சேல்மீனை வென்ற கண்களையுடைய சிவப்பு நிறத்தையுடையவள்; செல்லலுற்றவர்-துன்பமடைந்தவர்; வாதை-துன்பம்; செல்வ முற்றிய வாழ்வு-சிவபெருமான்; ஆட்டிய -நடனமாடச் செய்த; சிவனும் பார்வதியும் நடனமாடும்போது சூழ்ச்சியால் சிவன் வென்றார். சிவன் காதினின்று வீழ்ந்த குண்டலத்தை யாருமறியாமல் எடுத்துப் போட்டுக் கொண்டதும் அப்போது தான். (9)

315. வேர்ச்சுருதி - முதற் காரணமான வேதம்; சாகித்தியம் - புலமை; சத்தம்-இசை; செந்தளிர்க்கை-சிவந்த தளிர்போன்ற கைகள்; பத்தியாய் - வரிசையாய்; பகிரண்டம் - அண்டத்தின் வெளி; பாதம் - கால்கள்; மாதிரம் - திக்குகள்; படிகடல் - பூமியைச்சூழ்ந்த கடல்; நிதம்பதடம் - அல்குல்; மேகம் உத்தரிகமாய் என மாறுக; உத்தரிகம் - மேலங்கி; செம்பொன்மலை, வெள்ளிமலை - மேருமலையும், இமயமலையும்; உபையம் - இரண்டு; உலவாது - கெடுதி நேராது. (10)

316. சத்தமாதா-அபிராமி, வாராகி, இந்திராணி முதலியோர்கள்; நவசத்தி - வாமை, ஜேஷ்டை, ரௌத்ரீ, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூத தமனி, மனோன்மணி ஆகியோர். **யாமத்தர்:**- யக்கியன் மக்கள்; (இவர் பன்னிருவர்; சுவாயம்பு மநுவந்தரத்திலுள்ள தேவதைகள். சிவகங்கை - சிவனிடமுள்ள கங்கை; **பிரமசாமுண்டி.:**—கடவுளாகிய சாமுண்டி தேவி, சத்தியினம்சமாகும்; சண்டமுண்டர்களை உமை காளியினால் கொல்வித்துச் சாமுண்டையெனப் பெயரிட்டார். இருவருக்கொருவரையும் ஒருவருக்கிருவரையும் என்பது அர்த்தநாரீஸ்வரரைக் குறிக்கிறதுபோலும். மூதண்டம் - பழையு

அண்டம்; கோளம் - உருண்டை வடிவு; அண்டம் - முட்டை வடிவு போன்றது; அப்புறம் - சுவர்க்கம்; இப்புறம் - பூமி; **பத்திரகாளி :-** மகிடாசுரன் செய்த துன்பத்தைத் தேவர் சிவமூர்த்தியிடம் கூறவும் அவருக்குக் கோப முண்டாக அக்கோபமே ஓர் பெண்ணினுருவாய்த் திரண்டது; அதுவே காளியுருவென்பர்; இவள் இரத்தபீசன் எனு மசுரனை ஒரு துளியிரத்தமும் கீழ் விழாது ஆகாயம் மேல் வாயாகவும் பூமி அடிவாயாகவும் அங்காந்து உண்டு மாய்த்தனள். (11)

---

## செங்கீரைப் பருவம்

---

**317.** ஒருவாறும்-ஒரு விதத்திலும்; பிரமம்-ஏகமாய் சச்சிதானந்தமாய் உலகமுழுதும் தோன்றி யொடுங்குதற் கிடமாயுள்ள பொருளாகிய கடவுள்; சரம் + அசரம்-அசையும் பொருள் அசையாப் பொருள்; மல்காந்து - முதுகு கீழாய்க் கிடக்க; மன்று - அம்பலம்; இருவினை - புண்ணிய, பாபம்; ஐந்து முத்தியுலகம் - பிரமன், விஷ்ணு, உருத்ரன், மகேசன், ஈசன் ஆகியவர்களின் உலகம்; ஞானதவிசு - ஞானமாகிய ஆசனம்; நாதம் - இது சிவவடிவு; தாள் - பாதம். (1)

318. **ஆதாரசத்தி :-** இவள் உலகத்திற் காதாரமான சத்தி. கூர்மபீடம், வெள்ளை நிறம், சிரசில் அங்குராகாரம், வரதம், அங்குசம், பாசம், அபயம் உடையவளாய்ப் பூமியைத் தாங்கி நிற்பவள்; சிவன் சத்தியா லதிட்டிக்கப்பட்ட குண்டலனீ சத்தி; முப்பத்திரண்டு இராகதில் பாடி அறுபத்துநாலு திருவிளையாடல்களை ஆடிக் காட்ட என்று நிரனிரையாகக் கொள்க; **இராகம் 32 :-**பைரவி, தேவக்கிரியை, குறிஞ்சி, பூபாளம் முதலியன; ஆகுளி - சிறுபறை; சூதானம்-சேமம்; ஆதார சக்திகள் 51- பேராக கூறியிருத்தல் காண்க. **குண்டலிசத்தி :-** ஒரு சத்தி; அது சுழுமுனை நாடியினூடே அநேகங் காந்திகளுடனே பாம்பின் வடிவாயிருந்து உடலை வளைத்து மூலாதாரத்தின் மேலே படத்தை வைத்துக்கொண்டு யோகநித்திரை செய்வது; **சுழிமுனை :-** இஃது இரண்டு பாதங்களின் அங்குட்ட விரல்கள் முதற்கொண்டு தேக மத்தியமான கந்தஸ்தானம்வரை இருகிளையாகவும் அதற்குமேல் பிரமரந்திரம் வரையில் ஒரு கிளையாகவும் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞையென்னு மாறுதார சக்கரங்களையும் அதற்குமேல் துவாதசாந்தம் வரையில் நான்கு சக்கரங்களையும் வியாபித்துப் பிரமரந்திரம் வரையில் சகள ரூபையாகவும் அப்பால்

துவாதசாந்தம் வரையில் நிட்கள ரூபையாகவுமிருப்பது. **இடைபிங் கலை :-** இடமூக்கால் வருஞ் சுவாசமும், வலமூக்கால் வருஞ் சுவாசமும் முறையே இடைகலையென்றும், பிங்கலையென்றும் கூறுவர். சந்திரகலை, சூரியகலை எனப்படும். இவைகளைச் சத்திகளாகக் கூறப்பட்டது காண்க. பாத அரவிந்த மலர் - கால்களாகிய தாமரை மலர்; பஞ்சகிர்த்திய சத்தி-ஐந்து தொழில்களைச் செய்யும் சத்தியர்; சிருஷ்டி, திதி, சங்காரம் மறைத்தல், அனுக்கிரகம் என்பன. சீத அம்புயத் தவசு - குளிர்ந்த தாமரையாசனம்; பரசு - துதிக்கும்; **திரிபுரசத்தி :-** ஓர்சத்தி. நாற் பத்துமுக்கோண சத்தி-நாற்பத்துமூன்று கோணங்களில் தக்க எழுத் துக்களை நிரப்பிப் பூசிக்கும் சத்திகள். (2)

319. அரவம் மாணிக்க மணியொளிரு படம் விரித்தாட என மாறுக. பத்து - பாதம்; அக்கு அறுகு - எலும்பும், அறுகம்புல்லும்; பிறையும், எலும்பும், அறுகும், கொக்கிறகும் ஆட எனப் பொருள் கொள்க. இருபக்கம் நடு முக்கண்ஆட - இரண்டு பக்கங்களிலும் நடு விலுள்ள மூன்று கண்கள் ஆட; துவள வார்குழை - மெல்லியதாயிருக் கின்ற நீண்ட குண்டலங்கள்; சுடர் - அக்கினி; துடி - உடுக்கை; அஞ்சல் - பயப்படாதே, இது அபயஹஸ்தம் எனப்படும். தவளவாய் சில்லரிக் கிண்கிணி - வெண்மையுடையவான சிறிய பரல்களையுடைய சிலம்பு; குஞ்சிதத்தாள்-வளைந்த கால்கள்; தரளதாமரை-வெண்தாமரை, உவமவாகுபெயர்; நன்மை+தாள் - நற்றாள்; **முயலகன் :—** தாருகா வனத்து இருடிகள் சிவமூர்த்தியைக் கொல்ல ஆபிசார யாகஞ்செய்ய அதில் எழுந்த பூதனிவன். இவன் சிவமூர்த்தியிடம் தன் உக்கிர வுரு வுடன் வரச் சிவமூர்த்தி இவனை முதுகில் ஊன்றி மிதித்து இடுப் பை யொடித்தனர். ஒன்றுதரு-பொருந்தலைத் தருகின்ற;- திவளவான் முறுவல் - மெலிந்த புன்சிரிப்பு. (3)

320. பொற்பாளை - அழகிய தாழைமடல்; பொற்சுட்டி - பொன்னால் செய்த நெற்றிச் சுட்டி; பருதிபிறை-சூரியபிரவை, சந்திர பிரவையென்னு மாபரணம்; பத்தியாய் - வரிசையாய்; கொப்பு - காதணியிலொன்று; மரகதப் படலமணி மகர மகரிகை - பச்சைக் கல்லால் மிகுத்துச் செய்தணிந்த சுறாமீன் போன்ற வடிவமுள்ள குறங்கு செறியெனு மாபரணம்; மாணிக்கம் எல்வளை-மாணிக்கத்தால் செய்த ஒளிவாய்ந்த வளையல். முதன் அரி - முதன்மையான வளையல்; பொற்சரி - பொன்னாலாகிய வளையல்; அரதன மதாணி - இரத்தினத் தால் செய்த பதக்கம்; உதரபந்தனம் - அரைப்பட்டிகை; மேகலை- மாதர் இடைக்கட்டு; ஆடகப் பாடகம் - ஆடகப் பொன்னினால் செய்த பாடகம் என்ற காலணி; அலம்பும் - ஒலிக்கும். (4)

321. மறிதிரைப் புணரி - மடங்கும் அலைகளையுடைய கடல்; புணருவாய் - சேர்ந்தபோது ; வாய் - ஏழாம் வேற்றுமை யுருபு ; மூவ் இருஞ்சூல் கொண்டு - மிகப் பெரிய கர்ப்பங்கொண்டு ; மின் - மின்னல்; மழை - மேகம்; உருமிடும் - இடிக்கும்; குடுமிநெடு மால்வரை - சிகரத்தையுடைய நீண்ட மயக்கந்தரும் மலை ; குறுவிழிப் புகர்முகக் களி நல்லி யானைக்குலம் - சிறிய கண்களும் கபிலநிற முகமும் மதமும் உடைய யானைக்கூட்டங்கள் ; குவடு உகுல்உற - சிகரத்தினின்று பனிக் கட்டிகள் சிந்துதல் அடைய ; உகுதல் என்பதன் தொகுத்தல் உகுல் ; வெண்கோடு அலைத்தோட - தந்தங்களை அசைத்துக்கொண்டு ஓட ; முட்காடகத்தடைகின்ற கோளரிக் குருளை - முட்களையுடைய காட்டி னிடம் அடைகின்ற கொல்லுதல் வல்ல சிங்கக் குட்டிகள் ; உள்காந்து- மனதில் கோப மிகுந்து ; எறுழ்வலிக் களிகிமிர்த்து - மிக்க வலியினால் சந்தோஷம் மிகுந்து ; எறுழ்வலி - ஒருபொருட்பன்மொழி ; உளை சிலிர்த்து - பிடரிமயிர்களைச் சிலிர்த்து ; அழல் சிந்த எரிகண்டு இறந்து- நெருப்புப்பொறி சிந்தின தீயைக்கண்டு கடந்து; நெடுவால் - நீண்ட வால்; புடைத்து - அடித்து ; முழை வாய் - குகைபோன்ற வாய் ; இவர் கல் பதுக்கை நெறி - சென்று கல் பாறைகளையடைந்து நிற்கும்; நெறி குறிஞ்சி - வினைத்தொகை; அத்தெறிவுஉறு குறிஞ்சி வருவேடன் - அத்தகைய நிலைபையுடைய குறிஞ்சி நிலத்தில் வள்ளிக்காக வந்த வேடனான முருகன் ; குறிஞ்சிவரு கிழவன் என்பதற்குக் குறிஞ்சி நிலத்திற்கென வந்த உரிமையுடையவன் என்க ;கிழவனைப் பெறு குழவி யென்பதில் ஓர் நயம் தோன்றுதல் காண்க. மேகந் தங்கும் உயர்ந்த சிகரங்களையுடைய மலைச்சாரலை அடையும் யானைக் கூட்டங்கள் சிகரங் களினின்று பனிக்கட்டிகள் சிந்த அதனால் பயந்து தந்தங்களை யசை த்துக்கொண்டு ஓடவும் காட்டிலுள்ள யானைகளைக் கண்ட சிங்கங்கள் தனது மனதில் கோபமிகுந்து மிக்க வலியால் மகிழ்ந்து பிடரிமயிரைச் சிலிர்த்து நெருப்புச் சிந்தும் காட்டுத் தீயைக் கண்டு கடந்து வாலை முறுக்கி உடல்மீது அடித்துக்கொண்டு குகைபோன்ற வாயைத் திறந்து கர்ச்சித்துச் சென்று கல்நிலத்தை யடைந்து நிற்க இவைகளின் இரண்டு கூட்டத்தையு மழிக்கும் குறிஞ்சிநிலத்தில் வரு வேடன் என்க. குறிஞ்சி நிலம்-மலையும் மலையைச் சார்ந்த இடமுமாகும்; மலையினின்று ஓடும் யானைகளைப் பார்த்துச் சிங்கங்கள் மலையைச் சார்ந்த காட்டினின்று ஓடி வால் முறுக்கிக் கோபங்கொண்டு கொல்லுவதற்கு அடைந்து நிற்க அதுபோது எழுந்த காட்டுத் தீயைக்கண்டு ஓடின. எனவே குறிஞ்சி நிலத்தில் யானையும், சிங்கங்களும் வாழ்வது பெறப்பட்டது. (5)

322. அல்லிமலர்த் தவிசு - அகவிதழோடு கூடிய தாமரை மலராசனம்; ஏறியிருந்து உலகு அன்று ஈகின்றோன் - அமர்ந்து உலகைப் படைப்பவன்; அன்று - அசைநிலை; மல்லரவு - வளம்பொருந்திய ஆதிசேடன்; புரந்து உள விண்தாய் நின்றோன் - பாதுகாத்து உள்ள ஆகாய உலகத்தைத் தாவி நின்று ஓரடியாய் அளந்தவன்; வல்லையழித்து - சீக்கிரத்தில் அழித்து; மஞ்சுள் நஞ்சோன் - அழகிய விஷத்தையுண்ட கரிய கண்டத்தையுடையவன். வல்லியிடைச் சசிமாது - கொடிபோன்ற இடையையுடைய இந்திராணி; தோயுங் கோ - சேரும் அரசனாகிய இந்திரன்; மூவர் - ஞானசம்பந்தர், சுந்தரர், திருநாவுக்கரசர். அன்பியல் எஞ்சா நெஞ்சோர் - அன்பில் குறையாத மனமுடையவர்; மெய்ப்புலி-வியாக்கிரபாத முனிவர்; பதஞ்சலி - அத்திரியின் தேவியாகிய அநசூயையிடம் பிறந்தவர். இவர் ஆதிசேடன் அவதாரம். இவர் சிதம்பரமடைந்து வியாக்கிரபாதருடன் இருந்து சிவமூர்த்தியின் நடன தரிசனங் கண்டு களித்தவர்; பாணினி சூத்திரத்திற்குப் பாஷ்யமும் மற்றும் பலவும் இயற்றினர். சில்லரி வச்சிறு பாதம் - சிறிய பரல்களையுடைய சிலம்புதரித்த பாதம். "வணங்கு + உமை" என்க. (6)

323. அவ்வியம் - பொறாமை; லோக வசந்தரை - லோகமாகிய பூமி; அல்பாவம்சோர-இருளாகிய பாவம் நீங்க; சுக + அனுபவங்கள்-சுகானுபவங்கள்; விள்ளரு முத்தி - சொல்லுதற்கரிய மோட்சம்; வெம்பாசம் பாற - கொடிய ஆசை நீங்க; தவ்வில மத்தளம் - சிதைவில்லாத மத்தளம்; சல்லரி - பம்பை மேளம்; நடம்புரி தண்தாள் - நடனம் செய்கின்ற அழகிய பாதங்கள்; பங்கினை - பங்கைப் பெற்றவளே. "பூமியில் குற்றமுள்ள உயிர்கள் அங்குமிங்கும் ஓடும் உடலில் அடைந்து ஊஞ்சல்போன்று நடமாடி அதனாலுண்டான பாவம் நீங்க" என முதலடிக்குப் பொருள் கொள்க. பாவஞ்சோர, போகம் போக, பாசம் பாற நடனம் புரிகின்ற சபாபதி பங்கினை என்று இயைக்க. (7)

324. கூறுருவைத்தெரியாடிகரம் - பாதி பாகமான வடிவுள்ள சிவபெருமானது கைகள்; கோதை - மாலை; கோலமதிக்கதிர் வாயிலெடுத்தெழு கோளரவு - அழகிய சந்திரனையும், சூரியனையும் வாயினால் விழுங்கி எழுகின்ற கிரகங்களாகிய இராகு, கேதுக்களான பாம்புகளை; குலைவாய் - ஈரற்குலையினிடம்; பீறியெடுத்து - கிழித்தெடுத்து; நிலாவுமெறித்திட - ஒளிவீச; சீர்பேறு படைத்த-சீர்பெறுதலைப் படைத்த, பேறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்; கலாப மயிற்பரி - தோகையையுடைய மயில்வாகனம்; விறற்சேய் - வலிமை வாய்ந்த முருகன்; வீறு துதிக்கையோ ரானைமுகத்தன்-பெருமை தங்கிய துதிக்கையுள்ள

ஒப்பற்ற ஆனைமுகத்தனை கயமுகாசுரன்; மாறு துதிக்கை கொடு - மாறின தும்பிக்கை கொண்டு; சிவபெருமான் தனது கைகளில் மாலையை யெடுத்ததுபோல மயிலும் கோளரவைக் குலைவாய் எடுத்துப் பிறியது என்க. **மாறு துதிக்கையானது :-** வீரபத்திரர் தக்கன் யாகத்தை யழிக்கும்போது விநாயகர் வெட்டுண்டார். அவர் தலையைப் பூதம் விழுங்கி விட்டது. பின் யானைத்தலையைப் பொருத்தி எழுப்பினர்; ஆடும்வேழம்-கொல்லும் விநாயகர்; ஆறுசிரத்து ஐம்முகத்தன் - ஆறு தலைகளையுடைய முருகனும் ஐந்துதலைகளின் முகத்தையுடைய விநாயகனும்; ஏத்து + உமை - துதிக்கும் உமாதேவியே. (8)

**325.** மாதவர் - சிறந்த தவத்தையுடையவர்; அன்பு கரைந்து அவர் சிந்திய எனப் பிரிக்க; வாய்கமர் இன்பம் விடேலென - வாய் திறத்தலாலுண்டாகும் இன்பத்தை விடக்கூடாது என்று; கோதறு மஞ்சரி சூடினர் - குற்றமற்ற பூமாலையைச் சூடின சிவபெருமான்; கோமள மஞ்சனம் ஆடு - அழகிய நீரில் குளிக்கும்; மேதகு சங்கம் - மேன்மை பொருந்திய தமிழ்ச் சங்கங்கள்; ஊனமில் - குறையற்ற; அணங்கினர் - தெய்வப் பெண்கள்; உங்கொடு - உங்காரஞ் செய்தலைக் கொண்டு. (9)

**326.** பாதளம் உந்து இளவாளையெழுந்து - பாதளத்தினின்று எழும்பிப்பாயும் இளைய வாளைமீன் எழுந்து; பாயுந் தாதுஅவிழ் தாமரை - பரவிய மகரந்தங்கள் தெரிய மலர்ந்த தாமரை; தாமரையோடை - தாமரைகளையுடைய நீரோடை; விழுஆறு - சிறந்த ஆறு; தடாகம் - குளம்; தண்காவிரி-குளிர்ந்த நீருள்ள காவேரி நதி; வண்கா விரி மலர் தருமணி முத்தாறு - வளப்பம் பொருந்திய சோலைகளில் விரிந்த மலர்கள் சேர்ந்த மணிமுத்தா நதி; மாதவி - குருக்கத்திச் செடி; போது அணை மாதளை - பூக்கள் சேர்ந்த மாதுளைமரம்; தாதகி - அத்திமரம்; பூகம் - பாக்குமரம்; பொன்சொரி செஞ்சாலி - பொன்னைத் தன் விளைவினால் சொரிந்து தரும் சம்பா நெற்பயிர்கள்; தென்புலியூர் - அழகிய சிதம்பரம்; வாளை மீன்கள் எழுவதால் பலாப் பழம், வாழைப்பழம், மாம்பழம் ஆகியன விழ அதனால் மலர்ந்த தாமரைகளையுடைய ஓடைகளும், சிறந்த ஆறுகளும், குளங்களும் காவேரி நதியும், மணி முத்தா நதியும், சண்பக மரங்களும், குருக்கத்தியும், பாக்கு மரங்களும், கரும்புகளும், சாலிப்பயிரும் நிறைந்த புலியூர் என்க. பாகு விளைந்திடு கரும்புகள் எனமாறுக. வெல்லப்பாகினை உண்டாக்குகின்ற கரும்புகள் என்று பொருள். (10)

# தாலப்பருவம்

---

**327.** ஒருநால் அரசும் பசும் பொற்கால் - ஒப்பற்ற நான்கு வகைஅரசும் பசிய அழகிய கம்பங்களாகவும்; ஒரு வாய்-ஓங்குதலுடைய தாய்; மாணிக்க மணித் தொட்டில் - மாணிக்கமிழைத்த அழகிய தொட்டில்; சிற்றம்பலம் தவிசாம் - சிற்றம்பலமாகிய ஆசனத்தில்; சிற்றம்பலம் - ஐந்து சபைகளிலொன்று, சித்சபையெனப்படுவது; பரிபூரணம் - எங்கும் நிறைதல்; உகந்து - விரும்பி; துயில்கூர - தூக்கம் மிக (தூங்க); திருநா - பிரமனதுநா; பிரமனைக் குறிக்கவே "திரு" எனப்பட்டது. திருத்தார் அணியும் உருத்திரையும் - பகைவர்களை வென்று அவர்களது குடல்களை மாலையாகத் தரிக்கும் உமையினம்சமான உருத்திராணியும்; திரோதானம்-மறைதல்; **திரோதாசத்தி :-** திரோதான என்பதிலுள்ள னகரம் மறைந்துளது; சிவபெருமானுடைய பஞ்ச சக்திகளுள் ஆன்மாக்களுக்கு உலகானுபவங்களைக் கொடுத்து உண்மையை மறைத்தல் செய்யும் ஒரு சக்தி. **மனோன்மணி :-** சத்தியரில் ஒருத்தி. **பராசத்தி :-** சிவத்தோடு அபின்னையாயிருப்பர். (1)

**328.** உந்திக்கொடி - தொப்புள் கொடி; வாள் ஒசியாமே - வாளால் அரியாமல்; பிறந்தவுடன் தொப்புள் கொடியை மருத்துவர் வாளால் அரிவர். உருவத்தவசு - வடிவமாகிய ஆசனம்; உகள் - குதி; வரிவிற்புருவம் - வரிந்து கட்டப்பட்ட வில்போன்ற புருவம்; வள்ளை-வள்ளைக்கொடி போன்ற காதுகள்; அதரம் - உதடு; மருளல் - மருண்டு பார்த்தல்; விரல் ஊறு அமுதம் - விரலைச் சுவைத்தலால் சுரக்கின்ற அமுதம்; நாள்மதி - நாண்மதி; மதி - சந்திரன்; நாள்தோறும் - நாடோறும்; **தொப்புள்கொடி :-** குழந்தை பிறக்கும்போது தாயின் கருப்பைக்கும் குழந்தையின் தொப்புளுக்கும் இடையில் ஒரு கொடியுண்டு. அதில் இரத்த ஓட்டம் உண்டு. பிறந்த 20-நிமிடத்திற்குப் பிறகு இரத்த ஓட்டம் இராது. அப்போது அரிவர். (2)

**329.** கல்லோலங்கள் தாலாட்ட-கடலலைகள் தாலாட்ட; கவிகைப் படத்து மாணிக்கக் கல்லாயிரங்கள் விளக்கெரிப்ப - கவிந்துள்ள படங்களிலுள்ள மாணிக்கக் கற்கள் ஆயிரம் விளக்கைப் போன்று

பிரகாசிக்க ; கடல் கட்செவிப்பூந் தொட்டிலில்-கடலிலுள்ள பாம்பாகிய (ஆதிசேடன்) அழகிய தொட்டிலில் ; கட்செவி - பாம்பு, கண்களையே காதாகவுடையதெனும் காரணப்பெயர் ; எழில் ஆலிலைப் பூந்தொட்டில்- அழகிய ஆலிலையாகிய அழகிய தொட்டில் ; ஆண்பிள்ளை - ஈண்டு திருமாலைக்குறித்தது; திருமாலின் தங்கையானதால் இளைய பச்சைப் பெண் பிள்ளாய் என்றார். தொன்மை + ஆயிரம் - தொல்லாயிரம் ; துலையா - கழியாத ; சூரைத் துலைக்கும் - சூரபத்மனெனும் அசுரனையழிக்கும் ; தொலைக்கும் - துலைக்கும், போலி ; சரவணப் பூந்தொட்டிற்குழவி - சரவணப் பொய்கையில் தாமரைப் பூவாகிய தொட்டிலில் வளர்ந்த ஆறுமுகன் ; சல்லாபத்தின் தாலாட்டும்-பேசிக்கொண்டே தாலாட்டும்; கடலில் ஆதிசேடனாகிய அழகிய தொட்டிலிலும், ஆலிலைத்தொட்டிலிலும் தூங்கும் திருமாலிற்கு இளைய பெண் பிள்ளையே! பழைய ஆயிரத்தெட்டண்டங்களையும் அழியாது 108-யுகம் அரசாளவரம் பெற்ற சூரபத்மனையழிக்கும் சரவணப் பொய்கையிற் தாமரைத் தொட்டிலில் ஆறுமுகனாகிய குழந்தையைப்பெற்றுப் பாடிக்கொண்டே தாலாட்டுபவளே! தாலேலோ என்று பொருள் கொள்க. (3)

330. எள்ளில் விளைந்த நறுந்தயிலம் - எள்ளெண்ணெய், இப்போது நல்லெண்ணெய் என வழங்குகின்றனர். உச்சிக்கு - தலைக்கு ; இளம்பச்சறுகு - இளைய பச்சை அறுகம்புல் ; அரிசனம் - மஞ்சள் ; திமிர்ந்து - பூசி ; அலர் பூந்துகிலால் நீர் துவட்டி - மலர்போன்ற மென்மையான துணியால் உடலைத் துடைத்து ; மூக்கு உருவி என்று பிரிக்க; நிலக்காப்பு - பூமியின் மண்ணைக் குழைத்திடும் பொட்டு ; அஞ்சனம் - மை ; வெண் பொடி - வெண்மையான திருநீறு ; இது மூன்றாக இடுவராதலால் ஒரு தண்மதியின் இளம் பிறை மூன்று உதித்ததெனை என்றார். ஒருதண்மதி ஒருமுகத்திற்கும் இளம்பிறை மூன்று விபூதி மூன்று கீற்றுக்களாக இடுவதற்கும் உவமை; மணித்தொட்டிலில் தள்ளி ஆட்டும் என இயைக்க. (4)

331. உவட்டாத - வெறுக்காத ; வெளியே - ஆகாயமே. (5)

332. கொற்றாய் - வெற்றியையுடையவளே ; மறையோதுற்றாய் - வேதங்களை ஓதினவளே ; கொப்பாய் - கொப்பு எனும் காதணியையுடையவளே ; பொற்பாய் - அழகையுடையவளே ; விற்றாய் விளைவாய் வைத்தாய் - ஒளியையுடையவளாய், பல சம்பவங்களை நிகழ்த்துபவளாய்ச் செய்தவளே ; வெற்பாய் வெளியாய் நிற்பாய் - மலையாய், ஆகாயமாய், நிற்பவளே ; முன் தேவரையே பெற்றாய் - முதல் கடவுளான விநாயகரைப் பெற்றவளே ; நல் + தார் + புலியூர் உற்றாய் - நல்ல மாலைதனை யுணிந்து சிதம்பரத்திலடைந்தவளே, (6)

333. நச்சார் உளமே - உனை விரும்பாதவர் மனமே; கச்சாய் - கைத்தாய் என்பதன் போலி, வெறுத்து நீக்கினுப் என்று பொருள். நச்சு ஆர் அரவக்கச்சாய் - விஷம்பொருந்திய் பாம்பை இடைக் கச்சாக உடையவளே; வைச்சே முலையாய் - கூரிய உயர்ந்த முலைகளையுடைய வளே; சே - உயர்ந்த; இச்சா கிரியாசத்தி - இச்சாத்தி, கிரியாசத்தி; விச்சாதரர் பூசிப்பாய் - வித்தியாதரரால் பூசிக்கப்படுபவளே; மெய்த் தாய் - உண்மைப் பொருளை யறிந்த தாயே; விச்சே - வித்தா யுள்ளவளே. (7)

334. முற்றுமுலையாய் - முதிராத இளைய தனத்தையுடைய வளே; முத்தா நதி - மணிமுத்தா நதி; பொற்பூர் புலியூர் - அழகு மிகுந்த சிதம்பரம்; பூருவமே-முதன்மையுடையவளே; சொற் கோகி லம் - பாடும் குயில்; கைக்கே செபமாலைக்கே கிளியாய் - தவ ஒழுக்கத் தினிடத்தும், செபமாலையினிடத்தும் வாழும் கிளியை ஒத்தவளே; ஈண்டு நான்காம் வேற்றுமை ஏழாம் வேற்றுமை உருபில் மயங்கிற்று, வேற்றுமை மயக்கம். வெற்றாய் - வெறுமையை யுடையாய், (ஒன்று மின்மை). (8)

335. பொற்கேகயம் - அழகிய மயில்; பூவாய் - பூவை என்ப தன் விளி, பெண்ணே என்று பொருள்; தற்பூரணமே தற்காரணமே என்று பிரிக்க. தாவாதே - சாயாதே; தற்போதம் - பிரமஞானம்; கற்பூர விபூதித் தூளித நீள் காபாலி என்று பிரிக்க; கண் காமினி மோகக் காதலி நீ காமாரி என்று பிரிக்க; காமினி - பெண்; காமாரி - காமனை அழித்தவள், காம+அரி - காமாரி; அரி - அழி; வில்போல்+ நுதலாய் - வில்லைப்போன்ற நெற்றியை யுடையவளே; வெற்போன் மதலாய் - இமயமலை யரசனின் குழந்தையே. (9)

336. வீயாதே - சாவாதே; அக்கார்விடம் - பாற்கடலில் தோன்றிய ஆலகாலவிடம்; துய்த்தார் - உண்டார்; பரன் - சிவபெரு மான்; நீ ஆனதே அப்போது அமிர்தாய் வைத்தாய்-நீ அவரை விட்டு நீங்காமல் அப்போது அவ்விஷத்தை அமிர்தமாகச் செய்தாய்; வேயார் தோளாயே - மூங்கிற்போன்றுள்ள தோளையுடையவளே; கோமாதே - பெண்களுக்கெல்லாம் தலைவியே; விமலாய் - குற்ற மில்லாதவளே. (10)

# சப்பாணிப்பருவம்

---

337. கட்டுறு சுருங்கு இடைத் துடி - வாரினால் கட்டப்பட்ட, சுருங்கின இடையைப்போன்ற உடுக்கை; கொடுகொட்டி-சிவநிருத்தத் தொன்று; இது திரிபுரம் தீப்பற்றி யெரியக்கண்ட சிவமூர்த்தி யாடியது; புடை குடைந்து - விலாப்பக்கம் கையிட்டு; குடல் - குடர், போலி; கொட்டாத நெட்டிலைக் குடுமிவேற் குழவி - உதிராத நீண்ட இலைபோன்ற உச்சியையுடைய வேலைப்பெற்ற முருகன்; முத்தாட - முத்தமிட்டு விளையாட; இனிய முத்தமிழ் அமிழ்த்தி - இனிய இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழிலும் மூழ்கி; எட்டும் இருபத்து நால்-(8 + 24) 32-லக்ஷணங்களோடு கூடியவராய்; எட்டுஇலக்கத்தவர் - அஷ்டமூர்த்திகளாயுள்ள சிவபெருமான், (அ) எட்டுக் குணங்களை யுடையவர்; சட்டுவம் - அகப்பை; அமுது கொட்டும் உன் கையினால் - உணவு பரிமாறும் உனது கையினால்; கடவுள் கொடுகொட்டி நடனமாட அதற்கேற்ற தாளங்கொட்டுவதைப் பார்த்து அதைக் கற்றுக்கொள்ள உனது கையினாற்கொட்டுவது போன்றும், இறுமாந்த அசுரர்களின் வாயினின்று இரத்தம் சொரிய விலாப்புறம் சென்று குடரைப் பிடுங்கி மாலையிட்டுக் கைக்கொட்டி நடனமாடும் வேலையுடைய முருகனை "முத்த மிட வா" என்று கைக்கொட்டி அழைப்பதுபோன்றும், இனிய மூன்று தமிழிலும் மூழ்கி இருகைகளையும் கொட்டுவது போன்றும், 32-லக்ஷணங்களோடு கூடியவராய் தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல் முதலிய எட்டுக் குணங்களையுடையவரான சிவபெருமானுக்கு அகப்பையினால் உணவு இட்ட கையினால் சப்பாணி கொட்டுக என முடிக்க. கொட்டி நடமிட்டிடுங் குழவி - துடி கொட்டி நடமிட்டிடு முருகன், சூரனது வேற்றுருவாகிய வஞ்சத்தையறிந்து அப்போரை வென்ற முருகன் அக்கடல் நடுவண் திரையே அரங்கமாக நின்று துடிகொட்டி யாடினார். 32-லக்ஷணமுடையவர் திருமால் எனினுமாம். சிவன் தாருகாவனத்து முனிவர் பத்தினிகளின் கற்பு நிலையறியச் சென்றபோது 32-லக்ஷணமுடையவரானார். (1)

338. முள் தாமரைப் பொகுட்டரசன் - முள்ளையுடைய தாமரை யிலிருக்கும் பிரமன்; முகடு + அரவணைச் செல்வன் - ஆயிரம் முடி களின் சிகரங்களையுடைய ஆதிசேடனைப் படுக்கையாகவுடைய திருமால்; முக்கண் திருக்கடவுள் - சிவபெருமான்; களைக - அழிக்க; வெள்ளைக் கலை - வெள்ளையுடைய; வெள்ளைக்கலை, பொன்னிறக்கலை, தோல்

கலை ஆகியவற்றை முறையே பிரமன், திருமால், சிவன் ஆகியோர்க்குக் கொள்க. அருள் கை - வினைத்தொகை; தட்டாது - தடையில்லாது; நாலெட்டறம் - 32-தருமம்; கிள்ளையும், மாலையும், அறமும் வைத்தளித்திடு முனது கையென இயைக்க; எட்டினையும் மறவாது என்பது 307-ஆம்பாட்டில் கூறிய எட்டெழுத்தினையாகும். (2)

339. கள்ளமுற்றது தேனுவும் - பாலையுடைய காமதேனு; **நவநிதியம் :**—கச்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, பதுமநிதி, நந்தநிதி, நீலநிதி, மகா நிதி, மகாபதுமநிதி, முகுந்தநிதி என்பன. கட்டுமுட்டு உண்டது - ஆசையினுற் கட்டப்பட்டுக் குறைப்பட்டுக் கேட்டவைகளை; பொற்புலவு சங்கநிதி - அழகு விளங்கும் சங்கநிதி; பங்கமுறு சலமுறும் பொழியுமழை முகில் - குளத்திலுள்ள நீரை யடைந்து மழை பொழியும் மேகம்; புகல் + ஆதுலர் - சொல்கின்ற வறியவர்; அகில வலயம் - பூமியையும் அதைச் சூழ்ந்த பாகத்தையும்; அங்கைமலர் - உருவகம்; அகம் + கை - அங்கை; சகல + ஆகமம் + அத்து + இ = சகலாகமத்தி - 'அத்து' சாரியை; சகல ஆகமங்களையுமறிந்தவள் என்று பொருள். சிந்தாமணி - கேட்டதைத் தரும் ஓர் இரத்தினம். கொடையினில் கடைபடும் - கொடையினில் மற்றவர்களைக் கடைசி நிலையிலிருத்துகின்ற; கற்பகமும், நீலநிதியும், பதுமநிதியும், காமதேனும், கேட்டவைகளைத் தரும் சிந்தாமணியும், சங்கநிதியும், மேகம் குமுறி புவிமீது நல் நீதியாயிருக்கவே பெய்யும் நவ நிதியமும் வறியவர்கட்கு முதன்மையான அற்புதத்தை விளக்கத் தினமும் அட்டமாசித்திகள் செய்து பூமியைக் காக்கும் அத்தகைய திறமுடைய கைகள் முத்தியைக்கூடக் கொடுக்குமோவென்று வியந்து நின் கைகள் கொட்டுவதுபோற் சப்பாணி கொட்டு வாயாக எனப் பொருள் கொள்க. தற்பர - தெய்வத் தன்மையுடைய; கலாசத்தி - கலைகளை யுணர்ந்த சத்தி. (3)

340. அடிதொடங்கிப் புடையும் இடையுள்ளும் முடிகாறும் - பாதமுதற்கொண்டு பல விஷயங்களால் தாக்கும் இடத்தினின்று நினைக்கும் தலை வரையில்; வெகுளி - கோபம்; முக்குணம் - சத்துவம் இராசசம், தாமதம் என்பன; "ஆசையொடு வெகுளியு மயக்கமொடு" என்ற அடியை,

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமம் கெடக் கெடுநோய்."

என்ற குறளோடு ஒப்பிடுக. அலகில் இடைபிங்கலை - அளவில்லாத

இடைகலை, பிங்கலை என்பன; இடைகலை சந்திரகலைக்கும் பிங்கலை வல மூக்கினின்று வரும் சுவாசத்திற்கும் பெயர். திரிநனவு - மூன்று ஆசை, மண், பெண், பொன் என்பன. நனவும் கனவும் அற்று இறைவி நின் அடிபற்றியே என்று பிரிக்க. இதைய மலர் உருவகம்; படியடங் கலும் - பூமி முழுதும்; படிவம் - உருவம்; "கண் + களித்து + அகம் + கை கொட்டவே" என்க; சடிலமுனிவர் - சடையையுடைய முனிவர்கள். (4)

341. ஐவர் - விநாயகன், முருகன், வீரபத்திரர், வயிரவர், ஐயனார் ஆகியோர். இவர்கள் சிவன் படைப்பி லுண்டானதால் இவ்வாறு கூறினர். ஐந்தொழில் - சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்பன; பைவரு குரம்பை - கருப்பையினின்று வருகின்ற உடல். வரைக்கரசன் - இமயமலைக்கரசனான பருவதராசன்; முக்கண்ணன் - சிவபிரான், (காரண விடுகுறிப்பெயர்) ; முளரிமலர் விரல் - உவமத்தொகை; முளரி - தாமரை; தைவரு - தடவி; வயிர வரைக் காளி பால் ஊட்டி வளர்த்தனள். (5)

342. அனப்பேடை - பெண்ணன்னம்; கற்பென - கற்பது போன்று; கட்சி - பறவைக்கூடு; வனக்குயில் - சோலைக்குயில்; பூவை - மைனா; கண் கமலச்செயல் ஒப்ப வரிப் பெடை - கண்ணாகிய தாமரையின் தொழிலை ஒத்த பெண் வண்டுகள்; உனைப்போல எள் செயல் எத்தனை கற்றிலம் - உனைப்போல மற்றவைகளை இகழ்ச்சி செய்வதற்கு எந்த அளவும் கற்கவில்லை; இலச்சை - வெட்கம்; கொள் சிறை - கொண்ட சிறகுகளை; பொற்பில் + இசைக்கொடி - அழகில் கீர்த்தி மிகுந்த கொடிபோன்றவளே; சில பிரதிகளில் பொற்புலிசைக் கொடி என்றுளது. இதற்கு அழகிய புலியூரில் உள்ள கொடியொத்தவளே எனப்பொருள் கொள்க. புலியூர் என்பதன் மரூஉ புலிசை; வெட்சி மலர்போன்ற பாதங்களை ஒத்து நடப்பதைக் கற்பனவாகிய பெண் அன்னங்களும் மெச்ச நடித்து ஆச்சரியத்தோடு சாயலைக் கற்பனவாகிய பச்சைநிறத் தோகையுள்ள மயில்களும், தான் கட்டிய கூட்டிலுள்ள கருநிற மமைந்த குயில்களும், பச்சை நிறமுள்ள கிளிகளும், மைனாக்களும் சொல்லைக் கற்பனவாகியும், கண்களாகிய இரு தாமரைகளின் தொழிலைப்போன்று கற்பனவாகிய பெண் வண்டுகளும் உன்னைப்போல மற்ற உவமானப் பொருள்களை இகழ்வதற்கு எந்த அளவும் கற்கவில்லை; எவ்வாறு எதிர்நிற்போம் என்று ஒன்று சேர்ந்து வெட்கினவைகளாய், இவ்வாறு வெட்கியிருப்பது அவமானமும் அற்பமுமாகும் எனப் பேசித் தாங்கள் கொண்ட சிறகுகளைத் தங்கள் உடலிலே தட்டும் அத்தகைய அழகு பொருந்தியவளே சப்பாணி கொட்டுக என்க. (6)

343. முக்கனி - மா, பலா, வாழை என்பன. முச்சி - தலைக் கொண்டை; முத்தமிழ் சொல் கழகம் - மூன்று தமிழையும் பற்றிப் பேசப்படும் சங்கம்; அருள் பாதம் - வினைத்தொகை; பொத்தக முத்தியருள் - புத்தகத்தில் கூறிய முத்திகளைத் தருகின்ற; வித்துருமம் - பவளம்; மெச்சு இடை கச்சோதம் - மெச்சுகின்ற இடுப்பாகிய மின் மினி; மின்மினி விட்டு விட்டு மின்னுவதால் மின்னல்போன்று உவமை கூறப்பட்டது. நுதற்சிலை - நெற்றியாகிய வில்; மைக்கண் மலர்க்கணை - கரிய கண்ணாகிய மலரம்பு; வெற்பு முலை - மலைபோன்ற முலை; பூவை - பெண்; கற்புமிகு தனியுற்றோளிர் பொற்றோளி - கற்பு மிகுந்து ஒப்பில்லாத பெருமையடைந்து விளங்கும் அழகிய தோளை யுடையவள்; உற்பல கைத்தலி - நீலோற்பல மலர் தாங்கிய கைத்தலத்தை யுடையவளே; பச்சை நிறப்பிடி - பச்சைநிறமுள்ள பெண் யானையை யொத்தவளே; அத்தாணி - ஆசனம்; கொத்துறு தத்துவ மத்தில் இருப்பவள் - திரண்ட தத்துவங்களின் நடுவில் இருப்பவள்; மத்தி - நடு. மத்தியில் என்பது மத்தில் என நின்றது. (7)

344. சத்தினி பத்தி - சத்தியை வணங்கும் பக்தி வழிபாடு; அச்சிலெனத் தளி விட்டிலை - ஒதுக்கிடம் என்று தள்ளிவிடவில்லை; தளி - தள்ளி என்பதன் தொகுத்தல்; என் + கு = எற்கு - எனக்கு என்பது பொருள்; எற்கு உளம் வைத்தனை - எனது உள்ளத்தில் வைத்தாய் - எற்கு வேற்றுமை மயக்கம்; கற்குளம் - கல்லால் படி கட்டப்பட்டுள்ள குளம்; அச்சுதன் அச்சுதன் நச்சுழி உற்று அழிவுறவே - திருமாலின் அந்த மகன் (மன்மதன்) சிவபெருமானை அடக்க விரும்பும் போது நெற்றிக்கண்ணின் நெருப்புப்பட்டு அழியவே; ரதிக்காக - அவனது மனைவியான ரதிக்காக; அற்பின் - அன்பினால்; மலர்க்கணை - ஐந்துவித மலரம்புகள்; இக்கு - கரும்பு வில்; மலர்ப்பாணி தாமரை - மலர்போன்ற கைகளை யுடையவளே. (8)

345. நித்திலமுத்து அருவித்தெரியல் பெரு நெட்டுருவில் சூழ - அருவிபோன்ற முத்துக்களாலாகிய மாலை பெருமைபொருந்திய நீண்ட வடிவத்தில் சூழ்ந்திருக்க; நெட்டரவம் - நீண்ட பாம்பு; செக்கர் மணிச்சுடர் - சிவந்த மாணிக்கச் சுடர்; உச்சிமுடிப் பூண - தலையிலுள்ள கிரீடத்தைத் தரிக்க; கைத்தல சக்கர நற்பரிதிச்சுடர் பக்கமுற - கையிடமுள்ள சக்கரத்தின் நல்ல சூரியனைப்போன்ற கிரணங்கள் நாலாபக்கங்களிலுமடைய; மேகங்களால் மறைக்கப்படாமலும் கிரகண மில்லாமலும் இருக்கும் சூரியனை நல்பருதி யென்றார்; சீத கள் கமலச் சுனை மிக்க விழிக்கு - குளிர்ந்த தேனையுடைய தாமரை யிருக்கும் சுனையின் மிக்க குளிர்ந்த கண்களுக்கு; நகைப்பெருவட்ட மணிச்செவி - பிரகாச

மான பெரிய வட்டம்போன்ற அழகிய காது; குழைகோல - குண்டலம் அழகைக் கொடுக்க; வற்புஉறு பச்சை நிறக்கழை - உறுதியுடைய பசுமை நிறமுடைய மூங்கில்; அச்சுதன் - திருமால்; கொத்துரு வெற்பு அரசற்கு - திரண்ட மலைகளின் அரசனுக்கு. (9)

346. கற்பகம் மைப்புயல் - கற்பகத்தருவும் கரியமேகமும், இவை இரண்டும் கைம்மாறு கருதாமல் கொடுப்பன; கழைத்தோளி - மூங்கில் போன்ற தோள்களையுடையவள்; கற்பூரம், நற்புழுகு, அப்பிய பொற் களபத்தொடு கத்தூரி உள்ளிடு மத்தக மொத்த தனத்து இரு உத்தமி - கற்பூரமும் நல்ல புனுகும் கலந்த அழகிய கலவைச் சாந்தோடு கத்தூரிச் சேர்ந்த யானை மத்தகம்போன்ற இரு தனங்களையுடைய உத்தமியே; இப்பூவில் - இந்தப் பூமியில்; ஒப்பிலி - இணையில்லாதவளே; பற்றுரை - எதிரிகளை; முக்கணி - பார்வதியின் ஓர் பெயர்; பொற்கணி - அழகிய கண்களை யுடையவளே; அக்கணி - அம்கணி, அங்கணி என்ற மெலித்தல் வலித்தலானது; முத்தாரம் வித்துருமப்பணி சித்திரநற்பணி மெய்க் கணி பொற்பூணி - முத்துமாலையும் பவளத்தாலாகிய ஆபரணமும் சித்திர வேலைப்பாடுகள் செய்த நல்ல ஆபரணங்களும் உடலில் அணியும் அழகை யுடையவளே; நத்தினர் - விரும்பிச் சேர்ந்தனர். (10)

---

## முத்தப்பருவம்

---

347. தோற்றம் - காட்சி; சுருதி மணக்கும் சிவ ஆகமம் - வேதக் கருத்துக்கள் நிரம்பிய சிவாகமம்; வடகலை நூல் - சமஸ்கிருதம்; பிரா கிருதம் - ஓர்மொழி; மலையும் உருக்கும் இயல் இசையும் - மலையையும் உருக்குகின்ற இயற்றமிழும், இசைத்தமிழும்; வளர்மந்திர மத்திம தாரம் பெருகி - மிகுந்த மந்திரங்களும் நடுத்தரமான இசையுமுடைய வைகளாய் அதிகரித்து; பேதா பேதம் - பலவகைகள்; நாடகத்தாள - கூத்தாடும் பாதத்தை யுடையவளே. (1)

348. செயிருற்றிடு தீவினை-குற்றம்பொருந்திய பாபம்; சஞ்சிதம்-ஈட்டிய பாபம்; ஆகாமியம் - பிராரத்திற்கிசைய எடுத்த தேகத்திலே அதன் பலம் புசிக்கையில் விருப்பு வெறுப்புக்களா லுண்டாகிய புண்ணிய பாபங்கள்; மாயைப் பாசி - மாயையாகிய பாசி; பாசம் - ஆசை; ஊறுங்களிப்பு - மிக்கு வருகின்ற மகிழ்ச்சி; ஒருங்கு அற்று - முழுதும் நீக்கி; பூதபவுஷியம் - ஐம்பெரும் பூதங்களினால் ஏற்பட்ட வாழ்வு; சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்று மூன்று வினைகளுண்டு; மும்மலம் - ஆணவம், மாயை, கன்மம் என்பன. (2)

349. இப்பாட்டில் முத்துப்பிறக்கும் பலவிடங்களை அம்மையின் அங்கங்களுக்கு உவமைகூறி அங்கங்கு உம்மிடம் முத்தம் தோன்ற வாயினின்று ஒரு முத்தம் தரலாகாதா என்கிறார் புலவர். முத்துப் போன்ற பற்களால் நின்னிடம் முத்தமும், மேகம்போன்ற கூந்தலினால் நின்னிடம் முத்தமும், முகமாகிய சந்திரனால் நின்னிடம் முத்தமும், முலைகளாகிய யானையினால் நின்னிடம் முத்தமும், கண்களாகிய கயலினால் நின்னிடம் முத்தமும், நடுவிடமுள்ள காதால் (கட்செவி - பாம்பு) நின்னிடம் முத்தமும், நன்மையுள்ள நெல் இருநாழியினால் நின்னிடம் முத்தமும், கைகளாகிய தாமரையினால் நின்னிடம் முத்தமும், கரும்பு வில்லினால் நின்னிடம் முத்தமும், மூங்கில்போன்ற தோளினால் நின்னிடம் முத்தமும் இருக்க வாயினின்று முத்தம் கொடுக்க உனக்கு அரிதோ என்று பொருள் கொள்க. மேகம், சந்திரன், யானை, சங்கு, கயல், பாம்பு, நெல், தாமரை, கரும்பு, மூங்கில் ஆகியன முத்துப் பிறக்கும் இடங்களாகும். நத்து - சங்கு; களம் - கழுத்து. இருநாழி நெற்கொண்டு 32-அறம் வளர்த்ததால் "நறு நெற்படியால் முத்தம்" என்றார். சத்தாய் - அழியாததாய்; சித்தாய் - அறிவுள்ளதாய்; (3)

350. மச்சத்துழியில் - மீனிடத்தில்; வராகம் - பன்றி, பன்றிக் கொம்பில் முத்துப் பிறக்கும்; வேய் ஈன்றமணி - சிவன்; மார்பத்து அணியும் - மார்பிலணியும்; மீனிடம் பிறந்த முத்தமும், பன்றிக் கொம்பிடம் பிறந்த முத்தும், மார்பிலணியும் சிவனது வாயினால் கொடுக்கும் முத்தத்தைச் சுவைத்தருளும், பச்சைக் கிளிபோன்றவளே என்க; சிவன் திருமால் அவதாரமான மீனின் தலையறுத்தும், வராகத்தின் கொம்பொன்றை யொடித்தும் தண்டித்ததால் மார்பத்தணியும் வேயீன்ற மணி எனப்பட்டார். மாணிக்கம், பவழம், கோவைக்கனி வீழிப்பழம், மாதுளம்பழம், இந்திரகோபம், பங்கேருகப்பூ, முருக்கு, இலவம், உச்சித்திலகம், அரக்காம்பல் இவைகள் வாய்க்கு உவமை கூறப்படுவன. வீழிப்பழம் - விழுதிச்செடியின் பழம். "வீழிவாயின் கனிவாயொரு மெல்லியல்" (கம்பராமா, புனல்விளை-28) **இந்திர கோபம்** :- இது செந்நிறமான பூச்சி. மழைக்காலத்தில் எங்கும் நடமாடும்; பங்கேருகப்பூ - தாமரைப்பூ ; **உச்சித்திலகம்** :—இது ஒரு பூஞ்செடி, சிவந்த மலருள்ளது. **அரக்கு ஆம்பல்** :—சிவந்த அல்லிப்பூ ; உறழும் பசுந்தேன் கசிந்து ஊறும் உள்ளும் புறம்பும் மணம்நாறும் - மேற்கூறியவைகளைப் போன்றுள்ள தேன் கசிந்து சுரந்து உள்ளேயும் வெளியேயும் வாசனை வீசும்; மணிமுத்தம் சச்சைச் செழுங் குங்கும தனத்தாய் - முத்து மணிமாலைகளையும், சிவந்த செழுமையான குங்குமக் குழம்பையுமுடைய தனத்தைப் பெற்றவளே. (4)

351. இப்பாட்டில் கண், கரம், கால், செவி, தலை, நாக்கு இவைகளின் பயனைக் கூறுகிறார். மலையரையன் - இமயமலை யரசன். (5)

352. படி அளிக்கும் தொழிலுடைப் பங்கயன் - பூமியைப் படைக்கும் தொழிலுடைய பிரமன்; சிகரவெற்பும் கிரிவெற்பும் - மேருமலையும், சக்கரவாள மலையும்; திரைகடல் செம்புனல் அலைக்கும் சுதையளிக்கும் புயன் - அலைவீசும் பாற்கடலில் நீரில் கடைந்து அமிர்தம் கொடுத்த திருமால்; வான் ககன....பரன்-ஆகாய முழுவதும் வாழும் தேவர்களைக் கொன்றிடும்படியான ஆலகால விஷத்தை யுண்டு உயிர்களைக் காப்பாற்றியவனும் கருணை வைக்கும்படியான வனுமான சிவபெருமான்; பிரமனும், திருமாலும், சிவபெருமானும் தகுதியான உனைக்கண்டு அவர்கள் துதிக்கும்படி அத்தகைய பெருமை வாய்ந்தவளே முத்தந்தருக என்று பொருள்கொள்க. (6)

353. கிளையின் முத்தம் - மூங்கிலினின்று உண்டாகும் முத்து; கதழ் எரிக்கண் பொரியும் - உக்கிரமான நெருப்பினிடம் வறுபட்டுப் போகும்; மூங்கில் ஒன்றோடொன்று உராய்ந்து தீப்பற்றுவதால் "கனல் விளைக்கும் கிளை" எனப்பட்டது; கடு நடை - விரைந்த நடை; செம்புகர் முகத்தின் கரி - இரத்தம் தோய்ந்து சிவந்த கபில நிறமமைந்த முகத்தினையுடைய யானை; கரி - பண்பாகு பெயர்; கரியும் - நெருப்பினால் காந்திவிடும். யானைகள் ஒன்றோடொன்று சண்டையிடும்போது தந்தத்தில் உராய்வுண்டாகி தீப்பற்றும். அதன் காரணமாக தந்தத்தில் உண்டாகும் முத்துக்களும் கருகிப்போகும். போர் யானையைக் காட்டவே "செம்புகர் முகத்தின் கரி" எனப்பட்டது. புயல் - மேகம்; கதறு இடிக்கண் சிதறும் - கதறுகின்ற இடி இடிக்கும்போது சிதறிவிடும். புது மதிக்கண் திகழும் முத்தம் - புதிய சந்திரனிடம் விளங்கும் முத்து; குறுமுயல் கொண்டு ஒளிரும் - சிறிய களங்கம்கொண்டு பிரகாசிக்கும்; சந்திரனிடம் களங்கமுள்ளதால் முத்துக்கும் களங்கம் கூறினார்; தின விளைக்கும் கழை - தின்னுவதற்காக விளைவிக்கப்படும் கரும்பு; திருகணிக்கண் - திருகாணிக் கண் என்பதன் குறுக்கல் விகாரம், திருகாணி - திருகு மரைகளுள்ள ஓர் யந்திரம்; கமலமுத்தம் - தாமரையினின்றுண்டான முத்து; களிறு இனிச்சென்று உளரும் - ஆண் சுறாமீன் சென்று சிறகினால் அசைக்கும். மற்ற முத்தங்களெல்லாம் (முத்துக்களெல்லாம்) ஒவ்வொன்றால் கெடுதியுறும், உனது முத்தம் (முத்திகொடுப்பது) கெடாதது. அதனால் தருக என்கிறார் புலவர். (7)

354. சிமிழ் - நகை வைக்கும் பெட்டி; தண் தரள முத்தம் - அழகிய வெள்ளிய முத்துக்கள்; மற்று அங்கு அதி பெற என்க;

அதிபெற - அதிகம்பெற ; குமிழினில் - நீர்க்குமிழிபோன்ற; பரிசு இலை - தன்மை கிடையாது ; குங்கும மணக்கும் கமுகின் வாய் அமிழ்தினில் தண்தரள முத்தம் - குங்கும வாசனை வீசும் பாக்கு மரத்தில் உள்ள அமிர்தத்தைக் காட்டிலும் இனிய வெள்ளிய முத்துக்கள் ; அகில கற்பம் கெடினும்-எல்லா உலகமும் அழிந்தபோதிலும் ;அழிவில் பொற்பு - அழிவில்லாத அழகு ; நகைப் பெட்டியிலிருக்கும் முத்து உலகத்தையே விலையாகப் பெற்றாலும் கொஞ்சமும் ஆசையின்றி அதிகம்பெற மனதில் நினைக்கும் கொள்கையுடையேமல்லோம். நீரின் குமிழ் போன்ற முத்து, குளிர்ந்த இளைய சந்திரனைப் போன்றிருந்தாலும் அவைகளைக் கொள்வதற்கு (பெறுதற்கு) நினைக்கும் தன்மை யுடையேமல்லோம். குங்குமப்பூப் போன்று வாசனைவீசும் கமுகிலுள்ள முத்தமானது எல்லா உலகங்களு மழிந்தாலும் அழியாத அழகுள்ள அம்முத்துக்களை யாம் அடையப் பெறுதற்குச் சற்றும் நினைக்கவில்லை. எனவே இனிமை மணக்கும் குமுத மலர்போன்ற வாயினின்று முத்து ஒத்தவளே முத்தம் தருவாயாக என்று பொருள் கொள்க. (8)

355. வெற்பன் - இமயமலை யரசன் ; குமரி முற்றுங் குமரி என்பது எப்போதும் இளமைத்தன்மை பெற்றுள்ளதைக் காட்டிற்று. குமரி-கன்னியா குமரியிலுள்ள பகவதியைக் காட்டிற்று. முதலிலுள்ள குமரர் என்பது முருகனைக் குறித்தது. முக்கண் குமரர் என்றது விநாயகனைக் குறித்தது. இரண்டாவதாகக் கூறிய முக்கண் குமரர் வயிரவரைக் குறித்தது. **வயிரவர் :**—தாருகனைக் கொன்ற சத்தியின் கோபத்தீ எழுந்து குழந்தைஉருக்கொண்டது. அதனைக் காளி பாலூட்டி வளர்த்தனள். அதைச் சிவமூர்த்தி ஒடுக்க ஒடுங்கி அவரிடமிருந்து எட்டு உருக்கொண்டு வெளிப்பட்டார். இவருக்கும் நெற்றிக்கண் உண்டு. அமரர் - தேவர் ; அமரார் - பகைவர் ; அமர் - போர் ; அமரி-துர்க்கை; அமரிநற்சங்கரி என்று பிரிக்க ; மூலைக்குஞ்சரி - மூலைகளாகிய யானையையுடையவள் ; நிலைப்பொன் சிகரியே - நிலைத்த அழகிய கோபுரங்களையுடையவளே ; திமிரம் உட்கும் தினகரன் - இருளை மடியச்செய்யும் சூரியன் ; உய்க்கும் - செலுத்தும் ; கருணியே - கருணையுடையவளே ; தமரியே - உறவாயுள்ளவளே. (9)

356. பிணை - பெண்மான் ; மாவடு - மாங்காயின் வடு ; கடு - விஷம் ; அலை - கடல் ; சுதை - அமிர்தம் ; அலர்படுக்கும் - மலரச்செய்யும் ; பகழி - அம்பு ; கொலைபடைக்கும் சமன் - கொலை செய்யும் எமன் ; தலையளி - பேரன்பு ; கயல் மீன், பெண்மான், மாவடு, கடு, அலை, சுதை, அலர், பகழி ஆகியவை பெண்களின் கண்களுக்கு உபமானமாகக் கூறப்பெறும் ; செம்படவர் வீசும் வலைகளில் கயல்

மீன்கள் செல்லும்படியும், பெண்மான்களைப் பயப்படும்படியும், மாவடுவை உப்பின் தொகுதியில் அமிழ்த்தும்படியும், விஷத்தைப் பின்தொடர்ந்துசெல்லும்படியும், கடலைச்சென்று அலைய வைக்கும்படியும், அமிர்தத்தைத் தின்று உமிழும்படியும், மலரினிடம் சென்று வருத்தும்படியும், அம்பினைக் கண்டு இகழும்படியும், கொலைசெய்யும் எமன் இறக்கும்படியும் கண்களை விழிக்கும் குமரியே என்று முடிக்க. மேற்கூறியன கண்களுக்கு உவமையாகாமல் தோற்றனவாதலால் இங்ஙனம் கூறினர். (10)

---

## வருகைப்பருவம்

357. பாம்புரி - அகழி; காவணம் - பந்தல்; கல்லூரிகள் - பள்ளிக்கூடங்கள்; சூளிகை - அரண்மனை; கொடிஞ்சி - தேர்மொட்டு; புலகோடி யுகமே விளங்கும் சினகரம் என்று பிரிக்க, (சினகரம் - கோவில்); கல்தளி - கல்லால் கட்டிய கோவில்; நேர்த்தி - அழகுள்ள பொருள்; ஆவியம் - உயிர்; சாளரம் - சன்னல். (1)

358. சுவறி - உறிஞ்சி; பூ விசிறி - பூவாகிய விசிறியினால்; நறும்பொற் பாளையினை நாளிகேரம் கமுகு கவரி இரட்ட - நன்மை பொருந்திய அழகிய பாளையினால் தென்னை மரமும் பாக்கு மரமும் சாமரைபோன்று மாறி மாறி வீச; மந்தாநிலம் - தென்றற் காற்று; மணியாழ் ஞிமிறு வாசிப்ப - வண்டுகள் அழகிய யாழ்போன்று இசை பாட; கொந்து ஆர்இலவம் ஆலவட்டம் - பூங்கொத்துகள் சேர்ந்த இலவம்பஞ்சு மரம் கால்செய் வட்டம் (பெருவிசிறி) வீச; கூந்தல் கமுகு - குலைக் கூந்தலையுடைய பாக்குமரம்; குவளை விழிப்ப - நீலோற்பலம் மலர; செஞ்சாலிக்குல வேந்தரசு கொலுவிருக்கும் - சிவந்த சாலி நெல்லாகிய நற்குலத்தில் தோன்றிய அரசன் ராச சபையில் வீற்றிருக்கும்; சிந்தாமணிப் பொற்புலியூர் - கேட்டதைக் கொடுக்கும் சிந்தாமணி எனும் இரத்தினத்தைப் போன்ற அழகிய புலியூர். (2)

359. கருந்தாழ் அளகக் கடைசியர் - கருமையான, பூமியில் தாழும்படியான கூந்தலையுடைய மருதநில மக்கள்; தம் கண்ணே - தங்களது விழிகளே; கிழநாரை - கிழமாகிய நாரை எனும் பறவை; பருந்து ஆழ்ந்து இறைஞ்சப் பறந்து சுற்ற - பருந்துகள் மிகவும் கீழாய்ப் பறந்து சுற்றவும், இறைஞ்ச - குனிந்து; பள்ளப்பயல்கள் பறிதூக்கும்-உழவரின் பிள்ளைகள் மீன்களை வாரியெடுக்கும் கூடையைத்

தூக்குவார்கள். இதில் பயல்கள் என்பது பகுத்தறிவில்லாப் பிள்ளைகளைக்குறித்தமையால் தூக்கும் என்ற செய்யும் வாய்பாடு வினைமுற்றைக் கொடுத்தார்; பழமீன் கரும்பின் முத்து - பழைமையான மீனினின்றும் கரும்பினின்றும் பிறந்த முத்து. முத்து நிலாப் பார்த்தே மலர்த் தாமரை முகிழ்க்கும் - முத்தினின்று தோன்றும் ஒளியைக்கண்டு தாமரைப்பூக்கள் மூடிக்கொள்ளும்; பெருந்தாழ்க்குவளை முகை யவிழ்க்கும் - மிக்க ஆழத்திலுள்ள குவளையின் மொட்டுக்கள் மலரும்; சூல் சங்கு - கர்ப்பம்கொண்ட சங்கு; பெடைமென் குமரி மட அன்னம் - மென்மையான இளைய பெண் அன்னம்; முத்தினைக் கண்டு தாமரை மலர் மூடுவதும் குவளைமலர் மலர்வதும் தன் பிள்ளையென கர்ப்பம் கொண்ட சங்கு அணைப்பதும் அன்னம் தான் பெற்ற முட்டையென்று அடை கிடப்பதுமான சோலை சூழ்ந்த புலியூர் என்க. செருந்தி + ஆழ் + சோலை - செருந்தி மரங்களால் அமிழ்த்தப்பட்ட சோலை, இகரம் தொக்கது. (3)

360. மணியூடு - மணியினிடையில்; சகம் - உலகம்; பழுத்த வத்தின் - பழுத்த தவத்தின் என்பதிலுள்ள தகரம் குறைந்தது. (4)

361. குழையா - வாடாத; எழு புன்பிறவி - ஏழு அற்பமான பிறவிகள்; சதகோடி - நூறுகோடி; சரோருகம் - தாமரை; வாழ்வு வருக என்பதிலுள்ள 'வு'கரம் தொக்கது. (5)

362. வெகு தேவ துரந்தரி - மிக்க தேவர்களைக் காப்பாற்றுபவளே; தினகரகுண்டலி - சூரியன்போன்று பிரகாசிக்கக்கூடிய குண்டலத்தை உடையவளே; முக சீதள மண்டலி - முகமாகிய குளிர்ந்த இடத்தை யுடையவளே; வசீகர மங்கலி - யாவரையும் பக்தியால் வசப்படுத்தும் சுபத்தை உடையவளே; வசுதேவர் வணங்கு உமை - திருமால் வணங்கும் பார்வதியே; பரிபுர முண்டகி - சிலம்பணிந்த தாமரை போன்ற பாதத்தை யுடையவளே; பரவாதவர் கண்டகி- துதிக்காதவர்களுக்கு வாளையொத்தவளே; கண்டகம் - வாள்; பரசிவ ரஞ்சகி - மேலான சிவனுக்கு அன்புடையவளே; பரிவாகிய நெஞ்சகி - இரக்கமான மனமுடையவளே; கரதல கந்தரி - கைகள் சிவனது கழுத்தியுடையவளே, இது விடமுண்ட போதாகும்; கலிகாலம் - கலியுகம் (6)

363. அசுரேசர் - இராட்சதர்களுக்குத் தலைவர்; சிரகர சிந்தூரி - தலையைக் கையிலே உடைய திலகம் அணிந்தவளே, இது 'ருரு' என்ற அரக்கனை அவன் தவநிலையில் கொன்ற போதாகும்; சிரமாலி திகம்பரி- தலைகளை மாலையாக அணிந்த பார்வதியே; திரி அம்பிகை - திரிகின்ற அம்பிகை என்று வினைத்தொகையாக்குக; அல்லது 'ஸ்திரி' என்பதன் வடசொல்லாகக் கொண்டு இருபெயரொட்டுப் பண்புத்தொகையாக்குக;

பஞ்சமி - துர்க்கை; கனகசிதம்பரி - பொன்மயமான சிதம்பரத்தில் வசிப்பவள். (7)

364. குறுங்தொடி - சிறிய வளையல் அணிந்தவளே; குரவே கமழ் கொந்தளி - நறுமணம் வீசும் கூந்தலை உடையவளே; குடம் நிகர் கொங்கைகள் - குடத்தையொத்த தனங்களை யுடையவள்; அமரி - யுத்தத்தைச் செய்பவளே; பசும்பிடி - பசுமைநிறம் பொருந்திய பெண் யானையை யொத்தவளே; அடையார் படை - பகைவரது சேனை; மிடி - துன்பம்; தமருக விஞ்சையள் - உடுக்கை யடிக்கும் வித்தையை யுடையவளே; சதுர்வேத விபஞ்சியள்-நான்கு வேதமாகிய வீணையை யுடையவளே; தயகுணபஞ்சரி-இரக்கமாகிய குணத்தை இடமாகபெற்றவளே; சகல ஆகம மஞ்சரி - எல்லா ஆகமங்களையும் பூமாலையாக வுடையவளே; கமலம் உகந்தவள் - தாமரையைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டு சந்தோஷித்தவள்; கருணாகர அம்பிகை - கருணையின் இருப்பிடமான பார்வதியே; ஆகரம் - இருப்பிடம். (8)

365. அவமதி பொன்றிட-நிந்தனை யழிய; அழியா நிதி-வற்றாத செல்வம்; அகில பவங்கெட - எல்லா பாவங்களும் நீங்க; அகலா விபவம் - நீங்காத வாழ்வு; குவலயம்-இங்கு இடவாகு பெயராய்ப் பூமியிலுள்ள மக்களைக் குறித்தது. (9)

366. மறம் மலி கஞ்சுகி - வீரம் மிகுந்த பாம்புக் கங்கணத்தை யுடையவளே; கஞ்சுகம் - பாம்பு; மதுபதி கஞ்சகி - தேன் பதிந்துள்ள தாமரையில் வசிப்பவளே; மது - தேன்; துளி - துளி போன்றவள்; நந்தினி - மகள்; பாரதி - சரசுவதி; இந்திரை - இலக்குமி; பொறை-பொறுமை; புரம் எரி தந்தவள் - திரிபுரங்களை நெருப்பிட்டவள்; புவன ஆதிகள் தந்தவள் - பூமி முதலிய எல்லாவற்றையும் படைத்தவள்; கறை அரவு கங்கணி - விஷக் கறையுள்ள பாம்பைக் கங்கணமாக அணிந்துள்ளவளே; அரவு என்பது அர எனக் குறைந்து நின்றது; கணையோவெனும் வெங்கணி - அம்போ என்று சொல்லும் கொடிய கண்களை யுடையவளே. (10)

---

# அம்புலிப்பருவம்

---

| 367. சிவகாமியம்மை | சந்திரன் |
|---|---|
| 1. சிவனின் இடப்பாகத்தில் இருந்து விளையாடுவாள். | சிவந்த சடையில் விளையாடுவான். |

| | சிவகாமியம்மை | சந்திரன் |
|---|---|---|
| 2. | சிவனிடக்கண் (சிவனது இடப்பக்கமாகிய இடம்) ஆவாள். | சிவனிடக்கண் (சிவனது மூன்று கண்களில் இடப்பக்கம் இருக்கும் கண்) ஆவான். |
| 3. | கவனமுறுகலை வாகனம் - ஆகாயத்திலடையும் இடபவாகனம்(கலை - விலங்கேற்றின் பொது). | கவனமுறு கலையுள்ளான் - வளர்வதும் குறைவதுமான கலக்கம் நிறைந்த 16-கலைகளையுடையான். |
| 4. | கருணைவிழியினால்அமுதங் கொடுப்பாள். | ஆகாயத்திலுள்ள தேவர்க்கு முதற் பதினாறு நாளில் அமுதங் கொடுப்பான். |
| 5. | பராபரக் கடலினுதித்தவள். | நாகலோகம் வரை ஆழ்ந்த பாற்கடலினுதித்தவன். |
| 6. | சிவந்த கைகளில் குவளை மலரை யேந்துவாள். | குவளைமலருக்கு நண்பன். (சந்திரன் தோன்றினவுடன் மலரும். எனவே இங்ஙனம் கூறினர்). (1) |

368. வடிவெலாம் உன்னிடம் களங்கமுண்டு. இவளிடம் மனத்திலும் களங்கம் (குற்றம்) இல்லை. சந்திரன்போன்ற முகத்தையுடைய பெண்பிள்ளையை மதியாதிருப்பது உனது மதி குறைந்திடுதலாலோ! (புத்தி குறைவதாலோ (அ) தேய்வடைவதாலோ) சிவன் முடியின்மீது நீ யிருந்தாலு மிவள் பாதத்தை ஊடல் தீர்க்க சிவன் பணியும்போது முடியிலுள்ள நீயும் பணியவில்லையா. உனக்கோ முயல் (களங்கம்) உளது. இவளுக்கோ புலி (புலியாடை) யுளது. புலியை முயல் வெல்ல முடியுமா. பூமியின்மீது விரைந்து வா, வாராதிருப்பாயானால் உன்னைக் கவனிக்கமாட்டாளா? பதஞ்சலியென்று கூறும் ஆதிசேடனை எடுத்து நமது சிவகாமியம்மையின் முன் வைத்திடுவார் சிவன். மற்றும் முலை மேற்றிரளினால் சிவனுக்கு அமுதம் (பால்) கொடுத்ததையும் அறியவில்லையோ எனவே சந்திரனே ஆடவா என அழைக்கிறார். இங்குச் சிலபிரதிகளில் மடியினாலென்றும் உளது. அதற்கே பொருள் கூறப்பட்டது. சிவகாமியம்மன் தன்முன் பாம்புகட்கெல்லாம் அரசனை ஆதிசேடனை வைத்திருக்கிறாள். ஆனால் சந்திரனோ ராகு கேதுக்களால் திகைப்புண்டு பயப்படுகிறான். சந்திரன் தன் அமிர்தம் தேவர்கட்கிட்டும் அவர்கள் ஆலகால விஷத்திற்குப் பயப்பட்டு உயிரிழக்கப்

பயந்து ஒளிந்தனர். இவளது தன அமிர்தத்தையும் அதர அமிர்தத்தையுமுண்ட சிவனே அதைக்கண்டு பயப்படாது உண்டார். எனவே இதனால் அம்பிகை, சந்திரன் இவர்கட்குள்ள பேதம் தெரிகிறது. (2)

369.

| சந்திரன் | சிவகாமியம்மை |
| --- | --- |
| 1. இவன் கிரணத்தினின்று ஒளிவாய்ந்த முத்துப் பிறக்கும். (சந்திரனுக்கு முத்துப்பிறப்பதுஒன்று கூறி சிவகாமிக்கு இரண்டிடம் கூறியதால் சந்திரன் தாழ்ந்தான்.) | மூங்கிலையொத்த தோளினிடத்தும், கழுத்தாகிய பாக்குமரத்திடமும் பிறக்கும். வேயீன்ற முத்தம்-சிவபெருமான். வேதங்கள் பிரளய காலத்தில் தமக்கு ஆபத்துஒன்றும் இல்லாதிருக்க வேண்டுமென்று கேட்டபடி சிவன் கட்டளையால் மூங்கிலாக வந்து அவை பிறக்க அவற்றில் தான் முத்தாகத் தோன்றினராதலால் இங்ஙன் கூறினர். |
| 2. அழகுவாய்ந்த விமானத்தில் உலகவிருள் நீங்க மேருமலையை வலம் வருவான். | அழகிய விமானத்தில் தேவர்களும் தங்களது அஞ்ஞான புத்தியினிருள் நீங்க இவளது பாதத்தைச் சுற்றிவருவர். |
| 3. கற்புடைய பெண்கள் வணங்கமாட்டார்கள். | இவளை யாவரும் பணிவதால் கற்கும் கல்வி மிகும். கற்பு+அது - கற்பது, அது பகுதிப் பொருள் விகுதி-பெண்கள்கற்பு எனலுமாம். |
| 4. எந்நேரமும் குறிப்பாக மூன்று காலங்களில் பார்க்கக் கூடாது. (சதுர்த்தி, கிரகணகாலம், உதயகாலம் இவைகளில் பார்க்கலாகாது. அங்ஙனம் பார்த்தால் பரிகாரம் செய்யவேண்டும்). | எப்போதும் காணலாம். |

(3)

370. பாகாய மொழி ......மதியமே - வெல்லப்பாகை யொத்த மொழியையுடைய வஞ்சிக்கொடிபோன்ற பார்வதியின் முகம் ஆயிரங் கலைகளோடு (சந்திரன் வளரும் பங்கு) பிரகாசிக்கும் சந்திரனேயாகும்,

இதனால் பதினாறு கலைகளையுடைய சந்திரனையும் ஆயிரம் கலைகளையுடைய முகம்பெற்ற அம்மையையும் பிரித்தார். ஏகாரம் - பிரிநிலை; பச்சை... ...விழியே - பசுமையான கிரணத்தின் தேனையுண்டு பசியாமல் பசியைத் தணிக்கும் சகோரப்பறவையை யுடையது கண்ணேயாகும். சந்திரனது நிலவைச் சகோரப்பறவை யுண்டு பசி அப்போது தணியும். அம்மையின் விழி ஒளியின் நிலவை யுண்டு சகோரம் பசியைத் தணித்தலோடு எப்போதும் பசியாமலுள்ளது; பேதம் காண்க. போகாத...குறியுமே-எப்போதும் நீங்காத சிறிய களங்கம் இரண்டு புருவங்களும் பொட்டு வைத்துக்கொள்ளுகின்ற நெற்றியிலுள்ள அடையாளமுமேயாகும். சந்திரனுக்குக் களங்கம் அழகைச் சிதைக்கிறது. உமையம்மையின் முக மாகிய சந்திரனுக்குப் புருவங்களின் கருமையும், பொட்டிடுகின்ற நெற்றியின் பாகமும் அழகுமிக்கு விளங்குகின்றன; இங்கும் அம்மையையும் சந்திரனையும் பிரிக்கிறார். அழியாது......சிகழிகையுமே-அழியாமல் பக்கத்திலிடுகின்ற வட்டமான பரிவேடம் சுருண்ட கூந்தல் தொகுதியும் மயிர் முடி மாலையுமேயாகும்; சந்திரன் பக்கத்திலுள்ள பரிவேடம் எப்போதாவது காணப்பட்டு மறைகிறது. ஆனால் அம்மையின் சுருண்ட கூந்தற்றொகுதியும் மயிர் முடிமாலையும் மறையாமல் இருக்கின்றன; இங்கும் பேதம் காண்க. ஆகாய மாணிக்க...பெண்பிள்ளை - ஞான ஆகாயம் எனப்படும் அழகிய சிற்றம்பலத்தில் நடனம் செய்கின்ற நடராசர் இதழமிர்தம் பருகக் குறைபடாமல் வளர்கின்ற அழகு மிக்க அம்மையார். இங்குச் சந்திரன் கலையமிர்தத்தைப் பிதிர்க்கள் அருந்தத் தேய்கிறான். ஆனால் அம்மையின் அமிர்தமோ சிவனின் விஷத்தை நீக்கியதோடு கொடுத்த அம்மையையும் அழகுறச் செய்தது. எனவே இதிலும் பேதம் காண்க. ஒப்பென்னவே என்பதில் ஏகாரம் எதிர்மறை.(4)

371. முழுமுகத் திங்க............மதியாள் - முகமாகிய திங்களோடு நெற்றியாகிய ஒருபாதிச் சந்திரனையும் மூன்று கீற்றாக உள்ள திருநீறாகிய சந்திரனையும் உடையவள்; இவள் பல சந்திரனை யுடைமையால் பேதம் தொனித்தது. இங்ஙனமே பின்வருவனவற்றையும் கொள்க. முடியிலொரு.........மதியாள் - தலையில் ஒரு கீற்றுச் சந்திரனையும் பாதத்தில் ஒரு கீற்றுச் சந்திரனையும், (சிவபெருமான் ஊடலின்போது பார்வதியின் பாதத்தில் வீழ்ந்து வணங்கும்போது சந்திரனும் பாதத்தில் படுவதால் இங்ஙன் கூறினர்) மூன்று கண்களில் ஒப்பற்ற வெற்றியுடைய சந்திரனையும் உடையவள். இவ்வடியில் சிவன் தன்மை அம்மைக்கும் கூறப்பட்டது. கொழுநகை.........பிறையினாள்-கொழுவிய ஒளிவாய்ந்த சிரித்தலாகிய பிறையும் இருபது பற்களாகிய பிறைச் சந்திரனோடு தொகுதியான முத்தினாலாகிய பிறை யாபரணத்தையு முடையவள். பற்களைப் பிறைச் சந்திரனாக உருவகித்தார்.

கும்பிடும்.........வடிவம் - கும்பிடுவதை யொத்த தாமரை மலர்கள் குவியச் செய்யும்படியானதும் மேல் தேன் ஒழுகின்ற அல்லியரும்பு கள் மலரச் செய்யும்படியான களங்கமில்லாத வெண்மையான சந்திரன் போன்ற வடிவம். பழுதகலும் என்னவே சந்திரனுக்குக் களங்கப் பழு தும் அம்மைக்கு அஃதின்மையும் கூறப்பட்டதால் பேதம் தொனித் தது. இவள் வடிவெலாம்.........அகற்றும் - சந்திரன் வடிவின் ஒளியால் உலகவிருள் ஒழிகிறது. அம்மையின் வடிவ வொளியால் பசு, பாச இருள் ஒழிகிறது. எனவே இதிலும் பேதம் காண்க. பதியெனும் பருதி யொடு...........கலையே - சந்திரன் தன் தலைவனாகிய சூரியனோடு ஒரு கலையோடு கூடிக் கலந்திடுவான். இது அமாவாசைதினம் நிகழும் என் பர். ஆனால் அம்மையோ எப்பொருட்கும் இறைவனாகிய சிவபெருமா னோடு கூடி அர்த்தநாரியாக பலகோடி சந்திரகலைகளோடு கலந்து இருப் பாள். இதிலும் பேதம் காண்க. பசு - ஆன்மா. (5)

372. **மயில் வடிவம் நம்மன்னை** - இது சென்னையிலுள்ள மயிலாப் பூரில் கற்பகாம்பிகை மயில் வடிவமாகி ஈசுவரரைப் பூசித்தபோது அவர் கபாலமேந்திய கையினராகக் காட்சி தந்ததைக் காட்டுகிறது. இதனை "மயில் பூசிக்க வுற்றவர் கபாலக் கரத்தினர் கஞ்சம் போன் றுடிய தாளைப் பழிச்சுதும்" என்ற திருமயிலைப் பிள்ளைத்தமிழ் காப் புப் பருவத்தில் காண்க. மற்றும் கீழ்க் காணும் வரலாறும் உண்டு. மாய வரம் என்னும் தலத்தில் பார்வதி மயில் வடிவமாகிச் சிவனைப் பூசிக்கச் சிவபெருமான் ஆண் மயிலாக நடனஞ்செய்து மறைந்தருள இறைவனை யெண்ணிப் பிரிவாற்றாது பூசித்தார். இத்தலம் மயிலாடுதுறை, மாயூரம் எனவழங்கும். பெருமான் பெயர் மாயூரநாதர். தேவி பெயர் அஞ்ச னாயகி; மகன் வாகனம் - மகனான முருகன் வாகனம் (மயில்). இராகு, கேதுக்கள் பாம்புகளாதலால் மயிலுக்கு வலியதோ ரிரையதாகும் என்று கூறினர். **குயில் வடிவு கொண்டதொரு கோதை**:-மாயூரம் எனும் மயிலாடுதுறைக்கு அருகேயுள்ள நல்லக் குடியிலே கோயில் கொண்ட நாதன் பெயர் ஆலந்துறையப்பர் என்றும், நாயகியின் பெயர் குயிலாண்ட நாயகி என்றும் வழங்குதலால் அம்மை குயில் வடிவு கொண்டாள் என்பது விளங்குகிறது. திருநாவுக்கரசர் குறித்த 'குயி லாலந்துறை' அதுவே எனக் கொள்ளப்படுகிறது. முயற்கறை - களங்கம்; வெயில் வடிவு - சூரியன்; சோபம் - சோர்வு; விரிசென மித்தை தவிர்-விரிந்த செனித் தலையுடைய யோனிகளை நீக்கின; அயில் வடிவு கொண்ட முக்கண்ணி - வேல்போன்ற வடிவு கொண்ட மூன்று கண்களை யுடையவள், (6)

373. ஏனம் ஏகாமல் தொடர்ந்துவரு என்று பிரித்துச்சேர்க்க. பாபம் போகாமல் தொடர்ந்து வருகின்ற என்று பொருள் கொள்க. நின்குலத்து எழில்அரசு-உனது சந்திரகுலத்தில் தோன்றிய அரசன்; ஏனம் - பன்றி; புரவி - குதிரை; சந்திரகுலத் தரசன், பன்றி, அவன் ஏறிவந்த குதிரை ஆகியன சிவகங்கையில் மூழ்கி பொன்னிறம் பெற்ற னர் என்று கூறப்பட்டுள்ளது. மோகா விகாரத்தின் முனிவரன் கோபத்தின் சாபம் - தாரையின்மீது கொண்ட மோகக் கவலையால் பிரகஸ்பதி கோபத்தினுல் கொடுத்த தெய்வவடையும் சாபம்; **போகாத...... குரிசில் பெற்றது:**—முற்காலத்திலே சூரியவம்சத்து அரசனொருவனுக்குச் சிங்க நிறமுள்ள குமரன் பிறக்க அவனுக்குச் சிங்கவருமன் எனப் பெயரிட்டனர். இவன் வெண்குட்ட முடையவன்.சிறிதுநாளில் இராஜ்யத்தைத் துறந்து வெகுதூரம் வந்து கடைசியில் சிதம்பரத்தை யடைந்து பதஞ்சலி, வியாக்கிரபாதர்களைக் கண்டு அவர்கள் அனுக்கிரகத்தால் சிவகங்கையில் மூழ்கி வெண்குட்டம் நீங்கி உடம்பு பொன்னிறம் அடைந்து இரணியவன்மன் எனப் பெயரடைந்து அரசாண்டு தில்லையில் சிவத் திருப்பணி செய்து முத்தியடைந்தனன். இவன் 3-ஆம் சிம்மவர்மன் (கி. பி. 550-575) என்பர். இம் மூன்றும் சிம்மவர்மனே ஐயடிகள் காடவர்கோன் என்பர். மாளாவரம் - சாகாத வரம். (7)

374. மால் - திருமால்; வெண்படாம் - வெண்மையான துணி; பங்கேருகக் கடவுள் - பிரமன்; கச்சை - அரைக்கச்சு; நச்சு அரா - விஷம் பொருந்திய பாம்பு; உன்மத்தர் - சிவபெருமான்; காணப் படாமுடி - பிரமன் அன்னமாக வடிவெடுத்தும் முடியைக் காண முடியாததால் காணப்படாமுடி எனப்பட்டது. கத்தைச் சடைச் சக்களத்தி முற்றத்தினில்-கத்தையாகவுள்ள சடையினிடத்தமர்ந்த சக்களத்தியான கங்கையின் வாசலில்; விச்சையாய் - கண்கட்டி வித்தைபோன்று; ஏழை மதி - அறியாமையையுடைய புத்தி; இவளில் நீ மிச்சமோ - இவளைக் காட்டிலும் நீ அதிகமோ. (8)

375. சுந்தரக் கடவுள் - சிவபெருமான்; சந்திரன் மன்மதனுக்குக் குடையானது பற்றி "மன்மதன் சுடர்முடிக் குடையான நீ" என்றார். தொண்டுபட்டு அடையார்புரம் - அடிமையாகி பகைவர்களான அரக்கர்களின் திரிபுரத்தை; சந்திரன், சூரியன் திருமாலின் கட்டளையால் திரிபுரம் எரிக்கும் காலத்துத் தேருக்குச் சக்கரமானர்கள்; தேர் வண்டி - தேர்ச் சக்கரம்; கந்தரத் தேவர்......சக்கை நீ - ஆகாயத்திலுள்ள தேவர்கள் சந்திரனது வளரும் போதுள்ள அமுதத்தை உண்ணுவர். எனவே உண்டபின் சக்கையே எஞ்சுமாதலால் இங்ஙன் கூறினர். காலினுல் தேய்பட்ட நீ-தக்கன் யாகத்தில் வீரபத்திரன் சந்திரனைக் காலினுற் தேய்த்தான்; எனவே இங்ஙனம் கூறினர்; **கைச்சட்டுவத்தி**

னுல்.......... **உச்சிட்டம்** :- திருமால் மோகினி உருக்கொண்டு பாற் கடல் கடைந்த அமிர்தத்தை அசுரர்க்குத் தாராது அவர்களை மயக்கித் தேவர்கட்கே தரும்போது இரு அசுரர்கள் தேவ உருக்கொண்டு தேவர் களுடன் உட்கார்ந்து அமுதம் வாங்க அச்சூழ்ச்சியைச் சூரியனும், சந் திரனும் திருமாலுக் கறிவிக்க திருமால் பரிமாறின சட்டுவத்தாலேயே தட்டி வெட்டினுர். அவைகள் இராகு, கேதுக்களாகி சூரியன், சந்திரன் மீது பகை கொண்டு விழுங்கி உமிழ்கின்றன. சட்டுவம் - அகப்பை; அரவு - கேது எனும் பாம்பு; உச்சிட்டம் - எச்சில்; வாரி - பாற்கடல்; சந்திரன் பாற்கடல் கடைந்தபோது "தறி" யானதால் "வாரியிற் கடைபட்ட நீ.' என்ருர். அந்தரம் - ஆகாயம். (9)

376. இருஇதழ் மடித்தே தின்றெழு சினத்தசுரன் - இரண்டு உதடுகளையும் மடித்து அவைகளைத் தின்றுவிடுவதைப்போன்று எழும் கோபமுடைய சூரபத்மன்; இடியெனப் பிளிறிடும் பொறி - இடிபோன் ருெலிக்கும் சேவல் கொடியடையாளம்; கதழ் சகத்திரம் மூடி-விரைந்து ஆயிரம் தோகைகளால் மறைத்து; கட்செவி தின்று - பாம்புகளைத் தின்று; காளமேகப் பீலிவான் கங்குலின் எடுத்தாட-காளமேகங்களைக் கண்டு தனது தோகையை விரித்து மேகத்திஞல் செறிந்த இருளில் ஆட; காளமேகம்-சப்த மேகங்களிலொன்று; சதமுற வழக்கில் ஆயிர கோடி அண்டங்கள் தவழும் வெண் திங்கள் முத்தும் தண்டாது வரும்- நிலையையுடைய முறைமையில் ஆயிரங்கோடி அண்டங்களில் விளங்கும் வெள்ளிய சந்திரனின்று உண்டான முத்துக்களும் குறையாது வரும். உனக்கு மதிதானும் அதி உண்டாகுமோ எனப்பிரிக்க. ஒவ்வொரு அண் டத்திற்கும் ஒவ்வொரு சந்திரனுனதால் "அதிகமுறு மண்டலத்தில் மதிகள் வருமுன்னமே" என்ருர். முருகன் சூரபன்மனை வென்றதால் அவன் ஆண்ட ஆயிரத்தெட்டுக் கோடி அண்டங்களிலுமுள்ள தனித் தனி சந்திரன் முத்துக்களைத் தருவானுதலால் இங்ஙனம் கூறினர். (10)

---

## சிற்றில் பருவம்

---

377. அடிமுடியும் - அடிப்பாகமும் மேல்பாகமும்; மகமேரு நடு வசையாத தூண் - மேருமலையை நடுவில் அசையாத தூணுக்கி; அறை வீடு - அறைகளாகத் தடுக்கப்பட்ட வீடு; பதினுலு-மேலேழு, கீழேழு உலகங்கள்; முகடு - வீட்டினுச்சி; எழுகிணறு - ஏழு சமுத்திரங்களைக் குறித்து இங்ஙனம் கூறினர். இருவிளக்கு - சூரியன், சந்திரன் என்ற

இரண்டு விளக்குகள்; பதவிப் பழங்கலம்-பதவிகளாகிய பழைய பானைகள்; தேக்கிட்டிடும் - தெவிட்டும்; அடுக்களை - சமையல் வீடு; திட மருவு - வலிபொருந்திய; உமாதேவி சிவபெருமானிடம் இருநாழி நெற் கொண்டு 32-அறம் வளர்த்ததால் "பச்சைநெல்..................சமைப் பித்து" என்று கூறினர். இதனை "இமையமலையரையன் மகடமூவக்கச்சி யேகம்பர் திருமேனி குழைத்த ஞான்று, சமயமவை யாறினுக்குந் தலைவிக் கீசர் தந்தபடி யெட்டுழக்கிராழி நெல்லு;முமை திருச்சூ டகக்கை யாற்கொடுக்க வாங்கி யுழவுதொழிலாற் பெருக்கி யுலகமெல்லாந், தமது கொழுமிகுதிகொடு வளர்க்கும்வேளாண் டலைவர் பெரும்புகழு லகிற்றழைத்தன்றே." (சேக்கிழார் புராணத் திருவிருத்தம்) என்பதில் உணர்க. (1)

378. மண்பற்று கால்கள் வைத்து-மண்ணைப் பற்றுகின்ற கால்கள் அமைத்து; ஊனிலுல் - மாமிசத்தால்; சிலபிரதிகளில் ஊணிலுல் என உள்ளது; கைம்மரம்-வீட்டின் பாய்ச்சு மரம்; வாசலொன்பது-நவத்து வாரங்கள்; மோட்டுவளை பக்கத்து வளைவரிச்சலும்-வயிற்றுப்புறமுள்ள எலும்புகளாகிய உத்திரத்தையும், சிறிய எலும்புகளாகிய வரிச்சல்களையும்; பழவினைச்சேர்கட்டி - பழைய புண்ணிய பாபங்களாகிய தானியங் கொட்டும் இடம் கட்டி; இன்ப துன்பங்கள் பாத்துண கண் விளக்கு மேற்றி - இன்ப துன்பங்களைப் பகுத்துணர்ந்தனுபவிக்க கண்களாகிய விளக்கு ஏற்றி; எழுவகைப் பிறவியில் 84-லட்சம் யோனிபேதம் என்பர். எனவே எண்பத்துநான்கு நூறுயிரம் பேதம் என்றூர். (2)

379. ஆறுசாத்திரமும், நாலுவேதங்களும் பெரிய தூணுகவும், 28-ஆகமங்கள், ஐம்பெரும் பூதங்கள், 18-புராணங்கள் சிறிய தூணுகவும் உத்திரமாகவும், அறுபத்துநாலு கலைகளும் கைம்மரமாகவும் (வீட்டின் பாய்ச்சுமரம்), எழுபத்திரண்டாயிரம் நாடிகள் வரிச்சலுடன் ஆணிகளாகவும், உலகங்கள் இருநூற்று இருபத்துநாலும் தாமரைப்பூ வடிவாகச் செய்யப்பட்ட தட்டமாகவும், தொண்ணூற்றுறுதத்துவம் சன்னல்களாகவும், ஒன்பது வாசல்கள் கும்பங்கள் (கலசம்) ஆகவும், பொருந்திய இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசங்கள் சிறிய ஓடுகளாகவும் தெளிவடையும் ஒப்பற்ற வீடுகட்டிக் குடியிருக்கின்ற பார்வதியே சிறுவீடு கட்டுவாயாக என்று பொருள்கொள்க. (3)

380. மறுதேருருட்டிவரு பொய்த்தேரையொத்த பெருவாழ்வைக் குறித்து - தேரழிந்தபோது மற்றசேமத்தேரில் வருவதைப்போன்று ஓர் உடல் அழிந்தால் மற்றொரு உடலில் புகுந்து வரும் பொய்த்தேரையொத்த மனித வாழ்வைக் குறிப்பது போன்று; உலகெலாம் வலசாரி,

இடசாரிவருமிந்திரன் தேர் - உலக முழுவதும் வலப்பக்கமும் இடப்பக் கமுமாக சுழன்றுவரும் இந்திரன் தேர்; வளர்தூளிபடலமாக - அழிய; உறுதேர்உருட்டி வொரு மறு தேர் இலர்து - தன்னையடைந்த தேரைச் செலுத்தி ஒப்பற்ற மற்ற தேர்கள் இல்லாமல்; அண்டம் ஓர் ஆயிரத் தெட்டும்ஒரு குடைக்கீழாகும் மேலாகு தேவர்களும் உருவுசிறுதூளாக- ஆயிரத்தெட்டண்டங்களையும் ஒரு வெண் கொற்றக் குடையின் கீழாகு மாறும் வானிலுள்ள தேவர்களின் வடிவமும்குன்றிச் சிறியதாகுமா றும்; எறிதேர்-எரிதேர் என்பது எதுகை நோக்கி நின்றது; சந்திர சூரியர்தேரும் எழுதூளிபடலம் மறைய-சந்திர சூரியர் தேரும் இந்திர ஞாலத்தேரினால் எழும்பிய புழுதியின் தொகுதியால் மறைய; சூரன்- சூரபத்மன்; இவன் சிவபிரான் தந்த இந்திரஞாலத் தேர் கொண்டு சண்டைசெய்தான். பின் மாயை செய்தும் ஆற்றுது கடல் நடுவண் மாமர மாக நிற்க அதனை முருகன் வேலால் இருபிளவாக்கினர். (4)

381. முச்சில்-முறம்; புஷ்பராகம்-ஓர்வகை ரத்தினம்; குழிசி - பானை; குழிசியில் என்பது குழிசில் என நின்றது; உலை - உலைநீர்; பவளவிறகு - பவளமாகிய விறகு; பச்சைமணி பச்சடி - மரகதக் கற் களாகிய பச்சடி; கோமேதகம் பொறிக்கறிகள்-கோமேதகமே பொறித் தலானுண்டான பதார்த்தங்கள்; நஞ்சமுண்டவர் - சிவபிரான்; அமுது கொண்டு - சாப்பிட்டு; பாலடிசில் - பால்கலந்த உணவு. (5)

382. மாதவர்-மிகுந்த தவஞ்செய்யும் முனிவர்; சத்தினி சத்தினி என்பது வலியுற இரட்டித்ததுபோலும்; சத்தினி பாதமடைந்தவர் - சிவசத்தி பதிந்ததனால் சாயுச்சிய பதவியடைய இச்சிப்பவர்; தற்பரை- உமை; அளைந்திடு - கலந்திடு; நிற்குணி - குணாதீதமானவள்; வித்து இமவான் மகள் என்றிட - காரணமாக இமயமலையரசன் மகள் என்று கூறுவதற்காக; விற்கணையொத்த புருர நெடுங்கணி - வில்லையும் அம் பையும் முறையே ஒத்த புருவத்தையும் நீண்ட கண்களையும் உடைய வளே; மெய்க்கு அணியக் கணியாய் - உடலுக்கு அழகுடைய கண்களை யுடையவள்; சித்தினி, பற்பினி, சாமளி, சங்கினி ஆகியவை உமா தேவியின் பெயர்கள். சிற்பரன் என்பதன் பெண்பால் சிற்பரை. (6)

383. முக்கணர் - சிவபெருமான்; பொக்கணர் - விபூதிப் பையை யுடையவர்; முத்தமிழ் சொற்றவர் - மூன்று தமிழையும் அகத்திய ருக்குச் சொன்னவர்; அல் பரதத்துவர்- தீமையல்லாத மேலான தத்து வங்களை யறிந்தவர்; கீதமறிந்தவர் - இராவணன் சாமகீதம் பாடி கைலை யினின்று மீண்டது காண்க. அட்டவர் - அழித்தவர்; தர்க்கமிட்டது - நக்கீரரோடு மகளிர் கூந்தலுக்கு இயற்கைமணம் உண்டென வாதித்தது

காண்க. அப்போது அழித்தருளாமவர் - அப்போது அழித்தருளி யதையுடைய அவர்; திகம்பரி - பார்வதி; சிற்சபை - சிற்றம்பலம். (7)

384. மூவர் - திரிமூர்த்திகள்; சித்தம்-மனம்; சிட்டி-உண்டாக் கப்படுவன; நுதல் - நெற்றி; பிரமனைச் சிவபெருமான் சத்தியிடம் பிறக்கச்செய்து படைப்புத் தொழிலுக்காக்கினர். இங்ஙனமன்றிப் பிரமன் சிவபெருமான் நெற்றியில் பிறந்ததையும் ஒற்றுமைபற்றி ஏற்றதாகக் கொள்ளலாம். தயித்தியர் - அசுரர்; முச்சகம் - மூன்று உலகம்; சிக்குஅற - துன்பம் நீங்க; இழைத்தவள் + நீ—இழைத்த வணீ. (8)

385. பசுமை + இழை - பாசிழை; இழை - ஆபரணம்; பச்சிள நீர்த்தன பாரம்-பசுமையான இளநீர்போன்ற தனத்தின் பளு; பிடி - பெண்யானை; அச்சுதன் - திருமால்; களவின்கனி அச்சுறும் மைக் குழலாய் - களாப்பழத்தையே பயப்படுத்தும் அவ்வளவு கரிய கூந்தலை யுடையவளே; அச்சுதன்-அழிவில்லாதவன்; இங்கு விநாயகரைக் குறித் தது; சிவன் திரிபுரசங்கார காலத்தில் விநாயகனை நினையாததால் அச்சு முதலியன முறிய பின் விநாயகனைத் தொழுது புறப்பட்டனர். அதுவே "அச்சிறு பாக்கம்" என்று கூறப்படும் ஊராகும்; வச்சிர வச்சிரன் மார்பு பிளந்திட - வச்சிராயுதத்தையுடைய வச்சிரதேகத்தையுடைய இந்திரன் மார்புபிளக்குமாறு; "வைச்சிர" என்பது 'வச்சிர' என்றானது. வை - கூர்மை; வச்சிர கல் புடைதோள் - வச்சிர மலையையும் புடைக்கும் அத் தகையவலிவுடைய தோள்'; மைந்தன் - முருகன்; செச்சை - வெட்சி; பாணி - கைகள்; **வச்சிர வச்சிரன் மார்பு........................ ...............மைந்தனை :—**முருகன் இளைய வயதில் மேருமலையின் முடிகளைப் பறிப்பதும் கதிரவனைத் திங்கள் மண்டலத்தில் எறிவதும் கருடனையும் வாசுகியையும் போர்செய்யச் செய்வதும்போன்ற விளை யாடல்களைச் செய்தார். இவ்வாறு செய்யத் தேவர்கள் கலங்கி முருகனைக் கண்டு எதிர்த்தார்கள். இந்திரன் தலைமைவகித்துப் போர் தொடங்கி வஜ்ராயுதத்தை எறிய அது முருகன்மீது பட்டுத் தூளாயிற்று. ஐரா வதத்தையும் ஆற்றலிழந்து விழச் செய்தார். பின்பு இந்திரன் வேலொன்றை ஏவ அது ஒரு சிறு புற்போல முருகன்மீது பட்டது. முருகன் இந்திரன் முடியை ஒரு கணையினாலும், கொடியை ஒரு கணையி னாலும் மார்பு கவசத்தை ஒரு கணையினாலும் அழித்தார். மார்பிலே ஏழு கணைகளை விட அவன் சோர்ந்து வீழ்ந்தான். இறுதியில் தேவர்கள் பின் னிட நாரதரால் இறந்தவர்களை எழுப்பினர். (9)

386. கோடிநவண்டம் - பல புதுமையான உலகம்; நவ+அண்டம் - நவண்டம், அகரம் தொகுத்தல்; ஓடி வளேந்தும் உன் அத்தன் அழித்தனராம் - ஓடியும் வளேந்தும் உனது தலேவன் அழித்தனராகிய; அக்கிரமத்தவராம்-அவர் தம் குணம் அப்படி நிற்கு+இலே எனப்பிரிக்க; நிற்கிலே-உனக்கு இல்லே; உற்பலம் வைத்திடு பாணி - குவளே மலரைத் தாங்கிடும் கைகள்; பொற்றுகள் - பொன்னுகிய. தூள்; பார்வதிக்குக் கரும்புவில்லும் குவளே முதலிய மலரம்புகளு முண்டாதலால் "உற்பலம் வைத்திடு பாணி" என்ருர். ஆண்மக்களின் சிற்றில் பருவத்தில் ஆண் குழந்தைகள் பெண்கள் கட்டிய சிற்றிலேக் கலேப்பராதலால் " அத்தனே சிற்றிலும்...நிற்கிலே" என்ருர். (10)

---

# அம்மானேப் பருவம்

---

387. தெண்டிரை-தெளிந்த அலே; அதனே ஒப்பென உரைத்திடினும் முத்திதருமோ - எனப் பிரிக்க; முத்தி - மோட்சம்; காமதேனின் - பசுவின்; பாசவிருள் - ஆசையாகிய துன்பம்; மைந்தர்.............. பொய்ம்மையாமோ "மக்கண்மெய் தீண்ட லுடற்கின்பம் மற்றவர் சொற் கேட்ட லின்பம் செவிக்கு" என்ற குறளே ஒப்பு நோக்குக; "குழலினிது ...............குதலேமொழி" :- குழலினிது யாழினிது என்ப தம்மக்கள், மழலேச்சொற் கேளாதவர்." என்ற குறளே ஒப்பு நோக்குக. குழகன் - சிவன்; குதலேமொழி-மழலேச்சொல்; வாய்மை - உண்மை. (1)

388. வாக்குகள் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்று நான்கு வகைப்படும். இலஞ்சி-நாபி; நாபியினின்று வருவது சூக்குமை யெனும் வாக்கு; உரஞெடு கண்டம்-நெஞ்சமும், கழுத்தும் (உரம்-மார்பு) இவைகளேக் கொண்டு பிறப்பது மத்திமை; உச்சி - தலே; நாசி - மூக்கு; பல் அண்ணம் இதழ் நாவினில் - பல், மேல்வாய், உதடு, நாக்கு இவைகளினின்று; "கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றின்ப மாதா பிதாவு வுமெய்தும்" :- கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணேயுள" என்ற குறளே நோக்குக. பரவும் - துதிக்கும்; பூவை - நாகணவாய்ப் புள். (2)

389. பாவை - பொம்மை; மறிதிரை - மடங்கும் அலேகள்; வழங்கிடும் பாவை - உலாவுகின்ற மீன், ஆமை முதலியவற்றின் பொம்மைகள், (நீர்வாழ்வன கூறினர்); ஒல்லேயின் நெளிந்து தாம் ஊர்ந்திடும்

பாவை - விரைவில் தெளிந்து ஊர்வனவற்றின் பொம்மைகள்; உறு தாம் மரப்பாவை-நிலைத்துத் தங்குவனவாகிய மரத்தின் பொம்மைகள்; ஒருபொருப்பு பாவை-ஒப்பற்ற மலைகளின் பொம்மைகள், 'பொருப்பு' என்பதில் புகரம் தொக்கது. ஐம்பொறிப் பாவை - மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்பொறியையுடைய பொம்மைகள். எல்லறிவு - ஒளிவாய்ந்த அறிவு; சாக்கிரம் - கலாதிகளுடனே கூடிநின்று சிருட்டி தொடங்கிக் கன்மத்துக்கீடாக நானாயோனிகளிலும் புக்குழன்று சுவர்க்க நரகங்களை யனுபவித்துச் சர்வ சங்கார மளவாகச் சனன மரணப்பட்டுத் திரியும் சகலாவத்தையான தன்மை; பூதசார வடிவாம்- உடலைச்சார்ந்த வடிவாம்; எண்பத்து நாலிலக்கத்தான கொள்கை - எண்பத்து நான்கு நூறாயிர யோனி பேதமுடைய கொள்கை; நற் பூவை-நல்ல பெண்ணே; முதற்கண் எழுவகைப் பிறவியையும் பொம்மை களாகக் கூறியன காண்க. (3)

390. முக்கண்ணி - பார்வதி; கடவுள் - சிவன்; கமழ் சட்டுவம் பழக்கி - வாசனைவீசும் அகப்பையினால் பரிமாறப் பழக்கம்செய்து; இன்னமுத மூட்டி - உணவூட்டி; எண்மர்த்திரியும் ஏணை - எட்டுத் திக்குப் பாலகர் தங்கும் ஆகாயமாகிய ஏணை; பேராட்டி - பெருமை பொருந்திய ஆடுதலையுடையவளே; போராட்டினீ என்பதற்குப்போர்+ ஆட்டில்+நீ என்று பிரிக்க. வீணழற்பாலை - வீணாக அழாதே; விழி நீர் - கண்ணீர்; ஊறு பால்-சுரக்கின்ற பால்; மார்பம் - அம் சாரியை; அரும்பாம் முலைகொடுத்து - அரும்புபோன்ற முலையினின்று பால் கொடுத்து. (4)

391. நாடரும் - தேடுதற்கரிய; சாம்பூநதச் செம்பொன் - சாத ரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்ற நால்வகைப் பொன் களிலொன்று; நவமணி - ஒன்பதுவகை இரத்தினங்கள்; நவம்பெறும் புவனங்கள் - புதுமைபெறும் உலகங்கள்; வயின் - ஏழாம் வேற்றுமை யுருபு; குடிலை - சுத்தமாயை. இது கர்த்தாவினுடைய இலயபோக அதிகாரங்களுக்கிடமாய்ச் சுத்தமாய்ச் சடமாய்க் கர்த்தாவுக்குப் பரிக் கிரக சத்தியாய் நித்தமாய் ஒன்றாய்ச் சுத்தா சுத்தமிரண்டாலும் வியத் தமாயிருப்பது; கொல்லியம்பாவை - கொல்லி மலை மீதிருக்கும் பொம் மை. இது கண்டார் உயிருண்ணுந் தன்மை வாய்ந்தது; மிக்க அழகும் வாய்ந்தது; வீடருங்கைத்தாயெனும் - நீங்குதலில்லாத செவிலித்தாயை போன்று; மோகினி - அழகிய பெண் உருவம். (5)

392. பாந்தள் - பாம்பு; பத்திபாய்ந்து - வரிசையாகப் பரவி; குறுங்கெண்டை - சிறிய கெண்டை மீன்கள்; மாவின்வடு-மாங்காயின் பாதிபாகம்; மதரரிக்கண்கள் - மதர்த்த செவ்வரிபரந்த கண்கள்;

நின்பலமணிக் கொப்புஇனம் மறிந்து விளையாடல் எனவும்-உனது பல மாணிக்கம் பதித்த கொப்பு எனும் ஆபரணங்கள் மடங்கி விளையாடுதல் போன்றும்; சாந்திளங் கொங்கை-சந்தனம் பூசிய இளையதனம்; நின் கணவர் கண்கள் தாம்தாவி-உனது கணவனுன சிவபெருமான் கண்கள் தாவி; தாம் - அசைநிலை; தண்டாது - நீங்காது; செங்காந்தள் மலர்-சிவந்த காந்தள்பூ (கைகள்); தண் தாது-குளிர்ந்த மகரந்தம்; காந்திதரு-ஒளிதரு; செம்பொன் இசை இந்திர நறுநீலக் கழங்கு - செம்பொன் னிஞல் இணைந்த மேன்மையான கருமை நிறமுள்ள கழங்கு; பாம்பின் மாணிக்க மணி அழகிய பூவில் பச்சை வரிசையாகப் பதிந்து ஆடுவதைப் போன்றும் தாமரையில் வசிக்கும் கெண்டைமீன் வரிசையுடன் பாய்ந்து விளையாடுவதைப்போன்றும், மதர்த்த கண்கள் நின்பல மாணிக்கங் கள் பதித்த 'கொப்பு' எனும் ஆபரணங்களில் மடங்கி விளையாடுவதைப் போன்றும், சந்தனம் பூசிய இளைய தனத்தின்மீது உனது கணவர் கண்கள் தாவி விளையாடுவதைப்போன்றும், நீங்காது வண்டுகள் காந்தள் மலர்மீது மகரந்தத்தை உண்ணுவதுபோன்றும் கழங்கு விளையாடு வாயாக என்று முடிக்க. (6)

393. பழகுபெறு - பழகுதலைப் பெற்ற; பஞ்சரம் - கூடு; பூவை - மைஞ; பன்மணியிழைத்த படிவக் குழ மணப்பிள்ளைகொடு-பலவகை இரத்தினங்களையிழைத்த உருவத்தையுடைய இளைய மணம் செய்யும் பிள்ளைபோன்ற பொம்மை கொண்டு; வண்டல் - ஓர் விளை யாட்டு; குங்குமச்சேறு ஆடியும் - குங்குமங் குழைத்துப் பூசியும்; கொடுங்கை யாழ் - வளைந்த யாழ்; அழகுபொலி - அழகு விளங்கும்; ஆயவெள்ளம் - தோழியர் கூட்டம்; அணிசுண்ணம்-அழகிய வாசனைப் பொடி; அன்னத்தின் நீலக் கலாபமயில் ஆனந்தம் ஆர்ந்தேறி விளை யாடி-அன்னத்தின்மீதும் நீலத்தோகையுடைய மயிலின்மீதும் ஆனந் தம் பொருந்தி ஏறி விளையாடி; கழக முத்தமிழ்பாடும் இகுளையர் - சங்கத்தின் முத்தமிழையும் பாடும் தோழியர். (7)

394. ஓதை - மதில்; பதிதாரகணம் ஆரமதாய் - ஆகாயத்தில் பதிந்த நட்சத்திரக் கூட்டம் பூத்த நந்தவனமாகவும்; தரிசுகள் சுருதி கள் தாஞக - [சிலம்பிலுள்ள] மாணிக்கப் பரல்கள் வேதங்களின் சப்த மாக; தனவரை தமனிய வரையாக - முலைகளாகிய மலைகள் பொன் மலையாகவும்; சுந்தர விருகரம் - அழகிய இரண்டு கைகள்; எறிதர - வீச; சுரிதரு-சுழற்சியமைந்த; நுடங்கிடை மின்என-தளரும் இடுப்பும் மின்னலைப்போன்று; இருபுருவம் இந்திர வில்விட - இருபுருவங்களும் இந்திரவில்லைப்போன்று வளைய; இழை யணிமணிசொரி துளியென - நகையில் அணிந்த இரத்தினங்கள் சொரிய அவை மழைத்துளி போல வும்; கயல் - கயல்மீன்; கண்ணாடி - கண்ணுடி. (8)

**395.** வேறுஆம்முடி - உடலினின்று வேறுபட்டதாயுள்ள கிரீடம்; தளையவிழ் தாமரை முகமும் - இதழ் மலர்ந்ததையொத்த புன்சிரிப்புடைய முகமும்; முடியும் முகமும் "திகதிக" வென எனஇயைக்க; நூலின் இடை - நூல்போன்ற மெல்லிய இடை; ஆடையெழில்-ஆடையின் அழகு; ஒரை எறியும் மாதர் விளையாட்டில் அம்மனைகளை வீசும்போது; ஒரை - ஓர் விளையாட்டு; அம்மனை வீசும்போது கையிலுள்ள வளையல்கள் சப்தத்தைச் செய்தன; ஓதல் இசை - சொல்லும் இசை; நாவின் இடை-நாவில் சதாசொல்லுவது; பளபள, குமுகுமு போன்றன இரட்டைக் கிளவிகள். (9)

---

## பந்தாடற் பருவம்

---

**396.** சில்லெறிந்தாட - மகிழ்ச்சியுடன் வீசியாட; சில்-குளிர்ச்சி, இங்கு மகிழ்ச்சியைக் காட்டியது. வளைச்சக்கரவாளகிரி - வளைந்த சக்கரவாள மலை; ராகு கேதுக் கயிறு - இராகு கேதுவெனும் பாம்புகளாகிய கயிறுகள்; அந்தரத் தாராகணம் - ஆகாயத்திலுள்ள நட்சத்திரக் கூட்டம்; அம்பரம் - ஆகாயம்; ஆயிரம் படம் - ஆயிரம் தலைகளுடைய ஆதிசேடன்; வெள்ளி வேதண்டம் - வெள்ளி மலை; மேல் எண் திசாமுகமும் மூதண்ட கூடத்து வேதண்டம் - மேலுள்ள எட்டுத் திக்குகளினும் பழைய உலகங்களிலுள்ள மலைகள்; உமையவளும் அவள் தன் கணவனும் வீற்றிருப்பதனால் "வெள்ளி வேதண்ட மொழிய" என்றார். (1)

**397.** செந்தாமரைப் பதம் - செந்தாமரை மலர்போன்ற பாதம்; முழந்தாள் பந்து - முழங்காலாகிய பந்துகள்; பந்து அசைந்து ஆட - பந்து ஆடித் தளர; பந்துக் கொண்டை - பந்துபோன்ற கொண்டை; நந்தாத - கெடாத; நயனம் - கண்; குழை - குண்டலம்; அம்மனையாட - அம்மனைக் காய்போன்று ஆட; கழங்கு ஆட - கழற்காய் போன்று ஆட; சுட்டி - ஓர் வகை ஆபரணம் (சூரியபிறை, சந்திரபிறை என்னும் ஆபரணம். நெற்றியில் தொங்க விடப்படுவது); பணிகள் சதுரங்கம் விளையாட - ஆபரணங்கள் சதுரங்கம்போன்று ஆட்டமாட; சிலதியர் - தோழியர்; இப்பாட்டில் பந்து பல உறுப்புகளுக் குருவகப் படுத்தப் பட்டிருப்பதும், கழற்காயாடல், அம்மனையாடல், ஊஞ்சலாடல், சதுரங்கமாடல் முதலியன உவமிக்கப்பட்டிருப்பதும் காண்க. (2)

398. கோளம் - உருண்டை; சித்து - ஓர்வகை மாயவித்தை; வித்து - விதை; பை - கருப்பை; முளைத்து - தோன்றி; கிடப்பன - படுத்திடுவன; இருப்பன - உட்கார்ந்திருப்பன; தருக்கொடும் முறுக்கி நெளியா இத்தக மிதத்திடுவ - செருக்கொடும் விரைந்து நெளியும் இத் தகைய மிதந்திடு முயிர்கள்; எத்தனை இரைத்தும் இரையா இப்படி வகுத்த - ஒலிப்பவை எத்தனை சப்தமில்லாதன எத்தனை இப்படி யாகப் பிரித்த; உயிர்ப்பந்து-உயிர்களாகிய பந்துகள்; செப்பு - திசைச் சொல். (3)

399. அம்மை வீசும் முத்துப் பந்து கையிலிருக்கும்போது செம்மையான கையினது சிவப்பினால் பவள மணியின் நிறமாகவும், மேலெழும்பும்போது உடலின் பச்சை நிறத்தினால் பவள நிறம் மாறி பச்சை நிறமாகவும், கரிய கண்களுக்கருகில் வரும்போது கருநிற முற்றும், திரும்பி வரும்போது உதட்டினிடம் வருங்கால் அதன் சிவப்புநிறம் ஏறவும், அங்ஙனம் நிறங்கள் மாறுவதைக் கண்டு சிரிக்க அச் சிரித்தலின் வெள்ளிய பற்களின் நிலவொளியினால் வெண்மையாகி பழைய வெண்மையான முத்தின் வடிவத்தைப் பெற்றுப் பூமியிலடிபட்டு உயர்ந்து ஓடி நின்று இரண்டு, குங்குமக்குழம்பு பூசிய கொங்கையருகு சேர்ந்து பசலை நிறமான பொன்னிறம் பந்தில் மூடப்பெற்று, கூந்தல ருகில் வீச அப்பந்தும் கருநிற முற்றுப் பொருந்த பந்து விளையாடுக எனப்பொருள் கொள்க. முத்துப்பந்து வெண்மை நிறமானதால் அந் தந்த உறுப்புக்களை யடையும்போது அதனதன் நிறங்களைக் கிரகித்துக் கொள்ளும் இயல்புடையது. அதரம் - உதடு; பங்கயக் கடவுள்-பிரமன்; உறு கறுப்பு உந்தியிட-மிக்க கருநிறம் மேற்கொண்டு முன்பு நிற்க. (4)

400. கிள்ளை - கிளி; நாகணவாய்ப் புள் - மைனு; தண்டனை பிறக்கும் - தண்டனை கிடைக்கும்; கந்துகம் - பந்து; சக்கரவாகம் - சக்கரவாகப் பறவை; அஞ்சன விழிக்கு நிகரான சஞ்சரிகம் - மை பூசிய கரிய கண்களுக்கு ஒப்பான வண்டு; சகோரம் - சந்திரன் நிலவை யுண்ணுமோர் பறவை; பொடித்து எழும் - விரைந்து மேலெழும்; பூந்தவள நகைசெய்து - அழகிய வெண்மை ஒளிதோன்றச் சிரித்து; காந்தளங்கை-காந்தள் மலர்போன்ற கை; போர் கட்டடிப்ப தென்ன - நெல் தாளை நெல்லுதிரக் கட்டி அடிப்பதைப் போன்று; படித்தலந் தன்னிலெதிர் நின்ற பாங்கியர்-பூமியில் எதிரே நின்ற தோழியருடன்; கொங்கைக்கு நிகர் பந்து ஆகவே அதையும் வென்று ஓட்ட "போர் கட்டடிப் பதைப்போன்று அடி" என்றார் மற்ற கிளி, அன்னம், வண்டு முதலியன ஓடி விட்டதால், (5)

401. நுடங்கிட - அசைய; குழைமேல் - குழையுள்ள காதின் மேல், தானியாகுபெயர்; மை+அங்கண் கயல் - மை பூசிய அழகிய கண்களான கயல்கள்; மறிந்திட - நெருங்க; பிடர் - கழுத்தி னடிப் பாகம்; குழல் - கூந்தல்; கந்தரம்-கழுத்து; இங்கிதம் - இன்பம். (6)

402. கண் செவிக் குழையாளர் கண்டு ஒளிர் கண் பசப்புற - மூன்று கண்களேயும் செவியில் குண்டலத்தையு முடைய சிவபெருமான் கண்டு ஒளிர்கின்ற கண் துன்பத்தால் வருந்த; ஆழ் குடங்கை - ஆழ்ந்த உள்ளங்கை; பாடகம் - சிலம்பு; ஒத்திட - தாளம் போட; சிற்றிடை நூல் நுடங்க-சிறிய இடை நூல்போன்று அசைய; எண் சொலிச் சொலி-எண்மடங்கு மிக்குச் சொலிக்கும்; சொலிச் சொலி-இரட்டைக் கிளவி; பொற்புடன் - அழகுடன்; பண் சொலிச் சிறு தாளம் - இசை ஒலிக்கும் சிறிய தாளம்; தாளத்தை யொத்த பந்து என்க; எண் சொலிச் சொலி யங்கை என்றும் அங்கை மாறி இரண்டும் ஒத்திட எனவும் பிரித்துக் கூட்டுக. (7)

403. பஞ்சகிர்த்தியம் - ஐந்து தொழில்கள்; தூது சென்றவர் - திருமால் (கண்ணவதாரத்தில்); பஞ்ச லட்சணம் காவியம் - ஐந்து வித இலக்கணம் அமைந்த இலக்கிய நூல் (எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன); அஞ்சனம்-கருமை; பாணி கொஞ்சிய பஞ்சரக்கிளி-கையினின்று கொஞ்சிய கூட்டுக் கிளி; பஞ்சுரம் - பாலை நிலத்து இராகம்; விபஞ்சி - வீணை; விபஞ்சியை யுடைய வித்தகி என்க. பஞ்சி யொத்திடு பாத சிந்துரி - பஞ்சைப்போன்ற மென்மையான சிவந்த பாதமுள்ள உமையே; சிந்துரி - சிவப்பு நிறமுடையவள். (8)

404. பந்தனைப் பிணி - கட்டாகிய நோய்; பந்தினைத் தன பாரம் அந்தரி - பந்தினைப்போன்ற தனபாரமுடைய அந்தரியே; பந்த மற்ற பவானி-தொடர்பு நீங்கின பவானியே; பவனது மனைவியாதலால் பவானியாயினள்; பந்தர் இட்டு உலகு ஏழும் நின்றவள் என்று பிரிக்க; பைந்தருக்கு இணையான - பசுமையான கற்பகத் தருவுக்குச் சமமாகக் கொடுக்கும், மற்றும் பைந்தரு என்பது பச்சை நிறமுடைய திருமாலைக் குறிப்பின் அவருக்கு இளையான (தங்கையான) சங்கரி என பிரதிபாடத்திற்குப் பொருள் கொள்க. (9)

405. இமவான் - இமயமலை யரசன்; சுபம் - நன்மை; வாம தந்திரி - இடப் பாகத்தின் அலங்காரத்தை யுடையவளே. (10)

# பொன்னூசற்பருவம்

406. இக் கருகும் முகில் அளகு - இந்தக் கரிய மேகமொத்த கூந்தல்; பிறை மகர குண்டலங்கள் - பிறைபோன்றதும் சுறு மீன் போன்றதுமான குண்டலம்; வள்ளைச் செவி - வள்ளைப் பூப்போன்ற காது; இரு பருதி - இரு சூரியன்; மன் ஊசல் - நிலைத்த ஊசல்; மதி முத்தாரத்திற்கும், உடு (நட்சத்திரம்) கொங்கைகளுக்கும் உவமை யாக்கப்பட்டது காண்க. என் ஊசல் ஆடும் வினை தன் ஊசல் ஆடாமல்-என்னுள் ஊஞ்சலாடும் இருவினைகளும் தன் இஷ்டப்படி சுற்றுது; இனிய தமனியம் இழைத்து அணியும் நூபுரம் ஆட-இனிய பொன்னுல் இழைக்கப்பட்டு அணியும் சிலம்பு ஆட; கலாபம் - பதினறு கோவை யுள்ள மணி; இரு மின்னூசலாட - இரண்டு பெண்கள் (திருமகள், கலைமகள்) ஊஞ்சலை ஆட்ட. (1)

407. விடாமல் விடயம் அடுத்தடுத்து ஓடி வரல்போல் - அழியாமல் விஷயங்கள் அடுத்தடுத்து வருவது போன்று; அலகில் அளவில்லாத; எறிசுடர் விளங்கு விண் மணி பலகையாக - வீசுந் தண் சுடர், வெண்சுடர் விளங்கும் ஆகாயம் அழகிய பலகையாகவும்; இரச தக்கிரி-வெள்ளி மலை; அண்ட முகடு ஏறும் உத்திரமாக என்று பிரிக்க; பொறி யரவினுக்கு அரசு - படப்பொறி யுடைய பாம்புகளுக்கு அரசனுன ஆதிசேடன். (2)

408. மதிபருதி - சந்திரனும் சூரியனும், உம்மைத்தொகை; நல்வினைகள் தீவினைகள் துன்பமுடன் இன்பங்கள் நாள்தோறும் ஊச லாட என்று பிரிக்க; வீடுதரும் - மோட்சம் தரும்; பொருவில் மண ஈசன் - ஒப்பற்ற மகிழ்ச்சியையுடைய தலைவன். (3)

409. விறலியர் எனக்குழுமி - பாண்மகளைப் போன்று கூடி; விளரியாழ் - ஓர் வகையாழ்; இசைமூரல் மருவு விஞ்சை மெல்லியர் எனக் கூட்டுக; இசையும், அழகிய பற்களும் பொருந்திய வித்தையைக் கற்ற பெண்கள்; சில் அரி முழவு - இனிய அழகிய குடமுழா; இரட்ட - அசைக்க; கொன்சொரியும் வேல்விழி - அச்சமிகும் வேல்போன்ற கண்; குமரி மயிலென அருகு கவரிபணி மாற-இளையமயிலைப்போன்று அருகாக சாமரைகளை மாறி மாறி வீச; தென் சொரி பசும்பாகு விளை கிளவி - அழகு மிகும் இளைய வெல்லப்பாகு போன்ற இனிமை விளை யும் சொல்; சிலதியர் - தோழியர்; சிவிறி - நீர்வீசுந் துருத்தி. (4)

410. ஆவி - உயிர்; என்னமே - என் அம்மே என்பதன் தொகுத்தல்; இன்னம் - இன்னமும்; மன்னும் நீ - தங்கும் நீ; கன்னிகாரத்தில் - கோங்கு மலரைக் காட்டிலும், முதலாகுபெயர்; கோங்கின் பூவரும்பைத் தனங்களுக்கு உவமை கூறுவராதலால் 'கன்னிகாரத்தில் களித்த விரு கொங்கை' என்றார். பொன்னி - காவிரியாறு. (5)

411. நாறுபூ - வாசனை வீசும் பூ; நாளிகேரம் - தென்னை; இளநீர்கள் நீரில் சிந்த அதைக்கண்டு இரையென வாளை மீன்கள் பாய; சிந்த முதுவாளை எனப்பிரிக்க; வீறுசோலை - பெருமை பொருந்திய சோலை; வேரி - தேன்; வீழுமென்கனி - வீழ்கின்ற மெல்லிய பழம்; நாறு - நெல்நாற்று; வேலைவேலி - கடல் சூழ்ந்து வேலியாகவுடைய நிலம்; கழை - கரும்பு; ஆலவாலம் நிறைசாலி - வயல்களில் நிறைந்த சாலிப்பயிர்கள்; ஊறுகேணி - சுரக்கின்றகுளம்; ஆலை - கருப்பஞ்சாறு. (6)

412. ஊர் விமானம் - ஊர்கின்ற விமானம்; ஒவில் - நீங்காத; மஞ்சரி - மாலையை யொத்தவளே; ஓதொணாத - சொல்ல முடியாத; ஊழிதொறும் - யுக முடிவுதோறும். (7)

413. காசு + உலாவிய கலாப கஞ்சுளி - ஆடைகள் நிரம்பிய பதிணறு கோவையுள்ள மணியையுடைய சட்டையையுடையவளே; பாசமானது விமோசனந்தரு எனப் பிரிக்க; கொந்தளி - மயிரையுடையவளே; ஊசலாடும் வினை - மாறி மாறி உடலில் ஊசலாடும் தீவினை; மாசு இலாத மணியான அம்கணை - குற்றமற்ற மணியான அழகிய கண்களையுடையவளே. (8)

414. ஆதிபோதனி அநாதி அஞ்சனி - முதற்காரணமான அறிவுடையவளும், அநாதியானவளும், கருமையானவளுமா யுள்ளவளே; நீதிநூல் நெறி வழாது அசைந்திடு பொன் - எனப் பிரிக்க; வழாது - தவறாது; நீலலோசன விசால வஞ்சனி - கரிய பரந்த கண்களையுடைய பெண்ணே; ரஞ்சகி-இன்பமுடையவளே; ஞான தேசகி-ஞானத்தலைவி; பிநாக நெஞ்சகி - திரிசூலங்கொண்டு தைரியமாயுள்ளவளே; ஓதை நாதன் - சிவபெருமான்; ஆயி - காளியின் பெயர். வஞ்சனி - பெண்; வஞ்சினி என்பது வஞ்சனி என்றிருக்கவேண்டும். (9)

415. தோள் இவர்ந்து ஒளிர் - தோள்மீதெழும்பி பிரகாசிக்கின்ற; காரபாரகுழல் - கரியபாரம் பொருந்திய கூந்தல்; மார்-மார்பு; மதுமாலை - தேன் பொருந்திய மாலை; சாமரைகள் மூசும் வெண்டிரை

யின் - சாமரைகள் மொய்க்கும் வெண்மையான அலையைப்போல; பாததாமரை - உருவகம்; பாவியேன் - பாபம் செய்தவனுகிய நான்; முதுநீர் ஓதைசேர் புலிசை - நீரொலி சேர்ந்த சிதம்பரம். (10)

---

## நீராடற் பருவம்

---

416. அடியிணைகள் புடவி - இருபாதங்கள் பூமி; திகழ் அண்ட முகடது மகுடம் - விளங்கும் ஆகாய உச்சியே கிரீடம்; அட்டதிக்கும் புயங்கள் - எட்டுத் திக்கும் புயங்கள்; தாரகணம் - நட்சத்திரக்கூட்டம்; வாடைக் காற்றும், மேலைக்காற்றும் முறையே மூக்கின் சுவாசமான இடைகலை, பிங்கலைகள்; இடையில் அணிமுழுகி விளையாடு தடம் - இடுப்பில் அணியும் ஆபரணம் முழுதும் பரவியுள்ள நிதம்பம். (1)

417. கணைக்கால் வராலென - கணைக்கால் வரால் மீன்போன்று; கைவிரல்கள் களிறென்னவே-கைவிரல்கள் ஆண் சுறுமீன் போன்றும்; கமலவடி கமடமெனவே - தாமரையொத்த பாதம் ஆமையைப்போன்றும்; முழந்தாளிணைகளுக்கு ஞெண்டென்ன - முழங்கால்களுக்கு உவமை நண்டு என்று சொல்லவும்; வண்களமும் வெண்சங்கம் என்ன- வளவிய கழுத்து வெண்மையான சங்கு என்று கூறவும்; வீசவே வளராசை வலை வீச-வீசுவதற்காக மிக்கு வளர்கின்ற ஆசையாகிய வலையைவீச; மைவிரவு சுருளோதி சைவலமது என்ன - கருமை விரவு சுருண்ட தலைமயிர் பாசியோ என்று கூறவும்; வள்ளை - வள்ளைப்பூ; பெண்கள் மனம் மருள இருகொங்கை முகம் நகைமுகம் பெரிய தாமரையென்ன - பெண்களின் மனமும் காம மயக்க மடையும்படியான இரண்டு முலைக்காம்புகளும், சிரித்த முகமும் பெரிய தாமரை மலரைப்போன்று இருக்க; பிரசவிதழ் குமுதமென - இனிய அமுதம் கொடுக்கும் உதடு குமுத மலர்போன்றும்; தும்பி - வண்டு; புடைசுழல - பக்கத்தில் சுற்ற; புண்கொள் நெடுவேல்-மாற்றார் மாமிசம் கொண்ட நீண்டவேல்; இப்பாட்டில் நீராடற் பருவத்திற்கேற்ப பல உறுப்புக்கட்கும் நீர்வாழ் வுனவற்றையே உவமை கூறின திறம் வியக்கத்தக்கது. (2)

418. பார்-பூமி ; வேதண்டவேர்-மலையினடிப் பாகம் ; மூதண்ட பகிரண்டகூடம்-பழைய உலகமும் அண்டத்தின் வெளியும் ; வேதாளம்-பூதவகைகளிலொன்று ; தாராட - மார்பின் மாலையாட ; சூடு தவள வெண் பிறை - உச்சியிலுள்ள மிக்க வெள்ளிய பிறைச்சந்திரன் ; நின் கணவனுர் தலைமீது நின்ருடுவாள் - சிவபெருமான் தலைமீதுள்ள கங்கை தேவி; திளைப்பவே துளையமாடி-நெருங்கி மகிழ்ந்து அனுபவித்து ஆடி; முத்தாட-முத்தமிட; அளக + அடவி-கூந்தலாகிய காடு ; குடைந்தாடி - நீரில் மூழ்கியாடி ; போராடு - சண்டையிடும். (3)

419. பாகீரதன் - சூரிய வம்சத்தரசன்; சகரன் வழி வந்தவன் ; சகரர் மக்கள் கபிலமுனிவர் சாபத்தால் சாம்பராக அவ்வஸ்திகளின் மீது கங்கை நீர் பாயச்செய்து அவர்கட்குச் சுவர்க்கம் அளித்தவன். வார் சடை - நீண்டசடை ; பிறைத்தோணி - பிறையாகிய படகு ; ஏகாந்தம்-தனி ; காஞ்சியில் காமாட்சியம்மை தவஞ் செய்ததால் “ ஏகாந்தமாகிய …………புரியும்” என்று கூறினர். ஏகாம்பரம்-காஞ்சியின் ஒருபாகம்; காமாட்சியம்மையுமே கம்ப நதியாடல்போல் - காமாட்சியம்மையுமே கம்பாநதியில் ஆடுவதுபோல; சிவபெருமான் காமாட்சியம்மையின் தவத்தை யழிக்கக் கம்பாநதியைப் பெருக்கெடுக்கச் செய்தார். ஆகாய கங்கை, சரசுவதி, யமுனை, காளிந்தி, பாதாள கங்கைபோன்ற காவேரி நதி யென்க. அனுதி நதி யதுவும் முனிபாற் போகாத-வேறு முதலின்மையாகிய நதியாகவும், தன்னை வைத்திருந்த முனிவனுன அகத்தியனிடம் செல்லாத. (4)

420. நாள்மலர்கள் தளிர்கள் கொய்து எனப் பிரிக்க. நாள்மலர்-அன்றலர்ந்த மலர்; கணிகை-தாசி; குயில்சிறுங்குறும் பிழைத்தும்-சிறு வீடுமுதலிய கட்டும் சிறிய குறும்புச்செயல்களைச் செய்தும்; பொதும்பர்-சோலை; கிளை முதலியன ஓடித்து விளையாடல்; சிறுதும்பி-குறுகிய நேர விளையாட்டான தும்பியாட்டம், இதைத்தெருவில் பெண்கள் “தும்பி துவாட்டி எம்பேரு வெள்ளாட்டி” என்று சொல்லி கை முறுக்கிக் கோத்துச் சுற்றுவதைக் காண்க. தெள்ளேணம் - மகளிர் விளையாட்டி ஞென்று ; பொறி வரிப்பாவை பொற் குரவையாடி - புள்ளிகளையுடைய கோடுகளையுடைய பொம்மையுடன் அழகிய குரவை விளையாடியும். (5)

421. காஞ்சனமணி காஞ்சிக்கலை - பொன் மணிகளாலான எண் கோவை மணியுடைய மேகலை ; இரங்கிட - சப்திக்க ; அதரம் - உதடு ; கோலம் - அழகு ; கொடியிடை துடியாட - கொடிபோன்ற இடை உடுக்கைபோன்று ஆட ; சாந்தம் - குளிர்ச்சி ; மான்மதம் - வாசனைப் பொருள்கள் ; வாடை-வாசனை ; குடை நீர் - விணைத்தொகை ; ஆலிக்கும் - களிக்கும். (6)

422. நெருப்பிற் பூத்த பொற்பூந்தொடை மாணிக்கம் நீரிடை நிழல் தோன்ற - நெருப்பைப்போன்று விளங்கும் அழகிய கொன்றை மாலையும் மாணிக்க மாலையும் நீரினிடத்தில் தன் நிழலைத் தோற்றுவிக்க; முறையே பொற்பூவும் மாணிக்கமும் நீரிற் பூத்த பொற்பூவாகவும் கொழுந்து விட்டெரிகின்ற விளக்காகவும் தோன்றின. கண்களை விழித்துக் கெண்டைகள் மேய்கின்ற வியப்பினைப் பாரென்றும் என்று பிரிக்க; கெண்டை - கெண்டைமீன்; பருப்பதக்குயம் தாமரை யரும்பென - மலைபோன்ற முலை தாமரை யரும்புபோன்று; பருமம் - மூவாறு கோவை மணி யாபரணம்; உடலினால் பச்சை நிறமும், அழகிய மாலையினால் வெண்ணிறமும், மாணிக்க மாலையால் செந்நிறமும், தனத்தாலும் ஆபரணத்தாலும் பொன்னிறமும் நீர் பெற்ற தென்க. தனம் பசலை நிறமுற்றதால் பொன்னிறம் நீர் பெற்றது. அரும்பு நல் நகைச் சிலதியர் அரும்பு போன்ற பற்களை யுடைய தோழியர். (7)

423. "பாங்கிற்...............தோன்ற":-பக்கத்தில் தோன்றிடும் தோழியர் உருவமெல்லாம் வெண்மையான நீரில் கலந்து சேரும்படி விளங்கிட, அதனால் ஒருவரே இருவராகத் தெரிய அதிசயித்து; கோங்கு அரும்பிட முல்லையு முகிழ்த்திட எனப் பிரிக்க; ஏ-அசைநிலை; கோவையின் கனி-கோவைப் பழம்; முகிழ்த்திட-மூடிக்கொள்ள; கோங்கம்பூ தனத்தின் அழகு கண்டு அரும்புகளையிடவும் சிரிப்பினொளியால் தோற்று, முல்லை மூடவும், குமிழம் பூவொடு, தொகுதியுடைய காந்தள் பூவும் மூக்குக்கும், கைகளுக்கும் ஒத்தோம் என்று கூறி மலர, இங்ஙனம் மலர்வதைக் கண்டு வண்டுகள் சப்திக்க, கோவைக் கனிபோன்ற உதடு தெரியச் சிரித்து, வளைந்து வஞ்சியும் காஞ்சியும் மலர, வஞ்சிக் கொடி போன்ற இடையசைய, சாயல் கற்க மயிலும், நடை கற்க அன்னமும், மொழியைக் கற்கக் கிளியும், மைனாவும் நீரின் பக்கத்தில் வர அங்கு உனது பரமானந்தத் துறையினில் நீராடுக என்று பொருள் முடிபு கொள்க. (8)

424. அரந்தம் - மஞ்சள், அரத்தம் என்றது மெலித்தல் விகாரமாகியது; ஒளித்தும் நீள் கரையேறியும் ஒய்ந்து நின்று' என்று பிரிக்க; உறுக்கும் வண் புனல் - பயமுறுத்தும் வளவிய நீர்; திரைக்கும் ஏழ்கடல் - அலைவீசும் ஏழு கடல்கள். (9)

425. உருத்திரை - உருத்திரன் மனைவி, உருத்திரன் சிவனம்சம்; திரோதானம் - காணாமல் மறைகை; பல சத்திகள் உண்டாதலால் மற்றுள சத்தி யென்றார். (10)

தில்லைச் சிவகாமி அம்மைப் பிள்ளைத்தமிழ்க் குறிப்புரை முற்றிற்று.

# புதுவை
# திரிபுரசுந்தரிபிள்ளைத்தமிழ்

---

## சிறப்புப்பாயிரம்

### 1. தாண்டவராயக் கவிராசர்

#### வெண்பா

426. ஒப்பின் முதல்விக் குவப்புற முத்துக்கும
ரப்பன்சொன் முற்பிர பந்தத்தை—நப்பெருந்த
கைத்தமி ழென்பர் கலைஞ ரிஃதுபிள்
ளைத்தமி ழென்ப ரலர். (1)

### 2. இராமசந்திரக் கவிராயர்

427. உண்ணாது சுரந்தபெருந் தனத்தமுதந் தமிழ்பாட
வொருவற் கீந்தாள்
பண்ணார்முத் துக்குமரவேள் செய்பிள்ளைத் தமிழமுதம்
பரிந்துட் கொண்டாள்
தண்ணார்வெண் மதிதவழு மணிமாடத் தென்புதுவைத்
தன்னின் மேவு
கண்ணான திரிபுரைக்கிங் கெதில்விருப்பம் புலவோரே
கழறு வீரே. (2)

### 3. நயினியப்ப கவிராயர்

428. சீர்பூத்த சைவாக மப்பொரு ளுணர்ந்தவன்
றிரிபதகைக் குலசேகரன்
றிகழ்தொண்டை நாட்டினுயர் புதுவையம் பதியில்வரு
செல்வமுத் துக்குமரமால்
பார்பூத்த செந்தமிழ்ப் பாற்கடலின் மதியாய
பசியபொற் றம்பகிறுவிப்
பகரரிய திருநாவின் மத்திசைத் தன்பெனும்
பாசமா ரத்தைமதித்துத்
தார்பூத்த வேணியீச் சுரர்வேத புரிநாதர்
தமதுவா மத்திருக்குந்

தையல்திரி புரசவுந் தரவல்லி யுமைமீது
சாற்றுபிள் ளைக்கவியெனு
மேர்பூத்த தெள்ளமு தெடுத்துத் திரட்டிநல்
லிசைகொண்மாந் தர்கள்யாவரு
மிகபர மிரண்டினு மகிழ்வுபெற் றுய்யவவ
ரின்செவிக் கூட்டினனே. (3)

### 4. வீராசாமி முதலியார்

429. கற்கண்டைச் சருக்கரையைப் பாகைத் தேனைக்
கதலிபலா மாவெனுமுக் கனியை வென்ற
சொற்கொண்ட வொருபிள்ளைத் தமிழை யன்பாற்
சூடினன் புதுவைதிரி புரைக்கு மேரு
விற்கொண்ட பரமனருள் பெற்று வாழும்
விற்பனன் முத்துக்குமர வேளின் சீர்த்தி
யெற்கொண்டு மேர்சொலத்தான் சேட னுலு
மிசையாமற் றலையசைத்தா னென்னுங் காலே. (4)

### 5. வெங்கடாசலமுதலியார்

கலித்துறை

430. வெள்ளச் சடாடவி வேத புரீசனை மேவிவளர்
கிள்ளைத் திரிபுர சுந்தரி மீது கிளர்புதுவை
வள்ளற் குணலையன் முத்துக்குமார வரோதை யன்சொற்
பிள்ளைத் தமிழை முதலித் தமிழெனப் பேசுவரே.

### 6. சாம்புசிவக் கவிராயர்

431. சொன்னோக்கி பொருணோக்கித் தொடைநோக்கி நடை
துகடீர் மானின் [நோக்கித்
மென்னோக்கி யாம்பனுவன் மாதுவெள்கி யயனுவில்
மேவி னளாற்
பொன்னோக்கி மகிழ்புதுவை வாழ்முத்துக் குமரப்ப
பூப னனேன்
றன்னோக்கிற் செய்ததிரிபுரையுமையாட் கினியபிள்ளைத்
தமிழின் மாதோ. (5)

### 7. கூனிபோகு ராமசாமி

வெண்பா

432. முத்துக் குமாரனெனு மூதறிஞன் வேதபுரி
யத்தற் கிடமமர்ந்த வம்மைக்குப்—புத்தமுதாம்

பிள்ளைத் தமிழுரைத்த பெற்றியை யென்சொல்லுகேன்
வெள்ளத் தமியேன் விரித்து. (6)

8. அருணாசல வுபாத்தியாயர்
கலித்துறை

433. சத்துக் குணத்தருள் வேத புரீசர் தமதிடப்பாற்
சுத்தக் குலத்தவர் போற்றுந் திரிபுர சுந்தரிமேற்
பத்திக் கணியி தெனப்பா வலர்சொலப் பண்டமிழ்தேர்
முத்துக் குமாரன் முதற்பிர பந்த மொழிந்தனனே. (7)

9. இராமானுசக்கவிராயர்
வெண்பா

434. வித்துக்கு முன்புதுவை வேதபுரீ சர்மனைமேன்
முத்துக் குமாரன் மொழிந்ததுதான்—வித்தைக்குள்
வெள்ளத் தமிழர் விரிஞ்சன்னி தேரும்
பிள்ளைத் தமிழெனவே பேசு. (8)

10. வாலைதாசன்

435. சீருலவு செந்தமிழ்ப் பாவாணர் தங்களிரு
செவிகளுக் கினியவமுதாந்
திடமேவு மைம்புலன் வழிச்செலா வடியர்பாற்
றேக்கரிய வானந்தமாம்
பாருலவு துறவற நெறிச்செல்வோர் தம்முழைப்
பரபோத மாமுயர்ந்த
பண்பிலகு மில்லறத் தோர்கட் கெலாந்தரும்
பைந்தருவோ ரைந்தாமெழில்
பேருலவு சிவயோக சித்தர்பாற் சித்தெலாம்
பெய்திடு பெருங்குளிகையாம்
பீதற்றுபுன் பாவலர் செருக்கறுக் குந்திறற்
பேசரிய கூர்வாளதாங்
காருலவு சோலைசூழ் புதுவைமுத் துக்குமர
கவிராச னுள்ளன்புடன்
கௌரிதிரி புரைமீ துரைத்திடும் பிள்ளைநற்
கவியெனும் பிரபந்தமே. (9)

11. இதுவும் வீராசாமி முதலியார்

436. புதுவை முத்துக் குமார தொண்டன்றனைப்
போலோர் கவிமதுரம் பொழியப் பாடுஞ்

சதுரருண்டோ வெனவிரிஞ்சன் வினவினன் சேடன்
கானெனன் ருனோர் [நான்
பதமெனினுந் தோற்றுமன் மால்கொண்டு கடல் வீழ்ந்
பதுமன் சீறி [தான்
மதமுறுநா வைப்பிளந்து காதறுத்து மண்சுமக்க
வைத்திட் டானே (10)

---

## காப்புப்பருவம்

---

### விநாயகர்

437. திருமருவு தம்பிரான் ஞேழுன் முக்கட்சிவன்
றெய்வத் தலங்கடோறுஞ்
சீர்கொள்பதி கம்பாடு செயலினற் பெறுபொரு
டிரட்டிமுத் தாற்றினிதி (வி)ட
வருமைதிக ழாரூர்க் குளத்தெழுபொன் மாத்துரை
தளவிடும் வணிகனவந்
தருள்செய்து வேதவன மாமணக் குளமேவு
மைங்கரப் பிள்ளைகாப்பாம்
பெருமைமிகு மால்வெள் விடைக்கலங் காரணைப்
பிரியாதிருக்கு முமையைப்
பேசரிய பச்சைப் பசுங்கிளி யைஞானப்
பிராட்டியைச் சிவதானியைத்
தருமநிறை செல்வியைத் திரிபுர சவுந்தரித்
தாயைமற் றெப்பின்மணியைத்
தமியேன் குறித்துப் புகன்றிடும் பிள்ளைத்
தமிழ்க்கவிதை முற்றுதற்கே. (1)

### திருமால்

438. நீர்கொண்ட வேணிப் பிரான்பவள மேனியொடு
நீலமணி வடிவமின்ன
நிழல்விரி கொழுங்கிரண மாணிக்க நீள்சுட்டி
நித்தில வடங்கடிகழச்

சீர்கொண்ட முறுவலிள நிலவொழுக வின்னருட்
டேன்விழிக் குவளைபொழியத்
தென்புதுவை மருவுதிரி புரசவுந் தரியெனுந்
தேவியை யுவந்துகாக்க
தார்கொண்ட பைந்துழாய் முடிமீ தணிந்துபஞ்
சாயுதங் கைத்தலத்திற்
றுங்கியம் போருக மடந்தையை யுரந்தனிற்
சந்ததமு நீங்காமல்வைத்
தேர்கொண்ட வெண்டிரைக் கடலிடை யனந்தன்மீ
தினிதாக வறிதுயிலமர்ந்
திலகுபல் லாயிரக் கோடியண் டங்களு
மின்புறக் காக்குமுகிலே. (2)

## சிவபெருமான்

439. வானவர் பராவுபுரு கூதனெடு நாண்முயலு
மாதவமுனு வகலு மறையைக் கொடுத்தவர்
வாசமல ரான்முறை வழாதுவழி பாடுபுரி
வார்சிலை கொடாசாதிப் பெயரைத் தரித்தவர்
மீனமுயர் கேதனம் நேர்பவன தாகநுதன்
மேலுறு கணரழலி னெரியச் சினத்தவர்
வேதவன மானதல நீடெழில்செய் கோயிலுறை
வேதபுரி நாதர்பத மிதயத் திருத்துதும்
ஞானநிறை மோனசிவ யோகநெறி யோர்மனதி
னொடொறு மூலாவுமிரு நளினப் பதத்தியை
நாவினியன் மேவுதமிழ் மாறன்மக ளாயரசு
நாடியபி டேகமுறு மகுடச் சிரத்தியை
மானமயி லூருமுரு கேசனெடு காழிவரு
மாமதலை தானுகரு மமுதத் தனத்தியை
மாசிலடி யார்வினைக டரவர மேயுதவு
வாமியபி ராமிதிரி புரையைப் புரக்கவே.

## வேத விநாயகர்

440. தாரணி தனிலெதிர் மகிட னெடுந்தலை
சாடிய தரணிமலி
தாயென வனுதின மன்முரு கன்பர்
சகாயி தயாவதனி

யாரண வனமுறை திரிபுர சுந்தரி
யாயிவ ராகிபரை
யாரியை யுமைதனை யினிது புரந்திட
வாசில்வி யாதர்மொழி
பாரத மலைமிசை யெழுதி விளங்கொரு
பாரிய கோடுமுயர்
பானுவி னொளிகெட வெயில்விரி யங்குச
பாசமும் வாளவுண
வீரரு முதுகிட வடுதிற லுங்கட
மீறுக யானனமு
மேவுற நிலைபெறு சினகர நின்றருள்
வேதவி நாயகனே. (4)

முருகக்கடவுள்

441. மகபதி பெறுந்தனய னெடுவிணோர்க் குறுபார
வன்சிறைத் தீர்த்தருள்செவேள்
வரியளி முரன்றுபய னறியதே மலர்நீப
மஞ்சரித் தோட்குழகநீள்
ககன முல வஞ்சிறகி,னெகினவா கனமுருஞ்
கஞ்சனைத் தாக்கிமுனிசெய்
கலைஞர்தமிழ் கொண்டுபுகழ் புதுவைமா நகர்மேவு
கந்தனைப் போற்றுமரோ
பகரரிய தண்டைமணி யரவமோ விடுபாத
பங்கயப் பார்ப்பதிமனே
பவனையடு சங்கரனை நிதமுமே யகலாத
பண்புடைப் பாக்கியநலாள்
செகமுதவு கங்கையரு ணயனிமா தரிசூரி
செங்கையுட் டார்க்கிளியினெ
டிரிபுர சவுந்தரமி னெனுமனோன். மணியைச்சீர்
திகழ்ந்திடக் காத்தருள்கவே. (5)

பிரமதேவன்

442. மேனிலத் தமரர்முனி வர்பரவு கலைமகளை
மேன்மையுட னுவின்வைத்து
மேதினி முதற்புவனம் யாவுமெவ் வுயிர்களும்
விழைந்தாதியிற் படைத்துத்
தேனிருஞ் சிறையளி யருந்தி மகிழ்தெய்வச்
செழுங்கமல மீதிருக்குந்

திசைமுகக் கடவுளிரு பதமலரை யனுதினஞ்
செங்கைகூப் பிப்பணிகுவாம்
வேனிலா திபமார னுயுதச் சாலையின்
விளங்குதண் பூம்பொழில்களும்
வெண்சங் குயிர்த்தமுத் தின்நிலவி னும்பலிதழ்
விரியுநீர்ச் செந்நெல்வயலும்
பானிறத் தூவியன முலவுமலர் வாவியும்
பலவளங் களும்நிறைந்து
பாங்கர்சூழ் புதுவைவரு திரிபுராம் பிகையெனும்
பரதேவியைக் காக்கவே. (6)

### வைரவர்

443. விண்ட லஞ்செவி டுறவொ லித்திடும்
வீர வெண்டையத் தாளினன்
வேத னெண்சிரக் கலமி லங்கிட
மேவு தாமரைக் கையினன்
திண்டி றற்பெரும் பகைஞ ருட்கிடச்
சினவு ஞாளிவெஞ் சேனையான்
செந்த மிழ்க்குரி யானை வயிரவத்
தேவ னைப்பணிந் தேத்துவாம்
மண்ட லந்தனை யவாவி யுண்டருண்
மாலு டன்வருந் தோகையை
வண்மை சேருமுப் பானி ரண்டறம்
வளர்த்தி டும்பர தேவியை
யெண்டி சைக்கணின் றடியர் போற்றிடு
மீச னன்புறு வாமியை
யெழின்மி கும்புது வையிலு றைந்திடு
மெம்பி ராட்டியைக் காக்கவே. (7)

### திருமகள்

444. நதிபதிக ளிலதிமகிமை நிறைசுவைப் பாற்கடல்
நடுவுளமு தமொடுபுவ னமகிழ்பெறத் தோற்றிமெய்
நடைகொளமரர் தமையரசு திருவுறப் பார்த்தெழில்
நணுகுமணி வணனைமருவி யுலகினைக் காத்துமன்
கதியையடி யவர்கள்பெறு நன்முறையருட் காட்டியெண்
கணனுமிரதி பதிதனையு மகரெனப் பழுத்துநன்

கவிதைமல ரையரிதனது புயமதிற் சூட்டிமென்
கனகமுளரி மிசையுறையு மயிலினைப் போற்றுதும்
மதியினளிசெ யொளிர்வதன நிமலியைப்பாட் டளிவதியு
மலரினறை கமழு மளகியைத் தீட்டரு
மறைகள்புக ழுபயகம லசரணியைப் போர்க்கெதிர்
மகிடனெடுமு டியையிடறு சமரியைச் சேட்பொலி
பொதியமுனி தமிழினிசை கொள்கௌரியைப் பூத்திகழ்
பொருவிலப யமொடுவரத கரமினைச் சீற்றமில்
புனிதமுறு தவருமெவ ருமினிதுளத் தேத்திய
புதுவையமல னிடம்நிலவு குயிலினைக் காக்கவே. (8)

கலைமகள்

445. துதியார்ந் திலங்குகலை மகளெனப் பெயர்கொண்டு
தூய்படிக மாலை வீணை
சுருதிநூற் புத்தகங் கரமேந்தி யெண்கண்
டுளங்குமொரு வனைமணந்து
விதியா கமங்களுணர் பாவாணர் நாவினவர்
மேன்மைபெற வேநடிக்கும்
வெண்கமல நாயகி மணிச்சிலம் பணிபாத
மென்மலரை முடிதரிப்பாம்
மதியா தவன்காலை மாலையெனு மிருபோது
மாறாது வந்துவந்து
மாவளங் காணல்போன் மீதுலவு முயர்புரிசை
மன்னுபுது வாபுரிதனில்
நதியார் நறுங்கொன்றை முடிவிளங் கிடவுளம்
நயந்தவரு ளாகரன்பால்
நண்ணியெண் ணான்கறமோ டுயிர்பல வளர்க்குமொரு
நங்கையைக் காக்கவென்றே. (9)

சத்தமாதர்கள்

446. மறைவில்வே லாழிபடை வாள்வச்சி ரஞ்சூல
வண்படை தரித்தனம்விடை
மயில்கருட னடுசிங்கம் யானைபே யிவையூர்ந்து
வருபிரா மணிகருணைகொண்
டுறுமயேச் வரிகௌ மாரிநா ராயணி
வராகியிந்தி ராணிவிசய
மோங்குகங் காளியென் றுரைசத்த மாதாக்க
ளுபையதா ளைப்பணிகுவாம்

சுறவமெறி திரையகடு கிழியவரு நீத்தந்
துளங்கிடு பெண்ணைநதியும்
தூயமா தவமுனிவர் செய்மகச் சூழலும்
சுரரா லயங்கள்பலவும்
நறியபூம் பொழில்களும் வயல்வளங் களுமல்க
நன்மைதிகழ் தொண்டைநாட்டின்
நாவமிகும் புதுவையுறை திரிபுராம் பிகையென்னும்
நங்கையைக் காக்கவென்றே. (10)

முப்பத்துமூவர்

447. நன்மைதிக ழெல்லைமா காளிபத் திரகாளி
நாடருங் காடுகாளி
நவசத்தி பஞ்சசத் திகளொடு பராசத்தி
நாமமுறு தீர்த்தசத்தி
வன்மைமிகு சிவபூத கணர்வீர பத்திரர்
வயங்கொளரி கரபுத்திரர்
மாதிரத் தலைவர்மதி யாதித்த ருடனுருத்
திரர்மருத் துவர்வசுக்கள்
தன்மநெறி சேர்பெருந் தொகையமர ரரமகளிர்
தண்டீசர் நந்தீச்சுரர்
சரணபங் கயமலரை மறவாம லன்பினொடு
சந்ததமும் வந்தனைசெய்வாம்
பொன்மதிற் சிகரகோ புரமிலங் கிடுவேத
புரமேவு சிவனிடப்பாற்
பொருந்துதிரி புரசவுந் தரவல்லி யுமைதனைப்
புறங்காத்து நிற்கவென்றே. (11)

---

# செங்கீரைப்பருவம்

---

448. பைவைத்த மணிமுடிக ளோராயிரங் கொண்டு
பாந்தளர சேந்துபுவனப்
பல்லுயிர் களுந்தழைத் தோங்கியெஞ் ஞான்றுமே
பூண்பினொடு தலையெடுக்க

மெய்வைத்த வேதனண் டங்களைச் சிட்டிக்கு
மேன்மையொடு தலையெடுக்க
விரிதிரைக் கடல்வண னவற்றினைக் காத்தருளும்
வெற்றியொடு தலையெடுக்கக்
கைவைத்த மான்மழுப் படையாள னிவைகண்டு
காதலொடு தலையெடுக்கக்
கருணையொடு மெள்ளக் கவிழ்ந்திருகை யூன்றிமென்
கமலமுக மேறெடுத்துத்
தெய்வத்தமிழ்ப் புலவர் போற்றுதரு மச்செல்வி
செங்கீரை யாடியருளே
தென்புதுவை மருவுதிரி புரசவுந் தரவல்லி
செங்கீரை யாடியருளே. (1)

449. துங்கமிகு செம்மணி பதித்தபொற் பந்திலகு
சூழியக் கொண்டையாடச்
சோடச கலாமதியி னொளிர்வச் சிரச்சுட்டி
சுந்தர நுதற்கணுடப்
பைங்கதி ரெறிக்குமர கதமணித் தொங்கலிரு
பார்வையுறு செவியினுடப்
பன்னக விரத்தினக் கடககே யூரமென்
பாணியில் விளங்கியாடப்
பொங்குதண் சுடருமிழு முத்தார மார்பிற்
புரண்டசைந் தொலிசெய்தாடப்
பொற்பிலகு சிற்றடியின் மொய்த்தகிண் கிணிநூ
புரந்தண்டை கொஞ்சியாடச்
செங்கமல வல்லிகலை வல்லிதுதி மலைவல்லி
செங்கீரை யாடியருளே
தென்புதுவை மருவுதிரி புரசவுந் தரவல்லி
செங்கீரை யாடியருளே. (2)

450 வல்விற் றடக்கைவீ ராதிபரு மின்னிலகு
வயவாள்விடா மறவரும்
வண்கொல்ல னுலையிற் சிவந்துதோய்ந் திலகொணெடு
வடிவேற்படைத் தலைவரும்
வெல்வகை யறிந்துபகை சாயமுன் பாய்புரவி
மீதோங்கு விறலாளரும்
வெஞ்சம ருழக்குமும் மதமீறு கூர்ங்கோட்டு
வெற்றியா னைப்படைஞருஞ்

சொல்வயம் பெறுமேக மண்டலந் தாவியுயர்
சுடர்மணித் தேராளருஞ்
சூழ்மன்னர் மந்திரிபிர தானிமுதல் யாவருந்
தொழுதுநின் னேவல்கேட்பச்
செல்வத்தமிழ்ப் பாண்டி நாடாள வருநங்கை
செங்கீரை யாடியருளே
தென்புதுவை மருவுதிரி புரசவுந் தரவல்லி
செங்கீரை யாடியருளே. (3)

451. தண்டரள மணியுயிர்த் திடுமிப்பி யாயிரந்
தான்சூழ வீற்றிருக்குந்
தகைசே ரிடம்புரிச் சங்கமச் சங்கஞ்
சகச்சிரஞ் சூழவரசு
கொண்டிடை யிருக்கும் வலம்புரிச் சங்கமது
கூறுமுன் றூகைசூழ்தரக்
கொற்றமோ டிருக்குஞ் சலஞ்சலச் சங்கமக்
கூட்டங்கள் சூழநாப்பண்
வெண்டிங்க ளோவெனும் பாஞ்சசன் னியச்சங்க
மேவிய தெனச்சிறந்த
மெல்லியர்கள் சதகோடி புடைசூழ நடுவினிது
வீற்றிருந் தருள்கௌரியே
தெண்டிரைக் கடலுலகி னெவ்வுயிரு மோங்கநீ
செங்கீரை யாடியருளே
தென்புதுவை மருவுதிரி புரசவுந் தரவல்லி
செங்கீரை யாடியருளே. (4)

452. நான்குதிக் குந்தலை திறம்பவொன் றொன்றாக
நாட்டியும் பகலைத்தரும்
ஞாயிறு குடக்கினிலு மதிவடக் கதனிலும்
நயந்துதித் தெழவகுத்து
மீன்குதிக் குஞ்சத்த சாகரமு நிலைவிட்டு
வெவ்வேறதா மாற்றியும்
மேருவைப் பம்பர மதாச்சுழற் றியுமெட்டு
வெற்புமிட மறவிதித்தும்
மூன்குதிக் கும்வச்சிரப் படையன் அனீகமோ
டுருத்தெதிர்த்துப் பொருதபோ
தொருநொடியி லாங்கவனை மாயத்தெழுப்பியு
மூவகையுற்ற விளையாடல்செய்

தென்குதிக் குங்கடம் பணையருள் பசுங்குழவி
செங்கீரை யாடியருளே
தென்புதுவை மருவுதிரி புரசவுந் தரவல்லி
செங்கீரை யாடியருளே. (5)

வேறு

453. நவமிகு தெண்பனி மலையுத வுந்தனி
நங்காய் கங்காளி
நதிபதி தந்திடு மமுதினு மின்சொல்
நலங்கூ ருந்தேவி
தவமுறு மந்தணர் துதியை மகிழ்ந்தருள்
தந்தோய் செந்தேனே
தளையவிழ் சண்பக மகிழ்தள வங்கமழ்
தண்டார் வண்டோதி
பவமக லும்படி யடியவர் கும்பிடு
பண்பார் வண்பாவை
பணமணி யொண்டொடி விரலணி சங்கெறி
பந்தாரும் பாணி
சிவபர மன்றன் னிடமுறு மம்பிகை
செங்கோ செங்கீரை
செகமுழு துந்தரு திரிபுர சுந்தரி
செங்கோ செங்கீரை. (6)

454. கனகொலை வஞ்சகர் வெருவுறு சங்கரி
கண்பா ரென்றேநின்
கமல பதங்கரு துவர்முன் வரும்பரை
கண்டோ பண்பாடு
மனமுறு பண்டிதர் புகழு நிரந்தரி
வண்கா வொண்கூடல்
வழுதி செயுந்தவ மருவு துரந்தரி
மன்பார் கொண்டாடு
மணநடை யிந்திரை கலைமகள் கங்கை
யகங்கூ ரன்பாகி
யனுதின மும்பணி செயமகி ழும்பிகை
யஞ்சேர் குன்றுத
தினகர னென்றியன் மணிதிகழ் குண்டலி
செங்கோ செங்கீரை

செகமுழு துந்தரு திரிபுர சுந்தரி
செங்கோ செங்கீரை. (7)

455. மருவகுள ந்தம நகநற வஞ்செழு
மந்தா ரஞ்சாதி
வழைகமழ் சண்பக மலரி புருண்டி
மணங்கால் செங்கோடு
குருகுசெ வந்திம தலையல ரஞ்சனி
கொந்தார் மஞ்சாடி
குழையொளிர் குங்கும மயிலை குருந்தொடு
கொங்கார் சிந்தூரம்
விரவிய நந்தன வனமுட னம்புய
மென்று தொண்போது
விரிகுமு தந்திகழ் தடமரு தந்தரு
விஞ்சே ரெஞ்சாத
திருவள மொன்றிய புதுவை வரும்பரை
செங்கோ செங்கீரை
செகமுழு துந்தரு திரிபுர சுந்தரி
செங்கோ செங்கீரை. (8)

456. மேலிமை யோர்கள் பராவிய வாமனர்
வீறு பரந்தாமர்
வேணுவை நாதமொ டூதுசெவ் வாயினர்
வீடுத வுந்தேவர்
காலிபி னுயர் சிறுநட் னேகினர்
கார்புரை யுந்தேகர்
காமனை வேதனை யேயருள் சீதரர்
கானுல வந்தாளர்
வாலிபி னேனுற வாகு மிராகவர்
வான்வை குந்தேசர்
மாபது மாதன மாதுறை மார்பினர்
மாமணி யொண்பூணர்
ஆலிலை மீதுறை மாயவர் சோதரி
யாடுக செங்கீரை
யாய்புகழ் சேர்புது வாபுரி நாயகி
யாடுக செங்கீரை. (9)

457. வேதியர் மாமுனி வோர்கள்செய் மாதவு
வேள்வி முடிந்தேற

வீறுட னேதுதி தேவர்கள் பூசை
விழாநித முண்டாக
வோதரு மேலவர் நூனெறி நீதி
யுலாவு திறன்கூர
வோதிம நேர்நடை யார்நிறை யான்மிகு
மோகை நலஞ்சார
மாதிக மாகரி தேர்படை வீரர்
வழாவி சயந்தாவ
மாநில மீதற நீடழ காம்கவி
வாணர் குலந்தேற
வாதி மனோன்மணி யேபரை யேயினி
தாடுக செங்கீரை
யாய்புகழ் சேர்புது வாபுரி நாயகி
யாடுக செங்கீரை. (10)

---

## தாலப்பருவம்

---

458. இலைகொ ணறும்பூ வதில்நெய்கொண்
டெழிலார் தலையுச் சியிலிட்டே
யினியமண மஞ்சட் பொடியு
மிளம்பச் சறுகு முறத்திமிர்ந்து
நிலைசெய் தெய்வக் கங்கைநன்னீர்
நிறைபொற் கும்ப முகந்தாட்டி
நிலவி னொளிர்பூந் துகில்தன்னு
னீரம் புலர மெய்துவட்டிச்
சிலையொண் ணுதலிற் காப்பணிந்து
திருக்கண் மலர்க்கஞ் சனந்தீட்டிச்
செம்பட் டணிவேய்ந் தயினிநீர்
சிறக்கச் சுழற்றி யிமையமலைத்
தலைவன் மனைவி சீராட்டுஞ்
சத்தி தாலோ தாலேலோ
தாயே புதுவைத் திரிபுரசுந்
தரியே தாலோ தாலேலோ. (1)

459. பழைய வேதங் காலாகப்
பகரா கமமேற் பரப்பாகப்
பதினெண் புராணங் கொடுங்கையதாப்
பலவாங் கலைநல் விதானமதா
வழுவி றத்து வங்கயிறு
மருவு ஞான மெல்லணையா
வணைபே ரின்பத் தொட்டின்மிசை
வளருங் கருணைப் பசுந்திருவே
முழுமெய் யன்பிற் சிவபூசை
முயலு மிடையிற் கம்பைநதி
முடுகக் கண்டுட் கலங்காது
முதல்வன் றன்னை வளைக்கையுறத்
தழுவிக் குறிவைத் திடுகும்பத்
தனத்தாய் தாலோ தாலேலோ
தாயே புதுவைத் திரிபுரசுந்
தரியே தாலோ தாலேலோ. (2)

460. பூமங் கையும்பார் மகளுமிரு
புறநின் றணிகொள் வடம்பற்றப்
புகல வரிய திருநாமம்
புகழ்ந்து கலைமா திசைபாட
நேமங் கொடுதெய் வக்கங்கை
நிழல்கால் செய்வட்டந் தாங்க
நிகரில் கவரி சசியேந்த
நிருத்தம் புரிய வரம்பையர்க
ளேமங் கொளுமா தவமடவா
ரினிதிற் சுபமங் கலங்கூற
வெழின்மா ணிக்கத் தொட்டிலில்வீற்
றிருக்கும் பரையே பரிமளப்பூந்
தாமங் கமழு நறுமலர்க்குந்
தளத்தாய் தாலோ தாலேலோ
தாயே புதுவைத் திரிபுரசுந்
தரியே தாலோ தாலேலோ. (3)

461. வண்ணங் கரிய மாலயனு
மறையுந் தேடற் கரியவனும்
வயங்கு திருநீற் றொளிபூத்த
வன்னி வடிவாங் கயிலாயு

னெண்ணந் திகழ்மீன் வலையனு
யிடையிற் கச்சையொடு சுரிகை
யிசையக் கட்டி நெய்தலணிந்
தினிதா வந்து நந்தியெனுந்
திண்ணம் பெறுநீள் கொடுஞ்சுறவைத்
தியங்க வலைக்குட் படுத்தித்தெண்
டிரையா மனைக்கு ளுன்னைமணஞ்
செய்யவளர்மெய் யன்புமிகுந்
தண்ணந் துறைவன் றவத்திலவ
தரித்தாய் தாலோ தாலேலோ
தாயே புதுவைத் திரிபுரசுந்
தரியே தாலோ தாலேலோ. (4)

462. பந்த பாசத் தொடரறுத்த
படிவர் செயுநற் றவப்பேறே
பரிந்துன் றிருப்பா தம்பணிவோர்
பழநோய் கோடைக் கலர்ப்பொழிலே
யெந்த நாளுந் தேனிப்போ
ரிதய கமலத் துறைதேனே
யினிய புகழைப் பாடுமவ
ரிடரா மிருணீத் தருளொளியே
சிந்தை யுறப்பூ சனைபுரிவோர்
சென்மக் கடலிற் கெழிற்புணையே
தேறு மெய்ஞ்ஞா னச்செல்வர்
சேருமுத்திக் கொருவழியே
தந்த னெடுகந் தனையளித்த
சத்தி தாலோ தாலேலோ
தாயே புதுவைத் திரிபுரசுந்
தரியே தாலோ தாலேலோ. (5)

### வேறு

463. மஞ்சக மிகுகளி கொண்டுல வியமா காவூடே
மண்டிய பலபல வின்கனி வழிதே னூருயே
விஞ்சல வுழுநாகை கண்டிடு நெறிகால் வாயோடா
மின்கதி ருறுசெநெ லம்பணை பதனிணீப ரேபோல்பா
யெஞ்சலில் புதிய வளந்தரு மெழின்மா ரூநீள்சீ
ரென்றுநிறை புதுவை வந்தருண் மயிலே மேலானே

ரஞ்சலி செய்மகி முஞ்சிவ பரையே தாலேலோ
அந்தரி திரிபுர சுந்தரி யுமையே தாலேலோ. (6)

464. மண்டிய களகடி யுங்கடை சியர்வாய் மாறாதே
மங்கல நிறைகுமு தந்திகழ் விழிதூ நீரூடே
கண்டிடு கருநெய்த லென்றெண்ணி யளிகோ் டாகோடி
கஞ்ச வதனமுற வந்தல மரலா ருளாதே
யொண்டிரு விரல்கொ டெறிந்திட வுமவா வோடாதே
னுண்டிட மறிதரு நந்தலில் வயல்பால் சூழ்சீரே
யண்டிய புதுவை யமர்ந்தருள் குயிலே தாலேலோ
அந்தரி திரிபுர சுந்தரி யுமையே தாலேலோ. (7)

465. மணிமுடி யரசர்க ணிதமனு முறைதவ றாகாமே
மண்டல முறுதரு மங்களி னிலைபாழ் போகாமே
துணிவொடு புலவர்கள் கலைபயி லறிவது மாறாமே
தொண்டர்கண் முன்நமன் வந்தட லுடனே சீறாமே
பணிவுறு தகுதியர் தமதுற வனுதின மோவாமே
பண்புயர் சிவசம யம்புற நெறியே தாவாமே
அணிநல னெறிமிகு புதுவையில் வளர்கிளி தாலேலோ
அந்தரி திரிபுர சுந்தரி யுமையே தாலேலோ. (8)

466. பூவணி புழுகு சவாதொடு கலவைக டானேர்பால்
பொங்கொளி பொலனணி கண்டிகை நகுகாழ்
[தானேர்பால்
தீவுக ளுறுகல மேல்வரு பல்பொரு டானேர்பால்
செம்பொனு மிரசித முங்குல வுகுவா றானேர்பால்
மாவய மதகரி வாகன முதலிய தானேர்பான்
மங்கல முடனிறை யும்பல வளமே நீள்சீரா
ராவண முறுபுது வாபுரி வளர்கொடி தாலேலோ
அந்தரி திரிபுர சுந்தரி யுமையே தாலேலோ. (9)

467. தளவத் திளமுகை யெனவொத் தருணகை யார்மானே
சந்தத மிறையவர் பங்கினு ளினிதா வாழ்மாதே
முளரிக் கணெடு வருமுத் தமிகா காபாலி
மொய்ம்புட னெதிர்மகி டன்றிற லறவே காய்சூலி
யுளமிக் களியொடுன் நளினப் பதமற வாதார்பா
லும்ப ருலகசுக மிம்பர்பெற வருள்செய் மாதாவே
யளகைக் குவமைசொல் புதுவைத் தலைமக டாலேலோ
அந்தரி திரிபுர சுந்தரி யுமையே தாலேலோ. (10)

# சப்பாணிப்பருவம்

468. வெண்டா மரைச்செல்வி யொடுகழங் கம்மனைகள்
விளையாடு செங்கையினல்
வீறுற்ற முத்தேவ ருக்குமுத் தொழில்காட்டி
மேன்மைதரு செங்கையினற்
றெண்டா னவர்க்கதிக பாக்கிய முவந்தருள்செய்
சூடகச் செங்கையினற்
சோதிவெயில் விரிபூ விலைச்சூல மேந்துமிகு
சுந்தரச் செங்கையினல்
பண்டாவு மென்மொழி மிழற்றுபைங் கிளிகுலவு
பண்புற்ற செங்கையினற்
பச்சைமயில் வாகனக் கடவுளை யெடுத்தருமை
பாராட்டு செங்கையினற்
றண்டார்து கமழ்காந்த ளொத்தசெங் கையினற்
சப்பாணி கொட்டியருளே
சதுர்வேத மெய்த்தலைவி புதுவா புரிக்கிறைவி
சப்பாணி கொட்டியருளே. (1)

469. அங்கணுல கோங்கிலங் கையுமயே ந்திரமுமணு
வாமென விகழ்ந்தேயுயர்ந்
தந்தரம் புவனிபா தலமென்னு மூன்றிடத்
தருமையாச் செம்பொன்னினுந்
துங்கமிகு வெண்பொன் னினும்கருங் பொன்னினுஞ்
சூழ்மதி லுடனிலங்கித்
தூவியம் பறவைபோ லெங்கும்பறந் துலவு
தோலாத வலிபடைத்துப்
பொங்கமொ டெழுந்துவிண் ணுடாதி நாட்டின்மேற்
பொள்ளென விறங்கிவதைசெய்
புரமூன்று மப்புரத்த சுரரு மொருங்கறப்
புன்முறுவ றந்திட்டமா
தங்கமலை வில்லிகைப் பற்றுசெங் கையினற்
சப்பாணி கொட்டியருளே
சதுர்வேத மெய்த்தலைவி புதுவா புரிக்கிறைவி
சப்பாணி கொட்டியருளே. (2)

470\. அருமறைக ளாகம புராணசாத் திரநீதி
யாதிபல கலையுமோங்க
வந்தணர்கள் பூவேந்தர் வசியர் சூத்திரர்தமக்
காமுறை வழாமலோங்க
கருமவினை யால்வந்த வறுமையுற் றோர்க்குமெக்
காலுநிறை செல்வமோங்கக்
காசினி யுளோர்க்கலங் காரசுக போகமெய்க்
கட்டழகு முதலவோங்கப்
பெருமைமிகு வேதன்மா தவன்முதலி னோர்போற்றும்
பெம்மா னெனுங்கணவனும்
பெட்புற்று நாடோறுந் தனதக மகிழ்ந்திடப்
பெருகுமிரு நாழிநெல்லாற்
றருமமெண் ணான்கும் புரிந்தசெங் கையினாற்
சப்பாணி கொட்டியருளே
சதுர்வேத மெய்த்தலைவி புதுவா புரிக்கிறைவி
சப்பாணி கொட்டியருளே. (3)

471\. நவமேவு புவனியிற் பருவமா றாமல்விண்
ணணுகுமுகின் மாரிகொட்ட
நகுமணி குயிற்றுமுடி மன்னர்மனு நூன்முறை
நயந்துள மகிழ்ந்துகொட்டச்
சுவையாறு முத்தமிழ்ப் பாவலர்சொன் மாலைநற்
றாயமு திசைந்துகொட்டச்
சுருதிலயை நீங்காத மாடகநல்லி யாழிசை
துலங்குகந் தருவர்கொட்டச்
சிவநேசர் தேவாரம் வாசகத் தேறலைத்
திருவாய் மலர்ந்துகொட்டத்
தேவரோ டரம்பையர்க ளுன்றெரி சனம்செய்து
தினமுமென் மலர்கள்கொட்டத்
தவயோகர் கைக்கொட்ட நினதுசெங் கையினாற்
சப்பாணி கொட்டியருளே
சதுர்வேத மெய்த்தலைவி புதுவா புரிக்கிறைவி
சப்பாணி கொட்டியருளே. (4)

472\. கமலமலர் வீட்டுலவு நான்முகக் கடவுளைக்
கட்பொறி கலங்கமோதிக்
கடியசிறை தனில்வைத்த வோராறு முகமிலகு
கவினிளஞ் சிங்கத்தையு

மமரர்கள் பணிந்தேத்து மைந்துகைத் தலமோ
ரடற்கோட்டு வேழத்தையு
மன்புட னளித்துவகை கூர்ந்தினிய வருள்பொழியு
மஞ்சனமலர்க் கண்மானே
இமமோடு கருங்கங்குல் குடிவாங்கி யோடவா
ளேந்தாயிரங் கரங்கொண்
டெழுமிளம் பருதிகோ டிகள்சூழ்ந்த வெனவெயி
லெறித்தசெம் மணியிழைத்த
தமனியக் கங்கண மிலங்குசெங் கையினுற்
சப்பாணி கொட்டியருளே
சதுர்வேத மெய்த்தலைவி புதுவா புரிக்கிறைவி
சப்பாணி கொட்டியருளே. (5)

473. நிலவுதரு வெண்முத்து மாரமும் பைம்பொன்னு
நிரைதிரைக் கைவரன்றி
நீணிலத் திலகுமுயிர் யாவுமமு தென்னவரு
நிறைநீர்ப் பிணைகநதிபு
மலகுறு செழுஞ்சாலி முதிரைகழை வாழைதெங்
காதிய வளங்களைவையு
மரீதான விரதசிவ தவமிகுந் தக்கோரு
மாலையங் களும்விழாவும்
பலபொருள் விளங்குகடை வீதியும் நீதியும்
பாடலொடு நடமாடலும்
பங்கயத் திருமாது நீங்காத செல்வம்
படைத்தவரு நற்றருமமுங்
குலவிவளர் தொண்டைநாட் டுயர்புதுவை விமலியே
கொட்டியருள் சப்பாணியே
குறைமதி முடித்தசிவ னிடமருவு சத்தியுமை
கொட்டியருள் சப்பாணியே. (6)

474. ஏலமுறு பூங்குழற் றெய்வமட வார்முகத்
தெழில்கவர்ந் தரணேநாடி
யெய்தியது போல்நீ ளகழிக்குண் முகையவிழ்த்
திலகுசெங் கமலமலரின்
மேலமரும் வெள்ளன்ன மாழிபுனற் றோய்ந்துதாழ்
விரிசிறைப் பாசிபோர்த்து
வீறுற்று மீதெழக் கண்டுகன் னங்கரிய
வெற்றனமதென் றெண்ணியே

சீலமுயர் பெட்டன மருண்டல்ல லுறுபோது
சித்தங்கலங் கிடலெனச்
சிறகுதறி முன்வடிவு காட்டியுள் ளன்புடன்
சேர்ந்தணைந் துவகைகூருங்
கோலமலி வளமிகும் புதுவைவரு பைங்கிள்ளை
கொட்டியருள் சப்பாணியே
குறைமதி முடித்தசிவ னிடமருவு சத்தியுமை
கொட்டியருள் சப்பாணியே. (7)

475. நற்றகமை பெறுமஞ்சு தவழ்நெடுஞ் சாலேகம்
நாடுமைக் கண்களாக
நந்தாத பொற்கபா டங்குலவு பெருவாயில்
நறைகொளிதழ் வாயதாக
மற்றெருப்பின் மேனிலைக் கோபுரஞ் சிந்துரம்
வயங்குநன் னெற்றியாக
வண்சிகர முறுமணிக் கொடிகள்பைந் தேனொழுகு
மருமலர்க் கூந்தலாகக்
கற்றவர்கள் புகழ்மெயி லுறுப்புமுத் தணியிலகு
கவினிளங் கொங்கையாகக்
கமலத்து நீரகழி யாடையாப் பெற்றிடுங்
கனகமதிலென் னுமெழிலார்
கொற்றமகள் சூழ்ந்தோங்க வளர்புதுவை வருகௌரி
கொட்டியருள் சப்பாணியே
குறைமதி முடித்தசிவ னிடமருவு சத்தியுமை
கொட்டியருள் சப்பாணியே. (8)

வேறு

476. கம்கம வெனமண மிகுமலர் புனைகுழல்
கற்புயர் பொற்பூவை
கருதினர் நலனுற வினிதருள் பெருகு
கடைக்கண் மலர்த்தோகை
திமிதிமி யெனவன வரதமு நடமிடு
சிற்பரன் மெய்த்தேவி
செகமரு ளறுதவ ருளமகிழ் கொடுதெரி
சித்திடு முச்சூலி
நம்நம வெனவடி யவரதி துதிசெயு
நற்குண மிக்காயி
நதிபதி மிசைதுயில் பவனிளை யவளெனு
நச்சரவப் பூணி

குமுகுமு வெனமுர சதிர்புது வையமலி
கொட்டுக சப்பாணி
கொடியிடை யழகிய வடிவுறு திரிபுரை
கொட்டுக சப்பாணி. (9)

477. உரைபெறு தவமுயன் மலையரை யனிட
முதித்த வருட்கோதை
யுலகினி லெவர்களு மெழுதரு சுருதியி
னுட்பொரு ளுக்காதி
நிரைநிரை யமரர்க ளொழுவர முதவிய
நித்திய நிட்சேபி
நிலைதவ றியதன பதிவிழி மறைய
நினைத்த சினச்சூரி
தரைமக ளொடுதிரு மகள்கலை மகள்புகழ்
தத்துவ மெய்ச்சோதி
தகைநில வியசிவ சமைய நெறிகளுணர்
தக்கவ ருக்காவி
குரைகடல் விரிதுறை திகழ்புது வையமலி
கொட்டுக சப்பாணி
கொடியிடை யழகிய வடிவுறு திரிபுரை
கொட்டுக சப்பாணி. (10)

---

## முத்தப் பருவம்

---

478. அரிபுரந் தரனயன் முதலினோர் தேடுதற்
கரியதொரு வேயின்முத்த
மாசையொடு நன்மணஞ் செய்திடந் தரமேவி
யருள்கூர்ந்த பச்சைமணியே
எரிபுர வலன்றுங்க வருமையாச் சரவணத்
திடையவ தரித்தசிங்க
மினிதா மடித்தலந் தனிலேறி விளையாடு
மெழில்கண் டுவந்தபிடியே
பரிபுரங் கொஞ்சிட நடந்துநளி னத்துமேற்
பரிவுற் றிருக்குமன்னம்

பன்முறை வணங்கியிரு கைக்கூப்பி யன்புடன்
பரவமகிழ் தெய்வமயிலே
திரிபுர சவுந்தரா நந்தியே நினதுவாய்ச்
செங்குமுத முத்தமருளே
செங்கண்மா றங்கையெனு மங்களா கரநங்கை
செங்குமுத முத்தமருளே. (1)

479. மூவாறெ னுந்தரும நூலினுக் கரசியே
முத்திக்கு நற்றுணைவியே
மூடிகப் பாகன்ம கஞ்சிதைத் தோனெந்தை
முருகனின் னேர்க்கன்னையே
பாவாண ரென்றும் புகழ்ந்திடுஞ் செல்வியே
பத்தருக் கனுகூலியே
பகருமுது மறைமுடியி னடமிடுஞ் சத்தியே
பஞ்சாட் சரக்கௌரியே
தாவாத பச்சிளந் தெய்வமா னேயிமைய
சயிலத் தனிப்புதல்வியே
சதகோடி பானுவினு மொளிமிகுஞ் சோதியே
சட்சமைய பரிபாலியே
தேவாதி தேவனுக் குந்தலைவி யேநினது
செங்குமுத முத்தமருளே
செங்கண்மா றங்கையெனு மங்களா கரநங்கை
செங்குமுத முத்தமருளே. (2)

480. பொன்பயின் றுந்தாது விரிசெழும் பங்கயப்
போதீன்ற முத்தமரிதோ
புவிமடந் தைக்குடைய தாகுமுந் நீருட்
பொதிந்திலகு முத்தமரிதோ
மின்பிறழ்ந் திடுநெடிய வாகாய மீதுலவு
மேகத்தின் முத்தமரிதோ
வெஞ்சின மிகுந்தழும் மதயானை வெண்கோட்டின்
மேவுவெண் முத்தமரிதோ
மன்பெறு பசுங்கதிர்க் குலைநீடு செந்நெலின்
மருவுமணி முத்தமரிதோ
மாரவேள் கைச்சிலை யெனுஞ்செங் கரும்புதரு
வண்மையுறு முத்தமரிதோ
தென்புதுவை வருகௌரி யேயருமை பெறுமுனது
செங்குமுத முத்தமருளே

செங்கண்மா றங்கையெனு மங்களா கரநங்கை
செங்குமுத முத்தமருளே. (3)

481. எழுபசும் புரவியீர்க் கின்றவோ ராழியோ
டிலங்கிய மணிப்போதிகை
யேந்தெழிற் காற்கொடிஞ் சிப்பொலன் றேரிடை
யியங்குமா தித்தனொளியான்
முழுநிறச் சேயிதழ் முறுக்கவிழ்ந் தூற்றுநறை
முளரிப்பொகுட் டணைமிசை
மொய்சிறை யிளம்பெடையோ டகமகிழ்வு கூரன்ன
மோகமுறு மணமியற்றப்
பழுதில்பூந் திவலைகொடு பாசடைக ளசைதரற்
பாய்புனற் றடமடந்தை
பச்சைமணி யின்கலத் திலகுமுத் தாஞ்சனம்
பண்புட னெடுத்தலொக்குஞ்
செழுவளந் திகழ்புதுவை வருதயா பரைநினது
செங்குமுத முத்தமருளே
செங்கண்மா றங்கையெனு மங்களா கரநங்கை
செங்குமுத முத்தமருளே. (4)

482. விகடமிகு தறுகட் கடாமொழுகு கரடதட
வெண்மருப்பி யானையோதை
வெங்கலினம் வாய்மணிக் காற்கவரி யசையுநுதல்
வேகங்கொள் புரவியோதை
சகமதிர வுலவுபொற் றிண்டிறற் சகடமுரு
டரவுற்ற தேரினோதை
சந்ததமு நீங்காத வேதமுத லியகலைக
டருகல்வி யூரியோதை
புகலரிய திருவிழாக் கலியாண முரசொடு
பொலிந்தசங் கீதவோதை
பூசுர ருந்தவர்க ளுவகைபெற வன்னம்
புசித்திட வழைக்குமோதை
திகழுமணி வீதிசெறி புதுவைவரு தேவிநின்
செங்குமுத முத்தமருளே
செங்கண்மா றங்கையெனு மங்களா கரநங்கை
செங்குமுத முத்தமருளே. (5)

வேறு

483. நேச மிகுநற் றொண்டானோர்
நெஞ்சி லுறைபஞ் சிறையனமே
நிதமும் போற்றுங் கவிவாணர்
நினைத்த தருளுங் கற்பகமே
பேச வரிய தவமுனிவர்
பிழையின் மௌனத் துள்ளொளியே
பிறையைத் தரித்தோ னிடப்பாகம்
பிரியாதிருக்கு மரகதமே
பூசி னறுந்தா தர்டளியார்
பொங்கு மலர்ப்பூங் குழன்மயிலே
புவன மெல்லா மொருங்கீன்ற
பொய்யாக்கருணைக் கன்னிகையே
மாசி லெழிற்கற் பணங்கரசே
மணிவாய் முத்தந் தருவாயே
மன்னு புதுவைத் திரிபுரையே
மணிவாய் முத்தந் தருவாயே. (6)

484. உள்ளே யுயிரே யுயிர்க்குயிரே
யுணர்வே யுணர்தற் கரும்பொருளே
யுளமே யுள்ளத் தொளிரொளியே
யுறவே யடியேற் கொருதுணையே
தானே தானு யவதரித்த
தாயே தவமே தவப்பயனே
தனமே நிலமே தண்புனலே
தழலே வளியே தனிவெளியே
தேனே சுவையே தெள்ளமுதே
திருவே யருவே தீங்கரும்பே
செயமே நயமே செம்மணியே
திறமே யறமே செழும்பிடியே
மானே குயிலே மடமயிலே
மணிவாய் முத்தந் தருவாயே
மன்னு புதுவைத் திரிபுரையே
மணிவாய் முத்தந் தருவாயே. (7)

485. பதும நாபன் சோதரியே
பத்தர்க் கருளு மாதரியே

பனிமை யுலவு மலைமகளே
பாய்வெள் விடையோன் மணமகளே
சதுர் வேதந்தே டரியமின்னே
தமியேன் றுதிக்கும் பசும்பொன்னே
தண்டா ரிதழி வேய்ந்தவளே
தாருகனைமுன் காய்ந்தவளே
முதுமை யிளமையி லாவடிவே
மூலா தாரப் பொருண்முடிவே
மோட்ச முதவு காரணியே
மோனங் கடந்த பூரணியே
மதுர மிகுமென் மொழியுமையே
மணிவாய் முத்தந் தருவாயே
மன்னு புதுவைத் திரிபுரையே
மணிவாய் முத்தந் தருவாயே (8)

வேறு

486. மத்த கெசத்தை வெறுத்தணி மொய்த்து
மதர்த்த தனத்தெழிலாய்
மைப்புய லைச்சே லெனக்கறு விக்கண்
மணக்கு மலர்க்குழலாய்
தத்தையி லச்சை யுறப்பெரு மைக்கு
தலைச்சொ லுரைக்குநலாய்
தப்பி லயிற்படை யைச்சின விச்சுகிர்
தத்தய வுற்றகணாய்
சுத்த வளைக்கிழி விட்டு மணிக்குழை
துற்றொளிர் பொற்செவியாய்
சுப்பிர நற்றர ளத்தை வெருட்டு
சுடர்த்த ணகைப்பொலிவாய்
முத்த ரகப்பது மத்துறை வித்தகி
முத்த மளித்தருளே
முப்புவி சொற்புது வைப்பதி யுத்தமி
முத்த மளித்தருளே. (9)

487 முச்சிக ரப்படை யைக்கை தரித்தவண்
முத்த மளித்தருளே
முப்புர மெய்க்க நகைத்தெரி யிட்டவண்
முத்த மளித்தருளே
முச்செயன் முற்ற வருட்க ணடத்துவண்
முத்த மளித்தருளே

முப்பக வர்க்குயர் வெற்றி யளித்தவண்
முத்த மளித்தருளே
முச்சுத ரைப்பரி வுற்று விதித்தவண்
முத்த மளித்தருளே
முப்பகை யற்றவ ருட்டெளி வுற்றவண்
முத்த மளித்தருளே
முச்சுட ரைக்க ணெனக்கொ டுதித்தவண்
முத்த மளித்தருளே
முப்புவி சொற்புது வைப்பதி யுத்தமி
முத்த மளித்தருளே. (10)

---

## வருகைப்பருவம்

---

488. மைதவழு மணிநெடுஞ் சிகரமா ளிகையின்கண்
மனையறம் பூண்டதற்பின்
மாருத விருவினை தொலைத்தைம் புலன்வென்று
வன்பகையொ ராறுமாற்றிக்
கைதவ மிகுந்தவிழி மடமாதர் சுகமாதி
கைவிட் டுடற்றுகுளிர்நோய்
கடும்பசி பொறுத்துமெய்ப் பொருளையுட் கருதிவெங்
கானத்து மலையிடத்து
மெய்தியரி தானமர வுரியுடுத் தைந்தென்னு
மெரியிடைத் தர்ப்பாசனத்
திருந்துகொண் டட்டாங்க நிட்டைநிலை பெறும்யோக
மினிதுபல நாண்முயன்று
செய்தவ முயர்ந்திலகு மாதவர் நிதம்பரவு
சிவதுரந் தரிவருகவே
சீதவன மாலிபுகழ் வேதவன நாதர்மகிழ்
திரிபுராம் பிகைவருகவே. (1)

489. மகபதி மணந்தமக ணதிபதி பயந்தமகண்
மலரயன் விழைந்தருண்மகள்
வண்மைதிகழ் விசையமகள் தண்மைகொள் சகச்சிர
முந்தா கினிப்பெயர்மகள் [முக

ககனமுறு கற்புமகள் பொறைகொள்சீ ரவனிமகள்
கடவுள்குஞ் சரியெனுமகள்
கவினுறு மீரதிமகண் முதலான வரமகளிர்
கைதொழ வரந்தருமகள்
இகபர சகர்யமகள் பசியவடி வானமக
ளிமையமலை பெற்றிடுமக
ளீசனிடம் நேசமகள் மாசின்மன வாசமக
ளெண்ணன் கறம்புரிமகள்
செகமுதவு கருணைமக ளறிவரிய தலைமைமகள்
செழியர்கோன் மகள்வருகவே
சீதவன மாலிபுகழ் வேதவன நாதர்மகிழ்
திரிபுராம் பிகைவருகவே. (2)

490. மஞ்சுகுடி கொண்டதக ரங்கமழ் கருங்கூந்தன்
மதுமலர்த் தொடையலாட
வண்டிலக நுதலிலொளிர் வச்சிரச் சுட்டியு
மணிப்பட்ட முந்துலங்க
வெஞ்சுத விலாவெழிற் செவியிடை மணித்தொங்க
லேந்துபொற் குழைவிளங்க
வேடவிழ் நறுங்காந்த ளொத்தசெங் கரமீ
திசைத்தகங் கணமிலங்க
அஞ்சனங் குலவுவிழி யருள்பெருக வுரமதனி
லவிர்தரள மாலையசைய
வணிதிகழு முதரபந் தனமுடன் கிரணமணி
யார்ந்தமே கலைவயங்க
செஞ்சரோ ருகமென மலர்ச்சரண் கிண்கிணி
சிலம்போசை தரவருகவே
சீதவன மாலிபுகழ் வேதவன நாதர்மகிழ்
திரிபுராம் பிகைவருகவே. (3)

491. அரனிடத் தவள்வருக புரமெரித் தவள்வருக
வருள்பரா சத்திவருக
வறம்வளர்த் தவள்வருக திறமிகுத் தவள்வருக
வமரர்பணி கௌரிவருக
பரமசுந் தரிவருக வுரககங் கணிவருக
பகருமுக் கண்ணிவருக
பரவுமுத் தமிவருக சயிலபுத் திரிவருக்
புரிமளக் குழலிவருக

வரமுதவு பரைவருக சுருதிபுக ழுமைவருக
மகிடசங் காரிவருக
வடிவழகி வருகவடி யவர்கடுதி நிதிவருக
மதுரையா ளரசிவருக
திரள்கலைவல் லவிவருக சமரபயி ரவிவருக
சிங்கவா கனிவருகவே
சீதவன மாலிபுகழ் வேதவன நாதர்மகிழ்
திரிபுராம் பிகைவருகவே. (4)

492. கயங்கொண்ட திசையெட்டு மூன்றுலக முந்தனது
கட்டளைக் குள்ளடங்கக்
கதிர்செய்மணி முடிவேய்ந்து சிறுவிதி யெனத்திகழ்
கவின்பெயர் படைத்ததக்கன்
நயங்கொண்ட வருள்பரா சத்தியுனை மதியாத
நவையிருள் மனத்தெழுதலால்
நாளுமெதி ரெவருமில ரெனுமாண வங்கொண்டு
ஞானமூர்த் தியைவெறுத்துப்
பயங்கொண்ட சங்கேந்தி யயனாதி யோர்க்கவிர்ப்
பாகம்பகுப் பனென்றுட்
பரிவினொடு புரிமகமு மவனு மத்தேவரும்
படருறச் செருமலைந்து
செயங்கொண்ட வீரபத் திரனையருள் கண்ணுதற்
செல்வியெனு முமைவருகவே
சீதவன மாலிபுகழ் வேதவன நாதர்மகிழ்
திரிபுராம் பிகைவருகவே. (5)

வேறு

493. வண்ண மிகுபூங் கதலிகளும்
வாசம் வீசும் மலர்த்திரளும்
மதுரந் தருதே மாவினமும்
வளர்தீஞ் சுவையா லைக்கரும்புந்
திண்ணம் பெறுதெங் கின்றொகையுஞ்
செழுங்கொத் திலகி யுயர்கமுகுஞ்
சிறைவண் டுலவு மலர்க்காவுந்
தேனார் செந்தா மரைத்தடமு
மெண்ண முறுசெஞ் சாலிகளு
மெழின்முத் துயிர்க்குஞ் சங்குகளு
மிரைதேர் குருகு மனக்குழுவு
மெங்கும் நிறைந்து பெருவளங்கொள்

தண்ணம் பழனந் திகழ்புதுவைத்
தாயே வருக வருகவே
தவத்தோர் போற்றுந் திரிபுரசுந்
தரியே வருக வருகவே. (6)

494. குலவு செழுங்குங் குமமிளகு
கோட்ட மகிறக் கோலமுதற்
கூறுமலையிற் படுபொருளுங்
கொழுந்தே னவி மயிற்பீலி
யிலகு மிருலி யரக்காதி
யியங்குங் கானி லுறுபொருளும்
யானை பித்தன் கருங்குரங்கோ
டினைறகண் ணுடி நகர்ப்பொருளும்
பலனெண் வாழை செந்நெல்சிறு
பயறிக் கிளநீர் முதனட்டிற்
படுநற் பொருளுஞ் சங்குப்பு
பவள மொடுஒக் கொலைமுத்தார்
சலதிப் பொருளு நிறைபுதுவைத்
தாயே வருக வருகவே
தவத்தோர் போற்றுந் திரிபுரசுந்
தரியே வருக வருகவே. (7)

495. நாளு கலைவல் லோர்கணித
நாடிப் புகழுந் துரந்தரியே
நகுமா மணிப்பஃ றலையநந்த
னுக மிலங்கு கங்கணியே
மேனாட் டமர ராதிபதி
மெச்சிப் பணியுஞ் சங்கரியே
வேதா கமங்க டேடரிய
மென்சொற் குதலை யஞ்சுகமே
தேனு ரளகத் தரம்பையர்கள்
சிந்தித் துவக்கு மங்கலையே
தேவ தேவ னிடப்பாகம்
செழித்து வாழு மம்பிகையே
தானு பரணர் மிகும்புதுவைத்
தாயே வருக வருகவே
தவத்தோர் போற்றுந் திரிபுரசுந்
தரியே வருக வருகவே, (8)

வேறு

496. சதுமு கன்றிரு மகனி தம்பணி
தலைவி யந்தரி வருகவே
தமிய னெஞ்சுறு துயர்க ளைந்தருள்
தருது ரந்தரி வருகவே
பதும மென்பத நினையு மன்பர்கள்
பவப யங்கரி வருகவே
பகர ருஞ்சிறு முறுவல் கொண்டடு
பகைவெல் சங்கரி வருகவே
மதுமி குந்திடு மலர்ந றுந்தொடை
வனைய லங்கரி வருகவே
மகர மொண்கடல் விடமி லங்கிய
மணிகொள் கந்தரி வருகவே
பொதுவி லிங்கித முடன டம்புரி
புனித சுந்தரி வருகவே
புதுவை யம்பதி நிலைபெ றுந்திரி
புரச வுந்தரி வருகவே. (9)

497. பருவ மங்குல்பெய் துலக மின்புறு
பயிர்த ழைந்திட வருகவே
பணியு மென்றனை யிடர்செய் வன்பிணி
பலவு மங்கிட வருகவே
மருவ ருந்தவ முனிவ ரந்தணர்
மகிமை தங்கிட வருகவே
மதிமி குங்கவி வலர்சொல் செந்தமிழ்
வளநி றைந்திட வருகவே
உருகு மன்பொடு பரவு தொண்டர்க
ளுளமு வந்திட வருகவே
யுலவு மன்பதை வறுமை கொண்டுழ
லுறுகண் ணைந்திட வருகவே
பொருநர் சந்தத முறைந லங்கொடு
புவிபு ரந்திட வருகவே
புதுவை யம்பதி நிலைபெ றுந்திரி
புரச வுந்தரி வருகவே. (10)

# அம்புலிப் பருவம்

(சாமம்)

498. தங்கமக மேருவெனு மொப்பற்ற மலைதனைச்
சந்ததமும் வலங்கொள்வைநீ
தையலிவ ளம்மலையை முப்புர மழித்தநாட்
டனுவென வலங்கொண்டனள்
துங்கமிகு திருநீ றிலங்குகட வுட்கொளி
துளங்கிடக் கண்ணுயினை
தோகையிவ ளக்கடவு ளைப்பிரிவி லாமலெழில்
தோன்றிடக் கண்ணுயினள்
மங்கல முறுந்தடத் தளிபிசைகொ ணறைபெருகு
வனசம் வெறுத்திடுவைநீ
மங்கையிவண் மெய்யன்பி லாதமூ டர்களிதைய
வனசம் வெறுத்திடுவள்காண்
அங்கணுல கருளுமையு நீயுமிக ராதலா
லம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (1)

499. இயமமுத லட்டாங்க யோகத்தி னிலைமைபெறு
மிருடியத் திரிதன்மகன்நீ
யிவளுமோ விண்ணள வுயர்ந்துமேம் பாடுபெறு
மிமையவத் திரிதன்மகளாம்
வயமிகுங் கதிகொள்பைம் புரவியேழ் பூண்டதேர்
வாளரிக் குற்றதுணைநீ
வனிதையிவ ளிரணிய னுரத்தைப் பிளக்குமுகிர்
வாளரிக் குற்றதுணையாம்
கயமருவி யிதழ்முறுக் கவிழாம்ப லுக்குநீ
காதலன் பாரதத்தைக்
கனகமலை யிற்பொறித் திடுமாம்ப லுக்கிவள்
காதலன் யாமதிக்கி
லயர்விலுறை யொப்புமையின் வருகவென வழைத்தன
ளம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (2)

500. நிறைமதி யெனப்பெயர் படைத்தனை பெருங்கருணை
நிறைமதி படைத்தனளிவள்
நீயாதி சடிலமீ துலவுவை யிவள்வேத
நீள்சடில மீதுலவுவாள்
பொறையின்மே லாவைநீ யடியர்தம் பிழையெனும்
பொறையின்மே லாகுவளிவள்
புலவனைத் தந்தைநீ கலைகள்பல வுணர்கின்ற
புலவனைத் தந்தனளிவள்
குறைவிலா நுந்தமக் குள்ளசெய னுடிற்
குணங்குறிநீ காத்திடுதலாற்
கூடிவிளை யாடநல மாமினிச் சொல்வதென்
கோகனக மலரோன்பணிந்
தறைதுதிகொள் நூபுரப் பொற்பதச் செல்வியுட
னம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (3)

(பேதம்)

501. கதிரவன் றனதுவெயின் முனமொளி மழுங்கும்வெண்
கலைதரித் தனையாயிரங்
கதிரவர்க டம்மினு மிலங்குமா ணிக்கமே
கலைதரித் தனளிவளுமே
விதியையருண் மாலுறங் குஞ்சயன மானபால்
வெள்ளத்துள் நீயுதித்தாய்
மெய்ஞ்ஞானி யர்க்குவீ டுதவுஞ் சிவாநந்த
வெள்ளத் துதித்தனளிவள்
சதிமுதல் மூவொன்ப தெனுமரிவை யர்க்கினிய
தலைவன்நீ யாமவர்தொழுஞ்
சலசநா யகிமுதற் றெய்வமட வார்க்கெலாந்
தலைவியிவ ளாமதிக்கி
லதிகமா மிவளுனக் காதலான் மகிமையுட
னம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (4)

502. மழைத்துளி யுகுத்தார்த் தகன்றவான் மீதுலவு
மங்குலி னெடுங்குழன்மெய்

மங்கையிவ டன்பசிய மெய்யொளியி னற்கரிய
மங்குலை யொடுங்கவைத்தாள்
தழைத்திடு கரும்பேந்து முருவிலா னுக்குநீ
சத்திர மெனப்பொலிந்தாய்
சத்தியிவ டானுருப் பெறுமுயிர்க ளயிலன்ன
சத்திர மனந்தம்வைத்தாள்
பிழைத்திடற் கெளியவிட வாயரவி னுக்குளம்
பேதுற வெருண்டோடுவை
பேரரவை யணியெனப் பூண்டன ளிவட்குநீ
பேதமா யினுமன்பின
லழைத்தன ளிளம்பொற் பசுந்தோகை யாதலா
லம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (5)

503. முன்னகைத் திகலரு ரட்டநா ளிறைவனுன்
முறிபட்ட தேர்ச்சில்லிநீ
மூடிகப் பாகனிடு சாபமா ருதுகூன்
முதுகுற்ற கயரோகிநீ
பன்னகக் கோள்கொடிய விடவாயி னுலுண்டு
பார்த்துமிழ்ந் திடுமெச்சில்நீ
பாகீ ரதிச்சக் களத்திதலை வாசற்
பரிந்துறைகு ருத்துரோகிநீ
மின்னனுர் வீதியிற் கூடியெரு விட்டெறிய
மேவுசிறு மதியானநீ
மேம்பா டிலாதவுனைப் பொருளா யழைக்குமிவள்
மேன்மைசொல வரிதாதலா
லன்னவயல் சூழ்புதுவை வருபரா சத்தியுட
னம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (6)

(தானம்)

504. வானுடர் பதிதவ முயன்றுகௌ தமர்சாப
மாற்றிவே தம்பெற்றது
மௌனயோ கம்புரிந் தந்தரங் கப்பூசை
மலரயன் றுன்பெற்றது
மேனு ளுருத்திராக் கம்பூண்டு நணுகுற்ற
மேதாதி கதிபெற்றது

மேவிரா மன்சிவார்ச் சனைசெய்து பாசுபத
விசிகநண் பொடுபெற்றதுங்
கோனுன வந்தகா சுரனங்கி தேவலன்
கூறுமுப்புர ராதியோர்
குறைவில்சீர் பெற்றதுவு மித்தலத் ததேகீ
குறித்தணுகி லுன்குறைதவிர்ந்
தானுத செல்வங் களிப்போடு பெற்றுயர்வை
யம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (7)

505. விடங்கொதிக் குந்துளை யெயிற்றுவா ளரவம்
விழுங்காம லொருமையுற்று
மெய்ப்பரன் சடைமீது கூடிவிளை யாடிட
விரும்பியே யுனைவைத்தனள்
இடங்கொதிக் குந்தக்கன் வேள்வியிற் காலினுற்
றேய்ப்புண் டழிந்தவுன்னைச்
செங்கதிர்க் கெதிராக வெண்கதி ரெனச்சொலச்
சேணிடை விளங்கவைத்தாள்
மடங்கொதிக் குந்தகை யிராவணன் றனதூருள்
வரவஞ்சி யகலுமுன்னை
மாயவ னெனுந்தமைய னலங் கிலங்கைதனின்
மானமொடு வரவைத்தன
ளடங்கொதிக் கும்புத்தி விட்டடை வதேநன்மை
யம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (8)

(தண்டம்)

506. நவமேவு கருணையுடன் வாவென் றழைத்திடவும்
நணுகாதிருத் தல்கண்டால்
நம்மன்னைக் கும்பகைசெய் தனையென்று வேழமுக
நாதன்முன மிட்டசாபந்
தவிரா திருக்கமே லுஞ்சினந் தனனென்ன
தான்செய்வ னோகாலினுற்
றக்கன்யா கத்துனைத் தேய்த்தவன் சீறிற்
றடுப்பவர்கள் யாவர்நீயுற்

பவமாகும் வேலைதனில் வேலைவிட் டோன்கடும்
பகைகொண் டுறுக்கிலண்ட
பகிரண்ட மதனினும் பாதுகாப் பவரில்லை
பல்விதத் திலுமுன்றனக்
கவமானம் வருமாகி லெவருனை மதிப்பர்கா
ணம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (9)

507. நம்பியிவள் பக்கநீ வாரா திருப்பையேல்
நமன்வீழ முனமுதைத்த
நளினத் திருப்பாத முண்டுவே ளைக்காய்ந்த
நயனமொன் றுண்டுநாளும்
மும்பருக் குத்துன்பம் வருவித்த முப்புர
மொருங்கெரிசெய் நகையுண்டுமா
லுந்தியி லுதித்தவன் மகுடச் சிரங்கொய்த
வுகிருண் டிலங்கையாண்ட
கம்பத்தன் மலைவெடிப் பிற்கிடந் தலறக்
கனன்றான் று விரலுண்டடுங்
களிறுண்டு புலியுண்டு சிங்கமுண் டழல்விடக்
கட்செவியு முண்டுபகைகொண்
டம்பரத் தினிலுனைப் பம்பரம் காட்டுமு
னம்புலீ யாடவாவே
யரனிடங் குலவுதிரி புரசவுந் தரியுட
னம்புலீ யாடவாவே. (10)

---

## சிற்றில் பருவம்

---

508. பொன்புற மிலங்குநெடு வட்டவா ளக்குன்று
புரிசையா கத்திளைந்தப்
புறக்கடற் கோட்டைசூ ழுகழியாத் திசைகள்கோ
புரநீடு வாயிலாக
மன்புகழ்கொ ளட்டகுல கிரிகள்கொத் தளமதா
மாதிரத் தலைவருடனே

மருவுதெய் வச்சேனை யம்மதிற் பொறியாக
மாமேரு கொடிமரமதா
வண்புதிக ழாகாய கங்கைவெண் கொடியா
வகன்றபல தீவுமணியா
வாருயிர்க் குடியேறி யிகபர சுகங்கடமை
யறநெறிப் படியூட்டியாள்
தென்புதுவை வேதபுரி நாதர்வா மத்தரசி
சிறுவீடு கட்டியருளே
சித்திதரு திரிபுர சவுந்தரா நந்தியே
சிறுவீடு கட்டியருளே. (1)

509. முந்தெழுத் தாயபொற் சேற்றினன் மொழியாக்க
முற்றநற் கல்லியற்றி
மூப்புணர் பைச்சுவ ரெழுப்பிப் பெயர்ச்சொல்வினை
மொழிகளைத் தூணிறுத்தி
யந்தமுள் சாரியைப் போதிகைய தாக்கியுரு
பவையுத்தி ரம்பாய்ச்சிநே
ராகுமெச் சங்கொடுங் கைவைத்து மேற்கருத்
தாவைவளை யாபரப்பிச்
சந்தமுற் றுணிதைத் தைம்பாலோ டிட்டியற்
சார்ந்தகோ ளெட்டுமறையாத்
தடுத்துமுத் தகமுதல் சித்தரித் திருபொருட்
டகைவிளக் கிட்டியற்றுஞ்
செந்தமி ழிலக்கண மனைக்குள்விளை யாடுமுமை
சிறுவீடு கட்டியருளே
சித்திதரு திரிபுர சவுந்தரா நந்தியே
சிறுவீடு கட்டியருளே. (2)

510. முத்தலைச் சூல்மேந் திப்பொடி யணிந்தோங்கு
மூரிவெள் விடையவர்க்கு
முந்நீர் நிறங்கொண்டு மண்ணுண்டு விண்ணீண்ட
முண்டகக் கண்ணருக்குஞ்
சுத்தவே தத்தலைமை யுற்றோ திமத்திற்
றுலங்கியுல கீன்றவர்க்குந்
தோன்றுமுப் பத்துமுக் கோடிதே வர்கள்பரவு
சுடர்வச்சி ராயுதர்க்கும்
வித்தகமெய்ஞ் ஞானநிறை மோனமா தவருக்கும்
மேலான சித்தருக்கும்

மெய்யன்பு மிகுதொண்ட ருக்குமன மொருமித்த
விதரணர்க ளாதியோர்க்குஞ்
சித்தமகி ழற்புதப் பதவிதந் தருளம்மை
சிறுவீடு கட்டியருளே
சித்திதரு திரிபுர சவுந்தரா நந்தியே
சிறுவீடு கட்டியருளே. (3)

511. ஓவாத பேரண்ட மானதே சிற்றிலா
வுலகமே யுரலதாக
வோங்குபொன் மலையுலைக் கையதாக மன்னுயிர்க
ளுற்றதண் டுலமாகத்
தாவாழு தண்டந் தடாவெள்ள நீரினுலை
சயிலமவிர் கரகத்திசை
தாங்கடுப் பாவுலவை யூதுகுழ லாவடவை
தான்மூட்டு தீயதாகக்
கோவாதி பதவிபல கறிவகையோ டப்பமாக்
கொழுமண மிகச்சமைத்துன்
கொண்க னுக்கற்புதஞ் செய்தவைகள் பண்டுபோற்
குலவவைத் துவகைகூருந்
தேவாதி பன்றொழு திறைஞ்சுபர தேவியே
சிறுவீடு கட்டியருளே
சித்திதரு திரிபுர சவுந்தரா நந்தியே
சிறுவீடு கட்டியருளே. (4)

512. பங்கையச் செல்விவாக் கின்செல்வி பூங்கற்
பகச்செல்வி முதலதெய்வப்
பாங்கியர்க ளொடுகூடி வண்டலாட் டயர்போது
பரமேச னைப்புகழ்ந்து
மங்கல மிகுந்திடுஞ் சுபசோ பனப்பாடன்
மனமுவப் பொடுபாடியு
மாங்குயி லினங்கண்மரு ளுற்றிடக் கின்னரியின்
மன்னிசை வடித்தொலித்துந்
துங்கமுறு பஞ்சரப் பூவைகிளி நாணத்
துலங்கின் சொலாற்கொஞ்சியுந்
தோலாத பரிகாச வகைபுரிந் துந்தூய
சுவைநறுந் தேன்றுளிக்குஞ்
செங்குமுத வாயினற் குதலைமொழி யாடுமுமை
சிறுவீடு கட்டியருளே

சித்திதரு திரிபுர சவுந்தரா நந்தியே
சிறுவீடு கட்டியருளே. (5)

வேறு

513. அம்பைப் பொருதஞ் சனமணி வரிவிழி
யருளொ டுவந்தாட
வாலி தரும்புயல் வெளிறக் கருமைகொ
ளளக மசைந்தாட
வம்பைக் கிழிதந் திறுமாந் தொளிரிள
வனமுலை யணியாட
வனச மபயமெய் தத்திகழ் செங்கை
மணிப்பைந் தொடியாட
வும்பர் பயிலர மகளிர்க ளுக
வுலோக மடந்தையரோ
டுலவிக் குலவித் திசைதிசை தோறு
மூவப்பி னெறிந்தெழிலார்
செம்பொற் பந்தினி தாடு மனோன்மணி
சிற்றி லிழைத்தருளே
செல்வப் புதுவைத் திரிபுர சுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (6)

514. எழுவகை யுற்பவ மெண்பா னுனூ
ருயிர மெனுமலகா
ரின்னுயி ரானபல் பாவை களுக்கெழி
லிளமை வளர்ச்சிகுணம்
பழுதகல் கல்வி களிப்புச் செல்வம்
பரிவொடு சுகமுதலப்
பாலித் துண்ணின் றூட்டி நடத்தும்
பார்வதி யேவானுர்
முழுமதி யென்விரி கதிரிள நிலவுமிழ்
முத்தின் பாவைநிற
முதிர்மர கதமணி யுறுமைம் பாவை
முழங்கெரி யெனவொள்ளிர்செய்
செழுமணி திகழ்பொற் பாவை விளங்கச்
சிற்றி லிழைத்தருளே
செல்வப் புதுவைத் திரிபுர சுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (7)

515. குலமணி திகழ்பொற் சுட்டியு மிட்ட
குதம்பையு நிகுநிகெனக்
கோமே தகமூக் குத்தியும் வயிரக்
கொப்புந் தகதகெனத்
தொலைவற வொளிர்மா ணிக்கப் பணியுந்
தொடியுங் கலகலெனச்
சோதிகொள் பொற்புறு மேகலை யும்பொற்
றாசும் பளபளென
விலையின் மணித்தண் டையுநூ புரமும்
விரவிக் கிணுகிணென
மென்மொழி யுங்குர லின்னிசை யுங்கவின்
மேவிக் குலுகுலெனச்
சிலதிய ருடனம் மனையா டும்பரை
சிற்றி லிழைத்தருளே
செல்வப் புதுவைத் திரிபுர சுந்தரி
சிற்றி லிழைத்தருளே. (8)

516. அளிகுல வுங்கட நதிபாய் கவுளா
ரத்திமுகற் கனையே
யனுதின மன்பர்க ளுளமீ துறைநீ
டற்புதமெய்க் கனியே
வெளிபவ னந்தழ னிலநீர் வடிவாம்
வித்தகி தற்பரையே
விரைகம ழைந்தரு நிழல்வா ழிமையோர்
மெச்சு புகழ்க்கிளியே
யொளிகிளர் சிந்துர வெழில்சேர் நுதலா
ரொப்பறு கொற்றவையே
யுயர்பர மன்றனை யகலா தருள்கூ
ருத்தமி பொற்கொடியே
தெளிதமி ழொண்புது வையின்மே வுமையே
சிற்றி லிழைத்தருளே
திரிபுர சுந்தரி யெனுமா தரியே
சிற்றி லிழைத்தருளே. (9)

517. திருவல வன்பரி வுறுசோ தரியே
சிற்றி லிழைத்தருளே
திரிபுவ னந்துதி செயுநா ரணியே
சிற்றி லிழைத்தருளே

திருவல ரின்பத யுகநா யகியே
சிற்றி லிழைத்தருளே
திரிபுடை வஞ்சரு ளணுகா மயிலே
சிற்றி லிழைத்தருளே
திருவர மன்பொடு தருகா ரணியே
சிற்றி லிழைத்தருளே
திரிபுரை சங்கரி சிவையா மளையே
சிற்றி லிழைத்தருளே
திருவரு டந்தெளி யணையா ளுமையே
சிற்றி லிழைத்தருளே
திரிபுர சுந்தரி யெனுமா தரியே
சிற்றி லிழைத்தருளே. (10)

---

## நீ ர ா ட ற் ப ரு வ ம்

---

518. மணமிகு மலர்தா தளைந்துதே னுண்டளிகள்
மகிழ்நறும் பூந்தார்க்குழல்
வரைநின் றுயர்ந்துவா னெறிசென்று முந்நீரை
வாரியுணு மேகமெனவே
குணமுற்று மணிக்கச்சு வீக்கியா ரருளமுது
கொண்டோங்கி வளரலர்முலை
கொற்றத் துழாய்மௌலி பண்டு பாற்கடலிற்
குறித்திட்ட சயிலமெனவே
வணரிருங் கன்னற் சிலைப்புருவ மைவிழி
வளைச்செவி பிறங்குவதனம்
வண்மைதிகழ் விண்மீன் கணஞ்சூழ் வுலவுமுயல்
மறுவற்ற மதியமெனவே
புணரிமிக ரப்பெரு வராகநதி குலவநீ
புதியநீ ராடியருளே
புகழ்மிகுங் கௌரிதிரி புரசவுந் தரிவிமலி
புதியநீ ராடியருளே. (1)

519. செங்கய லொடுங்கண்கள் சைவல மொடுங்கூந்தல்
சேதாம்பன் மலரொடும்வாய்
திருமுத் தொடுந்தந்தம் வள்ளையொடு வார்காது
செம்பவள மொடுமெல்லிதழ்ச்
சங்கமொடு மிடறுதண் குமிழியொடு மலர்முலை
தாவியகெளிற் றொடும்விரல்
சலச்சுழி யொடுங்கொப்புள் கொடியோடு மருங்குநீள்
சர்ப்பபட மொடுநிதம்ப
மங்கலவ னொடுமுழந் தாளுலவு சினைவரா
லதனொடுந் திரள்கணைக்கா
லாமையொடு நன்புறங் கால்கமல மலரொடு
மலத்தகப் பதமமர்செயப்
பொங்குதெண் டிரையேறி வராகமா நதிமருவு
புதியநீ ராடியருளே
புகழ்மிகுங் கௌரிதிரி புரசவுந் தரிநிமலி
புதியநீ ராடியருளே. (2)

520. இலங்குமர கதமணிச் சோதியிற் பசியநின்
னெழிலுருச் சாயலைக்கண்
டேமுற்று வாயரவ மாறுது தோகைமயி
லிளமரச் சோலையடையக்
குலங்கொண்டு சூழர மடந்தையரோ டளவளாய்க்
கூறுமொழி மழலைகண்டு
குயில்பசுங் கிளிபூவை நாணிநீள் வாழைக்
கொழுங்குருத் திடையொளிக்க
நலங்கிளர் சிலம்புதண் டைகள்கொஞ்சி டுந்தெய்வ
நளினத்திருத் தாளின்மென்
னடைகண்டு வெட்கிமெய் வெறிற்றன்னம் பேட்டோடு
நடுங்கிப் பரந்துபாறப்
பொலங்குவட் டருவிமுத் தெறிதிரை வராகநதி
புதியநீ ராடியருளே
புகழ்மிகுங் கௌரிதிரி புரசவுந் தரிநிமலி
புதியநீ ராடியருளே. (3)

521. ஏந்திதழ் முறுக்கவிழ்ந் தூறுதேன் பில்குவா
ரிசமென்னு மாமுகமலர்ந்

திளமிலாக் கதிர்கண் டுவந்திடு கருங்குவளை
யெனுமைக்க ணரநோக்கி
நீந்துதற் கரியபுன லிடையுலவு பல்பறவை
நீளோதை யாமின்சொலால்
நித்தியகல் லியாணபர தேவியே வருகவென
நேயமுட னேயுபசரித்
தாந்துதிகள் செய்துவெண் ணித்திலச் சங்கங்க
ளார்ந்தெழுந் தெறிதிரையெனு
மம்பொன் மணித்தொடிக் காந்தட் கரங்கொண்
டழைத்துறவு புரியுமெழிலார்
பூந்துறை குலாவிய வராகமா நதிமேவு
புதியநீ ராடியருளே
புகழ்மிகுங் கௌரிதிரி புரசவுந் தரிநிமலி
புதியநீ ராடியருளே. (4)

522. காஞ்சனத் தொளியோடு பிறங்குமா ணிக்கக்
கலாபம்விரி சிகைபருமமின்
காஞ்சிமா மேகலா பரணங்க ளம்பொற்
கலிங்கமீ தரவஞ்செய
வாஞ்சர மணிப்பணிகள் கொங்கைக் குவட்டிழியு
மருவியி னசைந்தொலிக்க
வளவிட் டுரைத்திடற் கொவ்வா துயர்ந்தமாத்
தாடகத் தொடிகளார்ப்ப
நாஞ்சொலிப் பணிதெய்வ மணம்வீசு தேனொழுகு
நளினத் திருப்பதத்தில்
நன்கமர்ந் தெழில்கொள்சில் லரிவிளங் குந்தண்டை
நவமணிக் கிண்கிணியுடன்
பூஞ்சிலம் போலிட வராகமா நதிபெருகு
புதியநீ ராடியருளே
புகழ்மிகுங் கௌரிதிரி புரசவுந் தரிநிமலி
புதியநீ ராடியருளே. (5)

வேறு

523. கலைபல வும்பரி வுளர்மகிழ் பெறவருள்
கலைமி னெனுஞ்சகியும்
கனசெல் வம்பழ வடியார்க் குதவுங்
கமலையெனும் பெயர்கொள்
சிலைநுதல் குமுதச் செவ்விதழ் தெய்வச்
சேடியு மணிமகுடத்

தேவர்க ளதிபதி மேவிய பொற்புறு
சீரயி ராணியெனு
நிலைபெறு சிலதியு மரமக ளிர்களெனு
நிறைமிகு மிகுலையரும்
நீதி யுடன்பொற் பாதந் தொழுதுபின்
நின்றிரு புடைசூழ
வலையெறி பெண்ணை நதித்துறை யினிதா
யாடுக புதுநீரே
யாரணி சிவபரி பூரணி திரிபுரை
யாடுக புதுநீரே. (6)

524. குமுத விதழ்க்கரு மைக்க ணரம்பையர்
கோடா கோடியர்பொன்
கொல்ல னியற்று மணிச்சி விறிக்கைக்
கொண்டொரு வர்க்கொருவர்
கமழ்தரு மதுவுமிழ் மலரோ தியினுங்
கலைமதி வதனத்துங்
காமுறு முத்து வடக்கொங் கையினுங்
கவினிடை யுடைமீது
மிமையள வுஞ்சலி யாதெதி ரெதிர்நின்
றிமிழ்நறு நீர்தூவ
வெய்த்துச் சிலர்பின் னிட்டோ டுதல்கண்
டிளநகை தருமயிலே
யமிழ்த மிதெனவரு பெண்ணை நதித்துறை
யாடுக புதுநீரே
யாரணி சிவபரி பூரணி திரிபுரை
யாடுக புதுநீரே. (7)

525. ஈர மலர்க்கா விற்பந் தாடியு
மின்னிசை பாடியுநல்
லெழில்கொள் மணிச்செய் குன்றுக டோறு
மிவர்ந்துல வியுமிக்க
சீரமை பொற்பா வைக்கு மணங்கள்
செழிப்புட னேசெய்துந்
தேமலர் கொய்துங் குரவை புரிந்துஞ்
சேடிய ரொடுகூடி
வார முடன்பொன் னம்மனை யாடியும்
வரிவளைக் கைக்கொட்டி

மகிழ்வொடு கொம்மை யடித்தும் நடித்தும்
வண்டல்செய் தருளுமையே
யார நிறைந்திடு பெண்ணை நதித்துறை
யாடுக புதுநீரே
யாரணி சிவபரி பூரணி திரிபுரை
யாடுக புதுநீரே. (8)

526. குவடுயர் மந்தர மலைவி லுவந்தவர்
கொடியா மேறுடையார்
கொழுமண மொன்றிய விதழி புனைந்தவர்
குளிர்நீ ரார்சடையார்
தவமிகு மந்தண ரிதய மகிழ்ந்தவர்
தமியே னுடரனார்
சபையி னடம்பல புரியரு ளங்கணர்
சமமீ ருதியிலார்
பவள நிறங்கிளர் வடிவுறு புங்கவர்
பணியார் பாலனுகார்
பகைஞர் புரம்பொடி படநகு சங்கரர்
பரிவார் காதலியே
புவன துரந்தரி மணிதிகழ் கந்தரி
புதுநீ ராடுகவே
புதுவை நிரந்தரி திரிபுர சுந்தரி
புதுநீ ராடுகவே. (9)

527. புலமை மிகுங்கலை வலர்புக ழம்பிகை
புதுநீ ராடுகவே
பொதிய முவந்திடு முனிபர வும்பரை
புதுநீ ராடுகவே
புலவு கமழ்ந்தொளி ரயிலவ னன்பனை
புதுநீ ராடுகவே
பொடியணி சங்கர னருகில் விளங்குமை
புதுநீ ராடுகவே
புலனழி சண்டனை யுதைதரு சங்கரி
புதுநீ ராடுகவே
புதுமது வுண்டளி யிசைபயில் குந்தளி
புதுநீ ராடுகவே
புலவர் வணங்கிய கணபண கங்கணி
புதுநீ ராடுகவே

புதுவை நிரந்தரி திரிபுர சுந்தரி
புதுநீ ராடுகவே. (10)

---

## பொன்னூசற் பருவம்

---

528. ஓங்குவே தாந்தசித் தாந்தமெனு நன்மாத்
துயர்ந்தபொற் றம்பங்களா
வோதரிய நாதாந்த மெனுமொண் செழுங்கிரண
மொளிர்வயிர விட்டமாகப்
பாங்குபெறு மெய்ஞ்ஞான முயர்வெண் ணிலாக்கதிர்
பாய்முத்து வடமதாகப் [கள்
பரவுதொண் டர்களிதைய நளினமலர் செஞ்சுடர்ப்
பதுமரா கப்பலகையா
வாங்கலை மகட்சேடி யருகிருந் தின்னிசைக
ளார்ந்தநின் புகழ்படிக்க
வம்புயத் திலகிலக் குமியெண் மருங்கையி
லட்டமங் கலமேந்திடப்
பூங்குழற் பசியமெய்த் திரிபுரா நந்தியே
பொன்னூச லாடியருளே
புதுவைவே தபுரீச ரிடமுலாவு பவானி
பொன்னூச லாடியருளே. (1)

529. கற்பகப் பூங்கா வனத்துநறு நீழலிற்
கடவுளர் வணங்கியேத்தக்
கனகா தனத்துவீற் றிடுவேந்த னுயிரங்
கண்மலர் களித்துநோக்க
நற்பதும மாமலர்ப் பீடத் திருந்துலகை
நல்குந் திறத்தையுடையா
னுன்குவத னத்துவா யானுமெழு தாமறை
நவின்றுதுதி செய்துநிற்க
வற்புதம் பெறுமுயிர்கள் யாவையும் பாதுகாத்
தாழியிற் பள்ளிகொண்டோ
னனந்த மாகியா டுங்குடக் கூத்திநெடு
முகமிக மலர்ந்துவக்கப்

பொற்பிலகு தெய்வப் பொலன்றூவி யன்னமே
பொன்னூச லாடியருளே
புதுவைவே தபுரீச ரிடமுலாவு பவானி
பொன்னூச லாடியருளே. (2)

530. மட்டுலவு நறுமலர்த் தாமரைச் சிற்றடியின்
மன்னுகிண் கிணியசையவே
மதுரச் செழுங்கரும் பனையதோள் வலையமொடு
வச்சிரத் தொடியசையவே
இட்டிடைச் செம்பொற் படர்த்தோடு மணிச்சுட
ரிமைக்குமே கலையசையவே
யிளவெயி லெறித்திடு மணிப்பிறை வடத்தினே
டேகாச மொத்தசையவே
கட்டுறு மணிக்கச் சிலங்கு தனமீதுதண்
கதிர்மூத்து வடமசையவே
கவினெழுகு செவியிலணி மாமணித் தொங்கலொடு
கமழ்குழற் றொடையசையவே
பொட்டிலகு சிலைநுதற் சுட்டிமுன் னசையவே
பொன்னூச லாடியருளே
புதுவைவே தபுரீச ரிடமுலாவு பவானி
பொன்னூச லாடியருளே. (3)

531. கயலார் நறுஞ்சர வணப்பொய்கை தனில்வந்து
கார்த்திகைப் பாலருந்திக்
கருதுமுப் பத்துமுக் கோடிதெய் வச்சேனை
காவல னெனப்பொலிந்து
வயலார் தடங்கமல முறைநான் முகன்றன்னை
வன்சிறைக் குகையிலிட்டு
மாமேரு விற்கையை யன்செவி தனக்கினிய
மந்திரமுப தேசஞ்செய்து
செயலார் கொடுஞ்சூர பதுமனு தியபகைஞர்
சிதறவேற் படைவிடுத்துச்
செங்கடம் பணிவேய்ந்து மயிலூர்ந்து சேவற்
செயக்கொடி யுயர்த்துவக்கும்
புயலார் மலைக்கிழ வனைப்பெற்ற குமரியே
பொன்னூச லாடியருளே
புதுவைவே தபுரீச ரிடமுலாவு பவானி
பொன்னூச லாடியருளே, (4)

532. மலிவுற்ற செந்தமிழ்ப் பாண்டிநாட் டுயரால
வாயினுஞ் சிரகிரியினும்
வானேங்கு காவையினு மருணை சலத்தினும்
வாரணை சித்தலத்தும்
நலிவுற் றிடாதசீ காழியினு மையாற்று
நவில்சிதா காயத்தினும்
நாகையினு மாரூரி னுங்காஞ்சி தன்னினு
நள்ளாற்று மருதூரினு
மெலிவுற்ற தொண்டரைக் கரையேற்று மூரினும்
வேளூரி னுஞ்சிறந்த
வில்லையம் பதியினுங் காளத்தி தன்னினு
மேவுமற் றுளதலத்தும்
பொலிவுற் றமர்ந்தருளு மொருபெருந் தேவியே
பொன்னூச லாடியருளே
புதுவைவே தபுரீச ரிடமுலாவு பவானி
பொன்னூச லாடியருளே. (5)

வேறு

533. வரையு றுங்கலவ மயிலி னின்றருள்சு
வாமி யாடமிகுசீர்
மருவு முந்துருவி னிபமு கன்றினம
ரூம லாடவினிதா
தரையை யீன்றமுகி லுவண னெண்பிடரி
தாவி யாடவெழிலார்
சதுமு கன்பொருவில் சிறைவி கங்கமிசைச்
சால்பி னுடமகவா
னிரைத ரங்கமெறி கடல்ப யந்தகளி
றேறி யாடவிடைமே
லெவருமஞ் சலிசெய் திடவ ரம்புரியு
மீச னுடமறைநா
லுறைத ரும்புதுவை வருது ரந்தரிபொன்
னூச லாடியருளே
யுளமகிழ்ந் துதிரி புரசு வுந்தரிபொன்
னூச லாடியருளே. (6)

534. அலகி றந்ததவ முனிவர் கண்டுவகை
யாடி யோதுகதியே
யசர முஞ்சரமு மினிது தந்துபுவ
னதி யாயவொளியே

யிலகுவிஞ் ஞையர்க ளனுதி னம்புகழு
மீடிலாத பரையே
யிகல்செ யும்பழைய வினைக ணீங்கவெளி
யேனை யாளுமுமையே
சொலவருஞ் சுருதி முறையி டும்பசிய
சோதி நீடுமணியே
சுபநலம் பெருகு புதுவை யின்கண்வரு
சூலி வாமநிதியே
யுலகிறைஞ் சுபய பதநி ரந்தரிபொன்
னூச லாடியருளே
யுளமகிழ்ந் துதிரி புரச வுந்தரிபொன்
னூச லாடியருளே. (7)

535. குழைபொ லந்தருவி னுலவ ரம்பையர்கள்
கூடுறு ஞாதநலமே
குலவும்விஞ் ஞையர்த மெழில்கொ ளங்கனையர்
கோதி லுகவுலகார்
மழையி னுங்கரிய குழன்ம டந்தையர்கள்
வாரி சூழுநிலமென்
மருவி யென்றுநிறை பெருகு மங்கையர்கள்
வாழி வாழியெனவே
விழையு மன்பினெடு துதிசெ யுங்கௌரி
வீறு சேரிதழிபால்
விதுவொ டும்பனக நதிமி லைந்தமுடி
வேணி மேவுமிறையோ
னுழையி லங்குமர கதமெய் யம்பிகைபொன்
னூசலாடி யருளே
யுளமகிழ்ந் துதிரி புரசவுந் தரிபொன்
னூசலாடி யருளே. (8)

வேறு

536. நிருபர்க ளனுதின மனுமுறை யின்படி
நீடிரை மண்ணுள
நிலைபுயன் மதிதொறு மினிது பொழிந்திட
நீர்மலி மும்மாரி
யிருநிதி நிறைபுனல் வயல்வள மெங்கணு
மேருற வென்நாளு
மிருடிக டவநிலை பெறமிகு தொண்டர்க
ளேணுற மெய்ஞ்ஞான

மருவிய கலைவலர் கவிதை புனைந்திட
மாமுதிர் சொன்னடி
மகிதல மதிலக முறுநிறை பொங்கிட
வாழ்மயி லன்னார்க
ளருமறை புகழ்புது வையினுறை யம்பிகை
யாடுக பொன்னூசல்
அரகர சிவசிவ திரிபுர சுந்தரி
யாடுக பொன்னூசல். (9)

537. அமுதினு முதிர்சுவை தருமொழி மங்கலை
யாடுக பொன்னூச
லடியவ ரிடர்கெட வரமுத வும்பரை
யாடுக பொன்னூச
லமுதர்கள் பரவிய பதமல ரம்பிகை
யாடுக பொன்னூசல்
லபய வரதகர தலமுறு சங்கரி
யாடுக பொன்னூச
லமலை விமலைசிவை கௌரி யலங்கரி
யாடுக பொன்னூச
லருள்செய் தெனதுதுதி மகிழு நிரந்தரி
யாடுக பொன்னூச
லமல னெடுவிடையி னிலகு துரந்தரி
யாடுக பொன்னூச
லரகர சிவசிவ திரிபுர சுந்தரி
யாடுக பொன்னூசல். (10)

(திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ் முற்றிற்று).

# புதுவை,
# திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ்க் குறிப்புரை

---

### சிறப்புப்பாயிரம்

**426.** முதல்விக்கு + உவப்புற என்க. கலைஞர், பிரபந்தத்தை நப் பெருந்தகைத் தமிழென்பர் இஃது பிள்ளைத் தமிழென்பரலர் எனக் கூட்டுக. (1)

**427.** உண்ணுது சுரந்த பெருந்தனத்து அமுதம் - குழந்தை உண்ணுமலே பெருகிய பெருமை பொருந்திய முலைப்பாலமிர்தம்; ஒருவன் - திருஞான சம்பந்தப் பெருமான்; தமிழ் - தேவாரம்; தனத்தமுதம் கொடுத்துத் தமிழமுதம் உண்ணுதலினும் தனத்தமுதம் கொடுக்காமலே தமிழமுதம் உண்பது விருப்பமாதலின் "திரிபுரைக்கு இங்கு எதில் விருப்பம்" என்று கூறிச் சம்பந்தப் பெருமானைக் காட்டி லும் உயர்வாக்கினுர். உலகமக்கள் தன்னிடமிருந்து ஒன்று கொடுத்து அதற்குப் பிரதியாக வேறொன்று பெறுதலினும் யாதொன்றும் கொடா மலே ஒன்று பெறுவதனை மேலாக மதித்து விரும்பிப் பெறுவாராத லால் இங்ஙனம் கூறினர். "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரிது" என்ற குறள் காண்க. கண்ணுன திரிபுரை-கண்போன்று முக்கியமானவளான திரிபுரசுந்தரி; சக்தியே மும் மூர்த்திகளையும் தொழிற்படுத்துகின்றுள் என்னும் தேவிபாகவதக் கருத்துப்படி கூறினுர். "கண்ணிற் சிறந்தவுறுப்பில்லை" என்றுர் பிறரும். (2)

**428.** திரிபதகை - கங்கை; வேணி - சடை; அத்தை - அதனை; அதனை என்பது அத்தை எனக் கொச்சையாகியது. தேவர்களும் அசுரர் களும் திருப்பாற்கடல் கடைந்தபோது சந்திரனை அடை தூணுகவும் மந்தர மலையை மத்தாகவும், வாசுகியைக் கயிருகவும் கொண்டு கடைந்து முதலில் விஷம் பெற்றுப் பின்னரே அமிர்தம் பெற்றனர். அவ்வமிர்தத்தைத் **தேவர்கள்மட்டுமே** அசுரர் பயம் நீங்குவதற்காக **இக்கஷ்கம்** கருதியே திருமாலினுல் வஞ்சனை புரிவித்துச் சாப்பிட்டனர். இருகூட்டத்தாருக்குப் பதில் **முத்துக்குமரன் என்ற இப்புலவர் மட்டுமே** செந்தமிழாகிய பாற்கடலில் புத்தி என்ற தூணைநிறுத்தி,

நாவாகிய மத்தினால், அன்பெனும் கயிறுகொண்டு அப்பாற்கடலைக் கடைந்து முதற்கண்ணே **பிள்ளைத்தமிழ் என்ற அமுதத்தை**யெடுத்துப் பூமியிலுள்ள **மனிதர் எல்லோருக்கும், இவ்வுலகம் மேலுலகம்** ஆகிய இரண்டிடங்களிலும் மகிழ்ச்சியடைய உண்பித்தார் என்பதால் எத்தகைய உயர்வை ஆசிரியர்க்குத் தருகின்றார் என்பதை உணர்க. செந்தமிழ்ப் பாற்கடல், மதியாய தம்பம், நாவின் மத்து, அன்பெனும் பாசம் ஆகியன உருவகங்கள் ; மதித்து - கடைந்து. (3)

**429.** கதலி-வாழை ; எற்கொண்டு-என்னை முதலாகக்கொண்டு ; ஏர் - அழகு ; ஆதிசேடன் இரண்டாயிர நாவு படைத்தவனாதலின் "சேடனாலு மிசையாமல் தலையசைத்தான்" என்றார். மேருவில் கொண்ட பரமன் - சிவபெருமான் ; விற்பனன் - புலவர். (4)

**430.** வெள்ள + சடை + அடவி-கங்கை வெள்ளத்தை அடக்கிய சடையாகிய காடு ; சடை அடவி என உருவகித்தார். குண + ஆலயன் - குணாலயன், வடமொழிப் புணர்ச்சி, தீர்க்கசந்தி, குணத்தையே கோயிலாகக் கொண்டவன் எனப்பொருள். வர + உதயன் - வரோதயன், வரத்தினால் உதித்தவன், வடமொழிப் புணர்ச்சி, குணசந்தி ; கிள்ளைத் திரிபுரசுந்தரி - கிளியைக் கையிலேயுடைய திரிபுரசுந்தரி, கிள்ளை-கிளி, திரிசொல். (5)

**431.** தொடை-யாப்பிலக்கண உறுப்புக்களில் ஒன்று, மோனைத் தொடை, இயைபுத் தொடை, முரண்டொடை முதலியன காண்க; துகள் தீர்மானின் மென்னோக்கியாம் பனுவல் மாது - குற்றம் நீங்கின பெண்மானையொத்த மருண்ட கண் பார்வையையுடையவளான சரசுவதி; அயன் - பிரமன் ; பொன்னோக்கி மகிழ் புதுவை - இலக்குமி கடாட்சத்தால் யாவரும் மகிழ்கின்ற புதுவை நகர் ; பூபன் - தலைவன் ; தன் நோக்கில் - தன் கல்வி நோக்கினால் ; மாது + ஓ - அசைநிலைகள். (6)

**432.** அத்தன் - தலைவன் ; இங்குள்ள சிவபெருமான் பெயர் வேதபுரியீசுவரர் ; முதுமை + அறிஞன், புதுமை + அமுது என்பன ஈறுபோதல் என்ற விதி நோக்கி மூதறிஞன், புத்தமுது என்றாயின. வெள்ளத்தமியேன் - கள்ளமற்ற உள்ளமுடையவனான தனித்த நான்; பெற்றி - தன்மை ; சொல்லுகேன்-சொல் + உ + க் + ஏன், உ-சாரியை, க் - எதிர்கால இடைநிலை. (7)

**433.** சத்துக்குணம் - சத்துவக்குணம், இது முக்குணங்களிலொன்று ; சுத்தக் குலத்தவர் - திரிகரண சுத்தியுள்ள பிராமணர், இது உபலட்சணத்தால் மற்ற குலத்தாரையும் பெறவைத்தது. பாவலர்-

பாட்டுப்பாடுவதில் வல்ல புலவர் ; தேர் முத்துக்குமரன்-வினைத்தொகை; முதற் பிரபந்தம் - முதன்மையாகிய பிரபந்தத்தில் ஒன்றாகிய பிள்ளைத் தமிழ். (8)

434. வித்துக்கு முன் புதுவை - மோட்ச வித்துக்கு முதன் மையில் நிற்கும் புதுவை நகர்; மனை-மனைவி(திரிபுரசுந்தரி); விரிஞ்சன்னி- விரிஞ்சு உன்னி என்பது இங்ஙனமிருக்கலாம் போலும், விரிவை நினைத்து என்று பொருள். வெள்ளத்தமிழர் - கள்ளமில்லா உள்ள முடைய தமிழர் ; தேரும் - ஆராயும். (9)

435. பாவாணர் - பாட்டுக்களால் தங்கள் வாழ்க்கையை நடத்து பவர் - வாழ்நர் என்பதன் மரூஉ வாணர். செலா - செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத்திரிந்து நின்றது. தேக்கரிய- நிறைக்க முடியாத; பரபோதம் - மேலான அறிவு ; பைந்தருவோர் ஐந்து-கற்பகம், பாரிசாதம், மந்தாரம், அரிமந்தாரம், சந்தானம் என்ற ஐந்து மரங்கள் ; குளிகை - ரசவாதஞ் செய்யும் ஓர் கருவி ; முத்துக் குமரன் உரைத்திடும் பிரபந்தம் பாவாணர் செவிகளுக்கு இனிய அமுதாம், புலனை அடக்கும் அடியார்கட்கு நிறைக்க முடியாத ஆனந்த மாம், துறவற நெறிச் செல்லும் ஞானிகட்கு மேலான போதமாம், இல்லறத்தவர்கட்கு கேட்டவற்றை எல்லாந்தரும் கற்பகம் முதலிய தருக்களாம், சிவயோக சித்தர்கட்கு இரசவாதம் செய்யும் குளிகையாம், அற்ப அறிவுடைய புலவர்களின் கர்வத்தை அறுத்தொழிக்கின்ற கூர்மையான வாளாயுதமாம் எனப் பொருள் கொள்க. (10)

436. சதுரர் - திறமைசாலி ; விரிஞ்சன் - பிரமன் ; சேடன் - ஆதிசேடன், இவனைக் கலைகளில் வல்லவன் என்பர். பிரமன், முத்துக் குமரனைப்போல மதுரகவி பாடுகின்ற திறமைசாலி உண்டோவென்று கேட்க ஆதிசேடன் நானே என்று மார் தட்டினான் ; அங்ஙனம் மார் தட்டியும் ஓர் பதமாவது தெரியாமல் மயக்கங்கொண்டு கடலில் வீழ்ந் தான். பிரமன் கோபித்துக் கர்வம் பேசிய நாவை இரண்டாகப் பிளந்து காதினையும் அறுத்து பூமியையும் சுமக்கவைத்தான் என முத்துக் குமரன் என்ற இந்நூலின் புலவரை யேற்றித் தற்குறிப்பேற்ற வணி விளங்கப் பாடியுள்ளார். (11)

# காப்புப்பருவம்

437. தம்பிரான் தோழன் - சுந்தரமூர்த்திசுவாமிகள்; பதிகம்-பத்துப்பாட்டு; முத்தாறு - மணிமுத்தாநதி; ஆரூர் - திருவாரூர்; மாத்துரைத் தளவிடல்-உயர்ந்த பொன்னு என்றறிய மாத்துப்போட்டுப் பார்த்து மதிப்பிடுதல்; **மாற்றுரைத்த விநாயகர்**:-சுந்தரர் திருமுதுகுன்ற மடைந்து பொன்வேண்டி பன்னீராயிரம் பொன்பெற்று மணிமுத்தாநதியில் இட்டு இதைத் திருவாரூர்க் குளத்தில் தரவேண்டுமென வேண்டி திருவாரூர் அடைந்து பரவையாருடன் கமலாலய தீர்த்தக் கரையில் வந்து பார்த்தும் பொன் அகப்படாது, பதிகமோதி, எடுத்த பொன்னைக்கண்டு, மாற்றில் ஐயமுறவே, இங்குள்ள விநாயகர் வணிக வுருவம் எடுத்து வந்து மாற்றுரைத்துக் காட்டி நல்ல பொன்னென நிரூபித்தார். இதனால் இவருக்கு "மாற்றுரை காட்டிய விநாயகர்" எனப் பெயர் வந்தது (தியாக-கட-6) மால் வெள்விடை-திருமாலாகிய வெள்ளை எருது; தானி-இடத்திலுள்ளவள்; வேதவனமாம் மணக்குளம் மேவும் ஐங்கரப் பிள்ளையென்க் குளத்தங்கரைப் பிள்ளையார்க்கு வணக்கம் முதற் கூறினர். (1)

438. நித்திலவடங்கள் திகழ - முத்துமாலை விளங்க; முறுவல்-புன்சிரிப்பு; அருள்தேன் விழிக்குவளை - உருவகம், அருளாகியதேன் விழியாகிய குவளைமலரினின்று பொழிய; பஞ்சாயுதம் - சங்கு,சக்கரம் கதை, கோதண்டம், வாள்; அம்போருக மடந்தை-தாமரையில் வசிக்கும் இலக்குமி; உரம்-மார்பு: வெண் திரைக்கடல்-பாற்கடல்; அனந்தன் - ஆதிசேடன்; அறிதுயில்-யோகநித்திரை; முகில் - மேகநிறம்போன்ற திருமால், உவமையாகு பெயர். (2)

439. பராவு புருகூதன் - துதிக்கப்படும் இந்திரன் (யாகத்திலழைக்கப்படுபவன்); உனு - உன்னி (நினைத்து), செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத்திரிந்தது. உன்னு-உனு, தொகுத்தல் விகாரம்; மீனமுயர் கேதனம் நேர்பவன் - மன்மதன்; கேதனம்-கொடி, சுறாமீன் கொடி மன்தனுக்குரியது; நுதன்மேல் உறுகண் ஆர் அழல் - நெற்றிக் கண்ணில் பொருந்திய அக்கினி; நாள்தொறும் - நாடொறும்; நளினப்பதத்தி - தாமரை மலரைப்போன்ற பாதமுடையவள்; மாறன்-சவுந்தர பாண்டியன்; மாறன்மகள் - தடாதகைப்பிராட்டி; மான - பெருமை பொருந்திய; காழிவரு மாமதலை-ஞானசம்பந்தர்; நுகரும் - அனுபவிக்கும்; வாமி-வாமபாகத்தையுடையவள்; வினைகள்தீர வரமே

உதவு வாமி எனப் பிரிக்க. இந்திரனுக்கு வேதத்தைத் தந்ததும் பிரமன் வழிபாடு செய்ததும் 504-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. வாசமலரான்-பிரமன். (3)

440. **மகிடன்** - எருமையினது முகம், வால், கொம்பு இவைகள் பொருந்திய அசுரன்; இவன் ரம்பனென்னும் அசுரனுக்கும் ஓர் எருமைக்கும் பிறந்தவன்; இவன் பிரமனைக்குறித்துத் தவஞ்செய்து பெண்கள் தவிர மற்றவர்களால் வெல்லப்படா வரம் வாங்கி தேவர்களை அடக்கித் துன்புறுத்துகையில் சத்தி காளி உருக்கொண்டு வந்து கொன்றனள். உருகு அன்பர்-வினைத்தொகை; தயாவதனி - தயைநிறைந்த முகத்தையுடையவள்; ஆரணவனம் - வேதவனம், இவ்வம்மை கோயில் கொண்டுள்ள இடம் வேதவனம் என்று பெயர். ஆசு இல் வியாதர் மொழி - குற்றமற்ற வியாசமுனிவர் மொழிந்த; பாரிய-பருத்த, பரிய என்பதன் நீட்டல் விகாரம்; பானு - சூரியன்; அங்குசபாசம் - யானைத்தோட்டியாகிய ஆயுதம்; வாள் அவுண வீரர்-வாளாயுதத்தையுடைய இராக்கத வீரர்; கடம் மீறு கய ஆனனம்-மதநீரை மீறிப்பொழிகின்ற யானைமுகம்; சினகரம்-கோயில்; முதற்கண் கூறிய விநாயகர்துதி குளத்தில் கோயில் கொண்டுள்ள விநாயகரைக் கூறவே இது கோயிலில் எழுந்தருளியுள்ள வேத விநாயகரைக் கூறியதாயிற்று. எனவே இரண்டு விநாயகர் வணக்கம் செய்யப்பட்டது. (4)

441. மகபதி பெறுந்தனயன் - இந்திரன் மகனான சயந்தன்; நீபமஞ்சரி - கடப்பமாலை; ககனம் உலவு அம் சிறகின் எகினவாகனம் - ஆகாயத்தில் உலவுகின்ற அழகிய சிறகுகளையுடைய அன்னவாகனம்; கஞ்சன் - தாமரைமலரிலுள்ள பிரமன். முனிசெய் - கோபித்து; முனிசெய் தாக்கி என்க; பிரணவ மந்திரத்திற்குப் பொருள் தெரியாமையால் பிரமனைக் கோபித்துக் குட்டிச் சிறை வைத்தனன் முருகன். அரவம் ஒலிடு பாத பங்கயப் பார்ப்பதி-சப்தம் ஒலிக்கின்ற பாத தாமரைகளையுடைய பார்வதி; மனோபவன்-மன்மதன், இவன் நெற்றிக்கண்ணால் எரிந்தது காண்க. அருள் + நயனி-அருள்மிகுந்த கடைக்கண் பார்வையுடையவள்; மாதரி, சூரி - காளியின் பெயர்கள். (5)

442. இருஞ்சிறை அளி தேன் அருந்தி மகிழ் தெய்வச் செழுங்கமலம் என்க; இருஞ்சிறை அளி - கரிய சிறகுகளையுடைய வண்டுகள்; பிரமன் வீற்றிருத்தலால் தெய்வச் செழுங்கமலம் என்றார். திசைமுகக் கடவுள் - ஒவ்வொரு திசையை நோக்கியும் ஒவ்வொரு தலை பிரமனுக்கு உண்டாதலால் இங்ஙனம் கூறினர். வேனில் + அதிபன் - வேனிலாதிபன் என்பது நீட்டல் விகாரம் கொண்டது. மாரன் ஆயுதச் சாலையின்-மன்மதனது தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம்

முதலிய ஆயுதங்கள் உள்ள இடத்தைப்போல; வெண்சங்கு.............
வயலும் - வெள்ளிய சங்கங்கள் ஈன்ற முத்துக்களைப்போல சந்திரன் நிலவினால் அல்லி இதழ்கள் விரியப் பெற்ற நீர் நிரம்பிய சாலி நெல் விளையும் வயல்களும்; முத்தின் - உவமப் பொருவு; பால்நிறத் தூவி அனம் உலவு மலர் வாவி - பால்போன்ற வெண்மை நிறமான மெல்லிய சிறகுகளையுடைய அன்னப் பறவைகள் உலாவப்பெற்ற மலர்களை யுடைய குளம்; அனம்-தொகுத்தல் விகாரம். பாங்கர் - பக்கங்கள்; புதுவையின் பக்கங்களில் பூம் பொழில்களும், செங்நெல் வயல்களும், வாவிகளும், மற்ற பல வளங்களும் நிரம்பி யிருந்தன என்க. (6)

443. விண்தலம் செவிடு உற என்க. வீரவெண்டையம் - வீரத்திற் கறிகுறியான சிறு மணிகள் நிறைந்த வீரகண்டாமணி; "நானே பெரியன்" என்று அகங்காரங்கொண்ட பிரமன் நடுச்சிரசை நகத்தால் கொய்து அதனைக் கபாலமாகக் கொண்டு பிச்சையேற்றவன் வைரவன். எனவே "வேதன்.........கையினன்" என்றார். சினவு ஞாளி - கோபங்கொண்ட நாய்கள்; மண்டலந்தனை.........மாலுடன் வருந் தோகை - பிரளயகாலத்தில் பூமியை யெல்லாம் உண்டு ஆலிலைமீது யோகநித்திரை செய்யும் திருமாலுடன் பிறந்த திரிபுரசுந்தரி; "வண்மை சேரு..........தேவி"-377-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. (7)

444. நதிபதி - கடல்; பாற்கடலில் தோன்றிய அமுதத்தோடு இலக்குமியும் தோன்றினவளாதலால் "பாற்கடல் நடுவுள் அமுதமொடு புவன மகிழ்பெறத் தோற்றி" என்றார். அமரர் தமையரசு திருவுறப் பார்த்து என்றார் முன்பு துருவாசர் சாபத்தால் இலக்குமி கடாட்சம் நீங்கியதால்; அரசு திருவுறப் பார்த்தலாவது-இழந்த இந்திரனது அரசாட்சியை மறுபடியும் பெறவைத்தல். நையாண்டிப் புலவர் பாடிய "மேலாடையின்றிச் சபைபுகுந்தால்" என்ற பாட்டில் "நுவல் பாற் கடலோ மாலா னவரணி பொன்னுடை கண்டு மகளைத் தந்தே ஆலால மீந்தது தோலாடை சுற்றும் அரன் தனக்கே" என்று கூறியதற் கேற்ப "எழில் நணுகு மணிவணன்" என வருகிறது காண்க. மன்கதியை - நிலைத்த மோட்சப் பேற்றை; எண்கணன் - பிரமன்; இரதிபதி-மன்மதன், இவன் கண்ணவதாரத்தில் உருக்குமணிக்கு மகனாக "பிரத்தியும்னன்" என்ற பெயரினனாகத் தோன்றியது காண்க. அரி-திருமால்; கனகமுளரி - பொன்மயமான தாமரை; மயில் - உவமவாகுபெயர். மதியினளிசெய் ஒளிர்வதன நிமலி - சந்திரனைப்போன்று குளிர்ச்சி செய்யும் பிரகாசம் வாய்ந்த முகத்தையுடைய குற்றமற்றவள்; பாட்டு அளிவதியும் - பாட்டுப் பாடுதலையுடைய வண்டுகள் தங்கும்; நறை

கமழும் அளகி-வாசனைவீசும் கூந்தலையுடையவள்; தீட்டு அருமறைகள் புகழ் உபயகமல சரணி-எழுத முடியாத வேதங்கள் புகழும் தாமரை மலர்போன்ற இருபாதங்களை யுடையவள், இதனாலேயே வேதத்திற்கு "எழுதாக்கிளவி" என வழங்குகிறது. மகிடன் வரலாறு 440-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. சேண்பொலி பொதிய முனி - ஆகாயத்தைத் தொட்டு விளங்கும் சிகரங்களையுடைய பொதிய மலையில் வாழும் அகத்திய முனிவன்; சேண் பொலி-தூரத்திலும் தன்னிடம் அகத்திய முனி இருப்பதால் புகழ் கொண்டு பிரகாசிக்கும் என்ற பொருளும் கொள்ளலாம். பூத்திகழ் பொருவில் கரம், அபயமொடு வரதம் திகழ் கரம் எனப் பிரித்துத் தனித்தனி கூட்டுக. அபய, வரதக்கரங்களின் விரிவை 537-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. சீற்றமில் புனித முறுதவர்-கோபக் குணமில்லாத தூய்மைபுடைய தவசிகள்; அமலன்-குற்றமற்ற சிவபெருமான். (8)

445. எண்கண் துளங்கு மொருவன் - நான்கு தலைகளுக்கும் எட்டுக் கண்களாதலால் பிரமனை இச்சொற்களால் குறித்தார். பாவாணர் நாவில் நடிப்பதாவது-அவர்கள் விரும்பிய வண்ணம் ஆசுகவியாகப் பாடச் செய்தல். மதி ஆதவன் - சந்திரனும் சூரியனும், உம்மைத்தொகை. புரிசை - மதில்; உளம் நயந்த அருள் ஆகரன் என்க; ஆகரம்-உறைவிடம். ஞானசம்பந்தரும் "உள்ளம் கவர் கள்வன்" என்றார்; எண்ணான்கு அறம் - முப்பத்திரண்டு தருமம். நதி..........விளங்கிட-கங்கை நதியும், வாசனையுடைய கொன்றை மலரும் சடையில் விளங்கிட; சூரியனும் சந்திரனும் முறையே காலை மாலைகளாகியஇரு காலங்களிலும் மிக்க வளங்களைத் காண்பதைப்போன்று இடையறாது வந்து உயர்ந்த மதில்மீது உலாவுதலைப் பொருந்திய புதுவை நகர் என்க. இதனால் புதுவை நகரின் மதில் வளத்தை உயர்வு நவிற்சிபடக் கூறுகின்றனர். (9)

446. மறையாயுதம், அன்னவாகனம் உடையவள் - அபிராமி (பிராமணி, பிராம்மி); வில் ஆயுதம், இடபவாகனம் உடையவள்-மயேச்வரி; வேல்படை, மயில்வாகனம் உடையவள்-கௌமாரி; சக்கரப்படை, கருடவாகனம் உடையவள் - நாராயணி; வாள் படை, சிங்கவாகனம் உடையவள் - வராகி; வச்சிரப்படை, யானைவாகனமுடையவள் - இந்திராணி; சூலப்படை, பேய்வாகனமுடையவள்-காளி; ஆக இவர்கள் ஏழு பேரும் சப்த மாதர்கள். மகிடனைக் கொல்லும்போது அவ்வக் கடவுளது சத்திகளும் தேவியோடு கூட வந்ததாகத் தேவி பாகவதம் கூறுகிறது. முதற்கண் கூறிய பிராம்மி பிரமனிடமிருந்தும் மயேச்வரி ஈச்வரனிடமிருந்தும், கௌமாரி முருகனிடமிருந்தும், நாராயணி திருமாலினிடமிருந்தும் இங்ஙனமே மற்ற தேவர்களிடமிருந்தும் வந்ததாகக் கூறப்பட்டுள்ளது. சிவபுராணத்தில் அந்தகாசுரனைக் கொல்லும்

போது இவ்வாறு வந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இப்பாட்டில் ஆயுதங்கள் வாகனம் ஆகியவைகளை மாதர்கட்கு நிரனிறையாகக் கொள்க. சுறவம் எறிதிரை அகடு கிழிய..........பெண்ணை நதி - சுறா மீன்களை வீசி கடலின் நடுவிடமும் பிளக்குமாறு வருகின்ற வெள்ளம் விளங்கும் தென் பெண்ணை நதி; மகச் சூழல் - யாகங்கள் செய்யுமிடங்கள்; சுரர் - சுரை (அமுதம்) உண்டவராதலால் தேவர்க்குச் சுரர் என்ற காரணப் பெயர் உண்டாயிற்று; நாவம் - புதுமை, நவம் என்பதன் நீட்டல்; அடு சிங்கம் - வினைத்தொகை, அடு-கொல்; தரித்து + அனம் எனப்பிரிக்க, அனம்- அன்னம் என்பதன் தொகுத்தல். (10)

447. எல்லைமாகாளி - எல்லை காக்கும் பெருமை பொருந்திய காளி; பத்திரகாளி - துர்க்காதேவி, வீரபத்திரருடன் தக்க யாகம் அழிக்க தாக்ஷாயணியால் சிருட்டித்து அனுப்புவிக்கப்பட்டவள். காடுகாளி - காட்டில் வாசம் செய்தற்குரியவள்; நவசத்தி 316-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. பஞ்சசத்தி - இச்சாசத்தி, கிரியாசத்தி, சிற்சத்தி, ஞானசத்தி, திரோதாசத்தி ஆகியோர். 'பராசத்தி சிவத்தோடு அபின்னையா யிருப்பவர். வயம் கொள் அரிகரபுத்திரர்-வீரம் கொண்ட, அரியாகிய மோகினிக்கும், அரனான பிக்ஷாடனருக்கும் பிறந்தவர். இவர் அரகர புத்திரர், ஐயனார், சாத்தனார் என்றழைக்கப்படுவர். "மாதிரத்தலைவர்..........வசுக்கள்" இவர்கள் விரிவால் வரும் முப்பத்து முக்கோடி தேவர்களை 10-ஆம் பாட்டின் குறிப்பாலுணர்க. அரமகளிர் - தேவப்பெண்கள், தண்டீசர் - சண்டேசுவர நாயனார். (11)

---

## செங்கீரைப் பருவம்

---

448. பை - படம்; பாந்தள் அரசு - பாம்புகளுக்கு அரசனான ஆதிசேடன்; வேதன் - பிரமன். கடல் வணன் - கடல்போலும் நிறமுடைய திருமால். கைவைத்த மான் மழுப்படையாளன் - மானையும் மழுவையும் இரு கைகளிலும் வைத்துள்ள சிவன். (1)

449. துங்கம் - பரிசுத்தம்; பந்து இலகு சூழியக்கொண்டை - பந்துபோன்று விளங்கும் உச்சியையுடைய கொண்டை; சோடச கலா மதியின் - பதினாறு கலைகளையுடைய சந்திரனைக் காட்டிலும்; மதியின்,

உறழ் பொருவு; பசுமை+கதிர் - பைங்கதிர்; மரகதமணித் தோங்கல் - மரகதமணியாலியன்ற காதணி; இருபார்வை யுறுசெவி - இரண்டு கண்களும் நெருக்கித்தாக்கும் காதுகள்; பன்னக இரத்தினம் - பாம்பினின்று கிடைத்த மாணிக்கம்; பாணி - கை; முத்தாரம் நிலவைப் போன்று ஒளி வீசுமாதலால் "தண்சுடர் உமிழ்" என்றார்; சிறுமை+அடி - சிற்றடி; கிண்கிணி, நூபுரம், தண்டை ஆகியன காலுக்கணியும் ஆபரணங்கள்; மலைவல்லி - மலையில் பிறந்த கொடிபோன்றவள். (2)

450. வீர+அதிபர் - வீராதிபர், வடமொழிப் புணர்ச்சி, தீர்க்க சந்தி; வயவாள் விடாத மறவர்-வீரமிக்க வாளினை இறப்பினும் விடாத மறக்குடியிற் பிறந்தவர்; இலைகொள் நெடு வடிவேல் படை - இலை போன்று கொண்ட நீண்ட வடித்த வேலாயுதம்; பாய்புரவி - வினைத் தொகை; சொல்வயம் பெறு - புகழ்ந்து கூறுமாறு வீரம் பெற்ற; பிரதானி-அதிகாரிகள்; இப்பாட்டினால் வில், வாள், வேல் கொண்டுள்ள காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை ஆகிய நான்கு படைகளும் சூழ்ந்த அரசர், மந்திரி, சேனாதிபதி ஆகியோர் வணங்கி ஏவல் கேட்கப் பாண்டி நாட்டை யாண்ட தடாதகைப் பிராட்டியின் வல்லபங் கூறியதாயிற்று. (3)

451. இப்பியாயிரஞ் சூழ வீற்றிருப்பது இடம்புரிச்சங்கம்; இடம்புரிச்சங்கம் ஆயிரஞ் சூழ வீற்றிருப்பது வலம்புரிச்சங்கம்; வலம்புரிச் சங்க மாயிரஞ்சூழ வீற்றிருப்பது சலஞ்சலம்; சலஞ்சலசூழ நடுவிலிருப்பது பாஞ்ச சன்னியம். இப்பி - சங்கம்; சகச்சிரம் - ஆயிரம்; நாப்பண் - இடை; சதம் - நூறு; வலம்புரிச்சங்கம் - வலப்பக்கம் சுழிந்திருக்கும் சங்கம்; இடம்புரிச்சங்கம் - இடப்பக்கம் சுழிந்திருக்கும் சங்கம்; பாஞ்ச சன்னியச் சங்கம் மேவியதுபோன்று சிறந்த பெண்கள் நூறுகோடி பேர் சூழ நடுவிலிருப்பவள் கௌரியென்க. (4)

452. குடக்கு - மேற்கு; மீன்குதிக்கும் சத்த சாகரம்- மீன்கள் குதிக்கின்ற ஏழு சமுத்திரங்கள்; வெற்பு - மலை; வச்சிரப்படையன் - இந்திரன்; அனீகம்-சேனை; உருத்து - கோபித்து; தென்+குதிக்கும்- அழகாக விளையாடும்; கடம்பன் - முருகன்; கடம்பனை யருள் பசுங்குழவி என்பதில் அமைந்துள்ள நயம் காண்க; இப்பாட்டின் வரலாற்றை 385-ஆம் பாட்டின் குறிப்பினால் அறிக. (5)

453. தெண் பனிமலை-இமயமலை; கங்காளி-கங்காளமுடையவள்; நதிபதி தந்திடுமமுதினும் - பாற்கடல் கொடுத்த அமுதத்தைக் காட்டிலும்; ஓதி - கூந்தலை யுடையவள்; தளவம் - முல்லை; வண்பாவை - வண்மைத் தன்மையுடைய பொம்மை போன்றவள்; பாவை - உவமையாகுபெயர்; புணமணி ஒண்தொடி - பூாம்புகளின் மாணிக்கத்தால்

ஆகிய ஒள்ளிய வளையல்; பாணி - கைகளை யுடையவள்; பந்தாரும் - பந்துபோன்று மெல்லிய. (6)

454. வெருவுறு - பயப்படத்தக்க; பரை - காளி; வண்கா - வளப்பம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த; வழுதி - சவுந்தர பாண்டியன்; மன்பார் - நிலைத்த பூமியிலுள்ள உயிர்கள்; பார் - இடவாகு பெயர்; அனநடை இந்திரை - அன்ன நடைபோன்ற நடையுள்ள திருமகள்; அகங்கூர - மனதில் மிக்க; தினகரன் - சூரியன். (7)

455. மரு வகுளம் - வாசனையுடைய மகிழமரம்; தமநகம் - மருக்கொழுந்து; நறவம் - அனிச்ச மரம்; வழை - சுரபுன்னை மரம்; சண்பகம் + அலரி என்க, அலரி - அலரிச்செடி; புருண்டி - மல்லிகை; மணங்கால் செங்கோடு-வாசனையைப் பரப்பும் செருந்தி மரம்; குருகு - குருக்கத்தி மரம்; மதலை - கொன்றை மரம்; அலர் அஞ்சனி - மலர்களையுடைய காயாமரம்; செவந்தி - கொடிப்பாலை; இது சிவந்தி என வழங்கும்; கொந்து + ஆர் + மஞ்சாடி - கொத்துக்கள் நிரம்பிய மஞ்சாடி மரம்; குழையொளிர் குங்குமம் - குழைபோன்று பிரகாசிக்கும் குங்கும மரம்; மயிலை - இருவாட்சி மரம்; குருந்து - குருந்தமரம்; கொங்கார் சிந்தூரம் - மகரந்தப்பொடி நிரம்பிய வெட்சிச் செடி; அம்புயம் + மென் + தாது + ஒண்மை + போது - தாமரையின் மெல்லிய மகரந்தங்கள் பிரகாசிக்கு மலர்; குமுதந் திகழ்தடம் - குமுத மலர் விளங்கும் குளங்கள் சூழ்ந்த; தரு விஞ்சி ஏர் எஞ்சாத - மரங்கள் மிகுந்து அழகு குறையாத; மகிழமரம், குருக்கத்திமரம், குங்கும மரம் முதலிய கலந்த நந்தன வனத்தோடு தாமரையின் மகரந்தம் அல்லி மலரில் பிரகாசிக்கும் குளங்கள் சூழ்ந்த மருதநிலம் தருகின்ற அழகு குறையாத வளம்சேர்ந்த புதுவை நகர் என முடிக்க. தாமரை சூரியனால் மலர்வது, குமுதம் சந்திரனால் மலர்வது; இங்குத் தாமரையின் மகரந்தம் அல்லி மலரில் பிரகாசிக்கும் என்றது அல்லிமலர் அங்குள்ள முத்தின் நிலவினால் மலர்வதைக் குறித்தாகும். (8)

456. வாமனர்-மாபலியிடம் தானம் வாங்கிய திருமா லவதாரங்களி லொன்று; வேணு-புல்லாங்குழல்; வீறு-பெருமை; காலிபின் ஆயர் சிறுருடன் ஏகினர்-பசுக்கூட்டங்களின் பின்பு இடைச் சிறுவர்களுடன் சென்றவர்; கார் புரையும் - மேகத்தை ஒத்த; காமன் - மன்மதன்; கான் உலவு அம் தாளர் - காட்டிலே உலவின அழகிய பாதத்தை யுடையவர்; வாலி பின்னோன் - சுக்கிரீபன்; பதுமாதன மாது-தாமரை யாசனத்தில் வீற்றிருக்கும் இலக்குமி; மாமணி - கௌஸ்துபமணி; வான் வைகுந்த ஈசர்-உயர்ந்த வைகுந்தத்திலிருக்கும் திருமால்; பதும ஆதன மாது - தாமரை யாசனத்திலுள்ள இலக்குமி. (9)

457. ஓதரு-சொல்லுதற்கரிய; ஓதிம நேர் நடையார் - அன்னம் போன்ற நடையுடைய பெண்கள்; நிறை - கற்பு; ஓகை - சந்தோஷம்; மாதிகம்-குதிரை; மாதிக..........வீரர்-இவ்வடியால் நாற்படையைக் குறித்தார். புரை - மேலானவள்; ஆய்புகழ் - வினைத்தொகை. (10)

---

# தாலப்பருவம்

---

458. திலநெய்-(நல்ல) எண்ணெய்; திமிர்ந்து-பூசி; நிறை பொற்கும் பம்-நிறைந்த பொன் குடங்கள்; நிலவின் ஒளிர் - நிலவுபோன்று பிரகாசிக்கும்; ஆட்டி-நீராட்டி; நிலவின்........துவட்டி-நிலவொளிபோன்ற பூப்போன்று மெல்லிய வஸ்திரத்தால் ஈரம் உலர உடலைத் துடைத்து, நிலவின்-5-ஆம் வேற்றுமை உவமப்பொருவு; சிலை ஒண் ணுதலிற் காப்பு-வில்போன்ற பிரகாசமான நெற்றியில் நிலக்காப்பு; அஞ்சனம்-மை; அயினிநீர் - சோறு கலந்த ஆலத்தி நீர்; இமயமலைத் தலைவன் மனைவி-மேனை (1)

459. கால் - தூண்; பகர்ஆகமம்-சொல்லப்படுகின்ற 28-ஆகமங்கள்; கொடுங்கை - வெளிப்பக்கம் நீண்டு வளைந்துள்ள உறுப்பு; பலவாங் கலை - 64-கலைகள்; விதானம் - மேற்கட்டி; வழுவில் தத்துவம் கயிறு-குற்றமற்ற 96-தத்துவங்கள் கயிறாகவும்; மருவுஞானம் மெல்லணை-பொருந்திய ஞானமே மெல்லிய படுக்கை. வனை - அழகுமிகுந்த; **முழு மெய்யன்பில்.........தனத்தாய்:**-காஞ்சிபுரத்தில் அம்மை சிவபெருமானை நோக்கித் தவம் செய்யும்போது சிவபெருமான் தவத்தைக் கலைக்க கம்பாநதியாக வர அம்மை பயந்து தான் பூசித்த சிவலிங்கத்தையே தழுவினாள். அப்போது சிவபெருமான் அம்மையின் தனங்களின் சுவடும் வளைகளின் தழும்பும் படக் காட்டினார். இது காஞ்சி புராணத்தில் தழுவக் குழைந்திட்ட படலத்தில் வந்துள்ளது. கும்பத் தனத்தாய்-குடம்போன்ற தனங்களையுடையவள். நான்கு வேதங்களும் தூணாகவும், 28-ஆகமங்கள் மேற்பரப்பாகவும், 18-புராணங்கள் கொடுங்கையாகவும், 64-கலைகள் மேற்கட்டியாகவும், 96-தத்துவங்கள் கயிறாகவும், ஞானமே மெல்லிய படுக்கையாகவும், மகிழ்வுதரும் பேரின்பமே தொட்டிலாகவும் கொண்டு அதன்மீது கண்வளரும் பசுந்திருவே என்க. (2)

460. பூமங்கை - திருமகள்; பார்மகள்-பூமிதேவி, இவர்களிருவரும் திருமாலின் தேவியர்; வடம் - கயிறு; கலைமாது - சரசுவதி; நேமம் - அன்பு; நிழல் கால்செய்வட்டம் - ஒளிவிடும் ஆலவட்டம்; கவரி சசி ஏந்த - கவரியை இந்திராணி ஏந்த; நிருத்தம் - நடனம்; அரம்பையர்கள்-தேவப் பெண்கள்; ஏமம்-பாதுகாவல்; மாதவ மடவார்-முனிபத்தினிகள்; தாமம்-மாலை; தளத்தாய்-பாதத்தையுடையவள். (3)

461. கரியமால் அயன் - கருநிறமுள்ள திருமாலும் பிரமனும்; மால், அயன் அடிமுடி காணத் தேடியது திருவண்ணாமலையில்; வன்னிவடிவு-நெருப்புவடிவு; வயங்கு - விளங்கு; சுரிகை-உடை வாள்; நெய்தல் - நெய்தற்பூ; தியங்க - சோர; தண்ணந்துறைவன்-குளிர்ந்த அழகிய கடற்றுறையை யுடையவன்; **எண்ணம் திகழ்மீன்.......... அவதரித்தாய்**—சிவபெருமான் கூறிய வேதத்தின் உட்பொருளைப் பார்வதி பராமுகமாகக் கேட்கச் சிவபெருமான் கோபங்கொண்டு "செம்படவர் மகளாகக் கடவாய்" என்று சாபமிட்டார். பின் அம்மை வேண்ட "நீ வளரும்போது நானே வந்து மணத்தை முடிக்கின்றேன்" என்றும் கூறினர். பின் விநாயகப்பெருமான் உள்ளே வந்து சுவடிகளையெல்லாம் தன் தும்பிக்கையால் வீசியெறிய, சிவபெருமான் "விநாயகரை எவ்வாறு உள்ளேயனுப்பினய்" என்று நந்தியைக் கோபித்துச் சுறாமீனகுமாறு சாபமிட்டனர். பார்வதியும் செம்படவர் வகுப்பில் பிறந்து வளர்ந்து பருவப்பெண்ணானள். நந்தி சுறாமீனனர். அச்சுறாமீன் கடலில் படகையும் தோணிகளையும் கப்பல்களையும் நாசஞ்செய்தது. செம்படவர் குலத்தில் பிறந்த பார்வதியின் தகப்பனை செம்படவன் அச்சுறாமீனைப் பிடிக்க முடியாமல் "அதை யார் பிடித்து வருகிறார்களோ அவர்களுக்கே என் பெண்ணைக் கொடுப்பேன்" என்று தெரியப்படுத்தினன். அதைக்கருதி சிவபெருமான் செம்படவனுகி வந்து நந்தியாகிய சுறாமீனைப் பிடித்து அம்மையைக் கலியாணம் செய்து கொண்டார். (4)

462. படிவர் - முனிவர்; நொய்கோடை-மிருதுவான கோடைக்காலம் (இளவேனில்), கோடைக்கு அலர் பொழில் என்க. அலர் பொழில் - மலரையுடைய சோலை (இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை); தேனிப்போர் - தியானிப்போரின் மரூஉமொழி அல்லது தேன்போன்ற இனிமையுடையவர் என்றும் கொள்ளலாம். தேனிப்போர் என்பது "தேனித்திருமினே" என்ற நாலாயிரச் செய்யுளை நோக்க இப்பொருளும் கொள்ளலாம்; இடாம் இருள்-உருவகம்; எழில்புணை-அழகிய தெப்பம்; தேறு - தெளிந்த; தந்தன்-விநாயகன், (5)

463. மஞ்சு - மேகம்; அகமிகு களிகொண்டு-மனதில் மிகுந்த சந்தோஷங் கொண்டு; மாகா - பெரிய சோலை; மண்டிய - நெருங்கிய; பல பலவின்கனி வழிதேன்-பல பலாப்பழங்களிலிருந்து வழிந்த தேன்; விஞ்சல - மிகாமல்; நாகை கண்டிடு—வெற்றிலைக் கொடிக்காக ஏற்படுத்திய; விஞ்சல உழும் கால்வாய், நாகை கண்டிடு கால்வாய் எனக் கூட்டுக. மின்கதிர் ஊறு-ஒளிவாய்ந்த கதிர்களை ஈனும்; செந்நெல் - சம்பாநெல்; அம்பணை - அழகிய வயல்; மேகங்கள் சஞ்சரிக்கின்ற சோலையில் உள்ள பலாப்பழத்தினின்று வழிந்த தேன் ஆறாக ஓடி மிகாமல் உழுத வெற்றிலைக்காக ஏற்படுத்திய வழியான கால்வாய் மூலம் ஓடி சம்பா நெல் விளைகின்ற வயல்களில் நீர் போலப் பாய்ந்து புதிய வளந் தருகின்ற சிறப்புடைய புதுவை என்க; அஞ்சலிசெய் - வணங்கும். (6)

464. மண்டிய களை கடியும் - நெருங்கிய களைகளை நீக்கும்; கடைசியர்-மருதநிலப் பெண்கள்; குமுதம் திகழ்வழி தூநீர் ஊடே-குமுதம் போன்று விளங்கும் கண்களினின்று துளிக்கும் கண்ணீர் மத்தியில்; அளி-வண்டு; கஞ்சவதனம்-தாமரைபோன்ற முகம்; வந்தலமர-வந்து சுழல; அலமரலால் + தாளாதே என்க. நந்தலில்-குறையாத; வயலில் களைகளை நீக்கும் மருதநிலப் பெண்களின் வாயினின்று வரும் நீரும் குமுத மலரொத்த கண்களினின்று வரும் நீரும் கலந்து அவர்கள் முகத்தைக் கருநெய்தற் பூப்போன்று காட்டவும் அதைக்கண்டு வண்டுகள் மயக்கங்கொண்டு வந்து சுழல அவர்கள் தாளாமல் தங்களுடைய விரல்களைக் கொண்டு வீசவும் அவ்வண்டுகள் தேன் உண்ணும் ஆசை நீங்காமல் மறுபடியும் வரும் அத்தகைய வயல்கள் சூழ்ந்த புதுவை என்க. (7)

465. நமன் - எமன்; ஓவாமல் - நீங்காமல். (8)

466. கண்டிகை - பதக்கம்; காழ் - மணிவடம்; கலம் - கப்பல்; இரசிதம் - வெள்ளி; குவால் - குவியல்; நிரையும் - வரிசைப்படும்; நீள்சீர் ஆர் ஆவணம் - நீண்ட சிறப்புப் பொருந்திய கடைத்தெரு. (9)

467. தளவத்திளமுகை-முல்லையின் இளைய அரும்பு; அருள்நகையார் மானே - அருளை உடைய (பற்களினால்) சிரித்தலைச் செய்யும் சிவபெருமானின் மனைவியே; முளரிக்கணன் - தாமரைபோன்ற கண்களையுடையவன், திருமால்; காபாலி - சிவனிடம் உடையவள்; காய் - கோபிக்கும்; மொய்ம்பு - வலிமை; நளினப்பதம் - தாமரைபோன்ற பாதம்; உம்பர் உலகசுகம்-தேவவுலக இன்பங்கள்; இம்பர் - இவ்வுலக மக்கள்; அளகை-குபேரன் தலைநகர்; அந்தரி-பிரமத்தைத் தரித்தவள். (10)

# சப்பாணிப்பருவம்

---

468. வெண்டாமரைச் செல்வி - கலைமகள்; முத்தேவர் - அயன் அரி, அரன்; சூடகம் - வளையல்; சுந்தரம் - அழகு; பணிதாவும் மென் மொழி - இசை பரவும்படியான மெல்லியமொழி; மிழற்றும் - சொல் லும்; மயில்வாகனக் கடவுள்-சுப்பிரமணியர்; தண்தாது கமழ் காந்தள்-குளிர்ந்த மகரந்தங்களை உடைய வாசனை வீசும் காந்தட்பூ. (1)

469. அங்கணுலகு - அழகிய இடமகன்ற உலகம்; இலங்கை-திரிகூட மலையின் உச்சியில் ஏற்பட்ட எழுநூறு யோசனை பரப்புள்ள தீவு; மயேந்திரம் - இது ஒரு மலை, அநுமன் இலங்கைக்குப் பாயவும் சம்பாதி இறகு தீய்ந்து விழவும் இடமானது; தூவி - மெல்லிய சிறகு கள்; தோலாத-அழியாத; **"அங்கண்உலகு...மா தங்கமலைவில்லி"** தாரகாசூரன் குமாரராகிய வித்துன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் இவர்கள் மூவரும் சிவபூஜை பலத்தினால் பொன், வெள்ளி, இரும்பு கோட்டைகளைப் பெற்று, அக்கோட்டைகளுடன் பறந்து சென்று தேவர்களை வருத்தினர். கடைசியாக சிவபெருமான் அவர்கள் இறுமாப் பைக் கெடுக்க மேருவை வில்லாகவும், பிரம்மனைச் சாரதியாகவும், விஷ்ணுவைப் பாணமாகவும் கொண்டு எதிர்த்தார். அச்சமயத்தில் சிரிப்புத் தோன்றவும் அச்சிரிப்பினால் திரிபுரம் எரிந்தது. பொள்ளென-விரைவுக் குறிப்பிடைச் சொல். வில்லி-வில்லையுடைய சிவபெருமான். (2)

470. வழாமல் - தவறாமல்; பெட்பு - அன்பு; தருமமெண் ணான்கும் - முப்பத்திரண்டு தருமமும்; வைசியர் - வசியர் என முதற் போலியாகியது. காசினி - பூமி; பரசுராமர் இறுதியில் காசிபர்க்குப் பூமியைத் தானங் கொடுத்ததால் காசினி என்ற பேர்பெற்றது. (3)

471. பருவம் மாறாமல் - பருவகாலம் தவறாமல்; முகில் - மேகம்; நகுமணி - ஒளிவிடும் இரத்தினங்கள்; குயிற்று - செய்த; நல் தூயஅமுது - நல்ல பரிசுத்தம் பொருந்திய தேவாமுதம்; லயை - தாளப்பிரமாணம் பத்தினு ளொன்று, அஃது இசையினிகழும் காலம்; சுருதி-வேதம்; மாடகம் - முறுக்காணி; துலங்கு - விளங்கும்; கந்தரு வர் - அசுவதரான், கம்பளன் ஆகியோர்; தேறல் - தேன். (4)

472. கட்பொறி - கண்ணாகிய பொறி, இருபெயரொட்டுப் பண்புத்தொகை; அடல் கோட்டு வேழம் - வலிபொருந்திய தந்தந்

களை உடைய யானைமுகக் கடவுள், (விநாயகன்); கவின் இளமை சிங்கம் - அழகுபொருந்திய சுப்பிரமணியக் கடவுள், இங்கு, மான் ஒன்று சிங்கத்தையும், யானையையும் ஈன்றுள்ளதாக கூறப்பட்டுள்ள நயம் உணர்ந்து இன்புறத்தக்கது. அஞ்சனம் மலர்க்கண் மான் - மை பூசிய மலர் போன்ற கண்களையுடைய திரிபுரை; இமம் - பனி; கங்குல் - இரவு; குடிவாங்கி ஓட - புறங்காட்டி ஓட; வாள் ஏந்து ஆயிரம் கரம்கொண்டு வாள் ஏந்தினதுபோன்ற பல கிரணங்களாகிய கைகளைக் கொண்டு - தமனியக் கங்கணம் - பொன்னால் ஆன கங்கணம்; வாள் ஏந்தினது போன்ற ஆயிரம் கரம்கொண்டு எழும் இளைய சூரியன் கோடிகள் சூழ்ந்தது போன்று ஒளிவிடும் இரத்தினமிழைத்த பொன்னால் ஆன கங்கணம் என்க. (5)

473. நிரைதிரைக்கை - வரிசையாக உள்ள அலைகளை உடைய கை; வரன்றி - வாரி; பிநாகநதி - தென்பெண்ணையாறு, பாலாற்றுக்கும், செய்யாற்றுக்கும் நடுவிலிருத்தலால் வெண்ணெய் நதி என்றும் சொல்லுவார்கள்; அலகுறு செழுஞ்சாலி - அளவில்லாத செழித்த சாலி நெற்பயிர்; முதிரை - அவ்வரை, துவரை முதலியன; கழை - கரும்பு; தெங்கு - தென்னை; ஆலையம் - போலி; குறைமதி - பிறைச் சந்திரன். (6)

474. ஏலம் - மயிற்சாந்து; பூங்குழல் - பூவையுடைய கூந்தல்; அரண் - பாதுகாப்பு; கோலம் - அழகு; சிறை - சிறகு. தெய்வ லோகத்திலிருக்கும் அன்னங்கள் அங்குள்ள தெய்வ மடந்தையரின் முகத்தழகைக் கவர்ந்து அங்கு நிற்கலாகாதெனப் பாதுகாப்பான இடத்தை நாடி புதுவையின் அகழியிலிருக்கும் மொட்டு அவிழ்ந்த தாமரை மலரில் வெள்ளன்னம் உட்காரவும் அப்பூ ஆழ்ந்து நீரில் தோய்ந்து அதனுடைய சிறகுகள் பாசி ஏறவும் அதனால் அன்னம் மேல் எழுந்து பறந்தபோது கரிய அன்னமாக மாறினதை எண்ணி அதனுடைய பெண் அன்னம் தன் ஆண் அன்னம் இல்லையே என்று துன்பப்படும் போது அவ்வாணன்னம் "மனங்கலங்காதே" என்று தன் பெண்ணன்னத்திற்குச் சிறகை உதறிப் பழைய வடிவைக் காட்டி அன்போடு சேர்ந்தணைந்து களிப்புக்கொள்ளும் அழகு மிகுந்த புதுவை என்க. (7)

475. மஞ்சுதவழ் - மேகங்கள் தவழும்; சாலேகம் - சன்னல் நந்தாத - கெடாத; கபாடம் - கதவு; நறைகொள் இதழ் - வாசனை மிகுந்த முருக்கம் பூப்போன்ற உதடு; சிந்துரம் - சிவந்த பொட்டு; வண்சிகர முறுமணிக் கொடி - வளவிய ஆகாய சிகரத்தையே அடையும் அழகிய கொடிகள்; மேகம் தவழும் சன்னல்களே கரிய கண்களாகவும்

கதவுகள் பொருந்திய பெரிய வாயிற்படி உதடுகள் பொருந்திய வாயாக வும், ஒப்பில்லாத உயர்ந்த கோபுரம் திலகம் விளங்கும் நல்ல நெற்றி யாகவும், அழகிய கொடிகள் பசியதேன் ஒழுகுகின்ற மலரை யணிந்த கூந்தலாகவும், கற்றவர்கள் புகழும் மதிலுறுப்புக்கள் முத்தாரம் விளங் கும் அழகிய தனங்களாகவும், தாமரைபொருந்திய நீர்சூழ்ந்த அகழி ஆடையாகவும், பொன்மதிலே பெண் உருவமாகவும் கொண்டு வெற்றித் திரு விளங்குகின்ற புதுவை நகர் என நகருக்கு ஏற்றம் கொடுத்து அந் நகரில் வந்தவளே சப்பாணி கொட்டுக என்க. (8)

476. மிகு + ஆயி = மிக்காயி ; நதிபதி-பாற்கடல்; துயில்பவன்- திருமால்; நச்சரவம் - விஷமுடைய பாம்பு ; செகம் மருள் அறு தவர் - பூமியின் மயக்கம் அற்ற தபசிகள். (9)

477. நிட்சேபி - புதை பொருளே ; நித்தியம் - அழிவில்லாதது; ஆவி - உயிர்போன்றவள் ; **தனபதி......................சினச்சூரி :** குணநத்தனென முதல் பிறவியில் வேள்வி தத்தனுக்குப் பிறந்து சிவ ராத்திரியில் சிவன் கோயிலில் களவாட வெண்ணிச் செல்லக் கொலை யுண்டு மறுசன்மத்தில் அருந்தமன் புதல்வனாக **தமன்** எனப் பிறந்து, சிவனைக் குறித்துத் தவம்புரிய சிவன் வெளிப்படவும், உம்மைக் காணக் கண் வேண்டு மென்றனன். அவ்வகை யருள அருகிருந்த பிராட்டி யைக் கண்டு மோகித்ததால் கண் மறைய மீண்டும் துதித்துப் பொற் கண்ணனாகவும் அளகைக்கு அரசனாகவும், அரனுக்குத் தோழனாகவும் ஆகிக் குபேரன் எனப் பெயர் பெற்றான். கு + பேரன் - குற்சிதமான உடலை யுடையவன் ; தனபதி - குபேரன். (10)

---

## முத்தப் பருவம்

---

478. வேயின் முத்தம் - சிவபெருமான். இதன் வரலாறு **369**-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. பச்சைமணி என்றார் பார்வதி பச்சை நிறம் பொருந்தியதால் ; எரிபுரவலன் - அக்கினி ; சரவணத் திடை அவதரித்த சிங்கம் - சுப்பிரமணியன் ; பரிபுரம் - சிலம்பு ; நளி

ன்த்துமேற் பரிவுற்றிருக்கும் அன்னம் - தாமரையின்மேல் அன்புடன் வீற்றிருக்கும் திருமகள்; பரவ - துதிக்க; சவுந்தர + ஆநந்தி = சவுந் தராநந்தி; மால் + தங்கை = மாறங்கை. மங்கள + ஆகரம் - மங்களத் தை உறைவிடமாகக் கொண்டவள். (1)

479. மூவாறு எனும் தருமநூல் - பதினெண் புராணம்; மூடிகப் பாகன் - விநாயகன்; மகஞ்சிதைத்தோன் - வீரபத்திரன்; பாவாணர் - புலவர்; இமையசயிலம் - இமயமலை; சதகோடி பானுவின் - நூறுகோடி சூரியர்களைக் காட்டிலும்; சட்சமையம் - ஆறுமதங்கள். (2)

480. பொன்பயின்றும்......முத்தம் - இலக்குமி வீற்றிருந்தும் மகரந்தங்கள் விரிந்த செழுமையான தாமரைப்பூ ஈன்ற முத்துக்கள்; புவிமடந்தைக்கு உடையது ஆகும் முந்நீருள் பொதிந்திலகு முத்தம் - பூமாதேவிக்கு ஆடையாக ஆகும் மூன்று தன்மைகளையுடைய கடலில் அடங்கி விளங்கும் முத்துக்கள்; மின் பிறழ்ந்திடு.......மேகத்தின் முத்தம் - மின்னல் ஒளிர்கின்ற நீண்ட ஆகாயத்தின்மீது உலவும் மேகத் தினின்று பெற்ற முத்துக்கள்; வெஞ்சினம் மிகுந்த.......முத்தம் - கொடிய கோபம் மிகுந்த மூன்று மதமுள்ள யானையினது வெள்ளிய தந்தத்தினின்று பொருந்தும் வெள்ளிய முத்துக்கள்; மன்பெறு....... முத்தம் - பெருமைபெற்ற பசிய கதிர்க்குலைகளோடு நீண்ட சாலி நெல்லில் பொருந்திய முத்துக்கள்; மாரவேள்......முத்தம் - மன்மதன் கையிலுள்ள வில் என்று சொல்லத்தகும் கரும்புகள் தந்த வண்மை பெற்ற முத்துக்கள்; "சாலி கழைகன்ன லாவின் பல்கட்செவி கார் இந்து வுடும்பு கரா முத்தமீனும்" என்ற இரத்தினச் சுருக்கத்தால் முத்துப் பிறக்கு மிடங்கள் அறிக. மேலான இலக்குமி தங்கியிருந்தும் அப்பங்கயப் போதினின்று முத்தம் பெறுவது அரிதல்ல. பூமி தேவிக்கு உடையாக ஆகும் கடலில் அடங்கி விளங்கும் முத்தமும் பெறுவதற்கு அரிதல்ல. எதிரிகளைத்தாக்கும் மின்னல் விளங்கினும் மேகத்தினின்று முத்தம் பெறுவது அரிய காரியமல்ல. மனிதரைக் கொல்லத்தக்க கொடியகோபம் மிகுந்த மூன்று மதமும் பெருக்கும் யானைக் கோட்டிட மிருந்து முத்தம் பெறுவதும் எளிதான செயலே. "நிலத்துக் கணி யென்ப நெல்லும் கரும்பும்" என்பதுபோன்று பெருமை தங்கிய பசிய கதிர்களையுடைய நீண்ட சாலி நெல்லினின்று முத்தம் பெறுவதும் மிக எளிதே. கண்டாரைக் காம மயக்கத்திற் படுத்தும் மன்மதன் கையி லுள்ள வில்லாகிய கரும்பு தந்த முத்தத்தைப் பெறுவதும் எளிதே. ஆனால் புதுவை வரு கௌரியே உனது சிவந்த குமுதமலர்போன்ற வாயினிடமுள்ள முத்தம் அருமையேயாகும். அவ்வருமையான முத் தத்தைத் தருவாயாக என்கிறார். தென் புதுவை - அழகுமிக்க புதுவை;

மும்மதம்-கன்ன மதம், கபோல மதம், பீச மதம் என்பன ; அரிதோ - ஓகாரம் எதிர் மறைப் பொருள். (3)

481. ஓராழி - ஒற்றைச் சக்கரம்; மணிப்போதிகை - அழகிய சுமையடைக் கட்டை ; கால் கொடிஞ்சி-தூண்களையுடைய தேர்மொட்டு ; ஆதித்தன் - சூரியன் ; சூரியன் ஏழு பச்சைக் குதிரைகள் இழுக்கின்ற ஒற்றைச் சக்கரமுடைய தேரில் வருவான். நறை - தேன் ; முளரிப் பொருட்டணை - தாமரைக் கொட்டையாகிய படுக்கை ; மொய்சிறை - நெருங்கிய சிறகுகள் ; பாசடைகள்-பசிய இலைகள்; அஞ்சனம் எடுத்தல்-குற்றத்தைப்போக்க ஆலத்தி சுற்றுதல் ; சூரியனால் தாமரைப்போது மலர்ந்து, அதனின்று தேன் தாமரைப் பொருட்டில் ஊற்ற, அதன் மீது பெண் அன்னத்தோடு ஆண் அன்னம் மகிழ்ச்சி மிகுந்து காதலித்துத் திருமணத்தைச் செய்ய, அங்கிருக்கும் பசிய இலைகள் தன்மீதுள்ள நீர்த்திவலைகளோடு அசைவது நீர் மடந்தை மரகத மணியினால் செய்த தட்டில் முத்துக்களை நிரப்பிக் குற்றத்தைப் போக்க ஆலத்தி எடுத்தலை ஒத்திருக்கு மத்தகைய வளப்பம் பொருந்திய புதுவை என்க. (4)

482. விகடமிகு-குறும்புத்தனங்கள் (துஷ்டவேலைகள்) மிகுந்த; திறுகண்-வலிமை ; கடாம்-மதநீர் ; கரடம் - மதம் பாயும் சுவடு ; ஓதை-சப்தம் ; கலினம் - கடிவாளம் ; மணிக்கால் - சதங்கை கட்டிய கால் ; கவரி அசையும்நுதல்-சாமரைபோன்ற கருவி யசையும்நெற்றி; பொன் திண்திறல் சகடம்-அழகிய வலிய சக்கரம்; உருள் தரவுற்ற - உருளுவதால் உண்டாகிய ; கல்வியூரி-கழகம் ; பூசுரர்-பூமியிலுள்ள தேவர்கள், (அந்தணர்); யானைகளின் ஓசையும், குதிரைகளின் ஓசையும், தேரின் ஓசையும், கல்விக் கழகங்களின் ஓசையும், திருவிழா, கலியாணம் ஆகியவற்றிற்கு அடிக்கும் முரசவாத்தியத்தோடு சங்கீத வோசையும், பிராமணர், தவமுனிவர் ஆகியோர் திருப்தியுற சாப்பிடக் கூப்பிடுமோசையும் விளங்கும் வீதிகள் நெருங்கிய புதுவை என்க. (5)

483. நல்தொண்டு ஆனோர் - அடியவர் ; பஞ்சிறை அனமே - மதர்த்த சிறகுகளையுடைய அன்னமே, பைஞ்சிறை என்பதன் போலி பஞ்சிறை; பஞ்சு + சிறை என்று பிரித்துப் பஞ்சுபோன்ற சிறகுகளையுடைய என்னலுமாம். இங்கு 'சு' தொகுத்தல், அனம் தொகுத்தல்; கற்பகம் - கற்பகத்தரு, இது நினைத்ததைத் தரும் ஐந்து தருக்களிலொன்று ; பிழை இல் மௌனம் என்க; பிறையைத் தரித்தோன் - சிவன் ; தாது ஆடு அளியார்-மகரந்தப் பொடியில் திளைக்கும் வண்டுகள். இங்குப் புவனமெல்லாம் ஒருங்கீன்ற கன்னிகையே என்பதிலுள்ள நயம் காண்க. கன்னிகை - மணமாகாதவள் ; மாசு இல் எழில் கற்பு

அணங்கு அரசே - குற்றமற்ற அழகுடன் கற்பும் கூடிய தெய்வப் பெண்களின் தலைவியே. (6)

484. தனம் - பொருள் ; தீங்கரும்பு - இனிய கரும்பு ; தானே தானுயவதரித்த என்பதில் "சர்வம் சத்திமயம்" என்ற விளக்கம் தெரிகிறது; பிடி - பெண்யானை. (7)

485. பதுமநாபன்-திருமால் ; பனிமை உலவும் மலைமகள் - இமய மலையரசனுக்கு மகளாகப் பிறந்தவள் (பார்வதி) ; தமியேன் - திக்கற்ற வனுகிய நான் ; தண்டாரிதழி - தண்மை + தார் + இதழி, குளிர்ந்த கொன்றைமாலை ; **தாருகனை முன் காய்ந்தவள் :—** தாருகாசூரனால் துன்பமடைந்த தேவர் பெண்களுருக்கொண்டு சிவமூர்த்தியை அடைந்து தமது குறைகளைக் கூறினர். பெண்ணால் அன்றி வேறு எவராலும் இறவாத தாருகனை வெல்ல சிவபெருமான் சத்திக்குக் கட்டளையிட்டார். அப்போது தேவியின் ஒருகலை சிவமூர்த்தியின் விஷக்கறை படிந்து நெருப்புக் கண்ணில் பிறந்து வெளிப்பட்டது. அவ்வுரு காள மாகிய விஷக்கறை படிந்து வந்ததால் காளி எனப்பெயரடைந்தது; இவ்வகைப் பிறந்த காளி தனது கோபாக்கினியினால் தாருகனைச் சாம்ப ராக்கினள். பூரணி - நிறைவுள்ளவள் ; மதுரம் - இனிமை ; மூலாதாரம் சிவானந்தன் பிள்ளைத்தமிழ் தாலப்பருவம் 1-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. (8)

486. மத்த தனம் - யானை மத்தகம்போன்ற தனம். "மத்த கெசத்தை வெறுத்து அணிமொய்த்து மதர்த்த தனத்து எழிலாய்" - மத்தகம் பொருந்திய யானையை உவமையாகாததால் வெறுத்து ஆபர ணங்கள் நெருங்கி மேலெழும்பிய தனங்களின் அழகுடையவளே ; "மைப்புயலைச் செலெனக்கறுவிக் கணமணக்கும் மலர்க்குழலாய்" - கரியமேகத்தைச் செல்வாயாக என்று கோபித்து வாசனைக் கலவை களின் மணம் வீசும் மலர் பொருந்திய கூந்தலை யுடையவளே; "தத்தை இலச்சையுறப் பெருமைக் குதலைச்சொல் உரைக்கும் நலாய்" - கிளியும் வெட்கமடையும்படி பெருமைபொருந்திய குதலைச் சொற்களைச் சொல்லும் பெண்ணே ; "தப்புஇல் அயில் படையைச் சினவிச் சுகிர்தத் தயவுற்ற கணுய்"-கொல்லுவதில் தப்பாத வேல்படையை உவமையாகாத தால் கோபித்து இன்பமும் தயவும் பொருந்திய கண்களை யுடையவளே; சுத்த வளைக்கு இழிவிட்டு மணிக்குழை துற்று ஒளிர் பொன் செவியாய் - நல்ல வள்ளைப் பூவிற்கு இழிவைத் தந்து (உவமையில்) மாணிக்கக் குண்டலம் நெருங்கிப் பிரகாசிக்கும் அழகிய காதுகளை யுடையவளே ; வளை - வள்ளையின் தொகுத்தல் விகாரம். சுப்பிர நல்தரளம் - வெண்மை யான நல்ல முத்து ; சுடர் தண்நகை - ஒளிவிடும் ஈரப் பசுமையுள்ள

பற்கள்; முத்தர் அகப்பதுமம் - முத்தியடையும் முனிவர்களின் மன மாகிய தாமரை; வித்தகி - ஞானமுடையவள். (9)

487 முச்சிகரப்படை - சூலப்படை; முச்செயல் முற்ற அருட் கண் நடத்துவள் - ஆக்கல், அழித்தல், காத்தல் என்ற மூன்று செயல் களும் முடிய அருட்கண் கொண்டு நடத்துபவளே. முப்பகவர் - மூன்று மூர்த்திகள்; பகவர் - கடவுளர்; முச்சுதர் - விநாயகர், வீரபத்திரர், முருகர்; முப்பகை - மண், பெண், பொன் என்ற ஆசைகள்; முச்சுடர் - சூரியன், சந்திரன், அக்கினி; இங்கு முப்புரம் எரித்தது, மூன்று சுடர் களைக் கண்களாகக் கொண்டது சிவனுடையதாயினும் ஒற்றுமை பற்றி அம்மை மேலேற்றிச் சொல்லப் பட்டது (அ) தேவி பாகவதக் கருத்துப் படியும் அம்மைக்கே கொள்ளலாம். (10)

---

## வருகைப்பருவம்

---

488. மை - மேகம்; மனையறம் - இல்லறம்; மாறுத இருவினை - நீங்காது மறுபடி மறுபடி வந்து தன் பயனைத்தரும் புண்ணியபாபம்; இருவினை தொலைத்து என்றார் மேல்வரும் உண்மை விளைவை நோக்கி; இருவினையில் புண்ணியம் பிறவியைத்தருதலின் அதனையும் தொலைத்து எனக்கூறினர். வன்பகை ஓர் ஆறு-காமம், குரோதம், மோகம், லோபம் மதம், மாச்சரியம் என்பன. மாற்றி - கெடுத்து; கைதவம் - வஞ்சனை; உடற்றும்-வருத்தும்; மெய்ப்பொருள் - கடவுள்; ஐந்து என்னும் எரி - நான்கு திசைப் பக்கங்களில் நான்கு தீக்குழிகளும், மேலே சூரியன் ஒன்றும் ஆக ஐந்து; இப்பாட்டு வானப்பிரஸ்தாச்சிரமத்தைப்பற்றிச் சொல்கிறது. வீட்டில் மனைவியோடு இல்லறம் நடாத்தியபிறகு முதிர்ந்த வயதில் மாறுதுவரும் நல்வினை தீவினைகளை நீக்கி ஐம்புலன்களையும் வென்று கொடிய ஆறு பகையையும் கெடுத்து வஞ்சனை மிகுந்த கண்களையுடைய இளைய பெண்களின் சுகங்களை நீக்கி வருத்துகின்ற குளிர், நோய், கடும்பசி இவைகளைப் பொறுத்துக் கடவுளை மனதில் கருதி கொடிய காட்டிலும் மலையிலும் அடைந்து மரவுரி உடுத்தி நான்கு திசைகளில் தீ வளர்த்தி மேலே சூரியன் ஒரு தீயாக ஐந்தீ மத்தியில் தர்ப்பாசனத்திலிருந்து அட்டாங்க யோகங்கள், நிட்டை இவைகளைப் பலநாள் முயன்று தவம்புரிகின்ற முனிவர்கள். தினமும் துதிக்கும்

திரிபுரசுந்தரியே என்று முடிக்க. "நீர் பலகால் மூழ்கி நிலத்தசைஇ தோல் உடீஇ..............வானகத்துய்க்கும் வழி." என்ற புறப்பொருள் வெண்பா மாலைப் பாட்டை நோக்குக. (1)

489. மகபதி மணந்த மகள்-இந்திராணி; நதிபதியயந்த மகள்-திருமகள்; மலரயன் விழைந்தருள் மகள் - சரசுவதி; விசைய மகள் - விசய இலக்குமி; சகச்சிரமுக-ஆயிரமுகங்களை உடைய; மந்தாகினி - கங்கை; ககனமுறு கற்பு மகள் - ஆகாய வாணி; பொறைகொள் சீர் அவனி மகள்-பொறுத்தலைக் கொண்ட சிறப்புடைய பூமிதேவி; கடவுள் குஞ்சரி எனும் மகள்-தெய்வயானை; கவினுரும் இரதி மகள்-அழகுடைய இரதி தேவியாகிய பெண். இரதி மகள்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை; அரமகளிர் - தேவப் பெண்டிர்; மாசில் மன வாசமகள்-குற்றமற்ற மனதில் தங்கியிருக்கும் மகள்; செழியர்கோன் - பாண்டிய அரசன்; வனமாலி - திருமால்; வேதவன நாதர்-வேதவனத்தில் எழுந்தருளியுள்ள சிவன்; வரந்தரு மகள் முதல் செழியர்கோன் மகள் வரை திரிபுரையைக் குறிக்கின்றன. (2)

490. மஞ்சு-மேகம்; தகரம்-வாசனைப் பண்டத்தைத் தரும் ஓர் மரம்; மதுமலர்-தேனையுடைய மலர்; வண்திலகம் நுதலில் - வளப்பம் பொருந்திய பொட்டு நெற்றியில்; சுட்டி-நெற்றியில் தொங்கும் ஓர் ஆபரணம்; மணிப்பட்டம்-அழகிய நெற்றிப் பட்டம்; எஞ்சுதல் இலா-குறையாத; மணித்தொங்கல்-மாணிக்கத்தாலாகிய காதணி; ஏடுஅவிழ் நறுங்காந்தள் ஒத்த-இதழ்மலர்ந்த வாசனை வீசும் காந்தட் பூப்போன்ற; அஞ்சனம் - மை; உரம்-மார்பு; அவிர் தரள மாலை - விளங்கும் முத்துமாலை; உதர பந்தனம்-அரைப்பட்டிகை; கிரணம் மணி ஆர்ந்த மேகலை-ஒளிக்கிரணங்களை வீசும் முத்துக்கள் பதித்த மேகலாபரணம்; மலர் செஞ்சரோருகமென சரணகிண்கிணி என்று பிரித்துக் கூட்டுக. மலர் செஞ்சரோருகம் - மலர்ந்த செந்தாமரை, வினைத்தொகை. (3)

491. உரகம் - பாம்பு; சைலம் - மலை; பரிமளக் குழலி-வாசனை வீசும் கூந்தலையுடையவள்; சுருதி - வேதம்; அடியவர்கள் துதிநிதி - அடியவர்கள் துதிக்கும் செல்வமே; சமர பயிரவி - போரில் அச்சம் கொடுப்பவள்; சிங்கவாகினி - சிங்கத்தை வாகனமாகக் கொண்டது சும்பநிசும்பர்களைக் கொன்றபோதும் இன்னும் பிற காலங்களிலுமாம். (4)

492. கயம் - யானை; மூன்று உலகம் - சொர்க்க, மத்திய, பாதளம்; சிறு விதி - தக்கன்; நவப்பிரம்மாக்களில் ஒருவனானதால் 'சிறுவிதி' எனப் பெயர்பெற்றான். நயங்கொண்ட அருள் பராசத்தி

யுனை - விரும்பித் தகப்பனாராக ஏற்றுக்கொண்ட அருளையுடைய பரா சத்தியாகிய உன்னை ; ஞானமூர்த்தி - சிவபெருமான் ; சங்கேந்தி - திரு மால் ; உள்பரிவு-மன வன்பு ; மகம் - யாகம் ; படருற - அழிய ; இப் பாட்டில் தக்கனது யாக அழிவு கூறப்படுகிறது. இவன் சிவமூர்த்தியை வேண்டித் தவஞ்செய்து உமையைத் தன் மகளாக அடைந்து சிவ பெருமானை மருமகனாக்கிக் கொண்டான். மருமகனைக் காணவேண்டி கைலைக்குச் செல்ல, பூத கணங்களால் தடைப்பட்டுக் கோபங்கொண்டு சிவபெருமானை நீக்கி, திருமாலை யாகத் தலைவனாகக் கொண்டு வேள்வி செய்தான். இதைக்காண தாட்சாயணி வந்தாள். தக்கன் அம்மையை உபசரிக்காதிருக்கக் கோபங்கொண்டு வீரபத்திரனைச் சிவபெருமானைக் கொண்டுசிருட்டித்து அனுப்பி யாகத்தை அழித்துவரச் செய்தாள். வீரபத்திரன் தக்கனைக் கொன்றும் மற்ற தேவர்களையும் சின்னபின்னஞ் செய்தும் யாகத்தை அழித்தான். தக்கன் தலையைப் பூதம் விழுங்கின தால் பிரமன் அவனை எழுப்ப வேண்டியதன்படி ஆட்டுத்தலையைப் பொருத்திச் சிவபெருமான் எழுப்பினார். (5)

493. பூங்கதலி - அழகிய வாழை ; தேமா - தேன்போல் இனிய பழந்தரும் மாமரங்கள் ; தெங்கு - தென்னைமரம் ; திண்ணம் - வலிமை ; கமுகு - பாக்கு மரம் ; தடம் - குளம் ; கா - சோலை ; முத்து உயிர்க்கும் - முத்துக்களை ஈனும் ; குருகு - நாரை ; அனக்குழுவு - அன்னக் கூட்டம், தொகுத்தல் விகாரம் ; தண் அம் பழனம் - குளிர்ந்த அழகிய வயல்கள், இதில் அம் சாரியை. (6)

494. கோட்டம் - ஒரு வாசனைப் பண்டம், "கொடிச்சிய ரிடித்த சுண்ணங் குங்குமங் கோட்ட மேலம்" (இராமா. ஆற்றுப் 13) ; அகில்- ஓர் வாசனைப்பொருள் ; இப்பெயருடைய மரத்தினின்று கிடைப்பது. தக்கோலம் - சிறு நாவற்பூ ; நாவி - கத்தூரி, மயிற்பீலி - மயில் தோகை. இலகும் இருலி - விளங்கும் இருல், இருல் என்பது இருலி என மரீயது ; இறை - அரசன் ; ஒக்கோலை - அம்பர், இதனைச் சிந்தா மணியில் "ஓர்க்கோலை" என்பர். இக்கு - கரும்பு ; சலதி - கடல் ; குங் குமம், மிளகு, கோஷ்டம், அகில், தக்கோலம் ஆகிய மலைபடு பொருள் களும், தேன், நாவி, மயிற்பீலி, இருல், அரக்கு ஆகிய காடுபடு பொருள் களும், யானை, பித்தன், கருங்குரங்கு, வேந்தன், கண்ணாடி ஆகிய நகர் படுபொருள்களும், வாழை, செந்நெல், சிறுபயறு, கரும்பு, இளநீர் ஆகிய நாடுபடு பொருள்களும், சங்கு, உப்பு, பவளம், ஒக்கோலை, முத்து ஆகிய கடல்படு பொருள்களும் நிறைந்துள்ள புதுவையின்கண் கோயில் கொண்டுள்ள தாயே வருக எனப்பொருள் கொள்க. (7)

**495.** நானுகலை வல்லோர்கள் நிதம் நாடிப் புகழும் துரந்தரி எனப் பிரிக்க. கலைவல்லோர்கள் - வினையாலணையும் பெயர். நகுமா மணி பல்தலை அனந்தன் - அஞ்சத்தக்க, மாணிக்கங்களையுடைய பல தலைகளையுடைய ஆதிசேடன்; அனந்தன் நாகம் - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை; அமராதிபதி - இந்திரன்; அதிபதி என்பதின் நீட்டல் விகாரம் ஆதிபதி; மென் சொல் குதலை அம்சுகம் - மெல்லிய சொற்களான குதலைச் சொற்களைப் பேசும் அழகிய கிளி; தேனுராளகம்- தேன்பொருத்திய மலர்களை அணிந்த கூந்தல்; அரம்பையர்கள் - தேவப் பெண்கள்; தான ஆபரணர் - தருமத்தையே ஆபரணமாக உடையவர்கள். (8)

**496.** திருமகன் - திருவுக்குத் தலைவன், திருமால்; பதும மென் பதம் - தாமரைபோன்ற மெல்லிய பாதம்; பவபயங்கரி - பாவத்திற்குப் பயத்தைச் செய்பவள் பகருஞ்.......சங்கரி - திரிபுரம் எரித்தது காண்க; மது - தேன்; மலர் நறுந்தொடை - மலராகிய வாசனை வீசும் மாலை; மகரம் ஒண்கடல் விடம்-மகரமீன் (சுறுமீன்) உலாவும் பாற்கடலில் தோன்றிய ஆலகாலவிஷம்; கந்தரி - கழுத்தை உடையவள்; பொதுவில் இங்கிதமுடன் - மன்றத்தில் இனிமையோடு; காளிக்கும் சிவனுக்கும் நடனம் புரிவதில் போட்டிவர சிவன் குண்டலம் நடனத்தில் கீழேவிழ யாருமறியாது எடுத்துப் போட்டுக்கொண்டு காளியை வென்றார். இப்பாட்டில் திரிபுரம் எரித்ததும் விடமுண்டதும் ஒற்றுமை பற்றிப் பார்வதிக்கும் கூறப்பட்டன. (9)

**497.** மங்குல் - மேகம், இது மழைக்கு ஆகுபெயராக நின்றது; இடர் - துன்பம்; மங்கிட - கெட; பிணி - நோய்; மருவருந்தவம் என்றார் "தவமும் தவமுடையார்க்காகும் அவம் அதனை அஃதிலார் மேற்கொள்வது." என்னும் கருத்துப்படி; உருகும் அன்பு என்க; மன்பதை- உலகத்திலுள்ள உயிர்கள்; உழல் உறுகண் நைந்திட - வருந்தும் துன்பமழிய; பொருநர் - அரசர்; புரந்திட - காப்பாற்ற. (10)

---

# அம்புலிப் பருவம்

| 498. | சந்திரன் | திரிபுரசுந்தரி |
|---|---|---|
| 1. | மேருமலையைத் தினமும் வலம் (சுற்றி) வருவான். | மேருமலையைத் திரிபுரங்களை அழித்தபோது வில்லாக எடுத்து வலம் (வெற்றி) கொண்டாள். |
| 2. | சிவபெருமானுக்கு ஒளிவிளங்கும் இடக்கண்ணாக ஆனான். | அக்கடவுளைப் பிரியாமல் அழகு தோன்றுகின்ற இடக்கண் (இடப்பக்கத்தினிடம்) ஆயினாள். |
| 3. | குளத்தில் வண்டுகளிசை கொண்டு தேன் பெருகும் வனசம் (தாமரை) வெறுத்திடுவான். (இவன் தோன்றியதும் தாமரை குவிவதால்.) | உண்மையன்பு இல்லாத மூடர்களின் மனமான வனசத்தை (தாமரை) வெறுத்திடுவாள். |

அம்கண் உலகு அருள் உமை - அழகிய இடமகன்ற உலகைப் படைக்கும் உமாதேவி. (1)

| 499. | சந்திரன் | திரிபுரசுந்தரி |
|---|---|---|
| 1. | இயமம், நியமம் முதலிய அட்டாங்கயோக நிலைமையடைந்த முனிவரான அத்திரி தன் (அத்திரி என்ற முனிவன்) மகன். | விண்ணளவு உயர்ந்து உயர்வு பெற்ற இமய அத்திரி (இமய மலை) பெற்ற மகள் (அத்திரி-மலை). |
| 2. | வெற்றி மிகுந்த பச்சைக் குதிரைகள் ஏழுகட்டிய தேரை உடைய வாளரிக்கு (ஒளி பொருந்திய சூரியனுக்கு) உற்ற துணைவன். | இரணியனது மார்பினைப் பிளக்கும் நகத்தைக் கொண்டுள்ள வாளரிக்கு (நரசிங்கமான திருமாலுக்கு) உற்ற துணைவி (சகோதரி) யாவாள். |
| 3. | நீர் நிலையை யடைந்து இதழை மலரச் செய்யும் ஆம்பலுக்குக் (அல்லி மலருக்கு) காதலன், | பாரதத்தை மேருமலையில் தன் கொம்பினால் எழுதும் ஆம்பலுக்கு (விநாயகப்பெரு |

(சந்திரன் கிரணங்களால் மானுக்கு) ஆசையுடையவள். அல்லி மலர்வதால் இங்ஙனம் கூறினர்).

இங்கு அம்மைக்குக் காதலன் என்ற குறிப்பு வினைமுற்றைத் தந்தது "அண்ணாமலையான்" என்று தொடங்கும் திருவெம்பாவையில் "பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்" என்று கூறுவதால். யாம் மதிக்கில் அயர்வி லுறை-நாங்கள் யோசிக்குமிடத்துச் சந்தேகமில்லாமல் தங்கும். **அத்திரி தன் மகன்:-** அத்திரி மகாமுனிவருக்கும் அனசூயைக்கும் சந்திரன், துர்வாசன், தத்தாத்திரேயன் என்ற மூவர் பிறந்தவர். இச்சந்திரனே உலகிற்கு வெளிச்சம் தருபவன். ஆதியில் விஷ்ணுவின் இருதயத்தினின்றும் சந்திரன் தோன்றினன். அவனுக்கு இரண்டு உருவங்கள். அவற்றுள் ஒன்று சிவனுக்குத் தலையணியாகியது; மற்றொன்று உலகத்திற்கு வெளிச்சந்தருவது ; மற்றும் பாற்கடல் கடையும்போது சந்திரன் தோன்றினன். (விஷ்ணுபுராணம்) (2)

| 500. சந்திரன் | திரிபுரசுந்தரி |
|---|---|
| 1. நிறைமதி (கலைகள் நிறைந்த சந்திரன்) எனப் பெயர் படைத்தான். | பெரிய கருணை நிறைமதி (கருணை நிறைந்த புத்தி) படைத்தனள். |
| 2. சிவபெருமான் சடிலமீது (சடையில்) உலவுவான். | வேதமாகிய நீண்ட சடிலமீது (குதிரைமீது) உலாவுவாள். (சிவன் வாதவூரடிகணிமித்தம் குதிரை கொணர்ந்த போது, தான் வேதக்குதிரை மீது வந்தார்). |
| 3. பொறையின் மேல் (மலையின் மேல்) ஆவான் (உண்டாவான்). "மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத், தலை மிசைக்கொண்ட குடையர்..." என்ற காலடியார்ச் செய்யுளைக் காண்க. | அடியார்களுடைய பிழைகளை எண்ணி பொறையின் மேல் (பொறுத்தலின் மேல்) இருப்பாள். (எண - செய்யா எ.வா.வினையெச்சம் செய்து எனத்திரிந்தது). |
| 4. புலவனை (புதனை) உலகினுக்குத் தந்தவன். சந்திரனுக்கும் பிரகஸ்பதி மனைவி தாரைக்கும் பிறந்தவன் புதன்; இவன் சந்திரனுக்கு மகனென்பதைப் | கலைகள் பல உணர்கின்ற புலவனைப் (சுப்பிரமணியனை) பெற்றவள். (முருகன் தலைச்சங்கம், இடைச்சங்கத்திலும் புலவராக இருந்ததாலும் முருகன் |

| | |
|---|---|
| பிரமன் தாரையிடம் கேட்டு உண்மை தெரிவித்தார்). | தமிழ்க் கடவுளாகையாலும் இங்ஙன் கூறினர்). |

குணம் குறி - குணமும், செய்கையும், உம்மைத்தொகை, முதலடி குணத்திற்கும், மற்ற மூன்றடிகளும் செய்கைக்கும் கூறப்பட்டுள்ளன. காத்திடுதல் - குறிக்கோளாகக் கொண்டு தன்னிடம் தங்கியிருக்கச் செய்தல்; கோகனக மலரோன் பணிந்து அறை துதி கொள் நூபுரம் பொற்பதச் செல்வி - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் பணிந்து கூறும் துதிகளைக் கொண்ட சிலம்பணிந்த அழகிய பாதமுடைய செல்வி. (3)

| 501. **சந்திரன்** | **திரிபுரசுந்தரி** |
|---|---|
| 1. கதிரவன் (சூரியன்) உடைய வெய்யில் முன் ஒளி குறையும் வெண்கலை (வெண்மையான பதினாறு கலைகளை)த் தரித்தான். | ஆயிரம் கதிரவர்களைக் (சூரியன்) காட்டிலும் ஒளி விளங்கும் மாணிக்க மேகலை (மாணிக்கத்தாலாகிய மேகலை) தரித்தாள். |
| 2. பிரம்மனை அருளின திருமால் உறங்கும் பால் வெள்ளத்துள் (பாற்கடலில்) உதித்தவன். | உண்மையான ஞானிகளுக்கு மோட்சமாகிய வீட்டைக் கொடுக்கும் சிவானந்த வெள்ளத்துள் உதித்தவள். |
| 3. உரோகிணி முதல் இருபத்தேழு பெண்களுக்கும் இனிய தலைவன் (கணவன்); (சதி - உரோகிணி). | நாங்களும், அவ்விருபத்தேழு பெண் முதல் அரமகளிரெல்லாம் தொழும் இலக்குமி முதல் தெய்வ மடந்தையர்க்கெல்லாம் தலைவியாவள். |

இப்பாட்டில் கதிரவன் முன் ஒளி மழுங்கும் வெள்ளிய கலை தரித்தவள் என்பதால் சந்திரனுக்குத் தாழ்வும் ஆயிரம் சூரியர்களைக் காட்டிலும் ஒளி விளங்கும் மாணிக்க மேகலை தரித்தனள் என்பதால் பார்வதிக்கு உயர்வும் திருமால் தூங்கும் பாற்கடலில் உதித்தவன் என்பதால் இவனும் சோம்பலுடையவன் என்ற தாழ்வும், ஞானமுள்ள யோகிகளுக்கு மோட்சமாகிய வீட்டைக் கொடுக்கும் சிவானந்த வெள்ளம் என்பதால் பார்வதிக்கு உயர்வும் உரோகிணி முதல் இருபத்தேழு பெண்களுக்கே இவன் தலைவன் என்பதால் தாழ்வும், இலக்குமி முதல் உள்ள தெய்வ மடந்தையர்க்கு எல்லாம் தலைவி என்பதனால் பார்வதிக்கு உயர்வும் கொடுக்கப்பட்டுள்ளமை காண்க. (4)

502. சந்திரன் — திரிபுரசுந்தரி

| சந்திரன் | திரிபுரசுந்தரி |
|---|---|
| 1. மழைத்துளி சிந்தி இடி இடித்துச் சப்திக்கும் அகன்ற வானத்தில் உலவும் மேகத்தில் சரீரத்தை மறைத்துக் கொள்வான். மங்குலின் உள் மெய் ஒடுங்கும் எனப் பிரித்துச் சேர்க்க. | இவள் தனது பச்சை நிறமான உடலின் ஒளியினால் கரிய மேகத்தை ஒடுக்கினாள். |
| 2. கரும்பேந்துகின்ற உருவிலானுக்குச் (மன்மதனுக்குச்) சத்திரமாக (குடையாக) ப் பொலிந்தான். | இவள் உருவை உடைய உயிர்கள் உண்ணுகின்ற அன்னத்திற்கான சத்திரம் (சோறு போடும் சாலைகள்) பல வைத்தாள். |
| 3. பிழைப்பதற்காக எளிய இராகுவெனும் பாம்புக்கு மனம் அஞ்சி வெருண்டோடுவான். | பெரிய பாம்பைக் கங்கணவணியாக இவள் பூண்டவள். |

விட வாயரவு - இராகு, கேதுக்களில் ஒன்று. (5)

503. முன் இகலர் ஊர் நகைத்து அட்டநாள் இறைவனால் முறிபட்ட தேர்ச்சில்லி - முற்காலத்தில் பகைவராகிய திரிபுராதிகளின் முப்புரங்களை சிரித்து அழித்த நாளில் இறைவனான சிவபெருமானால் முறிபட்ட தேர்ச் சக்கரமானவன்; திரிபுர சங்காரத்தின்போது தேவர்கள் கர்வங் கொள்ளவே அதையடக்கச் சிவன் தேரை பூன்ற அச்சு முதலியன முறிந்தன; இதுவே அச்சிறு பாக்கம் என்ற தலம். விநாயகரைப் பூசியாததால் முறிந்தது என்றும் புராணம் கூறும். திரிபுரம் எரித்த போது தேவர்கள் சிவனிடம் கொணர்ந்த தேருக்குச் சூரிய சந்திரர் சக்கரங்களாயினமை நோக்கி இவ்வாறு கூறினர். மூடிகப்பாகன் இடு சாபம் மாறாது கூன்முதுகு உற்ற கயரோகி - விநாயகன் இட்ட சாபம் நீங்காமல் வளைந்த முதுகை யடைந்த க்ஷயரோகியானவன் ; கோள் பன்னகக் கொடிய......எச்சில் - கிரகமாகிய இராகுவெனும் பாம்பினது கொடிய விஷவாயினால் உண்டு பார்த்து உமிழ்ந்திடுகின்ற எச்சிலாவன்; பாகீரதிச் சக்களத்தி......குருத்துரோகி - கங்கையாகிய, அம்மையின் சக்களத்தியின் தலைவாசலில் அன்புடன் தங்கும் குருவாகிய பிரகஸ்பதியின் மனைவியான தாரையை அபகரித்துத் துரோகம் செய்தவன். மின்னனார் ...மதி - பெண்கள் வீதியில் கூடி எருவிட்டு வீசப் பொருந்தும் சிறு பிறைச் சந்திரன் ஆனவன்; **விநாயகன் சாபம் கொடுத்த வரலாறு :-** நாரதர் சிவன் முன்னிலையில் கொண்டு வந்த மாங்கனியைப் பிரமன்

முருகனுக்குக் கொடுக்கவேண்டுமென்று சொல்ல கணபதி அவரைக் கோபித்தார். சந்திரன் அது போழ்து விநாயகரைக் கண்டு நகைத்தான். விநாயகர் கோபமுற்றுச் சந்திரனை ஒளி இழக்கவும் சண்டாளத்துவம் பெறவும் சபித்தார். மீண்டும் அவன் வேண்ட, அவரால் அச்சாபம் வருடத்திற்கு ஒரு நாளில் அடைய வரம் பெற்றான். **கயரோகி :-**தக்கன் பெண்கள் இருபத்தெழுவரை மணந்து அவர்களிடம் ஒரேமாதிரி ஆசை வைக்காமல் கார்த்திகை, உரோகிணி இவர்களிடம் மாத்திரம் அன்பு வைத்ததால் மற்ற பெண்கள் தந்தையிடம் குறை கூற தக்கன் நாள் தோறும் ஒவ்வொரு கலை தேயவும், கயரோகம் அடையவும் சாபம் தந்தான். **பாம்பு உண்டு உமிழ்வது :-**தேவாமுதம் உண்ணும்போது இராகு,கேது என்ற அசுரர்கள் தேவவுருக்கொண்டு வந்து உண்ண அவர்களைச் சூரியசந்திரர் மோகினி உருக்கொண்ட திருமாலுக்குக் காட்டினமையின் அவரால் பகைமை கொண்டு மாறிமாறி விழுங்கப் பெறுவர். **குருத்துரோகி :-**பிரகஸ்பதியிடம் கல்வி கற்கும்போது, பிரகஸ்பதியின் மனைவியாகிய தாரையைப் புணர்ந்தவன். அப்போது புதன்பிறந்தான். **எரு விட்டெறிதல் :-**கன்னியர்கள் நல்ல கணவனை அடைய பிறையைத் தொழுவது வழக்கம். அதுபோழ்து எரு விட்டெறிந்து வழிபடுவர். கோவை நூல், குற்றாலக் குறவஞ்சி இவைகளில் இவ்வரலாறு காணலாம். சிறுமதி - பிறைச்சந்திரன்; பாகீரதி - கங்கை; பகீரதன் கங்கையைக் கொணர்ந்ததால் இப்பெயர் உண்டாயிற்று. பாகீரதிச் சக்களத்தி-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இப்பாட்டில் சந்திரனது தாழ்வையெல்லாம் எடுத்துக் கூறி அம்மையின் உயர்வை உய்த்துணரவைப்பதால் பேதம் தொனிக்கிறது. உதாரணமாக "பன்னகக்.... எச்சில் நீ" என்பதற்குப் "பதஞ்சலியெனும் பெரிய பாம்பினை யெடுத்து நம் பாவை திரு முன் வைத்திடும்" என்ற சிவ. பிள்ளைத்தமிழால் உயர்வு விளங்கும். இங்ஙனமே மற்றவை காண்க. (6)

504. வானூடர் பதி - இந்திரன் ; **கௌதமர் சாபம் :-**இந்திரன் கௌதமர் மனைவியாகிய அகலிகையிடத்து ஆசையுற்றவனாய் அவரை ஸ்நானத்திற்குப் போக நடு ராத்திரியில் சேவலாகிக் கூவி எழுப்பி அவர் சென்ற பின்பு அவரைப்போல் உருவெடுத்துச்சென்று அவர் மனைவியுடன் புணர்ந்து முனிவரிடம் அகப்பட்டு அநேகம் யோனிகள் தேகத்தில் உண்டாகவும் ஆண்குறி நீங்கவும் சாபம் பெற்றான். அந்த காரணத்தினால் தாமரைத் தண்டில் நெடுநாள் ஒளிந்திருந்தான். இந்திரன் இத்தலத்தில் பூசித்ததால் அச்சாபம் நீங்கி வேதமும் பெற்றான். இவ் வரலாறு இத்தல புராணத்திலுள்ளது போலும். கீழ் வரும் வரலாறுகளும் இங்ஙனமே கொள்க. மௌனயோகம்........பெற்றது :-பிரமன் மௌனமாக அட்டாங்க யோகங்களைப் பயின்று அந்தரங்கப் பூசை

**விதிகளைக் கற்றனன். மேனாள் உருத்திராக்கம்..........மேதாதி கதி பெற்றது :-**முன்னொருநாளில் உருத்திராட்சம் அணிந்து இத்தலத்தை யடைந்த 'மேதாதி' என்பவன் மோட்ச மடைந்தான். மேவு இராமன் சிவ அர்ச்சனை செய்து பாசுபதம் விசிகம் நண்பொடு பெற்றது - இத் தலத்தை அடைந்த தசரதராமன் சிவனைக் குறித்து வழிபாடியற்றி பாசுபதமாகிய அம்பை நட்புத்தன்மையில் பெற்றான். மேவு இராமன் - வினைத்தொகை; பாசுபத விசிகம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நண்பொடு என்பது இராமர் திருமாலமிச மாதல்குறித்து. **அந்தகாசூரன்:-**சிவபெருமான் கண்களைப் பிராட்டியார் விநோதமாக மூடியபோது உண்டான அச்சத்தால் தேகத்தில் வேர்வை உண்டாயிற்று. அவ்வேர்வையானது இறைவன் நெற்றிக்கண்ணால் சூடுண்டு, மூடிய விரலிலேயே ஒரு கர்ப்பம் உண்டாயிற்று. அவ்வகைக் கருவில் அசுர உருவமாக ஒருவன் கோரத்துடன் பிறந்தான். இவன் பிறவிக் குருடனாகத் தோன்றியதால் அந்தகன் எனப் பெயருற்றான். இவன் இரண்யாக்கதனுக்குச் சிவபெருமானால் கொடுக்கப்பட்டுப் பிரம்மதேவரைக் குறித்துத் தவம்செய்து ஒருவராலும் செயிக்கப்படாத வன்மையும் கண்களும் பெற்றான். பின் பார்வதி தேவியைக் கண்டு மோகித்துச் சிவபெருமான் மீது யுத்தத்திற்கு வர அவரது சூலத்தால் குத்தப்பெற்று அச்சூலத்தின்மேல் பலநாள் உலர்ந்திருந்து சிவபெருமானைத் துதித்ததால் கருணை பெற்றுச் சிவகணத்தவனாயினான். அங்கி - அக்கினி தேவன்; தேவலன் - அட்டவசுக்களில் ஒருவனான பரத்தியூஷன் குமாரன் போலும்; ஆனாத - நீங்காத; முப்புரர் - வித்துன் மாலி, தாரகாட்சன், கமலாட்சன் என்பவர். (7)

505. துளை எயிறு - துளையை உடைய பல்; வாளரவம்-ஒளியை உடைய பாம்பு; திடம் கொதிக்கும் தக்கன் - வலிமை மிகுந்த தக்கன்; **சந்திரன் காலினால் தேய்ப்புண்டது:-**தக்க யாகத்தில் வீரபத்திரரால் தேய்ப்புண்டு பின் அனுக்கிரகம் பெற்றான். செங்கதிர் - சூரியன்; சேணிடை-ஆகாயத்தினிடம்; மடம் கொதிக்கும் தகை இராவணன் - அறியாமை மிக்குள்ளதகுதிவாய்ந்த இராவணன்; **மாயவனெனும் தமையனால் இலங்கையில் வரவைத்தது :-**இராவணன் இலங்கையை ஆண்டு கொண்டிருந்தபோது சூரியனைத் தன் ஊருக்கு வர வொட்டாமல் தடுத்தும் அவனோடு மற்ற கிரகங்களையும் தன் ஆசனத்திற்குப் படியாக இட்டும் கொடுமைப் படுத்தினான். இராமர் இராவணனைக் கொன்று பழையபடி செய்தார். இங்கு இராவணன் சூரியனை மட்டும் வரவொட்டாமல் தடுத்ததனால் சந்திரனும் பயந்தான். கிரகங்களைப் படிகளாக இட்டது பண்டைக் கதைகளாக முதியோர் கூறுகின்றனர். அடம் கொதிக்கும் புத்தி - அடமிகுந்த புத்தி. (8)

506. நவமேவு-புதுமை பொருந்திய; நணுகாதிருத்தல் கண்டால் நம் அன்னைக்கும் பகை செய்தனை - அடையா திருப்பதைப் பார்த்தால் நம் தாயான பார்வதிக்கும் பகை விளைவித்தாய்; வேழமுக நாதன் - விநாயகர்; தவிராதிருக்க - நீங்காதிருக்க; மேலும் சினந்தனன் என்ன தான் செய்வானோ எனப்பிரிக்க. இதில் வரும் ஓகார இடைச்சொல் சிறுபான்மை யாக வரும் ஐயப்பொருளது. தக்கன் யாகத்தனைக் காலினால் தேய்த்தவன் - வீரபத்திரன்; நீ உற்பவமாகும் வேலைதனில் வேலை விட்டோன் - நீ பிறக்கும் பாற்கடலில் வேலைச் செலுத்திய வனான முருகன். சூரபதுமன் மாமரமாக கடல் நடுவண் நின்று துன்பஞ் செய்ய அதுபோது வேலைச் செலுத்தி யழித்தான். ஒற்றுமை பற்றி பாற்கடலெனக் கூறினர். உறுக்கில் - பறுமுறுத்தினால்; பார்வதி கூப் பிடவும் வாராதிருப்பதால் பார்வதிக்கும் பகைவனாய் என்று விநாய கன் முன்னம் உனக்குச் சாபம் கொடுத்தது நீங்காதிருக்க மேலும் கோபித்து என்னதான் செய்வானோ; தக்கன் யாகத்தில் உனைத்தேய்த்த வீரபத்திரன் மறுபடியும் கோபிப்பான்; நீ இவர்களுக் கெல்லாம் பயந்து நீ பிறந்த கடலில் போய் ஒளித்தாலும் முருகன் மிக்க பகை கொண்டு, வேலாயுதத்தை விட்டு நீர் சுவறச் செய்து பயமுறுத்தினால் எந்த உலகத்திலும் உன்னைப் பாதுகாப்பவர் இல்லை எனப் பொருள் கொள்க. (9)

507. நமன் - யமன்; இவனை உதைத்திட்டது திருக்கடவூரில் மார்க்கண்டருக்காக; நளினத் திருப்பாதம் - உவமைத் தொகை; வேள் - மன்மதன்; நயனம் - கண்; உம்பர் - தேவர்; கம் பத்தன் - தலை பத்தினையுடைய இராவணன்; உந்தியில் உதித்தவன் - பிரமன்; இப்பாட்டில் சிவபெருமானுடைய செயல்கள் பார்வதிக்கு ஏற்றிக் கூறப்பட்டுள்ளன. மார்க்கண்டனுக்காக எமனைக் கீழே விழ உதைத்த கால்கள், மன்மதன் எரியுமாறு கோபித்த நெற்றிக் கண், திரிபுரத்தை எரித்தழித்த புன்சிரிப்பு, பிரமனுடைய தலையைக் கொய்த நகம், இராவணன் கைலை மலையைத் தூக்கும் போது கோபித்து அவன் கீழே கிடந்து அலறுமாறு அழுத்திய கால் விரல், தாருகா வனத்து இருடிகள் விட்ட யானை, புலி, பாம்பு இவைகளை வென்ற திறமை, நரசிங்கத்தின் வலிமையை அடக்கச் சரப மூர்த்தியானது ஆகியன சிவபெருமானுக்கு உடைமையாதல் காண்க. அம்பரம் - ஆகாயம்; கட்செவி - பாம்பு; பம்பரம் காட்டுதல்-கலங்கவைத்தல், கம் பத்தன் மலைவெடிப்பிற் கிடந் தலறினது - இராவணன் புட்பகவிமானம் செலுத்திச் செல்கையில் கைலைமலைவர அதற்குமேல் செல்லாமல் நின்றது. நந்தி சிவபெருமான் இருக்கையெனக் கூறவும் இராவணன் அவரைக் "குரங்குமுகா" என இகழ அவர் குரங்குகளாலேயே உன் ஊர் நாசமாகுக எனச்சாபம்

கொடுக்கப் பின் இராவணன் கைலையைப் பெயர்க்கத் தொடங்கினான். கைலை அசைய பார்வதி நடுங்கிச் சிவனை யணைக்க அவர் உணர்ந்து கால் விரலா லழுத்த உள்ளே அழுந்தி திக்குமுக்காடினான். பின் நாரதருப தேசப்படி தலையொன்றும் கையொன்றும் அறுத்து வீணை வடிவாக்கிச் சாமவேதம் பாடி உய்வும், வரமும் பெற்றனன். திரிபுரவரலாறு 469-ஆம் பாட்டின் குறிப்பிலும், பிரமன் தலையைக்கொய்த வயிரவர் பிறப்பை 355-ஆம் பாட்டின் குறிப்பிலும் காண்க. **தாருகாவனத்து இருடிகள்** சிவனை மதியாமையால் அவர்கள் செருக்கையடக்கத் தான் பிக்ஷாடனராகவும் திருமால் மோகினியாகவும் வடிவு கொண்டு செல்ல அப்போது முனிபத்தினிகள் சிவனைக் காதலித்துக் கற்பு நிலைதவறவும், முனிவர்கள் மோகினியைக் காதலித்து தவநிலை மாறவும் செய்தார். முனிபத்தினிகளின் கற்பு கெட்டதை நோக்கிய முனிவர்கள் ஆபிசாரயாகஞ் செய்து அதினின்று வந்த யானை, புலி, பாம்பு, மான், முயலகன் ஆகிய ஏவினர். யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்தியும், புலியைக் கொன்று அதன் தோலை உடையாக உடுத்தியும், பாம்புகளை ஆபரணமாகக் கொண்டும், மானை இடக்கையிலும், முயலகனாகிய பூதனை அடக்கிக் காலின் கீழும் வைத்து விளங்கினர். **சிங்கம்:-** இரணியனைக் கொன்ற நரசிங்கத்திருவுரு அவனது இரத்தத்தைக் குடித்து வெறி கொண்டு ஆட பிரகலாதனை யனுப்பியும் இலக்குமியை முன்புறம் நிறுத்தியும் கோபம் தணியாது கொடுந் தொழில் புரிந்ததால் தேவர் சிவனை வேண்ட அவர் சரபப்புள் வடிவங் கொண்டு வந்து சிங்கத்தைத் தாக்கி அதன் தோலை உரித்துப் போர்த்தினார். பிருகு முனிவர் சாபப்படி திருமால் பத்து அவதாரங்கள் எடுக்க, அதுபோது முன்பு சிவார்ச்சனை செய்ததால் சிவன் கொடுத்த வரத்தின்படி முதலைந் தவதாரங்களில் சிட்சித்தும் மற்ற ஐந்து அவதாரங்களில் இரட்சித்தும் காத்தார். (10)

## சிற்றில் பருவம்

**508.** வட்ட வாளக்குன்று - சக்கரவாள மலை; புரிசை - மதில்; திளைந்த - நெருங்கின; புறக்கடல் கோட்டை சூழ் அகழியா - பெரும் புறக்கடல் கோட்டையைச் சூழ்ந்த அகழியாக; அட்டகுல கிரிகள் - எட்டு மலைகள், (இமயம், மந்தரம், கைலை, விந்தம், நிடதம், ஏமகூடம்,

நீலம், கந்தமாதனம்) ; கொத்தளம் - அரண் ; மாதிரத் தலைவர் - எட்டுத்திக்குப் பாலகர்கள் ; தென்புதுவை - அழகிய புதுவை ; வாமம் - இடப்பாகம் ; சக்கரவாள கிரியே மதிலாகவும், நெருங்கிய பெரும்புறக் கடலே கோட்டை சூழ்ந்த அகழியாகவும், திசைகள் அரண்மனை வாயில் களாகவும், நிலைத்த புகழ் கொண்ட எட்டு மலைகள் அரண்களாகவும், எட்டுத்திக்குப் பாலகர்களுடன் கூடிய தேவசேனைகள் அம்மதிலின் இயந்திரங்களாகவும், மகாமேரு மலை கொடி மரமாகவும், ஆகாயகங்கை வெண்மையான கொடியாகவும், பல தீவுகள் வீடுகளாகவும், அவ்வீடு களில் அரிய மனித உயிர்கள் குடியேறி இகபரசுகங்கள் தம்மை தரும நெறிப்படி கொடுத்து அரசாளுகின்ற அழகிய புதுவையில் வேதபுரி நாதர் இடப்பாகத்தில் விளங்கும் அரசியே சிறுவீடு கட்டுவாயாக என்று முடிக்க. (1)

509. முந்து எழுத்து - முதன்மையான எழுத்தாகிய உயிரெழுத் தும் மெய்யெழுத்தும், "உயிருமுடம்புமா முப்பது முதலே" என்பது ந. சூத்திரம். மொழியாக்கமுற்ற நல் கல் - இந்த முப்பது எழுத்துக் களினின்று உயிர்மெய்யும் மற்றைச் சார்பெழுத்துக்களும் உண்டாகி மொழி அமையப் பெறுதலைக் காண்க. எனவே மொழி ஆக்கமுற்ற நல் கல் என்றார். முப்புணர்பு - உயிரீற்றுப் புணர்ச்சி, மெய்யீற்றுப் புணர்ச்சி, உருபு புணர்ச்சி ; அந்தமுள் சாரியை போதிகையதாக்கி - அழகு உள்ள பகுபத உறுப்பிலக்கணத்துள் ஒன்றான சாரியை என்ப தைச் சுமையடைக் கட்டையாகச் செய்து ; "பகுதி விகுதியிடை நிலை சாரியை சந்தி விகார மாறினு மேற்பவை......." என்பது ந சூத்திரம். உருபு - வேற்றுமையுருபுகள், "பெயரே ஐஆல் கு இன் அது கண் விளி யென்றுரு மவற்றின் பெயர் முறை" என்பது ந. சூத்திரம் ; மற்றும் போல, புரைய போன்ற உவம வுருபுகளையும் கூறலாம். எச்சம் - பத்து எச்சங்கள், "பெயர்வினை உம்மை சொற்பிரிப்பென ஒழியிசை எதிர் மறைஇசையெனுஞ் சொல்லொழி பொன்பதும் குறிப்பும் தத்தம் எச்சம் கொள்ளும்" என்ற ந. சூத்திர மூலம் உய்த்துணர்க. கொடுங்கை - வெளிப் பக்கம் வளைந்துள்ள ஓர் உறுப்பு ; மேல் கருத்தாவை - அதன் மீது முதல் வேற்றுமைக் கருத்தா, மூன்றும் வேற்றுமைக் கருத்தாக்களை ; (இவை ஏவுதற்கருத்தா, இயற்றுதற் கருத்தா என இருவகைப் படும்). "மூன்று வதனுரு பாலா னோடொடு கருவி கருத்தா உடனிகழ் வதன் பொருள்" என்ற ந. சூத்திரம் காண்க. சந்தம் முற்றும் ஆணி தைத்து - சந்த விருத்தப் பாட்டுக்களை முழுதும் ஆணிகளாக்கித் தைத்து ; ஐம்பால் ஓடு இட்டு - ஆண்பால், பெண்பால், பலர் பால், பலவின்பால், ஒன்றன் பால் என்ற 5-பால்களை ஓடுகளாக வேய்ந்து ; இயல் சார்ந்த கோள் எட் டும் அறையாத்தடுத்து - செய்யுளின் தன்மையைச் சார்ந்த பொருள்

கோள் எட்டும் அறைகளாகத் தடுத்து, "யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண், தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டு கூட்டு, அடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே." என்பது காண்க; முத்தக முதல் சித்தரித்து - செய்யுளின் வகைகளான முத்தகம், குளகம், தொகை, தொடர்நிலை என்ற நான்குவகைகளால் அலங்கரித்து, "செய்யுளென்பவை தெரிவுற விரிப்பின் முத்தகங் குளகம் தொகை தொடர் நிலையென. எத்திறத்தினவு மீரிரண்டாகும்." என்பது தண்டியலங்காரம்; இருபொருள் தகை விளக்கிட்டு - செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை வகைகளால் தகுதியுற்ற விளக்கு ஏற்றி; "ஒரு வகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி தெரிவுதர வருவது சிலேடையாகும்" என்பது தண்டியலங்காரம். முதன்மையான முதலெழுத்துக்களாகிய சேற்றினுல் மொழி அமையப் பட்ட நல்ல செங்கற்கள் செய்து மூன்று புணர்ச்சியினுல் சுவர்வைத்து, பெயர்ச்சொல், வினைச்சொல் ஆகியவைகளைத் தூணாக நிறுத்தி, பதத்திற்கு அழகைத்தரும் சாரியை என்பதைப் போதிகையாகச் செய்து, வேற்றுமையுருபு, உவமவுருபு முதலியவைகளை உத்திரமாகப் புகுத்தி, வரிசையாக உள்ள 10-வித எச்சங்களையும் கொடுங்கையாக வைத்து, மூன்றும் வேற்றுமைக் கர்த்தா முதலியவைகளைச் சிறு உத்திரமாகச் செய்து, சந்த விருத்தப் பாட்டுக்களால் முழுதும் ஆணியினுல் தைத்து, ஐம்பால் (அல்) ஐந்து இலக்கணப் பகுதிகளை ஓடாக இட்டு, பொருள் கோள் எட்டினையும் அறைகளாகத் தடுத்து, நான்கு செய்யுள் வகையினுல் சித்தரித்து, இருபொருள்படும் சிலேடை என்னும் விளக்கேற்றி அமைக்கும் செந்தமிழ் இலக்கணமாகிய வீட்டினுள் விளையாடும் அம்மையே சிறுவீடு கட்டியருள் என்க. (2)

510. பொடி - சாம்பற்பொடி; விடையவர் - சிவன்; மூரி - பெருமை; முந்நீர் - கடல், ஆற்று நீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்ற மூன்று நீர் கொண்டதால் கடலுக்கு முந்நீர் என்றும் ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தன்மைகளை யுடையதால் கடலுக்கு முந்நீர் என்றும் பெயருண்டாயிற்று என்பர்; முந்நீர்நிறம் கொண்டு மண் உண்டு விண் நீண்ட முண்டகம் கண்ணர் - கடல் நிறம்போன்று நீலநிறம் கொண்டு உலகங்களை யெல்லாம் யுகப்பிரளயத்தின்போது உண்டு மாபலியிடம் தானம் வாங்கி, யளக்க திருவிக்கிரமாவதாரம் கொண்டு ஆகாயமளவு காலை உயர்த்திய தாமரை போன்ற கண்களையுடைய திருமால்; முண்டகம்-தாமரை; சுத்த.........என்றவர் - பரிசுத்தமான நலந்தரும் வேதங்கட்குத் தலைமை யடைந்து அன்ன வாகனத்தில் விளங்கி உலகைப் படைக்கும் பிரமன்; வச்சிராயுதர்-இந்திரன்; வித்து

தகம்-ஞானம்; மோனம் - மௌனம் என்பதன் மரூஉ; விதரணர்கள் - விவேக முள்ளவர்கள். (3)

511. ஓவாத - நீங்காத, இறந்தும் பிறந்தும் உயிர்கள் மாறி மாறி வருவதால் "ஓவாத" என்றார். மன் உயிர்-நிலைத்த உயிர்; தண்டுலம்-அரிசி, பாட்டில் நீட்டல் விகாரம்; தாவா முதுமை அண்டம் தடா-அழியாத பழைய உலகம் பானையாகவும்; சயிலம் - மலை; உலவை-காற்று; வடவை - வடவா முகாக்கினி; கோ ஆதி பதவி - அரச பதவி முதற்கொண்டு மற்ற பதவிகள்; கழி வகையோடு - உருசி மிக்க விதத்தால்; கழி - உரிச்சொல்; கொண்கன் - கணவன்; குலவ - சேர; கூர் - உரிச்சொல்: தேவாதிபன் - இந்திரன்; நீங்காத பெரிய ஆகாயமே சிறிய வீடாகவும், இப்பூமியே உரலாகவும், உயர்ந்த மேருமலையே உலக்கையாகவும், உலகத்திலுள்ள நிலைத்த உயிர்கள் அரிசியாகவும், பழைய உலகம் பானையாகவும், கடல்நீரே உலையாகவும், மலைகளே அடுப்பாகவும் காற்று ஊது குழலாகவும், வடவாமுகாக்கினி தீயாகவும், அரச பதவி முதலியன உருசி மிக்க விதத்தால் அப்பமாகவும் மிகுந்த மணத்தோடு சமைத்து உன் கணவனான சிவபெருமானுக்கு அற்புதம் செய்து காட்டி மீண்டும் அவைகளை முன்னிருந்தது போன்று நிலை பெறச்செய்து சந்தோஷமிகும் இந்திரன் வணங்கிப் போற்றும் தேவி என்க. (4)

512. பங்கையச் செல்வி - திருமகள்; வாக்கின் செல்வி - கலைமகள்; பூங்கற்பகச்செல்வி - இந்திராணி; வண்டலாட்டு - மகளிர் விளையாடும் ஒரு ஆட்டம்; கின்னரியின் மன்னிசை - ஓர்வகை யாழினால் பெருமை தங்கிய இசையை; பஞ்சரப் பூவை - கூட்டிலுள்ள மைனா; பூவை கிளி - உம்மைத்தொகை. தோலாத - நியாயத்தில் தோற்காத; குமுதவாய்-உவமைத்தொகை. குதலைமொழி-இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. (5)

513. அம்பைப் பொருது அஞ்சனம் அணி வரிவிழி - ஆயுதமான அம்புடன் போர்செய்து தோற்கடித்து மையணிந்த நீண்ட கண்கள்; ஆலி தரும் புயல் - மழைத்துளியைத் தரும் மேகம்; அளகம் - கூந்தல்; வம்பைக் கிழிதந்து - கச்சினைக் கிழித்து; இறுமாந்தொளிர் - ஏறிட்டிருக்கும்; வனசம் அபய மெய்த - தாமரை அபயமென்று அடைய; மணிப் பைந்தொடி - மாணிக்க வளையல்; உம்பர் பயில் அர மகளிர்கள் - மேலுலகத்தில் வசிக்கும் தேவப்பெண்கள்; அம்மை தேவப் பெண்கள், நாக உலகப்பெண்கள் ஆகியவரோடு பந்தாடுபவள் என்க. (6)

514 எழுவகை உற்பவம் - ஏழு வகைப் பிறப்பு; எண்பான் நானூறு ஆயிரம் எனும் அலகு - எண்பத்தினான்கு நூறாயிரம் யோனி பேதம் என்ற அளவு; ஜம்பாவை - அழகிய பொம்மை; பாலித்து -

அருளி; உள்நின்று ஆட்டி - உள்ளே இருந்து கொண்டே சூத்திரப் பாவைபோல ஆட்டி, "வானாகி மண்ணாகி...." என்ற மணிவாசகர் பாட்டில் "கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு வானாகி நின்றாயை" என வருவது நோக்கத்தக்கது. "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்றார் நாவரசரும். ஏழு வகைப்பிறப்பும் 84 நூறாயிரம் யோனியுமான அளவுகொண்ட இனிய உயிர்களான பல பொம்மைகளுக்கு அழகு, இளமைத் தன்மை, வளர்ச்சி, குணம், குற்ற மகற்றுகின்ற கல்வி, மகிழ்ச்சி, செல்வம், இரக்கத்தோடு தரும் சுகவாழ்வு முதற் கொண்டவைகளை அருளி அவ்வுயிர்களின் உள்நின்று ஆட்டிச் செயல் புரியும் பார்வதியே, ஆகாயத்தில் பொருந்திய பூரண சந்திரன் போன்று விரிந்த கிரணங்களுள்ள தண்ணொளி வீசும் முத்தினால் செய்த பொம்மையையும், பச்சைநிற மிகுந்துள்ள மரகத மணியினால் செய்தலைப் பெற்ற அழகிய பொம்மையையும், சப்திக்கும் தீயைப் போன்று பிரகாசம் வீசும் மாணிக்கத்தினால் விளங்கும் அழகிய பொம்மையையும் வைத்து அழகு விளங்கச் சிற்றில் கட்டுவாயாக என்க. (7)

515. குதம்பை - ஓர் வகை காதணி; தொலைவு அற-தன் பிரகாசத்தால் தூரம் என்பது நீங்க; பொன் தூசு - பொன்னாலாகிய ஆடை; விலையில் மணித் தண்டை - விலை மதிக்கமுடியாத மாணிக்கப் பரல் கொண்ட தண்டை; நூபுரம் - சிலம்பு; சிலதியர்-தோழியர். (8)

516. அளி குலவும் கடநதி - வண்டுகள் வாசனைக்காகச் சேரும் மதமாகிய ஆறு; கவுளார் அத்தி முகன் - மதச்சுவடு பொருந்திய ஆனை முகன்; அணை தொகுத்தல் விகாரம்; வெளி, பவனம், தழல், நிலம், நீர் வடிவாம்—இவ்வடியில் ஐம்பெரும் பூதங்களாக அம்மை இருத்தல் காண்க. தற்பரை - பார்வதி; விரை கமழ் ஐந்தரு - வாசனை வீசும் கற்பகம் முதலிய ஐந்து மரங்கள்; இமையோர் - தேவர்கள்; சிந்தூர எழில்சேர் நுதல் ஆர் - பொட்டுடன் கூடிய அழகுசேர்ந்த நெற்றி பொருந்திய. (9)

517. வலவன் - திருமால்; திரிபுவனம் - மூன்று உலகங்கள்; திரு அலரின் பதயுக நாயகி - அழகிய தாமரைப் பூப்போன்ற இரண்டு பாதங்களையுடைய தலைவி; திரிபுடை வஞ்சர் - திரித்துப் பேசும் வஞ்சகர்கள்; சிவை, யாமளை, சங்கரி என்பன காளியின் வேறு பெயர்கள். திருவருள் தந்து எளியனை ஆள் உமையே எனப்பிரிக்க. (10)

# நீராடற் பருவம்

518. மணமிகு மலர் தாது அளைந்து தேன் உண்டு அளிகள் மகிழ் நறும் பூ தார் குழல் - வாசனை மிகும் மலரில் மகரந்தப் பொடியைப் பூசி தேனை யுண்டு வண்டுகள் மகிழும் நறுமண மிக்க மலர்மாலை சூடியுள்ள கூந்தலானது, வரைநின்று உயர்ந்து வான் நெறி சென்று முந்நீரை வாரி உணும் மேகமென - மலையினின்று உயர்ந்து ஆகாய வழி சென்று கடல்நீரை வாரிக் குடிக்கும் மேகம்போன்று ; குணமுறு மணிக் கச்சு வீக்கி ஆர் அருள் அமுதுகொண்டு ஓங்கி வளர் அலர் முலை - அழகிய முத்தினாலாகிய கச்சினால் இறுக்கிக் கட்டி அருமையாகக் கொடுக்கும் அமுதத்தை (பாலை) க்கொண்டு ஏறிட்டு வளரும் பூவரும்பையொத்த முலை, (அருமையாக அமுதங்கொடுத்தது சம்பந்தப் பெருமானுக்காகும்). கொற்றத் துழாய் மௌலி பண்டு பாற்கடலில் குறித்திட்ட சயிலமென - வெற்றியுடைய துளபமாலை யணிந்த கிரீடமுடைய திருமால் முற்காலத்தில் தேவர்களுக்குப் பாற்கடல் கடையுமாறு குறிப்பிட்டுக் கூறிய மந்தரமலைபோன்று ; வணர் இரும் கன்னல் சிலைப் புருவம் மைவிழி வளைச்செவி பிறங்கு வதனம் - வளைவுபொருந்திய பெருமை மிக்க கரும்பு வில்போன்ற புருவமும், மை தீட்டிய கண்களும், வள்ளைப் பூப்போன்ற காதுகளும் விளங்கும் முகம் ; வண்மை திகழ் விண்மீன் கணஞ்சூழ் உலவும் முயல் மறு அற்ற மதியம் என - அழகு விளங்கும் நட்சத்திரக் கூட்டஞ் சூழ உலவுகின்ற முயற்கறை நீங்கிய பூரண சந்திரன்போன்று; புணரி நிகர்ப்பெரு வராகநதி - சமுத்திர மொத்த பெரிய வராகநதி ; **வராகநதி:-** இது கோலாசல மலையென்னும் தென் ஆற்காடு ஜில்லாவிலுள்ள செஞ்சி மலையில் உற்பத்தியாகும் ஓர் சிற்றாறு. குழல்மேகமென, முலை சயிலமென; வதனம் மதியமென நீராடியருள் என முடிக்க. (1)

519. சைவலம் - பாசி ; சேதாம்பல் - செம்மையான அல்லி மலர் ; தந்தம் - பல் ; வள்ளை - ஓர் கொடியில் உண்டாகும் பூ ; வார் - நீண்ட ; இதழ் - உதடு ; மிடறு - கழுத்து ; கெளிறு - ஓர் வகை மீன் ; சலச்சுழி - நீர்ச்சுழி ; கொடி - நீரிலுள்ள தாமரைக் கொடி, அல்லிக் கொடி, வள்ளைக்கொடி போன்றன ; மருங்கு - இடை ; சர்ப்ப படம் - பாம்பின் படம், சர்ப்பம், வடசொல், தத்பவம் ; குமிழி - நீர்க்குமிழி ; நிதம்பம் - அல்குல் ; அலவன் - நண்டு ; சினைவரால் - கர்ப்பங் கொண்டுள்ள வரால்மீன் ; அலத்தகப் பதம் - செம்பஞ்சுக் குழம்பூட்டப்பட்ட

பாதம். இப்பாட்டில் நீராடல் பருவத்திற்கேற்ப அம்மையின் உறுப்புக்களுக்கு நீர்படு பொருள்களையே உவமை கூறின திறம் உணரத் தக்கது. கயல்மீன், பாசி, அல்லிமலர் முதலியவற்றோடு கண்கள், கூந்தல், வாய் முதலியன உவமையாகா மாட்டா என்று எதிர்த்துப்போர் செய்யத் தெளிந்த அலைகளை வீசும் வராக நதியில் நீராடுவாயாக என முடிக்க. (2)

520. இலங்கு மரகதமணிச் சோதியிற் பசிய - விளங்கும் மரகத மணியின் ஒளியைக்காட்டிலும் பச்சை நிறமான ; ஏமுற்று-மயங்கி ; வாயரவம் மாறுது - வாயினால் சப்தம் செய்யாது ; குலம் - கூட்டம் ; அரமடந்தையர் - தேவப்பெண்கள் ; மழலை - குதலைப் பேச்சு ; வெளிற்றன்னம் - வெண்மையான அன்னம் ; பேட்டோடு - பெண் அன்னத்தோடு ; பரந்துபாற - மூலைக்கொன்றாகப் பரவினாற்போல் பறக்க ; குவட்டு அருவி முத்து - மலையில் மூங்கில்களினின்று சிதறி அருவி மூலம் வரும் முத்து. (3)

521. ஏந்து இதழ் முறுக்கு அவிழ்ந்து ஊறு தேன் பில்கு வாரிசம் - தாங்கிய இதழ்களைக் கொண்ட மொக்கு மலர்ந்து சுரக்கின்ற தேன் கொப்பளிக்கும் தாமரை ; மைக்கணார - கரிய கண்களால் முழுதும்; ஓதை-சப்தம் ; காந்தள் கரம்-காந்தட் பூப்போன்ற கை, உவமைத்தொகை ; நேயம் - அன்பு ; வெண்நித்திலம் - வெண்மையான முத்துக்கள் ; இப்பாட்டில் வராக நதியை மகளாக அதனிடமுள்ள பொருள்களைக் கொண்டு உருவகப் படுத்திக் காட்டுகிறார். **தாமரை** மலராகிய முகம் மலர்ந்து, இளைய நிலவின் கிரணம் கண்டு மகிழும் கருங் **குவளைப் பூ**க்களாகிய கரிய கண்களால் முழுதும் அன்புகனியப் பார்த்து, நீந்துவதற்கு அரிதான ஆழமுள்ள நீரில் உலவும் பல **பறவைகள்** தங்கள் நீண்ட சப்தமாகிய இன் சொல்லினால் "அழியாத புதுமையான பரதேவியே வருக," வென்று அன்புடனே உபசரித்துத் தகுதியுடைய துதிகள் செய்து, வெண்மையான முத்துக்களை யுடைய **சங்கங்கள்** சப்தித்து எழுந்து, வீசும் **அலைக**ளாகிய அழகிய பொன், முத்து ஆகியவைகளால் செய்த வளையலணிந்த காந்தள் பூப்போன்ற கையினால் அழைத்து உறவு புரியும் அழகு மிக்க பூக்கள் மிக்க நீர்த்துறை கூடிய வராக மா நதியில் நீராடுவாயாக என முடிக்க. இப்பாட்டில் விருந்தோம்பும் குணத்தை எடுத்துக் காட்டியுள்ளார். தாமரை மலர்ந்திருப்பது தூரத்தே கண்ட விருந்தினனை மலர்ந்த முகத்தோடு பார்த்தல் போன்றும், குவளை மலர்கள் அதனால் நண்ணிய வழி அன்பு கனியப் பார்த்தல்போன்றும், பறவைகள் ஒலி வீட்டில் அடைந்த விருந்தினனைக் கண்டு இன்சொல் பேசுவதனையும் குறிப்பித்தார். இது

"முகத்தா னமர்ந்தினிய நோக்கி அகத்தானும் இன்சொ லினதேயறம்." என்ற குறளைக் குறிப்பிக்கிறது. "மோப்பக் குழையு மனிச்சம் முகந் திரிந்து நோக்கக் குழையும் விருந்து." என்ற பாட்டினையும் அப்பாட்டின் பரிமேலழகர் உரையையும் நோக்குக. சங்கங்கள் சப்தித்தலும் திரைக்கைக் காட்டி அழைத்தலும் "இருக்கை யெழலும் எதிர்செலவும் ஏனை விடுப்ப........" என்ற பாட்டை நினைவுபடுத்துகிறது. (4)

522. காஞ்சனம் - பொன்; பிறங்கும் - மாறுபடும்; கலாபம் - பதினாறு கோவையுள்ள மணிவடம்; சிகை - தலை அணிகலம்; காஞ்சி - எண்கோவை மணி; பருமம் - மூவாறு கோவை மணியணி; மேகலாபரணம் - மாதர் இடையில் கட்டும் ஒருவகை ஆபரணம்; கலிங்கம் மீது அரவம் செய - உடை மீது சப்தத்தைச் செய்ய; வாம் சரம் அணிப் பணிகள் எனப்பிரிக்க; வாமம் - அழகு, இது 'வாம்' என கடைக் குறைந்தது. கொங்கைக் குவடு - உருவகம்; குவடு - மலை; அருவியின் - அருவியைப்போல; இன், ஐந்தாம் வேற்றுமை உவமப்பொருவு; உயர்ந்த மாத்து ஆடகம் தொடி - உயர்ந்த மாற்றுள்ள பொன்னாலாகிய வளை; நாமம் + சொலிப்பு + அணி - கீர்த்தியால் பிரகாசம் மிகுந்து அழகிய; நாமம்-நாம் எனத்தொக்கது; பதத்தின் + நன்கு + அமர்ந்து + எழில்கொள் = பாதத்தில் நன்கு பொருந்தி அழகுள்ள; அரி - பரல்; நவமணி-நவரத்தினம்; பூஞ்சிலம்பு ஒலிட-அழகிய சிலம்பு சப்திக்க. (5)

523. கலைமின் - கலைமகள்; கமலை - திருமகள்; தேவர்க ளதிபதி-இந்திரன்; அயிராணி - இந்திராணி; சிலதி - தோழி; இருளையர்-பணிப் பெண்கள்; புடை - பக்கம். (6)

524. மணிச்சிவிறி - அழகிய நீர் விடுந் துருத்தி; பொன் கொல்லன் - தட்டான்; கமழ்தரு மதுவுமிழ் மலர் ஓதி - வாசனை வீசும் தேன் சிந்தும் மலரணிந்த கூந்தல்; காழ் உறு முத்து - ஒளிபொருந்திய முத்து; கவின் இடை உடை - அழகு மிக்க இடுப்பு ஆடை; இமிழ் - ஒலிக்கும்; எய்த்து - இளைத்து. (7)

525. ஈரமலர்க்கா - குளிர்ச்சிபொருந்திய மலர்ச்சோலை; மணிச் செய் குன்று - இரத்தினங்களால் செய்யப்பட்ட செயற்கை மலை; குரவை - பெண்கள் கைக்கோர்த்து ஆடும் ஒரு கூத்து; வாரம் - அன்பு; கொம்மை - கும்மி; வண்டல் - மகளிர் விளையாட்டு; ஆரம் - முத்து. (8)

526. குவடு உயர் மந்தர மலைவில் உவந்தவர் - சிகரங்கள் உயர்ந்த மந்தரமலையாகிய வில்லைக் களிப்போடு திரிபுராதியரை எரிக்க ஏற்றுக் கொண்டவர்; கொடியாம் ஏறு உடையார் - எருதுக் கொடியை உடையவர்; மந்தரம் மேருமலைக்கு மகனானதால் ஒற்றுமை பற்றிக் கூறப்

பட்டது. இதழி-கொன்றை; குளிர்நீர் ஆர்சடையார்-கங்கை பொருந்திய சடையுடையவர்; தமியேன் ஆடு அரனூர்-திக்கற்றவனாகிய என் உள்ளத்தில் நடனம் ஆடுகின்ற சிவன்; அம்கணர் - அழகிய கண்களை உடையவர் (சிவன்); சமம் ஈறு ஆதி இலார் - ஒப்பு முடிவு முதலில்லாதவர்; பவள நிறங்கிளர் வடிவுறு புங்கவர் என்றதால் சிவனது செந்நிறம் குறிக்கப்பட்டது; பணியார் பால் - தன்னை வணங்காதவரிடம்; பகைஞர் புரம் - திரிபுரம்; நகு - சிரிக்கும்; மணி திகழ் கந்தரி-நீலமணி போன்று விளங்கும் கழுத்தை உடையவள். (9)

527. கலைவலர் - புலவர்கள்; பொதிய முவந்திடும் முனி - அகத்தியர்; புலவு கமழ்ந்தொளிர் அயிலவன் - புலால் மணம் வீசி ஒளிரும் வேலினையுடைய முருகன்; அன்பு அனை - அன்பை உடைய தாய், அனை தொகுத்தல் விகாரம்; பொடி - சாம்பற்பொடி; சண்டன்-எமன்; குந்தளி - கூந்தலை உடையவள்; கணபணி கங்கணி-கூட்டமான பாம்புகளைக் கங்கணமாக உடையவள். (10)

---

## பொன்னூசற் பருவம்

---

528. நன்மாத் துயர்ந்த பொன் தம்பங்கள் - நல்ல மாற்றுயர்ந்த பொன்னாலாகிய கம்பங்கள்; முத்து வடம்-முத்துக்கள் நிறைந்த கயிறு; பலகையா ஆம் என்க; கலைமகள் சேடி - இரு பெயரொட்டுப் பண்புத் தொகை; அம்புயத்து இலகு இலக்குமி எனப்பிரிக்க; அம்புயம்-தாமரை; அட்டமங்கலம் - கண்ணாடி, நிறைகுடம், கொடி, சாமரை, தோட்டி, முரசு, விளக்கு, இணைக்கயல் ஆகியன; பவானி - பவனுடைய மனைவி, (உமையின் பெயர்); வேதாந்த, சித்தாந்தங்கள் கம்பங்களாகவும், நாதாந்தம் வயிரவிட்டமாகவும், ஞானம் முத்துக்கள் பதித்த கயிறாகவும், அடியவரின் மனமெனும் தாமரை ஒளியுள்ள பதுமராகப் பலகையாகவும், கலைமகளாகிய சேடி பக்கத்திலிருந்து புகழைச் சொல்ல, எட்டு இலக்குமிகளும் அஷ்டமங்கல மேந்த, நீ ஊசல் ஆடுக என முடிக்க. "வேதாந்த சிந்தாந்தமெனு" மென்பது "வேதாந்த சித்தாந்தங்கள்" என்றிருப்பின் நன்று. (1)

529. கடவுளர் - தேவர்; கனக + ஆதனம் - பொன்மயமான ஆசனம்; வேந்தன் - இந்திரன்; பீடம் - ஆசனம்; உலகை நல்குந் திறத்தையுடையான் - பிரமன்; வதனம் - முகம்; எழுதா மறை -

வேதம்; ஆழி - பாற்கடல்; குடக்கூத்து - அநிருத்தனை வாணன் சிறையிலிட்ட காலத்தில் அவ்வாணாசுரன் பட்டணத்தில் கண்ணன் லோகத்தாலும், மண்ணாலுஞ் செய்த குடங்கொண்டாடிய கூத்து; அகம் மிக மலர்ந்து உவக்க என்று பிரிக்க; பொலன்றூவி - பொன் மயமான சிறகு. (2)

530. மட்டு - தேன்; மதுரச் செழுங்கரும்பு அனைய தோள் வலையம்-இனிய செழித்த கரும்பை யொத்த தோளில் அணியும் வாகு வலயமெனு மாபரணம். தோடு-ஓர் காதணி; ஏகாசம்-போர்வை; கச்சு இலங்கு தனம் என்று பிரிக்க; மாமணித் தொங்கல் - முத்தலாகிய செவிப்பூமாலை; கமழ் குழல் தொடை யசைய-வாசனை வீசும் கூந்தலின் மாலை யசைய; சிலை நுதல் - வில் போன்ற நெற்றி. (3)

531. கயல் மீன்கள் பொருந்திய சரவணப் பொய்கையில் அக்கினியினால் கொணரப்பட்டுக் கார்த்திகைப் பெண்கள் அறுவரின் பாலைக்குடித்து,முப்பத்து மூன்றுகோடி தேவச் சேனைகளுக்கு அதிபதியாகி, பிரணவ மந்திரம் தெரியாத நான்முகனைக் குட்டிக் கந்தமாதனச் சிறையில் வைத்துச் சிவபெருமானுக்குப் பிரணவ மந்திரத்தை உபதேசித்துக் கொடுஞ் செயல்களைச் செய்யும் சூரபதுமன், சிங்கமுகன் முதலியவர்களை அழிக்க வேலாயுதம் விடுத்துக், கடப்ப மலர்மாலை அணிந்து, மயிலை வாகனமாக ஊர்ந்து, சேவற் கொடி உயர்த்திச் சந்தோஷிக்கின்ற முருகனைப் பெற்றவள் என முடிக்க. தந்தையாகிய சிவபெருமானுக்குப் பிரணவ மந்திரம் உபதேசித்ததால் 'சுவாமி நாதன்' என்று பெயர் வந்தது. இப்பாட்டில் "கிழவனைப் பெற்ற குமரி" என்பதில் உள்ள நயத்தைக் காண்க. மாமேரு வில் கை ஐயன்-உயர்ந்த மேருமலையை வில்லாகக் கையில் கொண்ட தலைவன், சிவபெருமான், புயல் ஆர் மலைக்கிழவன் - மேகம் பொருந்திய மலைக்கு உரிமையுடையவன். கிழவன்-உரிமை உடையவன், கிழவன் என்பதில் கிழமை பகுதி. (4)

532. ஆலவாய் - மதுரை; சிரகிரி - திருசிராமலை, இது பூர்வத்தில் திரிசிரனா லாளப் பட்டது. "சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே சின்மயா னந்தகுருவே." என்பது தாயுமானவர் வாக்கு.சு பெயர்-தாயுமானவர். தே. பெயர்-மட்டுவார் குழலி; வான் ஓங்கு காவை-ஆகாயமளவு உயர்ந்துள்ள மாட மாளிகைகளுடைய காவியேச்சுரம், இது சிவத்தலங்கள் ஆயிரத் தெட்டனு ளொன்று. அருணாசலம்-திருவண்ணாமலை; வாரணாசி - காசி; நலிவு உற்றிடாத சீகாழி - துன்பமடைவிக்காத சீர்காழிப்பதி. இது சிதம்பர மருகிலுள்ளது. சிதாகாயம் - சிதம்பரம்;

சித்-ஞானம்; ஐயாறு-திருவையாறு; நாகை-திருநாகேசுவரம், சுவாமி பெயர் செண்பகாரண்யேச்வரர், தேவி பெயர் குன்றை முலை நாயகி; ஆரூர் - திருவாரூர்; காஞ்சி-காஞ்சிபுரம், தொண்டை நாட்டுப்பதி; நள்ளாறு-திருநள்ளாறு; நளன் வழிப்பட்டுக்கலி நீங்கிய இடம். மருதூர் - திருவிடை மருதூர், சிவபெருமான் தம்மசைவே உலகத்தியக்கம் என்பதைத் தாமே உலகமெனவெண்ணியிருந்த பிராட்டிக்குக் காட்டும் வகை ஒரு கணம் அசைவற்றிருந்து உயிர்களியங்காமை காட்டி உருத்திரர்களால் உலகசிருட்டியைச் செய்வித்துப் பின் பிரமன், விஷ்ணுக்களைப் படைத்த தலம், சு. பெயர் - மருதப்பர். தே. பெயர் - நன்முலை நாயகி; மெலிவுற்ற தொண்டரைக் கரையேற்றும் ஊர் - திருவிளநகர். பூசைக்குத் திருப்பள்ளித் தாமங் கொண்டு ஆற்றிலிறங்கிய "அருள் வித்தனை" வெள்ள மீர்த்துச் செல்லவும் திருப்பூக் கூடையை விடாத உறுதியெண்ணி, யவனைக் கரையேற்றி ஞானமுபதேசித்த தலம். சு. பெயர் - துறைகாட்டும் வள்ளல். தே. பெயர் - காம்பன்ன தோளியம்மை. வேளூர் - வைத்தீசுவரன் கோயில். இது திருப்புள்ளிருக்கு வேளூர் எனவும் கூறப்படும். சடாயு சம்பாதி என்ற கழுகுகள், இருக்கு வேதம், முருகன் ஆகியவர் பூசித்த தலமானமையின் இப்பெயர் பெற்றது. சு. பெயர் - வைத்தியநாதர்; தே. பெயர் - தையனுபகி. திருக்கீழ் வேளூரையும் (சோழநாடு) குறிக்கலாம்; **வில்லையம்பதி:-** தொண்டை நாட்டில் புதுவைக் கருகிலிருக்கும் சிவத்தலம். பிரமன் வில்வ வனம் உண்டாக்கிச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தமையின் வில்வ வன மென்று திருநாமம் உண்டாகிப் பின் தருமபாலன் என்ற சோழன் இவ்வூரைச் சீர்திருத்த வில்வநல்லூரென்னும் பெயர் வழங்கியது. வில்வ வனமென்பது வில்ல வனமாகி அது மருவி வில்லையாயிற்று. இது தேவாரத்தில் வரும் வில்வேச் சுரமென்னும் வைப்புத் தலமாகும். இப்போது வில்லியனூர் எனவழங்குகிறது. சுவாமி பெயர் காமேசுவரர். தே. பெயர் கோகிலாம்பிகை. **காளத்தி :-** சீகாளத்தி; சீ, காளம், அத்தி மூன்றும் (சிலந்தி, பாம்பு, யானை) பூசித்து முத்தி பெற்ற தலம். தொண்டை நாட்டுத்தலம். கண்ணப்பர் முத்தி பெற்ற தலம். மற்றுள தலம்-திருக்கோவலூர், மாயவரம், தருமபுரம், திருப்புன்கூர் முதலியன. (5)

533. மயிலின் நின்றருள் சுவாமி-முருகன்; மருவும் உந்துருவின் இபமுகன் - வாகனமாகப் பொருந்தும் பெருச்சாளியை யுடைய யானை முகனுன விநாயகன். தினம் அறுமல் - ஒரு நாளும் நீங்காமல்; தரையை ஈன்ற முகில் உவணன் ஒண்பிடரி தாவியாட - பூமியைப் பிரமனைக் கொண்டு படைத்திட்ட மேக நிறம் பெற்ற திருமால் கருடனின் கழுத்தைப் பிடித்தாடவும்; பொருவில் சிறை விகங்கம் மிசை-

ஒப்பில்லாத சிறகுகளையுடைய அன்ன வாகனமீது; மகவான்-இந்திரன்; கடல் பயந்த களிறு-ஐராவதம்; அஞ்சலி செய்திட-வணங்க; முருகன் மயில்மீது ஏறி ஆட, விநாயகன் பெருச்சாளி மீது ஏறி ஆட, திருமால் கருடன்மீது ஏறிஆட, பிரமன் அன்ன வாகனத்தின் மீது ஏறி ஆட இந்திரன் ஐராவதத்தின் மீது ஏறி ஆட, ஈசன் இடபவாகனத்தின் மீது ஏறி ஆட, நீயும் பொன்னூசலில் ஆடுவாயாக என முடிக்க. திருமாலைத் தரையை ஈன்றவன் என்றூர் பிரளய காலத்தில் உலகங்களை உண்டு, துயின்று மறுபடி உமிழ்வதால். (6)

534. அசரம் - நிலை பொருள்; சரம் - இயங்கு பொருள்; விஞ்சையர்கள் - வித்தியாதரர்கள்; சூலி - சூலத்தை யுடையவள்; வாமநிதியே - இடப்பாகத்தைப் பெற்ற செல்வியே; களங்கம்-குற்றம்; வினை களங்கம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை; எளியேன் - எளியவனாகிய என்னை; உபயபதம் - இரண்டு பாதங்கள். (7)

535. கூறொணுத - சொல்ல முடியாத; அங்கனையர் - பெண்கள்; கோதில் நாக உலகார் - குற்றமற்ற நாக உலகத்தில் பொருந்தியவர்; மழை - மேகம்; வாரி - கடல்; நிறை - கற்பு; விழை - விருப்பம்; வீறு சேரிதழி - பெருமை நிறைந்த கொன்றை மலர்; விது-சந்திரன்; பனகம் - பாம்பு; நதி - கங்கை; வேணி - சடை; இறையோன் உழை இலங்கு மரகத மெய் அம்பிகை எனப் பிரிக்க; உழை - இடம்; மெய் - உடல். (8)

536. நீள் திரை மண்ணுள - நீண்ட அலைகளோடு கூடிய கடல் சூழ்ந்த பூமியை ஆள; புயல் - மேகம்; மதி - மாதம்; நீர்மலி - நீர் மிகுந்த; எங்கணும் + ஏர் + உற-எங்கும் அழகு பொருந்த; ஏண் உற - பெருமை பொருந்த; மகிதலம் திலகமுறு நிறை பொங்கிட வாழ் மயில்- பூமிக்கே பொட்டுப்போன்ற கற்பு மிகுந்திட வாழும் மயிலை யொத்த பெண்கள், மயில் - உவமையாகுபெயர். (9)

537. அமுதர்கள் - வானோர்கள்; அபய வரத கரதலம் - அபய கரம், வரதகரம் என்பன. கையின் ஐந்து விரல்களும், மேல் நோக்கி நிமிர்ந்து நிற்பது 'பயப்படாதே' என்று சொல்லி அபயம் தருவதைக் காட்டுவதாகி **அபய அஸ்தம்** என்றும், ஐந்து விரல்களும் கீழ்நோக்கி நிற்பது வேண்டும் வரத்தைத் தருவதைக் காட்டுவதாகி **வரத அஸ்தம்** என்றும் பெயர் பெறும்; அமலன் - சிவபெருமான். (10)

புதுவைத் திரிபுர சுந்தரி பிள்ளைத்தமிழ்க்
குறிப்புரை முற்றிற்று.

# திருமந்திர நகரமாகிய தூத்துக்குடி,
# பாகம்பிரியாவம்மைப் பிள்ளைத்தமிழ்

## காப்புப்பருவம்

வேறு

திருமால்

538. கார்கொண் டகன்று கன்னங்கறே
றென்னத் திரண்டு சுருண்டகுழற்
காடுந் திலக பங்கயமுங்
காம்புங் குழையுங் கழுநீரும்
பார்கொண் டலராக் குமிழ்தளவாம்
பலும்பூத் துளம்பூத் தலர்ந்து பச்சைப்
பசேலென் றிருந்த கற்பகப்பூம்
பாகம் பிரியா டனைக்காக்க
பேர்கொண் டிருந்த வகலிகைகல்
லுருவாக் குடைய தாமரையும்
பிரமன் செனித்த தாமரையும்
பிள்ளைப் பிராட்டி தாமரையுஞ்
சீர்கொண் டிருந்த நயனமெனச்
செக்கச் சிவந்த தாமரையுஞ்
செங்கைப் பருவத் தாமரையுஞ்
செழித்த சொரூபக் கரும்புயலே. (1)

வேறு

சங்கரராமீசுவரர்

539. மந்திரவாழ் வானவர் வடதிக் கிருப்பவர்
வங்கணரா லாசனக் கனகச் சதுர்ப்புய
மந்தரரே றேறிய பவனிச் சிறப்பினர்
மன்றினில்வா தாடிய சிரமப் பதத்தினர்
சந்திரகலா மாலையர் கயிலைப் பொருப்பினர்
தண்கெழுபா கீரதி தலைவைத் திருப்பவர்
சங்கொருகா தாடிட விசையைத் தரிப்பவர்
சங்கரரா மீசுர ரிசையைப் பழிச்சுதும்
முந்தியவே தாகமக் கவுணியக் குலப்பயிர்
முன்பதினா றாயிர மதுரைத் திருக்கடை

முண்டகவே காமமறை யெனவுச் சரித்து
முரண்கழுமே லேறிட வம்மனைச் செயித்தருள்
பைந்தமிழா காரசண் முகனுக் கிதத்தொடு
பைந்தனமீ தூறிய வமுதைப் புகட்டிய
பைங்கொடியாள் பாகமி னிசையைப் படிப்படி
பண்புடனே பாடுமிப் பனுவற் றழைக்கவே. (2)

வேறு

சுந்தரபாண்டியப் பிள்ளையார்

540. கொந்தவிழ் பூந்தொடைப் பரனைக் கவளக்
கொழுங்கனி தாங்குகைத் தலனைத் திகழொரு
கொம்பினை யூன்றுகைத் தலனைக் கயிறு
கொடும்புரி பூண்டகைத் தலனைப் பருமித்
தொந்தியு மைந்துகைத் தலனைப் பிரபை
தொகங்குச மேந்துகைத் தலனைக் கவுண்மத
தும்பி முகாம்புயத் தரசைக் கருணைசெய்
சுந்தர பாண்டியச் சுடரைத் துதிப்பாம்
மந்திர பூந்திருப் பதியிற் சரவண
மைந்தனை யீன்றிடப் பருவக் குளிர்பனி
மஞ்சமர் காஞ்சனத் திமையக் கிரிதரு
மங்கல நாண்கழுத் தமுதக் களிமயில்
சந்திர காந்தியிற் கதிர்விட் டிளவெயில்
தங்கொளி கானல்போற் பரசுக் கரதல
சங்கணி பூங்குழை கருணை பொருந்திய
சங்கரர் தோய்ந்தவுத் தமியைப் புகழவே. (3)

முருகன்

541. மகரமெறி திரைகதறு கடலிடை கவடுபடு
சினைசெல்ல நட்சத்திர
மலர்வதென மலர்மலரு மலர்தலை கவிழுமா
மரமல்ல நிர்ப்பாக்கிய
மரமிதென வரிபிரமர் முதலியவர் பிரமைகொள
வரும்வல்ல மைச்சூர்க்குல
மறுகமக பதிகிருபை பெறவிமை யவர்க
ணிலைபெற வெள்ளிவெற்பாற்
பகரகுக ரறுகரமு முடையபொரு ளெனமகுட
கணபணகல் லுதிர்த்தாக்கிரம்
கொடியவுர கமுமுடல் நெறுநெறு நெறெ
வதிரதிசை செல்லவற்றூக்

கடல்குமுற மடமடென நடனமிடு மயிலின்வரு
குறவள்ளி கற்பாற்புணர்
குமரகுருபரமுருக சரவணவு தையவறு
முகச்செல்வ னைப்போற்றுதும்
நிகரில்பரு மிதசிகர கொடுமுடி ககனவெளி
முகடுள் ளுறத்தாக்கிட
நெடியவெதி ரகில்பிரம தருமகிழ சுரர்கடரு
மலர்சில்லெ னப்பூத்தொளி
நிலவுமட வியுளதிக பரகதி யணையகுறு
முனிசெய்த வத்தாச்சிரம
நிறையுமுயர் தவமுனிவர் செயசெய செயென
வுலவியநல் (ல) சற்பாத்திர
தகரநற வுமிழ்பொதிய மலைகுமு குமெனுமரு
விகள்கல் லெனப்பாற்கடல்
சரிவதென வருபொருநை வரநதி பருகிவளை
யுமிழ்வெள்ளை முத்தாய்த்திகழ்
தரளமணி யொடுசகல வளமுமுள சகரபிர
புடர்கல்லு மைக்கார்க்கட
றவழுமலை யொலிதவிரு முயர்துறை நகரில்வரு
மலைவல்லி யைக்காக்கவே. (4)

வேறு

திருமகள்

542. வளைவாய்ப் புளிமேல் விரும்பாது
மண்பிட் டருந்தா திளமுலையின்
மணிக்கண் கறுத்தி டாதுதிரு
மழலைச் செவ்வாய் வெளிறாது
திளையாச் சூற்கொள் ளாதுபசே
லென்ற நரம்பெ ழாதுதவஞ்
செய்து திருப்பாற் கடல்பயந்த
செந்தா மரைப்பெண் சரண்பணிவாம்
அளைவாய் மடுத்த கள்வாயு
மசோதை தயிர்மத் தெடுத்தடிப்ப
வாவா வென்று குழைபிடித்தே
யங்காந் தழுத முகிற்கிளைய
பிளவாக் கிடந்துட் குழைந்தெழுவெண்
பிள்ளை மதிவா ணுதற்சிறுபெண்

பிள்ளை பாகம் பிரியாண்மேற்
பிள்ளைக் கவிதை தழைகவே. (5)

கலைமகள்

513. குடிலி னுறியைப் பிடித்துரலிற்
குந்திக் கால்வைத் தெக்கிமுகங்
கோட்டிக் கடைக்கண் போட்டிடையர்
கும்பத் ததியைக் குடித்துவிடும்
நெடுநீ லனுக்கோ ரிளையநெடு
நீலி பாகம் பிரியாத
நிமலி மோகம் பிரியாது
நிலைக்கு நிறுத்துந் தமிழ்காக்க
முடிவின் முனையின் முனைக்கழுத்தின்
முடித்த பிறைக்கூ னிருகோட்டின்
முனையுஞ் சூல முதற்றேவ
ரெனத்தான் கவின முடிகவிக்கும்
படிக நிறத்தி படிகவடம்
படிக படாம்பூம் பைந்தனத்தி
படிக வருண பதுமகெற்ப
பரிபூ ரணத்தி பாரதியே. (6)

சத்தமாதர்கள்

544. தழையுங் கடுக்கைப் பூவும்பிஞ்சு
மதியுங் காயுஞ் சர்ப்பமும்வெண்
டரங்க மெறிகங் கையங்கனியுந்
தரித்த சடிலப் பெம்மான்பாற்
பழையபுரத்தி பார்பாத்தி
பண்ணம் பணத்தி யெண்குணத்தி
பாகம் பிரியாப் பராசத்தி
பனுவற் றழைக்கும் படிகாக்க
மழவுஞ் சிறையோ திம்மவிடைமா
யூரமுவண மதயானை
மகிட மலகை மறைவில்வேல்
வண்சக் கரம்வச் சிரமேர்சூல்
குழையந் தணியே யுருத்திரையே
குமரி நாரா யணியேசற்
குணவிந் திரையே வராகியே
குலசா முண்டி தேவியே. (7)

## ஆதித்தசந்திரர்

545. கம்ப மடுகிம் புரிக்கோட்டுக்
கலுழிப் பெருக்காக் கவுட்சுவட்டிற்
கரைக்குக் கரைக்குக் கரைக்குமதங்
கடைக்கா லூழிப் பெருக்கெடுத்துப்
பம்பு களிற்றுத் தலைமகனைப்
பயந்து சுரந்து முலைகொடுத்த
பாகம் பிரியாள் சங்கரனார்
பாகம் பிரியா டனைக்காக்க
வெம்பி ரானுக் கிடக்கண்ணே
யிடக்கண் ணினுக்கு வலக்கண்ணே
யெழிற்செங் கதிரே வெண்கதிரே
யிரவுக் கரசே பகற்கரசே
மொய்ம்பு படைத்த முன்னோனே
முன்னோ னினுக்குப் பின்னோனே
முளரிக் கதவ மடைப்பவனே
முளரிக் கதவந் திறப்பவனே. (8)

## பச்சைப்பெருமாளையனார்

546. வளையுஞ் சந்திர கலைதரித்து
மலைகார் முகத்துக் காயெடுத்து
வளர்ந்த நாகா லயத்திருந்த
மகத்தாங் கடவு ளிருவருக்குந்
தளைய சைத்திய சன்னதியன்
றவபூ ரணைபுட் கலையான
தையன் மருவு பச்சைமுகி
லையன் சரணந் துதிசெய்வாம்
பனக சடிலர் பனகபவுத்
திரத்தர் பனகக் கதிர்க்குழையர்
பனக கரகங் கணர்பனகக்
கழலர் பனக சருவாங்கர்
சனக சனகா தியர்க்குமறை
யறியத் திருவாய் மலர்ந்தசிவ
ஞகம் பிரியா ளருட்பாகம்
பிரியாள் கவிதை தழைகவே. (9)

### வயிரவர்

547. கைம்மாத் தருமா லுக்கிளையாள்
கைம்மாத் தருமா நச்சினவக்
கடுக்கந் தரத்தர் நச்சினவக்
கடுக்கந் தரத்த ரிடத்திருந்த
வம்மா வம்மா வம்மாவென்
றருமா மறைமா தவம்புரியு
மரியாள் பாகம் பிரியாண்மே
லருமைப் பிள்ளைத் தமிழ்தழையத்
தம்மா கிருதி யறியாத
சகள வடிவாய்த் திகம்பரராய்த்
தண்டா யுதத்த ராயினிதா
பதத்த ராணத் தராயப்பெரிது
மிம்மா நிலத்தி லிடுபிச்சை
யேந்து கபால ராயெகின
மேறி யெகின மேறியெனத்
திரிவாய் கிருபை புரிவாயே. (10)

### வேறு

### முப்பத்து மூவர்

548. சோதி விட்டுக் குலாவு
சூரிய வட்டப் பிரகாசத்
தோகை முத்துக் குமார
சுவாமி யப்பற்கு மேனியோர்
பாதி பச்சைச் சரீர
பாக மிச்சித்த தூய
பரவி கற்பத்தி னூறு
பாட லிரட்சிக்க வேண்டுமே
யாதி வத்துக்க ளான
யார ணத்துக்கு மேலே
யாதி பத்தியத்த ராய
வாக மத்துச் சொரூப(மார்)
சீத சொர்க்கத் துளார்கள்
தேடு முற்பத்தி யாய
சீவ ரத்னப் பிரகாச
தேவர் முப்பத்து மூவரே. (11)

## செங்கீரைப் பருவம்

549. கருமந்தி யுங்கருங் கவியும்வெள் ளைப்பெருங்
கவியுங் கருங்கரடியுங்
கடல்கொண் டெனவகண்ட படைகொண்டு
காகுத்த ராகுத்தனு [நடைகொண்ட
ரொருமந்திர மனுமன்றன் முனியம்ப மண்குயவ
ரொப்பமிடு மொலியொடும்பச்
சோலையொலி யுந்திரையின் வேலையொலி யும்பெரி
தொலிப்பவை மறைப்பவதனல்
வருமந்த முகில்செங்கை யமையென் றமைப்பமண்
மணியோசை பணியோசையு
மாறிட்ட வன்றைக்கு மின்றைக்கு மாருதியும்
வாரிதியும் வாய்புதைக்குந்
திருமந்திர நகர்வந்த வருமந்த செல்வியே
செங்கீரை யாடியருளே
தேககீ ணுகபூ ணுகனர் பாகமே
செங்கீரை யாடியருளே. (1)

550. இமையகிரி யுதவவரு வரிசைமர கதவல்லி
யென்னுடைய விதையவல்லி
யிமையவர் வணங்கரிய வுலகினர் வணங்கரிய
வீசுபரி பரமேசுபரி
யமையமை பசுந்தோளி ல்ணியரவ கங்கணி
யமிர்தகிருபை பேரறங்கணி
யருணமங் கலகமல யந்தரி நிரந்தரி சி
வாகம நிறைந்தசைவ
சமையநெறி சமையவரு பீதாம் பரீசதி
தருந்தாண்ட வாடம்பரி
சாந்தருக ணீகுஞ்ச ரந்தருபெண் ணீர்மையஞ்
சக்கரி யஞ்சக்கரி
சிமையமுடி நிழனிலவ திருமந்திர முறைசெல்வி
செங்கீரை யாடியருளே
தேககீ ணுகபூ ணுகனர் பாகமே
செங்கீரை யாடியருளே. (2)

வேறு

551. இருமந் தரகிரி நிகர்பைந் தனம
தசைந்தா லந்தோசி
ரிடையிங் கிறுமிறு மிறுமென் றரிபெய்
சிலம்போர் பண்பாட
மருவுங் குழைவிழி யுருவஞ் சனவிழி
யிரண்டாம் வண்டாட
மலரங் கனையுன தடிகும் பிடவுண்
மகிழ்ந்தே வந்தார்பார்
தருமந் தழையவெவ் வுயிருந் தழைய
விரிந்தா ரும்பூமி
சகளங் களுமுள் வளமுந் தழைய
வயஞ்சே ருந்தேவ
திருமந் திரநகர் வருமந் தரியுமை
செங்கோ செங்கீரை
சிவசங் கரர்புணர் சிவசங் கரிபரை
செங்கோ செங்கீரை (3)

552. உலகந் தழையுமெவ் வுயிருந் திரிபுரை
யிங்கோ வங்கோநீ
யுலகொன் றிடவுயர் பதினெண் கணமுத
லுன்கோ லங்காண
விலகுஞ் சதுர்மறை யவனுங் குலிசனு
மண்டா னுண்டானு
மெவருஞ் சயசய வெனவுஞ் சந்நிதி
நிறைந்தே நின்றார்பா
ரலகம் பெனவிரு புறமும் புரள
வசைந்தா டுந்தோடு
மடரும் படைவிழி யுருவங் குமுத
நறும்பூ மின்போலார்
திலகந் தருமுக மலர்மந் திரவுமை
செங்கோ செங்கீரை
சிவசங் கரர்புணர் சிவசங் கரிபரை
செங்கோ செங்கீரை. (4)

வேறு

553. சத்த சமுத்திர மொத்து மிகுத்த
தடாகங் கணபண சேடன் சிகைகீ
ழுஞ்சூரியன் போலே
சக்கர வட்ட மெனக்கதிர் விட்டொளி

தாவுஞ் சரவண வாசம் பெறுதே
வென் றீ சன்றனே
முத்தி கொடுக்க மறுக்க முளைத்திடு
மூடென்றே மின்மக வானும் பருளா
ருவந்தே கொண்டாட
முக்கண ருக்கு மறைப்பிர ணவப்பொருண்
மோசங் கெடவுப தேசஞ் செய்துபூ
வின்பால் வந்தாய்நீ
அர்த்த முரைத்திலை முட்ட னெனப்பிர
மாவின் றிருமுடி மேலஞ் சிடவோ
ரஞ்சா றெஞ்சாதே
யாத்த திருக்கை வழக்க மளித்துல
காதி யந்தமும் வலமா கும்பவுரி
கொண்டா டுந்தேவ
சித்திர மயிற்பரி வைத்த பரப்பிரம
தீபந் தனையருள் கூரங் கனையே
செங்கோ செங்கீரை
செப்பரு முத்தொடு தத்து சிறுத்திரை
சேர்மந் திரமுறை பாகம் பிரியாள்
செங்கோ செங்கீரை. (5)

வேறு

554. வயன்மண்ட லத்தோடு வருங்கரிய மேதிதாழ்
மடுவூ டுழக்கவெடிபோய்
வாளைகமு கம்பாளை யம்பூ விரித்திரண்
மழைத்துவலை யிற்சிதறமைப்
புயன்மண்ட லத்தூடு வெள்ளிதுள் ளிப்புகுவ
போலக் கிழித்துமேற்போய்ப்
பொழியுமழை வெள்ளப் பெருக்கிற் செருக்கிப்
புரண்டெழு கயற்பிரகாசங்
கயன்மண்ட லத்தினுக் கயன்மண்ட லத்திலொரு
கயன்மண்ட லந்தானெனக்
கருந்துகில் பொதிந்திட்ட மின்மினி யெனத்திகழ்
கடற்றிரை முகட்டிலுதையும்
செயமண்ட லாதித்த னிகர்மந்திர முறைசெல்வி
செங்கீரை யாடியருளே
தெரியாத சிவனிடம் பிரியாத பாகமே
செங்கீரை யாடியருளே. (6)

555. எங்கணு நிறைந்தருண விளவெயி லெறிக்குமிமை
யாசல மணக்கிழத்தி
யிச்சித் தெடுத்துமுகம் வைத்துச்சி மோர்ந்தருமை
யிட்டுமடி மீதிருத்திச்
சங்கையொடு பட்டாடை மடிநனைத் திடமஞ்
சனம்பொலிந் தொளிர்குங்குமச்
சாந்தந் திமிர்ந்துட னலங்கிட்டு நெற்றியிற்
சாத்துவெண் ணீறுதொட்டிட்
டங்கயற் கண்ணுக்கு மையிட்டு மட்டில்சரு
வாங்கபூ டணமுமிட்டோ
ரணிதிலக் காப்புமிட் டணிகளப பைந்தனத்
தமுதூட்டி யன்புபூட்டிச்
செங்கையந் தொட்டில்வைத் தாட்டுமொரு பெண்பிள்ளை
செங்கீரை யாடியருளே
தெரியாத சிவனிடம் பிரியாத பாகமே
செங்கீரை யாடியருளே. (7)

556. அத்தம் பலத்திரி புரத்தொன் றி லுறைவாண
னைமுக்க் குடமுழாவு
மச்சுத னிடக்கையு நாளவட் டத்தனலர்
தாளவட் டமுமிரட்டச்
சத்தம் பலத்திக் கொலிப்பத் தடக்கையாழ்
தும்புருவும் நாரதனுமோர்
சத்தசுர மொத்திசைப் பத்திரி புராந்தகத்
தாண்டவா டம்பரனெடும்
பத்தம் பலத்தினிற் படுபாதி யாமம்
பலத்தினின் மிகுத்தபூசா
பலத்தைப் படைத்துநால் வேதத்தி னுக்குமுன்
னம்பலம் பொன்னம்பலச்
சித்தம் பலத்திலெதிர் வாதாடி விளையாடி
செங்கீரை யாடியருளே
தெரியாத சிவனிடம் பிரியாத பாகமே
செங்கீரை யாடியருளே. (8)

557. பாதமெல் லணிச்சமல ராடவதி சீதளப்
பச்சிளங் கதலியாடப்
பச்சிள நரம்பினு லிலையாட வளைதங்கு
பச்சையிள மூங்கிலாடத்

தாதளவு பரிமளக் காந்தோ டசைந்துமாந்
தளிராட வணிபூடணத்
தாலியைம் படைதழுவு சங்கர சமந்தமணி
நாகிளங் கமுகமாடக்
கோதிலா தவருமித மிலவாட வெண்டளவு
குமுதமலர் கூடவாடக்
குமிழாட வள்ளையங் கொடியாட நீடுகொப்
புங்குழையு மாடமீறு
சீதள செழுந்திலக செங்கமல மாடநீ
செங்கீரை யாடியருளே
தெரியாத சிவனிடம் பிரியாத பாகமே
செங்கீரை யாடியருளே. (9)

558. கயத்தம்ப மாமகர சாகரப் பிரளயங்
கரைததும் பத்ததும்பிக்
கம்பித் தெழும்பித் தரங்கமா டக்கண
பணடவிப் பாம்பாடநின்
மயத்தம்ப மூதண்ட கோளமா டப்புவன
வட்டமா டத்தரணிசூழ்
வட்டப் பொருப்பாட மற்றைப் பொருப்பாட
மண்டலாதி யந்தமாடப்
புயத்தம்ப மாசுணப் பூடணமு மாடப்
புராந்தகன் கூடியாடப்
பூங்கயிலை யாடவிமை யாசலமு மாடநின்
பூச்சக்கர வாளமாடச்
செயத்தம்ப மேருகிரி யாடவிளை யாடுநீ
செங்கீரை யாடியருளே
தெரியாத சிவனிடம் பிரியாத பாகமே
செங்கீரை யாடியருளே. (10)

## தாலப்பருவம்

559. முந்தை ரகுபதி யடிபர வியமணி
முடிவரு ணன்வந்தான்
மூவுல குஞ்செலும் வாயுவும் வந்தான்
முக்கணர் துணைவந்தா

ரிந்திரன் வந்தா னங்கியும் வந்தான்
யமனிரு தியும்வந்தா
னெழுதிக் கிறைவரு மொருதிக் கிலையென்
றிங்கே வந்தார்கா
ணந்தணி யுங்குழை நம்பர் சடைப்பிறை
நாப்பண் மணிப்படமா
நாகந் தலைவைத் தெனவொரு கொம்பி
னடுக்கை தடக்கையிடுந்
தந்தி பயந்தருண் மந்திர வந்தரி
தாலோ தாலேலோ
சங்கர சம்பொரு பங்கம ரம்பிகை
தாலோ தாலேலோ. (1)

560. பைந்தார் தங்கிய சொருகமை குழலி
பைஞ்சிறை மயினிழலி
பதிவிரத கருணி மரகத வருணி
பானல மனையகணி
கொந்தார் வாகைச் சூலினி மாலினி
கோமளை யாமளைசற்
குணமிகு ரஞ்சகி யஞ்சுகி யென்றே
கும்பிடு வார்கண்முனே
வந்தா னந்தக் காட்சி கொடுத்துநல்
வாகன மாதியுமா
மணியணி பூடண வாதியு நாடொறும்
வர்த்திக் கும்பவுசுஞ்
சந்தா னந்தா னுந்தரு மம்பிகை
தாலோ தாலேலோ
சங்கர சம்பொரு பங்கம ரம்பிகை
தாலோ தாலேலோ. (2)

561. கந்தனை யுதவுங் கற்பக மேகற்
பகமே பொற்பகமே
கனியே யினிய கரும்பே கொம்பே
கருணை லயமயமே
பந்தன வெண்பாற் கடலமு தேமுப்
பாலே வடிதேனே
பச்சிள மயிலே பச்சைக் கொடியே
பச்சை யிளம்பிடியே

வந்தனை கூறுங் கோமே தகமே
மணிவயி டூரியமே
மரகத மேநல் வலம்புரி முத்தே
மாணிக் கக்கொத்தே
சந்தன மேபைந் தனமே யனமே
தாலோ தாலேலோ
சங்கர சம்பொரு பங்கம ரம்பிகை
தாலோ தாலேலோ. (3)

வேறு

562. அஞ்சு கரப்பிள்ளை யாறுத லைப்பிள்ளை
யாணே பேருமே
யந்தவ யிற்றையோர் போது நிரப்பிடி
லால்போல் வாடாதோ
பஞ்ச முனக்கென் பார முலைக்குட
மோபா லாறுமே
பண்டிப சித்தமு தாலெனை வெற்பிறை
பாரார் பாராரே
கஞ்ச மலர்க்கண னுலு முகத்தனும்
காவா னுடானோ
கண்கள் களித்திட வேதரி சித்தவர்
காரு னேருநீ
தஞ்ச மெனச் சொலி மேனை வளர்த்தவ
டாலோ தாலேலோ
சங்கரர் பக்கலில் வாழ்பச லைப்பிள்ளை
தாலோ தாலேலோ. (4)

563. மண்டமர் முப்புர முன்பு சிரித்திட
மாரு மாறேவேள்
வந்த சிறப்பெதிர் கண்பட வெற்றுரு
வாமா றேகூர்வோர்
கண்டு சிரித்திடி னுஞ்சரீ ரத்தளிர்
கார்போ லோயாமே
கண்பட மற்றவர் சிந்தை நினைத்தென
வேதோ மாலோக
முண்டு படிப்படி கொஞ்சி னுனக்கோர்க
ணேரூர் நாவேரூ

வொன்று மிலைத்தின மின்சொல் படிப்பினே
பேசாய் பேசாயோ
தண்டர ளத்திரு மந்த்ர நகர்க்கொரு
தாலோ் தாலேலோ
சங்கரர் பக்க லிருந்த கிளிப்பிளை
தாலோ தாலேலோ. (5)

564. உன்கை சுவைப்பது கொங்கை சுரப்புறு
பால்போ லூறுதோ
உண்டி சுருக்கிய பண்டி பசித்தழின்
மேளு தேவீயர்
மின்கவ லைப்படு மென்பது சற்றுமெ
ணுதே போவானேன்
விம்ப விதழ்க்கனி கம்பித மிட்டெதிர்
பேசாய் பேசாயோ
முன்கம லத்தனை யுந்தி படைத்த
மூனுை லேகாணு
முண்டக பொற்பத முன்பதம் பொற்பென
மோகா திநால்வே
தன்கை யெடுத்தெதிர் கும்பிடு தற்பரை
தாலோ தாலேலோ
சங்கரர் பக்க லிருந்த கிளிப்பிளை
தாலோ தாலேலோ. (6)

வேறு

565. பாரம் புயங்கச் சதுர்ப்புயனும்
பவள நயனப் பங்கயனும்
பரத்திற் கரசத் தெண்கயனும்
பருமத் தடக்கை வெண்கயனு
மாரும் பவளத் திகழ்க்கனிவாய்
அரசே திருவாய் மலர்வாயென்
றருத்தி யிருத்தி யுரைத்தனர்நீ
யஞ்சொற் குதலை மொழியாயோ
வூரும் பனிரண் டருக்கருமற்
றுளவச் சுவினி யிருவரும்பத்
தொருவ ருருத்திர கடவுளரு
முதிக்கு மட்ட வசுக்களொடுந்
தேருந் திருமந் திரநகரச்
செல்வி தாலோ் தாலேலோ

சிவனார் பாகம் பிரியாத
செல்வி தாலோ தாலேலோ. (7)

566. காதுக் கினிதுன் மழலையஞ்சொற்
கண்ணுக் கினிதுன் காட்சியின்பங்
கனிவாய்க் கினிதாய்க் கவுணெரித்துக்
கன்னந் தனைமுத் துவதின்பம்
வேதச் சொருபி யுன்னைமடி
மேல்வைத் திருப்ப துடற்கின்ப
மெச்சி யுனதுச் சியைமோந்து
வியத்த னுசிக் கினிதின்பம்
பேதைக் கினியைம் பொறிக்கின்பம்
பிள்ளைக் கனியன் றியுமுண்டோ
பெரிய விமயக் கிரியருள்பெண்
பிள்ளாய் குதலை விள்ளாயோ
சீதக் காயம் பூவருணச்
செல்வி தாலோ தாலேலோ
சிவனார் பாகம் பிரியாத
செல்வி தாலோ தாலேலோ. (8)

வேறு

567. செங்கா வித்தட மும்கம லத்தட
முங்குமு தத்தடமுஞ்
சேலூ டுஞ்சிறு காலூ டுந்திகழ்
தேரார் தெருவூடும்
பொங்கா டரவ நிதம்ப நுளைச்சியர்
புகுசிறு குடிலூடும்
புட்டிலி னூடும் கட்டிலி னூடும்
புளினத் திடரூடும்
கங்கூ டுங்கட லூடுங் கப்பலி
னூடுந் திரையூடுங்
கழிசுழி யூடும் கன்னிகை மார்கா
லூடுங் கரமூடுஞ்
சங்கூ டாடும் மந்திர நகராய்
தாலோ தாலேலோ
சங்கர சம்பொரு பங்கம ரம்பிகை
தாலோ தாலேலோ. (9)

568. தெண்டிரை கொஞ்சு தடங்கரை தனிலுந்
தேசிகர் தங்கைமடிச்

சீலையி லுங்கா சுப்பை யிலுந்தர்ப்
பையிலுங் குப்பையிலு
மண்டப மாளிகை யிலுமனை வளைமதி
றனிலும் வழிதனிலுஞ்
சிறுகுழி தனிலும் நறும்புன றனிலும்
மணறரு கிணறினிலும்
பண்டக சாலையி னும்பர மங்கையர்
கொங்கை யினுங்கையினும்
பணியணி பவளத் திடையினும் வாசற்
படியினும் முடியினும்வெண்
டண்டர ளந்திகழ் மந்திர நகராய்
தாலோ தாலேலோ
சங்கர சம்பொரு பங்கம ரம்பிகை
தாலோ தாலேலோ. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

569. எத்திசை வரைக்குமிறை பெற்றமகு டக்குடுமி
யிமையா சலக்குரிசில்தம்
இதய கமலங்களி சிறப்பவுங் கற்புடை
யிலக்கண விளக்கமான
சித்திர நிகர்த்தசொரு பப்பருவ விற்புருவ
திலகமதி முகமேனையுந்
திருமனங் குளிரவுங் கண்குளிர வும்பதும
செந்திரு மனங்குளிரவு
முத்திள நகைச்சனகி கர்த்தனமை யச்சொன்ன
முகூர்த்தநல் விசேடத்தினன்
மூதண்ட கோளமுஞ் சந்திரசூ ரியருமறை
மொழியுமொரு நிலைதவறினுந்
தத்திய கடற்றிரை முழக்கா நகர்க்கிறைவி
சப்பாணி கொட்டியருளே
சங்கரே சுரர்வாம பாகமே பாகமே
சப்பாணி கொட்டியருளே. (1)

570. இட்டகல நெல்லல்ல முக்குறுணி நெல்லல்ல
விருநாழி நெற்கொண்டுசிற்
றெறும்புகடை யானைமுத லெண்பத்து நான்குநூ
றுயிரஞ் சீவனுக்கு
மட்டகல முட்டாது முப்பத் திரண்டறம்
வளர்த்துமிச் சம்பிடித்து
மாலையிட் டுக்கைப் பிடித்தவென் னையற்கு
மணவறைப் பந்தலின்கீழ்க்
கட்டுகம் பற்றுமிரு கால்கூப்பி நின்றுமே
கலைக்கலை யொதுக்கிவெட்கிக்
கடைக்க ணிட்டுத்தலை கவிழ்ந்துட் குழைந்துமுன்
கைச்சரி சிலம்பப்புதுச்
சட்டுகம் பற்றியமு திட்டசெங் கைகொடொரு
சப்பாணி கொட்டியருளே
சங்கரே சுரர்வாம பாகமே பாகமே
சப்பாணி கொட்டியருளே. (2)

571. மலையெடுத் துக்குடை யெனக்கவித் துச்சொரிகன்
மாரியுந் தாங்குபூவை
வண்ணனைக் கமலமலர்க் கண்ணனைப் பெரிதுதம்,
மையனென வளர்தையலார்
சிலைவிடுத் திடுநுதற் றிருமுகத் திலகசிவ
காமியபி ராமிவாமி
செல்விமலை வல்லிகுல தெய்வமென நல்லவுரை
செய்திதழி னல்லவில்வ
விலையெடுத் தறுகெடுத் தலரெடுத் தாசித்து
மிச்சித்து மர்ச்சித்திடா
வெக்காலு முக்கா லுனைக்கா றுதித்தே
யிருப்போர் தனைப்பூவின்மேற்
றலையெடுத் திடவனுக் கிரகம்வைத் தருள்சத்தி
சப்பாணி கொட்டியருளே
சங்கரே சுரர்வாம பாகமே பாகமே
சப்பாணி கொட்டியருளே. (3)

572. அகலமுறு பூச்சக்கர வாளகிரி முழுதுமுனக்
காலயப் பத்தியுடுவி
ஞதியந் தமுமுனது பைந்தனத் தணியுமுத்
தாரமா லிகைவிளங்கு

பகலவனு மமுதகதி ரவனு முனதுபைய
 பைங்குழை யணிகுதம்பை
 பாரவட் டப்பொருப் பத்தனையு முன்கையிற்
 பந்தொடு கழங்கம்மனை
செகதலச் சேடனும் வாசுகியு முன்கையிற்
 சில்லரிப் பணச்சிலம்பெத்
 தேசகா லமுமழி விலாவலைத் துவான்பிர
 சித்தியே சிவசத்தியே
சகலகலை வல்லியே யிமையமலை வல்லியே
 சப்பாணி கொட்டியருளே
 சங்கரே சுரர்வாம பாகமே பாகமே
 சப்பாணி கொட்டியருளே. (4)

573. கன்னலம் பாகெனப் பாலெனத் தேனெனக்
 கடவுளர் கடைந்தவின்பாற்
 கடலிற் பிறந்தநற் றெள்ளமு தென்னவண்
 கவிதைபொழி கவிவாணரிற்
றென்முறைத் தன்னமை தொண்டனென் றுந்
 ரிற்கொத்தொ டடிமையென் றுந் [தொண்ட
 தொண்டரிற் கொத்தொடடி மைத்திறத் திற்பெயர்
 சுமந்தநற் குடியிதென் றும்
பின்னமில் லாதநம் பேபரக் குடிதனிற்
 பிள்ளைதலை முறைநமக்குப்
 பெற்றிசேர் சந்நிதியில் வித்துவா னென்றுமென்
 பேர்சொல்லி யழைத்துத்திருச்
சன்னதி தனிற்குடி யிருத்திரட் சித்ததாய்
 சப்பாணி கொட்டியருளே
 சங்கரே சுரர்வாம பாகமே பாகமே
 சப்பாணி கொட்டியருளே. (5)

வேறு

574. மரகத வருணனு மருமறை வருணனு
 மத்தள கைத்தாளம்
 வரன்முறை சுருதியி னொலிசெய விகசித
 பற்ப மலர்த்தேவி
யிருவரு மருவு கின்னர மிசைப்ப
 முருக்க மலர்ப்போனு

மிரதியு மதியொடு பரிதியு மகிழ்வர
தீர்த்த மிடத்தானே
பரகதி யுனதுசன் னிதியென விமையவர்
பட்டு விரித்தார்கள்
பதிவிர தம்முள மகளிர்கள் குரவை
முழக்கின ரிப்போது
குரைகட றிரைதவிர் துறைநக ருறையுமை
கொட்டுக சப்பாணி
குமரனை யுதவிய தமருக கரதலி
கொட்டுக சப்பாணி. (6)

575. சருவமு முழுதுஞ் சிவமய மெவையுஞ்
சத்தி படைத்தாலே
சகலமு நிலையும் பெறுமல தணுவுஞ்
சற்றசை யப்போமோ
கிருபைசெய் திடிலிங் கறமொடு பொருளின்
பத்தி ரடப்பாது
கெதியுன தடியென் றுயர்கதி யவருங்
கெச்சித மிட்டார்கள்
முறைமுறை புகலும் பரதமுன் மொழியுஞ்
சச்ச புடத்தாள
முதலரு முனதங் கையிலனவரதஞ்
செப்புவ ரெப்போதுங்
குறைவரு வளமந் திரநக ருறைமின்
கொட்டுக சப்பாணி
குழையொரு விழியம் பிகையன வரதங்
கொட்டுக சப்பாணி. (7)

வேறு

576. வானம்பிரி யாத்தேவ லோகந்தனி லாத்தான
கற்பகா டவிக்குளரசாய்
வாழிந்திர ஞர்க்கெழி லானந்தகன் மேற்றுன
வெட்டான திக்கிலுறைவோர்
ஞானம்பிரி யாத்தூய பாதந்தலை மேற்சூடி
நற்றுயெனச் சுருதியா
ஞலங்கமும் வாய்ப்பாட மாய்வந்தன வார்த்தார்கள்
சற்றேகடைக்க ணருள்பார்

சேனம்பிரி யாச்சூல பேரம்ப லக்கூத்தா
பரசித்தா வெனக்கருணைமா
றேடும்பொரு ளாய்த்தேவர் பாடும்பொரு ளாய்ப்பார
வெற்பாலயங் கயிலைவாழ்
தானம்பிரி யாத்தேவர் பாகம்பிரி யாத்தேவி
சப்பாணி கொட்டியருளே
தாய்வந்தது போற்பேதை பால்வந்தருளார்த்தார்கை
சப்பாணி கொட்டியருளே. (8)

வேறு

577. சொந்தமா யெனையாள் கிருபாலியே சூலியே
தொத்தார மலர்க்குழலியே
துங்கமுறு வாலைமா லினிமனோன் மணியான
சொற்காதி பத்திமயிலே
சிந்துரா னன்வேத சீலரை வேலரைச்
சேயென வளித்தவனமே
செங்கையா லறமோ ரெணுலுமென் மேலுமே
செட்டாய் வளர்த்தவமுதே
கந்தமார் கைலாச வாசமே நேசமே
கற்பா லயக்கனகமே
கஞ்சநான் முகமாய ஞருமே கூறுமே
கர்த்தரா கப்பிரமமே
சந்திரசே கரநீல கோலமே போலமே
சப்பாணி கொட்டியருளே
சங்கரே சுரர்வாம பாகமே பர்கமே
சப்பாணி கொட்டியருளே. (9)

வேறு

578. இருசெங்கையு முலாவு கடகஞ் சரிகலீ
ரெனத்தான் முழக்கமிகவே
யிலகைம்படை யுமார்பு துவளுஞ் சவடியூடு
ரத்னதி யிட்டொளிரவே
பொருசெங் கயல்குலாவி வருரெண்டு குழையூடு
பொற்றோடு மொத்தசையவே
புயமும்பொன் னரிமாலை சிறுகொண்டை யும்விலாச
கொப்போடு சுட்டிபொரவே
வருசெம்பொன் மலைராச னிதயங்களி கொள்மேனை
மட்டா மிலக்குமிலதாய்

மகிழ்வும் பெருகநீத னளியும் பெருகநீடு
வச்சிரா யுதத்தின் முடிதாழ்
தருசங் கரசுவாமி தமணங் கரசுவாமி
சப்பாணி கொட்டியருளே
தருமந்திர மதான திருமந்திர கல்யாணி
சப்பாணி கொட்டியருளே. (10)

---

## முத்தப்பருவம்

---

579. மக்கட் கெளிதாய்ச் சொலற்கரிதாய்
மகத்தாய் செகத்தாய்க் கபிடேகம்
வைத்த மகுடக் கைலாச
வரைக்கே கிடைக்கும் அலை(து)வாயப்
பக்கத் திருக்கு நீயெனுமோர்
பசுங்கொம் பிடத்தி னன்றிமற்றோர்
பசுங்கொம் பிடத்துப் பூம்பிஞ்சாய்ப்
பசுங்கா யாகித் தூங்காது
செக்கச் சிவந்த விழிக்கருணைத்
தேனூற் றிருந்து கனிகனிந்து
சிந்தித் திருக்கு மடியர்சிந்தை
தித்தித் திருக்கும் படிபழுத்த
முக்கட் கனிக்கு மோகனமா
முத்தே முத்தந் தருகவே
மூழுமா மறைதேர் பாகமே
முத்தே முத்தந் தருகவே. (1)

580. வெருக்கொண் டுனது குழற்குடைந்து
வில்லும் பொழியு மம்பினொடும்
விண்மேற் செல்லுங் கொண்மூவின்
விளைமுத் தமுமுண் டுன்கழுத்தின்
உருக்கொண் டிருக்கப் பயந்துகட
லொளிக்கும் வளைமுத் துண்டுனதாட்
குடைந்த பதும முத்தமுண்டு
னுலைபய தடந்தோட் கொதுங்கிவனத்

திருக்குங் கிளைக்கு முத்தமுண்டு
நின்சொற் கிடைந்து வேலியையிட்
டிருக்குங் கழைக்கு முத்தமுண்டு
ரெங்கெங் கணுமுத் துண்டிதழ்வாய்
முருக்க மலர்க்கு ளிருக்குமுத்த
முண்டோ முத்தந் தருகவே
முழுமா மறைதேர் பாகமே
முத்தே முத்தந் தருகவே. (2)

581. தத்துந் தரங்க முழங்காவுன்
சன்னிதானச் சமுத்திர முத்தந்
தனக்குத் தானேர் வடிவாணி
யுண்மைக் காணி சிவப்பாணி
குத்துண் கழுநீ ரிருப்புக்குட்
கழிப்புக் கழிப்புக் கையேறல்
குறுக லாணிக் குறுகல்வரை
கழிவு குறுகல் செங்நீர்சப்
பத்தி சமதா யங்கழிவு
சமதா யம்பாற் சங்குவெள்ளை
பருவண் டியிலே தரம்பிரிப்பர்
பாரு வதியின் செங்கனிவாய்
முத்தந் தனக்குத் தரம்பிரிக்க
முற்ரு முத்தந் தருகவே
முழுமா மறைதேர் பாகமே
முத்தே முத்தந் தருகவே. (3)

582. நத்து நிலவுச லஞ்சலநாக
ணவாய் படைத்த வலம்புரிநல்
கியமுத் தினுக்கு விலையுண்டு
நாகிளம்பூம் பாளை முருக்கவிழ்பூ
கத்தின் மிடற்றி னிடத்தபழுக்
காய்முத் தினுக்கு விலையுண்டுபூங்
கழைமுத் தினுக்கு விலையுண்டு
கண்முத் தினுக்கு விலையுண்டோர்
மெத்த முகின்முத் தினுக்குவிலை
யுண்டு கமல விகசிதப்பூ
விளைமுத் தினுக்கு விலையுண்டு
விரும்பி யெவரும் விலைமதியா

முத்த முனது செங்கனிவாய்
முத்தே முத்தந் தருகவே
முழுமா மறைதேர் பாகமே
முத்தே முத்தந் தருகவே. (4)

583. மலர்க்கா வோங்கும் வானத்தே
மறுகூ டொதுங்கும் வானத்தே
மறைபே சுமுத்த ராசியே
மணல்வீ சுமுத்த ராசியே
நிலைவீ டருகுங் கற்பகமே
நெறிவீட் டிருக்குங் கற்பகமே
நியமர் பகரு மந்திரமே
நிலவு நகர மந்திரமே
இலக்கா கியசங் கரன்சகியே
யெழுதா வேத ரஞ்சகியே
யெனையாண் டருளுஞ் சக்கரியே
யிமையோர் வணங்குஞ் சக்கரியே
மூலைக்கோ மளையே யாமளையே
முறுவன் முத்தந் தருகவே
முழுமா மறைதேர் பாகமே
முத்தே முத்தந் தருகவே. (5)

584. மதிமண் டலநேர் மனைகளெல்லா
மாட கூட வுப்பரிக்கை
மணலில் விரவிக் கிடப்பதெல்லாம்
வயங்குங் கதிர்வெண் டரளமணி
யெதிர்சொல் லாவெவ் வொருவர்கள்
பாக்கிய தேவேந் திரபாக்கியம்
வாழ்ந்தி ருக்கு மகளிரெல்லா
மருந்த திக்கு நிகர்மகளிர்
கதிர்போல் வழங்கு காசும் வெள்ளிக்
காசுந் தங்கக் காசுமுற்றங்
கையாற் றெளிக்கு நீருங்கம
கமெனக் கமழ்பன் னீர்வளமை
முதிர்மந் திரமா நகர்வாழ்வே
முறுவன் முத்தந் தருகவே
முழுமா மறைதேர் பாகமே
முத்தே முத்தந் தருகவே. (6)

வேறு

585. ததிகுடிக்குந் திருமுகிற்குஞ்
சதுர்முகற்குங் கருதுமோர்
சதுர்மறைக்குந் தனிமுதற்சங்
கரரிடத்தன் புடையபார்
பதிதளிர்க்கும் பதிவிரதைப்பெண்
பணிலமொய்க்குங் கரையிலே
படர்சிறுத்தெண் டிரைகடற்றண்
பதியின்முத்தென் றுரைசெய்தே
துதிசெயச்சிந் தையைநினைத்துந்
தொழுமவர்க் கம்புவியிலே
சுகமளித்திங் கனுபவிக்குந்
துறைகொடுத்துஞ் சரணமே
கெதியெனத்தந் தருடுறைப்பெண்
கிருபைமுத்தந் தருகவே
கிளிமொழிப்பங் கயமுகப்பைங்
கெவுரிமுத்தந் தருகவே. (7)

586. தெரியு முத்துஞ் சொரியினத்துந்
திரியுமுப்பின் கடலிலே
சிகரவெற்பின் றரளநிச்சந்
தழன்மடுக்குங் குழலிலே
கரியமைக்கொண் டவில்விளைக்குங்
ககனமுத்தந் தருகவே
கழையின் முத்தங் கர(ட)டுமுத்தங்
கமலமுத்தந் தருகவே
பரிமிதத்திண் கரிமருப்பின்
பரியமுத்தஞ் சரவையே
பவளமுத்தெங் குளதிகழ்ச்செம்
பவளமுத்திங் கருமையே
கிரியணிக்குஞ் சிறுதுரைப்பெண்
கிருபைமுத்தந் தருகவே
கிளிமொழிப்பங் கயமுகப்பைங்
கவுரிமுத்தந் தருகவே. (8)

வேறு

587. கழையிலுங் கழையிலுங் கண்பட்ட முத்தைக்
கடைக்கணிட் டும்பார்க்கிலோங்
கார்வண்ண ரகுபதி கரத்தா,லமைத்தவிக்
கடலகட் டிப்பிமுத்தும்
விழைவுறேங் குப்பையி லொதுக்குவோங் காலான்
மிதித்துத் துவைத்துவருவோ
மிதிபட்ட முத்தினைத் தொட்டிட்ட செங்கையும்
விளக்குவோம் பன்னீரைவிட்
டெழுமுழக் கவுண்மதத் தயிரா வதப்பூ
ணிருப்பிடு மருப்பின்முத்து
மெத்தனைக் குள்ளே யெனமதிப் போம்பின்னை
யெந்தமுத் தினைமதிப்போந்
தழைமலர்த் தொடைச்சொரு கணிகுழற் பாகமே
தவளநகை முத்தமருளே
தாரமலை முத்தர்புணர் தாரமலை முத்தமே
தவளநகை முத்தமருளே. (9)

588. மேலைத் தவத்தர்க் கிருப்பிட மெனுஞ்சொர்க்க
வீட்டினிலு முத்தமில்லை
வேழத்தி னுக்குமுனை நீடுமிரு கோடுதொறும்
வெண்டரள முத்தமில்லைச்
சேனுற் பவித்தமைக் கெற்போ தரத்தெழு
திரைகடலு முத்தமில்லைச்
செந்நெற் கதிர்தோறுங் கன்னற் கணுத்தோறுந்
தேயத்தின் முத்தமில்லைப்
பாலொத்த செந்தமிழ்ப் பிள்ளைக் கவிக்குளோன்
பதுமலமு முத்தமில்லைப்
பானிலா வுமிழ்வெண் மணற்றிடரி னெய்தற்
பரப்புப் பொருப்பாகுமித்
தாலத்தின் முத்துண்டுன் வாய்முத்து முண்டுநீ
தவளநகை முத்தமருளே
தாரமலை முத்தர்புணர் தாரமலை முத்தமே
தவளநகை முத்தமருளே. (10)

## வருகைப்பருவம்

589 கணிலுங் காணக் கிட்டாவக்
கரைக்குக் கரைக்குச் செலப்பிரளயக்
கட்டாய்த் தரங்கஞ் சுருட்டியமைக்
கடலிற் கிடக்குங் கப்பல்பட
கணியம் பிடித்த கம்பாக
மதனிற் பிணித்து விட்டநங்கூ
ரத்தை மகர மிரையெனவா
யதக்கி யிழுப்பக் கலந்துரப்போர்
தணியுந் தடத்துட் டடக்கரிதந்
தடக்கை பிடித்துக் கராமிழுப்பச்
சலித்திட் டழைக்குங் குரலெனவே
சத்திக் கபயமென் றோலமிடும்
பணிலங் கரைபோய்த் திரியுமந்திர
பதிமா நிதிமான் வருகவே
பாகம் பிரியாள் சங்கரனூர்
பாகம் பிரியாள் வருகவே. (1)

590. மச்சத் துறையா யிரத்தொரெட்டு
மாற்று மேருப் பொருப்பாகி
மற்றைப் பொருப்பு மடங்குமிம
வான்கைக் கடங்கா மார்படங்காக்
கச்சுக் கடங்காக் கனத்ததனங்
கனிவாய்க் கடங்கா மற்றோர்முலைக்
காம்பைக் கரத்தா னெருடிபணிக்
கடைவா யிருபா லொழுக்கியபான்
மிச்சிற் பெருகிச் சயிக்கியமாய்
மின்னுந் தளிர்ப்பூந் துகிலனைப்ப
விளையாட் டயர்ந்து மேனைமடி
மேல்வீற் றிருந்து முலைகுடிக்கும்
பச்சைக் குழந்தை பருவமந்திர
பதிமா நிதிமான் வருகவே
பாகம் பிரியாள் சங்கரனூர்
பாகம் பிரியாள் வருகவே. (2)

591. காது தடவும் விழியுங்கம
கமெனக் கமழுங் குமிழுமிதழ்க்
கவிருந் தவிரா வதனசந்திர
காந்தி யணங்குன் றிருமேனிச்
சோதியெழுந்து கொழுந்துவிட்டுத்
தொடர்ந்து படர்ந்து நடந்துலகைச்
சுற்றும் புணரி முற்றும்வளர்ந்
தோங்கிப் பரந்த கடன்மடுக்குஞ்
சாதி யெழுமா முகிலுமுகிற்
ருரை மழைவீ ழுகிலமகி
தலமும் பச்சைப் படுத்திவிஷ்ணு
சருவாங் கமும்கொண் டையர்படுப்
பாதி சரீரத் தினும்படர்ந்த
பச்சைக் குழந்தாய் வருகவே
பாகம் பிரியாள் சங்கரனார்
பாகம் பிரியாள் வருகவே. (3)

592. மேகஞ் சுரந்து பரந்தன்ன
மேனிக் கொடுஞ்சூர்க் குலமிடுக்கண்
விளைக்க வெறிமத் தெறிதயிரின்
வெருவிக் கயிலைப் பொருப்பினரு
காக நிறைந்தென் னையாவுன்
னபயம் அபய மெனுமமரர்க்
கிரங்கி யபய வத்தமளித்
தைம்மு கத்தொ டதோமுகமுந்
தேக மாறு மாய்ப்பிறந்து
சிறந்து சரவணை யிற்கிடந்த
சிறுவன் றனைச்சென் றெடுத்தொன்றாய்ச்
சேர்த்து முலைப்பால் கொடுத்துவிடைப்
பாகன் கரத்தி லளித்தமந்திரப்
பதிமா நிதிமான் வருகவே
பாகம் பிரியாள் சங்கரனார்
பாகம் பிரியாள் வருகவே. (4)

593. வாரயிற் புவன வட்டமிட்டு
மடுத்தும் வயிறு நிறையாமல்
வைத்த பாலுந் தயிருநெய்யு
மருட்டுந் திருட்டுக் குணம்புடைத்துக்

கோயிற் சிறப்பென் றுயர்சிறு
குடிலிற் சிறந்தோங் கருச்சுனத்துக்
கூடு தவழ்ந்து விழிகடொறுங்
குடிகொண் டிருந்தோ ரடிச்சம்பிர
தாயத் தொடுபூ வளர்த்துநின்று
தமிழ்ப்பின் நடந்து மதகரிநேர்ந்
தழைக்கச் சக்கர மெடுத்தோடித்
தசத்தி னூறு முடிபடைத்த
பாயிற் சிவனே யெனக்கிடந்த
பரனுக் கிளையாள் வருகவே
பாகம் பிரியாள் சங்கரனார்
பாகம் பிரியாள் வருகவே. (5)

594. யோக்கிய சிவாக்கியா னச்சுடரி
னென்றாய் வியாபித் தவள்வருக
யோகத் தியான மௌனிகடம்
உள்ளத் திருக்கு முமைவருக
வாக்கு முலகத் தறம்வளர்த்த
வன்னை வருக மணிச்சதங்கை
யம்பொற் சிலம்பு புலம்பவசைந்
தாடி வருக வென்னமதுர
வாக்கி யெனவுண் டாக்கியென்பா
மாலை யடிசூ டினள்வருக
மாலை யடிசூ டினவரத்தால்
வங்கிச பாரம் பரியபுத்திர
பாக்கிய மெனக்குத் தரவருக
பவுசுந் தருக வருகவே
பாகம் பிரியாள் சங்கரனார்
பாகம் பிரியாள் வருகவே. (6)

595. வச்சிரக் குதம்பை யிடவருக
மணிக்கொப் பணிய வருகவுச்சி
மகுட மணிமாம் பழக்கொண்டை
வனைய வருக மணிவணன்றங்
கச்சி வருக திருவரைஞாண்
கட்ட வருக கைக்குரத்னக்
கடக மிடுக வருகதிருக்
கழுத்துக் கணியா பரணதி

செச்சை புனைய வருகமுலைத்
திருப்பால் பருகி யிடவருக
செங்கா வியங்கட் கஞ்சனமுந்
தீட்ட வருக விமையகிரிப்
பச்சைப் பசலைப் பெண்வருக
பாதஞ் சேப்ப வருகவே
பாகம் பிரியாள் சங்கரனார்
பாகம் பிரியாள் வருகவே. (7)

596. கெண்டைக் கனைக்காற் கிறுகிடக்கிண்
கிணியுஞ் சிலம்பு மினிப்பூட்டேன்
கிண்ணத் தமுது மூட்டேன்சங்
கெடுத்துப் பிடித்துப் பால்புகட்டேன்
கண்ட சரமு மைம்படையுங்
கட்டேன் ரத்னக் கடகமிடேன்
கண்ணுக் கெழுதஞ் சனமுந் தொடேன்
கமல முகம்பார்த் தினிப்பகரேன்
கொண்டைக் கிணங்கச் சுடிகையிடேன்
குமிழ்மூக் கினுக்குத் தமுக்கணியேன்
கொடுங்கை யணைத்து முலையுங்கொடேன்
கொப்புங் குழையுங் குழைக்கணியேன்
பண்டைச் சதுர்மா மறைக்குமெட்டாப்
பச்சைக் குழந்தாய் வருகவே
பாகம் பிரியாள் சங்கரனார்
பாகம் பிரியாள் வருகவே. (8)

597. செய்ய பவளச் செழுங்கொத்தே
முத்தே சீவ ரத்தினமே
சிந்தா மணியே மரகதமே
திகழும் வைடூ ரியமணியே
துய்ய பதும ராகமே
சுடர்விட் டொளிர்கோ மேதகமே
சோதி வயிர மேநீலச்
சுடர்விட் டெரிக்கு மிளமணியே
சைவ மணியே பெண்மணியே
தயங்கு மினிய பொன்மணியே
தாயே வருக வருகவென்றாற்
சதங்கை சிலம்பப் புலம்பவென்முன்

பைய நடந்து வராதபரர்
முகமேன் வருக வருகவே
பாகம் பிரியாள் சங்கரனர்
பாகம் பிரியாள் வருகவே. (9)

வேறு

598. மரகத வருணன் வடிவுடை யிமைய
மலைமகள் வருக வருகவே
மதர்விழி மகர குழைவிழி யுருவ
மயிலியல் வருக வருகவே
சுரர்முதன் முனிவர் முடிமிசை யிருகை
தொழுதனர் வருக வருகவே
துடியிடை துவள மணியணி மகுட
சுடர்விட வருக வருகவே
பரிபுர சரண விகசித கமல
பகவதி வருக வருகவே
பருவத வரசி மகிழ்வுற வுரைசெய்
பணிமொழி வருக வருகவே
திரிபுரை கௌரி பயிரவி குமரி
தினகரி வருக வருகவே
திரையொலி தவிரு முததியி னகரி
திருவுள மகிழ வருகவே. (10)

---

## அம்புலிப் பருவம்

---

(சாமம்)

599. பாகமென் னும்படி யிருப்பைநீ யிவளையும்
பாகமென வேயுரைப்பார்
பானல முனக்குங்கை வாரமிவ ளுக்குமோ
பானலங் கைவாரமாம்
நாகபூ ணர்க்குரித் தாகுநீ யிவளுமோ
நாகபூ (க)ணர்க்குரித்தா
நற்கலை நிரம்பிநிற் குமுனக் கிவளுக்கு
நற்கலை நிரம்பிநிற்கு

மேகமாய் நீயுமலை யிற்பிறந் தாயிவளு
மேகமலை யிற்பிறந்தா
ளிருவர்குண முங்குறியு மொன் றிவ ளுடன்சரி
யிருந்து விளையாடலாமே
யாகம மியம்புதிரு மந்திரகக ரம்பிகையொ
டம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (1)

600. உலோகாதி யந்தமும் வளைந்தவுத திப்பிரளய
முண்டெழு முகிற்பரந்த
வுறுபுன றதும்பிளம் பாசடையும் வெண்முகில்
செம்முகில் விரிந்தநுரையும்
மேகோ பவித்தெழுந் திடையிடை மறிந்தமீன்
கணமெலாம் மீன்கணமு
மங்கெங்கு முகம்வைத்த கங்கையுங் காணுமீ
தண்டபித் திகைகூலமும்
வாகா யிருந்தபுய லென்னும்வண் டூதமக
ரந்தபரி வேடமிட்டு
வாசப்பிர காசம்வீ சப்பிரச வமுதகலை
வார்ந்தொழுக வாய்ந்தலர்ந்த
வாகாய வாவியம் புயமென் றழைத்தவளொ
டம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (2)

(பேதம்)

601. பூச்சக்கிர வட்டத் தெறித்தபதி னறுகலை
பூத்திருப் பனவுனக்குப்
பூச்சக்கிர வட்டசட் கோண முக்கோணம்
பொருந்தெணெண் கலையிவட்கு
மாச்சற பிறப்புட னிறப்பும்வளர் வுந்தேய்வு
மதிதொறும் வருமுனக்கு
மட்டிலக் கற்றதொரு கற்பகா லமுமாய்
விலாக்கர்த் தவியமிவட்கு
பேச்சுக் கடங்காத வொருகணஞ் சூழ்ந்தே
பிரகாசித் திடுமுனக்குப்

பேரண்ட பதினெண் கணங்களுஞ் சூழ்ந்துமே
பின்செலு மிவட்குமந்திரத்
தாச்சிக்கு நீதாழ்ச்சி யல்லவோ வலியவந்
தம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (3)

602. உதையமன மத்தமன மெனரெண்டு மனமுண்
டுனக்கிவட் கேகமனமே
யுன்னுடைய வுள்ளங் களங்கமுண் டிவளுளத்
தொருகளங் கமுமில்லையால்
சிதையுமுன் மானநிலை நில்லா திவட்குச்
சிதைந்திடா நிற்குமானந்
தேய்ந்துமாய்ந் திடுமெய் யுனக்கிவட் கெத்தேச
காலமுந் தேய்வில்லையா
லிதயமகிழ் சிவனிடம் சேர்ந்துசடை வாயுறுவை
யிவள்சேர்ந்து வாழ்ந்திருப்ப
ளிரவுக்கு நீபுறப் படுவையிவ ளுலகெலா
மீன்றினிது ரட்சைபுரிவ
ளதிகமிவ ளாகையா லுன்னையு மிரட்சிப்ப
ளம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (4)

(தானம்)

603. முகமோ ரிரண்டுமுன் றுடையெம் பிரான்சடை
முடிக்கிடை கிடந்தநச்சு
மூச்சுவிட் டுடலநெளி முடவுட் படச்சிகையின்
மூதரா வென்னகருடா
சுகமோ வெனக்கேட்ட செய்திநீ யறியாது
சொன்னபா சுரமல்லவே
தொல்லைமலை பெற்றவெம் பெருமாட்டி மடியில்வந்
தினிதாக விளையாடினல்
செகமேழு மொக்கச் சுமக்கும் பணிமகுடச்
சேடனுக் கொப்பமைக்குஞ்
சிகாரதன ராகுத் தனைத்தட்டி வினவவுஞ்
சீத்துவ முனக்குண்டுவா

ணகமூடு தாரா கணத்தூடு விளையாடு
ம்ம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (5)

604. மைம்முகடு மட்டுமணி விட்டவெண் சுதைமாட
மணிவெயி லெறித்தலாலும்
வண்டலிடு வெண்மணற் கிடையிடை கிடந்துமணி
முத்தொளி விரித்தலாலும்
பொம்மென முழக்கும் பெருங்கயத் தலையிற்
புரண்டலையி லாவிக்கரை
புக்கிடம் புரிவலம் புரிதினஞ் சொரிநித்தி
லப்பிரபை புகுதலாலு
மிம்மந்தி ரத்திரு நகர்க்கெல்லி யும்பகலு
மிவையென் றுரைக்கவரிதா
லிங்குவந் தாலுனக் குள்ளக் களங்கமுத
லில்லைக் களங்கமணுகா
வம்மைதன் சன்னி தானம்பெற் றிருந்துநீ
யம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (6)

605. பெரும்புவன வட்டம்வளை பூச்சக்கி ரவாளப்
பிறங்கலி னடங்குமண்டப்
பித்திகையு மெத்திகையு முத்திகை படுத்திப்
புறப்படு சலப்பிரபாகக்
கருங்கடலை யுந்தன்வாய் திறவாத வண்ணம்வாய்
கட்டுமந் திரமிவட்குக்
கைவந்த துன்றனக் கையுற விலாதபடி
கண்காண வொப்பிக்கவோ
விருந்தவூர்க் கடலையுந் தெற்கொடு வடக்குமோர்
யோசனை விலாசநீள
மென்றும்வாய் திறவாமல் வாய்கட்டி விட்டதா
லென்றும்வாய் திறவாதுனை
யருந்துமிரா குத்தனையும் வாய்கட்டி விடுவணீ
யம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (7)

(நீண்டம்)

606. மிருகா பதிச்சிங்க வேறெனத் தக்கனையும்
வீழ்த்தியே சிரமரிந்து
வேள்வியை யழித்ததிக விக்கினே சுரர்தொந்தி
மேல்வயிற் றைக்கிழித்துப்
பருகா ரழற்கடவு ளைக்கர மொடித்துதைய
பரிதியைப் பற்றகர்த்துப்
பாதத்தி னுன்னை யுந்தேய்த்த ரணவீர
பத்திரன் மிகுத்தெழுசினந்
திருகா வழற்பொறி தெறிப்பக் குறித்தகீழ்த்
திசைநோக்கி வண்டுறக்கித்
திருமந்திர ரகசியத் தலத்தினுக் காட்சி
தேவாலயத் தீசானதிக்
கருகாக வாய்த்த மாய்நின்ற தறிகிலா
யம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (8)

607. மழைத்தடங் கொடுமுடி மணிக்ககன முகடுருவ
மந்தர நிறுத்திநெற்றி
வட்டச் சிகாரதன பட்டத்து நெட்டுடல்
வாசுகி தனைப்பிடித்துக்
குழைத்துப் பிணித்துத் தடத்திருப் பாற்கடற்
குண்டகழி யகடுடைபடக்
குமைத்துத் திருத்திடுந் திமிலகு மிலத்துனைக்
கூடக் கலக்கிவாட்டுந்
தழைத்ததுள வப்பலை மின்னுசொர் னப்படாந்
தாங்குபங் கயலோசனன்
தங்கைகண் டாயவன் சற்றே யறிந்தாற்
சகிக்கலன் வலக்கைநீட்டி
யழைத்தவுடன் வந்தாற் பிழைத்தனை பிழைத்தனை நீ
யம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
னம்புலீ யாடவாவே. (9)

608. முடிக்கண் பணச்சிகை மணித்தலையி னெட்டுடன்
முடக்கிப் படுத்தபகுவாய்
மூதரா வுன்னைக் கடுப்பட வடுப்பட
முழுவதும் விழுங்கிவிட்டால்

குடிக்கிற் குடித்திடுங் கொப்புளிக் கிற்கொப்பு
 ளித்திடு மதற்குவாயிற்
குள்ளகப் பட்டதண் ணீர்விடந் தலையினிற்
 கொள்ளா திருக்கமந்திரம்
படிக்கக் கருத்துன் னுளத்தடைந் தாலிருப்
 பதுமந்திர பீடமிவள்பாற்
படிமந்திர மிந்தப் பதிக்கலான் மற்றைப்
 பதிக்குமந் திரமில்லையால்
அடைக்கல மெனச்சொல் லுனக்குமோ ரிடுக்கணிலை
 யம்புலீ யாடவாவே
யழியாத பொருள்பாகம் பிரியாத கௌரியுட
 னம்புலீ யாடவாவே. (10)

---

## அம்மானைப்பருவம்

---

609. வெம்புலியு மெண்குமடன் மேவுகடு வாயோடி
 மடங்கலு மடங்கலேறு
மிருகாதி நரகாதி புகுதாது காப்பதூஉம்
 விரதமென வனவரதமும்
பைம்புலி னிதழ்கறிக் கும்படி பிரக்கினை
 படைத்துப் பிறங்குஞானப்
பைஞ்சுட ரெறிக்குமிமை யாசல மனைக்குரிய
 பன்னிதுடை மஞ்சநீங்கி
யும்பலிப முங்கயந் தலையும்விளை யாடிமுன்
 னுலாவியநி லாவின்முற்றத்
துல்லாச மாகவுன் னுதையமண் டலமிழிந்
 தொக்கவே விளையாடுதற்
கம்புலீ வாவென் றழைத்தகை சிவப்பநீ
 யம்மானை யாடியருளே
யம்மானை யறியாத பெண்ணுன பர்கமே
 யம்மானை யாடியருளே. (1)

610. பொய்ம்மானை யம்மானேர் பொன்மா னெனப்பூம்
 பொருட்டுறை பிராட்டிகாட்டப்
போர்புரி தடக்கைதனில் வார்சிலை யெடுத்துப்
 பினேகுவோன் றூரைவார்க்க

விம்மானை யேத்துந்தி யங்கமல கர்ப்போ
தயசதுர் மறைத்திருமுகத்
தெழில்காட்டு பரமேட்டி மறைநெறி வழாமலே
யிருமணச் சடங்கியற்றக்
கைம்மானை வைத்துநின் கைப்பிடித் திட்டநங்
கண்ணுதற் பெம்மானைநீ
கல்யாணப் பந்தரின் மணக்கோல மெல்லக்
கடைக்கணின் மகிழ்ந்துநோக்கு
மம்மானை யருடம்விழி யம்மானை யிடைதுவள
வம்மானை யாடியருளே
யம்மானை யறியாத பெண்ணுன பாகமே
யம்மானை யாடியருளே. (2)

611. பிடிக்குமணி யம்மனை யெடுத்தெறி யும்விசையிற்
பிறங்குதா ராகணத்தைப்
பிடுங்கித் தடங்ககன முகடுதட வித்திரும்
பித்தடங் கைகடங்கு
முடுக்குழு விதம்மனை விதுவுயர்வ திதுதாழ்வ
திதுதீர்வ தெனத்தெளிவுறு
தொக்கப் பிடித்திருந் தண்ணுந்து விளையாட
வுதிர்பட்ட வுடுவம்மனை
படிக்குட் கிடப்பதனை முத்தொடு பொருக்கியம்
பங்கேருகத் தணங்கும்
படிகத் துருப்படு மணங்குமம் படர்முலைப்
பாரத் தணைத்தருகுநின்
றடிக்கடி யெடுத்துக்கை நீட்ட வவதானமா
யம்மானை யாடியருளே
யம்மானை யறியாத பெண்ணுன பாகமே
யம்மானை யாடியருளே. (3)

612. மட்டான தில்லாத பூச்சக்கிர வாளமு
மற்றப் பெரும்புவனமு
மாதிரமு மேகமுதன் மண்டலாதி யந்தமும்
வழங்குஞ் சராசரமுநீ
கட்டாய் நடத்தின படிக்கே நடக்குநின்
கைபார்த் திருக்குமெவையுங்
கண்ணுதற் பெருமானு நின்னருள் படைத்தலது
கர்த்தவிய நடத்துதற்கே

யொட்டாதுன் னுடையசெய லம்மனைக ளங்காடி
னுன்னிழலு மொக்கவாடு
முலகமுத லாடுநீ யாடினு லென்பதற்
கொருவரைக் கேட்பதென்னே
வட்டாவ தானமாய்க் கட்டாணி முத்தேபொன்
னம்மானை யாடியருளே
யம்மானை யறியாத பெண்ணுன பாகமே
யம்மானை யாடியருளே. (4)

613. பூட்டுங் கலன்கலின் கலினெனப் பொற்சரி
புலம்பச் சிலம்பலம்பப்
பொருகயற் கண்ணிணைக ளாடாம லம்மனை
பிடித்தாடு முன்சித்திரஞ்
சூட்டும் பணுமுடிச் சேடன் சிகாமணிச்
சுடிகைதனை யாட்டும்வட்டச்
சுற்றுததி காந்தப் பொருப்பெட்டு மொக்கத்
துளங்கக் கழங்கிஞட்டு
நீட்டுந் தடக்கைப் பொருப்பெட்டு முட்டுநா
னிலவலய முற்றுமாட்டு
நீற்ரெளி பழுத்தழ கெறிக்கு மென்னைய
னிலாத்தவழ் சடாமுடியை
யாட்டுமுன் செங்கைவித் தாரத்தை யாரறிவ
ரம்மானை யாடியருளே
யம்மானை யறியாத பெண்ணுன பாகமே
யம்மானை யாடியருளே. (5)

614. முகிலாண்ட மண்டலத் தப்பால் விளக்கொளி
முளைத்தனைய நட்சத்திர
முறைமுறை யெறிந்தவம் மணிவான் முகட்டினிற்
பதிந்ததென மானுமன்றே
னகிலாண்ட செங்கையை யடைந்திடு முகிழ்த்ததின்
நாற்பெருங் கதிதனிற்போய்
நற்பெரும் பதவியைப் பெற்றுமெய்ஞ் ஞானத்தி
னற்சுட ரெறித்தலேய்க்குந்
துகிலாண்ட கொடியிடைச் சிவகாமி யென்றுனைச்
சேவடி யடைந்தபேரே
சொர்க்கத் திருப்பருன் செங்கையை யடைந்தபேர்
சொர்க்கத் திருப்பதரிதோ

வகிலாண்ட வல்லியே யெனையாண்ட செல்வியே
யம்மானை யாடியருளே
யம்மானை யறியாத பெண்ணுன பாகமே
யம்மானை யாடியருளே. (6)

வேறு

615. சாடுந் தரங்க மிரங்கிய சத்த
சமுத்திர முவட்டெறியத்
தலையுறு மண்டல மிட்டெழு நெட்டுடல்
சருவமு மண்டலமிட்
டுடு பிலத்தி னொளித்திடும் விடமுட
வுட்பட சேடனைநீ
டுச்சி பிளக்கப் பற்றி வளைத்தல
குதறிக் கதறமுறித்
தீடு செலுத்திக் கக்கு மிரத்த
மெடுக்கக் கொத்தியெடுத்
திருசிறை பட்டதி லண்ட கடாகமு
மிடிபட மடமடென
வாடு மயிற்பெரு மானை யளித்தவ
ளாடுக வம்மனையே
யாள்பர மன்மனை யாளெனு மெம்மனை
யாடுக வம்மனையே. (7)

616. பாடும் பயிரவி கோடி வராளி
பந்து முகாரிமுதற்
பண்ணுட னேயுன் சன்னிதி பாடிய
பாடினி பாரதிபோல்
தோடங் குழைநேர் வைத்தமை நல்யாழ்
சுருதிசெய் கீர்த்தனமுந்
தோத்திர முஞ்செய வாத்திய மும்பர்
தொனிக்கப் பாற்கடலா
மாடந் தனிலுறை மரகத வண்ணனை
மார்பி னணங்கரசே
யாது புரிந்துபொன் னம்மனை யாடிட
வம்மி னெனச்சென்று
ளாடம் பரியுமை பாகம் பிரியா
ளாடுக வம்மனையே
யாள்பர மன்மனை யாளெனு மெம்மனை
யாடுக வம்மனையே. (8)

617. முதிருல குக்குடை யாடை யெனத்திகழ்
முந்நீ ரெழுகடலுண்
மோது தடங்கரை யிற்றிரை தத்தி
முழக்கா மைக்கடலின்
மதியுவ மான விடம்புரி யிப்பி
வலம்புரி தினம்விளைய
மாசறு தூய மணற்றிட ரெங்கு
மணித்தர ளத்திரளுந்
துதிபுரி சுற்றுக் கொவ்வொரு யோசனை
தூரத் துட்குயவர்
சுள்ளை யொடுஞ்சர்ச் சரைய பனைத்தொகை
துன்று தலினுலு
மதிசய மாகிய மந்திர நகரா
யாடுக வம்மனையே
யாள்பர மன்மனை யாளெனு மெம்மனை
யாடுக வம்மனையே. (9)

618. கரவலை யொலியும் புளினத் திடர்படு
கம்புளி னத்தொலியுங்
கப்ப விடும்பட கொப்ப மிடும்பல
கைத்துறை கட்டொலியுஞ்
சுரிவளை யோடு வலம்புரி யொலியுந்
தரளத் தரந்தெரியத்
தட்டிய முத்துப் பெட்டியி னொலியுந்
தருலோ கமுமணவத்
திரையொலி தினசரி சிறிது மிலாமந்
திரநகர் துவளுமிடைச்
சிறியா டடமுலை பெரியாள் கரியா
டிருமறை தேடுவதற்
கரியாள் பாகம் பிரியா ளுரியா
ளாடுக வம்மனையே
யாள்பர மன்மனை யாளெனு மெம்மனை
யாடுக வம்மனையே. (10)

# நீராடற்பருவம்

619. துள்ளும் பொருங்கய லிரண்டரு கினும்புரள்
துணைவிழிப் படையைமானுஞ்
சுழித்துச் சுழித்துச் சுழிக்குமூ ழுந்தியஞ்
சுழிபோலு நீரின்வழியே
கொள்ளுங் கருஞ்சை வலக்கொத் திதழ்ச்சொரு
கொந்தளப் பந்திநிகருங்
குளிர்ந்த துமிழுமுத்து நிலவொத் தழகெறித்த
குமுதகுறு மூரனேருந்
தெள்ளுந் திரைக்கரம் வளைக்கர மெடுத்துனைச்
சீக்கிர மழைத்தலேய்க்குந்
தென்பொதிய வரைபெருகு பொருநையம் நதியுனது
சேடியரி லொருவர்பொருவும்
வெள்ளஞ் சிலம்புகொ டரர்மனை யாட்டிபுது
வெள்ளநீ ராடியருளே
விரிவான பொருள்பாகம் பிரியாத தேவிபுது
வெள்ளநீ ராடியருளே. (1)

620. வடதிசையி லுயர்சிகர மஞ்சினந் துஞ்சிமைய
வரையிடம் நீபிறந்தாய்
வழுவிலாத் தென்றிசையின் மஞ்சுதுஞ் சிமையமா
மலையிட மிவள்பிறந்தாள்
சுடர்விடுஞ் செஞ்சுட ரிடம்புகிற் சுத்தக்
கறுப்பா யிருக்குமிவளு
* ..............................................................................
மடறங்கு மாறுமுக முந்தோன்ற வந்துல
களித்தனை நீயுமிவளு
மடறங்கு மாறுமுக முந்தோன்ற வந்துல
களித்திடுவ ளாகையாலே
மிடறங்கு தாம்பிரபரு ணியுமுனக் குவமைபுது
வெள்ளநீ ராடியருளே
விரிவான பொருள்பாகம் பிரியாத தேவிபுது
வெள்ளநீ ராடியருளே. (2)

621. தென்னன் றமிழ்க்கும்ப தெற்போத யத்தகத்
தியாசாகை யாரம்பமாய்த்
தேங்கருவி தூங்குதாம் பிரபருணி மின்னுதிரு
முகம்வைத்த வெம்மருங்கும்

* ... பிரதி செய்யும்போது பாதிஅடி விடுபட்டுளது.

கன்னலுஞ் செந்நெலுஞ் சாகமும் பூகமுங்
கதலியும் பலாவுமாவுங்
கமலமுங் குமுதமுந் தளவமுந் துளவமுங்
கருதரிய மற்றையெல்லா
மன்னையுன் றிருவடிவ தென்னவும் பச்சைப்
பசேலென்றே ரழகெறிக்கு
மாதலால் நீயிந்நீ ராடிவிளை யாடினு
லச்சுத ரெனச்சொல்பச்சை
மின்னுமே னியுமதிக பச்சையா கும்புதிய
வெள்ளநீ ராடியருளே
விரிவான பொருள்பாகம் பிரியாத தேவிபுது
வெள்ளநீ ராடியருளே. (3)

622. வளர்வளர் வாலைப் பிராயத்தி லேசெம்பொன்
மலையரையன் மனையாட்டிதன்
மடிமேற் கிடந்துநீ செங்கீரை யாடியுண்
மகிழ்ந்துவிளை யாடுதலினுங்
களபதன பாரஞ் சுமந்தொசிந் திறுமிடைக்
கைத்தாயர் பொற்றூனையொக்
கலையிருந் தெண்ணேடெண் கலைதெரிந் தம்புலி
காட்டிவிளை யாடுதலினு
மளகபா ரக்கமல முத்திலக நளினமனை
யாரெனுந் தோழியரொடு
மம்மானை விளையாடி யாடுதலி னும்பொருநை
யாறெனும் பிரபாகநீர்
விளையாட லேயதிக விளையாட லம்மைபுது
வெள்ளநீ ராடியருளே
விரிவான பொருள்பாகம் பிரியாத தேவிபுது
வெள்ளநீ ராடியருளே. (4)

623. வள்ளஞ் சிறந்தமுலை மார்பி லணியாடுமின்
மருங்கின்மே கலையதாடும்
வராற்கிணை கணைக்காலி னிற்றண்டை கிண்கிணி
வளைந்தொளிர் சிலம்புபாடு
மள்ளருஞ் சந்தனக் கலவையுங் குங்குமமு
மரகதத் தினுந்திமிர்ந்த
வங்கத்து பாங்கமும் பிரத்தி யாங்கமுங்கூட
வாடிவிளை யாடுமன்றே

துள்ளும் பசுந்தகட் டாரலுகள் பொருநையந்
துறைநீரில் நீயாடிஞற்
சுந்தரக் குழையிற் குதம்பையா டுந்துணைக்
கையில்வளை வந்தியாடும்
மெள்ளவே கங்கைநதி துள்ளவே பொங்குபுது
வெள்ளநீ ராடியருளே
விரிவான பொருள்பாகம் பிரியாத தேவிபுது
வெள்ளநீ ராடியருளே. (5)

வேறு

624. திகழுந் தாம்பிர பரணியெனுஞ்
செலப்பிர பாகமீன் ராசிகளுஞ்
செல்லுங் கமட ராசிகளுந்
திரையூ டெழுந்து விளையாட
விகழாப் பொருநை நதிபாகீ
ரதிக்குப் பிரதி பிம்பநதி
யிதுவே புண்ணிய வரநதிபார்க்
கிதுவே பாவ நாசமுமென்
றுகளு மீன வவதார
முங்கூர் மாவ தாரமுமா
யொருமித் தெடுத்தச் சுதன்றீர்த்த
மாடி விளையா டுதன்மானப்
புகழுந் திருமந் திரநகராய்
புதுநீ ராடி யருளுகவே
புராரி பாகம் பிரியாதாய்
புதுநீ ராடி யருளுகவே. (6)

625. உகட்டுஞ் சகட்டை யுதைசரண
உகள பதும நயனபட
வுரக சயனர்ச கோதரியே
யுலகீன் றருள்சங் கரியேவான்
முகட்டை யணவ பொதியவரை
முடிதா ழருவிப் பொருநையொரு
முகமாச் சக்கிர வாளகிரி
முழுதும் வளையுங் கடன்மடுத்த
தகட்டின் பசும்பொன் மலையரசி
தங்கக் கொடுங்கைக் குள்ளாயுன்

றன்னை மடிமேல் வைத்தணைத்துச்
சங்க முகத்தால் வடித்திடுபால்
புகட்டல் கடுப்ப வெழும்பொருநைப்
புதுநீ ராடி யருளுகவே
புராரி பாகம் பிரியாதாய்
புதுநீ ராடி யருளுகவே. (7)

626. தத்தாழ் திரைக்கார்க் கடன்முகட்டுச்
சகத்திற் கதிர்ச்சூர் யோதயமுஞ்
சந்திரோ தயமும் விசும்பனைத்துந்
தயங்குந் தாரா கணராசிக்
கொத்தோ தையமு முதித்தமுதற்
குணதிக் குதித்துப் பொதியவரைக்
குடுமி கடக்கும் வரையும்வளங்
கொடுக்குந் தாம்பிர பன்னிதனிற்
சுத்தா கிருதித் தேசுடைத்தாய்த்
தோன்றும் பிரதி பிம்பமெல்லாந்
தூய நதியிற் றோய்ந்துதோய்ந்து
தொக்க பதவி பெறன்மானப்
புத்தா ரமிர்தப் படிவமே
புதுநீ ராடி யருளுகவே
புராரி பாகம் பிரியாதாய்
புதுநீ ராடி யருளுகவே. (8)

வேறு

627. காந்தட் செங்கையின் மாந்தளிர் விரல்வெண்
கமலப் பெருமாட்டி
கைவிரை வாகச் செவ்வரி சிதறுண்
கண்ணெழு தஞ்சனமுஞ்
சாந்தொடு குங்கு மங்கொடு மேனைத்
தாய ரணிந்தநுத
ருனென வில்லைச் சேர்த்திய வதனந்
தீட்டிய சிந்துரமுங்
கூந்தலி லம்புய மங்கை முடித்தலர்
கொத்துச்சர மும்வளங்
கொண்டிரு கரையும் வண்ட லிடத்திடர்
குவிதல் கமகமெனப்

பூந்திரை வந்தபி டேகம் புரியப்
புதுநீ ராடுகவே
புவனீ சுவரியே ஜெகதீ சுவரியே
புதுநீ ராடுகவே. (9)

628. நளிகண் புனனிறை கடலக முத்தடு
படுக்கி யமுக்கியெழு
நடுவுயர் முதுகொரு கமட மெனத்திக
ழுமடங்கரு விம்மித்
துளிசிந் தியதிரை புரளுவ பிரளயத்
தூடுரு வித்துருவிச்
சூன்முதிர் வயிறுளை யிக்குழை யக்கரை
தோறுங் கரையேறி
வெளிவந் தரிது தவழ்ந்து தவழ்ந்துகை
வெட்டாற் றூழ்குழியாய்
வெட்டிய திற்சொரி முட்டைக ளிட்டதை
மீட்டு நிரப்பியவெண்
புளின மெனத்திகழ் திருமந் திரவுமை
புதுநீ ராடுகவே
புவனீ சுவரியே ஜெக தீசுவரியே
புதுநீ ராடுகவே. (10)

---

## பொன்னூசற்பருவம்

---

629. அண்டமுக டணவுகதி ரிளநில வெறித்தபடி
கக்காலின் மிசைமரகதத்
தால்விட்ட மிட்டதிற் றரளவட நாட்டி
யதோதாரை மாரியுமிழுங்
கொண்டலை நிகர்ப்பநீ ளிறமணிப் பலகையைக்
கொழுவிப் படாம்விரித்துக்
கொழுமலர் பரப்பமளி யிற்புகுந் தாடுமுன்
கோலமிரு காலுநிலவத்

துண்டவெண் டேணத்தி னுட்பசுந் துளவமா
ரேன்றுவது மானுமொன்றிற்
றுழாய்முகில் சகோதரி யெனப்பின் னுதிக்குமுன்
ரேற்றமும் பொருவுமருண
புண்டரிக பைஞ்சுனையின் மந்திரநகர் வந்தவுமை
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடிவரு கோல பாகமே
பொன்னூச லாடியருளே. (1)

630. முருகுவிரி மகரந்த முடிவிளை வுறுநறு
முட்டிமட் டிதழ்விம்மிநாண்
முகைப்பிணி முருக்கவிழு மம்புயா சனமகுட
முடியணங் காசிரிவரு
மொருகினரு கிருபுறமு நின்றிளந் தென்றன்மண்
டுபையசா மரையிரட்ட
வூருவசி யரம்பைமே னகைதிலோத் தமையினோ
டுயருமிந்தி ராணிரதியு
மருணகிர ணப்பிரபை விரியக் கருப்பூர
வாலத்தி யேந்திநிற்ப
வாட்சியுன் சந்நிதா னம்விழி கொளாதைய
னதிசயித் ததிசயித்துப்
பொருபுன லடக்குஞ் சிரக்கம்ப முஞ்செயப்
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (2)

631. கயன்மீன மண்டலம் முத்தணி படங்கிட்ட
கல்யாண பந்தரேய்ப்பக்
ககனவெளி முகடுதொடு பொன்னூச லாடிடக்
கட்டுபொற் றட்டாடவே
வயல்வண்ண மண்டலம் பூமண்ட லாதியந்
தமுழுது மாடுமவடா
னசையாம லணுமுதலு மசையாது வென்பதற்
கையமிலை யென்றல்காட்டு
முயல்வண்ண மண்டல மதிச்சடா மணிமகுட
முத்தர்மனை யாட்டியெம்மை
முற்றும் ரட்சித்தசீ மாட்டிகோ மாட்டியெம்
பெருமாட்டி நம்பிராட்டி

புயல்வண்ண நிகர்கண்ணர் துணையென்னை யருளன்னை
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (3)

632. எண்ணரிய விண்ணவ ரியம்பரிய கன்னிகை
யரம்பைய ரனந்தகோடி
யிந்திராணி யுருவசிதி லோத்தமைநன் மேனகையோ
டியாவரு மிறைஞ்சிநிற்ப
நண்ணரிய பொன்னூச லிற்கொலுவு பொற்பலகை
நாப்பணீ வீற்றிருத்தல்
நக்ஷத்திர ராசிபுடை சூழநடு வுதையமா
னகையினிள மதிகடுப்பக்
கண்ணுத லளந்திட்ட விருநாழி நெற்கொண்டு
கைக்கரித் தலைமகனையுங்
கைப்பிள்ளை யானசண் முகனையும் வளர்த்தெணன்
கறம்வளர்த் தெனைவளர்த்த
புண்ணியபதி சுகுணபதி விரகநிறை பார்பதீ
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (4)

633. அக்கரத் தாற்பெரிது ரூபி கரித்தலா
லழகியபதச் சுவட்டா
லறிவா கரர்க்கெலாம் வெளியாகி யெளிதினுபை
யத்தமுந் தோன்றநின்ற
விக்கவி பொருட்கிடம் பெற்றதாற் பாகமென்
றெவர்களு மெடுத்தோதலா
லென்பனுவ லுன்பிரதி பிம்பமிவை சந்தேக
மில்லையென் றமிழ்தழைக்கப்
பைக்கணு டவிவிடப் பாந்தளங் குழுவினைப்
பாரமணி வலையமேயொப்
பாக்கிமுக் கவரயிற் படைசுமந் தமைதேரப்
புறத்தசைந் திட்டகுவிவாய்ப்
பொக்கண விபூதிபுனை முக்கணர் மனைக்குரியள்
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (5)

634. கயத்தம்ப மாமகர சாகரப் பிரளயங்
கரைததும் பத்ததும்பக்
கட்டமை மரக்கல நடுக்குழி நிறுத்திமன்
காலாற்றி னிற்பிணித்துச்
செயத்தம்ப மென்னத் தொகும்பாய் மரத்தொகுதி
யுச்சியிற் சேர்த்துகைதைச்
செங்கா லனத்திரள்கள் கம்பமசை யுந்தோறும்
சிறைவிரித் தஞ்சுவதெலாம்
கயத்தம்ப மென்னக்கயிற்றா லிதத்தொடுசூழ்ப்
பிணித்தகழை மேற்றாய்நிறக்
கஞ்சுகம் போர்த்தவே மும்பர்தந் தொழில்செய்வ
தேய்க்குமந் தரபுயத்தம்
புயத்தம் புயத்தன் றுதிக்கும் கிருபைக்கரசி
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (6)

635. சங்குமிழு முத்தும் வலம்புரியின் முத்தும்
சலஞ்சலங் கான்றமுத்தும்
தகடுபடு மிப்பிரை யுமிழ்முத்து மற்றைத்
தலத்துள்ள வாடவர்க்கு
மங்கையர் களுக்குங் கழுத்தணியு மாகிநீள்
வார்குழைக் கணியுமாகி
மார்பினுங் காதினுங் கொத்துமுத் துச்சரம
தாகக் கிடந்தடிபடு
மிங்குள்ள வாடவர்கண் மங்கையர்கள் காலினன்
மிதிபடுந் துவைபடுமதா
லெத்தேச முந்தனக் கொப்பிலா மந்திரநக
ரிதுகைலை வாசமென்றே
பொங்குமறை யபிராமி கலைவாமி சிவகாமி
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (7)

636. வல்லோர் மதித்திடும் வயிடூரிய முண்டுகோ
மேதகம் புட்பராக
மாணிக்க நீலமர கதமுண்டு வயிரமொடு
முத்துண்டு பவளமுண்டு

சொல்லாது மட்டிலாப் பஞ்சலோ கமுமுண்டு
தூயரச வர்க்கமுண்டு
சுகமாட கூடமுப் பரிகையுண் டெண்ணுன்கு
சுகிர்தம் தொகுத்தறம்வளர்த்
தெல்லாரை யுங்காக்கும் நீயுண்டெ னையனுண்
டெழுபனையோ டுலகுய்வரு
மில்லாத தன்றிமற் றில்லாத தொன்றில்லை
யெல்லாச் சிறப்புமுண்டு
பொல்லாத வில்லாத மந்திரநகர் வந்தவுமை
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (8)

637. சீராடு பங்கயச் சீறடித் தண்டைகிண்
கிணிசிலம் பாடகளினத்
திவ்வியபீ தாம்பரக் கொய்சகமு மாடச்
சிரோரத்ன பணிதியாடத்
தாராடு மேகலா பாரமா டப்பொன்னூத்
தரிகவுல் லாசமாடத்
தமனியக் குடமெனத் தனமாட ரத்தினத்
தமைத்தபொற் கச்சுமாட
வேராட முன்கைவளை யூடாட வச்சிரத்
திணங்குகைச் சரியுமாட
விவையுமொரு பொன்னூச லென்னவிரு குழையாட
விலகுமதி முறுவலாடப்
போராடும் விழியாட வரனுட வாதாடிப்
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (9)

638. சரசுவதியென் னுவினின் றுரைசெய்பிள் ளைத்தமிழ்
தழையவ ழகியதிருச்
சந்நிதா னந்தழைய முன்னிதாய் நின்றசிவ
சங்கரே சுரர்தழையவெண்
டிரைசெயா தென்றும்வாய் பொத்திய மகோததித்
தீர்த்தமுந் தழையமகுடச்
சிந்துரச் சுந்தரப் பாண்டியக் களிறேடு
செந்திலா னுந்தழையவிண்

டுரைசெயா வேதமுந் தழையச் சிவக்கியான
வுற்பத்தி யுந்தழையவே
வுலகமுந் தழையமும் மாரியுந் தழையவெவ்
வுயிர்களுந் தழையமதிதோய்
புரிசைதிகழ் மந்திரநகர் வரிசையொடு தழையநீ
பொன்னூச லாடியருளே
புனலாடி விளையாடி வருகோல பாகமே
பொன்னூச லாடியருளே. (10)

திருமந்திர நகரமாகிய தூத்துக்குடியி லெழுந்தருளியுள்ள
பாகம்பிரியாவம்மைப் பிள்ளைத்தமிழ்
முற்றிற்று.

---

# திருமந்திர நகரமாகிய தூத்துக்குடி,

# பாகம்பிரியாவம்மைப் பிள்ளைத்தமிழ்

# குறிப்புரை

## காப்புப்பருவம்

538. குழற்காடு - உருவகம்; அலராக்குமிழ் தளவ ஆம்பலும் பூத்து-மலராத குமிழம்பூவும் வெண்மையான அல்லி மலரும் மலர்ந்து; (குமிழம்பூ மூக்கிற்கும், வெள்ளையாம்பல் நகைக்கு முவமை). அலராக் குமிழ் - குறிப்புச்சொல்; உளம் பூத்தலர்ந்து - மனமகிழ்ந்து; கல் அகலிகை யுருவாக்கு உபைய தாமரை - கல்லை அகலிகையாக உருவாக்கின இரண்டு பாத தாமரையும் (இராமாவதாரத்தில்); பிள்ளைப்பிராட்டி- இளமைத் தன்மை வாய்ந்த இலக்குமி; நயனம் - கண், இப்பாட்டில் திருமாலின் கால்கள், உந்தி, மார்பு, கண், கை முதலிய உறுப்புக் களுக்குத் தாமரை உவமையாகக் கூறப்பட்டிருப்பது காண்க. காம்பு என்பது இங்கு மூங்கிலை யொத்த தோள்களைக் காட்டும் போலும். (1)

539. மந்திரவாழ்வு ஆனவர்-வேதாங்க செல்வத்தை யுடையவர்; வடதிக்கிருப்பவர் வங்கணர் - வடக்குத் திக்கிலிருக்கும் குபேரனுக்கு உற்ற தோழர்; ஆல் ஆசனக் கனகச் சதுர்ப்புய மந்தார் ஏறு ஏறிய பவனிச் சிறப்பினர்-ஆலிலையை ஆசனமாகக் கொண்ட அழகிய நான்கு புயங்களான மலையையுடைய திருமாலான எருதில் ஏறிய உலாச் சிறப் பை யுடையவர்; மன்று-அம்பலம்; சந்திரகலா-சந்திரகலை; தண்கெழு பாகிரதி - குளிர்ச்சி பொருந்திய கங்கை; சங்கு - குண்டலம்; இசை யைத் தரிப்பவர் - சிவபெருமான் குண்டலத்தில் இரு கந்தருவர் எப்போதும் யாழ் மீட்டி இசைப்பதைக் கேட்டுக் கொண்டிருப்பதால் இங்ஙனம் கூறப்பட்டுள்ளது. இசை - புகழ்; கவுணியக் குலப்பயிர் - கௌணியக் குலத்தில் தோன்றிய; முரண் கழுமேலேறிட அமணைச் செயித்தருள் - மாறுபட்ட கழுவில் ஏறிடுமாறு சமணரைச் செயித் தருளின; பைந்தமிழாகார - பசியதமிழின் உறை விடமான; இதம் - இன்பம்; அமுது - பால்; இங்குச் சண்முகன் என்பது முருகனே சம்பந்தராகப் பிறந்தார் என்னும் சைவபுராண வழக்கினை யொட்டி சம்பந்தரைக் குறிக்கிறது போலும். (2)

**540.** கொந்தவிழ் பூந்தொடை - பூங்கொத்துக்களின்று மலர்ந்த பூவினுலாகிய மாலை; பரனை - மேலானவனை; கவளக் கொழுங்கனி - உணவாகிய கொழுவிய பழம்; கைத்தலன் - கையிடத்தை யுடையவன்; பருமி-பருத்து; பிரபைதொகு அங்குசம் - ஒளி சேர்ந்த அங்குசமெனு மாயுதம்; கவுள்மத தும்பிமுக அம்புயத்தரசு - மதச்சுவட்டையுடைய யானை முகமாகிய தாமரைக்கு அரசு; மந்திர பூந் திருப்பதி - மந்திரம் எனும் அழகிய பெருமைவாய்ந்த நகர்; சரவண மைந்தன் - சரவணப் பொய்கையிலுதித்த முருகன்; குளிர்பனி மஞ்சு அமர் காஞ்சனத்து இமையக்கிரி - குளிர்கின்ற பனி யடர்ந்த சிகரங்கள் பொருந்திய வெண் பொன் படர்ந்த இமயமலை. மங்கல நாண் கழுத்து அமுதம்-தாலியைக் கழுத்திலேயுடைய அமுதமொத்தவள்; சந்திர காந்தியில் கதிர்விட்டு இளவெயில் தங்கொளி கானல்போல் - சந்திர காந்தியைப்போன்று கிரணம் வீசி இளவெயில் தங்கும் பிரகாசமான வெப்பம்போல்; பரசு கரதல - மழுவைக் கையில் தரித்த. (3)

**541.** மகரமெறி - சுறுமீன்களை வீசும்; கவடு படு சினை - கப்புகள் பொருந்திய கிளை; நட்சத்திர மலர்வதென மலர் மலரும் - நட்சத்திரங்கள் மலர்வதைப்போன்று பூக்கள் பூத்துள்ள; மலர்தலை - பரந்த; பிரமைகொள - மயக்கம் கொள்ள; மகபதி கிருபை பெற - இந்திரன் கிருபை பெறவும்; இமையவர்கள் நிலைபெற - தேவர்கள் நிலைபெறவும்; வல்லமைச் சூர்க்குல மறுக - வல்லமையை யுடைய சூரபத்மனது குலம் வருந்த; மகுட கண பணகல் உதிர்த்து ஆக்கிரம் கொடிய உரகம் - தலையினின்று கூட்டமான பட மாணிக்கங்களை உதிர்த்து சினந்தெழும் கொடிய பாம்பு; சரவண உதைய - சரவணப் பொய்கையினின்று தோன்றிய; கொடுமுடி - உச்சி; சிகரக் கொடுமுடி - ஒருபொருட் பன் மொழி; ககனம் - ஆகாயம்; நெடிய வெதிர் அகில் பிரமதரு - நீண்ட மூங்கில், அகில் மரம், கடவுள் தன்மையுடைய கற்பகமரம்; சுரர்கள் தருமலர் சில்லெனப் பூத்து - தேவர்களுலக மரங்கள் பூக்களைச் சில் லென்றிருக்கப் பூத்து; ஒளி நிலவும் அடவியுளது - பிரகாசம் வீசும் காடு உளது; இகபர கதி யணைய குறுமுனி செய் தவத்தாச்சிரமம் நிறையு முயர்தவ முனிவர் - இவ்வுலக, மேலுலக இன்பங்களை யுடைய அகத்தியர் செய்த தவத்திற்கான ஆச்சிரமத்தில் நிறைந்த உயர்ந்த தவத்தையுடைய முனிவர்; தகரம் நறவு உமிழ்-தகர மரங்கள் வாசனை வீசும்; குமுகுமெனு-இரட்டைக் கிளவி; சகர பிரபுதர் கல்லும் மைக்கார்க்கடல்-சகரவரசன் பிள்ளைகள் கல்லிய கருமைபொருந்திய கடல்; பிரபுத்தன்-யௌவனப் பருவ மடைந்தவன்; இங்குப் பிரபுதர் என்பது பிரபுடர் எனப்பாட்டில் நின்று தொகுத்தல் விகாரம் பெற்றது; பொருநை - தாம்பிரபர்ணி; வளை - சங்கு; தரள மணி - முத்துமணி; மைக்கார்க்

கடல் தவழும் துறை நகர், அலையொலி தவிரும் துறைநகர் - என்று கூட்டுக; துறை - கடற்றுறை; மலைவல்லி - மலையில் தோன்றிய பார்வதி (இமயமலையரசனுக்கு); **சூரபத்மன்** :—முருகன் விடுத்த வேலாயுதத்தைக் கண்டு உலகங்களையெல்லாம் அழித்துப் பிறகு இவ்வேற்படையை யழிக்கிறேன் என்று எண்ணினன். கடல் நடுவிடம் சென்று தீயைப்போன்ற தளிர்களையும், புகையைப்போன்ற இலைகளையும் பொன்போலப் பூங்கொத்துகளையும் வெளிப்படுத்தி, மரகதமணி போலக் காய்த்து, மாணிக்கம்போலப் பழுத்து, முகில்களைப்போலக் கிளைகளைப் போக்கி மிகவும் உயர்ந்து நூறுயிரம் யோசனை அகன்ற அரையினையுடைய ஒரு பெரிய மாமர வடிவமாக நின்றான். தன் வடிவத்தை யசைத்தான். அதனால் நிலவுலகங்கள் இடிந்து சரிந்தன. உலகப் பொருள்கள் நிலை தடுமாறின. வேற்படை சினத்துடன் சென்று தாக்கி யழித்தது. (4)

**542.** வளைவாய் புளிமேல் விரும்பாது-வளைந்த பக்கத்தையுடைய புளியம் பழத்தின்மேல் விரும்பாமல்; நான்கு மாதத்திய கர்ப்பிணிப் பெண்கள் புளிப்புடைய பொருள்கள் மேல் விரும்பி யுண்ண முயல்வர்; மண்பிட்டு அருந்தாது-மண்ணைப் பிட்டுச் சாப்பிடாமல்; கர்ப்பிணிகளில் சிலர் சுவரிலுள்ள மண்ணைப் பிட்டுச் சாப்பிடுவதை யாவரும் கண்டிருக்கலாம்; இளமுலையின் மணிக்கண் கறுத்திடாது-இளைய முலையின் நுனியிடம் கருமையுறுது; கர்ப்பங் கொண்டவர்கட்கு மூன்றும் மாதம் முலை நுனிகறுக்கும். திருமழலைச் செவ்வாய் வெளிறுது-அழகிய மழலைமொழி பேசும் சிவந்த வாய் முதலியன வெளுப்பு நிறம் அடையாமல்; இஃதும் மூன்றும் மாதமே நிகழும் (முகமெலாம் வெளுத்தல் இயல்பு); திளையாச் சூல் கொள்ளாது - நிறைந்து கர்ப்பங் கொள்ளாது; பசேலென்ற நரம்பெழாது - முலைமீது பசேலென்ற நரம்பு எழாமல்; பயந்த - பெற்ற; செந்தாமரைப் பெண் - இலக்குமி; சரண் - பாதம்; அளைவாய் மடுத்த-வெண்ணெயை வாயினுல் உண்ட; கள்வாய் - எச்சில் ஒழுகும் வாய்; அங்காந்து - வாய்திறந்து; அழுத முகில் - அழுத திருமால் (கண்ணவதாரத்தில்); பிளவாக் கிடந்து உட்குழைந்து எழு வெண்பிள்ளை மதிவாள் நுதல் சிறு பெண்பிள்ளை - பிளந்து கிடந்து உள் வளைந்து எழுகின்ற வெண்மை நிறம் பொருந்திய இளைய சந்திரனைப்போன்ற ஒளிவாய்ந்த நெற்றியை யுடைய சிறிய பெண்பிள்ளை; பிளவா, திளையா என்பன செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சங்கள் செய்து எனத் திரிந்தன இங்ஙனம் வருவதைப் பிரபுலிங்க லீலையிலும் காணலாம். **மோகினியின் கருப்ப காலக் குறி**யை வருணிக்கும் புலவர்,

" முத்தணி கொங்கை முகங்கள் கறுத்தாண்
மெய்த்திரு மேனி விளர்த்து நரம்பு

பைத்தன மீது பரப்ப விருந்தாள்
பொய்த்துயில் கொண்டு புளிக்கு முவந்தாள்."

என்பதனால் அறிக. மச்சபுராணத்தில் வடமலையப்ப பிள்ளையன் தாரகாசுரன் உற்பத்தியின்போது வச்சிராங்கன் மனைவிக்கு உண்டான கருப்பக்குறிகளை,

"குவிமுலைக் கண்கறுப்பக் கொடிபசு நரம்பு தோன்ற
கவரிதழ் வெளுப்பச் சாம்பல் கரியமண் புளிவேட் டுண்டு
புவியினிற் காணுந்தோறு பொருந்துமா லுதரம் விம்ம
வவிரொளி வார்ங்கணைப்பெண் ணுயிரம் வருடம்
[போக்கி."

என்பதனால் காண்க. (5)

543. குடிலின் உறி - வீட்டிலுள்ள தயிர் உறி; எக்கி - எட்டுவதற்காக கால் பெருவிரலால் நிலத்தை ஊன்றி நிமிர்ந்து; குந்தி - உட்கார்ந்து; முகங்கோட்டி - முகம் சுளித்து; இடையர் கும்பத் ததி - இடையர்களது குடத்திலுள்ள தயிர்; நீலன் - கருநிறமான திருமால்; நீலி - கருநிறமுள்ளவள்; முடிவின் முனையின் முனைக்கழுத்தின் முடித்த பிறை - முடிவில்லாத முனையில் முனைக்கழுத்தில் தரித்த பிறைச் சந்திரன்; பிறைக்கூன் - வளைந்த பிறைச்சந்திரன்; இருகோட்டின் முனையும் - இரு பக்கங்களின் முனையும்; சூல தேவர் முதல் - சூலாயுதத்தைக் கையிலேயுடைய சிவபெருமான் முதல்; கவின முடிகவிக்கும் - அழகிய முடியணியும்; படிகம் - வெண்மை; வடம் - மாலை; படாம் - உடை; தனத்தி - முலைகளை யுடையவள்; படிக வருண பதும கற்ப - வெள்ளை நிறமான தாமரையில் தங்குபவளான; பரிபூரணத்தி - எங்கும் நிறைந்தவள்; பாரதி - சரசுவதி. (6)

544. கடுக்கை - கொன்றை; பிஞ்சுமதி - பிறைச்சந்திரன்; காயுஞ் சர்ப்பம் - கோபித்துச் சீறும் பாம்பு; வெண் தரங்கம் - வெண்மையான அலை; கங்கை அம்கனி - கங்கையாகிய அழகிய பெண்; கன்னி என்பதன் தொகுத்தல் 'கனி'; சடிலம் - சடை; பார்பாத்தி - பூமியையே வீடாக வுடையவள்; பண் அம் பணத்தி - தகுதியான மிக்க பாக்கியமுடையவள்; பணம் - பாக்கியம்; பண் - தகுதி; எண்குணத்தி - எட்டுக் குணங்களை யுடையவள், தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல் முதலியன; மழவஞ்சிறை ஓதிமம் - இளைய அழகிய சிறகுடைய அன்னம்; விடை - எருது; மாயூரம் - மயில்; உவணம் - கருடன்; மகிடம் - எருமை; அலகை - பேய்; மறை - வேதம்; ஏர் - கலப்பை, ஆகுபெயர்; சூல் - சூலம், கடைக்குறை; குழை அந்தணியே - இரங்கும்

அபிராமியே, விளைத்தொகை; அந்தணி - பிராமணி; உருத்திரை - மகேச்வரி; குமரி - கௌமாரி; சற்குண இந்திரை - நற்குணமுள்ள இந்திராணி; சாமுண்டி-மாகாளி; பாட்டிலுள்ள வாகனம், ஆயுதங்களைச் சப்த மாதர்கட்கு முறையே கொள்க. அந்தணியே, உருத்திரையே முதலியவைகளிலுள்ள ஏகாரங்கள் எண்ணுப் பொருளன. (7)

545. கம்பம் அடு - கட்டுத்தறியை முறிக்கும்; கிம்புரிக் கோட்டு-கிம்புரிப் பூண் கட்டிய தந்தம்; கலுழி-கலங்கல் நீர்; கவுட் சுவடு - மதச் சுவடு, கலுழி பெருக்காத கவுட்சுவட்டில் மதம் பெருக்கும் எனக் கொள்க; பெருக்கா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; மதம் - மதநீர்; கடைக்கால் ஊழிப்பெருக்கு - யுகமுடிவில் நேரும் ஊழி வெள்ளம்; பெருக்கெடுத்துப் பம்பு - வெள்ளமெடுத்து மேன்மேல் பெருகும்; களிற்றுத் தலைமகன் - யானைத் தலையையுடைய விநாயகன்; சூரிய சந்திரர் சிவபிரானுக்கு வலக்கண்ணாகவும் இடக்கண்ணாகவும் உள்ளனர்; செங்கதிர் - சூரியன்; வெண்கதிர் - சந்திரன்; மொய்ம்பு - வலிமை; முளரி-தாமரை; கதவ மடைப்பவன்-சந்திரன். (8)

546. சந்திரகலை தரித்து என்பது சிவனைக் குறித்தது; மலைகார் முகம் - போர் செய்யும் வில்; நாகாலயம் - ஆதிசேடனாகிய படுக்கை; சந்திரகலை தரித்திருந்த கடவுள், (சிவன்) நாகாலயத்திருந்த கடவுள் (திருமால்) இருவருக்கும் பிறந்தவர் ஐயனார். தாருகவன முனிவர்களின் பத்தினிகளின் கற்பு நிலையைச் சோதிக்கச் சிவன் பிக்ஷாடனர் உருக் கொண்டு சென்றும் திருமால் முனிவர்களின் தவநிலையைச் சோதிக்க மோகினி உருக்கொண்டும் சென்றும் அறிந்தபின் இருவரும் கூடப் பிறந்தவரே ஐயனார். அரிகரபுத்திரர் என்றும் பெயர். தளை அசைத்திய சன்னதியன்-காற்சிலம்பை யணிந்த சன்னிதானத்தை யுடையவன்; தவ பூரணை புட்கலை ஆன தையல் - தவத்தையுடைய பூரணை என்பவளும், புட்கலை யென்பவளுமான பெண்கள்; இவர்களிருவரும் ஐயனார் தேவியர்; பனகம்-பாம்பு; சடிலம்-சடை; பனக பவுத்திரத்தர்-பாம்பாகிய மோதிரத்தை யுடையவர்; பனகக்கதிர்க் குழையர் - பாம்பாகிய குண்டல முடையவர். இருபெயரொட்டுப் பண்புத்தொகை; பனக கர கங்கணர்-பாம்பாகிய கைக் கங்கணத்தை யுடையவர்; பனகக் கழலர்-பாம்பாகிய வீரக்கழலைத் தரித்தவர்; பனக சருவாங்கர் - பாம்புகளையே எல்லா உறுப்புக்களிலு முடையவர்; சனக சனகாதியர் - சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ற நால்வர்க்கும் தக்ஷிணாமூர்த்தி வடிவமாய்க் கல்லால மரத்தின் நிழலிலிருந்து உபதேசஞ் செய்தார் சிவன்; ஆகம் - உடல். (9)

547. கைம்மாத் தரும் மாலுக்கிளையாள் - தும்பிக்கையையுடைய கசேந்திரன் எனும் யானையைக் காப்பாற்றித் தந்த விஷ்ணுவுக்குத் தங்கை; கடுக் கந்தரத்தர் - விஷமுண்ட கழுத்தை யுடையவர்; (இம் முதலடியில் மூலப்பிரதியைப் பார்த்தெழுதும்போதே தவறு நேர்ந் திருக்கும்போலும்) ; அம்மா அம்மா அம்மா - அடுக்குத் தொடர்; தம் ஆகிருதி - தம் வடிவு; சகளம் - சடத்துவம்; திகம்பரர் - நிருவாணிகள்; தண்டாயுதத்தராய் - தண்டம் செய்யும் ஆயுதத்தை யுடையவராய்; இனிதாபதத்தர் - இனிய தவவொழுக்கத்தை யுடையவ ராயும்; கபாலராய் - கபாலத்தையுடையவராய்; எகினம் - நாய்; திரிபவர் - வயிரவர்; **வயிரவர்:-** பிரமனது தலையைக் கிள்ளி யெறிந்தவர். சிவ மூர்த்தியின் ஏவலால் உலகர் பொருட்டு 12-வருடம் பிரமகத்தி ஏற்றுப் பிரம கபாலங்கொண்டு பிச்சை யேற்றவர். (10)

548. தோகை - மயில் தோகை; முத்துக்குமார சுவாமி அப்பன் - முருகன் தந்தையான சிவபெருமான்; மேனி - உடல்; பாகம் - பாகமுடையவளான பார்வதி; தூய பர விகற்பத்தின் நூறு பாடல் - நல்ல மேலான பல சந்தமான விதங்களினால் பாடிய நூறு பாடல்; ஆதிவத்து - முதல் வஸ்து; ஆரணம் - வேதம்; மேலை ஆதி பத்தியத்தர் - மேல் நாட்டில் (சுவர்க்கம்) அதிகார முடையவர்; ஆகமத்துச் சொரூபம் ஆர-ஆகம உருவம் பொருந்த; சீதம்-குளிர்ச்சி; சொர்க்கத் துளார்கள் தேடும் உற்பத்தியாய சீவரத்தினப் பிரகாச தேவர்-சொர்க்கத் துள்ளவர்கள் தேடித் தோன்றின "சீவரத்தினம்" போன்ற பிரகாச முடையவர்கள் ஆகிய தேவர். (11)

---

## செங்கீரைப் பருவம்

---

549. மந்தி - பெண் குரங்கு; கருங்கவி - கரிய ஆண் குரங்கு; வெள்ளைப் பெருங்கவி - வெண்மை நிறமுடைய குரங்கு, இஃது சுக்கிரீவனைக் குறிக்கலாம்; கருங்கரடி-கரிய ஜாம்புவந்தன் என்ற கரடி; கடல் கொண்டென அகண்ட படை - கடல் கொண்டதைப் போன்று அகண்ட சேனை; காகுத்தர்-இராமர்; ஆகுத்தன் - உயிர்க்குறுதி செய் பவன், இஃது இலக்குமணனைக் குறித்தது; ஒரு மந்திரம் அனுமன்றன்

முன் இயம்ப - ஒரு யோசனையை அனுமன் முன்சொல்ல; மண்குயவர் ஒப்பமிடும் ஒலியொடும் பச்சோலையொலி என்று பிரிக்க; சோலையொலி- சோலைகளிலுள்ள பறவைகளின் சப்தம்; திரையின் வேலையொலி - சமுத்திர அலைகளா லுண்டாகும் ஒலி; பெரிது ஒலிப்பவை-பெரிதும் ஒலிக்கும் அச்சப்தங்கள்; மறைப்ப - கேட்கவொட்டாமல் தடை செய்ய; வருமந்த முகில் செங்கையமை என்று அமைப்ப-வருகின்ற அந்த இராமன் தன் சிவந்த கைகளால் அடங்கு என்று சொல்லிக் கைகளை யசைக்க; மண்மனை யோசை—மண்ணினால் கட்டிய சிற்றில்களின் ஓசை; பனையோசை - பனைமரங்களிலுள்ள அன்றில் முதலிய பறவைகளின் ஓசை; மாறிட்ட அன்றைக்கும் இன்றைக்கும் மாருதியும் வாரிதியும் வாய் புதைக்கும்-மாறியடங்கின அப்போதும் இப்போதும் அநுமனும் கடலும் வாய் மூடிக்கொள்ளும்; அருமந்த செல்வி, அருமந்த - மருஉ மொழி; தேக நீள் நாக பூண் ஆகனர்-நீண்ட நாகத்தின் உடலை ஆபரண மாகப்பெற்ற மார்பை உடைய சிவன்; இராமன் வானரப்படைகளோடு இராவணனை வெல்லச் சென்றபோது கடலின் துறை முற்றத்தில் ஓர் ஆலமரத்தின் கீழ் உட்கார்ந்து இரகசியம் பேச நினைத்தபோது அதன் மேலுள்ள பறவைகள் ஒவென்று இரைச்சலிட அதைக் கண்ட இராமன் செங்கையினா லடங்குக என்று காட்ட யாவையும் அடங்கியது அக நானூற்றில் குறிப்பிடப் பட்டுளது காண்க. "வெல்போர் இராமன் அருமறைக் கவித்த பல் வீழாலம்போல ஒலியவிந்தன்று இவ்வழுங் கலூரே." (அகம்70.) (1)

550. உதவவரு - பெற்ற; இதயவல்லி - மனதில் பொருந்திய கொடிபோன்றவளே; அமை அமை பசுந்தோளி - மூங்கில் போன்று அமைந்த பசுமையான தோள்களையுடையவளே; அணி அரவ கங்கணி- அணிந்த பாம்பாகிய கங்கணத்தை யுடையவளே; அமிர்த கிருபை பொங்கு அம் கணி - கருணை அமிர்தம் மிகும் அழகிய கண்களை யுடையவளே; அருணை மங்கலை - அருணாசலத்தில் இருக்கும் பார் வதியே; சமயநெறி சமைபவரு - மத வழிகள் பக்குவ மடைய வரும்; பீதாம்பரீ - பீதாம்பரத்தை யுடையவளே; சதிதரும் தாண்டவ ஆடு அம்பரி - தாளத்திற்கு ஏற்ப நடனமாடும் பார்வதி; சரம் தரு கணீ - அம்பினையொத்துத் தருகின்ற கண்களையுடையவளே; அஞ்சு அக்கரீ - ஐந்து அக்ஷரத்தை யுடையவளே, (பஞ்சாக்ஷர மந்திரம்); அம் சக்கரி - அழகிய சக்கரப்படை யுடையவளே; சிமையமுடி நிழல் நிலவ- உச்சியில் அணியும் கிரீடத்தின் ஒளி பரவ. (2)

551. இருமந்தர.........ஓர் பண்பாட - இரண்டு மந்தரமலையை யொத்த தனங்கள் அசைந்தால் அந்தோ! சிறப்புப் பொருந்திய

இடை இங்கு முறிந்துவிடும் என்று அறிந்து போட்ட சிலம்புகள் ஒப்பற்ற இசையைச் சப்திக்க; இவ்வடியின் கருத்தை "அனிச்சப் பூ கால்களையாப் பெய்தாள் நுசுப்பிற்கு, நல்ல படாஅ பறை." என்ற குறளை நோக்கியறிக; குழைமருவும் விழி எனப் பிரித்துக் கூட்டுக. குண்டலத்தைப் பொருந்தும் பரந்த கண் எனப் பொருள் கொள்க. உரு அஞ்சன விழி - நிறமமைந்த மை தீட்டிய கண்கள்; மலர் அங்கனே உனது அடி கும்பிட எனப் பிரிக்க, இங்கு அங்கனே என்றது திரு மகளைக் குறித்தது, கலைமகளையும் குறிக்கலாம்; உள் - மனம்; பூமி சகளங்களும் - பூமியில் உள்ள எல்லா உடல்களும் (உயிர்களும்); பரை-காளி. (3)

552. உலகு ஒன்றிட - உலகமக்கள் ஒன்று சேர; கோலம் - அழகு; சதுர் மறையவன் - பிரமன்; குலிசன் - வச்சிரப்படையை யுடைய இந்திரன்; மண்தானுண்டான் - திருமால்; அலகு அம்பு என இருபுறமும் - கூர்மையான அம்புக் கூட்டம் போன்று இரண்டு பக்கங் களிலும்; தோடு - குண்டலம்; அடரும் படைவிழி - கொல்லும் வேலா யுதம்போன்ற விழி; உருவம் குமுத நறும்பூ என்று பொருள் கொள்க; திலகம் - பொட்டு. (4)

553. கணபண சேடன் - கூட்டமான படங்களையுடைய ஆதி சேடன்; சிகை - முடி; சக்கர வட்டமென - சக்கராயுத ஒளிபோன்று; சூரியன் போலே, சக்கர வட்டம்போலே உள்ள ஒளிமிக்க சரவணப் பொய்கை என்க; சத்த சமுத்திர மொத்து மிகுத்த தடாகம்போன்ற பொய்கை என்க; சேடன் சிகை கீழும் என்பதனல் அப்பொய்கையின் ஆழத்தைக் கூறினர். முத்தி சரவண வாசம் பெறுதேவு என்று ஈசன் தானே கொடுக்க மறுக்க என்று பிரிக்க; சரவணவாசம் பெறு தேவு - முருகன்; முளைத்திடும் உடு என்றே - தோன்றிய நட்சத்திரம் என்று நினைத்து; மின் மகவான் உம்பருளார் உவந்தே கொண்டாட - பிரகாசிக்கும் இந்திரனும் தேவர்களும் மகிழ்ந்து கொண்டாடித் துதிக்க; முக்கணார் - சிவன்; பூவின்பால் வந்தாய் நீ அர்த்தம் உரைத்திலை முட்டனென - தாமரை மலரிலே தோன்றினவனை நீ பிரணவப் பொருளுக்கு அருத்தம் கூறவில்லை முட்டாளென்று; முட்டன்-மூடன்; பிரமாவின் திருமுடிமேல் அஞ்சிட ஓர் அஞ்சு ஆறு எஞ்சாதே யாத்த திருக்கை வழக்கம் அளித்து - பிரமாவின் தலையில் அவன் பயப்பட ஐந்தாறுக்குக் குறையாமல் குட்டி; பவுரி - ஓர் கூத்து; பவுரி கொண்டாடும் - இரண்டாம் வேற்றுமைத்தொகை; மயிற்பரி - மயில் வாகனம்; பரப்பிரமதீபம் - முருகன்; அருள்கூர் அங்கணையே - பெற்ற பெண்ணே; முருகன் கைலையில் இருக்கும்போது அங்கு நான்முகன் வரவும் அவன் செருக்குடன் போதலைக் கண்டு அவனை வரவழைத்து

வேதத்தைச் சொல்லச் சொன்னார். அவன் இருக்கு வேதத்தின்முதலில் "ஓம்" என்றுதொடங்கி சொல்லினன். முருகன் அவனை மேலே சொல்லவொட்டாமல் நிறுத்தி "ஓம்" என்ற பிரணவத்திற்குப் பொருள் வினவினார். அவன் தெரியாது விழிக்கவும் அவனது நான்கு தலைகளிலும் குட்டிக் கந்தமாதன மலையில் சிறைப்படுத்தித் தானே படைத்தல் தொழில் செய்தார். பின்பு திருமால், சிவபெருமான் ஆகியோர் வேண்டுதலின் சிறையினின்று விட்டுச் சிவனுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்துச் "சுவாமிநாதன்" என்ற பெயர் பெற்றார். (5)

554. வயல் மண்டலத்தோடு வரும் கரிய மேதி - வயல் தொகுதி வழியாக வரும் கரிய எருமை; தாழ் மடுவூடு உழக்க - தாழ்ந்த மடுவினிடையில் கலக்க; வெடிபோய் - சிதறி; வாளை - வாளைமீன்கள்; கமுகம் பாளை - பாக்கு மரத்தின் பாளை; அம்பூ விரித்திரள் மழைத் துவலையில் சிதற - அழகிய பூ விரிதற்கான திரண்ட மழைத்துளியைப் போல சிதற; மைப்புயன் மண்டலம் - கரியமேக மண்டலம்; கயல் மண்டலத்தினுக்கு அயல் மண்டலத்திலொரு கயல் மண்டலந் தானென - நட்சத்திர மண்டலத்தினுக்கு வெளியேயுள்ள மண்டலத்தில் ஒப்பற்ற கயல் மீன்களின் மண்டலம் என்று சொல்லுமாறு; முதலிலுள்ள கயல், மீன் என்ற பொருளில் விண்மீன் (நட்சத்திரம்) எனக்கொள்க; கருந் துகில் பொதிந்திட்ட மின்மினி - கரிய துணியால் மூடிய மின்மினிப் பூச்சி; செய ஆதித்த மண்டலம் நிகர் - சிவந்த சூரிய மண்டலத்தைப் போன்று; செய்ய என்பது செய எனத்தொக்கது; செய-வெற்றி என்ற பொருளிலும் கூறலாம். வயல் தொகுதிகளின் வழியாகவரும் எருமைகள் தாழ்ந்த (ஆழ்ந்த) மடுவினிடையில் கலக்க சிதறி வாளை மீன்கள் பாக்குமரப் பாளையிலுள்ள பூக்கள் விரிவதற்கான திரண்ட மழைத்துளியைப்போலச் சிதற மேகமண்டலத்தினிடையில் வெள்ளித் துண்டுகள் துள்ளிப் புகுவனபோல அம்மேகத்தைக் கிழித்து மேற்சென்று, பொழிகின்ற மழையினுல் உண்டாகிய வெள்ளப்பெருக்குப் போன்று பெருமிதத்துடன் புரண்டெழுகின்ற கயல்மீன்களின் ஒளி நட்சத்திர மண்டலத்திற்கும் அப்பாற்பட்ட மண்டலத்தில் ஒப்பற்ற கயல் மீன்களின் மண்டல முண்டென்று சொல்லும்படி கரிய துணிமூடிய மின்மினிப் பூச்சியென்று விளங்கும் கடலலைகள் கரை ஓரத்தில் அடிக்கும் சிவந்த சூரிய மண்டலத்தைப்போன்ற மந்திர நகர் எனப்பொருள் கொள்க. சிறிய அலைகள் உண்டு என்பதை மின்மினிப் பூச்சிப்போல என்பதால் குறிப்பித்தாராயிற்று. மின்மினிப் பூச்சி விட்டு விட்டுச் சிறிது ஒளிர்வதால் (அதுவும் கரிய துணியில் மூடினது அவ்வொளி இன்னும் குறைவதால்) அவ்வுவமை பொருந்தியது. (6)

555. அருணம் - சிவப்பு ; இமையாசல மனைக்கிழத்தி - மேனை ; (இமைய + அசலம்), அசலம்-மலை; இச்சித்து-விரும்பி; சங்கையொடு-சங்கினால் என்று கருவிப் பொருள் கொள்ளலாம்; மஞ்சனம் பொலிந்து - முழுகி; குங்குமச்சாந்தம் - குங்குமச்சேறு ; திமிர்ந்து-பூசி; உடல் நலங்கிட்டு - உடலுக்கு நலங்கிட்டு; நெற்றியிற் சாத்து - நெற்றியிலிடும்; அம்கயல் கண்ணுக்கு - அழகிய கயல் மீன்போன்ற கண்ணுக்கு ; மட்டில் சருவாங்க பூடணம்இட்டு - அளவில்லாது எல்லா உறுப்புக்களும் ஆபரணங்கள் அணிந்து; நிலக்காப்பு-மண்ணைக் குழைத்துப் பொட்டிடல் ; களபப் பைந் தனத்து அமுதம் ஊட்டி - கலவைச் சாந்து பூசிய முலையினின்றும் பால் கொடுத்து ; தெரியாத-ஆராயாத; தெரியாத சிவன் என்பது ஆராயாமல் பத்மாசுரனுக்கு (பஸ்மாசுரன்) யார் தலையில் கைவைத்தாலும் அவர் எரிந்துவிட வரம் கொடுத்துப் பின் அவனே பரீட்சிக்க சிவன் தலையில் கை வைக்க வர அகப்பட்டு விழித்ததால் இது கூறியிருக்கலாம். (7)

556. அத்த அம்பலத் திரிபுரத்து ஒன்றில் உறை - பொன் மயமான மேலிடத்தையுடைய மூன்று புரங்களான ஒன்றில் தங்கும்; **வாணன்** - பாணாசுரன். இவன் கண்ணனால் இரண்டு கைகள் தவிர மற்ற 998-கைகளும் அறுப்புண்டவன். இவனே கடைசியில் சிவபூசா பலத்தால் திருக்கைலை யடைந்து குடமுழா முழக்கத் திருப்பணி செய்து வாலானன். அச்சுதன் - திருமால்; இடக்கை - இடக்கையென்ற வாத்தியம்; நாளவட்டத்தன் - பிரமன் ; அலர்தாள வட்டம் - மலர் போன்ற தாளமாகிய வட்டத்தை; இரட்ட - அசைக்க; சத்தம் பல திக்கு ஒலிப்ப-இசை பலதிக்கிலும் ஒலியைச்செய்ய ; **தும்புருவும் நாரதனும் :-** இவர்கள் யாழ்வசிப்பதில் திறமை பெற்றவர்கள் ; சத்த சுரம் - ஏழுசுரம்; திரிபுராந்தகத் தாண்டவம் - திரிபுரம் எரியும்போது சிவபெருமான் ஆடிய தாண்டவம்; திரிபுரம் + அந்தகன் - திரிபுராந்தகன் ; அந்தகன் - யமன் ; பத்து அம்பலத்தினில் படுபாதியாம் அம்பலத்தினில் - பத்துச் சபைகளில் சரிபாதியான ஐந்து சபைகளில்; பூசாபலம்-புண்ணியம் ; சித்தம்பலம் - சிற்றம்பலம்; ஐந்து சபைகள் :- சிற்றம்பலம், பொன்னம்பலம், ஆடலம்பலம், பேரம்பலம், அரசம்பலம் ஆகியன. (8)

557. பாதமெல் அனிச்ச மலர்-பாதமாகிய மெல்லிய அனிச்சப்பூ; பச்சிளங் கதலி - இளைய வாழை, தொடைக்கு உவமவாகுபெயர் ; ஆலிலை - ஆலிலைபோன்ற வயிறு ; வளைதங்கு பச்சை யிள மூங்கில் - தோள்வளை தங்கும் பசுமையான இளைய மூங்கில் (தோளுக்கு ஆகுபெயர்); தாதளவு பரிமளக் காந்து - மகரந்தம் பொருந்திய மணமுள்ள காந்தட்பூ (கைகட்கு ஆகுபெயர்) ; மாந்தளிர் - மாந்தளிரைப்போன்ற

உடல்; அணிபூடணத்தாலி ஐம்படை தழுவு-அணியும் ஆபரணமான ஐம் படைத்தாலியைத் தழுவியுள்ள; சங்கர சமந்த மணி காகு இளங் கமுகம் ஆட - கலந்துள்ள ஸ்மந்தகமணி பதித்த ஆபரணமணிந்த மிக்க இளைய கமுகமா மொத்த கழுத்து ஆட; வெண்டளவு குமுத மலர் - வெண்மை யான முல்லையும் (பற்கள்) குமுதமலரும் (வாய்); குமிழ் - குமிழம்பூ, (மூக்கு); வள்ளையங்கொடி-அழகிய கொடியிலுள்ள வள்ளைப்பூ (காது); கொப்பு - காதிலணியும் ஆபரணம்; குழை - குண்டலம்; மீறு செழுந் திலக சீதள செங்கமலம் - செழுமையான பொட்டையிட்ட அதிக குளிர்ச்சியான தாமரையொத்த; கோதிலாத அரும் இதழ் இலவு ஆட- குற்றமற்ற அரிய பூவின் இதழ்களைப்போன்றும் இலவம் பஞ்சுபோன்று முள்ள கால்கள் ஆட. (9)

558. கயத்தம்ப மாமகர சாகரம் - ஆழமான நீர் நிலையிலுடைய பெரிய சுறுமீன்கள் வசிக்கும் சமுத்திரம்; கம்பித்து - நடுங்கச்செய்து; தரங்கம்-அலை; கண பணுடவிப் பாம்பாட - கூட்டமான படங்களுள்ள ஆதிசேடனுகிய பாம்பு ஆட; நின்மயத் தம்ப - நின்மயமான நிலையுள்ள; அண்டகோளம் - ஆகாய வுலகம்; (கோளம்-உருண்டை வடிவம்); புவன வட்டம் - பூமியின் சுற்று; வட்டப் பொருப்பு - சக்கரவாளமலை; பொருப்பு - மலை; மண்டல ஆதியந்தம் - மண்டலங்களின் முதலும் கடைசியும் ஆட; மாசுணப் பூடணம் - பாம்பாகிய ஆபரணம்; புராந் தகன் - சிவன்; பூச்சக்கர வாளம் - அழகிய சக்கரவாள மலை. (10)

---

## தாலப்பருவம்

---

559. ரகுபதி - இராமன்; வருணன் இராமன் அடி பரவினது சேதுவுக்கு அணை கட்டும்போதாகும்; வருணன் வாராததால் கோபித்து அம்பை எடுக்க வருணன் பயந்து சரணம் அடைந்தான். முக்கணர் - சிவன்; சிவனது துணைவன்-குபேரன்; அங்கி - அக்கினி; சிவன் நீங்கின மற்ற எழுவரையும் கூறினர்; நந்து அணியுங் குழை நம்பர் - சங்கா பரணமும், குண்டலமு மணியும் சிவன்; நாப்பண் - மத்தி; மணிப் படமா நாகம் - மாணிக்கமுடைய படம் பெற்ற பெரிய பாம்பு; ஒரு கொம்பின் நடுக்கை தடக்கையிடும் - ஒரு கொம்பினைப் பெற்ற பெரிய தும்பிக்கையினுல் நடுக்கத்துடன் தடவும்; தந்தி - விநாயகன். (1)

560. சொருகமை சூழலி - வாரிச் சொருகுமாறு அமைந்த கூந்தலையுடையவளே ; மயில் நிழலி - மயில்போன்ற சாயலொளி யுடையவள் ; கருணி - கருணையை யுடையவள்; மரகத வருணி - பச்சை நிறத்தவள் ; பானலம் அனைய கணி - நீலோற்பல மொத்த கண்ணையுடையவள் ; கொந்தார் வாகைச் சூலினி - பூங்கொத்துக்கள் நிரம்பிய வெற்றியையுடைய சூலாயுதத்தை யுடையவள் ; சற்குண மிகு ரஞ்சகி எனப் பிரிக்க. வந்து ஆனந்தக் காட்சி கொடுத்து என்று பிரிக்க; பூடணம் ஆதி- ஆபரணம் முதலியன ; வர்த்திக்கும் பவுசு - இருக்கும் அழகு ; சந்தானம் - மக்கள்பேறு. (2)

561. பொற்பு அகம் - அழகிய (நல்ல) மனத்தையுடையவள் ; கருணை + ஆலயம் - கருணாலயம் - (ஆலயம் - இருப்பிடம்) ; பந்தனம் வெண்பாற்கடலமுதே - காவலைச் செய்யும் வெள்ளிய பாற்கடலில் தோன்றிய அமுதமே ; வடிதேன் - வடித்த தேன் ; வந்தனை - வணக்கம்; சந்தனமே, பைந்தனமே, அனமே எனப் பிரிக்க ; அன்னம் என்பதன் தொகுத்தல் அனம். (3)

562. அஞ்சு கரப்பிளை - விநாயகன் ; பிள்ளை என்பதன் தொகுத்தல் பிளை ; ஆறு தலைப்பிளை - ஆறு தலையையுடைய முருகன்; பேருமே - பெறுதலில்லாமல் ; ஆல் - ஆலிலை ; பண்டி - வயிறு ; வெற்பு இறை - சிவன் ; என்னை என்ற வினாவின் தொகுத்தல் எனை ; வாடாதோ - ஓகாரம் ஐயப்பொருள் ; பாராரே - ஏகாரம் எதிர்மறை ; பாராரே இதிலுள்ள இரு எதிர்மறைகள் ஒருடன்பாட்டைக் குறித்தது. பார்ப்பார் என்று பொருள்; கஞ்சமலர்க்கணன் - திருமால்; நாலுமுகத்தன் - பிரமன் ; கா வாழ் நாடு ஆனோர் - கற்பகச்சோலையையுடைய சுவர்க்கலோகத்தில் வாழும் தேவர்கள் ; வாழ்நாடு - வாணாடு என்றாயிற்று ; கண்கள் களித்திடவே தரிசித்தவர் கால்தான் ஏறு என்று பிரிக்க ; கால் - ஏழாம் வேற்றுமையுருபு ; ஏறு - அடையா ; மேனை - இமயமலையரசன் மனைவி ; விநாயகனையும், முருகனையும் போன்று ஆண் பிள்ளையைப் பெறாமல் அந்த வயிற்றை ஒரு சமயம் கருப்பத்தால் நிரப்பினால் ஆலிலைபோன்று வயிறு வாடும் என்று நினைத்தாயா? பாலுக்காக பஞ்சம் உண்டென்று நினைத்தாயோ? உனக்கு எப்படி வரும்? கனமான முலைகளாகிய குடங்களே பாலாறுகுமே. அப்படியும் மிஞ்சி, குழந்தை வயிறு பசித்தழுதால் என்ன? சிவன் பாராமலிருந்துவிடுவாரா (முன் உபமன்யு முனிவர்க்குப் பாற்கடலை வரவழைத்து ஊட்டியது காண்க); திருமால், பிரமன், இந்திரன் முதலியவர் தரிசிக்க அவர்களிடம் செல்லாமல் மேனையிடம் சென்று அவளால் வளர்க்கப்பட்டவளே என்று பொருள் கூறுக. (4)

563. மாறு ஆம் ஆறு - பகை கெடும் வண்ணமே; வேள் - மன்மதன்; கண்பட-நெருப்புக் கண்ணைக் காட்ட; வெற்றுரு ஆம்ஆறு- வடிவமின்றி யிருந்த விதமே; கூர்வோர் - மிகுதியானவர் (உரிச்சொல், வினைபாலணையும் பெயர், கூர் பகுதி); சரீரத்தளிர் - சரீரமாகிய மாந் தளிர்; கார்போல் ஒயாமே - மேகம்போல் கறுத்துத் தளர்ச்சியுறாமல்; மால் ஓகம் - மயக்கத்தின் பெருக்கு; மாலோகம் - மிகுதி; கண்பட - திருஷ்டிபட; கண்ணேறு - திருஷ்டி தோஷம்; நாவேறு - நாவால் வருந் தோஷம்; தினம் இன்சொல் படிப்பினை பேசாய் பேசாயோ - தினம் இனிய சொல்லான கற்றுக்கொடுத்ததைப் பேசமாட்டாயோ; ஒரு - எண்ணலளவை யாகுபெயர்; பேசாயோ - இதில் இரு எதிர் மறைகள் ஒருடன்பாட்டைக் காட்டிற்று; முப்புரங்களை நீ சிரித் தழித்ததைப்போன்று மிகுதியானவர் கண்டு சிரித்தாலும் உனது சரீரமாகிய தளிர் மேகம்போன்று கறுக்காமலும் மன்மதன் நெற்றிக் கண்பட்டு எரிந்து உருவமில்லாமற் போனதுபோல மிகுதியானவர் கண்ணால் நோக்கின திருஷ்டிதோஷமும் மற்றுமவர்கள் மனதில் நினைத் ததைப்போன்று கொடிய செய்கை மிகுதியும் உண்டோ உனது அழ கைப் பருகி படிப்படியாகக் கொஞ்சிக் குலாவினாலும் உனக்குக் கண் திருஷ்டி தோஷமோ, நாவினால் வரும் தோஷமோ ஒன்றுமில்லை என்று பொருள் கொள்க. உண்டு என்பதில் ஏதோ என்பதின் ஓகாரத்தைப் பிரித்துச் சேர்க்க. (5)

564. குழந்தைகள் விரலை வாயில் வைத்துச் சுவைப்பதனால் "உன் கை சுவைப்பது..........ஊறுதோ" என்றார். பண்டி - வயிறு, பண்டி பசித்து அழின் என்று பிரிக்க; மேனு தேவியர்-மேனை; மின்- மின்னல்போன்ற குழந்தை; எண்ணாது என்பது எணுதே என்று தொக்கது; விம்பர் கனி இதழ் - கோவைக் கனிபோன்ற உதட்டையுடை யவள் (உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை); கம்பிதம் - நடுக்கம்; முன் - முன்காலத்தில்; கமலத்தனை உந்தி படைத்த முனோனாலே காணு - பிரமனைக் கொப்பூழ்த் தாமரையில் படைத்த உனக்கு முன்னவனான திருமாலால் காணமுடியாத, முனோன்- தொகுத்தல் விகாரம், முன்னோன் - பெரிய சகோதரன்; முண்டக பொற்பதம் - தாமரைபோன்ற அழகிய பாதம்; தற்பரை - பார்வதி; மோகாதி நால்வேதன் - மூன்று குற்றங்களையுடைய பிரமன்; முக் குற்றம் - காமம், வெகுளி, மயக்கம். (6)

565. பாரம் புயங்கம் சதுர்ப்புயன்-கனத்த பாம்புகளைக் கையில் கங்கணமாக வுடைய சிவபெருமான்; பவள நயனப் பங்கயன் - பவளம் போன்று சிவந்த கண்களாகிய தாமரையை யுடைய திருமால்;

பௌத்திர கரகத்து எண்கயனும் - சுத்தமான கமண்டலத்தையுடைய பிரமன், கையன்-கயன், போலி; பருமத்தடக்கை வெண்கயன்-விநாயகர் போலும்; ஆரும் பவளத்திதழ்க் கனிவாய் - பொருந்திய பவளம் போன்ற உதடுகளையுடைய கனிந்த வாய்; திருவாய் மலர்வாய் - பேசுவாய்; அருத்தி - உணவிட்டு; குதலை - மழலை; ஊரும் பனிரண்டு அருக்கர் - வானில் ஊர்ந்துசெல்லும் பன்னிரண்டு சூரியர்; அச்சுவினி- அசுவினித்தேவர்; உருத்திரர் பதினொருவர் ஆதலால் பத்தொருவர் உருத்திரர் என்றார்; அட்டவசுக்கள்-எட்டு வசுக்கள்; இப்பாட்டில் முப்பத்து மூன்று தேவர்களைக் கூறியிருப்பது காண்க. (7)

566. "காதுக்கினிதுன்......சொல்" என்ற வடியைக் "குழலினிது யாழினிது என்ப தம்மக்கள் மழலைச்சொற் கேளாதவர்." என்ற குறளுடன் ஒப்பு நோக்குக; "கண்ணுக்கினிதுன்.......யின்பம்" என்ற வடியை "குழவி தளர்நடையைக் காண்டல் இனிதே..." என்ற (இனியவை நாற்பது) பாட்டுடன் ஒப்பிடுக. கவுள்-கதுப்பு; முத்துவது- முத்தமிடுவது; வியத்தல் நாசிக்கு இனிது இன்பம் என்று பிரிக்க, நாசி - மூக்கு; பேதைக்கு இனி ஐம்பொறிக்கு இன்பம் பிள்ளைக் கனியன்றியும் உண்டோ - பேதையர்கட்கு இனிய மெய், வாய், கண் மூக்கு, செவி ஆகிய ஐந்து பொறிகளுக்கும் இன்பந் தருவது பிள்ளையாகிய பழம் தவிர வேறு உண்டோ; காயாம்பூ வருணச் செல்வி-காயம் பூவின் நிறம்போன்ற செல்வி. (8)

567. காவித்தடம் - நீலோற்பல மலரையுடைய குளம்; குமுதம் - அல்லி; சேலூடும் சிறுகால் ஊடும் - சேல்மீன்கள் தங்கும் சிறிய வாய்க்காலி னிடையிலும்; திகழ்தேர் ஆர் தெரு ஆடும் - பிள்ளைகள் இழுத்துவரும் விளங்கும் சிறுதேர்களைப் பொருந்திய தெருக்களினிடையிலும்; பொங்கு ஆடு அரவ நிதம்ப நுளைச்சியர் - கோபித்து ஆடுகின்ற பாம்புப்படம் போன்ற நிதம்பத்தையுடைய நெய்தல் நிலப் பெண்கள்; குடில் - குடிசை; புட்டில் - இறைகூடை; புளினத்திடர் - ஆற்றிடைத்திட்டு; கங்கு - வயலின் வரம்பு; திரை - அலை; காவி மலர்க்குளம், தாமரைக்குளம், அல்லிக்குளம், சேல்மீன்கள் திரியும் சிறுவாய்க்கால், சிறுதேர்கள் பொருந்திய தெருக்கள், நெய்தனிலப் பெண்களின் வீடு, இறைகூடை, கட்டில், ஆற்றிடைத்திட்டு, வயல்கள், கடல், கப்பல், அலை, மிக்க நீர்ச்சுழி, பெண்களின் கால்கள், கைகள் ஆகிய இவ்விடங்களினிடையில் சங்குகள் திரியும் மந்திர நகர் என அந்நகருக்குச் சிறப்புக் கூறுக. ஊடாடும் - திரியும். (9)

568. தெண்டிரை கொஞ்சு தடங்கரை-தெளிந்த அலைகள் வீசும் பெரிய கடற்கரை; தேசிகர் தம் கைமடிச்சீலை - ஞானக்குரவர்களின்

சிறிய ஆசார வஸ்திரத்திலும்; தம்-அசைநிலை; காசுப்பை-விபூதிப்பை; மனை வளை மதில் தனிலும்-வீட்டிற்காக வளைக்கப்பட்ட மதிலகத்தும்; பண்டகசாலை - களஞ்சியம்; பர மங்கையர் கொங்கையினும்-தாசிகளின் முலைமீதும் (முத்தாரமாயிருந்ததால் கூறினர்); கையினும் என்றது பிறர் முத்தைப் பணத்திற்குப் பதில் கொடுத்து விட்டு, வேசிகளிடம் செல்வதால் ஆகும்; கடற்கரையிலும், ஞானக்குரவர்களின் துணியிலும், விபூதிப் பையிலும், தர்ப்பையிலும், குப்பைகளிலும், மண்டபம், மாளிகைகளிலும், வீட்டிற்காக வளைக்கப்பட்ட மதிலகத்தும், வழியிலும், சிறிய பள்ளங்களிலும், நீரிலும், தோண்டத் தோண்ட மணலைத்தருகின்ற கிணற்றிலும் (கடற்கரைப் புறமான நகராகவே இங்ஙனம் கூறினர்), களஞ்சியத்திலும், வேசிகளின் முலைகள்மீதும், கைகளிலும், பவளத்தாலாகிய ஆபரணமணியும் இடுப்பிலும், வாயிற்படியிலும், தலையிலும் முத்துக்கள் விளங்கும் மந்திர நகர் என நகருக்கு ஏற்றம் கொடுக்க. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

569. குடுமி - சிகரம்; குரிசில் - ஆண்மக்களிற் சிறந்தோன்; இதய கமலம் - உருவகம்; களிசிறப்ப - மகிழ்ச்சி மிக; சொரூபம் - வடிவம்; மதிமுக மேனை - சந்திரனையொத்த முகத்தையுடைய இமயமலையரசன் மனைவி; பதும செந்திரு - தாமரை மலரிலிருக்கும் இலக்குமி; முத்து இளநகைச் சனகி கர்த்தன் - முத்துப்போன்ற அழகிய பற்களையுடைய சீதையின் தலைவனான இராமன்; அமையச் சொன்ன - அடங்குக என்று கூறின; மறைமொழி - வேதமொழி; தத்திய கடல் திரை முழக்கா நகர்-தவழ்ந்த கடலின் அலைகள் சப்தியாத நகரம்; முழக்கா நகர் - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இவ்வரலாறு 549-ஆம்பாட்டின் குறிப்பில் காண்க. (1)

570. மட்டகல முட்டாது - அறத்தின் முதலிலிருந்த அளவு நீங்க, (32 தருமத்தில்) குறையாது; மிச்சம்-மீதி; மாலையிட்டுக் கைப்பிடித்த என் ஐயற்கு எனப் பிரிக்க; ஐயன் - தலைவன், இங்குச் சிவனைக் காட்டிற்று; கால் கூப்பி-காலைக்குவித்து; கலைக்கலை-அடுக்குத்தொடர்; கடைக்கண் இட்டுத் தலைகவிழ்ந்து உள் குழைந்து முன்கைச்சரி சிலம்ப என்றுபிரிக்க; கைச்சரி சிலம்ப - கைவளையல் சப்திக்க; சட்டுகம் - அகப்பை; அமுதிட்ட - உணவிட்ட. (2)

**571.** மலை - கோவர்த்தன மலை; சொரிகல் மாரி-வினைத்தொகை; பூவை வண்ணன் - காயாம்பூ போன்ற நிறத்தன் (கண்ணன்); தம் ஐயனென - தமது தலைவன் என்று; சிலைவிடுத்திடும் நுதல் - மன்மதனும் நாணி வில்லைக் கீழே போட்டு விடும்படியான நெற்றி; இதழின் நல்ல வில்வ இலை எடுத்து அறுகு எடுத்து அலர் எடுத்து ஆசித்து எனப் பிரிக்க; ஆசித்து - ஆசைப்பட்டு; இதழின்-கொன்றை மலரைக் காட்டிலும்; அறுகு-அறுகம் புல்; முக்கால்-மூன்று போது; உனைக்கால் துதித்தேயிருப்போர்-உனை என்பது வேற்றுமை மயக்கம்; பூவின்மேல் தலையெடுத்திட-பூமியின்மேல் பிறக்குமாறு; அனுக்கிரகம்-கருணை; கண்ணனை வளர்த்த பெண்கள் அவன் தங்கையான உமையையும் வளர்த்துப் பூசிக்க அவர்களைப் பூமியின்மேல் செழிக்குமாறு கருணைசெய்த சத்தி என்று பொருள் கொள்க; பூமியே மோட்சம் கொடுக்க வல்ல வுலகமாதலின் 'பூவின்மேற்றலை யெடுத்திட' வென்றார். (3)

**572.** உனக்கு ஆலயம் பத்தி என்று பிரிக்க; பத்தி - வரிசை; உடுவின் ஆதியந்தம் - நட்சத்திரங்களின் முதலும் முடிவும்; மாலிகை-மாலை; பகலவன் - சூரியன்; அமுத கதிரவன் - சந்திரன்; உனது உபைய குழை - உனது இரண்டு குண்டலம்; அணி குதம்பை - அணிகின்ற காதணி; பார வட்டப் பொருப்பு - பூமியினுடைய சுற்றுமலைகள்; பார - இதில் 'அ' ஆறும் வேற்றுமை யுருபு; சில்லரிப் பணச் சிலம்பு - பரல்களையுடைய பருத்த சிலம்புகள்; அழிவிலா அலைத்து - அழிவிலாமல் வருத்தி; வான் பிரசித்தியே-உயர்ந்து பிரசித்தமா யிருப்பவளே; சக்கரவாளகிரியே உனக்கு ஆலயவரிசை, நட்சத்திரங்களே முத்தாரமாகிய மாலை, சூரியனும் சந்திரனுமே குண்டலங்களும் காதணியும், பூமியிலுள்ள மலைகள் யாவும் உனது கையில் பந்தும், கழங்கும், அம்மனைக் காய்களும், ஆதிசேடனும் வாசுகியுமே உன் கையிற் பரல்களையுடைய பருத்த சிலம்புகள் எனப் பொருள் கொள்க. (4)

**573.** கன்னல் அம் பாகென-கரும்புச் சாற்றினின்று எடுத்த அழகிய வெல்லப் பாகுபோல; கடவுளர் - தேவர்; தெள்அமுது - தெளிந்த தேவாமுதம்; கவிவாணரில் - கவிவாணரைப்போல; வாழ்நர் என்பதன் மரூஉ வாணர்; தொன்முறைத் தன்னமைத் தொண்டனென்றும்-பழைய காலத்தினின்று தனக்கு அமைந்த அடியனென்றும்; தொண்டரின் கொத்தொடு அடிமையென்றும்-அடியார் கூட்டத்தோடு அடிமை என்றும்; குடி-குடும்பம்; பேபரம் என்பது ஆசிரியர் குடிப்பெயர் போலும். பெற்றிசேர் - நல்தன்மையமைந்த; சந்நிதி - தேவிக்கு முன்புறம்; சன்னதி - கோவில்; இப்பாட்டால் இந்நூலாசிரியர் வரலாறு சிறிது தெரிகிறது. பாகைப் போன்றும் தேனைப்போன்றும் அமுதம்போன்

றும் பாட்டுப் பாடும் புலவர்களைப்போல பழைய காலத்தினின்றும் தனக்கு (உமை தனக்கு) அமைந்த அடியனென்றும், அடியார்கூட்டத் தோடு அடிமையென்றும் அடியார்களது திறத்தின் அடிமைத் திறத்தில் நல்லது செய்து புகழ் அமைந்த நற்குடியென்றும், குற்றங் களில்லாத எமது பேபரம் குடும்பத்தில் சந்ததி முறையில் எமக்கு நற்றன்மை யமைந்த உமது திருமுன் 'வித்துவான்' என்றும் எனது பேரைச் சொல்லிக் கூப்பிட்டும், உமது திருக்கோயிலிலேயே குடி யேற்றுவித்தும் இரட்சித்த தாய் என்று பொருள் கொள்க. பாகம் பிரியாவம்மை இவ்வாசிரியரைத் தனக்கு அமைந்த அடியவனென்றும், அடியார்கட்கு ஒத்து நடப்பதுடன் அடிமை வேலைகள் செய்வதில் புகழமைந்த குடும்பத்தைச் சேர்ந்தவரென்றும் குற்றமில்லாத அவரது 'பேபரம்' என்ற குடும்பத்தில் பரம்பரையாகத் தனக்கு வித்துவானாக இருக்கவேண்டுமென்றும் கூறினதோடு அம்மை தன் திருமுன் ஆசிரி யரது பெயர் சொல்லிக் கூப்பிட்டுக் கோவிலிலேயே குடியேறும்படி செய்தும் இரட்சித்தாள் என்பன விளங்குகின்றன காண்க. (5)

**574.** மரகத வருணன் - பச்சைநிறத்தன், (திருமால்); அரு மறை வருணன் - பிரமன்; வரல்முறை - வரலாற்றோடும் கூடிய முறைமை; சுருதியின் - வேதத்தைப்போன்று; விகசித பற்ப மலர்த் தேவி யிருவர்-மலர்ந்த தாமரை மலரில் இருக்கும் கலைமகள், திருமகள் என்ற இருவர்; முருக்க மலர்ப்போலும் இரதி - முருக்கம்பூப்போன்ற நிறமுடைய இரதி; மகிழ்வர தீர்த்தமிட - மகிழ்ந்து நீ வருவதற்குத் தண்ணீர் தெளிக்க; உனது சன்னிதி தானே பரகதி என - உனது கோயிலே மோட்சம் என்று; இமையவர் பட்டு விரித்தார்கள் - தேவர் கள் பட்டுத்துணியை விரித்தார்கள்; பெரியோர், கடவுளர், அரசர் உலாச்செல்லும் போது உயர்வு கருதி பட்டுத்துணியைக் கீழிட்டு அதன் மீது சிவிகை முதலானதில் செல்வர்; பதிவிரதம் உள மகளிர் - கற்பையுடைய பெண்கள்; குரவை - பெண்கள் கைக்கோத்தாடும் கூத்து; குரைகடல் திரைதவிர் - சப்திக்கும் கடலலை நீங்கின; குமரன்- முருகன்; தமருகம் - உடுக்கை; கின்னரம் - ஓர்யாழ். (6)

**575.** சத்தி படைத்தாலே சகலமும் நிலைபும் பெறுமலது அணு வும் சற்று அசையப் போமோ எனப்பிரிக்க; பெறுமலது - பெறுமே யல்லாது; கிருபை செய்திடில் இங்கு அறமொடு பொருள், இன்பம் திரள் தப்பாது கதி உனது அடி என்று - கருணைபுரிந்தால் இங்கு அறத்தொடு பொருளும் இன்பமு மாகிய கூட்டங்கள் தவறாது உனது பாதமே அடைக்கலம் என்று; உயர்கதி யவர் - சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்கள், கெச்சிதம் - முழக்கம்; முறைமுறை புகலும் புரதம்

முறையாகக் கூறும் பரதசாஸ்திரம்; சச்சபுடத்தாள - பஞ்சதாளத்திலொன்ருன சச்சபுடத்தை நடிக்கும் பாதத்தையுடையவளே; முதலர் - முதற்றேவர்கள்; அனவரதம் - தினம்; உறை மின் - வினைத்தொகை; குழையொரு விழி யம்பிகை - குழைந்து (இரங்கி) நோக்கும் ஒப்பற்ற கண்களையுடைய அம்பிகையே. (7)

**576.** பிரியாத் தேவலோகம், பிரியா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; ஆத்தானம் - உயர்ந்த இடம்; கற்பக அடவி - கற்பக மரஞ் சூழ்ந்த சோலை; வாழ் இந்திரன் - வினைத்தொகை; எழிலான் அந்தகன் மேற்ருன - அழகினையுடைய யமனை மேற்கொண்ட; எட்டான திக்கில் உறைவோர் - அஷ்டதிக்குப் பாலகர்; நன்மை + தாய் = நற்ருய்; சுருதியால் நால் அங்கமும் வாய்ப்பாடமாய் வந்தன ஆர்த்தார்கள் - வேதத்தின்படி நான்கு உபநிடதமும் பாடி ஆரவாரித்தனர்; சேனம் பிரியாச்சூல - மாமிசத்திற்காக பருந்து நீங்காத சூலத்தையுடைய; சித்தனுக வந்து மதுரையில் விளையாடியதால் 'பரசித்தா' என்ருர். கருணை மால் தேடும் பொருளாய் - கருணையையுடைய திருமால் தேடத்தகும் பொருளாக; பாரவெற்பு ஆலயம் கயிலை - கனமான மலையையே கோயிலாகக் கொண்ட கயிலை; கயிலை வாழ் தானம் பிரியாத்தேவர் - கயிலையில் வாழ்கின்ற இடத்தைப் பிரியாத சிவன்; பேதைபால் வந்து அருள் ஆர்த்து ஆர் கை - பேதையேனிடம் வந்து அருள்புரிதலைப் பொருந்திய கை. (8)

**577.** தொத்தாரம் - பூங்கொத்துக்கள் பொருந்திய மாலை; துங்கம் - பரிசுத்தம்; வாலை, மாலினி, மனோன்மணி - பார்வதியின் பெயர்கள்; சொற்கு ஆதிபத்தி மயிலே - சொற்களுக்கு உரிமை யுடையவளான மயில்போன்றவளே; சிந்துரானன் வேதசீலர் - யானைமுகமுடைய விநாயகன்; வேலர்-முருகன்; அனமே - அன்னப்பறவையையொப்பவளே; அறம் ஓர் எணுலும் - ஒப்பற்ற தருமம் முப்பத்திரண்டும் (எண் + நாலு); செட்டு - சிக்கனம்; கந்தம் - வாசனை; கற்பு + ஆலயம் - கற்பாலயம்; கஞ்ச நான்முகன் - தாமரைமலரில் தோன்றிய பிரமன்; மாயனர் - திருமால்; கர்த்தர் - தலைவர்; பிரமனும் மாயனரும் கர்த்தராகக் கூறும் என்று பொருள் கொள்க; பிரமமே சந்திரசேகர - கடவுளான சந்திரனைத் தரித்த சிவபெருமான்; நீலகோலமே - போலமே - கருநிறம்போன்ற அம்மே; அமே - அம்மே என்பதன் தொகுத்தல்; பிரமம் - 317-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. (9)

**578.** கடகம் சரி கலீரென-கடகமும் வளையும் கலீரென்று; சவடி-ஓராபரணம்; ரத்னுதி-இரத்தினமிழைத்த ஆபரணம் முதலியன; கயல்-

கயல்மீனை யொத்த கண்கள்; கண்கள் காதுவரை நீண்டிருந்ததால் "குலாவி வரு குழை" என்றார். பொன்தோடு - அழகிய தோடென்னு மாபரணம்; பொன்னரிமாலை - ஓர் ஆபரணம்; கொண்டை - கூந்தல் அலங்காரம் ஐந்தில் ஒன்று; விலாசக் கொப்பு - அழகிய கொப்பெனும் காதாபரணம்; சுட்டி - நெற்றிச் சுட்டி; பொர - போர் செய்ய; மட்டாம் இலக்குமிலதாய் - அளவான ஒரு குறியிடம் இன்றி; நீதன் அளியும் பெருக - நீதிமானான சிவன் உன்னிடம் அன்பு அதிகரிக்க; வச்சிராயுதத்தன் - இந்திரன்; முடிதாழ்தரு - தலைவணங்கும்; சங்கர சுவாமிதம் அணங்கு, அரசு, வாமி என்று பிரித்து, சங்கரசுவாமி தம் அணங்கு, சங்கரசுவாமி தம் அரசு, சங்கரசுவாமி தம் வாமி என்று கூட்டுக; தருமந்திரமது ஆன-மரங்களாலும் வீடுகளாலுமான; வாமி- இடப்பாகத்தையுடையவள்; மேனி எல்லையில்லாமல் மகிழ்ச்சியடையவும், சிவன் உன்னிடம் அன்பு பெருகவும், இந்திரனும் முடிவணங்கும் சிவனின் இடப்பக்கத்திலுடையவளே சப்பாணி கொட்டுக என்று பொருள்கொள்க. (10)

---

## முத்தப் பருவம்

---

579. செகத்தாய்க்கு - உலக மாதாவுக்கு; மக்கள் கேட்பதற்கு எளிதாயும், சொல்லுவதற்கு முடியாததாயும், மிகப் பெருமை பெற்ற தாய் உலக மாதாவுக்கு அபிடேகக்கிரீடம் வைத்ததுபோன்ற சிகரங்களையுடைய கைலாச மலையில் இருப்பவளும் கடலின் பக்கத்தில் இருப்பவளுமான நீ (தூத்துக்குடி கடற்கரையிலுள்ளது காண்க) ஒப்பற்ற பசுமையான கொம்புபோன்ற மேனி என்பவளிடம் இல்லாமல், மற்றோர் பசுங் கொம்பிடமான சிவபெருமானிடம் இருந்து அழகிய பிஞ்சாகவும், பசுங் காயாகவும், தூங்காது சிவந்த கண்களின் கருணைத் தேன் சுரந்து, பழம் பழுத்து எப்போதும் நினைத்திருக்கும் அடியார் மனம் இனிக்குமாறு (களிக்குமாறு) பழுத்த மூன்று கண்களையுடைய கனியான சிவபெருமானுக்கு இன்பத்தை மிகுவிக்கும் முத்தை யொத்தவளே முத்தம் தருக எனப் பொருள் கொள்க. (1)

580. வெருக்கொண்டு - அஞ்சி; உனது குழற்கு உடைந்து வில்லும் பொழியும் அம்பினொடும் விண்மேற் செல்லும் கொண்மூ - உனது கூந்தலுக்குத் தோற்று இந்திர வில்லிட்டுப் பொழியும் மழையொடும் ஆகாயத்திற் செல்லும் மேகம்; அம்பு - நீர்; உரு - வடிவம்; வளை - சங்கு; உனதாட்கு உடைந்த பதுமம் - உன்னுடைய பாதங்களுக்குத் தோற்ற தாமரை; உன - 'அ' உருபு, ஆறும் வேற்றுமைப் பன்மை; உபைய தடந்தோள் - இரண்டு பெரிய தோள்கள்; கிளை - மூங்கில்; நின் சொற்கு இடைந்து - உனது சொல்லுக்குப் பின்னிட்டு; கழை-கரும்பு; ஊர் எங்கு எங்கணும் முத்துண்டு என்று பிரிக்க; இதழ் வாய் முருக்க மலர்க்குள் இருக்கும் முத்தம்-இதழ்பொருந்திய வாயான முருக்கம் பூவிலிருக்கும் முத்தம்; இப்பாட்டில் அம்மைபது பல உறுப்புக்கட்குள்ள உவமானப் பொருள்கள் தோற்றுச் சென்று முத்துக்களை ஈனுவதாயிருக்க இதழாகிய முருக்கம்பூவும் முத்தைக் கொடுக்கின்றது என்னுமாறு முத்தம் கொடுப்பாயாக என்கிறார்.

> "தந்தி வராக மருப்பிப்பி பூகந் தனிக்கதலி
> நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளின மின்னார்
> கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகா
> ரிந்து வுடும்புக ராமுத்த மீனு மிருபதுமே."

என்ற பர்ட்டை நோக்குக. (2)

581. தத்துந் தரங்கம் முழங்காவுன் சன்னிதானம் - மேல்வரும் அலை முழங்காத உன் கோயில்; இப்பாட்டில் முத்துக்களை எடுத்துத் தரம்பிரித்தல் கூறப்படுகிறது. சமுத்திர முத்தத்திற்குத் தரம் பிரித்தல் உண்டு. உன்வாய் முத்தத்திற்குத் தரம் பிரித்தலுளதோ என்கிறார். சப்பத்தி - தட்டை முத்து; இதற்குபயோகிக்கும் கருவிகளின் பெயர் வந்திருத்தல் காண்க. (3)

582. நத்து - சங்கு; நிலவு - சந்திரன்; சலஞ்சலம் - ஓர்வகைச் சங்கு, (வலம்புரி யாயிரஞ் சூழ்ந்த சங்கு); நாகு அணவாய்ப் படைத்த வலம்புரி - சங்குகள் சேர்ந்துண்டான வலம்புரிச் சங்கு; ஆயிரஞ் சங்குகள் சேர்ந்தது இடம்புரி. இடம்புரி யாயிரம் சேர்ந்தது வலம்புரிச் சங்கு; நாகிளம் பூம்பாளை முருக்கவிழ் பூகத்தின் மிடற்றினிடத்த பழுக்காய் முத்தினுக்கு-மிக்க இளமையான பாளையையுடைய மலரும் பாக்குமரத்தின் நுனியிலுள்ள பாக்கி லுள்ள முத்தினுக்கு; பூங்கழை- அழகிய கரும்பு; கண் - மூங்கில்; ஓர் மெத்த முகில் முத்தினுக்கு - ஒப்பற்ற மென்மையான மேகத்தினின்று பிறந்த முத்துக்கு; கமல விகசிதப்பூ - மலர்ந்த தாமரைப்பூ. (4)

583. மலர்க்காவோங்கும் வானம் - மலர்களையுடைய சோலை ஓங்கும் ஆகாயம்; மறுகூடு ஒதுங்கும் வான் அத் தேம் மறை - தெருக்களின் இடையில் ஒதுங்கும் அந்நேரத்திலும் உயர்ந்த அத்தகைய இனிய வேதங்கள்; மறைபேசும் முத்தர் ஆசியே-வேதங்களை யோதும் ஞானிகளின் தாயே; 'ஆச்சி' என்பது ஆசி என நின்றது; மணல் வீசும் முத்தம் ராசியே - மணலில் அலைகள் வீசும் முத்துக்களின் கூட்டம்; நிலை வீடு அருகுங் கற்பகமே - நிலைத்த மோட்சத்தைக் கிட்டச்செய்யும் கற்பக மொத்தவளே; நெறி வீட்டு இருக்குங் கற்பகம்-உயர்ந்த நெறிப்படி யமைந்த கோயிலிலுள்ள கற்பகமொத்தவளே; நியமர் பகரு மந்திரமே-முனிவர் துதிக்கும் மந்திரப்பொருளே; நிலவு நகர மந்திரமே - மந்திர நகரில் தங்குபவளே; இலக்காகிய சங்கரன் சகியே - குறியிடமான லிங்கவடிவமாகிய சிவன் பாகமாக உள்ளவளே; எழுதா வேத ரஞ்சகியே-எழுதாத வேதத்தின் இன்பப் பொருளே; எனை ஆண்டருளுஞ் சக்கரியே - என்னை அடிமைகொண்ட சக்கரப்படையுடையவளே; இமையோர் வணங்கு அஞ்சு அக்கரியே - தேவர்கள் வணங்கும் பஞ்சாட்சர மந்திரப் பொருளே; முலைக்கோமளையே - முலைகளையுடைய அழகையுடையவளே; முறுவல் முத்தம்-புன்சிரிப்பையுடைய முத்தம். (5)

584. மதிமண்டல நேர்மனைகளெல்லாம் மாடகூட வுப்பரிக்கை-சந்திரமண்டலத்தைப் பொருந்திய வீடுகளெல்லாம் மெத்தைகளும் கூடங்களு முள்ள மாடி வீடுகள்; விரவி - கலந்து; வயங்குங் கதிர் வெண்தரள மணி - விளங்கும் ஒளியையுடைய வெள்ளிய முத்துமணி; தேவேந்திர பாக்கியம் - தேவேந்திரன் அனுபவிப்பதைப்போன்ற செல்வம்; அருந்ததி - வசிஷ்டர் மனைவி; கதிர் - சூரியன்; வழங்கு - கொடுக்கின்ற; வழங்கு காசும் வெள்ளிக்காசும் தங்கக் காசும்-இரவலருக்குக் கொடுக்கின்ற காசுகள் வெள்ளிக்காசும் தங்கக்காசும்; உற்று அங்கையால் தெளிக்கும் நீரும் கமகமெனக் கமழ் பன்னீர்-அடைந்து உள்ளங்கையால் தெருவில் தெளிக்கப்படுகின்ற நீரும் 'கமகம' வென்று வாசனை வீசும் பன்னீராகும். (6)

585. ததிகுடிக்கும் திரு முகில் - தயிரைக் குடிக்கும் திருமால்; சதுர்முகன் - பிரமன்; திருமாலுக்கும் பிரமனுக்கும் வேதத்திற்கும் ஒப்பற்ற முதல்வரான சங்கரர் என்க. அவரிடத்து அன்புடைய பார்பதி (பார்வதி) என்க. தளிர்க்கும் பதிவிரதைப் பெண் - செழித்த கற்புடையவள்; பணில மொய்க்குங் கரையிலே படர் சிறுத்தெண்டிரை கடல் தண்பதியின் முத்து என்று உரைசெய்து துதிசெய - சங்குகள் மொய்க்குங் கரையிலே வரும் சிறிய அலைகளையுடைய கடல்சூழ்ந்த

அழகிய நகரின் முத்தை யொத்தவளே என்று சொல்லித் துதித்து; தொழுமவர் - வினையாலணையும் பெயர்; சரணம் - பாதம்; தந்தருள் துரைப்பெண் - கொடுக்கும் உயர்ந்த பெண்ணே. (7)

586. உப்பின் கடலிலே தெரியும் முத்தும் சொரியின் நத்தும் திரியும் - உப்பையுடைய கடலிலே ஆய்ந்தெடுத்த முத்தும், சுழல்கின்ற சங்கும் திரியும். (எனவே அது உகந்ததல்ல). சிகர வெற்பின் தரளம் நிச்சம் தழல் மடுக்கும் - சிகரமுடைய மலையில் மூங்கிலிடம் உண்டான முத்துக்கள் நிச்சயம் அக்கினியால் உண்ணப்படும்; கரியமைக் கொண்டலில் குழலில் விளைக்கும் ககன முத்தம் - மிகக் கருமையான மேகத்தைக் காட்டிலும் கரிய கூந்தலில் உண்டாகும் பொன்மயமான முத்து; கழை - மூங்கில், இங்கு அம்மையின் தோள்களைக் காட்டிற்று; கரடம் - யானைமத்தகம், இங்கு அம்மையின் தனங்களைக் காட்டியது. கமலம் - தாமரை, இங்கு அம்மையின் முகத்தைக் காட்டியது; பரிமிதத் திண்கரி மருப்பின் பரியமுத்தம் சரவையே-எல்லையற்ற மிக்க வலியுள்ள யானைத் தந்தத்தினின்று உண்டாகும் முத்தம் அற்பமானது; பவளமுத்து எங்கு உள - பவளமும் முத்தும் எங்குமுள; செம்பவளமுத்து இங்கு அருமையே - சிவந்த பவளத்தினின்று முத்தம் தோன்றுவது அருமையே யாகும் (சிவந்த பவளம்போன்ற வாயினின்று முத்தம் கொடுப்பதால் இங்ஙனம் கூறினர்); கிரியளிக்கும் சிறு துரைப்பெண் - இமயமலையைப் பாதுகாக்கும் பருவதராசனுக்குப் பெண்ணே; கடலில் ஆய்ந்தெடுத்த முத்துக்கள் உப்பினையுடையதாதலால் நன்மை யமைந்த தல்ல. மலையில் மூங்கிலில் உண்டாகும் முத்தும் நெருப்பால் உண்ணப்படும். அதுவும் நன்றல்ல; யானைத் தந்தத்திலுண்டான முத்தம் அற்பமானது; மிக்க கரிய மேகத்தைப்போன்ற கூந்தலில் உண்டாகும் முத்தம் தருக; கழையையொத்த தோளிலுண்டாகும் முத்தம் தருக; யானை மத்தகம் போன்ற தனத்திலுண்டாகும் முத்தம் தருக; கமலம்போன்ற முகத்தில் முத்தம் தருக. பவளமும் முத்தும் எங்குமுண்டானாலும் சிவந்த பவளம் போன்ற வாயினின்று முத்தம் பெறுவது அருமையாகிறது; எனவே பருவதராசன் புத்திரியே முத்தம் தருக எனப் பொருள் கொள்க. யானை ஒன்றோடொன்று சண்டை யிடும்போது தந்தத்தில் தீப்பற்றி முத்துத் தீய்ந்து போவதால் அற்பமானது என்றார். (8)

587. கழையிலும் கழையிலும் கண்பட்ட முத்து - மூங்கிலிலும் கரும்பிலும் உண்டான முத்து; கார்வண்ண ரகுபதி கரத்தாலமைத்த இக்கடல் அகட்டு இப்பி முத்தும்-கருநிறமான இராமன் கரத்தால் அடங்குக என்று அசைத்துக் காட்டிய இந்தக் கடலினுள் உள்ள சங்கின்

முத்தும்; செங்கையும் பன்னீரை விட்டு விளக்குவோம் - சிவந்த கைகளைப் பன்னீரால் கழுவுவோம்; எழுமுழக் கவுள்மதத்து அயிராவதப் பூண் இருப்பிடு மருப்பின் முத்து-எழு முழமுடைய மதச்சுவட்டைப் பெற்ற அயிராவதம் என்ற யானையின் கிம்புரியிட்ட தந்தத்தின் முத்து; இருப்பும்-இரும்பு என்பதன் வலித்தல்; எத்தனைக்குள்ளேயென மதிப்போம்-உன்னுடைய முத்தத்தை நினைக்க எவ்வளவில் ஒரு பாகமெனக் கருதுவோம்; தழைமலர்த் தொடைச் சொருகு அணிகுழல்-தழைத்த பூமாலை சொருகி அணிந்த கூந்தல். (9)

588. மேலைத் தவத்தர்க்கு இருப்பிடமெனும் சொர்க்க வீட்டினிலு முத்தமில்லை - மேன்மையான முனிவர்கட்கு இருப்பிடமான சொர்க்கலோகத்திலும் முத்தம் (முத்தியுலகம்) இல்லை; வேழம்-யானை; முனை நீடும் இரு கோடுதொறும் - முனைவளர்ந்து நீண்டு கொண்டே செல்லும் தந்தந்தோறும். சேல் உற்பவித்த கற்ப உதரத்தெழு திரை கடலும் - சேல் மீன்கள் தோன்றிய தேவலோகத்தின் நடுவிடம் வரை எழும்பும் அலையையுடைய கடலிட முழுவதும்; செந்நெல் - சாலிநெல்; கன்னல் - கரும்பு; பால் ஒத்த செந்தமிழ்ப் பிள்ளைக்கவிக்குள் ஒன்பது நிலமும் முத்தம் இல்லை-பால்போன்றினிய செந்தமிழின் பிள்ளைக் கவிக்குள் இப்பருவந் தவிர மற்ற ஒன்பது இடத்திலும் முத்தம் (முத்தப் பருவ மென்ற ஒன்று) இல்லை; பால் நிலாவுமிழ் வெண்மணல் திடரில் நெய்தற் பரப்புப் பொருப்பாகும் இத்தலத்தில் முத்துண்டு - பால் போன்ற நிலவு ஒளி வெள்ளிய மணல் திட்டில் வீசும் நெய்தல் நிலமான மணல் சூழ்ந்த இடம் மலைபோன்ருகும் இவ்விடத்தில் முத்துக்கள் உண்டு; இவ்விடம் என்பது தூத்துக் குடி; உன் வாய் முத்தும் உண்டு - உன்வாயினல் கொடுக்கும் முத்தமும் உண்டு; தார் மலை முத்தர் - மாலையணியும் சிவபெருமான்; தார் அமலை-மாலைசூடிய பார்வதியே; அமலை-பார்வதி. (10)

# வருகைப்பருவம்

589. கண்ணிலும் காணக்கிட்டாத தூரத்திலுள்ள அக்கடற் கரைகட்குச் செல்லும் யுகப்பிரளயம் போன்று சேர்ந்த அலை மடங்கிய கரிய கடலில் இருக்கும் கப்பல்கள், படகுகள் இவற்றின் முற்பக்கத்தில் தாங்கிய கப்பற் கயிற்றில் கட்டிவிட்ட நங்கூரத்தைச் சுறுமீன்கள் இரையென நினைத்து வாயில் அதக்கி இழுப்பக் கப்பலைச் செலுத்தும் மாலுமிகள், அலை அடங்கின நீர்நிலையில் பெரிய கசேந்திரன் என்ற யானை தனது நீண்ட துதிக்கையால் பிடித்துத் தன் காலைப் பிடித்த முதலையை இழுக்கக் கடைசியில் முடியாது "ஆதிமூலமே" என்று அழைக்கும் குரல்போன்று "பார்வதியே! அபயம்" என்று ஓலமிடும் மந்திர நகரில் உறைபவளே, எனப் பொருள் கொள்க. கண்ணிலும் என்பது கணிலும் எனத் தொக்கது; கரைக்குக் கரைக்கு - அடுக்குத் தொடர்; கப்பல் படகு - உம்மைத்தொகை. அணியம் - கப்பல்களின் முற்பக்கம்; கம்பாகம் - கப்பற் கட்டும் கயிறு; பணிலம் - சங்கு. (1)

590. மச்சு அத்து உறை ஆயிரத்தோ ரெட்டும் ஆற்று மேருப் பொருப்பு - மேல் நிலைகளான எல்லைகள் தங்கும் 1008-சிகரங்களையும் தாங்காமல் மூன்றை இழந்த மேருமலை; மச்சு - மேல்நிலை; அத்து - எல்லை; மேருமலை ஆயிரம் சிகரங்களை யுடையதென்றும் 1008-சிகரம் உடையது என்றும் கூறுப. இவைகளில் ஆதிசேஷனுக்கும் வாயுவுக்கும் பலங்காட்டும்போட்டி உண்டானபோது வாயு மூன்று சிகரங்களை அடித்துச் சென்று கடலில் தள்ளினான். மேருப் பொருப்பாகிய தனம், மற்றைப் பொருப்பும் அடங்குதனம், இமவான் கைக்கு அடங்காத தனம், மார்பு அடங்காத தனம் என்று முலைகட்குப் பெருமை கொடுக்க; அடங்கு தனம்-வினைத்தொகை; இமவான்-பருவசன்தராண்; பொருப்பு-மலை; கரத்தால் நெருடி-கைகளால் தடவி; கடைவாய் இருபால் ஒழுக்கியபால் - வாய் ஓரத்தின் இருபக்கங்களிலும் ஒழுக்கிய முலைப் பால்; மிச்சில் - மிகுதி; சயிக்கியமாய் மின்னும் தளிர்ப் பூந்துகில் நனைப்ப-மென்மையாய்ப் பிரகாசிக்கும் இலைத்தளிரை யொத்த அழகிய ஆடையை நனைக்கவும்; பச்சைக் குழந்தை - இளங்குழந்தை. (2)

591. காது தடவும் விழி - காதளவு பரந்த கண்; கமகமென - இரட்டைக்கிளவி; கமகமெனக் கமழும் குமிழும் இதழ்க் கவிருந் தவிரா வதன சந்திரகாந்தி அணங்கு உன் திருமேனி - கமகமவென வாசனை வீசும் குமிழம் பூவும் (மூக்கு) உதடுகளாகிய முண் முருக்கம் பூவும் நீங்காத முகமாகிய சந்திர ஒளியையுடைய பெண்ணே, உன் உடலின்; உலகைச் சுற்றும் புணரி முற்றும் வளர்ந்து ஓங்கிப் பரந்த

கடல் மடுக்கும் - உலகைச் சூழ்ந்த கடல்முழுதும் வளர்ந்து உயர்ந்து கடல் நீரையும் குடிக்கும்; கடலைக் குடிக்கும் சாதியெழு மாமுகில் என்க. மேகம் கடல்நீரைக் குடித்தலால் கூறினர். சாதியெழு மாமுகிலும் முகில்தாரை மழைவீழ் அகிலம் மகிதலமும் பச்சைப் படுத்தி - இன மான ஏழுவகை மேகக் கூட்டங்களையும், மேகத்தினின்று மழைத்துளி வீழும் எல்லா பூமியையும் பச்சைநிறமாகச் செய்து ; விஷ்ணு சருவாங் கமும் கொண்டு-திருமாலின் எல்லா உறுப்புக்களிலுள்ள பச்சை நிறத் தைத்தான் அபகரித்துக்கொண்டு ; ஐயர் படுப்பாதி சரீரம் - சிவபெரு மானது சரிபாதியான உடலிலும் ; பச்சைக்குழந்தை - பச்சைநிறம் பொருந்திய குழந்தை ; உமாதேவியின் உடலின் பச்சைநிற மெழுந்து வளர்ந்து கடல் நீரைக்குடிக்கும் ஏழுவகை மேகக் கூட்டங்களையும், பூமி யையும், பச்சை நிறமாகச் செய்து சிவபெருமானின் பாதி சரீரத்தினும் பச்சை நிறமாக்கினது ; அத்தகைய குழந்தையே வருக எனப் பொருள் கொள்க. (3)

592. மேகம் சுரந்து பரந்தன்ன மேனி - கருமேகம் பெருகிப் பரந்ததைப்போன்ற கறுத்த உடல்; சூர்க்குலம் - சூரபதுமன் குலத் தைச்சேர்ந்த அரக்கர் ; இடுக்கண் - துன்பம்; எறி மத்து எறிதயிரின் - வீசும் மத்தினால் கடையப்பட்ட தயிரைப்போல ; வெருவி-கோபித்து ; என் ஐயா - எனது தலைவ ; அமரர் - தேவர் ; அபய அஸ்தம்-538-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. ஐம்முகத்தோடு அதோமுகமும் - இயற் கையான ஐந்து முகத்தோடு கீழ் முகமும் ஆக (ஆக ஆறுமுகங்களா யிற்று); அசுர குலத்தினல் பயந்த தேவர் கைலையை யடைந்து சூரபது மனல் நேர்ந்த துன்பங்களைக் கூறி முறையிட சிவபெருமான் அவர்கட்கு அபயமளித்து ஆறுமுகமாகி ஆறுமுகத்தின் நெற்றிக்கண்ணினின்றும் பிறந்த ஆறு தீப்பொறிகளை அக்கினியும், வாயுவும் சென்று சரவணப் பொய்கையிலிட அப்பொறி ஆறு குழந்தைகளாய்ப் பிறந்து கார்த்தி கைப் பெண்கள் பாலூட்டச் சிறந்து சரவணைப் பொய்கையிலிருக்க அக்குழந்தைகளைப் பார்வதி சென்று ஒருசேர எடுக்க ஆறுமுகம், பன் னிரு கரமும் ஒருடலுமாக முலைப்பால் கொடுத்துச் சிவபெருமானிடம் விட்ட மந்திர நகரில் வசிப்பவளே, என்று பொருள் கொள்க. (4)

593. வாயில் புவன வட்டமிட்டு மடுத்தும் - உலகச் சுற்றுக்களை வாயிலிட்டு விழுங்கியும் ; மருட்டுந் திருட்டுக் குணம் - மயக்கும் திருடு கின்ற குணம் ; கோயிற் சிறப்பென்று ஆயர் சிறுகுடிலில் - கோயிலை யொத்த சிறப்பென்று இடையர் வீட்டில்; அருச்சுனத்துக்கு ஊடு தவழ்ந்து - இரண்டு மருத மரங்களினிடையில் தவழ்ந்து சென்று ; இது யசோதை உரலில் கண்ணனைக் கட்டினபோது கண்ணன்

தவழ்ந்து சென்று மருத மரமாயிருந்த வித்தியாதரர்களது சாபத்தைப் போக்கினர். அருச்சுனம் - மருதமரம்; விழிகள்தொறு குடிகொண் டிருந்து என்று பிரிக்க; ஓர் அடி சம்பிரதாயத்தொடு பூ அளந்து நின்று - ஒரு பாதத்தினால் பூமியை முறைமைப்படி (திருவிக்கிரம அவதாரத்தில்) அளந்து நின்று; தமிழ்ப்பின் நடந்து-காஞ்சிபுரத்தில் சோழனது வெறுப்பால் கணிகண்ணர் தன் குருவான திருப்பாணாழ் வாரிடம் கூறி அந்நகரைவிட்டு நீங்க, திருப்பாணாழ்வாரும் பெரு மாளிடம்

"கணிகண்ணன்..............................பாய்சுருட்டிக் கொள்."

என்று பாடப் பெருமாளும் நாகப் பாயைச் சுருட்டிக்கொண்டு மூவரும் ஓரூரில் தங்கினர். அதுசமயம் பல்லவன் கோயிலில் சுவாமி யில்லா மையையறிந்து தங்கியிருக்கும் பக்கத்தூருக்குச் சென்று மன்னிக்க வேண்டவும் ஆழ்வார் முன்பு பாடிய படியே பாடிக் கடைசியில் "பைந் நாகப்பாய் விரித்துக்கொள்", எனப் பழையபடி காஞ்சி சென்று சேர்ந்தனர். மதகரி - கசேந்திரன் என்ற யானை; தசத்தின் நூறு முடி படைத்த பாயில் சிவனேயெனக் கிடந்த பரன் - ஆயிரந் தலைகளை யுடைய ஆதிசேடனாகிய பாயில் ஒன்றுமற்று பள்ளிகொண்ட திருமால்; தசம்-பத்து; பத்துநூறு-ஆயிரம்; சிவனேயெனக் கிடந்தான் என்பது ஒன்றுமற்று இருக்கும் நிலைக்குக் கூறும் உலக வழக்கு. (5)

594. யோக்கிய சிவாக்கியானச்சுடரின் ஒன்றாய் வியாபித்தவள் - நல்ல சிவஞானச் சுடரில் ஒன்றாய்க் கலந்தவள்; யோகத்தியான மௌனி கள் தம் உள்ளத்திருக்கும் உமை - யோகமும் தியானமும் செய்யும் ஞானிகளது மனத்திலிருக்கும் பார்வதியே; ஆக்கும் உலகம்-உன்னால் உண்டாக்கப்பட்ட உலகம்; அறம் வளர்த்த அன்னை-32-தருமங்களை யும் வளர்த்ததால் இவ்வாறு கூறினர். எனை மதுரவாக்கியென உண் டாக்கி - என்னை இனிய வாக்கினை யுடையவனென்று சொல்லுமாறு உண்டாக்கச் செய்து; என் பாமாலை அடி சூடினள் - எனது பாட்டுக் களாலாகிய மாலையைப் பாதத்தில் சூடியவளே; வங்கிச பாரம்பரிய புத்திர பாக்கியம் - வமிச பரம்பரையில் மக்கட்செல்வம்; பவுசு - வாழ்வு. (6)

595. மகுடம் வனைய, மாம்பழக் கொண்டை வனைய வருக என்று பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க; மணிவண்ணன் தங்கச்சி - திருமாலின் தங்கை; 'தங்கை' தங்கச்சி என மருவியது; அரைஞாண் -

இடுப்பில் கட்டும் கயிறு ; கைக்கு ரத்ன கடகம் இடுக வருக - கைகளுக்கு இரத்தினத்தாலான கடக மெனுமாபரண் மணிய வருக; ஆபரண + ஆதி - ஆபரணாதி; செச்சை-வெட்சிமலர்; செங்காவியம் கட்கு அஞ்சன முந்தீட்ட வருக-காவி மலரையொத்த கண்களுக்கு 'மை' தீட்டு வதற்கு வருக; பாதஞ்சேப்ப - பாதம் நடத்தலால் சிவக்குமாறு ; மாம்பழக் கொண்டை - கூந்தலைக் கொண்டை போடும் வகைகளிலொன்று. மாம் பழக்கட்டு என்பது புடவை உடுக்கும் வகையிலொன்றாகும். இங் ஙனமே மேற்கூறிய கொண்டையும். (7)

596. கெண்டைக் கணைக்கால் - கெண்டைமீன் போன்ற கணைக் கால்; கிறுகிட - தடுமாற; கிண்கிணி - ஓர் வகைக் காலாபரணம்; அமுது - உணவு; கண்டசரம் - கழுத்திலணியும் ஓராபரணம்; அஞ் சனம் - மை ; கொண்டை - தலையின் உச்சிக் கொண்டை ; சுடிகை - நெற்றிச்சுட்டி ; குமிழ் மூக்கு - குமிழம் பூ போன்ற மூக்கு; தழுக்கு - செழிப்பு, இங்குச் செழித்த மூக்குத்தியைக் காட்டியது. கொடுங்கை - வளைந்த கை ; கொப்பும் குழையுங் குழைக்கணியேன் - கொப்பும், குண்டலமும் காதிற்கு அணிய மாட்டேன் ; குழை - காது ; (உ-ம்.) "ஊசலுற்றவர் குழைக் குடைந்திடுதலால்" (கந்தபு. திருநாட்டு 44). (8)

597. செய்ய - சிவந்த ; புலம்ப - ஒலிக்க ; பைய - மெதுவாக ; வராத பராமுகம் ஏன் எனப்பிரிக்க. (9)

598. மரகத வருண வடிவுடை இமைய மலைமகள்-பச்சை நிறஉருவு டைய இமயமலை யரசனின் மகளே ; மதர்விழி மகர குழை விழி யுருவ - மதர்த்த கண்கள் போர் செய்யும் சுறாமீன்போன்ற வடிவுடைய குண்ட லத்தின்மீது கண்களின் பார்வை ஊடுருவிச்செல்ல ; சுரர் - தேவர் ; முடி - தலை; துடியிடை - உடுக்கை போன்ற இடை; மகுடம் - கிரீடம்; பரிபுர சரண - சிலம்புகளையணிந்த பாதத்தையுடையவளே ; விகசித கமலம் - மலர்ந்த தாமரை ; உததி - கடல்; திரிபுரை முதலிய ஐந்து பேர்களும் சத்தியைக் குறிப்பன. (10)

# அம்புலிப் பருவம்

| 599. சந்திரன் | பாகம்பிரியா அம்மை |
| --- | --- |
| 1. சிவனுடைய ஒருபாகம் (பகுதி) போன்று தலையில் இருப்பான். | பாதிபாகம் பெற்றதால் இவளைப் **பாகம்** என்று சொல்லுவார்கள். |
| 2. குவளை மலரைச் சந்திரனால் மலரவும் அடக்கவும் முடியும். கைவாரம் கொள்ளல் - கூத்தை அடக்குதல். | குவளை இவளுக்குக் கையில் அழகுத் தன்மையுடையதா யிருக்கும். |
| 3. நாகத்தை ஆபரணமாக அணிந்த சிவபெருமானுக்கு உரித்தானவன். | இவளும் நாகத்தை ஆபரணமாக அணிந்த சிவபெருமானுக்கு உரித்தானவள். |
| 4. நல்லகலை (16-கலைகள் நிரம்பி) நிற்பான். | இவளும் நல்லகலை (படிப்பு) நிரம்பி நிற்பாள். |
| 5. ஒப்பற்றவனாய் நீயுமலையில் (நீயும் அலையில் என்று பிரிக்க; அலை என்பது பாற் கடலைக் குறித்தது) பிறந்தாய். | இவளும் மேகமலையில் (மேகம் சூழ்ந்த இமயமலையில்) பிறந்தாள். |

நிற்கு மேகமாய் நீயுமலையிற் பிறந்தாய் இவளு மேகமலையிற் பிறந்தாள் என்ற இந்த அடி இருவருக்கும் சொல்லில் ஒத்திருத்தல் காண்க. (1)

600. உலகத்தின் முதலும் முடிவும் சுற்றிய கடலின் வெள்ளத்தை உண்டெழுந்த மேகம்போன்று பரந்த நீர்ததும்பும் இளைய பசிய இலையும், வெண்மேகம், செம்மேகம்போன்று விரிந்துள்ள நுரையும் சேர்ந்து எழுந்தவைகளின் மத்தியில் தடைப்பட்ட மீன்களின் கூட்டமெல்லாம் நட்சத்திரங்களின் கூட்டம்போன்றும் அங்கங்கு இடம் கொண்டுள்ள நீரும், மீது ஒளிவிடும் ஆகாயமே சுவராக உள்ள கரைகளும் அழகாயுள்ள மேகமென்னும் வண்டுகள் ஊத மகரந்தப் பொடிகளால் சுற்றிய பரிவேடமிட்டு வாசனையும் பிரகாசமும் வீச தேனாகிய அமுத கலை ஒழுக பொருந்தி அலர்ந்த ஆகாயமாகிய குளத்தில் தாம

ரை மலர்போன்று உள்ளவனே என்று கூப்பிட்ட அம்மையோடு ஆட வா என்று பொருள் கொள்க. இப்பாட்டில் ஆகாயமே குளமாகவும், நட்சத்திரங்கள் குளத்திலுள்ள மீன்களாகவும், ஆகாயச் சுவர் கரைகளாகவும், நீருள்ள மேகம் நீர்ததும்பும் பசிய இலையாகவும், வெண் மேகமும் செம்மேகமும் நுரைகளாகவும், மேகம் வண்டுகளாகவும், பரிவேடம் மகரந்தப் பொடியாகவும், அமுதங் கொடுக்கும் சந்திர கலைகள் தேனாகவும், சந்திரன் தாமரை மலராகவும் கூறப்பட்டு சந்திரன் சூழ்நிலையும் அம்மை சூழ்நிலையும் ஒத்திருத்தல் காண்க. உறுபுனல் ததும்பு இளம் பாசடை எனப்பிரிக்க. ஏகோபவித்து - சேர்ந்து; பித்திகை - சுவர்; கூலம்-கரை; வாகு - அழகு; பிரசம் - தேன்; வார்ந்து ஒழுக-ஒருபொருட் பன்மொழி; வார்ந்து - ஒழுகி; வாவி - குளம். (2)

| 601. சந்திரன் | பாகம்பிரியா அம்மை |
|---|---|
| 1. அழகிய சக்கர வட்டம் போன்றதில் ஒளிவீசிய பதினாறு கலைகள் உண்டு. | அழகிய சக்கர வட்ட அறுகோண முக்கோணம் பொருந்தும் 64-கலைகள் இவளிடம் உள்ளன. |
| 2. சர்வருத்தமற்றபிறப்பும் இறப்பும் வளர்வும் தேய்வும் மாதந்தோறும் வரும். மாச்சற - மாய்ச்சுஅற, சாவருத்தம் நீங்கின. | எல்லையும் குறியும் இல்லாததொரு கற்பகாலமும் ஆராய்வின்றிச் செய்யத் தக்கதை யுடையவள்; கர்த்தவியம் - செய்யத்தக்கது. |
| 3. சொல்லுக்கடங்காத ஒப்பற்ற நட்சத்திரக் கூட்டங்கள் சூழ்ந்து பிரகாசிப்பான். | பெரிய ஆகாயத்தினுள் பதினெட்டுக் கணங்களும் சூழ்ந்து பின் வரச் செல்லுவாள். |

முக்கோணம் என்பதனைச் 318-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. மந்திரத்து ஆச்சி-திருமந்திர நகரில் எழுந்தருளியுள்ள தாய். (3)

| 602. சந்திரன் | பாகம்பிரியா அம்மை |
|---|---|
| 1. உதையமனம் (உதயமாதல்) அத்த மனம் (மறைதல்) என்று இரண்டு மனமுண்டு. | இவளுக்கு ஒரே மனம் தான் உண்டு. |
| 2. மனதில் களங்கமுண்டு. | இவள் மனதில் எவ்வித களங்கமும் இல்லை. |

| | |
|---|---|
| 3. உனது பெருமை நிலை நில்லாது சிதைந்தது. (மானம்-பெருமை) சந்திரன் கலைகள் தேய்ந்து குறையச் சாபம் கொடுத்ததைப் பற்றிக் கூறினர். | இவளது பெருந்தன்மை அழியாது நிலைத்து நிற்கும். |
| 4. தேய்ந்தழியும் உடல் உண்டு. | இவட்கு எத்தேச காலமும் அழிவில்லை. |
| 5. மனமகிழ்கின்ற சிவனிடம் சேர்ந்து சடையினிடம் தங்குவை. | இவள் எப்போதும் பாதிபாகமாய்ச் சேர்ந்து வசிப்பாள். |
| 6. இரவுக்குப் (யாசித்தற்கு) புறப்படுவான். இராத்திரியில் என்ற பொருள் வரும்போது இரவுக்கு வேற்றுமை மயக்கம்; யாசித்தல் சிவனிடம் தன்னைக் காப்பாற்றும்படி தக்கன் சாபம்போது யாசித்ததைக் காட்டும். | இவள் உலகெலாம் பெற்று இனிது காப்பாற்றுவாள். |

(4)

603. முகம் ஓரிரண்டு மூன்றுடை எம்பிரான்-ஐந்து முகமுடைய சிவபெருமான்; (ஓரிரண்டு மூன்று - ஐந்து); முடிக்கிடைகிடந்த நச்சுமூச்சுவிட்டு உடலம் நெளி முடவுட் படச்சிகையின் மூதரா - முடியினிடையிருந்த விஷமூச்சு விட்டு உடல் நெளிகின்ற சுருண்ட சடையில் இருக்கும் பாம்பு; அரா - கடைக்குறைந்து நீண்டது; பாசுரம் - வாசகநடை; சேடனுக்கு ஒப்பமைக்குஞ் சிகா ரதன ராகுத்தனை - ஆதிசேடனுக் கொப்பான தலையில் மாணிக்க முடைய இராகு என்ற பாம்புவை; சித்துவம் - திறம்; தாராகணம் - நட்சத்திரம்; திருமால் சிவனைச் சேவிக்கக் கைலாயம் சென்றபோது கருட வாகனத்தில் சென்று பின் தரிசிக்க, கருடன் அங்கு வர சிவன் முடியிலிருந்த நாகம் "கருடா சுகமோ" என்று கேட்டதாம். நாகத்திற்குப் பகையாகிய கருடனிடம் சிவனின் சடையிடமிருக்கும் தைரியத்தால் கேட்டது; எனவே சந்திரன் சிவனின் பாதிபாகமான பார்வதியிடம் வந்து விளையாடினால் யாரையும் தட்டிப் பேசலாம். இராகுவையும் அடக்கலாம் என்று கூறுகிறார். இங்ஙனம் நன்னெறியில்,

"மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவில்—வலிய
கடவுளவிர் சடைமேற் கட்செவி யஞ்சாதே
படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து."

என்று வரும் பாட்டை ஓர்ந்துணர்க. இதற்குப் பின் வருமாறும் வேறு ஒரு விதமாகக் கூறப்படுகிறது. ஒரு காலத்தில் ஆதிசேடன் என்னும் பாம்புக்கும் கருடனுக்கும் பகைமை ஏற்பட்டுப் போரிடத் தொடங்கினர். கருடனுக்குப் பயந்த ஆதிசேடன் பல இடங்களுக்கும் சென்று ஓடித் திரிந்து கடைசியில் சிறு புலியூர்த் தலத்திற்கு ஓடி வந்து புஷ்கரிணிக் கரையில் பெருமானைக் குறித்துத் தவஞ்செய்தான். இவ்வாறு தவஞ்செய்யும் ஆதிசேடனுக்கிரங்கி அங்குக் கோயில் கொண்டுள்ள கிருபா சமுத்திரப் பெருமான் காட்சி கொடுத்து அபயந் தந்து அவனைத் திருவணையாகக் கொண்டு பாலசயனமாய்ச் சயனித்தருளினார். ஆதிசேடனும் புஜங்க சயனமாகிப் பயமற்றிருந்தான். கருடனும் ஆதிசேடனைப் பலவிடங்களில் தேடிக் காணாமல் இத்தலத்திற்கு வந்து அனந்தன் நிலையைப் பார்த்து ஒன்றும் செய்ய முடியாமல் பெருமாளை வணங்கி நின்றான்; அப்போது "கருடா! சுகமா" என்று கேட்க, கருடன் "இருக்குமிடத்திலிருந்தால் சுகம்தான்" என்று விடை கூறிப் பெருமாளின் திருவருள் பெற்றுச் சென்றான். அனந்தன் தவஞ் செய்ததால் அங்குள்ள புஷ்கரிணி தீர்த்தத்திற்கு "அனந்த புஷ்கரிணி" என்று பெயருண்டாயிற்று; இவ்வாறு பிரம்மாண்ட புராணத்தில் 4-வது அத்தியாயத்தில் கூறப்பட்டுளது. சிறுபுலியூர் தஞ்சை மா வட்டம் நன்னிலம் தாலுக்காவில் மாங்குடி இரயில்வே நிலயத்திற் கருகி லுள்ளது. (5)

604. மைம்முகடு மட்டும் அணவு இட்ட வெண் சுதை மாட மணி வெயில் எறித்தலாலும் - கரிய மேகமண்டலம் வரை அண்ணாந்துள்ள (உயர்ந்துள்ள) வெள்ளிய சுண்ணம்பு பூசிய மாடங்களில் மாணிக்க மணியின் ஒளியாகிய வெயில் வீசுவதாலும்; வண்டலிடு வெண் மணல்-அலைகளால் குப்பைகளிடப்பட்ட வெள்ளிய மணல்; மணிமுத்து என் பதை முத்துமணி என மாறுக; பொம்மென - ஒலிக்குறிப்பிடைச் சொல்; முழக்கம் பெறுங் கயத்தலையிற் புரண்டு அலையில் ஆவிக்கரை புக்க இடம்புரி வலம்புரி தினஞ்சொரி நித்திலப் பிரபை - சப்தம் கொடுக்கும் குளங்களின் இடங்களில் புரண்டு அலையினால் குளக்கரை யடைந்த இடம்புரிச் சங்கும் வலம்புரிச் சங்கும் தினம் சொரிகின்ற முத்தின் ஒளியும்; எல்லி - இரவு; உள்ளக் களங்கம் முதல் இல்லை - மனக்களங்கம் ஆதியாகக் கொண்டன இல்லை. (6)

**605.** பெரும்புவன வட்டம் வளை பூச் சக்கிரவாளப் பிறங்கலின் அடங்கும் அண்டப் பித்திகையும் எத்திகையும் முத்திகை (முற்றுகை) படுத்திப் புறப்படும் செலப்பிரபாகக் கருங்கடல் - பெரிய உலகச் சுற்றைச் சூழ்ந்த அழகிய சக்கரவாள மலையில் அடங்கும் ஆகாய மாகிய சுவரையும் எந்தத் திசைகளையும் முற்றுகை யிட்டுப் புறப்படும் சலப்பிரவாகத்தையுடைய கரியகடல்; தன் வாய் திறவாத வண்ணம் - அலைகள் அடித்து ஒலிக்காதவாறு; இவட்குக் கைவந்தது - இவளுக்குச் சித்தி பெற்றது; உனக்கு ஐயறவு இலாதபடி கண்காண ஒப்பிக்கவோ - உனக்குச் சந்தேகமிலாதபடி பிரத்தியட்சமாகக் காணுமாறு செய்து காட்டவோ; யோசனை-617-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. உனை அருந்தும் இராகுத்தனையும் என்றும் வாய்திறவாது வாய் கட்டிவிடு வாள் எனப் பிரிக்க; இராகு - சந்திரனை விழுங்கும் பாம்பு. (7)

**606.** மிருகாபதிச் சிங்க ஏறு எனத் தக்கன் - மிருகங்களுக்குத் தலைமையான ஆண் சிங்கம்போன்ற பலம் படைத்த தக்ஷன்; விக்கினேசுரர்-விநாயகர்; பருகு+ஆர்+அழல் கடவுள்-எல்லாவற்றையும் உண்ணும் அரிய அக்கினி தேவன்; உதைய பரிதி - உதைய சூரியன்; பல் தகர்த்து - பல்லை உடைத்து; உன்னை - சந்திரனாகிய உன்னை; மிகுத்தெழு சினம் திருகா அழல் பொறி தெறிப்பக் குறித்த கீழ்த்திசை நோக்கி வண்டு உறுக்கித் திருமந்திர ரகசியத் தலத்தினுக்கு ஆட்சி தேவாலயத்து ஈசான திக்கு அருகாக ஆயத்தமாய் நின்றது அறிகிலாய் - மிக்கெழுகின்ற கோபம் முறுக்கி தீப்பொறி சிதற உதிக்கும் கிழக்குத் திக்கை நோக்கி அம்பை நாணியில் உறுக்கித் திருமந்திர தலத்தினுக்கு மேன்மையான கோயிலில் வடமேற்கு மூலையில் அருகாக சகல தயாரிப்புக்களுடன் நின்றதை அறியவில்லையா? வீரபத்திரன் :-65-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. (8)

**607.** மழைத்தடங் கொடுமுடி மணிக்ககன முகடு உருவ மந்தரம் நிறுத்தி - மேகங்கள் தங்கும் சிகரத்தையுடைய அழகிய ஆகாய உச்சியை உருவும்படியான மந்தரமலையை மத்தாக நிறுத்தி; நெற்றி வட்டச் சிகா ரதன பட்டத்து நெட்டுடல் வாசுகிதனைப் பிடித்துக் குழைத்துப் பிணித்து - நெற்றிச் சுற்றில் உயர்ந்த மாணிக்கமான பட்டத்தையும் நீண்ட உடலையுமுடைய வாசுகி எனும் பாம்பைப் பிடித்து வளையச் செய்து மந்தர மலையில் கட்டி; தடத் திருப்பாற்கடல் குண்டு அகழி அகடு உடைபடக் குமைத்து - பெரிய திருப்பாற்கடலின் ஆழமான நீர்நிலையின் மத்தியபாகம் உடைபடுமாறு கடைதலால் சோர்வடையச் செய்து; திமிலகுமிலம் - இரைச்சல்; திமிலகுமிலத்து உனை

என்று பிரிக்க; தழைத்த துளவப் படலை மின்னு சொர்னப் படாம் தாங்கு பங்கயலோசனன் தங்கை - தழைத்த துளவ மாலை மின்னு கின்ற பொன் பட்டாடைகளைத் தாங்கும் திருமாலின் தங்கை; கண்டாய்-முன்னிலையசை; சந்திரன் திருப்பாற்கடல் கடையும்போது தறியாக இருந்ததால் இங்ஙன் கூறினர். (9)

608. முடிக்கண் பணச்சிகை மணித்தலையின் நெட்டுடல் முடக்கிப் படுத்த பகுவாய் மூதரா - முடியினிடம் பட உச்சி பொருந்திய மாணிக்க முடைய தலையின் நீண்ட உடலை வளைத்துப் படுத்த பிளந்த வாயையுடைய இராகு (கேது) வெனும் பாம்பு; கடுப்பட - விஷம் படுமாறு; வாயிற்கு உள்ளகப்பட்ட தண்ணீர் விடம் தலையினிற் கொள்ளாதிருக்க மந்திரம் படிக்கக் கருத்து உன் உளத்து அடைந்தால்-அப்பாம்பின் வாயினுக்கு உள் அகப்பட்ட தண்ணீர் தலையினில் விடமாக மாறாதிருப்பதற்கு மந்திரம் படிக்குமாறு எண்ணம் உன் மனதில் அடைந்தால்; இருப்பது மந்திரபீடம் இவள் பாற்படி - இவ்வம்மை தங்கியிருப்பது மந்திர நகரெனும் இடமாகவே இவளிடம் படித்தறி; இந்தப் பதிக்கலால் மற்றைப் பதிக்கு மந்திரமில்லை - இந்த நகருக்கு அல்லாமல் மற்றைய நகர்களுக்கு மந்திரநகர் என்று பெயரில்லை; அடைக்கலமெனச் சொல் உனக்குமோர் இடுக்கண் இலை - சரணமென்று சொல் உனக்கு எத்தகைய துன்பமுமில்லை. (10)

---

# அம்மானைப் பருவம்

---

609. வெம்புலியும் எண்கும் மடன்மேவு கடுவாய் ஓடி மடங்கலும் - கொடிய புலியும் கரடியும் அறியாமையையுடைய புலிக்குட்டியும் ஓடி மடங்குதலடையவும்; மடங்கலேறு மிருகாதி நாகாதி புகுதாது - ஆண் சிங்கம் முதலிய மிருக வகைகளும், பாம்பு வகைகளும் அடைந்து துன்புறுத்தாது; அனவரதமும் பைம்புலின் இதழ் கறிக்கும்படி பிரக்கினை படைத்து - தினமும் பசிய புல்லினால் உதடு கறிக்கும்படி உணர்ச்சியை உண்டாக்கி; பிறங்கு ஞானப் பைஞ்சுடர் எறிக்கும் இமையாசல மனைக்குரிய பன்னி - விளங்கும் ஞானத்தின் பசுமையான ஒளிவீசும் இமயமலை வீட்டுக்குரிய மனைவியான மேனை;

துடை மஞ்சம் நீங்கி - துடையாகிய கட்டிலை விட்டு நீங்கி; உம்பல் இபம் - எருது, யானை இவைகளின்மீதும்; கயந்தலை - நீர் நிலை; நிலாவின் முற்றம் - மாளிகையின் மேல்பாகமான சந்திர காந்தக்கல் பதித்த இடம். (1)

610. பொய்ம்மானை அம்மான் ஓர் பொன் மானெனப் பூம் பொகுட்டு உறை பிராட்டி காட்ட - இராவணனால் வஞ்சகமாக வந்த மானை (மாரீசன்) அந்த மான் ஓர் பொன் மானென்று தாமரைப் பூவில் தங்கும் சீதை காட்ட; போர் புரி தடக்கைதனில் வார்சிலை யெடுத்துப் பின் ஏகுவோன் தாரை வார்க்க-போர் புரிகின்ற விசாலம்பொருந்திய கையில் நீண்ட வில்லெடுத்துப் பின் செல்லும் திருமால் தாரை வார்க்கவும்; இம்மானை ஏத்து உந்தி அங்கமல கர்ப்போதய சதுர்மறைத் திருமுகத்து எழில் காட்டும் பரமேட்டி-இந்தப் பெண்ணை பாகம்பிரியாவம்மையைத் துதிக்கும் நாபித் தாமரையின் கர்ப்பத்தினின்று உதித்த நான்கு வேதங்களான திருமுகத்தின் அழகைக் காட்டும் பிரமன்; மறை நெறி - வேதநெறி; இருமணம் - பெரிய திருக்கல்யாணம்; கைம்மானை வைத்து நின் கைப் பிடித்திட்ட - கையிலுள்ள மானைக் கீழே வைத்து விட்டு உனது கையைப் பிடித்த; கண்ணுதற்பெம்மான்-நெற்றிக் கண்ணையுடைய தலைவன்; கடைக்கணின் - கண்ணின் கடைப் பார்வையால்; நோக்கும் அம்மானை யருள் தம் விழி யம்மானை - பார்க்கும் அழகிய மானையொத்த அருள் கூர்கின்ற கண்களையுடைய அம்மையே; இறுதியிலுள்ள அம்மானை என்பது அம்மனை என்பதன் நீட்டல்; (அம்மனை - தாய்); இதனைப்போன்று கலிங்கத்துப் பரணியின் "புயல் வண்ணன் புனல் வார்க்கப் பூமிசையோன் தொழில் காட்ட புவன வாழ்க்கை, செயல்வண்ணம் நிலைநிறுத்த மலைமகளைப் புணர்ந்தவனைச் சிந்தை செய்வாம்." என்ற பாட்டிலும் வந்துள்ளமை காண்க. இங்கு மானை என்ற சொல் திருப்பித்திருப்பி வரப்பாடியது காண்க. (2)

611. மணியம்மனை - முத்தினாலாகிய அம்மனை; பிறங்கு தாரா கணம் - விளங்கும் நட்சத்திரக் கூட்டம்; தடம் ககனமுகடு தடவித் திரும்பித் தடம் கைகள் தங்கும் - விசாலமான ஆகாயவுச்சியைத் தடவித் திரும்பி நீண்ட கைகளில் தங்கும்; உடுக்குழுவு இது அம்மனை இது உயர்வது இது தாழ்வது இது தீர்வதெனத் தெளிவுறு என்று பிரிக்க; படி - பூமி; பங்கேருகத்து அணங்கு - தாமரையிலிருக்கும் இலக்குமி; படிகத்து உருப்படும் அணங்கும்-கண்ணடி யொத்த வெண்மையான வடிவத்தையுடைய சரஸ்வதியும்; பிடிக்கின்ற முத்து அம்மனைகளை யெடுத்து வீசும் வேகத்தில் விளங்கும் நட்சத்திரக் கூட்டத்தைப் பிடுங்கி, விசாலமான ஆகாய உச்சிவரை தடவித் திரும்பிப் பெரிய கைகளில் தங்கும் நட்சத்திரக்கூட்ட மிது, அம்மானைக்காய் இது, இது

உயர்ந்தது, இது தாழ்ந்தது எனவே நீக்கத்தக்கது என மனம் தெளிவடையாமல் உடுக்கூட்டத்தையும், அம்மனையையும் சேரப்பிடித்திருந்து அண்ணாந்து விளையாடவும் அதனால் உதிர்ந்த நட்சத்திரங்களும் அம்மனையிலுள்ள முத்தும் பூமியிலிருக்க முத்தோடு நட்சத்திரங்களையும் பொறுக்கித் திருமகளும், கலைமகளும் தங்களது மார்பின்மீது அணைத்துக் கொண்டு அருகில் வந்து, நின்று அடிக்கடி யெடுத்துக் கைநீட்ட நிதானமாய் அம்மானை யாடுவாயாக என முடிக்க. அவதானம் - நிதானம். (3)

612. மட்டு - அளவு; சக்கரவாளம் - சக்கரவாளமலை; மற்று அப்பெரும் புவனமும் எனப்பிரிக்க; மாதிரம் - திக்கு; மேகமுதல் மண்டலாதியந்தம் - மேக மண்டலம் முதல் சந்திர மண்டலம், சூரிய மண்டலம் முதலியவும் இறுதி மண்டலங்களும்; சரம் + அசரம் - சராசரம்; கட்டாய் நடத்தினபடி - ஆணையாய் நடத்தினபடி; நின்கை பார்த்திருக்கும் - உனது உதவியையே பார்த்திருக்கும்; கண்ணுதற் பெருமான்-நெற்றிக் கண்ணையுடைய சிவன்; நின்னருள் படைத்தலது கர்த்தவிய நடத்துதற்கே ஒட்டாது - உன்னுடைய அருள் கிடைக்காமல் செய்யத்தக்கது செய்ய முடியாது; உன்னுடைய செயல் அம்மனைகள் அங்கு ஆடில் உன்னிழலும் ஒக்க ஆடும் நீயாடினால் உலக முதல் ஆடும்-உன்னுடைய செயல் யாது எனின் அம்மனைகளை அங்கு ஆடினால் உன்னிழலும் ஒருசேர ஆடும், நீயாடினால் உலகத்திலுள்ள உயிருள்ளன, உயிரற்றன எல்லாமாடும்; அட்டாவதானமாய்-ஒரே வேளையி லெட்டுக் காரியத்தைச் சிந்திப்பவளாய். (4)

613. பூட்டும்கலன் - பூட்டுமாபரணம்; பொற்சரி - பொன்வளை; புலம்ப - ஒலிக்க; சிலம்பு அலம்ப - சிலம்பு ஒலிக்க; பொருகயற் கண்ணிணைகள் ஆடாமல் அம்மனை பிடித்தாடுமுன் சித்திரஞ் சூட்டும் பணமுடிச்சேடன் சிகாமணிச் சுடிகைதனை ஆட்டும் - போர்செய்கின்ற கயல் மீன் போன்ற இருகண்கள் ஆடாமல் அம்மனையைப் பிடித்து ஆடுமுன் சிறந்த அழகு வாய்ந்த படங்களைப் பெற்ற தலையை யுடைய ஆதிசேடனது மாணிக்க முடைய உச்சியை யாட்டும்; வட்டச் சுற்று உததி காந்தப் பொருப்பெட்டும் ஒக்கத் துளங்கக் கழங்கின் ஆட்டும்-வட்டமாகச் சூழ்ந்த கடல் காந்தவும் எட்டுமலைகளும் ஒருசேர அசைய கழற்சிக்காய் எறிவதால் ஆட்டும்; நீட்டும் தடக்கைப் பொருப்பெட்டும் முட்டும் நானில வலயம் முற்றும் ஆட்டும் - நீட்டும் தும்பிக்கையைப் பெற்ற மலைபோன்ற யானைகளெட்டும் தாங்கும் பூமிமுழுவதையும் ஆட்டும்; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலென நால்வகை நிலங்களாதலால் 'நானிலம்' என்றார். நீற்று ஒளி பழுத்து அழகு எறிக்கும் என் ஐயன்

நிலாத்தவழ் சடாமுடியை ஆட்டும் - திருநீற்றின் ஒளிமிக்கு அழகு வீசும் சிவனது நிலவு விளங்கும் சடாமுடியை யாட்டும்; வித்தாரம் - திறம்; அம்மை அம்மனை பிடித்தாடுமுன் ஆதிசேடனது சுடிகையை யாட்டும், கடல் காந்த, எட்டு மலைகளும் அசைய ஆட்டும், யானைகளால் தாங்கப்படும் பூமியை யாட்டும், சிவனது சடாமுடியை யாட்டும், இத் தகைய திறம் படைத்த உனது செங்கையின் திறமையை யார்தான் அறிவார் என்று பொருள் கொள்க. (5)

614. முகில் ஆண்ட மண்டலத்தப்பால் விளக்கொளி முளைத் தனைய நட்சத்திரம் முறை முறை எறிந்த அம்மனை வான் முகட்டில் பதிந்ததென மானுமன்றே - மேகம் நிரம்பிய மண்டலத்திற் கப்பால் முறைமுறையாக எறிந்த அம்மனை சென்று ஆகாயத் துச்சியில் பதிந்து விளக்கொளி முளைத்தது போன்று ஒத்திருக்குமல்லவா; நகில் ஆண்ட செங்கையை யடைந்திடு முகிழ்த்ததின் நாற்பெருங்கதி தனிற்போய் நற்பெரும் பதவியைப் பெற்று மெய்ஞ்ஞானத்தினுற் சுடர் எறித்தல் ஏய்க்கும் - முலைகளையொத்த அம்மனையை யாளும் கைகளை அவை அடைந்திட்டுக் குவியும்போது நால்வகைப் பிறவியில் சென்று நல்ல பதவியைப் பெற்று மெய்ஞ்ஞானத்தினுற் ஒளிவிடுவதை யொத்திருக் கும்; செம்மை + அடி - சேவடி; சொர்க்கம்-மேலுலகம். (6)

615. தரங்கம் இரங்கிய - அலைகளொலிக்கும்; சத்த சமுத்திரம் உவட்டு எறிய - ஏழு சமுத்திரங்களும் பெருக்கெடுத்து வீச; தலைபுறு மண்டலம் இட்டு எழு நெட்டுடல் சருவமும் மண்டல மிட்டு ஊடு பிலத் தின் ஒளித்திடும் விடம் முடவுட்பட சேடனை - தலையிலே தாங்கின பூமியைக் கீழேபோட்டு விட்டு எழுந்து நீண்ட உடல் பூராவையும் வட்டமாகச் சுற்றி இடையிலேயுள்ள பிலத்துவாரத்தில் ஒளித்திடும் விடமுடைய வளைந்த ஆதிசேடனை; நீடு உச்சி பிளக்கப் பற்றி வளைத்து அலகு உதறிக் கதற முறித்து ஈடு செலுத்திக் கக்கும் இரத்தம் எடுக்கக் கொத்தி யெடுத்து - நீண்ட தலையைப் பிளக்கப் பிடித்து வளைத்து, அலகினுல் உதறி, சேடன் கதறுமாறு முறித்துத் தன் வலிமையைச் செலுத்தி அதனுல் கக்கு மிரத்தத்தை யெடுப்பதற்குக் கொத்தவும்; இருசிறை பட்டதில் அண்ட கடாகமும் இடிபட மடமடென ஆடு மயில் பெருமான் - இரண்டு சிறகுகளின் காற்று பட்டதினுல் பூமி, ஆகாயம் முதலியன சரியவும் மடமடவென்று ஆடச்செய்கின்ற மயிலை வாகனமாகக் கொண்ட முருகனை; ஆள் பரமன் - என்னையாள்கின்ற பரமன், வினைத்தொகை. (7)

616. பயிரவி, வராளி, முகாரி முதலியன சங்கீத வகைகள்; பாடினி பாரதி - விறலியாகிய சரஸ்வதி; தோடு அங்குழை நேர் வைத்தமை நல்யாழ் சுருதி செய் கீர்த்தனம் - காதணியான அழகிய குண்டலத்தில் பாடும் கந்தருவர் பாட்டுப்போன்று வைத்தமைந்த நல்லயாழின் வேதக் கீர்த்தனங்களும்; பாரதிபோல் உம்பர் தொனிக்க என இயைக்க. பாற்கடலாம் மாடந்தனில் உறையும் மரகத வண்ணன் - பாற்கடலாகிய வீட்டில் வாழும் திருமால்; மார்பின் அணங்கு அரசு - மார்பில் வீற்றிருக்கும் பெண்களுக்குக்கெல்லாம் தலைவி; வம்மின் - ஏவலொருமை வினைமுற்று. (8)

617. முதிர் உலகுக்கு உடையாடையெனத் திகழ் மும்நீர் எழு கடல் உள் மோது தடங்கரையில் திரைதத்தி முழக்கா மைக்கடல் - உலகுக்குடைய வாடையென விளங்கும் மூன்று தன்மைகளையுடைய பழைய ஏழு கடல்களும் உள்ளே மோதுகின்றபெரிய கரையில் அலைகள் தத்தி முழக்காத கரியகடல், மதியுவமான இடம்புரி யிப்பி - சந்திரனை உவமானமாகச் சொல்கின்ற இடம்புரிச்சங்கு; மணல்+திடர் - மணற்றிடர், தரளம் - முத்து; துதிபுரி சுற்றுக்கு ஒவ்வொரு யோசனை தூரத்துள் குயவர் சுள்ளையொடும் சர்க்கரைய பனைத்தொகை துன்னுதலினும் அதிசயமாகிய மந்திரம் - துதிபுரிகின்ற சுற்று வட்டாரத்தில் நாற்பது மைல் தூரத்தில் குயவர் சூளைகளும் சருக்கரையை யுடைய பனைமரங்களின் தொகைகளும் அடையாததால் அதிசயமாகிய மந்திர நகர்; பனைமரத்தினின்று வெல்லம், கற்கண்டு முதலியன எடுத்தலால் சர்க்கரைய பனைத்தொகை யென்றார். யோசனை-நான்கு குரோசங் கொண்டது என்றும் கூறுவர். குரோசம் 10,000 முழங்கொண்டது. (9)

618. கரம் அலையொலியும் - கைபோன்ற அலைகளின் ஒலியும்; கம்பராமாயணம் குகப் படலத்தில் சீதை நீராடும்போது கங்கை தன் அலைகளாகிய கையினால் தாயைப்போன்று நீராட்டினாள் என வருதல் காண்க. புளினம் திடர்படு கம்புள் இனம் - மணற்றிட்டில் உள்ள நீர்க் கோழிக் கூட்டம்; கப்பல் இடும் படகு ஒப்பமிடும் பலகைத் தறை கட்டு ஒலியும் என்று பிரிக்க; தறை - ஆணி முதலியன அடிக்கும் சப்தம்; சரிவளை - சரியும் வளையல்; தரளத் தரம் தெரிய தட்டிய முத்துப் பெட்டியின் ஒலியும்-முத்துக்களின் வகைகளை யாராய்வதற்குத் தட்டிய முத்துப் பெட்டிகளின் சப்தமும்; தருலோகமும் அணவ - கற்பகத் தருவுள்ள தேவலோகத்தையும் எட்ட; இடைச் சிறியாள் தடமுலைப் பெரியாள் கரியாள் திருமறை தேடுவதற்கு அரியாள் என்று பிரிக்க; சிறியாள், பெரியாள்-முரண்டொடை; கரியாள்-நீல நிறத்தை யுடையவள். (10)

# நீராடற்பருவம்

619. துள்ளும் பொருங்கயல் இரண்டு அருகினும் புரள் துணை விழிப்படையை மானும் - துள்ளும், போர்செய்கின்ற கயல் மீன்கள் இரண்டு அருகில் புரள்கின்ற இரண்டு விழிகளாகிய வேற்படையை யொத்திருக்கும்; சுழித்துச் சுழித்துச் சுழிக்கும் ஊழ் உந்தியஞ் சுழி போலும் - மிக்க சுழிகளையுடைய மலர்ந்த கொப்பூழ் அழகிய சுழியை ஒத்திருக்கும்; நீரின் வழியே கொள்ளும் கருஞ் சைவலக் கொத்து இதழ்ச் சொருகொந்தளப் பந்தி நிகரும் - நீரின் வழியே கொள்ளும் கரிய பாசிக் கூட்டம் பூவணிந்த கூந்தல் தொகுதியை ஒத்திருக்கும்; குளிர்ந்தது உமிழும் முத்து நிலவொத்து அழகு எறித்த குமுத குறு மூரல் நேரும் - குளிர்ச்சியை வெளிவிடும் முத்து சந்திர நிலவைப் போன்று அழகு வீசிய குமுதவாயின் புன்சிரிப்பைப் போன்றிருக்கும்; தெள்ளும் திரைக்கரம் வளைக்கரம் எடுத்துனைச் சீக்கிரம் அழைத்தல் ஏய்க்கும் - தெளிந்த அலையாகிய கைகள், வளையலையுடைய கை தூக்கி உன்னைச் சீக்கிரம் வாவென்று அழைப்பதை ஒத்திருக்கும்; பொருநை - தாம்பிரபர்ணி; வெள்ளஞ் சிலம்பு கொள்தீரர் - கங்கை வெள்ள ஒலியைச் சடையில் கொண்ட தீரமுடைய சிவன். (1)

620.

| தாமிரபர்ணி | பாகம்பிரியாவம்மை |
|---|---|
| 1. குற்றமில்லாத தென் திசையில் மேகம் தங்கும் பனி மூடிய மேற்குத் தொடர்ச்சி மலையில் பிறந்தாள். | வடக்குத் திக்கில் உயர்ந்த சிகரமுடைய மேகம் தங்கும் இமய மலையிடம் பிறந்தாள். |
| 2. (மூலம் விடுபட்டது). | ஒளிவிடும் சிவந்த சிவனிடம் புகுந்தால் இவள் கறுப்பாயிருப்பாள். |
| வலிமையுடன் பலவகை மாறுபாடுகளினால் வழி மாறித் தோன்ற வந்து உலகளித்திடுவாள். | வலிமை தங்கு ஆறு முகமும் ஒருடலும் தோன்ற முருகனையளித்து உலகைப் பாதுகாத்தாள். |

-ல் - வலிமை. (2)

621. மூல ஓலைப் பிரதி கிடைக்காமல் பிரதி செய்யப்பட்ட கையெழுத்துப் பிரதியே இருத்தலால் முதல் இருவரிகளின் பொருள் அறிய முடியவில்லை. சாகம் - தேக்கமரம்; பூகம் - பாக்கு மரம்; தளவம் - முல்லை; துளவம்-துளசி; ஆதலால் நீ இங்ஙோடி'விளையாடினுல்' - என்று பிரிக்க; அச்சுதரெனச் சொல் - திருமால் என்று சொல்லுமாறு. (3)

622. வாலைப்பிராயம் - இளமைப்பருவம்; செம்பொன் மலையரையன் மனையாட்டி - இமயமலை யரசன் மனைவியான மேனை; உள் மகிழ்ந்து - மனம் மகிழ்ந்து; விளையாடுதலினும் - விளையாடுவதைக் காட்டிலும்; களப தனபாரஞ் சுமந்து ஒசிந்து இறும் இடைக் கைத்தாயர் - வாசனைச் சாந்து பூசிய முலைகளாகிய பாரத்தைச் சுமந்து அசைந்து அதனுல் ஒடியும் இடையை யுடைய செவிலித்தாயர்; பொன் தானை ஒக்கலை இருந்து எண்ணோடு எண்கலை தெரிந்து அம்புலி காட்டி விளையாடு தலினும் - அழகிய உடையணிந்துள்ள இடுப்பிலிருந்து 64-கலைகளையும் தெரிந்து சந்திரனைக் காட்டி விளையாடுவதைக் காட்டிலும்; இன் - ஐந்தாம் வேற்றுமை உறழ்பொருவு; அளகபாரக் கமல முத்து இலக நளின மனையாரெனும் தோழியர்-கூந்தலின் பாரமும் தாமரையினின்று பிறந்த முத்தின் மாலையும் விளங்கத் திருமகளோ என்னும் தோழிகள்; பிரபாகம் - பிரவாகம். (4)

623. வள்ளம் சிறந்த முலைமார்பில் அணியாடும் - கிண்ணம் போன்று சிறந்த முலைகளையுடைய மார்பில் ஆபரணம் ஆடும்; மின் மருங்கின் மேகலையது ஆடும் - மின்னல்போன்ற இடுப்பில் மேகலாபரணம் ஆடும்; வரா ற்கு இணை கணைக்காலினில் - வரால்மீனையொத்த கணைக்காலில்; அங்கத்து உபாங்கமும் - அங்கத்துச் சார்புறுப்பும்; பிரத்தியங்கம் - மூக்கு முதலிய உறுப்புக்கள்; துள்ளும் பசுந்தகட்டு ஆரல் உகள் பொருநை - பசுந்தகட்டைப்போன்ற ஆரல் மீன்கள் துள்ளிக் குதிக்கின்ற தாமிரபர்ணி; உகள் - குதி. (5)

624. கமடம் - ஆமை; இகழாப் பொருநை நதி பாகீரதிக்குப் பிரதி பிம்ப நதி - இகழப்படாத தாமிரபர்ணி கங்கைக்குப் பிரதி பிம்பமான நதியாகும். (பிரதிபிம்பம் - அதேவடிவு); பார்க்கு இதுவே பாவ நாசமும் என்று - பூமியிலுள்ள உயிர்கட்கு இதுவே பாவங்களை நாசஞ் செய்வது என்று நினைத்து; தாமிரபர்ணியில் சலப் (ஜலப்) பிரவாகத்தில் மீன் கூட்டங்களும், ஆமைக் கூட்டங்களும் அலையில் எழுந்து விளையாடுவது குதிக்கும் மீன் அவதாரத்தையும், கூர்ம (ஆமை) அவதாரத்தையும் ஒருசேர எடுத்துப் பொருநை நதி கங்கைக்கு பிரதி பிம்பமாகிய நதி யென்றும் புண்ணிய நதி யென்றும், பூமியிலுள்ள உயிர்கட்குப்

பாவத்தை நாசம் செய்யும் நதி யென்றும் எண்ணி திருமால் தீர்த்தமாடி விளையாடுவதை யொப்பப் புகழ்ந்துரைக்கும் திருமந்திர நகர் என்று பொருள் கொள்க; புராரி - சிவன்; பிரியாதாய் - பிரியாதவளே; பிரி + ஆ + த் + ஆய் என்று பிரிக்க; ஆ எதிர்மறை யிடைநிலை; த் எழுத்துப்பேறு; ஆய் முன்னிலை விகுதி. (6)

625. உகட்டும் சகட்டை உதை சரண உகள பதும நயன படவுரக சயனர் - குதித்து வரும் சக்கர வண்டியை (சகடா சூரன் என்பவனை) உதைத்த பாதமும், இரண்டு தாமரையொத்த கண்களும், படமுடைய பாம்பாகிய சயனத்தையு முடைய திருமால்; பொதியவரை - பொதிய மலை; கடல் மடுத்த - கடலில் கலந்த; பசும்பொன் மலையரசி - இமய மலைக்கு அரசியே; தங்கக் கொடுங்கைக்கு உள்ளாய் - தங்க மயமான வீட்டினுள்ளாய்; கொடுங்கை - வீட்டின் ஒருறுப்பு, இங்கு வீட்டைக் குறித்ததால் ஆகுபெயர். சங்க முகத்தால் - சங்குப் பாலடையினிடமாக. (7)

626. தத்தாழ் திரைக்கார்க் கடல் முகட்டுச் சகத்தில் கதிர்ச் சூர்யோதயம் - தத்தும் ஆழ்ந்த அலையையுடைய கரிய கடலின் ஓரத்தில் உலகினருக்காக வரும் கிரணத்தையுடைய சூரிய உதயமும்; விசும்பனைத்தும் தயங்கும் தாரா கண ராசிக் கொத்து உதையமும் - ஆகாயம் பூராவும் விளங்கும் நட்சத்திரக் கூட்டத்தின் உதயமும்; உதித்தமுதல் குணதிக்கு உதித்துப் பொதியவரைக் குடுமி கடக்கும் வரையும் வளம் கொடுக்கும் தாம்பிரபன்னி - தோன்றிய முதன்மையான கிழக்குத் திக்கி லுதித்துப் பொதிய மலைச் சிகரங்களைக் கடக்கும் வரையும் வளம் கொடுக்கின்ற தாம்பிரபர்ணி; சுத்த ஆகிருதித் தேசு உடைத்தாய் - மாசின்மையான வடிவுடன் ஒளி உடைத்தாக; சூரியோதயம், சந்திரோதயம், நட்சத்திர உதயம் ஆகியன தாம்பிரபர்ணியில் சுத்தவடிவோடு ஒளிபெற்றுத் தோன்றும் பிரதிபிம்பங்கள் எல்லாம் பரிசுத்தமான நதியில் மூழ்கி மூழ்கி சேர்ந்த பதவிகளைப் பெறுவதை ஒத்திருக்கும்படியான புதுநீர் எனப் பொருள் கொள்க. (8)

627. காந்தள் செங்கையின் மாந்தளிர் விரல் வெண்கமலப் பெருமாட்டி - காந்தள் மலர்போலும் சிவந்த கையும் மாந்தளிர்போலும் விரலுமுடைய வெள்ளைத் தாமரையிலிருக்கும் சரசுவதி; கை விரைவாகச் செவ்வரி சிதறு உண்கண் எழுது அஞ்சனமும் - கைவேகமாக சிவந்த கோடுகள் சிதறினாற்போலிருக்க மையுண்ட கண்ணில் எழுதுகின்ற அஞ்சனமும்; நுதல் தானென வில்லைச் சேர்த்திய வதனந்தீட்டிய சிந்தூரம் - நெற்றி யென்றறிய வில்லொத்த புருவம்

சேர்ந்த முகத்தில் தீட்டிய பொட்டும்; கூந்தலில் அம்புய மங்கை முடித்தலர் கொத்துச் சரமும் - திருமகள் கூந்தலில் முடித்த மலரும், "கொத்துசரப்பளி" எனும் ஆபரணமும்; வளங் கொண்டு இரு கரையும் வண்டலிடத் திடர்குவிதல் கமகமெனப் பூந்திரை - வளப்பம் கொண்டு இரண்டு கரைகளிலும் வண்டலிடவும் மணல் திட்டுக் குவிந்து கமகமவெனும் வாசனை வீசும் பூக்களையுடைய அலைகள்; அம்புய மங்கை- திருமகள். (9)

628. களிகண் புனல் நிறை கடல் அகழத் தடுபடுக்கி யமுக்கி யெழு நடுவுயர் முதுகு ஒரு கமடமெனத் திகழ் - குளிர்ந்த இடமான நீர் நிறைந்த கடலைத் தோண்ட தடைப்பட்டு அழுந்தி யெழுந்திருக் கின்ற நடுப்பாகம் உயர்ந்த முதுகையுடைய ஒப்பற்ற ஆமைபோன்று விளங்கும்; துளிசிந்திய திரைபுரளுவ பிரளயத்து ஊடுருவித் துருவி - துளிகளை வீசும் அலைகள் புரளும் பிரளயம் போன்ற நீரின் மத்தியில் சென்று தேடி; சூன்முதிர் வயிறு உளையக் குழையக் கரைதோறும் கரையேறி - கருப்பம் முதிர்ந்த வயிறு பிரசவ வேதனையால் வருத்த மெலிந்து கரையிட மெல்லாம் ஏறி; அரிது தவழ்ந்து-தவழ முடியாமல் தவழ்ந்து; கைவெட்டால் தாழ்குழியாய் வெட்டியதில் சொரி முட்டைக ளிட்டதை மீட்டு நிரப்பிய வெண்புளினமென - கைவெட்டு எனும் கருவி யால் தாழ்ந்த குழியாக வெட்டியதில் சொரிந்த முட்டைகள் இட்டதை மறுபடி அக்குழிகளை நிரப்பிய வெள்ளிய மணல் போன்று. (10)

---

## பொன்னூசற்பருவம்

---

629. அண்டமுகடு அணவு கதிர் இளநிலவு எறித்த படிகக் காலின் மிசை மரகதத்தால் விட்டமிட்டு - ஆகாய உச்சியையும் தொடும் கிரணமாகிய இளைய நிலவை வீசிய படிகக் காலின்மீது மரகதக் கல்லால் உத்திரமிட்டு; தாளவடம் - முத்தினாலாகிய கயிறு; அதோ தாரை மாரியுமிழும் கொண்டலை நிகர்ப்ப-கீழ்தாரையாகப் பெய்யும் மழையை வெளிப்படுத்தும் மேகத்தை ஒத்த; நீல்நிற மணிப்பலகை - நீலநிற மான அழகிய பலகை; கொழுவி - மேன்மைபொருந்தச் செய்து;

படாம் விரித்து-ஆடையை விரித்து; மலர் பரப்பு அமளி-மலர்பரப்பின மெத்தை; உன்கோலம் இருகாலும் நிலவ - உன்னழகு இருதடவை அதிகமாக விளங்க; துண்ட வெண் தூணத்தினுள் பசுந்துளவ மால் தோன்றுவது மானும் - ஒருபிரிவான வெள்ளிய தூணில் பசுந்துளப மாலையையுடைய திருமால் தோன்றுவதை யொத்திருக்கும்; ஒன்றில் துழாய் முகில் சகோதரியெனப் பின் உதிக்கும் உன் தோற்றமும் பொருவும் - மற்றொரு பிரிவில் திருமாலின் சகோதரி யென்று பின்பு உதித்த உன் அழகை ஒத்திருக்கும்; அருண புண்டரிகம் - செந்தாமரை. (1)

630. முருகு விரி மகரந்த முடி விளைவுறு நறு முட்டி மட்டிதழ் விம்மி நாள் முகைப் பிணி முருக்கவிழும் அம்புய ஆசனம் மகுட முடி அணங்கு - வாசனை விரிந்த மகரந்தப் பொடிகள், நுனியில் விளைகின்ற தேன் முட்டி அத்தேன் பொருந்திய இதழ் விம்முதலடைந்து அன்று விட்ட அரும்பு மலரும் தாமரையை ஆசனமாகக் கொண்டுள்ள கிரீடத்தைத் தலையிற் சூடிய இலக்குமி; ஆசிரி வரும் - அவளைச் சார்ந்தவரும், ஆசிரி தம் - சார்ந்திருக்கை; ஒருநின் அருகு - ஒப்பற்ற உனது அருகாக; இளந்தென்றல் மண்டு உபைய சாமரையிரட்ட - இளைய தென்றற்காற்று நெருங்கி இரு சாமரைகளை வீச; "ஊருவசி.......... ஏந்தி நிற்ப" - ஊர்வசி, மேனகை, அரம்பை, திலோத்தமை, இந்திராணி, இரதி ஆகியோர் சிவந்த கிரண ஒளி திகழ கருப்பூர ஆலாத்தி ஏந்தி நிற்கவும்; ஆட்சி உன் சந்நிதானம் விழி கொளாது ஐயன் அதிசயித்து எனப் பிரிக்க; ஐயன் - சிவன்; பொருபுனல் அடக்குஞ் சிரக்கம்பமும் செய - மோதுகின்ற கங்கை நீரைத் தலையிலே அடக்கும் சிரத்தினால் ஆட்டி மகிழ்ச்சியைத் தெரிவிக்க. (2)

631. கயல் மீன மண்டலம் முத்து அணி படங்கு இட்ட கல்யாண பந்தர் ஏய்ப்ப - கயல் மீன்போன்ற நட்சத்திர மண்டலம் முத்தினால் அணிந்த கூரையிட்ட கல்யாண பந்தலை ஒத்திருக்க; ககன வெளி - ஆகாய வெளி; கட்டு பொன் தட்டு ஆடவே - ஒன்றின் மேலொன்றாகக் கட்டப்பட்ட அழகிய உலகத் தட்டுக்கள் ஆட; அயல் வண்ண மண்டலம் - வெளியேயுள்ள நிறம்பொருந்திய நட்சத்திர மண்டலம்; பூமண்டலாதி யந்தமும் முழுதும் ஆடும் அவள் தான் அசையாமல் அணுமுதலும் அசையாதுஎன்று பிரிக்க; ஐயம்-சந்தேகம்; முயல் வண்ண மண்டல மதிச் சடா மணி மகுட முத்தர் மனையாட்டி - களங்கமாகிய கருநிற மண்டலத்தை யுடைய சந்திரனை யணிந்த சடையாகிய அழகிய மகுடம் உள்ள சிவன் மனைவி; புயல் வண்ணம் - மேகநிறம்; துணை - சகோதரி. (3)

632. எண்ணரிய - கணக்கில்லாத; இயம்பரிய-சொல்லமுடியாத; அனந்தம் - பல; அரம்பையர் கன்னிகை-தேவப் பெண்கள்; மேனகை யோடு+யாவரும் என்று பிரிக்க; பலகை நாப்பண் நீ வீற்றிருத்தல் என்று பிரிக்க; கைக்கரித் தலைமகன் - தும்பிக்கையும் யானைத் தலையும் உடைய விநாயகன்; எணன்கு அறம் - 32-தருமம்; பல தேவப் பெண்களும் ஊர்வசி, திலோத்தமை, மேனகை முதலியவர்கள் வணங்க நீ ஊஞ்சலில் வீற்றிருப்பது நட்சத்திரக் கூட்டம் பக்கத்தில் சூழ நடுவிலிருக்கும் சந்திரனைப் போன்றிருக்க என்று பொருள் கொள்க. உதய மான் நகையின் இளமதி கடுப்ப - தோன்றுகின்ற களங்கத்தின் ஒளியினையுடைய இளைய சந்திரனை ஒத்திருக்கும்; விரகம்-ஆசை. (4)

633. அக்கரத்தால் பெரிது ரூபிகரித்தலால் அழகிய பதச்சுவட்டால் அறிவாகர்ர்க் கெலாம் வெளியாகி எளிதின் உபை அர்த்தமும் தோன்ற நின்ற இக்கவி-எழுத்துக்களால் பெரிதாயும் ருசுப் படுத்தலாலழகிய பதமாகிய அடையாளங்களால் அறிவாளர்கட்கெலாம் வெளிப்படையாகி சுலபத்தில் இரு அருத்தங்களும் தோன்ற நின்ற இப் பிள்ளைக் கவி; பொருட்கு இடம் - மதிப்புக்கு இடம்; பனுவல்-பாட்டு; பைக்கணுடைவி விடப் பாந்தளங் குழுவினைப் பாரமணி வலயமே யொப்பாக்கி-பசுமையான கண்களின் தொகுதியும் விடமுடைய பாம்பாகிய கூட்டத்தைக் கனமான மாணிக்க வலயம் போன்றாக்கி; முக்கவர் அயில்படை சுமந்து - மூன்றாகப் பிரிந்த கூர்மையான சூலாயுதத்தைத் தாங்கி; அமைதேர - அம்மை தெளிவடைதற்காக; புறத்தசைந்திட்ட குவிவாய்ப் பொக்கண விபூதி புனை முக்கணர் - உடலில் கட்டிய குவிந்த வாயையுடைய ஒருவகைப் பைதனில் உள்ள விபூதியை யணியும் சிவ பெருமான். (5)

634. கயத்தம்ப மாமகர சாகரப் பிரளயம் - ஆழமான நிலையில் பெரிய சுறாமீன்களையுடைய கடல் வெள்ளம்; கட்டமை மரக்கலம் நடுக்குழி நிறுத்தி மன் - கட்டியமைந்த கப்பலை நடுவிடத்தில் நிலைபெற நிறுத்தி; கால் ஆற்றினில் பிணித்து - தூண்களிற் கட்டி; கால் - தூண்; செயத்தம்பமென்னத் தொகும் பாய்மரத் தொகுதி யுச்சியில் சேர்ந்து - வெற்றிக் கம்பமெனச் சேரும் பாய்மரத் தொகுதி யுச்சியிற் சேர்ந்து; கைதைச் செங்கால் அனத் திரள்கள் - தாழையில் இருக்கின்ற சிவந்த கால்களையுடைய அன்னப் பட்சிகளின் கூட்டங்கள்; கயத்தம்பம்-பெரிய கம்பம்; கழை - மூங்கில்; தூய்நிறக் கஞ்சுகம் - தூய நிறத்தை யுடைய சட்டை; வேழம்பர் - கழைக் கூத்தாடிகள்; கடலில் புயல் காற்றினால் கரை ததும்ப கப்பல்களை நடுவில் நிறுத்தி நங்கூரம் பாய்ச்சு தாழையிலுள்ள சிவந்த கால்களை யுடைய அன்னத் திரள்கள்

வெற்றிக் கம்பம்போன்று சேரும் பாய்மரத் தொகுதியின் உச்சியில் சேர்ந்து கம்பம் காற்றினுல் அசையும் போதெல்லாம் சிறகுகள் விரித்து அசைப்பது பெரிய கம்பம்போன்று கயிற்றுலிதத்தொடு சுற்றிக் கட்டிய மூங்கில் மேல் நல்ல நிறச் சட்டை போர்த்துக் கழைக் கூத்தாடிகள் தங்கள் வித்தைகள் செய்வதை யொத்திருக்கும். (6)

635. கான்ற-உமிழ்ந்த; தகடுபடு மிப்பி இரையுமிழ் முத்தும் - தகடுபோன்று பொருந்திய இப்பி சப்தித்து உமிழ்ந்த முத்தும்; கழுத்தணி - கழுத்திலணியு மாபரணம்; துவைபடும் - மிதிபடும். (7)

636. சுகமாட - இன்ப மனுபவிக்க; சுகிர்தம் - நல்லறம்; ஏனையன்-எனது தலைவன் (சிவன்); எழு பனையோடு அலைகுய் வரும் இல்லாததன்றி என்று பிரிக்க; குய்-புகை; எழு பனைமரம் உயரத்துடன் அலைகள் புகைபோன்று வருவதைப் பெற்றிருத்தல் இல்லாமல்; பொல்லாத வில்லாத மந்திர நகர் - தீமையற்ற மந்திரநகர்; மற்றில்லாத தொன்றில்லை யென்பதால் அலை என்பது ஒன்றுதான் ஆங்கில்லை; மற்ற எல்லாச் சிறப்பும் ஆங்குண்டு என்க. (8)

637. கொய்சகம் - அரையில் உடுக்கும் சீலையில் கொய்துவிடும் தலைப்பு; சிரோ ரத்தினம்-நாகரத்தினம்; பணிதி - ஆபரணம்; தாராடு மேகலாபாரம் ஆட - மாலையசையும் மாதர் இடைக்கட்டு ஆட; பொன் உத்தரிகம்-பொன்னுலான உத்தரீயம் (போர்வை); தமனியம் - பொன்; வேராட - வேர்வை நீர் சொரிய; வளை - வளையல்; கைச்சரி-கைவளை; முறுவல் - புன்சிரிப்பு; அரன் - சிவன்; அரனுட வாதாடி - சிவன் நடுங்க வாதிட்டு. (9)

638. சந்நிதானம்-கோவில்; வெண்திரை செயாது என்றும் வாய் பொத்திய மகா உததித்தீர்த்தம்-வெள்ளிய அலை செய்யாமல் அடக்கிய பெரிய கடலாகிய தீர்த்தம்; சிந்துரச் சுந்தரப் பாண்டிபக் களிறு - யானைமுகமுடைய சுந்தரப் பாண்டிப் பிள்ளையார்; செந்திலான் - முருகன்; விண்டு - சொல்லி; மும்மாரி - மூன்று மழை; புரிசை - மதில். (10)

திருமந்திர நகரமாகிய தூத்துக்குடியி லெழுந்தருளியுள்ள
பாகம்பிரியாவம்மைப் பிள்ளைத்தமிழ்க்
குறிப்புரை முற்றிற்று.

# சிவானந்தன் பிள்ளைத்தமிழ்

---

### பொல்லாவிநாயகர் துதி

639. சுடரொளி விளக்காய் நிறைந்த பரிபூரணச்
சோதியா னந்தவாரி
சொல்லுக்கு மனதுக்கு மெட்டாத நித்திய
சொரூபமெய்க் கடவுளெழில்சேர்
வடவிருக் கந்தழையு நீழலி விருந்துநால்
வர்க்கருள் புரிந்தபரமர்
மகிழுற நினைந்தகில மதிலடிமை யோர்முத்தி
வழியே தொடர்ந்தருளிலே
திடமுற விளங்கவுஞ் சகளவுரு வங்கொண்ட
தேசிகத் தலைவனை
சிவானந்த ஞானச்சி ரோமணிக் கன்பினுற்
செல்வநற் றமிழ்சொல்லவே
கடகய முகத்தனை நிறைதரு வயிற்றனைக்
கையைந் தனைக்கருணைசேர்
கதியரு ளருட்டுறை பொல்லா விநாயகன்
கழலிணைப் பணிதல்செய்வாம்.

---

## காப்புப்பருவம்

---

### திருமால்

640. சீர்பூத்த பவளவுரு விற்பச்சை யொருபுறஞ்
சேர்ந்தொருமை யாய்விளங்கச்
செழும்புன விளம்பிறை பணிடவிக் கொன்றையுஞ்
செஞ்சடையில் வைத்தமுதல்வன்
பேர்பூத்த மகிதலந் தன்னிலரு ளுருவமாய்ப்
பேரருள் விளக்கவந்த

பெருமைதரு மினியமெய்ஞ் ஞானச் சிவானந்த
பெம்மான் றனைப்புரக்க
தார்பூத்த களபவிள வனமுலைக் கன்னிதாட்
டாமரைச் செல்விகேள்வன்
சருவவுயிர் கட்குந் திதித்தொழி னடாத்துந்
தயாநிதி யரன்றனக்குக்
கார்பூத்த சூகரம தாகியடி தேடியுங்
கண்ணருச் சித்துமேரு
கச்சுமந்துங் கிரிகை யைச்செய்து மன்புதவு
கருணைப் பசுங்கொண்டலே. (1)

குருலிங்கசங்கமர்

641. திருவேட மதுபுனைந் தொளிர்சா தனத்துடன்
றிருவெண்ணீ றும்புனைந்து
திகழ்தரு பதமதிற் பாதுகை யிலங்கநற்
றிருமேனி கொண்டுலகினிற்
குருவேட மாகவே வந்தருளு முத்தமன்
குறைவற்ற பரிபூரணன்
கோதின்மெய்ஞ் ஞானத்தின் மணிசிவா னந்த
கோமான் றனைப்புரக்க
உருவேட மருவேட முருவருவ வேடத்தி
லொன்றிலொப் புவமையில்லா
னுயர்தூல சூக்கும காரணமாய் விளங்குமெழி
லுண்மைநற் றன்மையுதவுந்
தருவேட மாமன்பர் காண்கி லஞ்ஞானந்
தவிர்க்குமெய்ப் பொருளிரக்கந்
தரும்பொருள் பரம்பொரு ளரும்பொருட் குருலிங்க
சங்கமப் பொருள்கடானே. (2)

வேறு

பஞ்சாட்சரமந்திரம்

642. பரிபூ ரணமே வுருவாகி
பார்மீ துறுந்தத் தாத்திரையர்
பரமா னந்த தீர்த்தருயர்
பரமா னந்த யோகியுட
னருளா னந்தன் சிவப்பிரகா
சனுஞ்சிற் சட்டை நாதனுமா

யரங்கி லடியேற் காகவரு
மருட்சி வானந் தனைக்காக்க
விரிவாஞ் சமைய மதுகடந்து
வேதாந் தத்தின் முடிவாக
விளங்கும் பொருளாய் மெய்யடியார்
வினவி லுணர்ந்து முணர்வாகிப்
பருவா தீதத் துறந்தொளிரும்
பரம ரகசிய மாமந்திரம்
பவமாம் வினைக்கோர் மருந்தான
பஞ்சாக் கரமந் திரந்தானே. (3)

சிவபெருமான்

643. மத்தமறு கும்புனல் பணத்தரவை யுஞ்சடையில்
வைத்துமகி ழும்பரமனு ரங்கறை மிடற்றரெழிலார்
மட்டுலவு மம்புய மலர்ப்பத மிலங்கிவரு
மைக்கணுமை பங்கனரு ளானந்தநட னத்தர்
ரத்தியுரி யம்பர நுதற்கண னருந்தவரவர்க் [மதமா
கருள்புரிந்து மகிழ்வாய் நின்றமுத னற்கருணை
யானற்புத நிரந்தரன் மலர்க்கணை யனங்கனை
யளித்தருளு மின்பநெடுமா லங்கமல னுக்கு
சித்தமல பந்தமதி லுற்றுமர ணஞ்செனன [மரிதான
மிக்கவள ரும்புவியி லேதங்குசக லர்க்குமருளார்
சிற்றறி வொழிந்தினிய முத்தியி லடைந்திடுக
சித்திதர வந்தருள்ஞா னந்திகழு முத்தினினி
பத்திசெயு மன்பர்கள் கருத்திலுறை யுங்கடவு [தாய்ப்
ணித்தியன் விளங்குகுரு நாதன்றமி யனுக்கெளி
பற்பல விதம்பெறு மனத்தினை யொழுங்கது [யாய்ப்
படுத்தியருடந்திடுசி வானந்த னையளித்தருளவே. (4)

உமை

644. கமலமுகினி காளி கடிமிரள்
கமலவிழி மகாசுந்தரி கோட்டினேர்
கனகவரை முகடினை கொடிகள்தரு
களபமுலை யினள்பஞ்ச வட்டாக்கரி
நிமலாய மணிசடில ரிடமதி
னிலைகொணி மலியாடம் பரிசீர்த்திசேர்
நிலவுமதி முகககெவுரி யகநெக
நெகவுமுருகு சீரன்ப ருட்டொத்துமோர்

விமலியுயர் மலையரைய னருள்சுதை
வினைகளகல வேயங்கை யைக்கூப்பியே
விதிதிகிரி கரனமரர் முனிபர
வியபயி ரவிபாதந் தனைப்போற்றுவா
மெமதுமன மதிலுவகை தருவரு
ளினியவுரு வமாய்வந்த மெய்க்கீர்த்தியா
னிலகுமக மணிதகைகொள் குருமணி
யிறைவனெழில் சிவானந்த னைக்காக்கவே. (5)

## கணபதி

645. பார்தங்கிய வன்பர் மனத்தினி
லேதங்கிய வெம்பிற வித்துயர்
பாசங்க டவிர்ந்தொளி யுற்றமெய்
நேசந்தரு மின்பரு ளொக்குமு
பாயங்கொள வன்புவி மித்துறு
காயந்தனி லும்பரி சித்ததி
பாகின்றரு பண்சொ லுரைத்தினி
தாகும்பொருள் சிந்தைநி னைத்தெழில்
சீர்தங்கிய வம்பரன் மெய்த்தவ
நூலுந்தர லங்கமி ருக்குமி
யோகம் புரிகின்ற வவுத்திரி
சேரிந்த விதங்களி யத்துப
தேசஞ்செய வந்தம கத்துவ
ஞானந் திறமென் றறிவித்திடு
தேனின்சுவை யின்பமி குத்தசி
வானந்தனை யென்றும ளித்திட
வார்தங்கிய கொங்கைம தத்தெழு
சூர்மங்கை யிடந்தனில் வைத்தம
ணுளன்றளி ரைந்துக ரத்தினர்
மாதம்பிகை மைந்த னிருத்தனை
மாகம்புவி யென்று துதித்தினி
தாயம்பு வலம்புரி யக்கர
மாவின்கனி கொண்ட மகிழ்ச்சியன்
மேரின்புற மெங்குமெ ழுத்தெழுத்
தேர்தங்கிய கொம்புமி கக்கனி
பாசம்புனை யங்குச முற்றக
ணேசந்திகழ் தொந்திவ யிற்றினர்
பாதந்தொழு மன்பர கத்தினி

லேதங்க ளகன்றிட நற்றய
வாகும்படி நின்றிடு மூக்கண
ணீதிங்கு மியம்புத லொப்பறு
நாதன்றெரு டந்தி முகத்தனே. (6)

முருகன்

646. பன்னகம் புனைகையாற் பன்னகம் புனைகையாற்
பதமலரி டாமல்செய்தேன்
பத்தியி லகந்தனிற் பத்தியி லகந்தனிற்
பலகேள்வி யாலுளைந்தே
னென்னகண் டிதமாகு மென்னகண் டிதமாகு
மிறைசுகந் தன்னைநாட
வேழையின் மேலருளை யேழையின் மேலருள்
சிவானந் தனைப்புரக்க
பொன்னகை யுருக்கதிகொள் பொன்னகை யுருக்கதி
புகழ்மருகன் மஞ்ஞையூர்தி [கொள்
போதங் கடந்தவன் போதங் கடந்தவன்
புனிதமெய்ஞ் ஞானனடியார்
தென்னகந் தனிலுறுந் தென்னகந் தனிலுறுஞ்
சிறக்குறு முனிக்காரியன்
சேவற்கொடிக்கிறைவர் சேவற்கொடிக்கிறைவர்
தேவர்சே னைக்கதிபனே. (7)

சட்டைநாதப்பெருமான்

647. விரித்தசடையும் நுதல்விழியும்
விழிக ளிரண்டு மணிக்குழையு
மிளிர கோர வியலுமெழின்
மேனிச் சிவப்பும் பசுங்கவசந்
தரித்த வடிவும் புரிநூலும்
தலைமா லிகையும் திருவாணத்
தகையுங் கதைச்சின் மயக்கரமுந்
தரும்பொற் சிறுகிண் கிணியுடனே
யரற்றும் வீர கிண்கிணியும்
மரவத் தரைநாண் குஞ்சிதத்தோ
டமரும் பதத்தோன் சீர்காழிக்
கதிபன் றனையே மிகப்பணிவாந்
திருத்த மணியாந் திருவருளின்
வடிவாய்த் திகழும் குணமலையைத்
தேர்ந்த ஞானச்சி வானந்தத்
திறனைப் பரிவாய்ப் புரக்கவென்றே. (8)

சரசுவதி

648. பவளக் கனிவாய் மலர்விழியும்
பதுமமுகமும் பிறைச்சடையும்
பணிலக் களமும் கழைத்தோளும்
படிக மணிபோன் றக்கரமும்
கவுளக் கயக்கோட் டிளமுலையுங்
கதிர்வெண் கலையுந் துடியிடையுங்
கமலப் பதமுஞ் சசியொளிசேர்
கருணைக் கடலாந் திருவுருவாய்
தவளக் கமலந் தனின்மிகவீற்
றிருக்கும் வடிவைச் சதுமுகத்தோன்
றன்கா தலியைச் சகலகலைக்
குரிய கலைவா ணியைப்பணிவாந்
திவளக் கதியாந் திருவருளி
லணுக்க ளுவந்தின் புறவுருவாஞ்
சிவானந் தனைநா டொறும்போற்றல்
செய்யும் பனுவற் றழைத்திடவே. (9)

அடியார்கள்

649. திருவா சகக்கடவு ளப்பர்சம் பந்தரும்
திருநா வலஞ்சுந்தரர்
திருமூலர் பட்டணத் திறைவருங் கடுவெளிச்
சித்தர்சித் தம்பலவருந்
தருவாச மாரருட் டுறைமேவு மெய்கண்ட
தம்பிரா னருணந்தியுந்
தகையுமா பதியுநக் கீரர்சிவ வாக்கியர்
தயவுகண் ணுடையவள்ளல்
மருவாச கங்கடந் தொளிர்தருங் குகைநமசி
வாயர்கண் ணப்பனருளே
மருவுவள் ளுவர்துங்க வவ்வையிவர் முதலாக
வருமுயர் மகத்தோர்களே
யுருவாச மினிவரா மற்காக்க வன்பருக்
கோருருவ மாகவந்த
வுத்தமனை யானந்த நித்தியசி வானந்த
வுண்மையை யளித்தருளவே. (10)

## செங்கீரைப் பருவம்

---

650. திருநுதலில் வெண்பொடி பரந்தாட நற்கருணை
சேர்விழியி லமுதமாட
திகழ்தருங் குழையுடன் பவளவா யினிலுதவு
திருமந்த காசமாட
மருமமதி லணியலா பரணமுஞ் சிவன்விழியின்
மணிகடா வடமுமாட
மருவுசிறு கிண்கிணி கலீரெனவு மொலிகொண்டு
வளமைதரு மரையிலாட
அருணவம் புயமதனி லினியகர தலமதனி
லஞ்சலு டன்வரதமாட
வடியர்பர வுஞ்சரண மீதிற் சதங்கையுடன்
அம்பொற் சிலம்புமாடத்
தெருளவரு மடிமையர்கண் மனதுவகை யாடவே
செங்கீரை யாடியருளே
சிவானந்த நாதாத வானந்த நீதனே
செங்கீரை யாடியருளே. (1)

651. பலவிதமும் நோய்கொண்ட வெளியனுக் கஃதறப்
பரிவா யெழுந்துவந்து
பக்குவத் துடனழைத் துயர்மூன்று நாடியும்
பாத்திரண் டையுமடக்கி
யிலகுமொரு நாடியி னிறுத்திவிழி நோக்கியிங்
கிந்நோய்க டீர்க்கலாமென்
றேந்துகைப் பையவிழ்த் தினியவெண் பொடியவிழ்த
மீந்துகர மிட்டிதற்கு
நிலையுறும் பத்தியந் தனதுபா தோதக
நிவேத்திய மதன்றிவேறும்
நியமமா காதுந்த னுறுதியெந் தன்வழியில்
நில்லென்று வினைகடீர்க்கத்
திலதமா யொருவயித் தியனாக வந்தவன்
செங்கீரை யாடியருளே
சிவானந்த நாதாத வானந்த நீதனே
செங்கீரை யாடியருளே. (2)

652. பாசமெனு மடவியி னுழைந்தொருமை யின்றியப்
பஞ்சவிந் திரியவேடர்
பக்கமதின் மருவுமென் னைப்பிரித் தாளப்
பரிந்துவகை யாகயினிதா
யோசைநுக ருங்குழைக் கின்பமரு வச்சிவ
னுண்மைமொழி பேசவாயு
முடலமது புளகமுற வினியபரி சனையுதவு
மொளிமலர்க் கரமிரண்டு
மாசறுங் கட்புனல் காண்டல்கொண் டின்பமுற
வாய்த்தசங் கமவேடமும்
வாய்க்குணர்வு தீர்த்தப்பிர சாதமும் நாசிக்கு
வாசமர விந்தபதமாய்த்
தேசுலவு முழைகாட்டி யுழையைப் பிடிப்பதாய்த்
தேசிகத் திருமேனியாஞ்
சிவானந்த நாதாத வானந்த நீதனே
செங்கீரை யாடியருளே. (3)

653. அருளாள னுகியே விளைவுசெய வேயுவக்
தசுத்தமில் லாதவிடமா
மாருர் நிலத்தினி லுன்னியுழ வைப்புரிந்
தறிவுதனை யேவிதைத்து
மருளான விருமாயை கன்மந் திரோதமிருண்
மருவியச் சிற்றறிவெனும்
வகைகொளுங் களையைப் பிடுங்கி யப்பயிர்தன்னை
வாடாம லேவளர்த்து
பருவமுற் றிலகவுந் தனதெனக் கிருபையாய்ப்
பார்த்துநன் ருய்விளக்கிப்
பலன்றருவ தென்றெனப் பகர்வுகொண் டுள்ளம்
பழுத்தபின் பதனையினிதாய்த்
தெரிவரிய பெருவீடு சேர்க்கின்ற வல்லவா
செங்கீரை யாடியருளே
சிவானந்த நாதாத வானந்த நீதனே
செங்கீரை யாடியருளே. (4)

654. உலகதனி லுயிரினம வத்தையது தீர்ந்திட
வுதித்துதைய மாகவந்து
மொளியுணர் வரியதா மிருடனை விலக்குமோ
ருண்மையாய்ப் புன்மையான

பலவொளியின் மிகுதியை விழுங்கி யெங்கெங்கும்
பரந்தப்பிர காசமாகிப்
பகலிரவு மின்றியச் சுடரதாய்ச் செங்கதிர்
பரப்பிவரு மேனியாகி
அலகிலுயிர் கட்குவித மகிதமுங் காயு
மருணன்றன் வலவணுகி
யந்தரத் தினினின் றிழிந்துமன முருகுவா
ரம்புயம் பூரிக்கவுந்
திலதமென வருபருதி யெனவருந் தேசிகன்
செங்கீரை யாடியருளே
சிவானந்த நாதாத வானந்த நீதனே
செங்கீரை யாடியருளே. (5)

வேறு

655. திணைநீர் நல்வளி வெளியா யொலியுணர்
செவிதோல் விழியாகிச்
சிங்குவை யுடனு கியுமா யொலிபரி
சமுமுரு வாயிரத
மணமது வாய்வாக் கடியுங் கரமும்
வருபா யுருகுதமாய்
மனமும் புத்தியு மாங்கா ரத்துடன்
மகிழ்சித் தமுமாகி
யிணைதரு முக்கா லமதாய் நியதியு
மெழில்கலை வித்தையுமா
யிராகம் புருடனு மாயையு மாயீ
தேழும தாயடிமைக்
கணிதரு மலரடி தருமிறை வாநீ
யாடுக செங்கீரை
யானந்த மானசி வானந்த தேவே
யாடுக செங்கீரை. (6)

656. தவமிகு சிவதத் துவமாய்ப் பிரேரந்
தனையுத வாதாகித்
தகமைய தாயா ருறுந்தொழில்கொண்
டசையத் தாரகமாய்
நவவடி வாய்த்தனு கரணபு வனபோ
கமுமது நல்கியதாய்
நல்வினை தீவினை யுளதாய் தன்னால்
நானு பேதமுமாய்ப்

பவமறுத் துதவு முடிவாய்க் கேவல
பான்மைய தாய்நிலையாய்ப்
பகர்தரு மிலகு திரோதா யிக்கிரு
பையதா யருள்வடிவா
யவநிதி யறவருந் தவநிதி யேயென்னை
யாளும் மெய்வடிவே
யானந்த மானசி வானந்த தேவே
யாடுக செங்கீரை. (7)

657. மருவி யருட்கே வலமதி னிலைபெறு
முயிர்தனுக் காதரவே
வரச்செயு மிச்சா சத்திய தாயிருண்
மலமது நீங்கிடவே
தருமிகு கிரியா சத்திய தாயிரு
டன்னை யகன்றறிவின்
றன்மை யெனச்செயு ஞான சத்திய
தாய்நல் லறிவாகிப்
பரவறி வும்பா சத்த றிவுமில்
லாநிலை யுயிரறியப்
பரையா கிப்பர தரிசன மாய்ப்பர
யோகம் போகமதா
யருளா யருணிலை தருமென் னிறையே
யாடுக செங்கீரை
யானந் தமானசி வானந்த தேவே
யாடுக செங்கீரை. (8)

வேறு

658. ஓதும்பு ராணங்க ளோர்தேன் மன்பர் தந்தேடே
னேரன்பர் பாறங்கி யோரே னந்தோ வந்தோலே
யேதுஞ்? செ யேனென்று மேயா னிங்கே வந்தோனே
யீதங்கின் மேனின்ற வாழ்வீ தென்றே யன்பாக
பாதங்க ளேதந்து நீதா னஞ்சே லென்றானே
பாரிங்க ணேவந்து ரூபாய் நின்றே கொண் [டானே
வேதங்க ளீறின்க ணுவா ரன்பே யின்பாக
மேவுஞ்சி வானந்த நாதா செங்கோ செங்கீரை. (9)

659. பேருங்க ணூரின்றி யானே யென்பா லின்பாகி
பேருங்க ணூர்கொண்டு தானே வந்தான்முன்பாக
பேரின்ப மாயெங்கு மாயே கண்டே கொண்டேனே
பேதங்க டானென்று மாகா தென்றே யுண்டேனே
சேருந்த வானந்தர் மேலா யென்பா லன்பாகி
தேனின்ப னேயுந்த னூலே யன்றோ வெங்கோவே
யாருந்தொ ழாநின்ற பாதா செங்கோ செங்கீரை
யாவுஞ்சி வானந்த நாதா செங்கோ செங்கீரை. (10)

## தாலப்பருவம்

660. முதலா கியவா தாரமெனு
மூலாதார வீடதனில்
மூதோங் காரக் கால்நிறுத்தி
மூன்று கோணந் தொட்டிலதா
யதினு லிதழக் காணுங்கு
மமைத்தே யிடைபிங் கலையதனை
யசையக் கயிறாய் மிகத்தூக்கி
யானை முகவன் வல்லபையுஞ்
சதிராஞ் சுவாதிட் டானமதிற்
சதுர்கோ ணப்பொன் னிறமாறு
தளமா றெழுத்தும் நகாரத்திற்
சதுமா முகன்வா ணியும்பாடப்
பதியாய் விளங்கி யாங்குறையும்
பரிபூ ரணனே தாலேலோ
பகர்வுக் கரியசி வானந்த
பரனே தாலோ தாலேலோ. (1)

661. மணிபூ ரகத்திற் றவளநிற
மதியின் பாதி கோணமதில்
வளரு மிதழீ ரைந்துமிக
மருவு மெழுத்தீ ரைந்தினிதா
யணிசேர் மகரத் தினில்விளங்கு
மரியு மலர்மா துவுங்கூட

வப்பாற் றிகழ்ந்தவ னாகதத்தி
லமைந்த மூன்று கோணமதிற்
றணலாம் புகழ்பன் னிரண்டிதழுஞ்
சார்ந்த பனிரெண் டெழுத்துமதிற்
றகமைக் சிகரத் துருத்திரனுந்
தண்டா மரைத்தா ளுருத்திரையும்
குணமாம் புகழ்தா லுரைபாடக்
குலவுங் கருணைக் கடலமுதே
குருமா மணியேசி வானந்த
கோவே தாலோ தாலேலோ. (2)

662. நீல நிறமாம் விசுத்தியினி
னிகழு மாறு கோணமதில்
நிறைந்த பதினு றிதழதனி
னிற்கு மெழுத்தெண் ணிரண்டாகி
மேலின் மருவும்வ காரத்தின்
மேவும் கருணைப் பதியான
மிக்கம யேசன்ம னோன்மணியும்
விருப்ப மிசைந்தே தால்பாடத்
தூல மகன்ற வாக்கினையிற்
றூம நிறமாம் வட்டமதிற்
றுகடீ ரெழுத்தோர் மூன்றதனிற்
றுலங்கிய கர்த்த னுக்கிரக
வேலை நடத்துஞ் சதாசிவனு
மின்னூர் பரையுந் தனிவாழ்த்த
விளங்கும் பொருளேசி வானந்த
விமலா தாலோ தாலேலோ. (3)

663. பொறியும் புலனுங் கறங்கெனச்சூழ்
புரியுங் கரணங் குணங்களுடன்
புகழ்சேர் விந்து நாதமுமைம்
பூதா திகளோ டிவையாகு
நெறியா தார மதுகடந்த
நிலவு மதிமண் டலந்தனிலே
நின்ற வமுதந் தனைத்தேக்கி
நிறையா யிரத்தெட் டருங்கமலத்
துறைவாய் மகிழ்ந்து விளையாட
வுயர்சேர் பரனை விந்து

முரையா துரைக்குந் தால்பாட
வொன்ரு யிரண்டாய் மூன்ருடித்
திறமா யிருபத் தஞ்சாடித்
திகழு முப்பத்தஞ் சாடியிதைத்
தேர்ந்தே யாடூஞ்சி வானந்த
தேவே தாலோ தாலேலோ. (4)

664. தந்தை யனையாய் வந்துசிவ
சட்டை நாதக் குருபரன்ருன்
தத்தாத் திரையர் திருவருட்சந்
ததியை விளக்க வென்னருளில்
வந்த வருமைக் கொழுந்தேமெய்
வளர்கண் மணியே யாதார
மருவுஞ் செல்வ முனக்கேனே
மகிழ்சேர் செல்வ மிருக்கவென்றே
சிந்தை மகிழ விழிதுலக்கித்
திகழா னந்த வெள்ளமதிற்
சேர முழுக்கிட் டின்பமழைத்
தேக்கிச் சுகமாய்ச் சுகவடிவுக்
கந்த மதில்தா லாட்டல்செய்யு
மதீதப் பொருளே தாலேலோ
வடிமைக் கிரங்கி வந்தசிவா
னந்தா தாலோ தாலேலோ. (5)

வேறு

665. அகமா மணியே யெந்தைப் பதியே யேகா னேகா
வருமா மறைதே டுஞ்சிற் பரனே நாதா போதா
ககன திகளியா வுஞ்சுத் தமதீ றேவாழ் வோனே
கருண கரனே யந்தக் கதிகா ணர்கா ணதார்
சுகவா ரியினீ றின்கட் பெற்றுய் தாதா வாயோர்
துணையாய் வருமா னந்தப் பொருளே மாதே வாநீ
தகவே யெனையா ளும்பொற் பதனே ஞான வோதா
தவமா னசிவா னந்தக் கடல்தா லோதா லேலோ. (6)

666. குழையோ டமரா குங்கட் கடையா மோரார் வாரூர்
குடமா கியவீர் கொங்கைப் புனமா ஞர்மா லாலே
விழைவாய் வெகுநா ளங்குற் றதில்வீ ழுய்வீழ் வேனே
மிகவே தயவா யிந்தப் புவிமீ தேயா சாஞ
யெழுமான் விழிபோ னின்றப் படிபார் பார்வா வாநீ
யெனவே யெனையா ளுந்தற் பரதே வாகோ மானே
தழையார் நிழலா லின்பக் கலிரு னேதா ஞய்மா
தவமா னசிவா னந்தக் கடல்தா லோதா லேலோ. (7)

667. வினையால் வெகுதே கம்பே தத்தி ஞல்மா மாயா
மிளிரா னவிஞே தம்பத் திமெய்யா காபூ வாழ்வோ
சனையா லிருடான் முந்தத் தடுமா ருமான் மாவாய்ச்
சகமீ திலனே கந்தத் தினிரு னேயா வேனே
நினையா நினைவா லந்தத் துயர்நீ ளாகா தாயோர்
நிலையா கியபே ரின்பத் துறைநீ டாம்வீ டார்சீர்
தனைநா யெளியே னும்பெற் றிடவே தாஞள் வோனே
தவமா னசிவா னந்தக் கடல்தா லோதா லேலோ. (8)

வேறு

668. சித்திப் பொருளே முத்தர் மனத்தினு
டித்திக்குங் கனியே
தேனே ஞாஞ தீதக் கதியே
திவ்விய வற்புதமே
முத்திக் கரசே மெய்த்தவ மேமுழு
முதலே நிர்மலமே
மூதறி வான மகத்துவ மேமுடி
யாத நிரந்தரமே
பத்திக் கடலா கியவித் தகனே
பசுபதியே நிதியே
பந்த மறுத்தெனை யாளு மகண்ட
பரஞ்சுட ரேமலையே
புத்திக் கமுதே நித்திய மேபரி
பூரண தாலேலோ
பொற்பத ஞன சிவானந் தாசிவ
போகா தாலேலோ. (9)

669. என்னைத் தானுட் கொள்ள நினைத்திடு
மிதையா தாலேலோ
வென்னைப் போலரு ளுருவாய் வருமிங்
கிதனே தாலேலோ
வென்னை மயக்கிய மாயை யகற்றிடு
மிறைவா தாலேலோ
வென்னைச் சுழல்புரி வினையை யொழித்திடு
மினிதா தாலேலோ
என்னைப் போல்வரு மிருளை விலக்கு
மிரவியே தாலேலோ
வென்னைத் துல்லிய மாக விளக்கிடு
மெந்தாய் தாலேலோ
வென்னைப் போலரு டன்னை யளித்திடு
மின்பே தாலேலோ
வென்னைத் தானெனு மெங்கள் சிவானந்
தேசா தாலேலோ. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

670. கன்மம் பொசிப்பிக்கும் நால்வகை யோனியிற்
கருவென வனுதிகொண்டு
கருதரிய வெழுவகைத் தோற்றமாய்ச் சகளநிட்
களமெனும னேகவுருவாய்
வன்மமு வஞ்சனைகண் மீறியும் புலையாதி
மாபாத கங்கள்செய்து
வளர்நன்மை யுஞ்சிலது செய்துமொரு நன்மையால்
வருமரியதா மானிடச்

சென்மமது வாயதின் மூடர்சில துஞ்செம்மை
சிலதுமதி லூழிகாலஞ்
சிவபுண்ணி யங்களைச் செய்துநல் லன்புறுந்
தேகமென வருமன்பரைத்
தன்மைபெற வாவென் றழைக்கின்ற கைகளாற்
சப்பாணி கொட்டியருளே
தானந்த மாகியசி வானந்த நாதனே
சப்பாணி கொட்டியருளே. (1)

671. பரவிநுகர் சரகமென வருகின்ற வாபாச
பலவழியி னின்றமனதைப்
பார்த்துநன் மார்க்கமாய் நிற்கவருள் செய்துநற்
பருவமென வாக்கியேயிங்
கிருமென விருத்திவளர் சமையதீட் சைகள்செய்
திருக்கின்ற யோகவகையை
யின்னபடி யின்னதா மித்தகைமை யாகவிரு
மென்றுகாண் பித்துமிகவாம்
விரிவுதனை நீங்கியே மனதுகுவி யத்தகும்
மெய்ம்மையாஞ் சாக்கிரத்தின்
மெலிந்த நிலைதனி னேக்காமல் நோக்கென்று
மெய்ஞ்ஞான மாகும்வழியைத்
தருசமக் குறிதனைக் காட்டிடுங் கைகளாற்
சப்பாணி கொட்டியருளே
தானந்த மாகியசி வானந்த நாதனே
சப்பாணி கொட்டியருளே. (2)

672. திகழ்தருங் கயிலாய பூதரந் தன்னிற்
செழித்தகல் லாலநிழற்கீழ்
தெட்சணா மூர்த்தமாய் நின்றருளி யாங்குற்ற
செப்பரிய மாதவத்தோர்
புகழ்தருஞ் சனகர்முதல் நால்வர்க்கு மருளினைப்
புகட்டியா கமநெறியினைப்
போதித்து மேலான வீடுதவு சிவஞான
போதமன் றருள்செய்யவே
மகிழ்தருந் தொண்டுசெய் தளவற்ற பேரின்ப
வாரிபெறு மாங்கவர்க்கு
மாசற்ற முத்தியின் பெருமையைக் காண்கவே
வாக்கிறந் ததுவொன்றுதான்

றகவுமுத் திரைகொண்ட சின்மயக் கைகளாற்
சப்பாணி கொட்டியருளே
தானந்த மாகியசி வானந்த நாதனே
சப்பாணி கொட்டியருளே. (3)

673. வருகின்ற வாறுசமை யங்கணெறி முற்றிலும்
மறுத்தே பகுத்தநன்னூன்
மருவியிடு முட்சமைய வேதாந்த நிலேதனை
வாதித்து வென்றநன்னூ
லிருள்கின்ற மலமாயை மாமாயை கன்மமுயி
ரேட்ணே வகுத்துச்சொன்னூ
லெழில்மந்தி ரம்பத மெழுத்தும் புறந்தத்து
வங்கலை யிதாறினப்பா
லொருகின்ற பரவசஞ் செய்விக்கு ஞானநூ
லுயர்பெருமை கொண்டமுன்னூ
லுணர்கின்ற வனுபோக சாட்சியா யன்பருக்
குண்மையைத் தேர்ந்துதெளியத்
தருகின்ற சிவஞான போதநூ லுறுகையால்
சப்பாணி கொட்டியருளே
தானந்த மாகியசி வானந்த நாதனே
சப்பாணி கொட்டியருளே. (4)

674. அவ்ஞான் மதுதீரும் வறுமைபல நீங்கியே
அஷ்டபாக் கியமுநல்கு
மாயுளா ரோக்கியமும் புத்திர சம்பத்துட
னளவிலா வாழ்வுந்தரும்
பவஞான மதினிலினி வாராம லேகிருபை
பாலிக்கும் மெய்ஞ்ஞானமாம்
பகர்வரிய குருலிங்க சங்கமந் தனிலினிய
பத்தியாம் புத்தியுண்டாம்
சிவஞான சித்திதரு மிகுவின்ப மாகியே
சிவயோக மாகுமென்றே
தேடிவரு மன்பருக் காசீர் வதித்துமணி
திகழுமிரு முத்திரையினுற்
றவஞான மானவெண் ணீறளித் திடுகையாற்
சப்பாணி கொட்டியருளே
தானந்த மாகியசி வானந்த நாதனே
சப்பாணி கொட்டியருளே. (5)

வேறு

675. மனமய மதனிற் பிறிவர விருண்மா
மலவாணம் பொலிய
மட்டறு சஞ்சித மாருத மதனல்
வருவினை யலைவீச
வினமுறு மாயையி னுரைசெய வலமந்
தெழுந்து மயக்குறவு
மிகவுறு மும்மல வயமா யுள்ள
வியற்கை யறிந்திலதா
யெனதெனு மென்கை யென்கா லென்று
மிருந்தே னறிவின்றி
யின்ப மிகுத்தசி வந்தனில் வந்தெளி
யேனை மிகத்தெருளி
குனிபுரு வக்கரை நடுவினில் நின்றே
கோதிற் றெளிவுதருங்
குருமணி யானசி வானந்த நாதா
கொட்டுக சப்பாணி. (6)

676. ஆகமி தென்று மூயிரிது வென்று
மருளிது தானென்று
மறியவு மறியா மையையுடை யேனுக்
கருடிக முப்பெறவே
யாகம் புரியக் கல்லு மிரும்பு
மெழுக்கணை யதுபோல
வரம்பையில் விறகிற் கரியிற் பஞ்சினி
லனலேற் றிடுநெறியாய்
மாகதி தரவரு பருவ மதாகிய
மந்தமு மந்ததர
மகிழ்தீ விரதீ விரதர மெனுநால்
வகைசத் தினியீறிற்
கோக னகப்பத மேதரு முதல்வா
கொட்டுக சப்பாணி
குருமணி யானசி வானந்த நாதா
கொட்டுக சப்பாணி. (7)

677. ஒன்றென நின்றது வேபொரு ளாமென
வுணர்தரு நெஞ்சரையவ்
வொன்றிற் பகர்வுசெய் திறையிது வென்று
மூயிரிது தானென்று

மொன்றை யறிந்திலெ நின்றனை பாசத்
தொருமைய தாய்முதலாய்
யொன்று மிரண்டும தன்றி யுணர்த்திடு
முட்பொரு ணித்தியமாய்
நின்றிடு பொருளா முகமை யெழுத்துக்
கவ்வுயிர் நிறைவதுபோ
னின்மல மதனிற் றெளிவுற வுதவிய
நிதியே மகிழ்செல்வக்
குன்றென வருமெய்த் தவனே பரனே
கொட்டுக சப்பாணி
குருமணி யானசி வானந்த நாதா
கொட்டுக சப்பாணி. (8)

வேறு

678. மாதவ மார்கின்ற மேலோர் பக்கலி லொக்காமன்
மாமய லேகொண்ட மானுர் மைக்கண் மருட்காகி
சாதியி லேநின்று மாகா தக்குழு வுக்கான
சாதக னுய்வந்த நாயே னுக்கு விருப்பாகி
பூதல மேவந்து காணு துற்ற வருட்சார
போகம தேதந்து தானே சித்தி யளித்தேதல்
லாதர வாய்நின்ற தேவா முத்தியின் வித்தான
வாதி சிவானந்த நாதா கொட்டுக சப்பாணி. (9)

679. பூரண னேயென்று நாவா ரச்சொ லுரைப்பார்கள்
போத மதாமன் பின்மீதே மிக்க வுரித்தான
காரண மாய்நின்று தானே யுட்கு ளுதித்தாளி
காவல னேயுந்த னுளா யொத்த மகத்தோர்கள்
சீருணர் வேயின்ப மேமா நித்திய பொருட்டான
தேசிக னேயெந் தையேதீ தற்றிடு கற்றுவே
யாரண னுர்விண்டு காணு துற்ற வருட்டேவ
வாதி சிவானந்த நாதா கொட்டுக சப்பாணி. (10)

## முத்தப்பருவம்

680. உருவா யருவா யுருவருவா
யொன்று மிலாத பரஞ்சோதி
யுலகந் தனில்வந் தருள்ஞான
ஒளிவா ளேந்தி யடியவரை
யிருளார்ந் திருக்கு மருட்காட்டை
யழித்துக் கழிப்பித் திருவினையி
னிணைந்தே மேடு பள்ளமதை
நிரவி யினிமேன் முளையாமல்
விரையா கியசஞ் சிதமதனைத்
தகித்துத் திறந்த வெளியாக்கி
விளங்கித் திகழ்ந்த சிவபுரத்தின்
மிகவீற் றிருக்கக் குடியேற்று
மருவே மருவி னுள்ளமுதே
மணிவாய் முத்தந் தருகவே
மன்னே ஞானச்சி வானந்த
மணியே முத்தந் தருகவே. (1)

681. பவவா ருதியில் விழுந்துமருட்
படமா ருதத்தாற் கலக்குண்டு
பகர்நல் வினைதீ வினையலையி
னெறியாற் பட்டு மொத்துண்டு
மவமாஞ் செனன மரணமெனும்
பிசலான் மிகவும் மலைவாகி
யாசை மடுவ தனின்மூழ்கி
யழகாம் மாதர் புணர்ச்சுழலாற்
றவமே தின்றிப் பற்றின்றித்
தயங்கு மெளியே னுய்யுமதாய்
தயவு மிகுந்தே யஞ்செழுத்தாந்
தப்ப முதவிக் கரையேற்றும்
மவுன தீதத் தனிப்பொருளே
மணிவாய் முத்தந் தருகவே
மன்னே ஞானச்சி வானந்த
மணியே முத்தந் தருகவே. (2)

682. நிட்டை யிருந்து மாணுக்க
னனுபோ கத்தில் நேருறையும்
நித்திய மான பொருளதனை
நிலைக்க நிறுத்தி யதற்கொவ்வ
திட்டாந் திரங்க ளந்தந்த
நிலைக டனக்குத் திறமாகத்
தெளிவா யெடுத்து மிகக்காட்டித்
திடமே யுறவே முன்னோர்கள்
கட்டா யுரைத்த நன்னூலிற்
கட்டற் றிருக்கும் பொருட்காட்சி
காட்டச் சுருதி முதன்மூன்றுங்
கரியே படுத்திக் கருதுகின்ற
மட்டார் மலரின் பவளவொளிர்
மணிவாய் முத்தந் தருகவே
மன்னே ஞானச்சி வானந்த
மணியே முத்தந் தருகவே. (3)

683. மறைவா யிருளும் பாகமதாய்
மருள்வல் வினையுஞ் சரியொப்பாய்
மந்த முதன்மூன் றினுக்குமப்பால்
வருசத் தினிபா தத்தினிலை
நெறியாய் வரவே வழிபடுத்தி
நேச மறிந்து நேசமதாய்
நின்ற பருவந் தனைநோக்கித்
திரோதந் திரும்ப நீர்காட்டுங்
குறியி லிருந்தே யவநோக்கிக்
குறித்த நிலையில் வரும்பொருளைக்
கூற வினிதா யதைவினவிக்
கோதிற் பொருண்மெய்ப் பொருளென்றே
திறமாய்த் தெரிய வெடுத்துரைக்குந்
திருவாய் முத்தந் தருகவே
தெள்ளா ரமுதச் சிவானந்தத்
தேவே முத்தந் தருகவே. (4)

684. செம்புக் கிசைந்த உயிர்க்குடிலைக்
களிம்புக் கிசைந்த விருளதனைத்
திகழப் புளிநேர் பல்குருவாற்
செப்பு முரைகேட் டுவகையதாய்

நம்பி விளக்க விளக்கவொளி
நணுகும் ஞாங்கர் போன்மறையு
ஞான மீதன் றெனத்தேறி
நாடி யுனையே யடைந்தவர்க்குத்
தெம்பு மருவக் கிருபையினல்
துல்லிய மாக்கித் திருவாக்காந்
திவ்விய வேதி யீந்திரண்டுங்
கழித்துத் திகழ்ந்த பொருளென்றே
யம்பொன் னுன வருளாக்கு
மையா முத்தந் தருகவே
வடிமைக் கிரங்குஞ் சிவானந்த
வமுதே முத்தந் தருகவே. (5)

வேறு

685. கன்னர்முத் தந்தனிமை மாதருக் காகாது
கந்தர்ப்பன் வில்லங்கமாங்
கதலிமுத் தம்புகல வினிதுறைப் படைகொண்டு
கடிதருங் குலைகளுண்டாம்
பன்னகந் தருமுத்த மாலத்தி லுறைதலால்
பழுத்தின் றலைவலித்தல்
பங்கையவெண் முத்தமது சேறடைந் திடுதலாற்
பகையாது மிறவலதுகாண்
சென்னெலின் கதிரின்வரு முத்தமது பொற்களஞ்
செய்யுந் தலைக்குனித்தல்
தெரிவையர்க் களமதி லுதித்தமுத் தம்புணர்வு
செய்திடுங் கொடியதாகு
மன்னநின் முத்தந் தனக்கு நிகராகுமோ
மணிவாயின் முத்தமருளே
மாசற்ற சோதிச்சி வானந்த நாதனே
மணிவாயின் முத்தமருளே. (6)

686. புணரிதனில் வருமுத்த மலையுய்த் திடுந்திறம்
போதாது நிலையில்லைகாண்
பூர்ணசந் திரனருண் முத்தங் களங்கமது
பூதியம் விருத்தமாகுங்
கணுவினைந் திடுபசுங் கழையுதவு முத்தமது
காண்கின்ற சாரமில்லை

கார்முத்த மதுசிந்தி விடுமே லிடித்திடுங்
கயமணிமத் தத்திருக்கும்
பணிலமுமுழ் முத்தமது தசையிலுறு மீதன்றிப்
பங்கமுங் கூனதாகும்
பாணியத் துறுகயலின் முத்தமது நன்றன்று
பார்க்கில் புலாலென்பர்காண்
மணிகளிது நன்றன்று நன்ருகு முனதுதிரு
மணிவாயின் முத்தமருளே
மாசற்ற சோதிச்சி வானந்த நாதனே
மணிவாயின் முத்தமருளே. (7)

687. பாவையர்ப் புணர்வுகொண் டின்பந் தணப்பெறுதல்
பஞ்சவிந் திரியநீங்கல்
பகர்ந்துமுக் குணமதை யடக்கலிரு வகையெனப்
பரவிவரு வினைகள்கெடுதன்
மேவவிரு டருகின்ற மலமறுத லினிதான
விக்கிரக நித்தமுடனே
விவேகந் தனைப்பெறுத லுயிர்கெடுத லெட்டென
விளக்குநற் சித்திபெறுத
லாவலசை வத்துறுதி பாடாண மாகலீ
தையிரண் டானமுத்தி
யதுபழிப் புறுமுத்தி யென்றுமுன் னோர்மொழிவ
ராகையா லதுவிரும்பே
மாவியது மும்மல மகன்றுதிற மாமினிய
வருளொடு புணர்ந்தமுத்தி
யளித்தருள்சி வானந்த நாதனே யெளியனுக்
கருண்மருவு முத்தியருளே. (8)

## வேறு

688. சதுமுக னெடுமா லுக்கரி தாய
தனிமெய்ப் பொருளதனைத்
தரணியி லருளுரு வாய்வந் திலகிய
சத்திய நன்மனதாய்
துதிசெயு மன்பர்க் கொருமைய தாகித்
துகளறு மலபந்தத்
தொடரை யறுத்துச் சுயபடி கந்தரு
துல்லிய மாமறிவுக்

கதிசெய மாக நிறைந்திடு மின்ப
மளித்து மிகத்தெளிய
வங்கையி னெல்லிக் கனியென வறியவு
மறிவிக் கும்பொருளே
முதுமறை யின்பொருண் முடிவே வடிவே
முத்த மளித்தருளே
மோனந் தமானசி வானந்த நாதா
முத்த மளித்தருளே. (9)

689. என்னுள் விளங்கி யெழுந்து விரிந்தொளி
ரெங்கெங் குளதாகி
யென்னுள மதனைத் தன்னுள் வசப்பட
வினிதா கச்செய்து
மன்னிய பின்னில வின்கதிர் ஞாயிறில்
வருநற் கதிரதனின்
மருவிய வாறு புனலினி லொவ்வல்
வணம துறையுநெறிபோ
லன்னிய மாமெனை யன்னிய மாக
வளிக்கு மரும்பொருளே
யகரத் துயிரென வுயிருக் குணர்வே
யருளுக் கொருவித்தே
முன்னவ னேமுழு மாமணி யேதிரு
முத்த மளித்தருளே
மோனந் தமான சிவானந்த நாதா
முத்த மளித்தருளே. (10)

## வருகைப் பருவம்

690. நிலவு மதியத் தெழினுதலில்
நிறையுந் திருவெண் ணீறிலங்க
நிதியம் பரவுங் குழைக்கிசைந்து
நிகழும் பசுங்குண் டலமசைய

குலவுங் கருணைக் கடனோக்கங்
கூரு மலர்க்கண் களிகூரக்
குமிழ்க்கீ ழணிச்செந் துவர்வாயிற்
கொழிக்குந் தரள மெனநகைப்ப
பலவம் பணிகள் செறிந்தொளிரும்
பரந்த மருமத் திடைமருவும்
பரமன் மணித்தா வடமாடப்
பாங்கா ரரையின் மணியொலித்தே
யிலகும் பதத்தில் சிலம்பலம்ப
யினிதாங் கடவுள் வருகவே
யென்னைப் புரக்குஞ் சிவானந்த
விறைவன் வருக வருகவே. (1)

691. கன்னற் கினிய பொருளுரைக்குங்
கடவு ளருநூ லினைப்பகர்ந்து
கருத்திற் புகட்டித் திறத்தவெழிற்
கனக்கோ தண்டத் திடையினில்நின்
றுன்னிப் புணர்ந்தங் கருட்குருவென்
றுரைத்த விதியும் வழுவாம
லுடற்குட் டுண்டா மற்றாண்ட
வுணர்ந்த வுணரும் பொருள்விளக்கி
மன்னிச் சிறப்புற் றிருக்குமெய்க்கண்
வடிவாய்த் திகழ்ந்து திருவருளான்
மகிழ்ந்தங் குணர்த்தும் பொருட்டிகழ்ந்து
மாளாச்செல்வந் தனிலிருப்பை
யென்னச் சகலர்க் கருள்வடிவா
யெடுத்து வருமிங் கிதன்வருக
வேழைக் கிரங்குஞ் சிவானந்த
விறைவன் வருக வருகவே. (2)

692. முடங்குந் தரங்கஞ் செறிந்தொலிகண்
முழக்கும் பரவைச் செழும்புனலை
மொண்டே புயல்விண் ணிடையெழும்பி
முழுதும் பரவித் தடம்புவியி
னிடங்கண் டழைத்துப் பயிர்விளக்கு
மெண்பத் தொருநான் குயிர்விளங்க
விவ்வா றதுபோ லவ்வுலகி
லிருக்குஞ் சகலர்க் குய்யுமதாய்

திடங்கொட் குருவாய் வந்திழிந்து
சிவப்பே றுதிக்க வருட்கடலின்
றிறமே யெடுத்து மிகக்காட்டித்
திவ்விய ஞானப் பயிர்விளைத்து
நடங்கண் டுவப்பக் கதியளிக்கு
ஞானு தீதன் வருகவே
நவிலற் கரிதாஞ் சிவானந்த
நாதன் வருக வருகவே. (3)

693. ஐந்தாய்த் தொடர்ந்த மலம்பதினெட்
டவத்தை யதுவு மறக்கடந்தே
யணுவை விளக்கி யெமக்கினிய
வன்பா யளிப்ப தறமென்று
மைந்தா மிகவு நாமிரக்கம்
வைத்தே யுனக்கு மகிழ்ந்தளித்த
மாசற் றிருக்குந் திருவருளே
மன்னும் பொருடா னிவையென்றும்
வந்தார்ந் துறையும் பொருளதனுன்
மருவத் தருவ தின்பமென்றும்
வழங்கு மீதுமூன் றையுந்தெளிந்து
மறைப்பு நினைப்பில் வீடென்றுந்
தந்தே யன்பர் தனையளிக்க
தரையில் வருமம் பரன்வருக
தண்மைக் கடலாஞ் சிவானந்தச்
சதுரன் வருக வருகவே. (4)

694. தாலந் தழும்பே றிடத்துதியேன்
சரணம் பணியே னடியாரைத்
தறிகட் குழுவின் றலைமையனுய்ச்
சகல பருவத் துழல்வேனை
ஞாலந் தனில்வந் தினிதான
ஞானத் திறத்தே சிகனுகி
ஞாங்க ரழைத்து மிகநோக்கி
நன்மார்க் கங்கள் வரும்பொருட்டாய்த்
தூலந் தனிற்சங் கமரூபந்
துலங்கக் காட்டிக் கண்டிணங்கச்
சூக்குமந் தனிற்றன் றிருவாக்காற்
றுகடீர்ந் தறிய வறிவித்து

மேலங் கியற்றுன் றிருவருளால்
வீடுற் றுணர வுணர்த்தியிந்த
விதமா யளிக்குஞ் சிவானந்த
விமலன் வருக வருகவே. (5)

வேறு

695. செகத்துக்கினிய முதல்வன் வருக
தேவருக் குணர்வரிதன் வருக
செப்புமறையின் முடிவன் வருக
தெருளுமறிவுக் கறிவன் வருக
வகத்துக்கொளிசெய் தருள்வன் வருக
வாகமப்பொரு டலைவன் வருக
வன்பின்நிறைந்த வின்பன் வருக
வசலமான நித்தியன் வருக
மிகுத்தகருணை வாரி வருக
விளங்கியசெழுஞ் சோதி வருக
மெய்யைவிளக்குந் துய்யன் வருக
விமலவமுதக் கடவுள் வருக
மகத்துவக்குரு மணியும் வருக
மணிவிழிக்கொளி தருவன் வருக
மன்னு ஞானச்சி வானந்த
நாதன் வருக வருகவே. (6)

696 அகரமெனவு முயிருக் குயிர
தாகிய வரும்பொருளும் வருக
வாசொடுசெய் வினைக ளுயிர்கட்
கறிந்துநடத்து மண்ணல் வருக
சிகரவடிவ நிமலன் வருக
தேவதேவ பரமன் வருக
தேர்ந்தஞானச் செல்வன் வருக
தெளிந்தவமுதப் புணரி வருக
பகர்வுக்கரிய தொருவன் வருக
பத்தர்பணியு முத்தன் வருக
பாவகங்கடந் தவனும் வருக
பந்தமறுக்கு மெந்தை வருக

நிகரிலாத வமலன் வருக
நேயந்தனினின் றவனும் வருக
நித்திய ஞானச் சிவானந்த
நிதியும் வருக வருகவே. (7)

697. குறியுங்குணமுள் ளவனும் வருக
குறியுங்குணமில் லானும் வருக
கோதிலாத மூர்த்தி வருக
குறைவிலாத நிறைவன் வருக
பிறிவில்லாத போத வுயிரைப்
பிரித்தருளிய மெய்யன் வருக
பேரானந்தக் கனியும் வருக
பெம்மானெம்பி ரானும் வருக
வறிவுக்கரிய சோதி வருக
வகண்டிதபூ ரணனும் வருக
வயத்துளினுறை யுதித்து வரியி
னடங்கெனுமுல குணர்வன் வருக
பொறிபுலன் றிரையிருளொ ழித்தருள்
புரியுந் தபனன் வருகவே
புனித மானச்சி வானந்த
போதன் வருக வருகவே. (8)

வேறு

698. மாயன் சரோருக வாசன் சுராதிபர்
வாழும் பராபர மனுக
மாகங்க டேடியும் லோகங்க டேடியு
மாகங்க ணடியு மரிதாம்
நாயன்ற னேர்கையின் மாறுஞ் செயலிறை
ஞானங்க டேறில னிருளா
னெனென்ப தாயுறை வேனிந்த மாநில
ஞடுந் தியானம துடையே
னேயம் புகேனிரு தாளுந் தொழேன்விழி
நீருந்தரே னின்று மனதாய்
நீடும்பல காலமு மேயிந்த வாறுடை
நீதன் றன் மேனிமிகு தயவாய்
தாயன்ப தாயினி தாமின்ப மாரரு
டானிங்க னேதர வுருவாந்
தானந்த மீதினி லானந்த மானசி
வானந்த நாதன் வருகவே. (9)

699. பாரம்பு தேயுவும் வாய்வம்ப ராதிகள்
பரவுங் கலாதி குணமீதின்
பாலின் பிரேரம தாமைந்து மேயுறு
பாசங்க ளீதெனு மிதனீர்
சேரும் புலாதிக ளோடுங் குலாவல்செ
யாநின்ற தாமுயி ரெனவுந்
தீதின்றி யேயிதி லாடும் பராபர
தேவன் புராதன மெனவு
மோரிந்த மூவினை யோரும் பின்னுடு
முபாயங்க ளான வொருமையா
லோதங்க சேதன மீதென்று சேதன
மீதென்று நீயறி யெனவே
சாருந் தபோதனர் தேறுஞ் சொலேசொல
தாமிங்க னேவரு மணியே
தானந்த மீதினி லானந்த மானசி
வானந்த நாதன் வருகவே. (10)

---

## அம்புலிப்பருவம்

---

(சாமர்)

700. மனமகிழ்ந் தொருமையாய்ப் பரிவுடன் புகழ்மருவு
மாசில்சோ தியைமருவலால்
வளர்குருவ தாகிநன் மதியாகையா னிறைய
வரும்மம் பரத்துறைதலா
லனைவருங் கண்டுவகை கொண்டுறைய வேவரு
மகநிலவு மணியாகையா
லமுதமது தருகையாற் சுடரொடு கலந்ததா
லரனருட் கண்ணுகையால்
நினைவிலெவர் கட்குமிகு தண்மைதர லால்நல்ல
நெறியுள்ள வடிவாகையான்
நேசத்தி லுந்தனுக் கிவனுக்கு நிகரான
நேசனியா வருமில்லைகா

ணனுதினந் தொண்டர்வந் தடிபரவு மையனுட
னம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (1)

701. விரியுமண் டத்தினு முரியபிண் டத்தினு
மிகுதெரி சனங்காட்டுவாய்
மிளிரதனைத் தெரியவொட் டாமலே துன்னுமிருள்
வேலையை விலக்கியிடுவாய்
தெரியவந் திலகுவா யன்றியெந் நாடொறுஞ்
சிறியதாய்ப் பெரியதாவாய்த்
தேர்ந்துதேர்ந் தினியபரி பூரணம தாகுவாய்
திருநீற்றின் மேனியாவாய்ப்
பரிவுடன் கலையினை யுகந்து மத்தந்தனைப்
பரிசிப்பை யாதலாலே
பார்க்கினுன் செயலிவன் செயலா யிருந்ததாற்
பகர்விலா துவகையாவா
னரியபொரு ளுருவெடுத் தருளவரு மையனுட
னம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (2)

702. கடலதனில் வருவைநீ சட்டைநா தய்யனருட்
கடலதனில் வந்தவனிவன்
காணுறிற் குவளைமுகை விகசிப்பை யிவனன்பர்
கட்குவளை விகசிப்பவன்
படருமொரு சுடரதா குவையிவனு மெங்கினும்
படருமொரு சுடரதாவான்
பாவையர்ப் புணர்வின் பருள்வா யருபுணர்வு
பசுவினுக் கின்பமருள்வான்
கடிகமல விரிவை குவிப்பைநீ யிவனிதைய
கமலவிரி வைக்குவிப்பான்
கருதுமுன துண்மையு மிவனுண் மையும்பகர்வு
காண்கிலொரு தன்மைபெறலா
லடிமையர்க டேரும்வகை யாகவரு மையனுட
னம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (3)

(பேதம்)

703. குறைவுநிறை வுள்ளவுரு வாகுவா யிவனுமொரு
குறைவிலா நிறைவுபெற்றோன்
குருநிந்தை யுள்ளநீ யிவனுமோ மெய்யருட்
குருவழியி னின்றமுதல்வன்
றுறையுநின் வடிவமுந் தோன்றவரு வாயிவன்
றோன்றாத் துணையாகுவான்
சொல்லுறுங் கண்டிதம் பெறுவைநீ யிவனுமோ
சொல்லுறு மகண்டிதனுமாம்
வறுமைதனை யெண்வீ டிருந்தருள்வை யருள்வனிவன்
வாழ்வையெண் ணரியவீட்டில்
வளமிலாக் கர்க்கடக வீட்டிறைவ நீயிவன்
மகிழ்ஞான வீட்டிறைவனு
மறிவரிய பொருளிவ னுந்தனுக் கதிகமா
மம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (4)

704. இரவிலமு தந்தருவ தன்றியிர வும்பகலு
மிடையறு வமுதமருளா
யிருதன்மை யைக்கடந் தொருதன்மை யைப்புணர்ந்
தெஞ்ஞான்று முறைவதறியாய்
விரியுமோ ரண்டத்து ளொளிபெறுவை யாங்கதின்
மேலுறும் பேரொளிபெறு
மிளிராவி நாண்மறைந் திடுவையெவை யாலுமறை
வில்லாத விமலனுகாய்
வரவுபோக் கும்புணர்வி லுலைவதன் றிப்புணர்வு
வரவுபோக் கின்றிநிலையாய்
மாசறு முடற்களங்கம் பெறுவை மாசற்ற
மானிட(ர்)க ளங்கமாகா
யருமையா மெந்தையுடன் னின்னைநிக ரென்பதா
லடியவர் குழாங்களிப்பா
ரானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (5)

(தானர்)

705. செங்கண்மா லும்பிரம னுங்கா டியுமிக்க
தேடியும் பாதமறியார்
திகழவுன் மேறயவ தாகவுந் தனைநெடுஞ்
சிரமீ தணிந்து கொண்டான்
தங்கணு குஞ்சுடர்கண் மூன்றிலுந் தனைநன்மை
தருமருட் கண்ணுக்கினன்
சந்திரசே கரனென நின்பெயர் விளங்கவுந்
தானே தரித்துவந்தான்
றிங்கணு ளின்விரத மென்னுதா மென்றதைச்
செய்பவர்க் கருளளித்தான்
தேர்ந்தறிவ திவ்வுதவி யார்க்குதவி னவன்
றிருமேனி யாகவிந்த
வங்கண்மா நிலமதனில் வந்தவென் னையனுட
னம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (6)

706. முன்புநின் னாரியர்க் காகவன் மாலிவெகு
முனிவுகொண் டமர்புரிந்தே
மோதிடும் போதுவந் தெதிர்சென்று நின்னையுயிர்
மூழ்காம லாண்டுகொண்டான்
பின்புமாங் கவரிட்ட சாபத்தை நீக்கிநற்
பிரகாச மாக்கிவைத்தான்
பேரின்றி நீபெற்ற பிள்ளையைப் புதனெனப்
பிரிவில்கிர கத்தில்வைத்தான்
மின்பாவு மழவுரு வளர்த்திடும் போதுன்னை
மெலியாமல் தண்மைதந்தான்
மேலிந்த வுதவிக்கு வுனையவர்க் கீந்தாலு
மேவுகை மாறுகுமோ
அன்புவைத் தின்பமுறு மெந்தையுடன் நீமகிழ்ந்
தம்புலீ யாடவாவே
ஆனந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (7)

(தண்டர்)

707. அனல்விழி கொடுமனத் தயிலியற் றிடுமொழிய
ராக்கதர் பதிக்கியஞ்சி
யகநகரின் வழிபுக வொதுங்கின யாங்குனே
யதோகதியில் விழமிதித்தான்
புனல்மிகுத் திசையொலித் தலையெறிப் பரவையிற்
புகழுநின் னுடுபிறந்த
பொல்லாத நஞ்சினைக் கண்டத்தி லேகரும்
புகர்தர வருந்தினுன்
றனைவிதித் திடுமலர்ச் சதுமுகப் பிரமனைத்
தலையறுத் தனன்முன்னலே
சங்கரிக் குந்தொழிற் கொண்டவ னிவன்செய்தி
தானறிந் துணர்வதிலையோ
வனனீயக் கடவுணித் தியனவர்க் கடிமையர்க்
கம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (8)

708. உருவிலிக் கரதலத் தினிலுனைப் புகழுவைத்
தொளிர்குடை பிடிக்குமவனை
யுடலமது பொடிபட விழித்தெரித் தனனவனி
லுன்னெறி யுயர்ச்சியாமோ
விருள்விழிக் கதிருதித் துனதுநற் கதிருதிப்
பெழிலினை விழுங்குமவனை
யெயிறினை யடித்துதிர்த் தினதறிய வில்லையோ
விதுவன்றி யுன்னையன்று
டிருமலிப் பதமதாற் றரையினிற் றுகளெனத்
தேய்த்ததுவு நினைவில்லையோ
சிந்தைதனி லிதையறிந் தெண்ணிவின வுங்கடவுள்
செய்கையள வில்லையுருவோ
டருவிலிப் பரமனுல கினில்வந் தழைத்தன
னம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (9)

709. ஈசனற் சிரமுறைவ னென்றுணு வங்கொண்
டிராதே யவன்றன்மகிமைக்
கிணையுறு தொன்றுமுரை யறிவரிய பொருளென்
றிருக்குமுறை யிடுவதெண்ணித்
தேசிகன் குறிவிழியி னின்றொருமை யாகவுந்
தெருள்வையா லுந்தனுக்குத்
திருவருள் பொருந்திவள ரானந்த வாரியிற்
சேர்ந்துவகை யாகவினிதாய்
நேசமதில் நின்றவின் பம்பெறுவை சன்மார்க்க
நெறியாவை யுன்களங்க
நிட்களங் கம்பெறுவை தொண்டர்தன் குழுவினொடு
நிலையாக வாழ்வுபெறுவா
யாசறுத் திடவரும் பதிஞான தேசிகனொ
டம்புலீ யாடவாவே
யானந்த மாகியசி வானந்த நாதனுட
னம்புலீ யாடவாவே. (10)

---

## சிற்றில் பருவம்

---

710. அழுக்கைத் திரட்டும் புழுக்குரம்பை
யதனி லழுந்திக் கிடந்துழன்றே
யாதார மும்வே றில்லாம
லலையு மவரை யவருளக்கண்
விழிக்க விழித்து மலம்போக்கி
விளங்க வருளின் வழிப்படுத்தி
மேலா கியபே ரின்பமதை
மிகவுந் தேக்கிச் சுகமாக்கிப்
பழுக்கச் செய்து சுகமுடிவிற்
பழுத்த நிலையை யுரையுணர்வாற்
பகர்வுக் கரிய நிட்டையிதா
மெனமா ணூர்க்குப் பதஞ்சூட்டும்

செழிக்குங் கமல மலர்ப்பதத்தாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தேர்ந்த ஞானச் சிவானந்த
தேவே சிற்றில் சிதையேலே. (1)

711. தறுகண் மாலி யுரமன்றே
சதுமா முகவன் சிரமன்றே
தக்கன் வேள்விச் சசியன்றே
தழைக்கு மடியார் வினையன்றே
நெறிகொ ளடியா லடைப்பதற்கு
நெடுவா சலுஞ்சோ றிடுமடமு
நிலவுங் கூடஞ் சிறுவீடு
நேராஞ் சமைய லறையிதெலாம்
வெறுநுண் மணலிற் செய்ததெழிலாம்
மிகவுஞ் சிறியோம் பலர்கூடி
விளையாட் டிடத்தைக் கலைப்பதெங்கள்
விதியோ வுந்தன் விளையாட்டோ
திறமே யுணர்வே யரும்பொருளே
சிற்றில் சிதையேற் சிதையேலே
தேர்ந்த ஞானச் சிவானந்த
தேவா சிற்றில் சிதையேலே. (2)

712. அகத்திற் கருதுந் திறமறியோ
மடிகள் பணியோஞ் சிவநேசத்
தருமை யறியோங் குறிக்கணுகோ
மருநூ லுரைக்கும் வகைதெரியோந்
தொகுத்துச் சரிதைக் கிசைந்தியற்றோந்
தொன்மை யறியோம் புதிதறியோந்
தோன்று முதலின் பருவமுற்றோந்
தொழும்பிற் கலவோ மறற்கன்பு
மிகுத்துத் துதியோ மறியாமை
மேவுஞ் சிறியோங் குழாத்தணுகி
மிளிராங் காட்சி செய்துவந்தால்
விளங்குன் னடியார் நகையாரோ
செகத்திற் குருவாய் வரும்புனிதச்
செல்வா சிற்றில் சிதையேலே
தேர்ந்த ஞானச் சிவானந்த
தேவா சிற்றில் சிதையேலே. (3)

713. உடற் பாண்டத்தி லுயிர்ப்பாலை
யுளக்க ணெரியா லேவெதுப்பி
யுறையும் பெருஞ்சஞ் சிதச்சலத்தை
யொடுக்கிக் குறியின் புரையையிட்டவ்
விடைக்கோ ருறுதித் தயிராக்கி
ஞானத் தெழின்மத் தாற்கடைந்து
மிருண்மும் மலத்தின் மோரகற்றி
யிதனைப் புளிப்பென் றேவெறுப்பித்
தடுத்தே யிருக்குந் திருவருளா
மளையைத் திரட்டி யவ்வளையை
யன்பா லுருக்கித் திகட்டாத
வரும்பே ரின்ப நெய்யாக்கித்
திடப்பே றளிக்குந் தெளிவேநற்
றேனே சிற்றில் சிதையேலே
தேர்ந்த ஞானச் சிவானந்த
தேவா சிற்றில் சிதையேலே. (4)

714. எழுத்திற் கலந்தே யகரமந்த
யெழுத்தாய் விளங்குந் தனைக்காட்டா
தெழுத்திற் கலவா துறிற்றலையி
லியற்கை விளங்கு மிரண்டுருவாய்த்
தழைத்துத் திகழ்ந்த வெழுத்தவையிற்
சாத்தா தெழுதா விறையெழுத்துத்
தானங் குணர்த்த விரண்டினமுஞ்
சாத்த வெழுத வருமிவைபோ
லழைத்துச் சிறியேன் றனைக்கரண
மடையா திருந்து பொதுவினினி
லணுவைப் பெறுவா யதைப்பகர
வருளைப் பெறுவை யெனப்புகட்டுஞ்
செழித்துச் சிவந்த மலர்ப்பதத்தே
சிகனே சிற்றிற் சிதையேலே
தேர்ந்த ஞானச் சிவானந்த
தேவா சிற்றில் சிதையேலே. (5)

வேறு

715. இருளார் கின்ற புலனோ ரைந்துக்
கினிதா யொத்துப் புவிமீதி
லெழிலாய் வந்துப் பலநாள் நின்றுற்
றிடுமியான் முத்திக்குளனுக

வுருவாய் வந்து திறமா யின்புற்
றுளமே நிற்பித் தருள்வாரி
யுறவே தந்த குருவே யன்பர்க்
குணர்வே நற்சத் தியமான
பொருளே துங்கக் கடலே யெந்தைப்
புனிதா சித்திக் கரசேமெய்ப்
புகழே யுன்பொற் பதமே நம்பிப்
புணர்வோர் புத்திக் கமுதேயோ
தெருளா மின்பச் சுகமே யிந்தச்
சிறியார் சிற்றில் சிதையேலே
சிவனே யம்பெற் றசிவா னந்தத்
திறனே சிற்றில் சிதையேலே. (6)

716. பணையோ கொங்கைக் குவடா மங்கைப்
பரிவா சைக்குட் புணர்வாகிப்
பலனுர் கின்ற பொருளி யாதென்றும்
பகரா மற்கற் றலைவேனை
யணிசே ரிந்தப் புவிமீ தஞ்சக்
கரஞா னசிற் குருவாகி
யவஞா னம்பெற் றறவே கண்டொத்
தருளாய் நிற்கத் தருவோனே
குணமே தின்றிக் குலமே தின்றிக்
குறிதா னற்றப் பெருவாழ்விற்
குறைவே யின்றிப் பரமாய் நின்றக்
கொழுமா சித்திப் பெருமானே
திணைமீ துன்பொற் பதமே நம்பித்
திகழ்வோஞ் சிற்றில் சிதையேலே
சிவனே யம்பெற் றசிவா னந்தத்
திறனே சிற்றில் சிதையேலே. (7)

717. அகமீ துன்றன் பதமே கொண்டுற்
றயரா நிற்கத் தொழுவார்க
ளமுதா முன்பொற் றிருகா மஞ்சொற்
கடைவார் பத்திக் கினிதாவார்
புகழ்வா ரெந்தைத் தலைவா வென்று
பொதுவா யுட்குட் களிகூர்வார்
புளகா னந்தப் பொருளே கண்டு
புணர்வார் சித்தத் துறவோர்வார்

நிகழ்வா ரின்பத் துறைவா ரிந்தத்
திறமாய் நின்ருெத் திடுவார்முன்
நிசியூர் கின்ற களவார் நெஞ்சத்
தினர்போ லுற்றுத் திரிவேனே
திகழ்வா யெந்தற் கினிதே தந்தச்
சிறியேன் சிற்றில் சிதையேலே
சிவநே யம்பெற் றசிவா னந்தத்
திறனே சிற்றில் சிதையேலே. (8)

வேறு

718. பஞ்ச மலத்தி னிலும்பதி னெட்டி
னவத்தையி லும்பழகிப்
பலநா ளுழல்வேற் கெளிவந் தருளிப்
பரிவா யளவிலதாஞ்
சஞ்சித வினையை யருட்கண் கொண்டு
தகித்து மெடுத்தவினை
தன்னை யதற்குள போகத் திலதின்
றன்மை யொழித்ததின்மேன்
மிஞ்சிய வினையை யினித்தொட ராமல்
விலக்கி யருட்டுறையான்
மிளிர்தரு மென்னைத் தனதென் றருளிய
மெய்ப்பொரு ளேவிமலா
செஞ்சர ணப்பர னேகரு ணகர
சிற்றில் சிதையேலே
தேவசி வானந் தக்கட லேயெஞ்
சிற்றில் சிதையேலே. (9)

719. உன்மய மென்றெவை யுஞ்சிவ னூலறி
வோரு முரைக்குமதை
யுணரா மற்றிரை யாகிய விருளா
லுணர்விலி மனதாகி
யென்மய மென்றுயர் சஞ்சித மதனி
லிருந்தனு பவமீறி
யிறப்பு முதிப்பு மிகுத்து வருத்த
வதின்னா ளுழல்வேனைத்
தன்மய மாக வளித்திட வுலகிற்
றூனரு ளுருவாகிச்

சருவிய மும்மல மதனை யறுத்தொளி
தருமவ் வுளமதனிற்
சின்மய மான தயாபர நாதா
சிற்றில் சிதையேலே
தேவசி வானந் தக்கட லேயெஞ்
சிற்றில் சிதையேலே. (10)

---

## சிறுபறைப்பருவம்

---

720. கரமது குவித்துநின் றுருகியர கரவெனக்
கருதுவர் முழக்கவொருபாற்
கருத்தினி லுவந்துநைந் துருகிசிவ சிவவெனக்
கழறுவர் முழக்கவொருபா
லுரமதிற் கையிணைத் தினியதோத் திரமதை
யுரைப்பவர் முழக்கவொருபா
லுரியமெய்ஞ் ஞானநூ றனைவிருப் புடன்விரித்
தோதுவர் முழக்கவொருபால்
பரமதில் வசப்படுந் தன்மையர் களிப்புடன்
பயில்வது முழக்கவொருபாற்
பத்தியுட னேவந்து பொருடனை மகிழ்ந்துகேட்
பவர்குழு முழக்கவொருபாற்
சிரமதிற் கைக்குவித் தவர்முறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
திடமுறவென் னுளமதிற் நடமிடுசி வானந்த
சிறுபறை முழக்கியருளே. (1)

721. அருட்டிற மெடுத்திறைவ னூல்வழியி னூடியென
தாசறுந் திருமொழியினு
லறையுமெய்ப் பொருளையிரு கரமது குவித்துவந்
தலையுறும் பலபேதமாம்
பொருட்டிற மகற்றிநற் றிறமுற தருஞ்செவிப்
புலன்வழியி னின்றுகேட்டுப்
புகழுமுட் கரணத்தி னூலுன்னி யுன்னலைப்
பூண்டுசிந் தித்தல்செய்து

மருட்டிற மிருட்டிற மொழித்தவறி வாலதனை
மகிழுறத் தெளிதலாக்கி
வருமறி விழந்தறி வற்றுநிட் டையைப்பெறுதன்
மாணுக்கர் செய்தியென்னுந்
தெருட்டிற மகத்துவ மிகுத்திடு சிகாமணி
சிறுபறை முழக்கியருளே
திடமுறவென் னுளமதனில் நடமிடுசி வானந்த
சிறுபறை முழக்கியருளே. (2)

722. எனதுமனை யென்றுமென் கைகால்க ளென்மக்க
ளென்சுற்ற மென்றிருந்தா
யிந்திரியம் புலன்வளியு முப்பதந் தக்கரண
மீரிரண் டுள்ளமொன்றும்
நனவதனி னின்றிடும் போதுமுன் னிந்திரியம்
நனவினிற் பத்துநிற்க
நாலைந்து மைந்துடன் கனவதா யுள்ளமுயிர்
நற்சித்த முஞ்சுழுத்தி
யுனவரிய துரியத்தி லுளமுயி ரிரண்டுமுள
மொன்றுதுரி யாதீதமா
யுற்றிடும் போதுனக் கார்வந் துணர்த்தின
ருமாதர வறிந்தேயினிச்
செனனமதில் வாராம லுய்யென்ற தேசிகா
சிறுபறை முழக்கியருளே
திடமுறவென் னுளமதனில் நடமிடுசி வானந்த
சிறுபறை முழக்கியருளே. (3)

723. கீழா லவத்தையி விழிந்தருண் மிகுத்திடுங்
கேவலத் தினிலழுந்திக்
கிடக்கின்ற வணுவினுக் குனதுபரி பூரணக்
கிருபையா லன்னபடியே
தாழாம லாதரவு செய்துசூக் குமமாதி
தனைவிருப் புடனெழுப்பித்
தத்துவக் குழுவினை யுயிர்ப்புற நடத்திநற்
சகலமதி லேயழைத்தே
யாழாத சாக்கிரந் தனிலெனை நிறுத்தியங்
காரணங் கலைகள்சமைய
மியாவையு முணர்ந்துவரு முப்பொருட் செய்தியென்
றறிவிக்கும் ஞானவடிவே

சீழா(டா)க்கண் முறைமுறை பணிந்திடு பதாம்புயா
சிறுபறை முழக்கியருளே
திடமுறவென் னுளமதனில் நடமிடுசி வானந்த
சிறுபறை முழக்கியருளே. (4)

724 சன்மார்க்க மானமெய்ஞ் ஞானமது பெற்றிடத்
தமியா யுனைத்துதிக்கத்
தகைமையுடன் நீமகிழ்ந் தெனையழைத் தினியகுறி
தன்னையறி விக்கவினவி
நன்மார்க்க மெனவுறுதி யாகநின் றக்குறியின்
நாடிடும் போதுமாயை
நண்ணியித மகிதமா யெங்குங் கலந்துநா
ஞபேத மாய்மயக்கப்
பன்மார்க்க மாகியினி யெங்கறிவ தென்னப்
பகுப்புட னிருந்தநிலையிற்
பராமரித் தேமறிப் பார்வையா யென்றுநற்
படிகமெனு மெனவிளக்கிச்
சின்மார்க்க மானதிரு வருளுதவு முதல்வனே
சிறுபறை முழக்கியருளே
திடமுறவென் னுளமதனில் நடமிடுசி வானந்த
சிறுபறை முழக்கியருளே. (5)

வேறு

725. கருக குழுவின் குணமறிதற்
காட்டுந் தொழிலின் திறமறிதற்
கருது மிதனை யன்னியமாய்க்
காண்ட லெனவு மாங்கதின்மேன்
மருவிப் புணர்ந்த விருளைவகை
வகையா யுணர்த லதைநீங்கி
வளமாய் முழுதுந் தானறிவின்
வடிவாய்த் திகழ்த லெனையுணர்த்து
மொருவ னுளதென் றறிதலிதை
யுணரக் கருவிக் கான்மாவுக்
குருவெங் காட்சிச் சுத்தியுமென்
றுரைப்ப ரினிதா யென்றுலகிற்
றெரியும் படிவந் தெனக்கருளுந்
தேவா முழக்குஞ் சிறுபறையே
தேர்ந்த ஞானச்சி வானந்தச்
செல்வா முழக்குஞ் சிறுபறையே. (6)

726. வாக்கு மனதுக் கரிதான
வடிவா யுயிருக் குணர்வாகி
மன்னும் பொருளாய் முழுதுமதின்
மயமாய்க் காண்ட லிதைத்தெளிந்து
போக்கும் வரவும் புணர்வுமில்லாப்
புனிதன் றெழிலைந் திணையுமெங்கும்
பொருந்த வறிய விரண்டறவே
புணர்ந்து மிகுஞ்சிற் பரமதனில்
வாக்கி லியம்பு மிதுமூன்று
மண்ண லுருவந் தெரிசனமு
மலையுந் தகையோ கமுமாமென்
றறையும் பதியே யெனக்கின்பந்
தேக்கும் பொருளே யருளுருவே
தேவே முழக்குஞ் சிறுபறையே
தேர்ந்த ஞானச்சி வானந்தச்
செல்வா முழக்குஞ் சிறுபறையே. (7)

727. நினைப்பு மறப்பு மிரண்டுமிலா
நிட்டை யதுவா யுடலுயிரு
நிதியு மரற்கே யெமக்கென்கொ
லென்றே நிலையில் வழுவாம
லனைத்து மவன்றன் போகமதே
யல்லால் வேறென் றில்லையென
வைய மகற்றிற் றுய்யமதா
யனலி லிருந்த படியிருந்தே
கனத்த வுடல மெடுத்தபடி
கண்டு பொசிக்கச் சிவபோகங்
காட்டும் பொசிப்பி லிதமகிதங்
கமழ்த லுனக்கில் பிறற்கென்றே
செனித்து மிறக்கா வழியருளுந்
தேவா முழக்குஞ் சிறுபறையே
தேர்ந்த ஞானச்சி வானந்தச்
செல்வா முழக்குஞ் சிறுபறையே, (8)

728. விரதந் தவங்க ளாச்சிரமம்
விளங்கு மியாக மதுதீர்த்த
மேவுந் தானந் தியானகன்மம்
விரிவாஞ் சாந்தி மிகுசீலம்

புரியுந் திறவா ருஞ்சுவர்க்கம்
புகுந்து மிகவுந் திரும்பியிந்தப்
புவியிற் பிறந்து வருவரென்று
புகலு மிதுவல் லாலரன்றன்
சரியைக் கவன்ற னுலகிருப்பார்
சாத்துங் கிரியைக் கருகிருப்பார்
தகையோ கத்துக் குருவாவர்
தவமாங் குருவா லிறைஞானந்
தெருளச் சிவமா மென்றுலகிற்
றெரிப்பாய் முழக்குஞ் சிறுபறையே
தேர்ந்த ஞானச்சி வானந்தச்
செல்வா முழக்குஞ் சிறுபறையே. (9)

729. உன்னற் கரியான் நீயுலகி
லுருவாய் வந்திங் கறைகூவி
யுளவா யென்னை யாட்கொண்டே
யுண்மை யளித்த திறமதுதான்
கன்னற் சுவையோ பாகுடன்கற்
கண்டின் சுவையோ வதிரசசக்
கரையின் சுவையோ பழுத்திடுமுக்
கனியின் சுவையோ பயன்சுவையோ
வென்னு ளுதித்தே யெனைவிழுங்கி
யிருக்குஞ் சுவையின் றிறமதனை
யின்ன தினிய திப்படியென்
றியம்ப வொண்ணு தென்கோவே
தின்னத் திகட்டா தருஞ்சுவையே
தேனே முழக்குஞ் சிறுபறையே
தேர்ந்த ஞானச்சி வானந்தச்
செல்வா முழக்குஞ் சிறுபறையே. (10)

# சிறுதேர்ப் பருவம்

730. பாராதி யைந்தையும் பாரா யிணக்கியிரு
பத்தஞ்சு கூறுமதின்மேற்
பரப்பியந் தக்கரண நாலையுந் திகிரியாய்ப்
பாய்ச்சியைம் புலனேவியஞ்
சேராமல் வளிகளீ ரைந்துமுரு வாணியாய்த்
தொளைகொணு டியிலிருத்தித்
தோத்திராதி தனிஞலு வழியாய் விடுத்துநற்
றெருக்குவின் சேலையிட்டுக்
காரான முக்குண மங்கண மதாயலங்
காரநற் கால்கலாதி
கருதரிய சூக்குமாதி நாதமுஞ் சிகரமாய்க்
கவித்திடுங் குடைவிந்துவாய்ச்
சீராக வேயமைத் துலகினிற் பலபலச்
சிறுதேர் நடத்தியருளே
தேனின்ப மாகியசி வானந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (1)

731 காயா மரத்தினைத் தேரா யமைத்தகங்
களிகொளந் தந்தநிலையிற்
கமலமுத லைவருந் தொழிலினை நடத்தமுன்
கட்டுந் துரங்கம்வினையாஞ்
சாயாம லுற்றரு டிரோதாயி சத்திரத
சாரதி யெனத்துலங்கச்
சாருமா மாயைரச வர்க்கமுங் கதலிகே
தனமாய் விளங்கவினிதா
யாயாத சத்திக ணெருங்கவங் கருளினை
யகண்டநற் றீபமாக்கி
யான்மாவை மந்திரிய தாகமுன் னிட்டுநீ
யண்ணலென வீற்றிருந்து
சேயெனை யிப்புவியி லாளவரு மையனே
சிறுதேர் நடத்தியருளே
தேனின்ப மாகியசி வானந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (2)

732. மூலத்தி னிலைதனி லிருந்தெழுந் தோமென
முனைந்துநாற் கோணநகரின்
முடிக்கிமதி யின்பாதி கோணத்தில் வந்துயரு
முக்கோண மீதிலேற்றிக்
காலுற்ற வறுகோண வீதியி னடத்தியது
கண்டுவட் டத்திலினிதாய்க்
கடுகவு நடத்தியாங் கதுகடந் திவ்வாறு
காட்சியாம் வீதிவிட்டு
மேலுற்ற வமுதமாஞ் சந்திரமண் டலமதனில்
மிகவுற நடத்தியப்பால்
விளங்கிவரு மாயிரத் தெட்டிதழ தாகிவளர்
மென்கமல மேவிவிரதஞ்
சீலத்தை நீங்கியப் பெருவெளியி லேமிகச்
சிறுதேர் நடத்தியருளே
தேனின்ப மாகியசி வானந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (3)

733. மகரமெனு மருடருஞ் சுத்தமு மசுத்தமா
மாயைவல் வினையிரண்டும்
மன்னுமிரு ளானமல வீதியை விடுத்துமதி
வளர்திரோ தாயியான
நகரமது தன்னைத் திருப்பிமுன் மலமதனி
னுடாமல் யகரமென்னு
நல்லறிவு நீக்கவங் கங்குமே போகாமல்
நண்ணரிய பொதுவாகியே
வகரவரு ளாலதனுள் வந்ததும் போனது
மன்னிநிலை யானதுமெலா
மனமறிய வறிவித்து மாசிற் றெளிந்ததனில்
வருமின்ப வாருதியெனுஞ்
சிகரநிலை சாயாம லினிதுறக் கருணையாய்ச்
சிறுதேர் நடத்தியருளே
தேனின்ப மாகியசி வானந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (4)

734. பூதநிலை யும்பொறி புலன்கணிலை யுஞ்சுழற்
புரியுநாற் கரணநிலையும்
போதமற விட்டுமுக் குணநிலையும் விட்டுநற்
புகழ்சுத்த நிலையும்விட்டே

யோதுமைந் தானவிந் நிலையினை விடுத்திரு
ளுதிக்குநிலை தன்னைவிட்டே
யுற்றகே வலநிலையும் விட்டுசத் சத்தான
உயிர்நிலையி லேநிறுத்தித்
தீதறக் காட்டினது கண்டுவந் தன்பினுற்
றேர்ந்துவரு மின்பநிலையிற்
றிகழ்தர நடத்தியாங் ககன்மகிழ்ந் தேசுகத்
திவ்வியவீ தியினடத்திச்
சேதனம தானவம் முடிவினில் நிலைத்திடச்
சிறுதேர் நடத்தியருளே
தேனின்ப மாகியசி வானந்த நாதனே
சிறுதேர் நடத்தியருளே. (5)

வேறு

735. மதத்தாற் குலத்தான் மானத்தான்
மானுர் மருட்டார் போகத்தான்
மயங்கு மெளியேன் முன்னுருவாய்
வந்தே விளங்கிக் கைகாட்டும்
விதத்தா லதனைக் கழிப்பித்து
விவேகஞ் செறியக் குறிப்பளித்து
வேரு யணுவை வெளிப்படுத்தி
விமலம் பெறுதற் குன்போதம்
பதைத்தா லதுவுந் தோன்ருது
பதைப்பற் றிருக்கிற் ரேன்றுமெனப்
பரிவா யறிவுக் கறிவாகிப்
பசுபா சத்தின் றுருசதனைச்
சிதைத்தே யரும்பொற் பதஞ்சேர்க்குந்
தேனே நடத்துஞ் சிறுதேரே
சித்தாந் தக்கண் சிவானந்தத்
தேவா நடத்துஞ் சிறுதேரே. (6)

736. நீயாய்ப் புணர நிலையகலும்
நிலைதான் புணர வென்ருக
நிகழ்த்து மிரண்டுந் தான்கடந்த
நிலையா யிருந்தே யதுவுனக்குட்
டாயா யுணர்த்தும் பொருட்டிகழுந்
தன்மைக் குவமை யாதென்னிற்

றவிக்குஞ் சிதடற் காதித்தன்
றழைத்த வொளியு மிருளாமே
யாயா மொருவ னுளதாகி
யருங்கட் படல மகற்றிடும்போ
தகன்ற வொளியைக் கலந்ததுவு
மார்தான் கலப்பித் தாரென்றே
சேயே னிருளைக் கடிந்தருளைத்
தெரிப்பாய் நடத்துஞ் சிறுதேரே
சித்தாந் தக்கண் சிவானந்தத்
தேவா நடத்துஞ் சிறுதேரே. (7)

737. பூவின் வாசங் கனியிரதம்
புகலும் வீணைக் கெழிசைதம்
புனலிற் காட்டத் தினிலனலும்
போலங் கடைவர் சிவப்பேறி
லாவி னேசத் தகமதலைக்
கணையாய் விரும்புந் தலம்போலு
மன்பர் தமக்கு மெவ்வுயிர்க்கு
மடியார் தமக்கு மிரங்குவர்வெண்
சேவி லூர்தி யடிஞானந்
தெருளுந் தீர வரிதுவன்றிச்
சித்தந் திரும்பும் வழிதிரும்பிற்
சிவம தகலா ரென்றுணர்த்துந்
தேவ தேவப் பரஞ்சுடரே
செல்வா நடத்துஞ் சிறுதேரே
சித்தாந் தக்கண் சிவானந்தத்
தேவா நடத்துஞ் சிறுதேரே. (8)

738. விரிவா யிருக்கு மலபந்த
வெம்மைத் துயரை வேரறுத்து
விளங்கு மடியா ருடன்கலந்து
மெய்தா னரும்பி விதிர்விதிர்த்தே
யரிதாங் குருவுஞ் சிவலிங்க
மாசற் றிலங்குஞ் சங்கமத்தை
யரனு மென்று தொழுதிறைஞ்சி
யார்க்கும் நாமே லானேமென்
றுருவா யருவா யல்லாத
வுண்மைக் கடவு ளடியாருக்

குரைக்குந் தொழும்பர்க் கடிதொழும்ப
னென்றே யுள்ளன் புறத்திகழ்ந்து
திரிவார் ஞானத் திறவரென்னுஞ்
செல்வா நடத்துஞ் சிறுதேரே
சித்தாந் தக்கண் சிவானந்தத்
தேவா நடத்துஞ் சிறுதேரே. (9)

739. சாருந் திருமால் விதிக்கரிதாய்த்
தருஞ்சித் தாந்தச் சிரோமணியாந்
தத்தாத் திரையர் மரபில்வருஞ்
சட்டை நாதன் றிருவருளி
னூரும் பேரு முருவுமில்லா
னூரும் பேரு முருவுகொண்டென்
னூரும் பேரு முருவழித்தே
யுள்ளம் புகுந்து மலம்போக்கி
வாரு மினிநீ யென்றழைத்து
மன்னுமறிவை யறிவித்து
வந்த வறிவை மாறுமன்
மாற்றிச் சிவப்பே றன்றளிக்குஞ்
சீருஞ் சிறப்புந் தருஞானச்
செல்வா நடத்துஞ் சிறுதேரே
சித்தாந் தக்கண் சிவானந்தத்
தேவா நடத்துஞ் சிறுதேரே. (10)

சிவானந்தன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

# சிவானந்தன் பிள்ளைத்தமிழ்க்
# குறிப்புரை

---

639. வாரி - கடல்; வடவிருக்கம் - ஆலமரம், வட விருக்ஷம் என்னும் வடமொழி வடவிருக்கம் என வட சொல்லாயிற்று; நால்வர்- சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ற நால்வர்; சிவ பெருமான் கல்லால மரத்தின் நீழலிலிருந்து தக்ஷிணாமூர்த்தி வடிவ மாய் மேற்கூறிய நால்வர்க்கும் உபதேசித்தார். அகிலம் - பூமி; அடி மையோர் - அடியவர்; சகள வடிவம் - சடத்துவ வடிவம்; தேசிகத் தலைவன் - குருமூர்த்தி; கடகயமுகத்தன் - மதநீர் பாயும் யானை முக முடைய விநாயகன்; கையைந்தனை-ஐந்து கைகளையுடையவனை, "ஐந்து கரமும் அங்குச பாசமும்" என வருதல் காண்க; அருட்டுறை - திரு வெண்ணெய் நல்லூர்; கதி - மோட்சம்; இங்குள்ள விநாயகர் பெயர் "பொல்லா விநாயகர்" என்பது.

---

## காப்புப்பருவம்

---

640. சீர்பூத்த பவளவுருவில் பச்சையொருபுறஞ் சேர்ந்தொரு மையாய் விளங்க - சிறப்புப்பொருந்திய பவள வுருவம்போன்ற சிவந்த நிறமமைந்த சிவனது வடிவத்தில் பச்சைநிறமமைந்த பார்வதி ஒரு பக்கத்தில் சேர்ந்து ஒருசேர விளங்க; பாதிபாகத்தைப் பார்வதிக்குக் கொடுத்ததால் இங்ஙனம் கூறினர். செழும்புனல் - கங்கை; பண + அடவி-படங்களையுடைய பாம்புக் கூட்டங்கள்; மகிதலம்-பூமி; தார் பூத்த களப விள வனமுலைக் கன்னி தாட்டாமரைச்செல்விகேள்வன்- மாலையணிந்த வாசனைச் சாந்து பூசிய இளைய அழகிய தனத்தையுடைய பெண்ணான தாமரையில் வாழும் இலக்குமிக்குக் கணவன் (திருமால்); திதி - காப்பாற்றுதல்; அரன் - சிவன்; கார்பூத்த சூகரம் - கருநிற

மமைந்த பன்றி; அடி-பாதம்; **கார்பூத்த சூகரமது ஆகி அடிதேடியது:-** பிரமனும் விஷ்ணுவும் தங்களில் யார் பெரியவர் என்னும் வாதம் எழுந்து சிவனைக் கேட்க அவர் அண்ணாமலையிலுள்ள தன் வடிவத்தின் அடியையாவது முடியையாவது யார் பார்த்து வருகிறார்களோ அவர்களே பெரியர் என்று கூற அங்ஙனமே பிரமன் அன்னப்பறவை வடிவாகி மேலே முடியைக் காணப் பறந்தும், திருமால் பன்றியாகி அடியைக்காணப் பூமியைத் தோண்டியும் சென்றனர். திருமாலால் முடியாமல் திரும்ப பிரமனோ "கண்டேன்" என்று பொய் கூறினன். **கண் அருச்சித்தது:-** சிவபெருமானைப் பூசிக்கும்போது ஒரு மலர் குறைய அப்போது தம் கண்ணைப் பிடுங்கி அருச்சித்தார். **ஏறுகச் சுமந்தது:-** திரிபுரசங்கார காலத்தில் விஷ்ணு தான் சிவபெருமானைச் சுமக்க எண்ணி எருதாக நின்றார். அவர்மீது சிவபெருமான் ஏறியருளினர், (சிவபுராணம்); **கிரிகையைச் செய்தது:-** இராமபிரான் (விஷ்ணுவின் அவதாரம்) சேதுவில் சிவலிங்கம் ஏற்படுத்திப் பூசை செய்தது காண்க. கிரிகை செய்தலாவது - சிவனை ஆகமங்களில் விதித்தவாறு புறத்தொழிலானும் அகத்தொழிலானும் வழிபடுகை (சி. போ. பாட்டு 359); அரன் தனக்கு அன்புதவு கொண்டல் சிவானந்தப் பெம்மான்தனைப் புரக்க என்று வினைமுடிபு கொள்க. (1)

641. ஒளிர்சாதனம் - பிரகாசிக்கும் உருத்திராக்கம்; பதம் - பாதம்; பாதுகை - பாதரட்சை; உருவேடம் அருவேடம் உருவருவ வேடம் இவை முறையே தூலசரீரம், சூக்கும சரீரம், காரண சரீரம் என்று பெயர் பெறும். இவைகளது உண்மையின் நல்ல குணங்களைப் போதிப்பதற்கு உண்டாக்கப்பட்ட உருவத்தையுடைய அடியவர்; **தூலசரீரம்:-** பஞ்சபூதங்கள் கூடிப் பரிணமித்த உடம்பு; **சூக்கும உடம்பு:-** சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றும் சேர்ந்து ஆன்மாக்கள் உலக போகங்களை அனுபவித்தற்குக் கருவியாக நின்று மரண காலத்தில் ஸ்தூல உடம்பை விட்டுப் பிரியும் அரூப உடம்புக்குச் சூக்கும உடம்பு என்று பெயர். **காரண சரீரம்:-** ஆனந்த மயகோசம் (வேடதாரி சுபாவம்) ஐந்து வகை சரீரத்தில் கஞ்சுகசரீரம், குணசரீரம் நீக்கி இங்குக் கூறினர். குருலிங்க சங்கமப் பொருள்கள் - குரு, சிவலிங்கம், அடியார் கூட்டங்கள். (2)

642. பரிபூரணம் - கடவுள்; **தத்தாத்திரையர்:-** அத்திரி ரிஷியின் புத்திரர். அத்திரி ரிஷிக்கு அநசூயையிடம் அவதரித்து யோகத்

திருக்க விரும்பியபோது இருடிச் சிறுவர் விடாது பின் பற்றுவதை யெண்ணி இவர்களை விட்டுத் தனித்திருக்க 100-வருடம் சலத்தில் யோகம் செய்து கொண்டிருந்து அம்மடுவினின்றும் வெளிவருகையில் சிறுவர் விடாதது எண்ணி ஒரு அழகுள்ள பெண்ணுடன் வந்தனர். அதைக் கண்ட முனிச் சிறுவர் அவரிடம் வெறுப்புக் கொள்ளாதிருக்கவும் முனிவர் கள்ளருந்தல் முதலிய பஞ்சமா பாதகஞ்செய்து வெறித்திருப்பவராய் அவர்கட்குக் காட்ட இருடிச்சிறுவர் நீங்கினர். இலக்குமியை அசுரரிடத்திருந்து நீங்கச் செய்து தேவருக்கு வெற்றி தேடியவர். அத்திரி தவஞ் செய்கையில் விஷ்ணு தரிசனந் தந்து தம்மை அவருக்குத் தத்தஞ் செய்ததால் இப்பெயர் பெற்றார். சிவானந்தர் இவரது கோத்திரம் போலும். சட்டை நாதர் வரலாற்றைத் தாலப் பருவம் ஐந்தாம் பாட்டின் குறிப்பில் காண்க. சமையம் - மதம்; பருவ அதீதம் துறந்து ஒளிரும் - காலமாகிய உயர்ந்த நிலையையும் கடந்து பிரகாசிக்கும்; பவம் - பாவம்; பஞ்சாக்கரம்-“ ஓம் நமசிவாய” என்பது; **பரமானந்த தீர்த்தர் :-** இவர் சாலிவாகன சகம் 1049-இல் பிலவங்க வருடம் பிறந்தவர். தேவர்கள், கலியில் தெய்வபக்தி குறைதல் நோக்கி விஷ்ணுவைப் பிரார்த்திக்க விஷ்ணு வாயுவினவதாரமாய் இவரைப் பூமியில் ‘உடுபி’ எனும் ரஜிதபீடபுரத்தை யடுத்த சிவரூப்யமென்னும் கிராமத்திலிருந்த மத்யகேஹ பட்டாசார்யாருக்கு மகவாய்த் தோன்றச் செய்தார். முதலில் இவர்பெயர் வாசுதேவாசாரியார் என்பது. அச்சுத பிரேக்ஷதீர்த்தர் பிரம மீமாம்சசாத்திர விருத்தியின் பொருட்டுப் பூர்ண பிரஞ்ஞாசாரியரை நியமிக்கக் கருதிச் சங்காபிஷேகஞ் செய்து ‘ஆநந்ததீர்த்தர்’ என்ற நாமங்கொடுத்தனர். இவர் செய்த அற்புதங்கள் பல. (3)

643. மத்தமறுகும் புனல்-மிருந்து சுழலும் கங்கை; பணத்தரவு-படங்களையுடைய பாம்புகள்; அங்கறை மிடற்றர் - அழகிய நஞ்சக் கறை பிடித்த கழுத்தையுடையவர்; மட்டுலவும் அம்புய மலர்ப்பதம் இலங்கிவரு மைக்கணுமை பங்கன் - தேன் தங்கும் தாமரை மலரைப் போன்ற பாதம் விளங்கும் மை பூசிய கண்களையுடைய உமாதேவியைப் பக்கத்திலேயுடையவர்; அருள் ஆனந்த நடனத்தர் - அருள்கின்ற இன்ப நடனத்தைச் செய்பவர்; மதம் ஆர் அத்தியுரி அம்பர நுதற் கணன் - மதம் பொருந்திய யானைத் தோலாகிய உடையையுடைய நெற்றிக்கண்ணன்; அம்பரம் - சீலை; அருந்தவர் அவர்க்கு அருள் புரிந்து மகிழ்வாய் நின்ற முதல், நற்கருணையான், அற்புத நிரந்தரன் என்று பிரிக்க; மலர்க்கணை யனங்களை யளித்தருளும் இன்ப நெடுமால்-மலர்களை அம்பாகவுடைய மன்மதனைப் பெற்ற திருமால்; அங்கமலன்-

பிரமன்; மருளார் சிற்றறிவு-மயக்க மிகுந்த சிற்றறிவு; அருள் + தந்திடு-அருடந்திடு; சித்தம் மலம்பந்தம் - மனக்குற்றங்களாகிய கட்டுக்கள்; கடவுளான நித்தியன் விளங்கும் குருநாதனை, திக்கற்றவனுக்கு எளிமையானவாய்ப் பற்பல விதம் செல்லும் மனத்தை ஒழுங்குபடுத்தி அருளைத் தந்த சிவானந்தனைப் பாதுகாப்பாயாக என்று முடிக்க. (4)

644. கமலமுகினி - தாமரைபோன்ற முகத்தையுடையவள்; கடி மிரள் கமல விழி மகாசுந்தரி-விரைந்து மிரள்கின்ற தாமரைபோன்ற கண்களையுடைய மிக்க அழகு வாய்ந்தவள்; கோட்டின் ஏர் கனகவரை முகடினைக் கொடிகள் தரு களப முலையினள் - சிகரங்களால் அழகு வாய்ந்த மேரு மலைச்சிகரத்தைப் போன்று ஒரு கொடியினிடம் பெற்ற கலவைச் சாந்து பூசிய இரு முலைகளையுடையவள்; பஞ்ச அட்ட அக்கரி-ஐந்து, எட்டு எழுத்துக்களையுடையவள், 307-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. நிமலாய மணிசடிலர் இடமதனில் நிலைகொள் நிமலி-அழுக்கின்மையையுடைய அழகிய சடையை யுடையவர் இடம் தங்கும் குற்றமற்றவள்; ஆடு அம்பரி - ஆடுகின்ற மேலிடத்தை யுடையவள்; அகம் - மனம்; சீர் அன்பர் உள் தொத்துமோர் விமலி எனப் பிரிக்க; உள் தொத்தும் - மனதில் தாவும்; மலையரையன் அருள்சுதை - இமய மலையரசன் பெற்ற புதல்வி; வினைகளகலவே - தீயவினைகள் நீங்க; விதி திகிரிகரன் அமரர் முனி பரவிய பயிரவி - பிரமன், சக்கர மேந்திய திருமால், தேவர், முனிவர் துதித்த உமாதேவி; அருள் இனிய உருவமாய் வந்த மெய்க் கீர்த்தியான் இலகும் அகம் அணி தகைகொள் குருமணி யிறைவன் எழில் சிவானந்தன்-அருளின் இனியவடிவமாய் வந்த உண்மைக் கீர்த்தியால் விளங்கும் மனதில் அணிந்துகொள்ளத்தக்க தகுதி கொண்ட உயர்ந்த குருவாகிய, கடவுளான அழகுமிகும் சிவானந்தன். (5)

645. பார்தங்கிய அன்பர் - பூமியிலுள்ள அடியார்; பிறவித்துயர்-பிறவியினலாகிய துன்பம்; பாசங்கள் தவிர்ந்து .......................... .......... சிந்தை நினைத்து-ஆசையை நீக்கிப் பிரகாசமடைந்த உண்மை நண்புள்ள இன்பத்தைத் தருபவரைப் போலும் உபாயங் கொள்வதற்கு அன்பு பெருகி உடலிலும் ஸ்பரிசம் செய்து வெல்லப்பாகு போன்று இன்பந்தரும் இசையோடு கூடிய சொல்லைச் சொல்லி நன்மையமைந்த பொருளை மனதில் நினைத்து; இவ்வடியால் மனம், வாக்கு, காயம் ஆகிய வற்றின் தொழில் கூறினர்; சீர்தங்கிய அம்பரன் மெய்த்தவ நூலுந் தரல் அங்கமிருக்கும் யோகம் புரிகின்ற அவுத்திரி சேர் இந்தவிதங்கள் - சிறப்புப் பொருந்திய கடவுளின் உண்மை சேர்ந்த தவநூல்படி அஷ்

டாங்கயோகம் செய்கின்ற அவுத்திரிதீட்சை முதலிய இந்தவிதங்கள்; இயற்று - செய்து; அளித்திட - காப்பாற்ற; வார் தாங்கிய கொங்கை மதத்தெழு சூர்மங்கை இடந்தனில் வைத்த மணாளன் தளிர் ஐந்து கரத்தினர் - கச்சுப் பொருந்திய தனங்கள் களித்து எழும்புகின்ற தெய்வப் பெண்ணாகிய பார்வதியை இடப்பக்கத்தில் வைத்த சிவபெருமானிடமிருந்து தளிர்த்த ஐந்து கைகளையுடையவர்; மாது அம்பிகை மைந்தன் - பார்வதியின் மைந்தன்; நிருத்தனை மாகம் புவியென்று துதித்து இனிதாய் அம்பூ வலம்புரியக் கர மாவின்கனி கொண்ட மகிழ்ச்சியன் - நடனமாடும் சிவபெருமானை ஆகாயமும் பூமியும் இவரேயென்று துதித்து மகிழ்ச்சியாய் அழகிய பூமியை வலமாகச் சுற்ற அதனால் கையில் மாம்பழத்தைக் கொண்ட மகிழ்ச்சியை யுடையவன்; மேருவின்புறம் தொந்தி...வயிற்றினர் - மேருமலையின் பக்கங்களிலெல்லாம் பாரதத்திற்கான சுலோக எழுத்துக்களை எழுதப்படுவதால் அழகு நிரம்பிய தந்தமும், மிகுந்த மாம்பழமும் பாசமும், அழகு நிரம்புகின்ற அங்குசமும் பொருந்த கணேசனாகத் திகழ்கின்ற தொந்தி வயிற்றை யுடையவர், இங்கு மேருவின் எனற்பாலது செய்யுள் நோக்கி "மேரின்" எனத் தொக்கது. ஏதங்கள் - குற்றங்கள்; முக்கணன் - விநாயகருக்குப் பெயர்; தெருள் தந்தி முகத்தன் - தெளிவையுடைய யானை முகத்தை யுடையவன்; ஈது இங்கு இயம்புதல் ஒப்பறு நாதன் - இதனை இவ்விடத்தில் சொல்லுதலில் இணையில்லாத தலைவன். (6)

646. பல் நகம் புனைகையால் - பல நகங்களால் அழகு தருகின்ற கைகளால்; பன்னகம் புனைகையான் - பாம்பைத் தரிக்கும் சிவபெருமான்; பத்தி இலகம் தனில் - பத்தி விளங்கும் பெருமானிடத்தில்; பத்தி இல் அகந்தனில் - பத்தியில்லாத மனத்தில்; உளைந்தேன் - வருந்தினேன்; என்ன கண்டிதமாகும் என் அகண்டிதமாகும் இறை - எது கண்டிதமாகவும் எது அகண்டிதமாகவும் உள்ளதோ அக்கடவுள்; ஏழையின் மேல் அருள் ஐ - எளியவர்களின்மீது அருள்கொண்ட தலைவன்; ஏழையின் மேலருள் - இவ்வறியாமையை யுடைய என்மீதும் அருளின; பொன் நகையுருக்கதிகொள் - இலக்குமி மகிழ்ந்து மார்பின்மீது தங்கும்; உரு - செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத் திரிந்தது; பொன் அகைஉருக் கதிகொள் - சுவர்க்கலோகம் வருந்ாதவாறு உபேந்திரனாகச் சென்று நிலைகொண்ட; புகழ் மருகன் - புகழ்ந்து பேசப்படும் திருமாலின் மருகன். மஞ்ஞையூர்தி - மயில் வாகனன்; போதம் கடந்தவன் - அறிவிற்கு மப்பாற் பட்டவன்; போதங்கள் தந்தவன் - அறிவினை உலகத்தாருக்கு ஊட்டினவன். (முருகன் தமிழ்ச்சங்கப் புலவராயிருந்தமை

காண்க). தென் அகந்தனில் உறும் - பாரத நாட்டின் தெற்கின் கணுள்ள இடமான தமிழ்நாட்டிலடையும், (முருகன் குறிஞ்சி நிலக் கடவுளாவதை ஓர்க); தென் அகம் தனில் உறும் - அழகிய மனத்தில் அடையும்; சிறக்குறு முனிக்காரியன் - சிறப்புப் பெற்ற அகத்திய முனிவர்க்குத் தமிழறிவுறுத்திய வேலையைச் செய்தவன்; காரியம் என்பதினின்று காரியன் என்ற குறிப்பு வினைமுற்றுயிற்று. சேவல் கொடிக்கு இறைவர் - சேவற்கொடியை யுடைய தலைவன்; சேவல் கொள் திக்கு இறைவர் தேவர் சேனைக்கு அதிபனே - காவலைக் கொண்ட அட்டதிக்குத் தலைவர்களாகிய தேவர்களது சேனைக்குத் தலைவனான முருகன். (7)

647. நுதல் விழியும் விழிகளிரண்டும் என்பதனால் மூன்று கண் களாயிற்று; மணிக்குழை - மாணிக்கக் குண்டலங்கள்; எழில் மேனிச் சிவப்பும் - அழகிய உடலின் சிவந்த நிறம்; புரிநூல் - பூணூல்; தலை மாலிகை - தலையிற் சூடிய மாலை; கதைச் சின்மயக்கரம் - தண்டா யுதமும், ஞான மயத்தை உபதேசித்தலுமுடைய கை; அரற்றும் - ஒலிக்கும்; கிண்கிணி - சிலம்பு; வீர கிண்கிணி - வீரக்கழல்; அரவத்து அரை நாண் - பாம்பாகிய அரை ஞாணினையும்; குஞ்சிதத்தோடு அமரும்பதத்தோன் - வளைவாக உட்கார்ந்து உள்ள பாதத்தையுடை யவன்; குணமலை - "குணமென்னும் குன்றேறி நின்றார்" என்றார் வள்ளுவர். சின்மயக்கரம் - சனகர் முதலியவர்க்கு உபதேசித்த நிலை யாகும். (8)

648. பவளக் கனிவாய் - பவளமும் கோவைக்கனியும் போன்று சிவந்த உதடுள்ள வாய்; பதும முகம் - தாமரை மலரையொத்த முகம்; பிறைச் சடையும்-சந்திரபிறையெனு மாபரணம் தரித்த பின்னல் மயி ரும்; பணிலக் களமும் - சங்கு போன்ற கழுத்தும்; கழைத்தோள் - மூங்கில்போன்ற தோள்; படிகமணி போன்றக் கரமும் - படிக மணிபோலுள்ள கைகளும்; 'போன்றக்' என சந்த நோக்கி மிக்கது; கவுளக் கயக்கோட்டு இளமுலை - மதச்சுவட்டையுடைய யானைத் தந்தத்தைப்போன்ற இளைய முலை; கதிர் வெண்கலையும் - சூரியனைப் போன்ற வெண்மையான உடை; சசி - சந்திரன்; தவளக்கமலம் - வெண்தாமரை; சதுமுகத்தோன்-பிரமன்; திவளல் - மெலிதல்; அணுக்கள் - ஆன்மாக்கள்; பனுவல் - பிரபந்தம்; நாடொறும் - நாள் தோறும். (9)

649. திருவாசகக் கடவுள் - மாணிக்கவாசகர்; அப்பர் - திரு நாவுக்கரசர்; திருநாவலஞ் சுந்தரர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்; பட் டணத் திறைவர் - பட்டினத்தடிகள்; **திருமூலர்** :- திருக்கைலை மலையில்

நந்திதேவர் அருள் பெற்ற சித்தர்; பூமியில் அகத்திய முனிவருட னிருக்க எண்ணி ஆகாய மார்க்கமாக வருகையில் திருவாவடுதுறை யண்டையில் மூலன் என்ற இடையன் இறக்கப் பசுக்கள் அவனை நீங்கா திருப்பதைக் கண்டு அவனுடலில் புக்கனர். இவரே திருமந்திரம் இயற்றினர். **மெய்கண்ட தம்பிரான்** :-சிவஞானபோத மியற்றியவர். இவர் வரலாறு 45-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. தருவாசம் ஆர் அருள்துறைமேவு-பஞ்ச தருவின் கீழ் வசித்தல்போன்று பொருந்திய திருவெண்ணெய் நல்லூரை யடையும்; **அருணந்தி** :-இவர் நடுநாட்டில் பெண்ணையாற்றின் வடகரையிலுள்ள திருத்துறையூரில் 13-வது நூற்றாண்டில் பிறந்தவர். மெய்கண்டதேவர் அருளிய சிவஞானபோதம் என்னும் முதனூலுக்கு உரையாகச் செய்யுளில் பாடினர். இது சிவஞான சித்தியார் என்று வழங்கும். தகை **உமாபதி** :-தகுதிபொருந்திய உமாபதி சிவாசாரியார்; மருவாசகங் கடந்து ஒளிர்தரும் - குற்றமும், பேச்சும் கடந்து பிரகாசிக்கும்; மகத்தோர் - மகிமையுற்றவர். **நக்கீரர்** :-கடைச்சங்க காலப் புலவர்கட்குத் தலைவராயிருந்தவர்; திருமுருகாற்றுப்படை, கைலைபாதி காளத்தி பாதி முதலியன பாடியுள்ளார். **பட்டணத்திறைவர்** :-சிவமூர்த்தி பல தலங்களுக்குக் குபேரனுடன் செல்ல குபேரன் காவிரிப்பூம்பட்டினத்தில் விருப்பமிக்கான். அதைக்கண்ட சிவன் 'இங்குப் பிறக்க' என்ற சாபப்படி சிவநேயகுப் தருக்கும் அவர் மனைவிக்கும் மகவாய்த் தோன்றினன்; சுவேதாரண்யர் என்ற பெயருடன் விளங்கினர். சிவகலை யென்பவளை 16வயதில் மணம்புரிந்தார். இவர் பல விளையாடல்கள் நிகழ்த்தி யிறுதியில் திருவொற்றியூரில் சிவமானர். இவர் கோயினன்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக் கோவை முதலியன இயற்றியுள்ளார். அருளே மருவு **வள்ளுவர்** - அருள் பொருந்திய திருவள்ளுவர்; துங்க **அவ்வை** - பரிசுத்தம் பொருந்திய அவ்வை; **கடுவெளிச் சித்தர்** :-ஒரு சித்தர் இவர் தம் ஆன்மானுபவத்தைப் பிறருமறிந்து அவ்வழி நடந்து சீர்பெறப் பிரபஞ்சத்தைச் சுத்த வெளியென்று கண்டு இப்பெயர் அடைந்தவர்போல் தெரிகிறது. இவர் செய்த நூல் கடுவெளிச் சித்தர் பாடல். **சிற்றம்பலவர்** :-இவர் மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்தவர். சிவப்பிரகாசம் என்ற நூலுக்குக் கருத்துரைச் சூத்திரம் செய்தார். **உமாபதி சிவாசாரியார்** :-இவர் சோழநாட்டில் திருப்புலியூரில் சைவ வேதியர் குலத்தி லவதரித்தவர். மறைஞான சம்பந்தர் இவரது பரிபாகமறிந்து சிவஞானபோதத்தை யுபதேசித்தனர். இவர் கோயிற்புராணம், திருமுறைகண்டபுராணம், சேக்கிழார் நாயனர் புராணம் முதலியன செய்துள்ளார். **சிவவாக்கியர்** :-இவர் தமிழில் தம் பெயரால் சிவவாக்கியம் என்ற

நூல் செய்தவர். இவர் பூமியில் பிறக்கையில் 'சிவா' என்று சொல்லிக் கொண்டு விழுந்தபடியால் இவர்க்கு இப்பெயர் இடப்பட்டது. **கண்ணுடைய வள்ளல் :-** திருஞானசம்பந்த சுவாமிகள் திருவருள் பெற்றவர். இவர் செய்த நூல் ஒழிவிலொடுக்கம், மாயாப் பிரலாபம். **குகை நமசிவாயர் :-** இவர் திருவண்ணாமலையில் ஒரு குகையில் நிஷ்டை செய்துகொண்டிருந்த சித்தர். இவர் குகையிலிருந்ததால் இப்பெயர் பெற்றார். இவர் அம்மலையில் தூங்கும் ஊஞ்சலிட்டு அதில் சயனித்து நிஷ்டை புரிந்துவந்தனர். இவர் மாணாக்கர் குருநமசிவாயர்; இவர் செய்த நூல் அருணகிரியந்தாதி. **கண்ணப்பர் :-** அறுபத்து மூன்று நாயன்மார்களிலொருவர். வேடுவர்; காளத்தி மலையில் முத்தி பெற்றவர். வள்ளுவர், அவ்வை இவர்களைப் பற்றியது அறிந்த விஷயமேயாகும். உருவாசம் இனி வாராமல் காக்க - உருவத்துடன் வாழும் வாழ்க்கையினி வாராமல் காப்பதற்கு. (10)

---

# செங்கீரைப்பருவம்

---

650. வெண்பொடி - விபூதி; முத்தம் - முத்துப்போன்ற ஆனந்தக் கண்ணீர்; மந்தகாசம் - புன்சிரிப்பு; மருமம் - மார்பு; அணியல் - மாலை; சிவன் விழியின் மணிகள் தாவடமும் - சிவனது நெற்றிக் கண்ணைப்போன்று பிரகாசமிக்க முத்தினாலாகிய கழுத்தணி மாலை; இன் - ஐந்தாம் வேற்றுமை உவமப் பொருவு; அரையிலாட - இடுப்பில் அசைய; அருண அம்புயமதனில் இனிய கரதலமதனில்-சிவந்த தாமரையைக் காட்டிலும் இனிய கையிடத்தில்; அஞ்சலுடன் வரதம் - அபயமுடன் வரதமும், இதன் விரிவை 537-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. சரணம் - பாதம்; தெருளவரும் அடிமையர்கள் - மனந்தெளிவுடைய வரும் அடியார்கள்; தவ + ஆனந்தன் - தவானந்தன்; நீதன் - நீதியையுடையவன். (1)

651. அஃது அற - அந்நோய் நீங்க; பரிவாய் - இரக்கமாய்; உயர் மூன்று நாடி - இடைகலை, பிங்கலை, சுழிமுனை என்ற மூன்று நாடிகள்; பாத்து - பகுத்து; இரண்டையும் - இடைகலை, பிங்கலையாகிய இரண்டையும்; ஒரு நாடி - சுழிமுனையெனும் ஒப்பற்ற நாடி; விழி நோக்கி-மூக்கின் மத்திய பாகத்தில் விழி முகமாகச் செலுத்தி; ஏந்து ஙதப்பை யவிழ்த்து இனிய வெண்பொடி யவிழ்தம் - தாங்கிய சிறிய

விபூதிப்பையை அவிழ்த்து இனிய விபூதியாகிய அமிர்தத்தை; ஈந்து கரம் இட்டு இதற்கு நிலையுறும் பத்தியம் தனது பாத உதகம் நிவேத்தியம் - கொடுத்துக் கையிலிட்டு இதற்கு நிலையுறும் பத்தியமாவது தனது (சிவானந்தனது) பாத நீராகிய நிவேத்தியமேயாகும்; வேறும் நியமமாகாது உந்தன் உறுதி யெந்தன் வழியில் நில்லென்று - வேறாகிய ஒழுக்கம் கூடாது உனது மனவுறுதியோடு எனது வழியில் நட என்று கூறி; வினைகள் தீர்க்கத் திலதமாய் ஒரு வயித்தியனாக - தீவினைகள் நீங்க நெற்றித் திலகம்போன்று ஒப்பற்ற வைத்தியனாக. (2)

652. பாசமெனு மடவி - ஆசையென்கின்ற காடு, உருவகம்; ஒருமையின்றி-மனமொருமிக்கை யில்லாமல்; பஞ்ச இந்திரிய வேடர் - உருவகம்; ஓசை நுகரும் குழைக்கு இன்பம் மருவச் சிவன் உண்மை மொழி பேசுவாயும் -ஓசையை யனுபவிக்கும் குண்டலமணிந்த காதிற்கு இன்பமடைய சிவனது உண்மை விளக்கங்களைப் பேசுகின்ற வாயும்; உடலமது புளகமுற இனிய பரிசனை யுதவும் ஒளிமலர்க் கரமிரண்டும் - உடல் புளகாங்கித மடைய இனிய ஸ்பரிசத்தை யுதவும் பிரகாசம் பொருந்திய தாமரை மலர்போன்ற கைகளிரண்டும்; மாசறுங் கண் புனல் காண்டல் கொண்டு இன்பமுற வாய்த்த சங்கம வேடம் - குற்றமற்ற கண்களினின்று ஆனந்த நீர் காண்பதைக் கொண்டு இன்பமுறப் பொருந்திய அடியார் வேடமும்; வாய்க்கு உணர்வு தீர்த்தப் பிரசாதமும் - வாயினுக்கு நன்கு சுவையுணர்வுள்ளது குருவான சிவானந்தனது பாத தீர்த்தமாகிய பிரசாதமும்; நாசிக்கு வாசம் அரவிந்த பதம் - மூக்குக்கு வாசனையுடைய தாமரை போன்ற பாதம்; தேசுலவும் உழை காட்டி உழையைப் பிடிப்பதாய் - ஒளிவாய்ந்த மானைக்காட்டி மானைப் பிடிப்பது போல. (3)

653. உவந்து அசுத்தமில்லாத இடமாம் ஆரூர் நிலத்தினில் என்று பிரிக்க; மருளான இருமாயை கன்மம் திரோதம் இருள் மருவிய சிற்றறிவு எனும் வகைகொளும் களையைப் பிடுங்கி - மயக்கம் பொருந்திய சுத்தமாயை, அசுத்தமாயை என்ற இரண்டும், சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்ற மூவகைக் கன்மமும், மறைக்கும் இருள்பொருந்திய சிற்றறிவு என்ற வகைகொண்ட களையைப் பிடுங்கி; வாடுதல் - தளர்தல்; நன்றாய் விளக்கி - நன்றாய்ச் செழிக்குமாறு செய்து; பலன் தருவது என்று எனப் பகர்வு கொண்டு உள்ளம் பழுத்த பின்பு அதனை யினிதாய்த் தெரிவரிய பெருவீடு சேர்க்கின்ற - பலன் தருவது என்றைக்கோ என்று உணர்த்துதல் கொண்டு மனமாகிய கதிர்கள் பழுத்த பிறகு அவ்வகை மகிழ்வுடன் ஆராய்தற்கரிய பெரிய வீட்டில் (மோட்ச

வீட்டில்) சேர்க்கின்ற வல்லவனே; ஆரூர் நிலத்தினில் உழவைச் செய்து அறிவாகிய விதையை விதைத்து மயக்கங்கொண்ட இரண்டு பெரிய மாயைகள், மூன்று கன்மங்கள், மறைக்கும் திரோதமலம் பொருந்திய சிற்றறிவு என்ற வகைகளைக் கொண்ட களைகளைப் பிடுங்கி அப்பயிரைத் தளராமல் வளர்த்துக் காலத்தில் நன்கு விளங்கத் தன்னுடையதென்று கருணையுடன் கவனித்து நன்றாய்ச் செழிக்கச் செய்து பலன் கொடுப்பது என்றோ என்று உணர்த்துதல் கொண்டு மனமாகிய கதிர்கள் பழுத்த பின்பு அவைகளை மகிழ்வுடன் ஆராய்வதற்கரிய பெரிய வீட்டில் சேர்க்கின்ற வல்லவனே என்று பொருள் கொள்க. (4)

654. உயிரினம் அவத்தை - உயிர்கள் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்று ஐந்து அவத்தைகளையடையும்; உணர்வரியதாம் இருள்தனை விலக்கும் ஓர் உண்மையாய் என்று பிரிக்க; பகல் இரவும் இன்றிய சுடரதாய் - பகலும் இரவுமில்லாத ஒளியையுடையதாகி; அலகிலுயிர் - அளவில்லாத உயிர்; இதம் அகிதமும் காயும் அருணன் - இன்பத்துடனும் துன்பத்துடனும் காயும் சூரியன்; வலவன் - தேர்ப்பாகன்; அந்தரத்தினில் நின்று இழிந்து மனம் உருகு வார் அம்புயம் பூரிக்கவும்-ஆகாயத்தினின்று இறங்கிய சூரிய கதிர்க்காக மனம் உருகும் தாமரைமலர்கள் மலர்ந்து களிக்கவும்; பருதி - சூரியன்; திலதம் - பொட்டு. (5)

655. திணை - பூமி; வளி - காற்று; வெளி - ஆகாயம்; மேற்கூறிய அடியால் பஞ்ச பூதங்களை யுணர்த்தினர். ஒலியுணர் செவி - சப்தத்தை யறிகின்ற காது; தோல் - மெய்; விழி - கண்கள்; சிங்குவை - நாக்கு; இவ்வடியால் ஞானேந்திரியங்களைக் கூறினர். "ஒலி பரிசமும் உருவாய், இரத, மணமதுவாய்"-என்ற அடியால் சூக்கும பூதங்களான நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்பனவற்றைக் கூறினர். "வாக்கு, அடியும், கரமும்..........குதமாய்"-இவ்வடியால் வாக்கு, கைகள், பாயுரு, பாதம், உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்களைக் கூறினர். பாயுரு - அப்புவினிடமாக நின்று மலசலத்தைக் கழிக்கும். உபத்தம் - குதம்; மனமும் புத்தியும் ஆங்காரத்துடன் மகிழ் சித்தமுமாகி - மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகியவைகளாகி; மேற்கூறிய பஞ்சபூதம் 5, ஞானேந்திரியம் 5, சூக்கும பூதம் 5, கன்மேந்திரியம் 5, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன 4, ஆக 24-உம் ஆன்மாவுடைய கருவிகள்; அகங்காரம் - 1. தைசத அகங்காரம். 2. வைகாரிக அகங்காரம். 3. சாத்துவிக அகங்காரம் என்று வகைப்படும். தைசத அகங்காரத்தில் தன் மாத்திரைகளும், வைகாரிக அகங்காரத்தில் கன்மேந்திரியங்களும், சாத்துவிக அகங்காரத்தில் ஞானேந்திரியம் ஐந்தோடு மனம் ஒன்றும் தோன்றும். இணைதரு மூக்காலமதாய் நியதியும் எழில்கலை

வித்தையுமாய் இராகம் புருடனும் மாயையுமாய் - இவ்வடியால் மூன்று காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை ஆகிய ஏழு வித்தியா தத்துவங்களைக் குறித்தார். இப்பாட்டில் 36-தத்துவங்களில் ஆன்ம தத்துவங்களையும் வித்தியா தத்துவங்களையும் குறித்தார். அடிமைக்கு அணிதரும் மலரடி தரும் இறைவா என்று பிரிக்க. (6)

656. சிவதத்துவம் - சிவனுக்கிடம், நாதமென்று பெயர். பிரேரம் - தொழில் படுத்தல். தவமிகுந்த சிவதத்துவமாய் சத்தியினியக்கத்தை உதவாததாய் தகுதியை யுடையதாய் 36-தத்துவங்களைச் சேர்ந்து தாங்குவதாய் ஒன்பது வடிவாய் (உருவம் 4, அருவம் 4, அருவுருவம் 1) உடல், அந்தக் கரணங்கள், பூமி, போகங்கள் ஆகியவைகளை நல்கியதாய் புண்ணிய பாபங்களைப் பெற்றதாய், தன்னுடைய வினையினலேயே பலபேதங்களாய்ப் பாவங்களை நீக்கி உதவுகின்ற முடிவானவனுய்த் தனித்தன்மையை யுடையவனுய் நிலையானவனுய் கூறும் மறைத்தலும், கருணைசெய்தலுமான அருள்வடிவானவனுய் வீணுன செல்வத்தை நீக்குதற்கு வந்த தவச்செல்வத்தை யுடையவனே என்று பொருள் கொள்க. பவம்-பாவம் ; திரோதம் - மறைத்தல்; நவவடிவின் விரிவை 69-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. (7)

657. உயிர்கள் கேவலம், சகலம், சுத்தம் என்று மூன்று காரணவத்தைகளும் அவற்றின் உட்பிரிவாகிய பதினைந்து காரியாவத்தைகளும் உள்ளனவாதலால் 'கேவலமதில் நிலைபெறுமுயிர்' என்ருர்; இருள் தன்னை அகன்று அறிவின் என்று பிரிக்க. பரம் + அறிவு - பரத்தையறியும் அறிவு ; இது பரவறிவு என நின்றது ; இதில் இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி, பராசத்தி ஆகிய சத்திகளின் விரிவைக் காண்க ; பரயோகம் - பரனையறியும் யோகம் ; இறை - தலைவன். கேவலமதில் நிலைபெறு முயிர்க்கு ஆதரவுவரச் செய்வது இச்சாசத்தியாகவும், அவ்வுயிர்கட்கு இருளாகிய மலம் நீங்கத்தருவது கிரியாசத்தியாகவும் இருளை நீங்கி அறிவின் தன்மையாகச் செய்வது ஞானசத்தியாகவும் கூறினமை காண்க. பரை - பரரூபம் ; **பரரூபம்**:-சடசித்துக்களாகிய தாவர சங்கமங்களுக்கெல்லாம் தான் வேறறநின்று பெருமை பொருந்திய காருண்ய சத்தியே தனக்குத் திருமேனியாகி ஆணவ மலஞ் சகசமாயிருக்கப்பட்ட ஆன்மாக்கள் பாக பேதங்களைத் திருவுள்ளத் தடைந்து தனதிச்சா ஞானக்கிரியையின் செய்தியாகிய மாயா தத்துவங்களினுல் சிருட்டித்தும், திதித்தும், சங்கரித்தும் மலபாக வாழ்விலே யிந்தத் தத்துவங்கள் வேறும்படிக்குச் சத்திநிபாதத்தை விளைவித்துச் சத்திநிபாதத்தின் வழியிலே புறம்பே கட்புலனுக்குத் தோன்ற பூரணிடச்சட்டை சாத்தி எழுந்தருளி வந்து தான் வேறற நிற்கிற

முறைமையைத் தருகின்றவன் ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவிற் கறிவா யிருக்கிற முதல்வனேயென்று பிரதிக்கினை, எது, திருட்டாந் தங்களினாலே மயக்க விகற்பமறத் தன்னறிவிலே விளங்கக் கண்டு நின்ற அவதரம்; **பரிதரிசனம்:-** ஆன்மாவென்பது எவ்விடத்திலுந் தோன்றாம லெனதென்றும் யானென்றும் நின்ற அசத்திய போதம் நீங்கத் தேசிக மூர்த்தியினுடைய அனுக்கிரக ஞானம் பிரகாசித்து நின்ற அவதரம் முதல்வனுடைய பாதம் என்றும், தன்னையுணர்த்தும் பகுதியாகத் தாக்குவதான விடய போகங்களை அவன், அவள், அது வாய் நோக்குமிடமெல்லா மவனுடைய அனுக்கிரகத்தையே கண்டனுப விக்கும் அவதரம் முதல்வனுடைய திருமுகம் என்றும், அந்த அனுக் கிரகத்திலே தற்செயல் தோன்றாமல் பரவசப்படும் அவதரம் முதல் வனுடைய திருமுடியாமென்று மறிந்து இந்த வுண்மையினைச் சந்தேக விகற்பமற வுள்ளபடி விசாரித்துத் தேர்ந்து இதுவல்லாமற் சத்தியமா யுள்ள பொருள் வேறேயு மொன்றில்லையென்று தெளிந்து, எனது யானென்னும் விகற்பமாகிய பிருதிவி முதல் நாதமீறாகச் சொல்லப் பட்ட சகலாவத்தையிலும் பொருந்தாமல் இந்தக் கருவிகள் நீங்கினால் தனக்குள்ள சகசநிலையாகிய கேவலாவத்தையிலும் பொருந்தாமல் இந்தக் கேவல சகலமிரண்டும் நீங்கினவிடத்து விளங்குவதான போத பூரணமாகிய அகம் பிரம ஞானத்திலும் பொருந்தாமல் தேசிக மூர்த்தி யினுடைய செய்தியாய் அறிதற்கரிதாகிய மேலான பூரண வின்பந் தோன்றாமல் ஏகதேச வியாபாரமாகிய தனுகரணாதி இன்பமே தோன்ற அந்த வின்பங்களையே மெய்யென்றனுபவித்து நின்ற முறைமை போலத் தனுகரணாதி யின்ப மெவ்விடத்திலும் தோன்றாமல் பூரணவின் பத் தொடர்ச்சியாகிய தேசிகமூர்த்தத்தி னனுக்கிரக ஞானத்தினை யெவ் விடத்திலும் கண்டனுபவிக்கும் அவதரம். **பரயோகம்:-** சடசித்துக் களிரண்டினு நின்று விளங்குவதாகிய இதாகிதங்களுக் கேற்ற சத்தாதி விடயங்களிலே யெந்த விடயங்கள் வந்து தாக்கினாலும், அந்த விடயங்களை யெதிரிட்டுப் பார்த்து இவை மாயாகாரியமான தனுகரணபுவன போகங்களினுடைய விகற்பமென்றும் இந்த விடயங்களினின்றும் விளங்குவதாகிய இதாகிதங்கள் கன்மத்தினது விகற்பமென்றுங் கண்டு தனக்கெனச் சற்றுஞ்செய்தியில்லாத சடரூபமாகையினாலே தானாகச் செய்திடவறியாது அந்த விடயங்களை யதுவதுவாகப் புசிக்கு மான் மாவை நித்தியனாய்ப் பூரணனாயறிவாயிருந்தாலும் தானாக வொன்றையு மறிதற் கறிவில்லை யென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து அந்த அருளினது நிறைவெல்லாந் தனது வடிவாக வுடைய பூரண வின்ப மெனக் கண்டித்துக் குருமூர்த்தமா யெழுந்தருளி மானிடச் சட்டை தரித்து வந்துபதேசித்த வனுக்கிரகத்தை யுள்ளபடி தரிசித்து இவ்

விடத்திலே வந்து பொருந்தப்பட்ட சத்தாதி விடயங்களை யெல்லாம் அந்த வனுக்கிரகத்தினாலே பொருந்திப் பார்த்து இந்த விடய போகங்களின் வழித்தாய்த் தீவினையைச் செய்விக்கிறதும் அனுக்கிரகமாகிய திருவருள் தானே இந்த நன்மை தீமைகளை யறியும் படிக்குப் புசிப்பாகி வந்த விடய பேதங்கட்கும் அவ்வனுக்கிரகமாகிய அருள்தானே யென்றுள்ளபடி தரிசித்து இந்த முறைமையே யன்றிச் சித்தாகிய ஆன்மவர்க்கத்திற்கும் சடமாகிய பாச சாலங்கட்கும் ஒன்றை யொன்ற றியவும் ஒன்றையொன்று பொருந்தவும் ஒரு சற்றுஞ் செயலில்லை யென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து அந்தப் பொருளோ டிசைவதாகிய அவதரம். **பரபோகம் :-**எத்தகைய தொழில்களைச் செய்தாலும் தற்செய லெவ்விடத்திலுந் தோன்றும லனுக்கிரகமாகிய அருணிறைவிலே வேறறநிற்கில் அந்த அருளுக்கு முதன்மையாகிய நேயம் அவனதறிவு பூரணமெல்லாம் தனது வடிவாகக்கொண்டு தானந்த அறிவு பூரணத்திற் கெல்லா முயிராய் இவனதறிவு தொழிலாகிய இந்திரிய போகங்களாய் வரும் புசிப்புந் தொழிலும் தனது புசிப்புந் தொழிலுமாகவே புசித்துத் தொழிற்படும் நானாவிதமாகிய போகங்களை யெல்லாம் இவனுக்குத் தனதுபூரண வின்பமாகிய நேய வடிவமாகவே காட்டி இவனதறிவு பூரணமெல்லாந் தனதின்பப் பூரணமாகவும் தனதின்பப் பூரணமெல்லாம் இவனதறிவு பூரண மாகவும் வேறறத்தோன்றிநின்று தனதின்ப நிறைவெல்லாம் இவனது அனுபோக பூரணத்தை யமிழ்த்தி நிற்குமவதரம். (8)

658. ஓதும் புராணங்கள் ஓதேன் மன் பாதந்தேடேன் ஓர் அன்பர்பால் தங்கி ஓரேன் - என்று பிரிக்க; மன்பாதம் - நிலைத்துள்ள பாதம்; ஓரேன் - பல விடயங்களைச் சிந்திக்கவில்லை; ஈது அங்கின் மேல் நின்ற - இது நெருப்பின் மேல் நின்ற, அங்கியின் என்பதன் தொகுத்தல் அங்கின்; பாதங்களை தந்து நீ தான் அஞ்சேல் என்றான் - பாதங்களை நினைக்கச் செய்து 'நீ பயப்படாதே' என்று கூறினன்; ரூபாய்-உருவமாய்; வேதங்கள் ஈறின் கணுவார் அன்பே-வேதங்களின் ஈற்றிடமுள்ள அடியார்களின் அன்பனே; இன்பாக மேவும்-இன்பமாய் அடியார் மனதில் மேவும். (9)

659. பேருங் கணூரின்றி யானே என்பால்-பெயரும், இடமான ஊரு மில்லாதவனை என்னிடம்; இன்றியான் - வினையாலணையும் பெயர்; பேரின்பமாய் கண்டுகொண்டேன் - எங்குமாய்க் கண்டுகொண்டேன் என்று கூட்டுக; பேதங்கள் தானொன்று மாகாதென்றே என்று பிரிக்க; இக்குறிப்பின் 739-பாட்டில் இதன் விவரம் காண்க. சேருந்த வானந்தர் மேலாய் என்பால் அன்பாகி - உன்னையடையும் தபசிகளைக் காட்டிலும் மேலாய் என்னிடம் அன்புடையவனாகி. (10)

# தாலப்பருவம்

660. **முதலாகிய ஆதாரம்:-** ஆறு ஆதாரங்களில் முதல் ஆதாரம் மூலாதாரம் என்று கூறப்படும். வம், சம், ஷம், ஸம் என்ற நான்கு எழுத்துடன் கூடிய நான்கு தளமுடைய கமலம் வீணை தண்டத்தின் அடிப்பாகத்திலுள்ளது. சித்தலக்ஷிமி, வல்லபை என்ற இரண்டு சத்திகளுடன் கணபதி வீற்றிருக்கிறார். இதில் முக்கோணமான வடிவத்தின் மேல் கணபதி மேற்கூறியவாறு உள்ளார்; இடைகலை, பிங்கலை-முறையே இடப்பக்கமாய் மூச்சுவிடுவது, வலப்பக்கமாய் மூச்சு விடுவது. இது பின்னும் இவ்வாறும் கூறப்படுகிறது. காலெலும்பு இரண்டும் கதிரெலும்பும் கூடிய இடம் குய்யம்; குய்யத்துக்கும் குதத்துக்கும் நடுவே குண்டலிவட்டமாய் அந்த வட்டத்துக்கு நடுவே திரிகோணமாய் அந்தத் திரிகோணத்துக்கு நடுவே நாலிதழுடைய ஒரு புட்பம் வட்டமாய்க் கடப்பம்பூ போன்றிருக்கும். அந்தப் புட்பத்துக்கு நடுவில் ஓங்காரவெழுத்து நிற்கும். அந்த ஓங்காரத்திற்கு நடுவில் விக்கினேஸ்வரனும் பச்சை நிறமுள்ள வல்லபைச் சத்தியும் எழுந்தருளியிருப்பார்கள். மாணிக்க நிறம். **சுவாதிஷ்டானம்:-** இது ஆறாதாரங்களில் இரண்டாவது; 'பம்' முதல் 'லம்' வரையிலுள்ள ஆறு எழுத்துடன்கூடிய ஆறு தளமுடைய கமலம். ம்சேரு தண்டத்தின் அடிப்பாகத்திற்குக் கொஞ்சம் மேல் பாகத்தில் உள்ளது. சாவித்ரி, காயத்ரி என்ற இரு சத்திகளுடன் பிரமன் வீற்றிருக்கிறார். இது மேலும் கீழ்வருமாறும் கூறப்படுகிறது. மூலாதாரத்திற்கு இரண்டு விரற்கடைக்கு மேலிருப்பதாகும். நாற்சதுரமும் அச்சதுரத்தின் நடுவே ஆறிதழ்களையுடைய ஒரு புட்பவடிவமும் அதன் மத்தியிலே லிங்கபீடமும் வீணாத்தண்டி னடியுமா யிலங்கி அதனடு மத்தியிலே நகார எழுத்து நிற்கும். அந்த நகாரத்தின் நடுவில் பிரமாவும் சரஸ்வதியும் வீற்றிருப்பார்கள். இது பிருதிவியின் கூறாகும். செம்பொன்னிறம்; சதுர்கோணம் - நான்கு கோணமமைந்த சதுரம்; பகர்வுக்கரிய - சொல்லுதற்கரிய; மேற்கூறியவைகளால் பாட்டின் பொருள் விளங்குதல் காண்க. (1)

661. **மணிபூரகம்:-** இது ஆறாதாரத்தில் மூன்றாவது 'டம்' முதல் 'பம்' வரையிலுள்ள பத்து எழுத்துக்களுடன் கூடிய பத்துத் தளமுடைய கமலம். கொப்பூழ் (தொப்புள்) பிரதேசத்திலுள்ளது; பூமிதேவி, இலக்குமி என்ற இரு சத்திகளுடன் விஷ்ணு வீற்றிருக்கிறார். இது மேலும் கீழ்வருமாறு கூறப்படுகிறது. சுவாதிட்டானத்

துக்கு எட்டு விரற்கடை பிரமாணத்துக்கு மேலிருப்பது மணிபூரக மாகும். இது கோழிமுட்டைபோல 1008-நரம்பு நாடிகளும் சூழ நாடிக் கெல்லாம் வேருள்ளது. இதை உள்ளறிவுள்ளோர் உந்திக் கமலமென்று சொல்வர். இது தொப்புளுக்கு நேரில் அப்பு ஸ்தானத்தில் ஏழாம் பிறைக்கிணங்கி யிருக்குமாம். இதன் நடுவே பத்து இதழையுடைய ஒரு புஷ்பம் வட்டமாயிருக்கும். அப்புஷ்பத்தின் நடுவே மகார வெழுத்து நிற்கும். அந்த மகாரத்திற்கு நடுவில் மகாவிஷ்ணுவும் இலக்குமியும் எழுந்தருளியிருப்பர். மரகத நிறமுள்ளது. **அநாகதம் :-**இது ஆறு தாரத்தில் நான்காவது. 'கம்' முதல் 'டம்' வரையிலுள்ள பன்னிரண்டு தளமுடைய கமலம். இருதயத்திலுள்ளது; கௌரி, அம்பிகை என்ற இரு சத்திகளுடன் உருத்திரன் வீற்றிருக்கிறார். இது கீழ்வருமாறும் கூறப் பட்டுள்ளது. மணிபூரகத்திற்குமேல் 10-விரற்கடை பிரமாணமுள்ள இடத்திற்குமேல் உள்ளது. இது இருதய கமலமாம். தேயு ஸ்தானத்தில் முக்கோணமாயிருக்கும். அந்த முக்கோணத்தின் நடுவில் பன்னிரண்டி தழையுடைய ஒரு புட்பம் வட்டமாயிருக்கும். அந்தப் புட்பத்தினடுவில் சிகாரவெழுத்து நிற்கும். அந்தச் சிகாரத்தினடுவில் உருத்திரனும் பார் வதியும் அமர்ந்திருப்பர். அக்கினி நிறமுடையது. தவள நிறம் - வெண் ணிறம் ; அரி - திருமால் ; மலர்மாது - இலக்குமி ; அப்பால் திகழ்ந்த அநாகதம் என்று பிரிக்க ; தண்தாமரைத்தாள் உருத்திரை - குளிர்ந்த தாமரை போன்ற பாதமுடைய உருத்திரை ; புகழ் தாலுரை - வினைத் தொகை, புகழ்ந்த தாலாட்டுப் பாட்டு என்க. (2)

662. **விசுத்தி :-**இது ஆறுதாரத்தி லொன்று. 'அம்' முதல் அ: (விஸர்க்கம்) வரையிலுள்ள பதினாறு எழுத்துக்களுடன் கூடிய 16-தளமுடைய கமலம். தாலுவின் அடிப்பாகத்திலுள்ளது. இதில் உன் மணி, வாக்வாதினி என்ற இரு சக்திகளுடன் மகேச்வரன் வீற்றிருக் கிறார். இது மேலும் இவ்வாறு கூறப்படுகிறது. அநாகதத்திற்குப் பத்து விரற்கடை பிரமாணமுள்ள இடத்துக்கு மேலுள்ளது. இது கண்ட ஸ்தானத்திலே வாயுஸ்தானத்திலுள்ளது. அறுகோணமாயிருக்கும். அந்த அறுகோணத்தின் நடுவில் பதினறிதழையுடைய ஒரு புட்பம் வட்டமாயிருக்கும். அந்தப் புட்பத்தினடுவே வகாரவெழுத்து நிற்கும். அந்த வகாரத்தினடுவில் மகேஸ்வரனும் மகேஸ்வரியுமிருப்பர். கரு நிறத்தையுடையது. (மேகநிறம்) ; **ஆக்கினை** அல்லது **ஆக்ஞை :-** இது ஆறுதாரத்தி லொன்று; 'ஹம்','க்ஷம்' என்ற இரு அக்ஷரங்களுடன் இரண்டு தளங்களையுடையது. புருவமத்தியிலுள்ளது. இதில் மனோன் மணி, தர்மசக்தி என்ற இரு சக்திகளுடன் சதாசிவன் குருவடிவமாக வீற்றிருக்கிறார். இந்த ஆறு ஆதாரங்களையும் திருமந்திரத்தில் கூறிய வாறு காண்க :—

" நாலும் இரு மூன்றும் ஈரைந்தும் ஈராறும்
கோலிமேல் நின்ற குறிகள் பதினாறும்
மூலங்கண் டாங்கே முடிந்து முதலிரண்டுங்
காலங்கண் டானடி காணலு மாமே."

மற்றுமிது 662 - ஆம்பாட்டாகிய இதற்கு மாறுபாடாகக் காணப்படுகிறது. கீழ்வருமாறே பாட்டிலுமுள்ளது. விசுத்திக்கு 12-விரற்கடை பிரமாணமுள்ள இடத்துக்குமேல் ஆக்ஞை லலாட பீடத்திலுள்ளது. வீணாத்தண்டின் முடியுமாய் ஊடுருவி பொன்போன்ற வடிவமுற்று நிற்கும். நெற்றிப் புருவத்தின் வெளியாய் ஆகாச ஸ்தானத்தில் மூன்றிதழையுடைய ஒரு புட்பத்தினடுவே யகார வெழுத்தோ டிணங்கி நிற்கும். அந்த யகாரத்திற்கு நடுவில் சதாசிவமும் மனோன்மணியும் எழுந்தருளியிருப்பர். மேக நிறத்தையுடையது (படிக நிறம்) ; இந்த ஆறு ஆதாரங்களும் அவ்வவ்விடத்தில் தோன்றுவது போலிருக்கும். துலங்கிய கர்த்தன் உக்கிரக வேலை நடத்தும் சதாசிவன் என்று பிரிக்க ; புரை-சத்தி ; துகள்தீர் எழுத்து - குற்றம் நீங்கிய எழுத்து. (3)

663. **மதிமண்டலம்** அல்லது **சந்திரமண்டலம்** :-மூலாதாரந் தொடங்கி ஒவ்வோரெழுத்தை முன்னிட்டுக்கொண்டு சிரசு நடுவே கோடி சூரியர் உதயமானாற்போலப் பிரகாசிக்கும். இந்த அமிர்தகலை அக்கினி மண்டலத்தை நோக்கி ஜோதியாயிருக்கும். இதை அமிர்தகலையென்றும் சொல்வதுண்டு. அமுர்தம் மேல்நோக்கி அக்கினி கீழ்நோக்கிச் சரியாய் நிற்கும். இதற்கு நடுவில் பராசக்தி எழுந்தருளியிருப்பாள். **பிரம்ம ரந்திரம்** :-புருவமத்தியின்மேல் ஆயிரம் தளமுடைய கமலம் பிரம ரந்திர ஸ்தானத்திலுள்ளது. அதில் பராசத்தியுடன் பரமசிவன் வீற்றிருக்கிறார். ஆறு ஆதாரத்தையும் கடந்தது இது. 'பொறியும் புலனும்..............ஆதாரம்' - ஐம்பொறியும், ஐம்புலனும், காற்றுடி போன்று சுற்றும் மனமுதலிய அந்தக்கரணங்களும், மூன்று குணங்களும் புகழமைந்த விந்து, நாதமும், ஐம்பெரும் பூதங்களுமாகிய இவற்றோடு இவற்றாலமைந்த முறைமையான ஆறுஆதாரங்களையும் ; தேக்கி-நிறைத்து; உரையாது உரைக்கும் நால்-பேச்சையும் கடந்து சொல்லும் நால் பாட்டு ; ஒன்றாய் - சிவத்துவமாய்ச் செயலற்ற நிலையாய் ; இரண்டாய் - சிவம், சக்தி என்ற இரண்டு நிலையாய், மூன்று ஆடி - அருவம், உருவம், அருவுருவம் என்ற மூன்று நிலைகளிலும் ஆடி ; இருபத்தஞ்சு ஆடி - இருபத்தைந்து வடிவங்களாக ஆடி, மகேச்வரனுக்கு இருபத்தைந்து வடிவங்கள் ; முப்பத்தஞ்சு ஆடி-நாதம் நீங்கிய முப்பத்தைந்து தத்துவங்களிலும் நிறைந்து ஆட்டி. (4)

664. தகப்புனே யொத்தவனய் வந்து சிவசட்டைநாதனும், குருபரனுன தத்தாத்திரையர் திருவருளின் சந்ததியை விளக்குவதற்கு எனது அருளில் உதித்த அருமைக் கொழுந்தை யொத்தவனே உண்மைத் தத்துவம் வளர்கின்ற கண்மணியை யொத்தவனே மகிழ்ச்சியமைந்த செல்வம் இருக்க ஆறு ஆதாரங்கள் பொருந்திய செல்வம் உனக்கு எதற்கு? என்று கூறி மனமகிழக் கண்ணைத் துடைத்து விளங்கும் ஆனந்தவெள்ளத்தில் பொருந்த முழுகி இன்ப மழையை நிறைத்து இன்பமாய் இன்பவடிவாகிய அணுத்திரளில் தாலாட்டல் செய்யும் எல்லாவற்றையும் கடந்த பொருளாயுள்ளவனே என்று பொருள் கொள்க. கந்தம் - அணுத்திரள்; அதீதம் - எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது; விழிதுலக்குதல் - கண்களைத் துடைத்தல்; **சட்டைநாதன்:-** இவர் சீர்காழியில் இருந்து வாதுளாகமத்தின் ஞானபாகத்தைச் சதாசிவரூபம் எனத் திரட்டிய சைவர். இப்பாட்டில் கூறப்படுவது இவராக விருக்கலாம். (5)

665. ஏகன் - ஒப்பற்றவன்(அ)தனித்தவன்; அநேகன் - பல வுருவங்களுடையவன்; ஏகாநேகா - ஏக + அநேகா. ககனுதிகள் யாவும் சுத்தமது ஈறே - ஆகாய முதலிய பஞ்சபூதங்களிலும் உண்மையாய் ஈறு முதல் எங்கும் வாழ்பவனே; கருணுகரன் - கருணைக்கு உறைவிடமானவன்; காணூர் - எதிர்மறை வினையாலணையும் பெயர்; சுகவாரியின் ஈறின்கண் பெற்றுய் தாதாவாய் - ஆனந்தக்கடலின் இறுதியிடமும் பெற்றுய்கின்ற கொடை வள்ளலாய்; ஓதா தவம் - சொல்ல முடியாத புகழ் வாய்ந்த தவம். (6)

666. குழையோடு அமராருங் கண் கடையாம் ஓரார் வார் ஊர் குடமாகிய ஈர் கொங்கைப் புனைமானூர் மாலாலே - காதிலுள்ள குண்டலத்தோடு மாறுபடும் கண் கடையை யுடைய ஒப்பற்றுப் பொருந்திய கச்சுள்ள குடமாகிய இரண்டு முலைகளைத் தாங்கி நிற்கும் பெண்களது ஆசையினலே; வீழ்வாய் - விருப்பமாய்; வெகுநாள் அங்குற்று அதில் வீணய் வீழ்வேனே - அதிகநாள் பெண்களிட மடைந்து அதில் வீணய் வீழ்பவனகிய என்னை; இந்தப் புவிமீதே ஆசானய் என்று பிரிக்க; எழு மான் விழிபோல் நின்று அப்படி பார், பார்வா வாநீ யென என்று பிரிக்க; பார்வா - பார்ப்பதற்குவா; கோமான்-தலைவன், இதில் மான் சாரியை; தழைஆர் நிழல் ஆலின் பக்கலில் தானே தானய் மாதவமான சிவானந்தக் கடல் என்று பிரிக்க; ஆல் - ஆலமரம். (7)

667. வினையால் வெகுதேகம் பேதத்தினலே மாமாயா மிளிரான விநோதம் பத்தி - நல்வினை தீவினைகளால் வரும் உடல் பல பேதங்களையுடைய கொடிய மாயைகளினல் விளங்கும் தீயவைகள்

அடைந்து; மெய்யாகா பூ வாழ்வு ஓசனையால் இருள்தான் முந்தத் தடுமாறு ஆன்மாவாய் - பொய்த் தோற்றமுடைய பூமியின் வாழ்வின் முயற்சியில் பாபமானது முற்பட அதனால் தடுமாறுத ஆத்மாவாய்; சக மீதில் அனேகம் தத்தினில் - பூமியில் அனேக ஆபத்துக்களில்; அந்தத் துயர் நீளாய் ஆகாதாய் ஓர் நிலையாகிய பேரின்பம் என்று பிரிக்க; நாய் எளியேன் - நாய்போன்ற எளியவன்; தான் ஆள்வோனே எனப் பிரிக்க. (8)

668. முத்தர் - முத்தியை விரும்பும் ஞானிகள்; தேனே ஞான அதீதக்கதியே என்று பிரிக்க; அதீதம் - எட்டாதது; பந்தம் - ஆசை; நித்தியம் - அழிவற்றது. (9)

669. என்னைத்தான் - தான் அசைநிலை; இங்கிதன் - இன்ப மிக்கவன்; சுழல்புரி - அலைக்கழித்த; இரவி - சூரியன்; துல்லியம் - பிரகாசம்; அருள் தன்னை யளித்திடு என்று பிரிக்க; என்னைத் தானெனும் - என்னுடைய பொருளென்று சொல்லாமல் இறைவன் தனது என்று கூறும்; "யானெனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்." என்ற குறளை ஓர்க. (10)

---

## சப்பாணிப்பருவம்

---

670. கன்மம் பொசிப்பிக்கும் நால் வகை யோனியில் - கன்மங்களைத் தக்கவாறு நீக்கும் கருப்பையில் தோன்றுவன, முட்டையில் தோன்றுவன, விதை வேர் முதலியவைகளில் தோன்றுவன, வேர்வையிற்றோன்றுவன ஆகிய நான்கு இடங்களில்; சகளம் - உருவம், அருவம், அருவுருவம் என்ற மூன்றுநிலை; நிஷ்களம் - மனம் வாக்குக்கு எட்டாத நிலை, இங்கு உரு என்பதை நிலை எனக் கொள்க. வன்மம் - பகை; புலையாதி மாபாதகங்கள் - பிராணிகளைக் கொன்று மாமிசம் புசித்தல், கள்குடித்தல், சூதாடுதல் முதலிய பஞ்சமா பாதகங்கள் செய்யும்; நன்மையால் வரும் அரியதா மானிட - "அரிதரிது மானிடராதல் அரிது" என்ற ஔவை வாக்கை உணர்க. சென்மம் அதுவாய் அதில் மூடர் சிலதும் செம்மை சிலதும் என்று பிரிக்க; மூடர் சிலதும் செம்மை சிலதும் - மூடர் சிலரும் செம்மையான அறிவு வாய்ந்தவர் சிலரும்; அதில் - அம்மானிடப் பிறவியில். (1)

671. பரவி நுகர் சரகமென - பரத்தலைச் செய்து ஒரு பூவிலி ருந்து ஒரு பூவிற்குச் சென்று உண்ணும் தேனீக்களைப்போல, மனம் அலைவதற்குத் தேனீக்கள் பூவினின்று பூவுக்கு அலைவதை உவமை கூறினர். நற்பருவனென ஆக்கி - நல்ல பக்குவத்தை யுடையவனாகச் செய்து; இங்கு இருமென இருத்தி என்று பிரிக்க; சமைய தீட்சைகள்- திருவருணோக்கம், பரிசம், வாக்கு, பாவனை, சாத்திரம், யோகம், ஔத்திரி முதலிய உண்டு. யோகவகை-இது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நிலைகளில் மூன்றாவது; மனது குவியத்தரும் **சாக்கிரம் :-**இது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனும் ஐந்தவத்தைகளில் முதலாவது. **சமக்குறி :-**இது சின்மய முத்திரையாக இருக்கலாம். பதியாகிய கட்டைவிரலும், பசுவாகிய ஆள் காட்டி விரலும் கூடுவதாயிருக்கலாம். மெய்ஞ்ஞானமாகும் வழியைத் தரு கைகள், சமக்குறி காட்டுங் கைகள் எனக் கூட்டுக. (2)

672. பூதரம் - மலை; தெட்சணமூர்த்தம் - தக்ஷிணாமூர்த்தி வடிவமாய்; சிவஞானபோதம் அன்று அருள் செய்யவே என்று பிரிக்க; சனகர் முதல் நால்வர்க்கும் - சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ற நால்வர்; பேரின்ப வாரி-பேரின்பமாகிய கடல்; மாசற்ற முத்தியின்................சின்மயக் கைகளால் - குற்றமற்ற முத்தியின் பெருமையைக் காண்பதற்காக வாக்குக் கடந்த ஒன்றான தகுதியான சின்மய முத்திரையைக் கொண்டுள்ள ஞானம் போதிக்கும் கைகளால்; தட்சிணாமூர்த்தி பேசாமல் கைகளின் சின்மய முத்திரையாலேயே அனுபவ மூலமாகப் போதித்தார். எனவே "வாக்கிறந்தது" என்று கூறப்பட்டது. (3)

673. ஆறுசமயங்கள் - உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சம், மாயாவாதம், பாஞ்சராத்திரம்; இவை புறச்சமயம் எனப் படும்.**மருவியிடு முட்சமையம்:-**சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்ற ஆறு; "எழில் மந்திரம், பதம், எழுத்தும், புறம், தத்துவம், கலை இது ஆறின் அப்பால் ஒருகின்ற பரவசம் செய்விக்கும் ஞான நூல்" என்று பிரிக்க. இப்பாட்டில் சிவஞான போதத்தைப் பற்றிய பெருமை கூறப்பட்டுளது. **ஏடணை :-**இது அர்த்தவேடணை, புத்திரவேடணை, உலகேடணை என்று மூவகைப்படும்; ஏடணை-பிணக்கு; அர்த்தம் - பொருள். (4)

674. அவஞானம் - பயனின்மையாகிய அறிவு; வறுமை - தரித்திரம்; அஷ்டபாக்கியம்-எட்டுவித செல்வம்; பவஞானம் - பிறவி

யாகிய ஞானம்; குருலிங்க சங்கமங் தனிலினிய பத்தியாம் - குருபத்தி, இலிங்கபத்தி, சங்கம பத்தி என்று பிரித்துச் சேர்க்க; சங்கமர் - அடியர்; இருமுத்திரை - சின்முத்திரை, அபயமுத்திரை என்பன. வெண்ணீறு-விபூதி; தான் அந்தமாகிய சிவானந்த நாதனே - தானே ஈறு முதலுமாகிய சிவானந்த நாதனே, இங்குக் கடவுளின் தன்மை அடியவருக்கேற்றி யுரைக்கப்பட்டது. (5)

675. மனமயம் - மனமாகிய இடம்; இருள்மா மலம் ஆணம் பொலிய - இருள் மிகுந்த குற்றமான ஆணவம் விளங்க; சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்ற மூன்றும் தீவினைக்குக் காரணமாயுள்ளன; சஞ்சித மாருதம் - சஞ்சிதமாகிய புயற்காற்று; வினையலை - வினையாகிய அலைகள்; அலமந்தெழுந்து - சுழன்று; மும்மலம் - ஆணவம், மாயை, கன்மம் என்பன; எனதெனும், என்கை, என்காலென்றும் அறிவின்றி இருந்தேன் என்று கூட்டுக. இன்பம் மிகுத்து அகிலந்தனில் வந்து என்க. (6)

676. ஆகம் - உடல்; அறியாமையை யுடையேனுக்கு அருள் திகழப்பெறவே என்று பிரிக்க; கல்லும், இரும்பும், மெழுக்கும், அணையுமதுபோலவும் அரம்பையில் விறகில், கரியில், பஞ்சினில் அனலேற்றிடு நெறியாய் மாகதிதரவரு பருவமதாகிய மந்தமும், மந்த தரம், மகிழ் தீவிரம், தீவிரதரம் எனும் நால்வகை என்று பிரிக்க; அணை - பஞ்சு; அரம்பை - வாழை; மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்று நால்வகை வேகங்கள். கோகனகப் பதம் - தாமரை போன்ற பாதம்; அரம்பையில் நெருப்பு ஏற்றிடுவதுபோல மந்தமும், விறகில் அனலேற்றிடுவதுபோல் மந்ததரமும், கரியில் நெருப்பு ஏற்றிடுவதுபோல தீவிரமும், பஞ்சினில் நெருப்பேற்றுவது போல தீவிரதரமும் உள்ளன. **மந்தம்**-நமக்குப் பேறுயுள்ளவொரு பதியுண்டென்று அறிவு எழுந்திருப்பது. அது வாழைத்தண்டிலே நெருப்புப் பற்றினாற்போலும். **மந்ததரம்:**-அப்பதியை யடைவதற்கு வழியெப்படியென்றாராய்கை; அது விறகிலே நெருப்புப் பற்றினாற்போலும்; **தீவிரம்** :- அப்படி யாராய்ந்தறிந்த பதியை யடைவதற்குப் பிரபஞ்சத்தை வெறுத்துப் புளியம்பழமும் அதனோடும்போல் நிற்றல்; அது கரியில் நெருப்புப் பற்றினாற்போலும்; **தீவிரதரம்** :-பிரபஞ்சத்தை முற்றத் துறந்து ஆசாரியனே பொருளெனக் கண்டு வழிபடுகை; அது பஞ்சில் நெருப்புப் பற்றினாற்போலும். **சத்தினி** :- சத்தினிபாதம்; சத்தினி பாதத்தின் நால்வகைப் பிரிவின் கடைசியில் பதம் தரும் எனக் கூட்டுக. (7)

677. ஒன்றே பொருளென்று அறியும் மனமுடையவர்களை அவ்வொன்றில் உணர்த்திக் கடவுளிது வென்றும் உயிர் இது என்றும் உள்ள ஒப்பற்ற விஷயத்தை அறிந்துகொள்ளவில்லை; பாசத்தில் மன ஒருமைப்பட்டு நின்றனை, சிவதத்துவமாய் ஒன்றும், சிவம், சத்தி என்ற இரண்டுமாய் அது வல்லாமல் அறிவித்திடும் உட்பொருள் அழியாமல் நின்றிடு பொருளுக்கு இடமான ஐந்து எழுத்துக்களுக்கு (பஞ்சாட்சர மந்திரம்) உயிர் புண்ணியத்தால் நிறைவதுபோல் அழுக்கின்மையில் தெளிவுறச்செய்த செல்வமே மகிழ் செல்வக் குன்று போன்று வரும் தவத்தை யுடையவனே! சப்பாணி கொட்டுக என்று பொருள் கொள்க. (8)

678. மாதவம் - சிறந்த தவம்; மேலோர் - முனிவர்; மேலோர் பக்கலில் ஒக்காமல் - மேலோரிடம் சேராமல்; மாமயலே கொண்ட மானார் மைக்கண் மருட்காகி - மிகுந்த மயல் கொண்ட மானையொத்த பெண்களது கண்களின் நோக்கு மயக்கிலே பொருந்தி; மாகாதக் குழுமிக்க கொலைபாதகங்களைச் செய்யும் கூட்டம்; சாதகன் - சாதகமாய் இருப்பவன்; போகமதே அருள் சாரதந்து எனப் பிரித்துக் கூட்டுக; நாயேனுக்கு - நாய்போன்ற அடியேனுக்கு. (9)

679. பூரணன் - ஞானத்தால் நிறைந்தவன்; தானே உட்குள் உதித்து ஆளி-தானே மனத்திற்குள் தோன்றி ஆட்கொள்வாய்; காவலனே - விளி; உந்தன் ஆளாய்-உமது அடியவராய்; "சீருணர்வே, இன்பமே, மாநித்திய பொருட்டான தேசிகனே, எந்தையே, தீதற்றிடு கற்றாவே" என்று பிரிக்க; கற்றா - கன்றையுடைய பசு போன்றவனே; ஆரணனார் விண்டு - பிரமனும் திருமாலும்; இங்குக் குருவைச் சிவமாகவே பாவிக்கிறார். (10)

---

## முத்தப்பருவம்

---

680. உருவாய், அருவாய், உருவருவாய், ஒன்றுமில்லாத பரஞ்சோதி எனப் பிரிக்க; ஞான ஒளிவாள் - உருவகம்; மருள் காடு - உருவகம், மயக்கமாகிய காடு என்று பொருள்; இருவினை - புண்ணிய, பாபம்; விரை - விதை; சஞ்சிதம் - மூன்று கர்ம வினைகளில் ஒன்று; மன்னே - தலைவனே; மருவே - மருவுதலைப் பொருந்தியவனே. (1)

681. பவவாருதி - பிறப்பாகிய கடல்; மருள்பட மாருதம் - மயக்கமாகிய புயற்காற்று; நல்வினை தீவினை யலை - உருவகம்; மொத்துண்டும் - தாக்குண்டும்; அவமாம் - வீணாகிய; பிசல் - பெருங்காற்று; மலைவு - மயக்கம்; ஆசை மடு - உருவகம்; மடு - ஆழமான நீர்நிலை; அழகாம் மாதர் புணர்ச் சுழலால் - அழகாகிய மாதரது புணர்ச்சியாகிய நீர்ச்சுழற்சியால்; "தவம் ஏது இன்றிப் பற்றின்றித் தயங்குபு எளியேன் உய்யுமதாய்" என்று பிரிக்க. . தப்பம் - தெப்பம்; மவுன + அதீதம் - மவுனதீதம். (2)

682. நேர் உறையும்-நேரில் தங்கும்; அதற்கு ஒவ்வ-அதற்குத் தக; திட்டாந்திரங்கள் - பிரத்தியட்சப் பிரமாணம்; சுருதி முதல் மூன்றும் கரியே படுத்தி - வேதங்களில் முதல் மூன்றையும் சாட்சியாக்கி; மட்டார் மலரின் பவள வொளிர் மணிவாய் - தேன் நிரம்பிய தாமரை மலரைப்போன்ற சிவந்து பிரகாசிக்கும் அழகிய வாய். (3)

683. மறைவாம் இருளும்.....................ஒப்பாய் - மறைக்கும் இருளும் பக்குவப்பட்ட மருண்ட வல் வினையும் சரிபாகமாய் இருப்பின்; சத்தினிபாதம் - ஆன்மாவினது ஞானத்தைத்தடுக்கு மாணவ மலசத்தி நழுவு மவசரத்திலே முற்பிற் பாடறச் சிவத்தினது சிற்சத்தி பதிந்து அவ்வான்மாவினது நித்திய ஞானக்கிரியைகளை விளக்குவது. அது மந்தம் முதலிய நான்குவகை. மந்தம் முதல் மூன்று - மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்பன. இதன் விரிவை 676-ஆம் பாட்டில் காண்க. திரோதம் - மறைத்தல்; கோது - குற்றம்; இங்குக் குறியென்பது சின்முத்திரை; தெள் ஆர் அமுதம் - தெளிந்த அரிய அமுதம். (4)

684. செம்புக்கு இசைந்த உயிர்க்குள் திரைக்களிம்புக்கு இசைந்த இருள் அதனை - செம்புக்கு ஒப்புமை கூற இசைந்த உயிர்க்குள் மிக்கு எழும் பாசையாகிய களிம்புக்கு ஒப்புமை சொல்லும் மலமாகிய அதனை; திகழப் புளி நேர் பல் குருவால் - பிரகாசிக்குமாறு புளியையொத்த பல ஆசிரியரால், (பலகுரு - உபதேசகுரு, தீக்ஷாகுரு போன்றவர்); இரண்டும் கழித்து - நணுகுவதையும், மறைவதையும் போக்கி; தெம்பு மருவ - சந்தோஷம் பெருக; துல்லியமாக்கி-விளங்குமாறு செய்து; வேதி - ரசகுளிகை; செம்புக்கு ஒப்புமை கூறும் உயிர்க்குள் மிக்கெழுந்த களிம்புக்கு ஒப்புமை கூறும் மலத்தைப் போக்கிப் பிரகாசிக்குமாறு செய்யும் புளியையொத்த பலவகை ஆசிரியர்களால் சொல்லப்படும் உபதேசங்களைக் கேட்டுச் சந்தோஷமாய் அவர் பேச்சை நம்பி அதனைத் துலக்கத்துலக்க ஒளி அடையும்படி

யானதும் வந்தவிதம்போலவே மறையும்படி யானதுமான ஞானம் ஈது அல்ல என்று தெளிவடைந்து ஆராய்ந்து உன்னை யடைந்தவர்க்குச் சந்தோஷம் பெருகக் கருணையால் விளங்குமாறு (பிரகாசிக்குமாறு) செய்து திருவுபதேசமாகிய அற்புதமான இரசகுளிகையைக் கொடுத்து ஒளி அடைதலும் மறைதலுமாகிய இரண்டும் போக்கி விளங்கும் பொருளான பொன்னாகிய அருளைச்செய்யும் சிவானந்தா என்று பொருள் கொள்க. செம்பில் களிம்பு ஏறுவதுபோல உயிரில் மலம் ஏறும் என்றும் அக்களிம்பைப் புளியினால் தேய்த்து விளக்கினால் அப்பொழுது ஒளியுடையதாகவும் பின்பு மங்குவதாவதும் போல பல ஆசிரியர்களின் உபதேச மொழிகள் அச்சமயம் இன்பம் மிகுவித்தாலும் பின்பு பழைய நிலையே ஆகும் என்றும் அத்தகைய உபதேச ஞானம் இதுவல்ல எனத் தெளிவடைந்து சிவானந்தனை அடைந்தவர்க்கு உபதேசமாகிய அற்புதமாகிய இரச குளிகையைக்கொடுத்து அச்செம்பு போன்ற உயிரைப் பொன்னாகிய அருளாகச் செய்பவன் என்றும் விளங்குதல் காண்க. செம்பு இரசகுளிகையால் பொன்னான பிறகு என்றும் களிம் பேறாமல் பிரகாசித்தல் காண்க. அத்தகைய அருள் ஞானம் கொடுப்பவன் சிவானந்தன். (5)

685. கன்னல் முத்தம்-கரும்பினின்றுண்டான முத்தம்; தனிமை மாதருக்காகாது-கணவனை விட்டுப் பிரிந்த பெண்களுக்கு ஆகாது; கஷ்டப் படுத்தும்; கந்தர்ப்பன் வில் அங்கமாம் - (ஏனெனில்) மன்மதனது வில்லாகிய உறுப்பாகும்; கதலி முத்தம் - வாழையினின்றுண்டான முத்து; புகல இனி - சொல்வதற்கு இனிமையுடைய; துறைப்படை கொண்டு கடிதரும் குலைகள் உண்டாம் - வழியாகிய ஆயுதங் கொண்டு நீக்கும் குலைகளுண்டாம், வாழை குலைதள்ளின பிறகு வளராது; குலையும் தள்ளாது; வெட்டிவிடுவர். ஆதலால் இங்ஙனம் கூறினர்; பன்னகம் தரு முத்தம் - பாம்பினின்றுண்டான முத்து; ஆலத்தில் உறைதலால்-விஷத்தில் தங்குதலால்; பழுத்து இன் தலைவலித்தல் - முதிர்ந்த பின் இனிய தலைவலித்தலை யுடையதாகும். பாம்பினிடம் முத்து எடுப்பதாயிருந்தால் உபத்திரவம் செய்து எடுப்பதால் இங்ஙனம் கூறினர் போலும். பங்கைய வெண்முத்தம் - தாமரையினின்று தோன்றிய முத்து; பகையாதும் இற அலது - பகையாவும் அழிய உள்ளதாயில்லை செந்நெலின் கதிரின் வரு முத்தம் - சாலி நெல்லில் தோன்றிய முத்து; பொற்களஞ் செய்யும் - அழகிய களங்களில் உண்டாதலைச் செய்யும்; களம் - நெல் முதலியவைகளைப் பிரிக்க தரையில் சுத்தம் செய்யுமிடம்; தெரிவையர்க் களமதில் உதித்த முத்து - பெண்களின் கழுத்தில் தோன்றிய முத்து; புணர்வு செய்திடும் கொடியது-சேர்க்கை செய்யும் கொடுமையையுடையது; மன்ன நின் முத்தந் தனக்கு நிகராகுமோ - தலைவ

உனது முத்தத்திற்கு ஒப்பாகுமோ, இங்கு முத்தம் என்பது முத்தி கொடுத்தலைக் குறித்தது. "பனிமதி கதலிமேகம் பைந்தொடிக் கழுத்தா வின் பல், தனியானை யேனக்கொம்பு தடங்கரா வுடும்பு கொக்கு, வினையராச் சலஞ்சலங்நங் திப்பிமீன் மூங்கில் பூகம், நினைசெந்நெல் கரும்பு கஞ்சம் நிகழிரு பதின்முத் தாகும்." என்ற பாட்டை ஓர்க. அன்ன நின் முத்தந் தனக்கு என்றும் பிரிக்கலாம். அன்ன-அவைகளைப் போன்றன. (6)

686. புணரிதனில் வரு முத்தம் அலையுய்த்திடுந் திறம் போதாது-கடலில் உண்டான முத்து அலைகளால் சேர்க்குந் திறம் போதாது; பூர்ண சந்திரன் அருள் முத்தம் களங்கமது பூதியம் விருத்தமாகும்-பூரண சந்திரனின்று தோன்றிய முத்து களங்கமது உடலில் நிறைந்து வேறுபடும்; கணுவினைந்திடு பசுங் கழையுதவும் முத்தமது காண்கின்ற சாரமில்லை - கணுக்களோடு நைந்திடும் கரும்பினின்றுண்டான முத்து சொல்லுகின்ற சாரமற்றதாகும், கரும்பினின்று சாரைப் பிழிதலின் இங்ஙனம் கூறினர்; இது மூங்கிலுக்கும் சிலேடையாகப் படுதல் காண்க. கார் முத்தமது சிந்திவிடும் - மேகத்தினின்று தோன்றிய முத்தம் பூமியில் சிந்திவிடும்; மேல் இடித்திடும் கயமணி மத்தகத்து இருக்கும் - மேலுமிடிப்பது போன்ற பிளிறலைச் செய்யும் யானையின் முத்தம் மத நீரில் இருக்கும்; பணிலம் மகிழ் முத்தமது தசையிலுறும் ஈதன்றி பங் கமும்கூனதாகும்-சங்கினின்று தோன்றிய முத்து தசையில் பொருந்தி யிருக்கும், இது வல்லாமல் அதன் துண்டுகளும் வளைவுபொருந்தி யிருக்கும். பாணியத்துறு கயலின் முத்தமது நன்று அன்று பார்க்கில் புலால் என்பர்-நீரில் உற்ற மீனிடத்தினின்று தோன்றிய முத்து நன்றல்லதல்ல, ஆராய்ந்தால் மாமிசம் என்று கூறுவர்; மணிகள் - முத்துக்கள். (7)

687. பாவையர் - பெண்கள்; இன்பம்-சிற்றின்பம்; மாதர் கள் தோள் புணர்தலே முத்தியென்று உலகாயதர் கூறுவதும், உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானமெனும் ஐந்து கந்தமும் கெடுதலே முத்தியெனப் புத்தரில் சவுத்திராந்திகன் கூறு வதும், மூன்றுபேத குணங்களும் கெடுகையே முத்தியெனச் சமணரில் நிகண்டவாதி கூறுவதும், பஞ்சபூதம் காலம், திக்கு, ஆன்மா, மன மென்னு மொன்பது திரவியங்களின் பொது வியல்பு வேற்றியல்புகளை யறியும் ஞானத்தாற் கன்மம் நசிப்பதுவே முத்தியென வைசேடிகர் கூறுவதும், பாசம் நீங்கவே சிவத்துவாபியத்தி விளங்கும் அதன்மேல் முதல்வன் பிரேரகனல்லன் பாச நீக்கமே முத்தியென அருவ சமவாத சைவர் கூறுவதும், சாரூபம் பெற்று அத்திரட்சியினிருப்பதே முத்தி யென மாயாவாதிகள் கூறுவதும், உயிர் கெட்டுச் சிவத்தோ டொன்

ருவதுவே முத்தியெனப் பரிணாமவாத சைவர் கூறுவதும், அட்டமா சித்தியை யடைவதே முத்தியென மானிடச் சித்தர்களாற் கூறப்படுவதும், நித்திரை செய்வோர் ஒன்றுமறியாத முறைமைபோற் கேவலத்தை யடைவதே முத்தியெனப் பாடாணவாத சைவர் கூறுவதும் ஆகிய சமயவாதிகள் முத்திகளெல்லாம் சென்ன மரண துன்பத்துக் கேதுவாகிய முத்தியாம். மும்மலங்களும் நீங்கி ஆன்மாச் சிவ வியாபகத்துள் ஞாயிற்றினொளியி னடங்கிய நட்சத்திரம்போல் அடங்குவதே சுத்தாத்துவித முத்தியாம்.

" அரிவையரின் புறுமுத்தி கந்தமைந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலவுயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே."

(சிவப்பிரகாசம் 50.)

எட்டென விளங்கு நற்சித்தி - அட்டமாசித்திகள்; ஐயிரண்டான - பத்துவித முத்திகள். **பஞ்சகந்தம் :—** (1) பிருதிவி, அப்பு, தேயு, வாயு, கடினம், கந்தம், இரதம், வன்னம், என்னும் எட்டினுகும் உருவக் கந்தம் (2) குசலா வேதனையாகிய சுகவறிவு, அகுசலா வேதனையாகிய துக்கவறிவு, குசலாகுசல வேதனையாகிய சுகதுக்கவறிவு என்னும் மூன்றுனுகும் வேதனைக் கந்தம். (3) சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, ஆக்கிராணம், மனம் என்னும் ஆறுனுகும் குறிப்புக் கந்தம். (4) பத்துவகைப் புண்ணியம், பத்துவகைப் பாவம் என்னும் இவ்விருபதாளுகும் பாவனைக்கந்தம். (5) சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், உத்தி என்னும் ஆறுனுகும் விஞ்ஞானக் கந்தம் என்பனவாம். (8)

688. சதுமுகன் நெடுமால் - பிரமன், விஷ்ணு; தரணி - பூமி; துகள் - குற்றம்; பந்தம் - கட்டுக்கள்; அங்கையின் நெல்லிக்கனியென - உள்ளங்கையில் வைத்த நெல்லிக்கனி போன்று இங்ஙனம் வைத்துப் பார்க்கும்போதுதான் நெல்லிக்கனியின் உள்ளும் புறம்பும் ஒருசேரத் தெரியும்; மோனம் - மௌனம்; அறிவுக்கு அதிசயமாக நிறைந்திடு என்று பிரிக்க. (9)

689. தன் என்பது சிவானந்தனைக் குறித்தது; மன்னிய பின் நிலவின் கதிர் ஞாயிறில் வருநற் கதிரதனில் மருவியவாறு - நிலைபெற்ற நிலவின் கிரணம் சூரியனின் கிரணத்தில் கலந்து விடும் விதம்; புனலினில் ஒவ்வல் வணமது உறையும் நெறிபோல் - நீரில் ஒத்துள்ள விதமாகிய அது தங்கும் நெறிபோல; அகரத்துயிரென - "அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு." என்ற குறளை நோக்குக; அகரத்துயிர் - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. (10)

---

## வருகைப் பருவம்

---

690. நிலவு மதியத்து எழில் நுதலில் - நிலவு வீசும் சந்திரன் போன்ற அழகுவாய்ந்த நெற்றியில்; குழை - குண்டலம், தானியாகு பெயராய்க் காதை யுணர்த்திற்று; கருணைக்கடல் - உருவகம்; நோக்கம் கூரும் - நோக்கம் மிகும்; கூர் - உரிச்சொல்; குமிழ்க் கீழ் அணிச் செந்துவர் வாயில் - குமிழம் பூ போன்ற மூக்கின் கீழுள்ள அழகிய சிவந்த பவளம் போன்ற வாயில்; தரளம் - முத்து; நகைப்ப - சிரிக்க; பல அம்பணிகள் செறிந்து - பல அழகிய ஆபரணங்கள் நெருங்கி; மருமம் - மார்பு; தாவடம் - கழுத்தணிமாலை; அரை - இடுப்பு; அலம்ப - ஒலிக்க. (1)

691. கன்னற்கினிய - கரும்பைக் காட்டிலும் இனிய; கோதண்டம் - புருவமத்தி; கோதண்டத்து இடையினில் நின்று என்று பிரிக்க; உன்னி - ஆராய்ந்து; உடற்குள் தூண்டாமல் தூண்ட உணர்ந்த என்றுபிரிக்க; மன்னி-நிலைபெற்று; மெய்க்கண்-உண்மையினிடம்; பொருள்திகழ்ந்து-பொருள் விளக்குவதால் விளங்கி; சகலர்-ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலமு முடையவர் இங்ஙனம் கூறப்படுவார். இவர்கட்குப் பரசரீர மூன்று, சூக்கும சரீர மொன்று, தூலசரீர மொன்று; பிரமவிஷ்ணு முதல் பிபீலிகை யீறாகவுள்ளவர். கலாதிகளினால் முற்றும் கட்டுப்படுகிறபடியால் சகல ரெனப்படுவர். (2)

692. முடங்குந் தரங்கம் - மடங்கும் அலை; புவி - பூமி; எண்பத்தொரு நான்கு உயிர் - எண்பத்து நான்கு நூறுயிரம் யோனி பேத

முள்ள உயிர்; சகலர்க்கு - முற்பாட்டில் இதன் பொருள் காண்க; அருட்கடல், ஞானப்பயிர் ஆகியன உருவகங்கள்; நடம் - நடனம்; உவப்ப - மகிழ; நவிலல் - சொல்லல்; திடங்கொள் குரு, என்று பிரிக்க; ஞான + அதீதன் - ஞானதீதன். (3)

693. ஐந்தாய்த் தொடர்ந்த மலம் பதினெட்டு அவத்தையதுவும் அறக்கடந்து - சாக்கிரம், சொப்பனம் சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்று தொடர்ந்த ஐந்தவத்தைகளோடு கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்று காரணவத்தைகளும் அவற்றின் உட்பிரிவாகிய 15-காரியாவத்தைகளும் சேர்ந்த பதினெட்டு அவத்தைகளையும் ஆணவம், திரோதம், மாயாகாரணம், கன்மம், மாயேயம் என்ற 5-மலங்களையும் முழுதும் கடந்து; எமக்கு இனிய அன்பாய் அளிப்பது அறமென்றும்- எமக்கு இனிய அன்பாய்க் கொடுப்பது தருமமென்றும்; திருவருளே மன்னும் பொருள் இவை தான் என்றும் - திருவருளே நிலைத்த செல்வமாகும் இவையே என்றும்; பதினெட்டு அவத்தைகளை முழுதும் கடந்து ஆன்மாவை விளக்கி இனிய அன்பாய் அளிப்பது **அறமென்றும்** திருவருளே மன்னும் **பொருள்** இவைதான் என்றும் வந்தார்ந் துறையும் பொருளதனால் மருவத்தருவது **இன்பம்** என்றும் வழங்குமிது மூன்றையுந் தெளிந்து மறைப்பு நினைப்பில் **வீடு** என்றும் தந்தே அன்பர்தனை அளிக்கத் தரையில் வரும் அம்பரன் என்று இயைக்க. இப்பாட்டில் அறம், பொருள், இன்பம், வீடு ஆகியன யாவை எனக் கூறப்பட்டிருத்தல் காண்க. மருவத்தருவது-பொருந்த உண்டாவது; **ஆணவமலம்** :-அறியாமை மிக வுண்டாம்படி ஆன்மாக்களோடுஞ் சகசமாயனுதியாயிருக்கும்; **திரோதமலம்** :- இந்த ஆணவ மலத்தோடு கூடி நின்று அது பக்குவமாமளவு மான்மாவை மறைத்து அந்த மலத்தைப் பாகம் வருவிக்கும். **மாயாகாரண மலம்** :—ஆன்மாக்களுக்குத் தனுவாதிகளைக் கொடுத்து மயக்கத்தைச் செய்யும்; **கன்மமலம்**:-ஆன்மாக்களோடும் விரிந்தனுபவமாய் நிற்கும்; **மாயேய மலம்** :—ஆன்மாக்களின் சுகதுக்க விளைவுகட்கெல்லாம் இடமாய் நின்று அவற்றின் அறிவு, இச்சை, செயல்களை ஏகதேசப்படுத்தும் மாயகாரியம். (4)

694. தாலம் தழும்பு ஏறிடத் துதியேன் - நாக்குத் தழும்பு ஏறிடுமாறு துதிக்கவில்லை; சரணம் - பாதம்; அடியாரைச் சரணம் பணியேன் என்க; அடியாரை - வேற்றுமை மயக்கம்; தறிகண் குழுவின் - கட்டுத் தறியினிடமுள்ள யானைகளின் கூட்டத்தைப்போல; ஞாலம் - பூமி; ஞாங்கர் - பக்கம்; தூலம் - ஸ்தூலம், பஞ்சபூத காரியமான தேகம்;

சங்கம ரூபம் - அடியார் வடிவம்; சூக்குமந்தனில் தன் திருவாக்கால் துகள் தீர்ந்தறிய வறிவித்து என்று பிரிக்க; வீடு உற்று உணர - மோட்சத்தைப் பல வழிகளால் மனத்திலுற்று அறிய. (5)

695. செகம் - பூமி; அகம் - மனம்; அன்பின் நிறைந்த என்க; அசலமான - மலையை யொத்த; மணிவிழிக்கு ஒளிதருவன் என்று பிரிக்க; தருவன் - வினையாலணையும் பெயர். (6)

696. 'அகரமெனவு' மென 689-ஆம் பாட்டில் கூறியது காண்க. ஆசொடு - குற்றங்களுடன்; புணரி - கடல்; பர்வகம் - இயல்பு; அமலன் - குற்றமற்றவன்; நேயந்தனில் நின்றவன் - அன்பில் பொருந்தியவன்; நிதி - செல்வம். (7)

697. கோதிலாத - குற்றமில்லாத; போதவுயிர் - ஞானமிகுந்த உயிர்; பிரிவில்லாத என்பது எதுகைக்காக வல்லினமாயிற்று; அறிவுக்கரிய - அறிவினால் காணமுடியாத; பொறிபுலன் திரையிருள் ஒழித்தருள் - பொறிபுலனாகிய சுருங்கிய இருளை நீக்குகின்ற; திரையிருள் - வினைத்தொகை; தபனன் - சூரியன். (8)

698. மாயன் - திருமால்; சரோருக வர்சன் - பிரமன்; சுர + அதிபர் = சுராதிபர், தேவருக்குத் தலைவர், இந்திரர்; பராபரம் - கடவுள், இங்குச் சிவனைக் குறித்தது; அணுக - அடைய; மாகங்கள் - ஆகாய உலகங்கள்; லோகம் - பூலோகம் முதலியன; மாகங்கள் நாடியும் - யாகங்களைத் தேடிச் செய்தும்; நாயன்றன் - நாயை யொத்தவனாகிய நான்; ஓர்கையின்-ஆராயுமிடத்து; இறை ஞானம் - கடவுளைப்பற்றிய ஞானம்; மாறும் செயல் - பலவிதமான வேறுபாடான இறைவனது செயல்கள்; ஞானங்கள் இருளான் தேறிலன் என இயைக்க; நான் என்பதாய் உறைவேன் என்று பிரிக்க; இந்த மாநிலன் நாடும் தியானமது உடையேன் என்று பிரிக்க; நிலன் - கடைப்போலி; நேயம் புகேன் இருதாளும் தொழேன் - அன்பு வழியில் செல்லவில்லை, அடியாரது இருபாதங்களையும் தொழவில்லை; விழி நீருந்தரேன் - கண்ணீரும் ஒழுக விடவில்லை; இந்த ஆறு உடை - இந்தவித முடையவனாகிய எனக்கு; நீதன்தன் மேன் மிகு தயவாய் தாய் அன்பதாய் இனிதாம் இன்பம் ஆர் அருள்தான் இங்ஙனே தர உருவாம் என்று பிரிக்க; தாய் அன்பதாய் - தாய் அன்பு போன்றதாய்; தான் அந்த மீதினில் - தான் எல்லாவற்றையும் கடந்த நிலையில், (9)

699. பார் அம்பு தேயுவும் வாய்வு அம்பர ஆதிகள் - பூமி, நீர், அக்கினி, காற்று, ஆகாயம், முதலிய ஐம்பெரும் பூதங்கள்; ஐந்துமேயுறு பாசங்கள் - ஆணவம், கன்மம், திரோதம், மாயை, மாயேயம் என்பன; குலாவல் செயா நின்ற - சேர்கின்ற; மூவினையோர் - சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்ற மூன்று வினையை யுடையவர்; 'ஓது அங்கு அசேதனம் ஈது என்று·சேதனம் ஈது என்று' என்று பிரிக்க; சேதனம் - அறிவுள்ளது; தேறும் சொலே சொல - தெளிவடையும் சொற்களைச் சொல்ல; பிரேரம்-தூண்டுவது. (10)

---

# அம்புலிப்பருவம்

---

700. **சந்திரன் மேற்செல்லும்போது :-** மனமகிழ்ந்து ஒருமையாய்ப் பரிவுடன் புகழ்மருவு மாசில் சோதியை மருவலால் - மனம் களித்துத் தனித்ததாய் அன்புடன் புகழ் பொருந்திய குற்றமற்ற சிவபெருமானைச் (சடையிடம்) சேர்வதால்; வளர்குருவதாகி நன்மதி ஆகையால் - வளர்கின்ற வடிவத்தைப் பெற்றுப் பூரண சந்திரன் ஆவதால்; நிறையவரும் அம்பரத்து உறைதலால் - நிறைந்துள்ள ஆகாயத்தில் தங்குவதால்; அனைவரும் கண்டு உவகைகொண்டு உறையவே வரும் அகநிலவு மணியாகையால் - எல்லோரும் கண்டு சந்தோஷம் கொண்டு தங்க வரும் உள்தங்கும் முத்துக்களை யுடையது ஆகையால்; அமுதமது தருகையால் - தேவர்கட்கு முதல் 16-நாளும் பிதிருக்கு மிகுந்த 16-நாளும் அமுதம் கொடுப்பதால்; சுடரொடு கலந்ததால் - தனிமை மகளிரைச் சுடுமாறு நெருப்பொடு கலந்ததால், சூரியனோடு கலந்ததால் என்றும் கூறலாம். அரன் அருட்கண்ணுகையால் - சிவபெருமானது இருகண்களில் இடப்பக்கக் கண்ணாவதால்; நினைவில் எவர்கட்கு மிகுதண்மை தரலால் - நினைவுலகத்தில் யாவருக்கும் மிகுந்த குளிர்ச்சியைத் தருதலால்; நல்ல நெறியுள்ள வடிவு ஆகையால் - நல்ல வட்டமான நெறியுள்ள வடிவம் ஆகையால். **சிவானந்தன் மேற்செல்லும்போது :-** மனமகிழ்ந்து ஒருமையாய்ப் பரிவுடன் புகழ்மருவு மாசில் சோதியை மருவலால் - மனம் மகிழ்ந்து ஒரு நிலையாய் நின்று பக்தியுடன் புகழ் நிரம்பிய குற்றமற்ற சோதிமயமான கடவுள் நிலையைச் சேரலால்; வளர் குருவதாகி நன்மதி யாகையால் - மிக்க ஆசிரியனாகி நல்ல புத்தி

படைத்திருப்பதால்; நிறையவரும் அம் பரத்து உறைதலால் - சேர வருகின்ற அழகிய கடவுளிடம் மனம் தங்குதலால்; அனைவரும் கண்டு உவகை கொண்டு உறையவே வரும் அகநிலவும் மணியாகையால் - பூமியிலுள்ள எல்லோரும் கண்டு மகிழ்ச்சி கொண்டு தன்னிடம் தங்கிப் படிக்கவரும் மனத்தில் மாணிக்கம் போன்ற சித்தாந்தங்களின் ஒளி வீசுபவனுதலால்; அமுதமது தருகையால் - தனது பாத தீர்த்தமாகிய அமுதத்தைக் கொடுப்பதால்; சுடரோடு கலந்ததால்-யோகாக்கினியோடு சேர்ந்ததால்; அரன் அருட்கண் ஆகையால் - சிவனது அருட்கண் போன்று போற்றப்படுவனுதலால்; நினைவி லெவர்கட்கு மிகு தண்மை தரலால்-உண்மையில் பூமியில் உள்ள யாவருக்கும் குளிர்ந்த அருளைக் கொடுப்பதால்; நல்ல நெறியுள்ள வடிவாகையால்-துறவற நெறியிலுள்ள அடியவ ருருவ மாகையால்; நேசத்தில் உந்தனுக்கு இவனுக்கு நிகரான நேசன் யாவருமில்லை காண் என்று பிரிக்க; காண் - முன்னிலை யசை. (1)

701. **சந்திரன் மேல் செல்லும்போது :-** விரியு மண்டத்திலும் உரிய பிண்டத்திலும் மிகு தெரிசனங் காட்டுவாய் - பரந்த ஆகாயத்திலும் அதற்குரிய பூமியிலும் விளங்குவாய்; மிளிர் அதனைத் தெரிய வொட்டாமலே துன்னும் இருள் வேலையை விலக்கியிடுவாய் - ஒளியைத் தெரியவொட்டாமல் சேரும் இருட்கடலை விலக்குவாய்; தெரிய வந்து இலகுவாய் - எல்லோரும் பார்க்குமாறு ஆகாயத்தில் வந்து விளங்குவாய்; நாள்தொறும் சிறியதாய்ப் பெரியதாவாய் - தினமும் சிறுத்தும் பெருத்தும் விளங்குவாய்; தேர்ந்து தேர்ந்து இனிய பரிபூரணமதாகுவாய் - கன்னிப் பெண்களால் ஆராயப்பட்டு இனிய கடவுளாக்கப்படுவாய், கன்னிப்பெண்கள் நல்ல கணவனை யடையவேண்டுமென்று "பிறை தொழும் வழக்கம்" பற்றி இவ்வாறு கூறினர்; திருநீற்றின் மேனியாவாய்-விபூதி போன்று வெண்மையான உடலையுடையவனுவாய்; பரிவுடன் கலையினை உகந்து மத்தந்தனைப் பரிசிப்பை - அன்புடன் கலைகளை (வளரும் பங்கு, தேயும் பங்கு) விரும்பி யளிப்பாய்; **சிவானந்தனுக்குச் செல்லும்போது :-**பரந்த உலகத்திலும் உடலிலும் மிகுந்த உண்மை நிலையைக் காட்டுவான் என்றும் ஞான வொளியைத் தெரியவொட்டாமல் அடையும் அஞ்ஞானக் கடலை விலக்கி விடுவான் என்றும், எல்லோரும் கடவுளை அறியுமாறு பூமியில் பிறந்து விளங்கச் செய்வான் என்றும், அணுவின் சூட்சுமத்தையும் விரிவையும் அறிந்தவன் என்றும் ஆராய்ந்து இனிய கட வுள்போன்று விளங்குவான் என்றும், விபூதியை உடலில் பூசி விபூதி வடிவமாயே யிருப்பன் என்றும், அன்புடன் பலவகைக் கலைக்கியானங்களை விரும்பி யனுபவிப்பவன்

என்றும் பொருள்கொள்க ; பகர்விலாது உவகை - சொல்லமுடியாது மகிழ்ச்சி ; அரியபொருள் உரு எடுத்து அருள வரும் ஐயனுடன் என்று பிரிக்க. "அண்டத்திலுள்ளது பிண்டத்திலே" என்றபடி முதலடிக்கு ஆகாயத்திலுள்ள சூரியன், சந்திரன், புதன் முதலிய கிரகங்கள் கருப்பத்திலிருந்து பிறக்கும் குழவிகட்கும் கிரக நிலையா யமைந்திருப்பதனைக் கூறலாம். (2)

| 702. சந்திரன் | சிவானந்தன் |
|---|---|
| 1. பாற்கடலில் பிறந்தவன். | சட்டைநாதய்யன் அருட்கடலில் வந்தவன். |
| 2. ஆராயுமிடத்து குவளை மொட்டுக் களை மலரச்செய்வான். | இவன் அன்பர்களது கண்ணு கிய குவளை மலரை மலர்விப் பவன். |
| 3. சூரியனால் சேர்ந்த ஒளியுடைய தாவான். | எங்கும் செல்லுமொரு ஞான ஒளியுடையவ னுவான். |
| 4. பெண்கள் சேர்க்கையில் சந்திர னிருந்து இன்பத்தைக் கொடுப் பான். | அரிதாக வாய்த்த ஆன்மாவுக்கு இன்பத்தை யளிப்பான். |
| 5. வாசனையுடைய தாமரை மலரின் மலர்ச்சியைக் குவித்துவிடுவான். | இவன் மனத் தாமரையின் மலர்ச்சியைக் குவிப்பான். |

பகர்வு காண்கில் - சொல்லி யாராய்ந்தால் ; அடிமையர்கள் தேரும் வகையாக வரும் ஐயனுடன் என்று பிரிக்க ; தேரும் வகை-தெளிவடை யும் வகை ; "கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்.........." என்ற தாயுமானவர் பாட்டில் "சிந்தையே யடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது" என்றாராதலால் "இதைய கமல விரிவைக் குவிப்பான்' என்றார். சட்டைநாதன் வரலாற்றைத் 664-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. (3)

| 703. சந்திரன் | சிவானந்தன் |
|---|---|
| 1. குறைந்தும் நிறைந்து முள்ள கலைகளைப் பெற்ற வடிவமா வான். | ஒப்பற்றுக் குறையாமல் எல் லாக்கலைகளையும் பெற்றவன். |
| 2. குருபத்தினியான தாரையைச் சேர்ந்து வியாழனால் நிந்தை பெற்றவன், | உண்மையுணர்த்தும் குரு வழி யில் நின்ற முதல்வனுவான், |

| | | |
|---|---|---|
| 3. | நீர்த்துறையி னிடத்தும் தன் வடிவம் தோன்ற உதிப்பான். | இவன் அஞ்ஞானிகளால் காணப்படாது உதவியாக விளங்குவான். |
| 4. | கூறுதலடைந்த துண்டிப்பைப் பெறுவான்; (தக்கன் சாபத்தால் கலைகள் குறைவதை நோக்கி). | இவனே கூறுதல் பெற்ற முழுமையும் நிறைந்தவனாவான். |
| 5. | தரித்திரத்தை எட்டுராசி வீட்டிலிருந்து ஜாதகர்க்குக் கொடுப்பான். | இவன் நினைத்தற்கு மரிய வீட்டில் (மோட்சத்தில்) வாழ்வைக் கொடுப்பவன். |
| 6. | வளமில்லாத கர்க்கட மென்ற இராசி வீட்டிற்குத் தலைவன். | இவன் மகிழும் ஞான வீட்டிற்குத் தலைவன். (4) |

| 704. | சந்திரன் | சிவானந்தன் |
|---|---|---|
| 1. | இரவில் மட்டும் அமுதத்தருவானேயல்லாமல் இரவும் பகலும் நீங்காத அமுதத்தைக் கொடுக்கமாட்டான். | இரவும் பகலும் மிடையறாத ஞான வமிர்தத்தைக் கொடுப்பவன். |
| 2. | வளர்தலும் தேய்தலுமாகிய இரண்டு தன்மைகளைக் கடந்து ஓரே குணமான வளர்தல் மட்டும் அடைந்து எக்காலத்தும் தங்குவது அறியான். | சிவம், சத்தி என்ற இரு தத்துவங்களைக் கடந்து ஒரு தன்மையான சாயுச்யம் என்ற பதவியைப் பெறுவான். |
| 3. | பரந்த ஆகாயத்துள் பிரகாசமடைவான். அதன் மேல் அடையும் மிகுந்த ஒளி பெறமாட்டான். | இவனே எங்கும் மிகுந்த ஞானவொளி மிகுவான். |
| 4. | விளங்கும் பாம்பினால் (ராகு, கேது) மறைக்கப் படுவான். | இவனே எவையாலும் மறையாது குற்றமற்றவன் ஆவான். |
| 5. | வருதலும் போதலும், சேர்வதில் கஷ்டப்படுதலு மல்லாமல் நிலைத்திருப்பதில்லை. | இவன் அங்ஙனமின்றி நிலைத்திருப்பான். |

6\. குற்றமற்ற உடலில் களங்கமடைவான்; குற்றமற்ற மனிதர்களின் உடலாகப் பிறக்க மாட்டான். (மானிடர்கள் அங்கமாகாய் எனப் பிரிக்க). களங்கமடையாது மானிட வகுப்பில் பிறந்தவன். "அங்கண்விசும்பில் அகல் நிலாப் பாரிக்கும் திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்-திங்கள் மறு வாற்றும் சான்றோர் அஃதாற்றார் தெருமந்து தேய்வார் ஒரு மாசுறின்." என்ற நாலடிச் செய்யுளைக் காண்க.

எந்தையுடன் நின்னை நிகரென்பது அருமையாம் என்பதால் அடியவர் குழாம் களிப்பர் என்று பிரிக்க. அருமை இன்மை மேல் நின்றது. (5)

705\. சிவந்த தாமரைபோலும் கண்களையுடைய திருமாலும் பிரமனும் கண்களால் ஆராய்ந்தும் மிகுந்து தேடியும் சிவனது பாதமோ முடியோ அறியாதவராய் விளங்க உன்மேல் தயவுண்டாக உனை நீண்ட தலையில் அணிந்துகொண்டான். தனது கண்களாகும் மூன்றினில் உனை நன்மைதரு அருள் கண்ணாக இடப்புறத்தில் செய்தான். சந்திரசேகரன் என்று உன்னுடைய பெயர் தனக்கு விளங்குமாறு தானே தரித்துவந்தான். திங்கள் கிழமையில் விரத மனுட்டித்தவர்களுக்கு (சோமவார விரதம்) அருள் செய்தான். (திங்கள் - சந்திரன்). ஆராய்ந்து அறிவதாகிய இவ்வுதவியை உன்னையன்றி யாருக்குச் செய்தான். அவனது உடலே போன்று வந்த எனது தலைவனுடன் சந்திரனே ஆட வருவாய் என்று பொருள் கொள்க. இப்பாட்டுக்கெல்லாம் சிவனடியாரைச் சிவனாகவே பாவிக்கும் கருத்தினைக் காண்க. (6)

706\. வனமாலி - திருமால்; சந்திரன் பிரகஸ்பதி மனைவி தாரையைக் கவர்ந்தபோது இந்திரன் தாரையை விடுமாறு சந்திரனிடம் தூதுவனை யனுப்பிக் கூற மதியாததால் சண்டை செய்ய எழுந்தான். அதுபோது சந்திரனுக்குச் சுக்கிரன் தான் படைத்துணை செய்வதாக வாக்களித்து அசுரப்படைகளை யனுப்பினான். தேவப்படைக்கு திருமால் உதவியாக இருந்து சண்டை செய்தார். சண்டையின் கோரத்தை நோக்கி பிரமன் சந்திரனை நோக்கி "குருபத்தினியைக் கொடுத்துவிடு இல்லையாயின் விஷ்ணுவைக் கொண்டு உன்னை நாசஞ்செய்து விடுவேனென்று கூறியும் சுக்கிரனை நோக்கி "பிறன் மனை நயந்தவனுக்கா உதவி செய்வது? உன்னையும் நாசம் செய்வேன்" என இடித்துக் கூறியதாலும் சுக்கிரன் தன் படைத்துணையை நிறுத்தவே சந்திரனும்

தாரையை யனுப்பிவிட்டான். (தேவி பாகவதம்). இங்குச் சிவனாகக் கூறியுள்ளது காண்க. பிரகஸ்பதி சந்திரனுக்குக் கயரோகம் (கலை சிறிது சிறிது குறைய) அடையச் சாபமளித்தார்; பிரகாசமாக்கி வைத்தல் - சிவன் சந்திரனைச் சடையிலணிந்து வளர்வதும் தேய்வதுமாகச் செய்தல்; பேர்-பெயர் என்பதன் மரூஉ; **புதன்**-இவன் வியாழன் தேவியாகிய தாரையிடம் சந்திரனுக்கு உதித்தவன்; பிரகஸ்பதியும் சந்திரனும் இன்னானுக்குப் பிறந்தவன் என்று அறியாது வாதாடுகையில் தாயை நோக்கி உண்மைகூறச் சொன்னவன்; இவன் சிவனைக் குறித்த தவத்தால் கிரகபதம் பெற்றான். பிரகஸ்பதியும் சந்திரனும் வாதிடும் போது பிரமன் இரகசியத்தில் தாரையைக் கேட்டு உண்மையறிந்து புதனைச் சந்திரனுக்குக் கொடுத்தனன்; மின்பரவு அழல் உரு வளர்த்திடும் போது உன்னை மெலியாமல் தண்மை தந்தான்-பிரகாசம் வீசும் நெருப்பு வடிவமாக வளர்த்திடும்போது உன்னை மெலிவுறாமல் செய்ய உனக்குக் குளிர்ச்சியைக் கொடுத்தான். சிவன் திருவண்ணாமலையில் அக்கினி வடிவமாக இருப்பதைக் காண்க. இப்பாட்டிலும் சிவானந்தனைச் சிவனாகவே பாவித்திருத்தல் காண்க. (7)

**707.** நெருப்பைக் கக்கும் கண்களும் கொடுமை பொருந்திய மனமும் வேல் படையை யொத்த தன்மையுள்ள மொழியுமுள்ள இராட்சதர் பதியான இலங்கா நகரத்தில் பயந்து நகரின் உட்புற வழியில் செல்ல வொதுங்கினவனான வுன்னை அதோகதியில் விழுமாறு சிவனம் சமான வீரபத்திரன் தக்க யாகத்தில் காலால் மிதித்தான். நீர் மிகுந்து இசைபோன்று ஒலித்து அலைவீசும் பாற்கடலில் புகழுமாறு நின்னுடன் பிறந்த எல்லோரையும் கொல்ல வல்ல ஆலகால விஷத்தைக் கழுத்திலே கரிய கறை உண்டாகுமாறு குடித்தான். உனைப் படைக்கும் தாமரை மலரிலுள்ள நான்கு முகங்களையுடைய பிரமனை முன்னால் வைரவனாகித் தலையறுத்தான். அழிக்குந் தொழிலை மேற்கொண்டவன் இவன். எனவே இவன் செய்தியை அறிந்து உணரவில்லையா. அத்தகைய இயல்புடைய அழிவற்ற கடவுளுக்கு அடிமையரான சிவானந்தனுடன் அம்புலியே ஆடவா எனப் பொருள் கொள்க. புகர் - கறை; அயில் இயற்று இடு மொழி எனப் பிரிக்க; "அனன் இயக் கடவுள் நித்தியன் அவர்களுக்கு அடிமையர்க்கு அம்புலீ ஆடவா" எனப் பிரிக்க. அனன் - அன்னன் என்பதன் தொகுத்தல் விகாரம். அடிமையர்க்கு - வேற்றுமை மயக்கம்; மூன்றும் வேற்றுமை உடனிகழ்ச்சிப் பொருளில் மயங்கியது. (8)

**708.** உருவமில்லாதவனான மன்மதன் தனது கையிடத்தில் உன்னைப் புகழுமாறு வைத்துப் பிரகாசமான குடை பிடிக்கும் அத்தகைய வுனை (மன்மதனுக்குக் குடை, சந்திரன் ஆவன்) உடல் பொடியாமாறு

நெற்றிக் கண்ணை விழித்து எரியச் செய்தான்; எனவே அவனைக் காட்டிலும் (மன்மதனைக் குறித்தது) உனது ஒழுக்கம், வீரம் முதலிய நெறி உயர்ச்சியுடைய தாமோ நீஇருண்டுவிடுமாறு விழிக்கிரணங்கள் உண்டாக உதித்து உனது நற்கிரணங்களின் உதிப்பின் அழகை விழுங்குகின்ற சூரியனைப் பற்களை யடித்து உதிர்த்தன நிகழ்ச்சியை யறியவில்லையா? இதுவல்லாமல் உன்னைத் தக்கன் யாகம் அழித்தபோது பெருமை மிகுந்த பாதத்தால் தரையினில் சிறு தும்பு போன்று வீரபத்திரன் (சிவனம்சம்) தேய்த்ததுவும் நினைவு இல்லையா? மனதில் இதை யறிந்து நினைத்துக் கேட்டாராயும் கடவுளின் செய்கை யறியக் கணக்கில்லை. அரிய மேருமலையை வில்லாகவுடைய பரமனுன சிவானந்தன் உலகினில் தோன்றி அழைத்தனன். ஆதலின் சந்திரனே! ஆடவா என்று பொருள் கொள்க. வில்லி, விலி எனத் தொக்கது. எயிறு - பல்.

(9)

709. சிவபெருமானது சடையையுடைய தலையில் தங்குபவன் என்று கர்வங்கொண்டு வாராமல் இருக்காதே. அவனது மகிமைக்கு ஒன்றும் சமமாகாது. கூறி அறிய முடியாத பொருளென்று இருக்கு வேதம் முறையிடுவது நினைத்துக் குரு நடத்தும் வழியில் நின்று மனவொருமையாகத் தெளிவடைவாயானல் உனக்குத் திருவருள் பொருந்தி மிகுந்த ஆனந்தக்கடலில் சேர்ந்து சந்தோஷமாக இனிமையுடனும் அன்புடனும் பொருந்திய பேரின்பம் அடைவாய்; சன்மார்க்க நெறியில் ஒழுகுவாய் (துன்மார்க்கமாய் குருபத்தினியைச் சேர்ந்ததை நினைத்து இங்ஙனம் கூறினர்); உனது களங்கம் நிஷ்களங்கம் (களங்கம் ஒன்று மில்லாதது) ஆக அடைவாய்; அடியார் கூட்டத்தோடு நிலையாக செல்வம் அடைவாய்; எனவே குற்ற மறுத்திட வந்த பதியை யறியும் ஞானகுருவான சிவானந்தனுடன் அம்புலியே ஆட வருவாய் என்று பொருள் கொள்க. சேர்ந்து உவகையாக என்று பிரிக்க.

(10)

---

# சிற்றில் பருவம்

---

**710.** அழுக்கை - பாவங்களை; குரம்பை-உடல்; புழுக்குரம்பை என்றார் அதன்கண் பல புழுக்கள் தங்கி வாழ்தல்பற்றி; உளக்கண் விழிக்க - அவரது மனத்தில் ஞானக்கண் விழிக்குமாறு செய்து; மலம்-குற்றம்; தேக்கி - நிறைத்து; உரை உணர்வால் பகர்வுக்கரிய நிட்டை யிதாமென மாணார்க்கு - சொற்களின் அறிவினால் வெளிப்படுத்த முடியாத நிட்டையிதுதானென்று மாணாக்கர்கட்கு; பதம் - பாதம்; **நிட்டை**-மௌனமாய்த் தியான மிருத்தல். (1)

**711.** தறுகண் - வலிமை; மாலியின் வரலாற்றை 172-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க. **கயமாமுகவன் :**-இவன் ஒரு சமயம் உமை இருக்கும் மண்டபத்தைப் பெயர்க்கத் தொடங்க, அதுபோது உமை சிவனிடம் முறையிடலும் சிவபிரான் சூலத்தால் அவனைக் குத்திக் கொன்று அவன் தோலை அரைக்கசைத்தார், (விநாயக புராணம்); தக்கன் வேள்விச் சசியன்றே - தக்கன் வேள்வியில் சிவபெருமான் அம்சமான வீரபத்திரர் சந்திரனைக் காலால் தேய்த்ததால் "சசி யன்றே" என்று சிறுமியர் கூறினர். தழைக்கும் அடியார் வினை யன்றே - அடியாரது தழைக்கும் பாப வினைகளைக் கெடுப்பதால் "அடியார் வினையன்றே" என்று சிற்றிலைக் கலைக்க வந்தவரைப்பார்த்துச் சிறுமியர் கூறினர். "அடைப்பதற்கு நெடுவாசலும் சோறு இடுமடமும் நிலவும் கூடம் சிறுவீடு நேராம் சமையலறையிது எல்லாம் வெறு நுண் மணலில் மிகவும் சிறியோம் பலர் கூடிச் செய்த எழில் மிகுந்த விளையாட்டிடத்தை நெறிகொள் அடியால் கலைப்பது எங்கள் விதியோ - என்று இயைக்க. சிறுவீடு நேராம் சமையலறை - சிறு வீட்டிற்கு ஒப்பான சமையலறை; நெறிகொள் அடி - நன்னெறி கொண்ட பாதம். (2)

**712.** அகத்தில் கருதும் திறமறியோம் - மனத்தில் நினைக்கும் (இறைவனது) திறத்தை யறியவில்லை; அடிகள் - பாதங்கள்; சிவன் நேசத்து அருமை யறியோம் - சிவனிடமும் சிவனடியாரிடமும் பக்தி செலுத்தும் அருமையை யறியவில்லை. குறிக்கு அணுகோம் - சிவன் குறியுள்ள இடத்தை அடையோம் (சிவன் குறி - இலிங்கம்) குறிக்கு - வேற்றுமை மயக்கம்; அருநூல் உரைக்கும் வகை தெரியோம் - அரிய சிவஞானபோதம், தேவாரம் ஆகியவைகள் சொல்லும் விதங்களை அறியவில்லை; தொகுத்துச் சரிதைக்கு இசைந்து இயற்றோம் - சேர்த்து வர

லாற்றுக்குத் தக்கவாறு நூல்கள் செய்யவில்லை; தொன்மை - பழமை வரலாறுகள்; தோன்றும் முதலின் பருவம் உரேும் - உதிக்கும் ஒப்பற்ற முதற்கடவுளின் காலத்தை யறியும் திறமையடையோம்; தொழும்பில் - அடிமைத் திறத்தில்; அரற்கு அன்பு மிகுத்துத் துதியோம் - சிவனிடம் அன்பு மிகுத்துத் துதிக்கவில்லை; அரற்கு - வேற்றுமை மயக்கம்; குழாம் - கூட்டம்; மிளிராம் காட்சி - ஒளிமிக்க காட்சி; அதாவது நேரில் வருதல். (3)

713. உடலாகிய பாத்திரத்தில் உயிராகிய பாலை வார்த்து மனக் கண்ணாகிய நெருப்பாலே வெப்பமுறச் செய்து தங்கும் மிகுந்த சஞ்சித கர்மமாகிய நீரைக் குறைத்து மறையச் செய்து சிவ அடையாளமாகிய புரையை யிட்டு அவ்விடத்திற்கு ஒப்பற்ற உறுதியாகிய தயிராகச் செய்து ஞானமாகிய அழகிய மத்தினால் கடைந்து மயக்கம் செய்யும் மூன்று மலமாகிய மோரை நீக்கி இம்மோரைப் புளிப்பு என்று வெறுத்துப் பக்கத்திலேயிருக்கும் திருவருளாகிய வெண்ணெயைத் திரட்டி அவ் வெண்ணெயை அன்பினா லுருகச் செய்து தெவிட்டாத அரிய பேரின்பமாகிய நெய்யாகச் செய்து அழியாத வீட்டுச் செல்வத்தை யளிக்கும் தெளிவே என்று பொருள் கொள்க. உடற்பாண்டம், உயிர்ப் பாலை உளக்கனெரி............முதலியன உருவகங்கள்; அளை - வெண்ணெய். (4)

714. அகரம் அந்த எழுத்திற் கலந்தே எழுத்தாய் விளங்கும் தனைக் காட்டாது - அ என்ற எழுத்து அத்தகைய உயிரெழுத்துக் களோடு கலந்தே அவ்வெழுத்தாய் விளங்கும் தன்னைக் காண்பிக்காது; எழுத்திற் கலவாதுறில் தலையில் இயற்கை விளங்கும் - அவ்வுயிரெழுத்துக்களோடு கலக்காவிட்டால் தலைமையற்ற தன் தன்மை விளங்கும்; இரண்டுருவாய் தழைத்துத் திகழ்ந்த எழுத்து - இரண்டு வடிவமாய்த் தழைத்துத் திகழ்ந்த எழுத்து, உயிர்மெய் எழுத்து; அவையில் சாத்தாதெழுதா இறை எழுத்து - அவ்வுயிர்மெய்களில் வேறொன்றினோடு சார்த்தி எழுதப்படாத அகர எழுத்து; தான் அங்கு உணர்த்த இரண்டு இனமும் சாத்த எழுத வரும் - அகரமானது அங்கு நின்று உணர்த்த மற்ற உயிரினமும், மெய்யினமும் சார்த்தவும் எழுதவும் வரும். அகரம் மற்ற ஆ, இ, ஈ முதலிய 11-உயிர்களையும் இயக்க உடனாயும், அகரம் தனித்து வரும்போது ஒன்றாயும், மெய்களோடு சேர்ந்து வரும்போது வேறாயும் வரும். இப்பாட்டு,

"அவனே தானே யாகிய வந்நெறி
ஏகனாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே."

என்ற சிவஞான போதத்தை நினைப்பூட்டுகிறது. சிறியேன்றனை அழைத்துக் கரணம் அடையாதிருந்து பொதுவினில் நில் அணுவைப் பெறுவாய் என்று பிரித்துக் கூட்டுக. அணு - சூட்சுமம்; நில் அணு - வினைத்தொகை; "அகரவுயி ரெழுத்தனைத்துமாகி வேறாயமர்ந்தெனை வகிலாண்ட மனைத்துமாகிப், பகர்வன வெல்லாமாகி யல்லதாகிப் பரமாகிச் சொல்லரிய பான்மையாகித், துகளறு சங்கற்பவிகற் பங்களெல்லாந் தோயாத வறிவாகிச் சுத்த மாகி, நிகரில் பசுபதியான பொருளை நாடி நெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்." என்ற தாயுமானவர் பாடலை ஓர்ந்துணர்க. (5)

715. இருள் மிகுகின்ற ஐம்புலன்களுக்கு இனிதாய்ப் பொருந்திப் பூமியில் அழகுடன் வந்து பலநாள் பூமியிலே நின்று துன்பத்தை யனுபவிக்கும் யான் முத்திக்குத் தகுதியாக உருவத்துடன் வந்து இன்பின் திறமாய் மனத்தை ஒரு வழியில் நிற்பித்து அருட்கடலை அடையவே தந்த குருவே, அன்பரின் அறிவே, உண்மைப் பொருளே, பரிசுத்தக் கடலே, என் தந்தையாகிய புனிதனே, எண்வகை சித்திகளுக்கும் தலைவனே, உண்மைப் புகழே, உன் அழகிய பாதமே நம்பித் தியானிப்பவர் புத்திக்கு அமுதம் ஒத்தவனே-என்று பொருள் கொள்க; தெருள் - தெளிவடை. (6)

716. பணை - பருமை; கொங்கைக் குவடாம் மங்கை - தனமாகிய மலைகளையுடைய பெண்; பரிவு ஆசை - மிக்க ஆசை; பலன் ஆர்கின்ற பொருள் - பலன் மிகுந்துள்ள பொருள்; பகராமல் கற்று அலைவேனை என்று பிரிக்க; அலைவேன் - வினையாலணையும் பெயர்; அஞ்சு அக்கர ஞான - பஞ்சாட்சர மந்திரத்தை யுபதேசிக்கும் ஞானமுடைய; பரம் - மேலானவன்; அவஞானம் - வீணான ஞானங்கள்; ஞானம் - அறிவு; திணை - பூமி; சிவன் நேயம் பெற்ற சிவானந்தத் திறனே - சிவனிடம் அன்பு பெற்ற சிவானந்தனாகிய திறமை மிக்கவனே; குணமேதின்றி..........வாழ்வில்,

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்த ரல்லராகில்

அங்கமெலாம் குறைந்தழுகும் தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே."

என்ற தேவாரத்தை ஒப்பிடுக. (7)

717. அகம் - மனம்; பதமே கொண்டு உற்று அயரா நிற்கத் தொழுவார்கள் - பாதமே மனதில் கொண்டு சோர்வடையாமல் வணங்குவார்கள்; அமுதாம் உன் பொன் திருநாமஞ் சொற்கு அடைவார் பத்திக்கு இனிதாவார் - அமுதத்தை யொத்த உனது மிக்க அழகிய அன்பு மிகுவிக்கும் சொல்லுக்காக வந்து பொருந்தி பக்தியால் இனிமையடைவர்; அடைவார் - முற்றெச்சம்; எந்தைத் தலைவாவென்று புகழ்வார் என்று இயைக்க; உட்குள் - மனத்திற்குள்; சித்தம் - மனம்; ஓர்வார் - ஆராய்ந்துணர்வர்; நிசியூர்கின்ற களவு ஆர் நெஞ்சத்தினர் - நடு இரவில் செல்கின்ற களவுபொருந்திய மனத்தையுடையவர்; திகழ்வாய் எந்தற்கு - விளங்குபவனாகிய நீ எனக்கு; அகமீது உன்தன் பதமே கொண்டு அயரா நிற்கத் தொழுவார்கள், அமுதாம் சொற்காக அடைந்து பத்திக்கினிதாவார், தலைவாவென்று களிகூர்வார் சித்தத் துறவோர்வார்..........இத்திறமாய் நின்றுருத்திடுவார் முன் களவார் நெஞ்சத்தினர்போல் உற்றுத் திரிவேனோ எந்தற்கு இனிதே தந்த திகழ்வாய் சிறியேன் சிற்றில் சிதையேலே என்று இயைத்துப் பொருள் கொள்க. தொழுவார், இனிதாவார் முதலியன வினையாலணையும் பெயர்கள். (8)

718. பஞ்சமலம்-ஆணவமலம், காமியம், மாயை, திரோதானம், மகாமாயை (அ) மாயேயம் என்பன. பதினெட்டவத்தைகளின் விரிவை 693-வது பாட்டின் குறிப்பிற் காண்க. பலநாள் உழல்வேற்கு - பல நாளாகக் கஷ்டப்படுபவனாகிய எனக்கு; எளிவந்து அருளி-மனமிரங்கி வந்து அருள்செய்து; **சஞ்சிதவினை** :-அநாதி தொட்டு சனனங்கள் தோறும் ஆர்ச்சித்த வினை புசித்து விஞ்சியதாகிய மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்ற ஆறு அத்துவாக்களிலும் கட்டுப்பட்டிருக்கிற புண்ணிய பாவங்களாயிருக்கும், எடுத்தவினை :-பிராரத்தம். **பிராரத்தம்** :- இந்தச் சஞ்சிதத்திற் சிறிது புசிக்கப் பாகப்பட்ட வினை ஒரு சரீரத்தையெடுப்பித்துச் சாதியாயுள்ள போகங்களைக் கொடுக்கும். களஞ்சியத்திலிருந்து தானியத்தை யெடுத்தனுபவித்தல் போலும். **மிஞ்சிய வினை** :-ஆகாமியமாகும். பிராரத்தம் புசிக்குமிடத்து வந்தேறுகிற புண்ணிய பாவங்களாயிருக்கும். (9)

719. "சிவன் நூல் அறிவோர் எவையும் உன்மயம் என்று உரைக்குமதை உணராமல் திரையாகிய இருளால் உணர்விலி மனதாகி என் மயம் என்று" என்று பிரித்து இயைக்க; உதிப்பு - பிறப்பு; திரை - அலே; அதில் நாள் உழல்வேனே - அதில் நாளும் கஷ்டப்படு மென்னை; உலகில் தான் அருள் உருவாகி-என்று பிரிக்க; சருவிய மும் மலம் - தாக்கிய மூன்று மலங்கள்; அறுத்து ஒளிதரும் அவ்வுள மதனில் என்று பிரிக்க. (10)

---

## சிறுபறைப்பருவம்

---

720. உரம் - மார்பு; மெய்ஞ்ஞான நூல்தனை விருப்புடன் விரித்து ஓதுவர் - எனப் பிரிக்க; பொருள்தனை - பொருடனை. (1)

721. அருள்திறம் மேற்கொண்டு கடவுளது இயல்பை யறிவிக்கும் நூல் வழியில் ஆராய்ந்து எனது குற்றமற்ற மொழியினால் கூறும் உண்மைப் பொருளை இருகைகளையும் குவித்துப் போற்றி சந்தோஷித்துப் பல மாறுபாடுகளைக்கொண்ட பொருளின் திறங்களை யகற்றி நல் திறமுற்ற அரிய காதுப் புலனின் மூலமாகக் **கேட்டுப்** புகழும் **மனத்தினால் நினைத்து,** நினைத்தலைப் பூண்டு **சிந்தித்தல் செய்து** மயக்கத்திறம், அஞ்ஞானத்திறம் நீக்கிய அறிவால் கேட்டவைகளைத் **தெளிவடையச் செய்து** வரும் அறிவை இழந்து அறிவற்று **நிட்டை**யைப் பெறுவது **மாணாக்கர் செய்தி** என்று கூறும் தெளிவுத் திறமான பெருமை அதிகரிக்கும் இரத்தினமே என்று பொருள் கொள்க. ஞான நூல்களைக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்ற நான்கும் உண்மை ஞானங்கள். "பொருள் திறம் அகற்றி நல் திறமுற்று அருஞ் செவிப் புலன் வழியினின்று" - என்று பிரிக்க; மருள்திறம் இருள் திறம் ஒழித்த என்று பிரிக்க; உன்னல் - நினைத்தல்; இப்பாட்டில் மாணாக்கர் செய்தி யாவை எனக் கூறப்பட்டுள. (2)

722. நனவு அதனில் நின்றிடும்போது - இது சாக்கிரம் என்று கூறப்படும். கேவலத்தின் காரியமாகிய கீழாலவஸ்தை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என 5-வகைப்படும். **சாக்கிரம்:-** தத்துவம் 36-இல் சிவதத்துவம் ஐந்து, புருடன் நீங்கலாகக்

கலாதிகள் 6, பூதம் 5, ஆக 16-கருவியும் நீங்கி நின்ற கருவிகள் இருபதும் புறக்கருவியறுபதில் வாயுக்கள் பத்தும், வசனாதிகள் ஐந்தும் ஆகிய முப்பத்தைந்துடனே லலாடஸ்தானத்திலே நின்று கண்டு கேட்டு உண்டு உயிர்ப்பது நீங்கி மயக்கத்தைப் பொருந்தி அறி கருவிகளையும் செலுத்துங் கருவிகளையும் கைவிட்டு நிற்கின்ற அவதரம், (அவசரம்); இந்திரியம் - ஞானேந்திரிய மைந்தும் கன்மேந்திரிய மைந்தும் காட்டிற்று; வளி-பிராணன், அபானன், வியானன் முதலிய 10-வாயுக்கள். அந்தக்கரணம் ஈரிரண்டு - மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்ற நான்கு; உள்ளம் - இங்குப் புருடனைக் காட்டுசிறது போலும்; **கனவு அல்லது சொப்பனம் :-**ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங்களைந்தும் ஆகிய பத்தும் லலாடஸ்தானத்திலே நிற்க மற்ற 25-கருவிகளுடனே கண்டஸ்தானத்திலே நின்று சூக்கும தேகத்தாற் பயன்கொண்டு அசீவனமாக நின்ற அவதரம்; நனவினிற் பத்து நிற்க-சாக்கிரத்தில் பத்தான கன்மேந்திரியமும், ஞானேந்திரியமும் நீங்க; நாலைந்தும் ஐந்து - 25; **சுழுத்தி :-**பிராணவாயு நீங்கலாக வாயுக்களொன்பதும், சித்தம் நீங்கலாக அந்தக்கரணம் மூன்றும், சத்தாதி ஐந்தும், வசனாதி ஐந்தும் ஆக 22-உம் கண்டஸ்தானத்திலே நிற்க சித்தமும், பிராணவாயுவும், புருடனும் ஆகிய மூன்று கருவிகளுடனே ஒன்றுந் தெரியாது நின்ற அவதரம். **துரியம்:-**சித்தமொன்றும் இருதயத்தில் நிற்கப் பிராணவாயுவும் புருடனும் நாபித்தானத்திலே ஒன்றுமற நின்ற அவதரம். **துரியாதீதம் :-** பிராணவாயுவொன்றும் நாபியில் நிற்க புருடனொன்றும் மூலாதாரத்திலே அதீதமாய்க் கருவிகளொன்று மின்றிக் கேவலஸ்தனாய் நிற்பது. உனக்கு ஆர் வந்து உணர்த்தினர் உம் ஆதரவு அறிந்தே என்று பிரிக்க. (3)

723. **கீழாலவத்தை :—**இது கேவலாவத்தையின் காரியம். சாக்கிரம், சொப்பனம் முதலிய 5-வகைப் படும். இதன் விரிவை முற்பாட்டின் குறிப்பில் காண்க. **கேவலம் :—**இது கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்று அவத்தைகளிலொன்று. ஆன்மா தத்துவங்களொன்றையுங் கூடாதிருப்பது. சர்வசங்கார காலத்து ஆன்மாக்கள் சுத்தமாயா காரணத்தினாலே யொடுங்கிச் சிருட்டிகாலமளவும் ஆணவ மலத்தான் மறைப்புண்டு கலையாதி தத்துவங்களோடுங் கூடாமல் யாதொரு நினைவுமின்றி யிருப்பது. இது கண்ணனது இரவின் இருளில் ஒளி கெடாமல் விழித்திருப்பது போலும். அணு - ஆன்மா; சூக்குமமாதி - சூக்குமம், கஞ்சுகம் முதலிய சரீரங்கள்; **சகலம் :-** இது மூன்றவத்தைகளிலொன்று. சிருட்டி தொடங்கிச் சர்வசங்காரமளவும் ஆன்மாக்கள் தத்துவம் முப்பத்தாறோடு கூடி எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதங்களிலும் பிறந்திறந்துழல்வது. இது

இரவின் இருளிலழுந்திக் கிடந்த கண் விளக்கினாலே இருள் நீங்கிப் பல பதார்த்தங்களைக் காண்டல்போலும். சாக்கிரம் முற்பாட்டில் காண்க. **கலைகள்:**-நிவர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்தி கலை, சாந்தியாதீதகலை என்பன. ஆரணம் - வேதம்; சீடாக்கள் முறையென்பது சீழாக்கள் முறையென்று எதுகை நோக்கி வந்தது. சீடர்கள் என்பது பொருள். பத + அம்புயம் - பதாம்புயம். (4)

**724. சன்மார்க்கம்:**—சன்மார்க்கம், சகமார்க்கம், புத்திர மார்க்கம், தாசமார்க்கம் என்ற நான்கில் ஒன்று. இவைகளை ஞானம், யோகம், கிரியை, சரியை யென்றுஞ் சொல்வர். வேதங்கள், சாத்திரங் கள் இவை பலவும் கற்றுணர்ந்து புறச்சமயங்களில் பலவாகச் சொல் லப்பட்டிருக்கிற யாவையும் பூர்வபட்சஞ்செய்து மேலான பதி பசு பாசமாகிய ஞானத்தால் ஞாதுரு, ஞான, ஞேயங்கள் பொருந்தா வண் ணம் பதியோடு இரண்டறக் கலக்கத்தக்க ஞானத்தைப் பெறுவது. குறி - அடையாளம்; நானாபேதமாய் - பலவிதமாய்; பன்மார்க்கம் - பலவழி; பராமரித்து - பாதுகாத்து; மறி - மான்குட்டி; சின்மார்க் கம் - ஞானமார்க்கம்; தமியாய் - தனித்தவனாய். (5)

725. குழுவின் குணமறிதல் - உடலினது கூட்டத்தின் குணத் தையறிவதும்; காட்டும் தொழிலின் திறமறிதல் - தொழிற் படுத்தும் தொழிற்பண்பின் திறத்தையறிதலும்; கருதும் இதனை யன்னியமாய்க் காண்டல் - நினைக்கும் இவ்வுடல், ஆத்மா ஆகிய இதனை வேறாகக் காணுதல்; ஆங்கதின்மேல் மருவிப்புணர்ந்த இருள் - இது சூனியம் எனப்படும். தேகம் நானேவென்னில் தேகம் நீயன்று. அஃதெப்படி நானன்றெனில், என்னுடைய தேகமென்று உன்னால் அறியப்படுகை யினாலும், தேகம் பஞ்சபூதத்தின் கூறாகையாலும், தேகம் உனக்கு அநித்தியமாகையினாலும் தேகம் நீயன்று. இந்திரியம் நானேவென் னில் இந்திரியமும் நீயன்று. இங்ஙனம் பார்த்துக் கொண்டே சென்றால் இறுதியில் இருள் என்ற சூனியம் கிடைக்கும். இங்ஙனம் சூனியம்வரை வகைவகையாகப் பிரித்து உணர்ந்து அதை நீங்கி நோக்கின் ஞான வடிவாய்த் திகழ்தல் உண்டாகும். ஒருவன் - இங்குக் குருவினைக் காட்டிற்று. இங்ஙனமுள்ளதை யுணர ஆன்மாவுக்கு கருவிக்காக உருவெங்காட்சிச் சுத்தியுமென்று இனிதாயுரைப்பர் என்று விரித்துக் கூட்டிக்கொள்க. **காட்சி:**-பிரத்தியட்சக் காட்சி, அனுமானக் காட்சி முதலியன. சுத்தி - பஞ்சசுத்தி; (1) **பூதசுத்தி:**-முப்பத்தாறு தத்து வங்கள் நாமல்ல, அவையாவுஞ்சடம்; அவையுந்தானாகக் காரியப்பட மாட்டாவென அறிகை. (2) **ஆன்மசுத்தி:**-அப்படி யறிவது

திருவருளாலன்றி ஆன்மபோதத்தா லல்லவென அறிகை. (3) **திரவியசுத்தி** :-ஆன்மபோதத்தாற்றனே யறிகைக்குச் சேட்டையில்லையென்று கண்டது கொண்டே ஆன்மாவுக்கு அறிவில்லை யென வறிந்து கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிவதெல்லாம் திருவருளென வறிகை. (4) **மந்திரசுத்தி** :-ஐந்தெழுத்தைச் சிகாரமுதலாக மாறி அதன் உண்மையை விசாரித்தறிகை. (5) **இலிங்கசுத்தி** :-பதியெங்கும் பூரணமாய்ப் பசுபாசங்களிரண்டினும் பிரிவற நின்று அவற்றைச் சேட்டிப்பித்து நின்ற தன்மையை யறிந்து அத்தகைய சிவம் இலிங்கத்தினுமெழுந்தருளி யிருக்கு மென வறிகை. (6)

**726.** வாக்குமனதுக்கரிதான - மனம், பேச்சு இவைகளைக் கடந்த அருமையான; மன்னும் - நிலைத்துத் தங்கும்; போக்கும் - போதலும்; புணர்வு - சேர்க்கை; தொழில் ஐந்து - சிருட்டி, திதி சங்காரம், மறைப்பு, அனுக்கிரகம் என்பன; இரண்டு அற - இரண்டு என்ற தன்மை நீங்க அதாவது ஒரேதன்மையாய்; அறையும் - சொல்லும்; தேக்கும் - நிறைக்கும். (7)

**727.** நினைப்பும் மறப்பும் இரண்டுமிலா நிட்டையதுவாய் - நினைத்தலும் மறத்தலுமாகிய இரண்டு மில்லாத நிட்டைமயமாகி; 'உடல் உயிரும் ..................... இல்லையென" — உடலும் உயிரும் பொருளும் சிவனுக்கே எமக்கு எதற்கு என்ற நிலையில் தவறாமல் அனைத்தும் அவனது இன்பமே யல்லாமல் வேறொன்று இல்லையென்று; வையம் அகற்றில் தூய்மம் அதாய் - பூமியின் பற்றைவிட்டால் சுத்தமானவனாய்; பொசிக்க - கெட; புசிப்பில்-பொசிப்பில் என நின்றது; **சிவபோகம்** :-சிவத்தோடிரண்டறச் சிவானந்தத்தைப் புசித்துவருதல். இதமகிதம் - இன்பதுன்பம்; செனித்தும் இறக்காவழி - பிறந்தும் சாகாத வழியை. (8)

**728.** "விரதம் தவங்கள்.................புகலும் இது வல்லால்"- நோன்பு புரிதல், தவம் செய்தல், ஆச்சிரம வாசம் செய்தல், யாகம் செய்தல், தீர்த்தமாடல், தானஞ்செய்தல், தியானஞ்செய்தல், பலவித காரியங்கள் செய்தல், சாந்தமாயிருத்தல், மிகுந்த ஒழுக்க முடனிருத்தல் ஆகியன செய்யும் திறமையுடைய வரும் சுவர்க்கம் சென்று பின் திரும்பி இப்பூமியிலேயே பிறந்து வருவரென்று சொல்லும் இது வன்றி; அரன்றன் சரியைக்கு அவன்றன் உலகு இருப்பார் - சிவனிடத்துள்ள சரியையால் சிவனது உலகத்திலிருப்பார்கள். **சரியை** :-தேகத்தினைச் சிவார்ப்பிதஞ் செய்தல். அதாவது புறத்தொழில் மாத்திரையானே முதல்வனுடைய உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. சரியையால் 'சாலோகம்' என்ற பதவியுடைவர்; "சாத்தும் கிரியைக்கு அருகிருப்பார்" - செய்யும் கிரியையு

களினாலே அக்கடவுளின் அருகிலிருப்பார். இது 'சாமீபம்' என்ற பதவியாகும். **கிரியை** :-இந்திரியங்களைச் சிவார்ப்பிதஞ் செய்தல். அதாவது புறத்தொழின் அகத்தொழின் மாத்திரையானே முதல்வனுடைய அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு; தகை யோகத்துக்கு உருவாவார் - தகுதியுடைய யோக சாதனத்தால் கடவுளின் வடிவை யடைவர். இது சாரூப மெனப்படும் முத்தி. சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகியோர் இம்முத்தி பெற்றனர். **யோகம்** :-கரணங்களைச் சிவார்ப்பிதஞ் செய்தல். அதாவது அகத்தொழின் மாத்திரையானே முதல்வனுடைய அருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு; தவமாம் குருவால் இறைஞானம் தெருளச் சிவமாம் - தவத்தையுடைய குருவினால் கடவுளைப் பற்றிய ஞானத்தைத் தெளிவடைய கற்பிக்கச் சிவமாவார். இது சாயுச்சியம் என்று கூறப்படும். **ஞானம்** :-ஆன்மாவாகிய தன்னைச் சிவார்ப்பிதஞ் செய்தல். அதாவது புறத்தொழில் அகத்தொழி லிரண்டுமின்றி அறிவுத்தொழின் மாத்திரையானே உருவம், அருவுருவம், அருவம் என்னும் முத்திறத் திருமேனி கடந்த அகண்டாகார நித்ய வியாபகச் சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நின்ற முதல்வனிடத்துச் செய்யும் வழிபாடு ஞானம்; இந்நால்வகையான சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன சாதனங்கள். இவை சரியையில் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் போன்று ஒவ்வொன்றும் நான்காக 16-வகைப்படும். (9)

**729.** உன்னற்கு - நினைப்பதற்கு; அறைகூவி - உரத்துக் கூப்பிட்டு; அதிரச சக்கரையின் சுவையோ - மிக்க இனிமையை யுடைய சர்க்கரையின் சுவையோ; பயன் - பால்; கோவே - தலைவனே. (10)

---

## சிறுதேர்ப்பருவம்

---

**730.** பார்ஆதி ஐந்து - நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்பன; பாராய் இணக்கி - வண்டிப் பாராய் செய்து; இருபத்தஞ்சு கூறு-பிருதிவியின் கூறு 5, அப்புவின் கூறு 5, தேயுவின் கூறு 5, வாயுவின் கூறு 5, ஆகாயத்தின் கூறு 5, ஆக இவ்விருபத்தைந்து கூறுகளையும் அப்பாரின்மேல் பரப்பி. **பிருதிவியின் கூறு 5** :- மயிர், எலும்பு, தோல்,

நரம்பு, தசை. 2. **அப்புவின் கூறு** 5:-நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை; 3. **தேயுவின் கூறு** :- ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல்; 4. **வாயுவின் கூறு** :-ஓடல், நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல்; 5. **ஆகாயத்தின் கூறு** 5 :-குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சர்யம்; அந்தக்கரண நாலையுஞ் திகிரியாய்ப் பாய்ச்சி - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு அந்தக் கரணங்களையும் சக்கரமாய்ச் சேர்த்து; ஐம்புலன் ஓவியம் சேராமல் - ஐம்புலன்களாகிய (மெய், வாய், கண், மூக்கு, செவி) சித்திரம் சேராமல்; வளிகள் ஈரைந்தும் உருவாணியாய்த் தொளைகொள் தச நாடியில் இருத்தி - பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்ற பத்துக் காற்றுக்களையும் மெலிந்த கடையாணியாய் துவாரமுள்ள நாடியில் தங்கச் செய்து; தோத்திராதி தனில் நாலுவழியாய் விடுத்து - தோத்திரங்களால் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி ஆகிய வாக்கின் 4-பாகங்களால் செலுத்தி; நல் தொக்குவின் சேலையிட்டு - நல்ல உடலினால் சீலைகளை நிரப்பி; சீலை - சித்திரமெழுதிய துணி; காரான முக்குணம் அங்கணமதாய் - மூன்று குணங்களான சத்துவம், இராசசம், தாமதம் இரண்டு தூண்களுக்கு இடைப்பட்ட இடமாய்; அலங்கார நற்கால் கலாதி-கலையாதிகள் (பஞ்சகலைகள்) அழகு பொருந்திய நல்ல தூண்களாகவும்; கருதரிய சூக்குமம் ஆதி நாதமும் சிகரமாய்-நினைத்தற்கு மரிய சூக்குமம் முதலிய நாத தத்துவங்களும் சிகரமாகவும்; கவித்திடும் குடை விந்துவாய் - விந்து தத்துவமே தேர்மேலே கவித்துள்ள குடையாகவும்; **நாதம்** :-சிவதத்துவம்; ஞானசத்தியின் இருப்பிடமும் சுத்தத்துவங்களுள் ஒன்றுமாகிய தத்துவம்; விந்து-சத்திதத்துவம். அத்த தத்துவங்களுளொன்றாய்ச் சிவனது கிரியாசத்திக்கு இடமாய்ச் சுத்தமாயை காரியப்படுவதாயுள்ள விருத்தி; **தச நாடிகளாவன** :-இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருஷன், குகு, சங்குனி என்பன. (1)

731. காயமரத்தினைத் தேராய் அமைத்து - காயாமரத்தைத் தேராக அமைத்து; அகம் களிகொள் அந்தந்த நிலையில் - மனம் சந்தோஷிக்கு மந்தந்த நிலையில்; கமலமுதலைவர் - தாமரையில் தோன்றின பிரமன் முதலாகக் கொண்ட திருமால், உருத்திரன், ஈசன், மகேசன் ஆகிய ஐவர்; முன்கட்டும் துரங்கம் வினையாம்-தேரின்முன்னே கட்டிய குதிரைகள் நல்வினை தீவினைகளாகும்; சாயாமல் உற்று அருள் திரோதாயி சத்தி-தளராமலடைந்து அருள்செய்கின்ற திரோதாயி சத்தியானவள்; திரோதாயி - மறைப்பு; திரோதாயி சத்தி

இரதசாரதி என்று பிரிக்க ; இகரம் தொகுத்தல் ; சாருமா மாயை ரச வர்க்கமும் கதலிகேதனமாய் - சாருமாமாயை கதலியாய் ரசவர்க்கம் கேதனமாய் என்று நிரனிரையாகக் கொள்க. கதலி - வாழைமரங்கள். கேதனம் - கொடி. வாழைமரமும் கொடிகளும் தேரில் கட்டப்பட்டிருந்த வியல்பு; **ரசவர்க்கம்** :-சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்ற தன்மாத்திரைகள் 5. **மாயை** :-அசுத்தமாயை, சுத்தமாயை என்ற இரண்டு ; ஆயாத சத்திகள் நெருங்க அங்கு அருளினை அகண்ட நல்தீபமாக்கி-ஆய்தலில்லாத சத்திகள் பல நெருங்க அருளினை யங்குப் பரந்த நல்ல விளக்காக்கி ; ஆன்மாவை மந்திரியதாக - ஆத்மாவை மந்திரியாகச் செய்து. (2)

732. மூலத்தின் நிலைதனில் இருந்து எழுந்து ஓம் என முனைந்து நாற்கோண நகரின் முடிக்கி - இது மூலாதாரத்தையும் சுவாதிஷ்டானத்தையும் குறிக்கிறது. இதை 660-ஆம் பாட்டில் காண்க. முடிக்கி-விரைந்து செலுத்தி ; மதியின் பாதி கோணத்தில் வந்து உயரும் முக்கோண மீதிலேற்றி - இது மணிபூரகமும் அனாகதமும் ஆகிய இரண்டைக் குறிக்கிறது ; இதனை 661-ஆம் பாட்டில் காண்க. கால் உற்ற அறுகோண வீதியில் நடத்தியது கண்டு வட்டத்திலினிதாய் கடுகவும் நடத்தி-இதனால் விசுத்தி, ஆக்ஞை என்ற இரு ஆதாரங்களைக் குறித்தார். இதை 662-வது பாட்டில் காண்க. கடுக - விரைவாக ; **சந்திரமண்டலம்** :-இதன்விரிவை 663-ஆம் பாட்டிற் காண்க. ஆயிரத் தெட்டிதழதாகி வளர்மென் கமலம் - பிரம்மரந்திரம். இதன் விரிவை 663-ஆம் பாட்டின் குறிப்பில் காண்க; சீலம் - ஒழுக்கம் ; வெளி - ஆகாயம் ; கால் - ஒளிவீசுதல். (3)

733. மயக்கத்தைத் தரும் சுத்தமும் அசுத்தமுமாகிய மாயையும், நல்வினை, தீவினையாகிய யிரண்டும் பொருந்தும் இருளான மகர மென்னும் எழுத்தால் கூறப்பட்ட ஆணவ மலமாகிய வீதியை விடுத்து அறிவு வளரும் மறைத்தலான நகரம் அவ்வாத்மாவைத் திருப்பி யகர மென்னும் நல்லறிவு முன்சென்ற மல (வீதியினில்) த்தினில் நாடாமல் அவ்வெண்ணத்தை நீக்க அங்கங்கு அலைந்து ஓட்டிச் செல்லாமல் அடைதற்கருமையான பொதுவான வகரமென்னும் எழுத்தால் குறிப்பிடப் பட்ட அருளால் அதனுள் வந்ததும் போனதும் மிக்கு நிலைபெற்றதுமான எல்லாம் மனத்தில் பதியுமாறு அறிவித்துக் குற்ற மில்லாமல் தெளிவடையச்செய்து அவ்வருளில் சிகரமென்னும் எழுத்தால் கூறப் பட்ட சிவனை யடையும் நிலையில் மாறுபடாமல் சந்தோஷமடையக் கருணை கொண்டு சிறுதேர் நடத்துவாயாக என்று பொருள் கொள்க. நல்

வினையும் பிறப்பிற்கேது வாகலின் வல்வினை யெனப் பட்டது; திரோ தாயி மற்றவைகளை மறைத்துக் கடவுளையறியும் அறிவை வளரச் செய்வது. இப்பாட்டில் 'நமசிவாய' என்பதன் ஒவ்வோரெழுத்தின் பொருள் கூறப்பட்டிருத்தல் காண்க. சிகரவெழுத்தாகிய சிவனையடைய வகர எழுத்தாகிய அருள் வேண்டும் என்றார். (4)

734. பூதநிலை - ஐம்பெரும் பூதநிலை; பொறி புலன்கள் நிலையும் என்று பிரிக்க; சுழல்புரியும் நாற்கரண நிலை - சுழலச்செய்யும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு கரணங்களின் நிலையும்; போதம்-ஞானம்; முக்குணம்:- சத்துவம், இராசசம், தாமதம் என்பன; **சுத்தநிலை**:-ஆன்மாக்கள் கேவல சகலப்பட்டுப் பிறந்திறந்து திரியுமவ சரத்து அவர்கட்கு இருவினையொப்பும், சத்திநிபாதமும் குருவரு ளும் ஞான சாதனமும், மும்மலக் கழிவும், வாதனை நீக்கமும், ஞானப் பெருக்கமும் முறையே உண்டாகப்பெற்றுத் திருவருளைக் கூடுவது; இது இரவில் இருளோடும் விளக்கோடும் கூடியிருந்த கண்ணானது ஆதித்த னுதயஞ் செய்தவிடத்து அதன் கிரணத்தா லாதித்தனைக் காண்டல்போலும்; ஐந்தானநிலை - பூதநிலை, முக்குணநிலை, சுத்தநிலை முதலியன; இருள் - மலம்; **கேவலநிலை**:-இதன் விவரம் 723-வது பாட்டின் குறிப்பில் காண்க. சத்சத்து - நிலைத்த சத்து; தேர்ந்து - ஆய்ந்துணர்ந்து; ஆங்கு - அசை நிலை; அகன் - கடைப்போலி, மனம் என்பது பொருள்; சேதனம் - அறிவு. (5)

735. மாணர் மருட்டார் போகம்-பெண்களின் மயக்கம் பொருந் திய போகம்; விவேகம் - புத்தி; கை காட்டும் விதம் - சின்முத்திரை யினால் விளக்குவது; அணு - ஆன்மா; விமலம் - குற்றமற்றநிலை; பதைத்தால் - மிகுந்து அவசரப் பட்டால்; பசு-சிவனுடைய உடல்; துருசு - குற்றம்; பாசம் - ஆசை. (6)

736. நீயாய் கடவுளையுடைய முயன்றால் அந்நிலை நிலைத்துநில்லா மல் அகன்றுவிடும் என்பதும் அந்நிலை தானாக வந்து உன்னை யடைதல் என்று சொல்லுவதுமாக நிகழ்த்துகின்ற இரண்டையுந் தானே கடந்த நிலையாக இருந்தே அது உனக்குள் தாயாக உணர்த்தும் பொருளாக விளங்கும்; அத்தன்மைக்கு உவமை யாது என்றால் கஷ்டப்படுகின்ற குருடனுக்குச் சூரியன் மிக்க ஒளியும் தெரியாமல் இருளாவது போன் றிருக்கும்; ஆய்ந்ததை உடைய கண் வைத்தியன் ஒருவன் உண்டாகி வந்து அரிய கண்ணின் திரையை யகற்றிடும் போது பரந்த சூரிய ஒளி யை அக்கண்களின் ஒளி கலந்துள்ள அத்தகைய செயலை யார்தான் தலக்கச் செய்தார் என்பதைப்போல குழவியாகிய என்னுடைய மல

மாகிய இருளை ஓட்டி அருளைத் தெளிவடையச் செய்பவனே சிறுதேர் ஓட்டுக என்று பொருள் கொள்க. கண் வைத்தியன் சிவானந்தனுக்கும், சூரியன் கடவுளுக்கும், கண்கள் இந்நூல் ஆசிரியர்க்கும் உவமையாக வந்தன. தானாக முயற்சித்தாலும் கடவுளைக் காண முடியாது; அப்படிக் கண்டாலும் சிறிது நேரமே நிலைக்கும்; அல்லது அக்கடவுள் நிலை தானாகவே தன்னை வந்து அடைதல் என்று சொல்லுதலும் உண்டு. இவ்விரண்டு முறையையும் கடந்ததே தாயாய் உணர்த்தும் பொருளாகும். எனவே கடவுளை யடைதற்குக் குரு வொருவர் அவசியமாக வேண்டும் என்பது அறியப்படுகிறது. (7)

737. வீணைக்கு எழில் நாதம் என்க. காட்டத்தினில் அனல் - விறகில் தீ; இம் முதலடியால் சாயுச்சிய பதவியைக் குறித்தார். நேசத்து அக மதலைக்கு அனையாய் விரும்புந்தலம் - மனத்தில் அன்பையுடைய ஞான சம்பந்தருக்குச் அன்னையாய் விரும்பிவருகின்ற சீகாழி; வெண் சேவில் ஊர்தி - வெள்ளிய எருதின் வாகனத்தையுடைய சிவபெருமான்; சித்தம் - மனம்; சிவப்பேறில் - சிவனுடைய பேரின்பமாகிய செல்வத்தில்; பேறு - செல்வம்; சிவமது அகலார் என்று பிரிக்க. (8)

738. மலபந்தம் - குற்றமாகிய கட்டுக்கள்; மெய் - உடல்; விதிர் விதிர்த்து-நடுநடுங்கி; குருவையும், சிவலிங்கத்தையும், குற்றமற்ற சிவனடியார் கூட்டத்தையும் சிவனேயென்று வணங்கித் துதித்து யார்க்கும் நாமே மேலானவனென்று, வடிவமாயும் வடிவமற்று மில்லாத கடவுளின் மெய்யடியாருக்கும் அவர்களுக்குக் குற்றேவல் செய்பவர்கட்கும் பாதத்தாலிட்ட வேலைகளைச் செய்பவனாக மனமன்புற விளங்கித் திரிபுவர்கள் ஞானத்திறத்தை யுடையவரென்று கூறும் செல்வனே என்று பொருள் கொள்க. (9)

739. விதி - பிரமன்; 'வாரும் இனிநீ' என்று பிரிக்க; பக்குவர்க்கு அனுக்கிரகிக்கு முறை :- மலபரிபாகம் வந்தவிடத்து இருவினையொப்புப் பிறக்கும்; அப்பொழுது முன்செய்த சிவபுண்ணியம் வந்தெய்த அப்பரமசிவம் மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோல ஞானாசாரிய மூர்த்தமாய் மான், மழு, காளகண்டம், திரிநேத்திர மொழித்து மானிடச்சட்டை சாத்தி, இவனது ஊரும், பேரும், உருவும் ஒழிக்க வேண்டி, ஊரும், பேரும் உருவுங்கொண்டெழுந்தருளி மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் எனும் சத்திநிபாதத் தன்மை யுணர்ந்து சமயதீக்ஷை பண்ணிச் சரியை யனுட்டிப்பித்து விசேஷ தீக்ஷைசெய்து கிரியா யோகங்களை அனுட்டிப்பித்து நிருவாண தீக்ஷை பண்ணி ஞான மனுக்கிரகித்து மலமாயாதி கன்மங்களை நீக்கி மோட்சத்தைக் கொடுக்கும். (10)

சிவானந்தன் பிள்ளைத்தமிழ்க் குறிப்புரை முற்றிற்று.

---

# பிள்ளைத்தமிழ்க் கொத்து

## செய்யுள் முதற்குறிப்பு

## அகராதி

(எண்—பக்க எண்)

---

# பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 7 | அடற | அடர |
| 12 | 22 | கணையே | பிணையே |
| 19 | 28 | உத்தம | உத்தமி |
| 23 | 14 | முதுமுறை | முதுமறை |
| 31 | 33 | கனகசாப | கன சாப |
| 38 | 18 | யேறிகவிதைகள் | யேறினுங்கவிதை |
| 90 | 33 | செய் | செய |
| 92 | 17 | தென்முரலு | தேன்முரலு |
| 93 | 31 | முடிவளர் | மூடிவளர் |
| 95 | 14 | மொழியை | யொளியை |
| 106 | 22 | பாவத்து | பரவத்து |
| 113 | 18 | றிரிந்து | றிரிந்த |
| 114 | 7 | சேர் நங்கைசெய | சேர நங்கைசேய் |
| 114 | 10 | மூடசிக்கள் | மூட்சுக்கள் |
| 119 | 4 | னெனக் | னென் |
| 134 | 8 | உந்தியபகழி | உந்தியப்பகழி |
| 168 | 7 | அராவிடம் | அராவடம் |
| 264 | 36 | கச்சபுடத் | சச்சபுடத் |
| 171 | 3 | நவமியலைந்து | நவமியிலைந்து |
| 184 | 10 | னினெறி | னீணெறி |
| 257 | 3 | வானை | மானை |
| 271 | 13 | லொன்ரு | வொன்ரு |
| 272 | 17 | தோய | தாயே |
| 273 | 8 | வொர்ளி | வொளிர் |
| 280 | 2 | மடித்தேயிருதின் | மடித்தெயிறுதின் |
| 280 | 11 | முத்தும் | முற்றும் |
| 287 | 12 | மெனமே | மெனவே |
| 294 | 7 | பொன்னுச | பின்னுச |
| 364 | 34 | லம்பணைபதனினீப | லம்பணைதனினீ |
| 368 | 34 | மாழிபுனல் | மாழ்புனல் |
| 372 | 15 | பணிபுடன் | பண்புடன் |
| 537 | 32 | முகடிணைகொடிகள் தரு | முகடிணைகொள் திகழ்தரு |
| 550 | 20 | மெலிந்த | மேலிந்த |

# பாட ரூப பேதங்கள்

(எண் - பாட்டெண்)

307. யலகிலாச்
சிவகாம சுந்தரியை
308. பிறப்பற
பெறச்சுடர்
போனழுக்கிற்றது
பூதித்தேற்பது
கணியாகச் சேர்த்தது
கருமவிக்கதிகாலமுக்
கடவுளுக்கனு
309. மடலுறு
சுரந்தருடாய்
யெனுதுளதில
மொழிந்திடுமொரு
311. துளங்கிடக் காப்பெள்
312. ஒரு சிறைக்
தெளிதமிழ்ப் புலவோர்
கள்
313. விணையும் வழுவார்
314. வல்லதிற்
வள்ளிதழ்ச்
அல்லுடுக்களே நேரு, மல்
லுடுக்கண் நேர
முல்லையைப் பொற்கவின்
அள்ளெயிற்
வள்ளையைக் காட்டிய
வெல்லுடல் சேப்பிமை
புல்லுமிச் சிவ
வைத்தூட்டிய
315. அலர்க்கண் சித்திக்கு
சத்தமும்
தோளாய்ப்
நிதம்ப படமாய்
உலகமென
316. முக்கோடி தகுவீர
திருவத்த, திருவத்தர்
சத்தியொடு தில்லைநாயகி
தன்னையும்
எத்திசையுமே புகழும்
317. யாகி யதனிலொரு
நாதமான்ஞான
எடுத்துக் கவிழ்ந்திட
318. தாளமார்குளிய
திரிபுரசத்தி
தவசினருகு
319. நெடு முக்கண்
திவள வாண்
320. விழியூடு பலகணிக்
கையின்முதாரி
அலம்புரி சிலம்பு
321. சூல்கொண்டு முன்
களிறு நல்லியானை
குவடு குளுறப், குவடு
களிறப், குவடு
களுறப்
காண்டகத் தடர்கின்ற
வெரிகண் பிறந்து
322. வல்லரவிற் றுலகாதி
புரந்தள
மஞ்சூணஞ்சோனும்
முப்பதி மூவரு மன்பிய
சில்லர வச்சிறு
323. அவ்விய முற்றிய
லோக வசுந்தாய்
பொருந்திடு மறம்
மறம்பாவஞ் சேரா
சுகானுபவங்கொள்
தாளவளங்கொழு

324. தெரியாடு கரத்தொடு
மீறியெடுத்த நிலாவு
ரானை முகத்தினை
லடும் வேழவிறற்சேயுங்
ஆறுசிரத்து முகத்தன்,
ஆறுசிரத்தை முகத்தன்
ஆதிபராஞ்சிவ
325. கலந்தவர் சிந்திய
வாவடு செங்கீரை
வாய் கவரின்பம்
வாழ்வினை
கூடினர் பங்கினர்
மேதகு சங்கு முலாவிய
ராடும் ஆடுக
326. எழுந்துழு மாழை
தாதவி போதணை
பாகு கரும்பொடு
தென்புலி யூரினில்
328. பிறவாம லொருவர்
மைக்கண் முழித்து
வள்ளைக் கொடியும்
அதரம் வடியாமே
330. திருமுகத்திலொரு
332. கொற்றார் மறையோ
கொப்பார் குழையார்
333. மற்றாருணையே பெற்றார்
334. முற்றாய் முலையாய்
முற்றாய் வலியாய்
335. பொற்றார் நிறமே
பொற்கோ கயமே
336. பொற்பாய் கோதாய்
337. குலை மாலை
முத்தமிழ் மிழற்றி
338. பச்சைவண் கலையுமே
யருள்
எட்டுணையு மறவா
339. புகலாதுலர்க்கு முதவா
340. முனிவர்கள் தொழுது
341. பூதமு மமைத்திடுங்
பாசவிம ராசன்
342. இலச்சை பறப்ப
கட்டழ குற்றனை
344. துச்சிலெனத்தனி
அச்சுதனச்சுதனச்சழி
யுற்றழி, அச்சுதனைச் சுத
னைச் சுழியுற்றுழியுற்ற
கைச்சரி
345. கைத்தணி சக்கர
பக்கமுறத்தூய
குழைக்கேல
346. பொக்கணி யக்கணி
வித்தகி வித்தார
சத்திகள் முற்றினர்
347. துலங்கி மணக்கும்
நாடகத்தார்கள்
348. பற்றற்றிரு மாயை
பாசப் பாச
மும்மதமும் மூன்றும்
களிம்பும்
349. முத்தி நின்பால்
நற்றாய் முத்தம்
தாயே முத்தம்
351. ஒண்ணாள் செவிகள், ஒண்
ணார் செவிகள்
352. ககன முற்றம்
கடவுளர்க் கொண்டிடு
353 செறிகழைச் செங்
களனிநிற் சென், களி
ணிறை சென்
354. சிறிது மற்றங்கதுபெற
வாழ் அமிழ்தினைத்தண்
355. அமரரைக் கொண்டமர்
தவிர்த்தங் கமரியே
சமரில்...... தமரி முத்தம்
356. படவவிக்கும்
அலர் பறிக்கும்

சமரில் நிற்கும்
விழிக்குங் குமிழையே
கமலமே
357. ஒற்றிகளோயுயர்,
தெற்றிகளோயுயர்
வாமியமோ
செகமே விளங்கும்
358. சிவிறித்தான்
359. பழனக் கரும்பின்
பெருந்தாட்குவளை
மடவனங்கள்
செருந்தார்ச்
360. சிவை வருக
பழுத்த வித்தின்
361. குங்குமக் குழம்பே
மணிச்சிந்தாமணியே
எழுந்தேயொளிர்
பொன்மலைக்
362. கலிகோப
363. சிரகர சுந்தரி
சிவசிவ விம்பகி
திரியம்பகி
பூரண நெஞ்சகி
364. கொங்கையள்
இடையார் படை
தமருகள்
தவகுண
365. மாய்கை ஒழிந்திட
கவலை தணந்திட
கலிகால பயங்
366 மதுமலி கஞ்சுளி
367. சிவமுடியில்
முகமன்னரம்புலீ
368. முயலகன்தனை வெல்லு
மோ
பயிற்றலும்
369. முத்தமணியே
ஞானத்தர் புந்தி
373. பொன் வடிவானதும்
374. காணப்படாதுன்னையே
திருப்பதுன் ஏழைமதி
யோ
375. தேர்வண்டில் நீ
376. யுதிர் பொரியென, யொரு
பொறியென
கதழ் சினக்கதிர்முடி
தாடுமிளை தந்தனிவள்
சுதமுற, சதமுறு
377. அணிபெறச்
மிகவினிய செம்
கதலிப்பழங்
சமைப்பத் திட,
சமைப்பார் திட
378. பண்புற்றிடக்
379. அம்பெரும்பூதங்கள்
குற்று சிற்றேடு
380. வருதேருருட்டி
மொருவு சிறுதூணகவே
381. லடிசிலிடுநீ
382. வித்திதவான்
பிறப்பினுதிப்பவளே
383. அற்பரகத்தவர், அற்பர
கற்றவர்
384. சிட்டி முதற்றெழிலாகி
சிற்றுயிரைத்தொடுகாவல்
385. மயிற்பேடை
குழலாள் அச்சிவ
386. காலம்விளங்கிட
கல்லண்ட
387. உரைப்பதேதோ
பவளவாய்க்
388. சொல்லகு மிலஞ்சி
முச்சியேதொடு
389. முறுபரப்பாவை, மூறு
தரவப்பாவை
மொருபொழிப்பாவை

# பாடங்களிற் சில இவ்வாறு மிருக்கலாமெனக் கருதுவன.

(எண் - பாட்டெண்.)

---

3\. சடைக் காட்டுட்
5\. மாதி சதுமுகவன்
22. மாமட நல்லார்
44. சேர்வரொன்று
89. முருகனிகல்
94. நாரணற்
104. பொருநா நதி
105. படிமீ
106. ஓம் நமோ நாராயணு
வென்னு
112. மூவர்க்குள்
115. மெல்லிய லசோதை
122. புனலுஞ்சசியுந்
148. குகவேள்சுரர்
163. வேள்வியி
166. வைத்துலவு வரதனது
181. கருதி யர்ச்சித்து
192. புவனமு முற்று
196. மிடுக்குடைய
200. குலத்திலவதரித்தே
உலங்க ணிகர்க்கும் மதில்
201. அரனார் தொழுது
203. செல்லலுறு நெஞ்சினைச்
செல்லலறு மெய்ஞ்
ஞான
205. தன்னினத் தொன்றனுரு
......வுற வேந்து
209. நெறியா லெய்துவிக்கும்
மொன்றாய் விளங்
கருண
211. துதிப்போம் அவாவியே
219. அம்பொற் சதங்கை
232. தேடா நிற்பணி
286. நெடுமணியுருவிற்
296. கிடுகுமெழி
303. விளைக்கும் பரானந்த
314. மல்லுடுக் கணனேர
413. கலாப கஞ்சுகி
513. குடித்துவட்டும்
638. முன்னதாய் நின்ற
தழையவெவ்வுலக

---